# கலைமகள் கதம்பம்

[ 1932 — 1957 ]

வெள்ளி விழா வெளியீடு

கலைமகள் காரியாலயம்
சென்னை - 4.



# பொருளடக்கம்



## 3
## விஞ்ஞானம்



## 4
## சமயம்



## 5
## பல்வகைக் கட்டுரைகள்

## 6
## சரித்திரம்



## 7
## நுண்கலை



## 8
## கவிதை

## 9
## நாடகம்



## மூவண்ணப் படங்கள்

# முகவுரை

தமிழ் மக்களின் ஆதரவும் அன்பும் பெற்று வளரும் இலக்கியப் பத்திரிகையாகிய ''கலைமகளு''க்கு இருபத்தைந்து ஆண்டுகள் நிறைவேறின. இப்போது 26-ஆம் ஆண்டு நடைபெறுகிறது. இந்த மகிழ்ச்சியை வெள்ளி விழாக் கொண்டாடி யாவரும் பகிர்ந்துகொள்ள எண்ணியபோது, வெள்ளி விழா நினைவாக நிலையாய்ப் பயன்படும் காரியம் ஒன்றைச் செய்ய வேண்டும் என்று தோன்றியது.

இத்தனை ஆண்டுகளாகக் கலைமகள் தமிழ்த் தொண்டு புரிந்து வருவதை எடுத்துக் காட்டுவதாக இருக்க வேண்டுமென்பது எங்கள் அவா. இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் 50 தொகுதிகள் வெளியாகியிருக்கின்றன. 300 இதழ்கள்; ஆயிரம் ஆயிரம் பக்கங்கள்; ஆயிரம் ஆயிரம் விஷயங்கள். இவற்றில் சிறந்த சில வற்றைத் தொகுத்து ஒரு தொகுதியாக வெளியிட்டால் பொருத்தமாக இருக்குமென்று தோன்றியது. எல்லாமே சிறந்த விஷயங்கள்தாம்; அவ்வளவையும் மறுபடியும் அச்சிடுவதென்பது சாத்தியமா? ஆதலால் திரட்டுப்பாலைப் போலச் சிலவற்றைத் திரட்டி வெளியிட்டால் யாவரும் வாங்கிப் படிக்க எளிதாக இருக்கும் என்று கருதினேம். அந்தக் கருத்தைச் செயலாக்கப் புகுந்தோம். அதன் விளைவே இந்தக் "**கலைமகள் கதம்பம்**". கதம்பத்தில் பல வண்ணமும் பல மணமும் உள்ள மலர்கள் இணைந்து மணப்பதுபோல இத் தொகுதியிலும் பல எழுத்தாளர்கள் பல துறையில் எழுதியவை அறிவும் ஆனந்தமும் தருகின்றன. திரட்டத்தக்கவை இவைகள்தாம் என்பது அல்ல. ஏதாவது ஓர் அளவில் நிறுத்த வேண்டுமாகையால் 75 பேர்களின் எழுத்துக்களை மாத்திரம் இணைக்க முடிந்தது.

இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் தமிழ் உரைநடை சொல்லிலும் பொருளிலும் எவ்வாறு வளர்ந்து வந்திருக்கிறது என்பதை ஓரளவு இந்தத் தொகுதியிலிருந்து தெரிந்துகொள்ளலாம். (1) சிறு கதைகள், (2) இலக்கியம், (3) விஞ்ஞானம், (4) சமயம், (5) பல்வகைக் கட்டுரைகள், (6) சரித்

திரம், (7) நுண்கலை, (8) கவிதை, (9) நாடகம் என்ற ஒன்பது பிரிவாக உள்ளுறையைப் பகுத்திருக்கிறோம். இவற்றில் சேராத பகுதிகளும் உண்டு. தொடர்கதை, மதிப்புரை, குறிப்புகள், பழமொழி, விடுகதை, மாதர் பகுதி, சிறுவர் பகுதி, நாடோடிப் பாடல்கள் ஆகியவை இத் தொகுதியில் வரவில்லை. மிகவும் முக்கியமானவற்றையே வெளியிட முடிந்தது.

இத் தொகுதியில் பலவகை எழுத்தாளர்களைப் பார்க்கிறோம். அமரர்களாகிவிட்ட பலருடைய எழுத்துக்கள் இதில் உள்ளன. உலகம் போற்றும் மேதாவிகளாகிய ஸ்ரீ ராஜாஜி, மகா கனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார், கே. எஸ். கிருஷ்ணன் போன்ற பெரு மக்களுடைய சிந்தனைகள் எழுத்து வடிவம் பெற்றுள்ளன. ''கல்கி''யைப் போன்ற பத்திரிகாசிரியர்களின் கதைகள் இதில் வந்திருக்கின்றன. டாக்டர் உ. வே. சாமிநாதையர், மு. இராகவையங்கார், எஸ். வையாபுரிப்பிள்ளை, டாக்டர் சேதுப்பிள்ளை முதலிய பேராசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள். ஸ்ரீமதிகள் குமுதினி, கி. சரஸ்வதியம்மாள், ராஜம் கிருஷ்ணன், கி. சாவித்திரியம்மாள் ஆகிய பெண்மணிகளின் கதை கட்டுரைகள் இக் கதம்பத்துக்கு மணம் தருகின்றன. பாரதியார், கவிமணி ஆகியவர்களின் கவிதைகள் இதில் மலர்கின்றன. புதுமைப்பித்தன், கு. ப. ரா. முதலிய சிறு கதை மன்னர்களின் எழுத்தோவியங்கள் இதில் இணைந்துள்ளன.

முன்பு கலைமகளில் வெளியான வண்ணப் படங்கள் சிலவற்றையும் இக் கதம்பத்தில் சேர்த்திருக்கிறோம்.

எழுத்துக் கலையை வளர்த்துத் தமிழ் மக்களுக்கு விருந்தளித்த செல்வர்கள் படைத்த இனிய உயரிய படைப்புக்கள் இவை. பல நறு மலர்களைக் கொண்ட கதம்பமாக மணப்பது; பல வண்டுகள் ஈட்டி வைத்த தேனைப்போல இனிப்பது; பல இசைக் கருவிகள் சேர்ந்த இசை விருந்தைப்போல மகிழ்ச்சியை ஊட்டுவது.

இதனைக் கலைமகள் வெள்ளி விழா நினைவு மலராக மகிழ்ச்சியுடன் தமிழ்த் தாயின் திருவடிகளில் சமர்ப்பிக்கிறோம்.

கி. வா. ஜகந்நாதன
கலைமகள் ஆசிரியர்.

ൃ ൃ ൃ ൃ ൃ ൃ ൃ ൃ ൃ ൃ



# கலைமகள் கதம்பம்

சிறு கதைகள்

1932 — 1956

ൃ ൃ ൃ ൃ ൃ ൃ ൃ ൃ ൃ

ராஜாஜி

# கர்நாடக விஜயம்

ஜாப் கலெக்டர் சீதாராமனுக்குச் சம்பளம் ஆயிரத்து இருநூறு ரூபாய். ஆனாலும் குடும்ப வாழ்க்கை மிகவும் சிக்கனமாக நடந்து வந்தது. 'சிக்கனம் ஏன்? திராபை' என்றே ஊரிலுள்ள மற்ற உத்தியோகஸ்தர் முதலியவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டு ஏளனம் செய்வார்கள்.

புருஷனும் பெண்டாட்டியும் அத்தியந்த அன்புடன் வாழ்க்கை நடத்தினார்கள். ஆனால் ஒரு விஷயம் ரகசியமாகவே இருந்தது. மாதம் தவறாமல் சம்பளம் வாங்கினவுடன் எஜமானர் சீமைக்கு ரூ. 900 அனுப்பி விடுகிறாரே, இதற்குக் காரணம் என்னவென்று மனைவியால் தெரிந்து கொள்ள முடியவில்லை. முதலில் ஏதோ சீமையில் நல்ல பாங்கியில் பணம் வைத்து வருகிறார் என்று எண்ணிச் சந்தோஷப்பட்டாள். பிறகு அவ்வாறு இருக்காது என்று தெரிந்துகொண்டாள். பணம் சேர்த்து வைக்கும் சிக்கனத்திற்கும் ரொம்ப வித்தியாசம். தினசரி நடவடிக்கையிலும் மன நிலைகளிலும் இது நன்றாக வெளிப்படையாகிவிடும்.

ஒரு நாள் மனைவியிடம் சீமையில் தான் ஏதோ கடன்பட்டு விட்ட தாகவும் அதைத் தீர்ப்பதற்காக இவ்விதம் மாதந்தோறும் பணம் அனுப்புவதாகவும் சீதாராமன் சொன்னான். எல்லாச் செலவுகளுக்கும் ஊரிலிருந்து பணம் அனுப்பி வந்திருக்க, இம்மாதிரி கடன் படுவதற்குக் காரணம் என்ன என்பது மனைவிக்கு விளங்கவில்லை. ஆயினும் எஜமானர் பேச்சை நம்பாமல் கேள்விகள் அதிகமாகக் கேட்க இயலாது. அதைப் பற்றிப் பேச்சு எடுத்தால், பேச்சை மெள்ள மாற்றிவிட்டு வேறு விஷயத் திற்குப் போய்விடுவான். சீமை வாழ்க்கையைப்பற்றிப் பலர் பேசிக் கொள்வதைக் கேட்டுச் சில சமயம் மனைவிக்குப் பல சந்தேகங்களும் தோன்றும். ஆனால் சீதாராமன் அவளிடம் காட்டிவரும் அன்பானது அந்தப் புகைச்சலை எல்லாம் உடனே ஓட்டிவிடும். 'எது எவ்வாறானாலும் அதைப் பற்றி எனக்கு என்ன? சம்பளமே முந்நூறு ரூபாய் என்று வைத் துக் கொள்வோமே' என்று இவ்வாறு மனத்தைச் சாந்தப்படுத்திக்கொள் வாள். பாரத நாட்டுப் பதிவிரதா தருமத்தின் சக்தி இதுவே.

மாமனார் பணத்தைக் கொண்டுதான் சீதாராமன் சீமைக்குப் போய் அங்கே மூன்று வருஷம் இருந்து ஐ.ஸி.எஸ். தேறினது. இவன் சீமைக்குப் போகும்போது மனைவி சுந்தரிக்குப் பத்தொன்பது வயசு. லட்சணமான பெண். ஆனால் பழைய காலத்து நகைகள் போட்டுக்கொண்டு பழைய காலத்து உடை உடுத்து வந்தாள். அது புருஷனுக்குத் திருப்தி தரும் என்று அவள் எண்ணம். ஒரு புதிய நகை வாங்கி மாட்டிக்கொண்டால் முகத்திற்கு ஒரு புது அழகு சம்பாதித்துவிட்டதாக அவளும் அவள் தாயும் நம்பினார்கள். சீதாராமனோ, பாவம்! தன் மனைவி இந்த மூக்குப் பொட்டும், பெரிய காதுத் தோடுகளும் இல்லாமல் லேசான வளையல் மட்டும் கைக்குப் போட்டுக்கொண்டு வேறு ஆபரணங்கள் இல்லாமல்,

லேசான புடைவை, தொங்குக் கொசாம் இல்லாமல் நாகரிகமாக உடுத்து, இந்தக் கோரமான பட்டுக்கரை முழங்கை ரவிக்கைக்குப் பதில் கொஞ்சம் குறைவாகவே ஏதாவது வைத்துப் போட்டுக்கொண்டால் நன்ரு யிருக்குமே என்று எண்ணி எண்ணி வருந்துவான். அவனும் உண்மையில் ஒரு பழைய காலத்து ஆசாமிதான். மனத்தில் தோன்றும் எண்ணங்களை மனைவியிடம் சொல்லக் கூச்சம்; சொன்னாலும், 'இந்தப் பழைய பட்ட வர்த்தனங்கள் எங்கே கேட்கப் போகிருர்கள்?' என்று தன் எண்ணம் மனத்திலேயே புகைந்துகொண் டிருக்க விட்டான். சினிமாவுக்குப் போவான். அங்கே பார்ப்பான்: படத்தில் வரும் ஸ்திரீகளைப் பார்ப்பான். படம் பார்க்க வரும் உள்ளூர்ப் பெண்மணிகளையும் பார்ப்பான். பார்த்துப் பெருமூச்சு விடுவான். 'எல்லாரும் தங்கள் தங்கள் அழகை எவ்விதம் எடுத்துக் காட்டக்கூடும் என்பதை அறிந்திருக்கிருர்களே. நம் மனைவிக்கு மட்டும் ஒன்றும் இந்த விஷயம் தெரியவில்லையே!' என்று வருத்தப் படுவான். சரி, சீமைக்குப் போய்த் திரும்பி வந்ததும் எல்லாம் சரிப்படுத்தி விடலாம் என்று விஷயத்தை ஒத்திப்போட்டு மனத்தைச் சாந்தப்படுத்திக் கொண்டான்.

சீதாராமன் சீமைக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கே எந்தப் பக்கம் திரும்பினாலும் நாகரிகம். ஆகா! என்ன உடலழகு! என்ன உடையழகு! என்ன முக மலர்ச்சி! என்ன அந்தம்! என்ன நடையழகு! பேச்சோ, அமிழ்தமே என்று சொன்னால் மிகையாகாது. எல்லாம் ஒரு தேவலோக மாகவே அவனுக்குத் தோன்றிற்று. சில நாட்களுக்குள் அந்தத் தேவ லோகத்தில் ஓர் அப்ஸரஸ் அவனிடம் நெருங்கிப் பழகலானாள். 'ஆகா! இத்தகைய ஒரு பெண்ணுடன் வெறுமனே பேசிக்கொண்டிருந்தாலுமே போதும். விவாகம் என்னத்திற்கு; குடும்பம் என்னத்திற்கு?' என்று அடிக் கடி எண்ணுவான். அவளை விட்டுப் பிரிந்தால் துக்கத்தில் மூழ்குவான். ஊரில் விட்டு வந்த மனைவி சுந்தரியை நினைத்து வெறுப்புக் கொள்ளவும் ஆரம்பித்தான்.

ஒரு துரதிருஷ்ட நாள் வந்து சேர்ந்தது. அன்று அப்ஸரஸின் மாய வலையின் வீச்சு வலுத்திருந்தது. சீதாராமன் அவளை விவாகம் செய்து கொள்வதென்று தீர்மானித்துவிட்டான். இருவரும் ஒப்புக்கொண்டு மூன்று வாரத்துக்குள் காரியமும் முடிந்தது. சீமையில் விவாகம் அரை மணியில் செய்து தீர்த்துவிடச் சௌகரியங்கள் உண்டு. தான் விவாகம் ஆகாத பிரம்மசாரி என்று முதல்முதலில் அப்ரஸினிடம் சம்பாஷணை உற்சாகத்தில் சொன்ன பொய்யைப் பிறகு மாற்ற இயலாமலே விஷயங் கள் நடைபெற்றன. அந்தப் பொய், விவாகப் பதிவு அதிகாரியிடமும் சொல்லப்பட்டது.

அந்த உறுதி மொழியின்பேரில் விவாகம் பதிவாயிற்று. சீமையில் ஒரு மனைவி இருக்க மற்றொரு விவாகப் பதிவு செய்துகொள்ள முடியாது. ஆணும் பெண்ணும் ஒரே விதம்.

சீதாராமனும் அப்ஸரஸும் புருஷன் மனைவியாக வாழச் சௌகரியக் குறைவுகளால் சில நாட்கள் தடைப்பட்டன. பிறகு ஏதோ காரணம் சொல்லி ஊரிலிருந்து கொஞ்சம் அதிகமாகப் பணம் தருவிக்கலானன். மாமனார்தாம் அனுப்பினார். அதன்மேல் இருவரும் சேர்ந்து வாழ ஆரம் பித்தார்கள். அப்ஸரஸின் குணம் கொஞ்சம் மாறி வருவதாகத் தோன் றிற்று. முன்பெல்லாம் காட்டிய சாந்தமும் விநயமும் கொஞ்சங் கொஞ்ச மாகக் குறைந்து கரட்டுப்பான்மையாக முடிந்தது. 'சுந்தரியே தேவலை' என்றுகூட ஒரு நாள் தோன்றிவிட்டது.

உதடுகளின் அழகிய நிறம் அவ்வப்போது போடும் பூச்சுத்தான் என்று சில நாட்களிலேயே தெரிந்தது. வண்ணம் பூசாதபோது ரொம்பக் கேவலமாகத்தான் இருந்தது. வயசே மாறினாற்போல் இருந்தது. சீதா ராமனுக்குச் சுந்தரியின் வாயும் உதடும் நினைவுக்கு வரும்.

ஆயிர மடங்கு அழகாக இருந்ததே என்றும் எண்ணலானுன். பிறகு ஒரு நாள் அப்ஸரஸின் தலைமயிர் பொய்மயிர் என்பது வியக்தமாயிற்று. அன்று சீதாராமன் பட்ட நரக வேதனை நரகத்தில் இருப்பவர்களுக்குத் தான் தெரியும். தலைமயிர் மட்டுமல்ல, கண் புருவமும் வெறும் கறுப்புப் பூச்சாக முடிந்தது. ஒரு மாதம் கழித்து அப்ஸரஸின் முத்துப்போல் மின்னின பற்கள் இரு வரிசையும் தனியாகப் பெட்டியில் பத்திரமாகக் காப்பாற்றப்பட்டிருப்பதையும் கண்டான்.

இதனுடன் சீதாராமனுடைய பொறுமை முடிந்துவிட்டது. கழுத்துக்குச் சுருக்குப் போட்டுக்கொண்டு உயிர் நீப்பதே மேல் என்று முடிவு செய்தான்.

நாற்காலியில் சாய்ந்து தன்னைத்தானே பழித்துக்கொண்டு ஊரையும் தெய்வத்தையும் எண்ணியவாறு கண்ணை மூடித் தியானத்தில் மூழ்கினுன். தன் குழந்தைப் பருவத்து வாழ்க்கை எல்லாம் திடீரென்று நினைவுக்கு வந்தது. இறந்துபோன தன் தாய் பக்கத்தில் வந்து நிற்பதுபோல் காட்சி கண்டான். பிறகு மனைவி சுந்தரி, உமா தேவியைப்போல் ஊரில் தனக்காகத் தவம் செய்து காத்துக்கொண்டிருக்கும் மனக் காட்சியைக் கண்டான்.

தற்கொலை செய்துகொள்ளத் தீர்மானித்தவர்களுக்கு இவ்வாறு எல்லாம் காட்சிகள் தோன்றும். சீதாராமன் கண்களில் நீர் ததும்பிற்று. அடுத்தாற்போல் அப்ஸரஸின் பொய்ப்பல் வரிசை இரண்டும் முகமும் உதடுமின்றி உயிர்கொண்ட தனி உயிர்போல் காட்சி தந்தன. அந்த எலும்புப் பேய் தன் மடத்தனத்தைப் பரிகசித்து இளிப்பதுபோல் கண்டான்.

'சீ! இந்த ஆபாசத்துக்காகவா நான் உயிர் துறப்பது? சுந்தரியைக் குழியில் தள்ளிவிடவா பார்த்தேன்? என்ன பெரும் பிழை செய்ய இருந்தேன்!' என்று தற்கொலை எண்ணத்தை ரத்து செய்துவிட்டான். நாற்காலியை விட்டு எழுந்து உடுப்புப் போட்டுக்கொண்டு வெளியே கிளம்பினுன்.

சில நாட்கள் அலைந்து கஷ்டப்பட்டு இந்தியாவில் தான் படித்த பாதிரிமார் நடத்திவந்த பள்ளிக்கூடத்து உபாத்தியாயராகிய கிழவர் ஒருவரைப் பிடித்து அவர் அநுதாபத்தைச் சம்பாதித்தான். அவரிடம் மறைக்காமல் விஷயமெல்லாம் சொல்லி அழுதான். அவரும் பழைய மாணவன்மேல் இரக்கம் கொண்டு அவன் சிக்கிக்கொண்ட வலையினின்று அவனை மீட்க முயற்சி செய்தார்.

பிறகு அப்ஸரஸிடம் பேசி ஒரு சமாதான ஒப்பந்தம் முடிவு செய்தார். பரீட்சை தேறி வேலையில் அமர்ந்ததும் தான் பெறும் சம்பளத்தில் அப்ஸரஸுக்கு ஒரு பெரும் பகுதி மாதந்தோறும் அனுப்புவதாக வீதாசாரத் திட்டம் ஒன்றை ஒப்புக்கொண்டு எப்படியோ தப்பினுல் போதும் என்று ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டான். பொய் உறுதிமொழி தந்ததற்குச் சிறைச்சாலை புகாமல் தப்பினதே அதிருஷ்டம் என்று எண்ணினுன்.

பிறகு கஷ்டப்பட்டு ஐ. ஸி. எஸ்.ஸும் தேறிவிட்டான். கப்பலேறி ஊருக்கு வந்து சேர்ந்தான். இந்தியத் தரையில் கால் வைத்ததும் தாய் மடியில் குழந்தை அமர்ந்த மகிழ்ச்சியை அடைந்தான். இந்த உணர்ச்சி சீமையிலிருந்து திரும்பி வருபவர்கள் எல்லாருக்குமே மனத்தில் உண்டாகும். ஆனுல் சீதாராமனுடைய மகிழ்ச்சி இந்தச் சம்பவங்களினுல் தனி வேகம் கொண்டதாக இருந்தது. ஊர் வந்து சேர்ந்து சுந்தரியைக் கண்டதும் நாட்டு வழக்கமெல்லாம் மறந்து எல்லார் எதிரிலும் அவளைக் கட்டி அணைத்துக்கொண்டான். கர்நாடக உடையும் ஆபரணமும் அவன் கண்ணுக்கு இப்போது உண்மை அழகு வீசின.

தண்ணீரில் மூழ்கித் தத்தளித்தவன் கரையடைந்து கெட்டித் தரை மேல் நிற்கும் உணர்ச்சியும் மகிழ்ச்சியும் சீதாராமனுக்கு இப்போது வந்தன. இந்தக் கொசாம் வைத்து உடுத்திய புடைவையும் முழங்கை ரவிக்கையும்! சுந்தரியின் சௌந்தரியமும் நாகரிகமும் அவனுக்கு இப்பொழுதுதான் புலப்பட்டன. பணம் நஷ்டமானாலும் அன்பு உதயமாயிற்று. வாழ்க்கைக்கு வேறு என்ன வேண்டும்? ★

—ஜனவரி, 1943.

## ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி)

# தப்பிலி கப்

கிண்டி குதிரைப் பந்தய மைதானத்திற்குள் நீங்கள் எப்போதாவது பிரவேசித்தது உண்டா? இல்லையென்றால் அதற்காக வருத்தப்பட வேண்டாம். ஏனென்றால், அந்தப் பூலோக சொர்க்கத்துக்குள் நானும் நுழைந்தது இல்லை. இந்தக் கதையைப் பொறுத்த வரையில் அந்த மைதானத்திற்குள் நீங்கள் பிரவேசித்திருக்க வேண்டும் என்னும் அவசியமும் இல்லை.

ஆனால் குதிரைப் பந்தயம் நடக்கும் சனி அல்லது புதன்கிழமைகளில் நீங்கள் கிண்டி ஸ்டேஷன் வழியாக மாலை நேரத்தில் ரெயில் பிரயாணம் செய்ய நேர்ந்தால், சிறிது தலையை நீட்டி வெளியில் பார்க்குமாறு சொல்வேன். அதனால் நீங்கள் அடையும் பலன் என்னவென்றால், சென்னை நகரில் சுமாராக எத்தனை மோட்டார் வண்டிகள் இருக்கின்றன என்று ஒருவாறு தெரிந்துகொள்ளலாம். புள்ளி விவரங்களில் நீங்கள் பற்று உடையவர்களாயின், பின்வரும் கணக்குகள் போட்டு அறியலாம்—

(1) சென்னையில் உள்ள மோட்டார் வண்டிகள் எவ்வளவு?

(2) சராசரி ஒவ்வொன்றின் விலை என்ன இருக்கும்?

(3) மொத்தம் விலை என்ன?

(4) ஒவ்வொன்றிற்கும் சராசரிப் பெட்ரோல் செலவு எவ்வளவு இருக்கும்?

(5) மொத்தப் பெட்ரோல் செலவு என்ன?

(6) கெட்டுப்போகும் கருவிகளைப் புதுப்பிக்கும் செலவு என்ன?

(7) கிராமாந்தரங்களின் ஏழைக் குடியானவர்களிடமிருந்து நகரவாசிகள் பெறும் பணத்தில், மோட்டார் மூலமாக மட்டும் எவ்வளவு ரூபாய் வருஷந்தோறும் அயல்நாட்டுக்கு அனுப்புகிறார்கள்? அல்லது நீங்கள் சமூக நிலைமையைப்பற்றிய ஆராய்ச்சியில் சிரத்தை உடையவர்களானால், அங்கு நிற்கும் மோட்டார் வண்டிகளின் இலக்கங்களையெல்லாம் குறித்துக்கொண்டு பின்வரும் விவரங்களை ஆராய்ச்சி செய்து கண்டு பிடிக்கலாம்:—

கிண்டி குதிரைப்பந்தயத்திற்குப் போகும் சென்னைப் பெரிய மனிதர்களில்,

(1) சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் எத்தனை பேர்?

(2) அட்வொகேட்டுகள் எத்தனை பேர்?

(3) நியாயாதிபதிகள் எவ்வளவு பேர்?

(4) பத்திராதிபர்கள் எத்தனை பேர்?

*(5)* *சட்ட சபை அங்கத்தினர்கள் எவ்வளவு பேர்?*

*(6)* *பாங்கி முதலாளிகள் எத்தனை பேர்?*

*(7)* *வியாபாரிகள் எத்தனை பேர்?*

*(8)* *கலாசாலை ஆசிரியர்கள் எவ்வளவு பேர்?*

பந்தயம் முடிந்து ஜனங்கள் மைதானத்திலிருந்து வெளியே வரும் பொழுது சற்றே கவனித்துப் பார்த்தீர்களானால், நீங்கள் சிறிதும் எதிர் பாராத மனிதர்கள் பலர் அங்கிருந்து வெளிப் புறப்படுவதைக் காண் பீர்கள். மூன்றும் வகுப்பில் உங்களுக்குப் பாடஞ் சொல்லிக் கொடுத்த உபாத்தியாயர், உங்கள் தகப்பனார் சிராத்தத்தில் நிமந்திரணத்துக்கு வந்த சாஸ்திரிகள், அன்றைத்தினம் சாயங்காலம் திருவொற்றியூரில் தேர் பார்க்கப் போவதாக விடுமுறை பெற்றுச் சென்ற உங்கள் வீடு கூட்டும் வேலைக்காரி முதலியோரைப் பார்த்துத் திடுக்கிடுவீர்கள்.

* * * *

உங்கள் விஷயம் எப்படி ஆனாலும் சரி, டி. கே. ராஜகோபாலன் இப்பொழுது கிண்டி மைதானத்துக்குள்ளிருந்து வெளிவருவதை அவனுடைய தாயார் பார்த்தாளாயின், மூர்ச்சை போட்டு விழுந்துவிடுவாள் என்பதில் சந்தேகமில்லை. ராஜகோபாலன் திருவல்லிக்கேணியில் வசிப்பவன்; அவனுக்குத் தபாலாபீசில் ரூபாய் நாற்பது சம்பளம். தாயாரைத் தவிர மனைவியும் தங்கையும் வீட்டில் இருந்தார்கள். ஜீவனத்துக்கு நாற்பது ரூபாய் போதவில்லை. ஆதலால் அவன் 'நாவல்' எழுதிப் புத்தகப் பிரசுரக் கம்பெனிகளுக்குக் கொடுத்துக் கொஞ்சம் பணம் சம்பாதித்து வந்தான். அன்று இருபதாம் தேதி. சம்பளம் வர இன்னும் பத்து நாள் ஆகும்.

மறுநாள் சமையல் பண்ணுவதற்கு வீட்டில் அரிசி சாமான் ஒன்றும் இல்லை என்று அவன் தாயார் சொன்னாள். இரண்டு மாத வாடகை பாக்கி என்று வீட்டுக்காரன் பிடுங்கி எடுத்தான்.

''அம்மா! போன மாதம் எழுதிக்கொடுத்த நாவலுக்காக மூர்மார்க்கெட் கோவிந்தசாமி நாயுடு இன்று முப்பது ரூபாய் தருகிறேன் என்று சொல்லியிருக்கிறார். அதை வாங்கிக்கொண்டு வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு அன்று காலை பத்து மணிக்கு ராஜகோபாலன் வீட்டை விட்டுக் கிளம்பினான். அவன் இப்பொழுது குதிரைப்பந்தய மைதானத்தி லிருந்து வெளிவருவதென்றால்? அதிலும், அவனுடைய தோற்றமோ மகாகோரமாக இருந்தது. முகத்திலே பிரேதக் களை; மேலெல்லாம் ஒரே புழுதியும் வேர்வையும். காலையில் அழகாக வகிடு பிளந்து படிய வாரிவிட்டிருந்த தலைமயிர் இப்பொழுது செங்குத்தாக நின்றுகொண் டிருந்தது. அந்தத் தலைமயிர் காற்றினால் கலைக்கப்பட்டதோடு அல்லாமல் அவனுடைய கைகளினாலும் வெகு வேதனையை அடைந்திருக்க வேண்டு மென்று தோன்றியது.

அவனுடைய இந்தக் கோர ஸ்வரூபத்தைப் பார்க்க நமக்கே சகிக்க வில்லையென்றால், அவனுடைய தாயாராவது மனைவியாவது பார்க்கும் பட்சத்தில், மூர்ச்சையடைந்து விழுவார்கள் என்று கூறுவது மிகையாகுமா?

ராஜகோபாலன் வெளியே வந்ததும் அங்கே வரிசையாக ஒன்றன் பின் ஒன்றாக நின்றுகொண் டிருந்த பஸ்களை ஒரு முறை ஊடுருவிப் பார்த்தான். பின்னர், அந்த வரிசையின் முதலில் ஜனங்கள் ஏறிக்கொண் டிருந்த பஸ்ஸை நோக்கி அதிவேகமாக விரைந்து சென்றான். அந்தப் பஸ்ஸுக்கு ஒருவர்தாம் பாக்கியாயிருந்தது. ''ஏறுங்கோ சார்! ஸ்டார்ட்!'' என்றான் கண்டக்டர். ஆனால் ராஜகோபாலன் ஏறவில்லை.

வண்டியின் முன்பக்கத்தில் இரண்டு தடித்த மார்வாரி சேட்டுகளுக்கு மத்தியில் உட்கார்ந்து திணறிக்கொண்டிருந்த ஒருவனைப் பார்த்து, ''அடே சீனு! ஒரு சமாசாரம். இறங்கு கீழே'' என்றான். நல்ல வேளை என்று எண்ணிக்கொண்டு கீழே இறங்கினான் சீனு.

''என்ன சமாசாரம்?'' என்றான்.

''ஒன்றுமில்லை......''

''ஒன்றுமில்லையா? பின் எதற்காக என்னை இறக்கினாய்?''

''அடே அப்பா! கோபித்துக் கொள்ளாதே. இங்கே வா, சொல்கிறேன்'' என்று, ராஜு சீனுவைச் சிறிது ஒதுக்குப் புறமாய் அழைத்துக்கொண்டு போய், ''சட்டைப் பையைப் பார்! எவ்வளவு சில்லறை இருக்கிறது?'' என்று கேட்டான்.

சீனு எண்ணிப் பார்த்தான். ஐந்தரை அணா இருந்தது. ''நல்ல வேளை! நீ வந்திருக்கிறாய். இல்லாவிட்டால் அவமானம்'' என்றான். பஸ்ஸுக்கு எட்டணா கூலி. ''இரண்டு பேருக்கு ரெயிலுக்காவது இருக்கிறதே'' என்றான் ராஜகோபாலன். இருவரும் கைகோத்துக்கொண்டு போய் டிக்கெட் வாங்கி ரெயில் ஏறினார்கள்.

* * * *

ரெயில் நகர ஆரம்பித்தது. சீனுவின் எதிரில் துக்கமே உருவாய் ஒருவர் உட்கார்ந்திருந்தார். மனைவி அல்லது குழந்தை செத்துப் போனால்கூட அவ்வளவு துக்கப்படுவார்களா என்பது சந்தேகம். ரெயில் ஓடத் தொடங்கியதும் அவர் அருகிலிருந்த முதலியார் பக்கம் திரும்பினார். ''நாலு நாளாய் 'பவானி பிரஸாத்'தான் ஜயிக்கப் போகிறது என்று ஊரெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தேன். கடைசியில் உன் பேச்சைக் கேட்டுக் குட்டிச் சுவராய்ப் போனேன். என் புத்தியைச் செருப்பால் அடித்துக்கொள்ள வேண்டும்'' என்று வெறுப்புடன் கூறினார். இப்படிச் சொல்லிக்கொண்டே அவர் தமது காலில் இருந்த செருப்பைக் கழற்றினார். பக்கத்தில் இருந்தவர்கள் அவர் எங்கே புத்தியைச் செருப்பால் அடித்துக்கொள்ளப் போகிறாரோ என்று பயந்துவிட்டனர். அப்படி ஒன்றும் அவர் செய்யவில்லை. பகலெல்லாம் நின்று கால் வலித்தது போலும்! காலைத் தூக்கிச் சப்பளங்கூட்டி உட்கார்ந்தார். ''எவனாவது கண் தெரிந்து 'டாபா' மேல் பணம் கட்டுவானா?'' என்றார் ஒருவர். ''அந்த ரேஸில் அதுதான் ஜெயிக்கப் போகிறது என்று ஸ்பெஷல் தந்தி போச்சே'' என்றார் முதலியார்! ''உன் தந்தியைக் கொண்டு உடைப்பில் போடு! குதிரையா அது? கழுதை! கடைசியில் அல்லவா வந்தது?'' என்றார் நாயுடு. ''ஆமாம் ஐயா! எல்லாவற்றிற்கும் கடைசியாக அது எப்படித்தான் வந்ததோ, தெரியாது. எனக்கு வந்த கோபத்தில் அதன்மேல் கல்லை விட்டு எறிந்தேன்'' என்றார் ஒரு சாயபு.

''தந்திப்படி குதிரை வந்தால் அப்பொழுது மட்டும் என்ன சொல்வாய்?'' என்று முதலியார் கேட்டார்.

''ஆமாம்! உன் குதிரைதான் வந்ததே தெரியாதா, வாலை உயரக் கிளப்பிக்கொண்டு!'' என்று சொல்லி நாயுடு கையைத் தூக்கினார். குதிரை வாலை அப்படித் தூக்கிக்கொண்டு போனதென்று காண்பிப்பதாக அவர் எண்ணம்.

இவர்கள் பேசுவதைக் காதில் வாங்காததுபோல் உட்கார்ந்திருந்த ஒரு கிழவர், ''பாருங்கள், நானும் இருபது வருஷமாய் ரேஸுக்குப் போய் வருகிறேன். நான் பணங் கட்டியதைப் போல் ஒருவரும் கட்டியிருக்க மாட்டார்கள். இழவை விட்டுத் தொலைக்கலாமென்றாலோ முடியவில்லை. லாபம் வருகிறதோ இல்லையோ, நம் பணம் போகிறது

நிச்சயம். நூற்றுக்கு எட்டு வீதம் கிளப்புக்காரன் எடுத்துக்கொண்டு விடுகிறான். போதாததற்கு உள்ளே வர டிக்கெட், ரெயில் செலவு, கவலை, காலவிரயம் எல்லாம்'' என்று பிரசங்கம் செய்யத் தொடங்கிவிட்டார்.

* * * *

ராஜுவும் சீனுவும் ஒரு மூலையில் பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். வாய் திறக்கக்கூட இல்லை. மற்றவர்களுக்கெல்லாம், 'ஏதோ அடுத்த சனிக்கிழமை அதிருஷ்டம் திரும்பாதா? பார்க்கலாம்' என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் இவர்களுக்கோ எல்லா நம்பிக்கையும் போய்விட்டது.

வண்டி பார்க் ஸ்டேஷனில் வந்து நின்றது. ''என்னுடைய அறைக்கு வருகிறாயா?'' என்று சீனு கேட்டான்.

''ஆமாம், வருகிறேன். இன்றிரவு அம்மாவின் முகத்தில் விழிக்க என்னால் முடியாது'' என்றான் ராஜு.

இருவரும் இறங்கிச் சிந்தாதிரிப் பேட்டையில் இருந்த சீனுவின் அறைக்குச் சென்றார்கள்.

நெருப்புப் பெட்டியைத் தேடி எடுத்து விளக்கேற்றி வைத்து விட்டு, ''உன்னை ஏன் கூப்பிட்டேன் தெரியுமா?'' என்று சீனு கேட்டான்.

''ஏன்?''

''இன்றிரவு நான் தனியாயிருந்தால் ஏதாவது விபத்து நேர்வது நிச்சயம். தூக்குப் போட்டுக் கொள்வேன்.''

''நீ கூடவா அப்படி? அவ்வளவு நஷ்டம் ஆகிவிட்டதா?''

''உனக்கு ஞாபகம் இருக்குமே? பாகவதர் பாய்ஸ் கம்பெனியிலிருந்து நான் சண்டை போட்டுக்கொண்டு விலகியபோது என்னிடம் 20,000 ரூபாய் பணம் இருந்தது. எல்லாம் போய்விட்டது. நாளைக்குக் காபி சாப்பிடப் பணம் கிடையாது.''

''உனக்கென்ன, அப்பா! என்ன போனால்தான் என்ன? பெண்டாட்டி பிள்ளையா, தாய் தகப்பனரா, ஒருவரும் இல்லை. உன் ஒருவனுக்கு எப்படியும் சம்பாதித்துக்கொள்வாய். நீ கொடுத்து வைத்தவன்.''

''ரொம்பக் கொடுத்து வைத்தவன்தான். இருக்கட்டும், உன் சங்கதி என்ன? தாயார் முகத்தில் விழிக்க முடியாதென்று சொன்னாயே; ஏன்?''

''ஆமாம். வீட்டு வாடகை இரண்டு மாதம் பாக்கி. நாளைக்கு அரிசி இல்லை. 250 ரூபாய் கடன் இருக்கிறது. கடன்காரன் பிராது செய்வேன் என்கிறான்.''

''ஊரிலே நிலம் இருந்ததே?''

''அதெல்லாம் முன்னமே கடன்காரன் கொண்டு போய்விட்டான்.''

''அட பாவி! அப்படியானால் என்ன செய்யப் போகிறாய்?''

''பெண்டாட்டி கழுத்தில் சங்கிலிதான் பாக்கியிருக்கிறது. அதைக் கேட்டு வாங்குவதைவிட நாக்கைப் பிடுங்கிக்கொண்டு, சாகலாம் என்று தோன்றுகிறது.''

இப்படிச் சொன்ன பொழுது ராஜுவின் கண்களில் நீர் ததும்பிற்று. சற்று நேரம் விம்மி விம்மி அழுதான். சீனு அவனைத் தன் தோளில் சார்த்திக்கொண்டு சமாதானப்படுத்தினான். இருவரும் பால்ய நண்பர்கள்.

சீனு சட்டென்று எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்தான். ராஜூவின் தோளைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கினான். ''இதோ பார், ராஜூ! ஒரு யுக்தி! முதல் தரமான யோசனை. நிமிர்ந்து உட்கார்ந்து கேள்'' என்றான்.

''இனிமேல் என்ன யோசனை செய்து என்ன காரியம் நடக்கப் போகிறது?'' என்றான் ராஜூ.

''இதோ பார்! நீயோ ஆசிரியன். நான் பேர் பெற்ற நடிகன். நாம் இருவரும் சேர்ந்து வெற்றி பெறுவிட்டால் அப்புறம் என்ன இருக்கிறது? இத்தனை நாளும் நீ சிரமப்பட்டு நாவல் எழுதிப் பிறரிடம் கொடுத்துப் பாரத்துக்கு (16 பக்கத்திற்கு) 4 ரூபாயும் 5 ரூபாயும் பெற்று வந்திருக்கிறாய். போதும் இந்தத் தொழில். இப்பொழுது ஒரு நாடகம் எழுது. குதிரைப் பந்தயத்தைப்பற்றி எழுது. உன்னுடைய அநுபவத்தையே முக்கியச் சம்பவமாய்க் கொண்டு கொஞ்சம் காது மூக்கு வைத்து எழுதினால் போதும். நான் 'ஸ்திரீ பார்ட்' போட்டுக்கொள்கிறேன். நாடக உலகத்தை நான் விட்டு மூன்று வருஷந்தான் ஆயிற்று. இப்போதும் என் பெயரைக் கேட்டே நாடகத்துக்கு வரக் கூடியவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். நீ கதாநாயகனாக நடிக்கலாம். அதற்கு உன்னைத் தயார் செய்துவிடுகிறேன். உனக்குச் சொந்த அநுபவம் இருக்கிறபடியால் உன் அளவு சோகரசத்துடன் யாரும் நடிக்க முடியாது. பாக்கி எல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன். நீ நாடகம் மட்டும் எழுது'' என்றான்.

''யோசனை நன்றாய்த்தான் இருக்கிறது. ஆனால் நாடகம் நடத்துவது அவ்வளவு சுலபமா? முதலில் தயார் செய்வதற்கெல்லாம் பணம் வேண்டாமா?''

''உனக்கு ஏன் அந்தக் கவலை? எனக்கு வந்த மெடல்களை மட்டும் இன்றும் பத்திரமாய் வைத்திருக்கிறேன். அவைகளை விற்றாவது நான் வேண்டிய ஏற்பாடுகள் செய்கிறேன். அதிகம் வேண்டாம்; அடுத்தடுத்து மூன்றே நாடகம் போடுவோம். அதற்கு மேல் போட்டால் புளித்துப் போய்விடும். நாடகத்துக்கு ரூ. 1000 வீதம் குறைந்தது 3000 மீதமாகும். தலைக்குப் பாதியாக எடுத்துக்கொள்வோம்.''

''எனக்கு இன்னொன்றுகூடத் தோன்றுகிறது. புத்தகத்தையும் முதலிலேயே அச்சுப் போட்டுவிட்டால் நாடகக் கொட்டகையிலேயே விற்கலாம். மூன்று நாளைக்குள் முதல் பதிப்பு விற்றுவிடும். அதில் குறைந்தது 500 ரூபாயாவது வரும்'' என்றான் ராஜூ.

இரவு ஒன்பது மணி. இருவரும் போய்க் காபி சாப்பிட்டுவிட்டு வந்தார்கள். ராஜூ காகிதமும் பேனாவும் எடுத்துக்கொண்டு எழுதத் தொடங்கினான்.

''நாடகத்துக்கு என்ன பெயர் கொடுக்கிறாய்?''

''தப்பிலி கப்.''

''பேஷ்! நல்ல பெயர். சத்தியமே ஜயம். எழுது'' என்றான் சீனு.

* * * *

**ரா**யல் தியேட்டரில் 'தப்பிலி கப்' நாடகம் போடப்பட்ட அன்று அந்தப் பெரிய கொட்டகை முழுவதும் ஏறக்குறைய நிறைந்திருந்தது. குதிரைப் பந்தயத்துக்குப் போவோர் இயல்பாக அந்த நாடகத்தின் பெயரினாலேயே கவரப்பட்டு வந்து சேர்ந்தனர்.

குதிரைப் பந்தயத்திற்குப் போகாதவர்களோ, தங்கள் தங்களுக்கு வேண்டியவர்கள் குதிரைப் பந்தயத்திற்குப் போய்க் கெட்டுப்போவதைத் தடுப்பதற்கு இந்த நாடகம் பயன்படலாம் என்ற நம்பிக்கையுடன் வந்து சேர்ந்தார்கள். ஆகவே, கொட்டகை நிரம்பிற்று.

நாடகத்தின் கதை என்னவோ சாமானியமானதுதான். கதாநாயகன் சென்னையில் ஓர் அட்வொகேட். தொழில் ஆரம்பித்து இரண்டு வருஷந் தான் ஆயிற்று. 'பிராக்டிஸ்' அதிகமில்லை. அவனுடைய மாமனார் (கதாநாயகியின் தந்தை) ஓர் எம். எல். சி. பெரிய இடங்களுக்கு அதிகம் வேண்டியவர். ஜில்லா முனிசீப் வேலைக்குக் கூடிய சீக்கிரம் ஏற்பாடு செய்வதாகச் சொல்லி இருந்தார்.

முதல் காட்சியில் கதாநாயகி, ''இந்த வருஷம் கோடைக்கு ஊட்டிக்குப் போகலாமா?'' என்று கேட்கிறாள். தன் அருமை விருப்பத்தை நிறைவேற்ற முடியாமல், பாங்கிக் கணக்கில் மூன்று கலமும் பூஜ்யமாயிருப்பதை எண்ணிக் கதாநாயகன் கலங்குகிறான். ஆயினும் இதை அவளிடம் சொல்லாமல், ஊட்டிக்குப் போகாததற்கு வேறு ஏதோ பொய்க் காரணம் கற்பித்துக் கூறுகிறான்.

ஊட்டிக்குப் போகவேண்டும் என்னும் தன்னுடைய மனைவியின் விருப்பத்தை எப்படி நிறைவேற்றுவது என்று கதாநாயகன் அல்லும் பகலும் அதே கவலையாக இருக்கையில், அவனுடைய நண்பன் ஒருவன் குதிரைப் பந்தயத்தைப்பற்றி அவனுக்குச் சொல்கிறான். அதில் பத்தாயிரம், லட்சம் என்று பணம் சம்பாதித்தவர்களைப்பற்றி அவன் எடுத்துச் சொல்ல, கதாநாயகனுக்குப் பந்தயப் பைத்தியம் பலமாகப் பிடித்து விடுகிறது. அதுமுதல் அவன் குதிரைப் பந்தயத்திற்குப் போக ஆரம்பிக்கிறான். ஆனால் மனைவியிடம் இதை மறைத்துவிடுகிறான். திடீரென்று ஒரு நாள், ''நாளை நாம் ஊட்டிக்குப் போகிறோம்'' என்று சொல்லித் திடுக்கிடச் செய்யவேண்டும் என்று மனோராஜ்யம் செய்கிறான்.

மேலும் மேலும் கஷ்டமாகிவருகிறது. அவ்வளவுக்கும் பந்தயத்தில் மோகமும் வளர்ந்து விடுகிறது. மார்வாரிக் கடையில் கடன் வாங்குகிறான்.

ஒரு நாள் குதிரைப் பந்தய மைதானத்தில் கதாநாயகனுக்கு அவனுடைய சிநேகிதன் ஒரு தாசியை அறிமுகம் செய்துவைக்கிறான். பிறகு ஒரு தினம் அவளுடைய வீட்டுக்குப் போகலாம் என்று சிநேகிதன் அழைக்கிறான். கதாநாயகனுக்குச் சிறிதும் இஷ்டமில்லை. ஆனால் பத்மா பாய்க்கு ஜாக்கிகள், டிரெய்னர்கள் அநேகம் பேரைத் தெரியும் என்றும் அவள் 'டிப்' கொடுத்தால் தவறுவது இல்லையென்றும் சிநேகிதன் சொன்ன போது, கதாநாயகன் வேண்டா வெறுப்பாய் அவள் வீட்டுக்குச் செல்கிறான். இது ஒரு ஹாஸ்யக் காட்சி. தாசி வீட்டிற்குப் புதிதாக வருவோரைப்பற்றியும், அவர்கள் அங்கே என்ன பேசுவது என்று தெரியாமல் விழிப்பதைப்பற்றியும், அவர்களைத் தாசிகள் ஏமாற்றிப் பணம் பறிப்பதைப்பற்றியும் மிக்க ஹாஸ்ய ரசத்துடன் நடித்துக் காண்பித்தார்கள்.

ஆனால் அடுத்தாற்போல், கதாநாயகன் பச்சாத்தாபப்படும் காட்சியானது சிரிப்பை எல்லாம் மறக்கும்படி செய்துவிட்டது. குதிரைப் பந்தயத்துக்குப் போவதைத் தன் அருமை மனைவியிடம் மறைத்து வைப்பது போதாது என்று, தாசி வீடு சென்ற துரோகமும் சேர்ந்து விட்டதே என்று அவன் உருகுகிறான். அந்தச் சமயம். ''படமுடியாதினித் துயரம்'' என்று அவன் பாடியபோது சபையோரெல்லாம் கலகலவென்று கண்ணீர் வடித்தார்கள்.

கடன் மூண்டுவிட்டது. நான்கு பக்கமும் கடன்காரர்கள் பிடுங்கித் தின்ன ஆரம்பித்தார்கள். கதாநாயகன், செய்வது என்னவென்று

தெரியாமல் திணறுகிறன். இந்த நிலையில் நாளை, சனிக்கிழமை 'தப்பிலி கப்' என்னும் பந்தயத்தில் ஜயிக்கப்போகிற குதிரைக்கு அவனுக்கு 'டிப்' கிடைத்தது; அந்தக் குதிரையை இரண்டு நாளாகப் பல பேர் வாங்க முயற்சி செய்வதாகவும் அதன் விலை ஏறிக்கொண்டே போவதாகவும், அவனுக்கு நிச்சயமாகத் தகவல் தெரிந்தது. நாளை மட்டும் அதில் 2,000 ரூபாய் கட்டினுல் கட்டாயம் 20,000 ரூபாய் கிடைக்கும். கவலையெல்லாம் தீர்ந்துவிடும். ஆனுல், 2,000 ரூபாய்க்கு எங்கே போவது? இந்தச் சமயத்தில் அவனுடைய கட்சிக்காரன் ஒருவன் வந்து, கோர்ட்டில் கட்டுவதற்காக ரூபாய் 2,000 கொடுக்கிறன். தான் படும் கஷ்டத்தைப் பார்த்துக் கடவுளேதான் இந்த ரூபாயை அனுப்பி இருக்கிறர் என்று கதாநாயகன் தீர்மானிக்கிறன்.

மறு நாள் சனிக்கிழமை கிண்டிக்குப் போய், 'தப்பிலி கப்' பந்தயத்தில் குறிப்பிட்ட குதிரையின் மேல் ரூபாய் இரண்டாயிரமும் கட்டுகிறன். அவனுடைய குதிரை புறப்படும்பொழுது முதலில் புறப்படுகிறது; வரும்பொழுது கடைசியில் வருகிறது. இடையில் ஜாக்கி அதைப் 'புல்' பண்ணிவிட்டான் என்பது கதாநாயகனின் கொள்கை.

இனிமேல் எவ்விதக் கவலையும் இல்லை. செய்யத்தக்கது ஒன்றே ஒன்றுதான் பாக்கி இருந்தது. கதாநாயகன் தனியாகத் தனது அறையில் உட்கார்ந்து தன் மனைவிக்கு ஒரு கடிதம் எழுதுகிறன். அதில் ஆதியோடந்தமாக எல்லா விவரங்களையும் கூறுகிறன். கட்சிக்காரன் பணத்தை நாளைத் திங்கட்கிழமை கோர்ட்டில் கட்டாவிட்டால், துர்விநியோகம் செய்ததாய் ஏற்படும் என்றும், அட்வொகேட் தொழிலிலிருந்து தள்ளப்பட்டு அழியாத அவமானத்துக்கும் உள்ளாகவேண்டும் என்றும், அவளுடைய நகைகளை விற்றுக் கொடுப்பது ஒன்றுதான் வழி என்றும், அதைவிடத் தான் தூக்குப் போட்டுக்கொண்டு இறப்பதே மேல் என்று தீர்மானித்துவிட்டதாகவும் தெரிவிக்கிறன். அவளிடம் தான் கொண்ட அழியாத அன்பைப்பற்றிப் பிறகு விரிவாக எழுதி, அவளுக்கும் குழந்தைக்கும் தனது லட்சோபலட்சம் முத்தங்களை அளித்துக் கடிதத்தை முடிக்கிறன்.

கதாநாயகி ஞாயிற்றுக்கிழமை மத்தியான்னம் குழந்தையுடன் ஒரு சிநேகிதியின் வீட்டுக்குப் போகிறள். அவள் போன பிறகு கதாநாயகன் மேற்படி கடிதத்தை அவளுடைய அறையிலிருந்த மேஜையின்மேல் வைத்துவிட்டுத் தூக்கிட்டுக்கொள்வதாகத் தன் அறைக்கு வருகிறன். மேலே உத்தரத்தில் சுருக்குப் போட்டுக் கயிறு கட்டிவிட்டுக் கடவுளை நோக்கித் தோத்திரம் செய்கிறன். ஞாபகமறதியால் வீட்டுக் கதவு எதையும் தாழ்ப்பாளிட மறந்துவிடுகிறன். இதற்குள் சிநேகிதி வீட்டுக்குச் சென்ற கதாநாயகி தன் மனம் ஏதோ பரபரப்பு அடைந்திருப்பதைக் காண்கிறள். உடம்பு ஒரு மாதிரியாய் இருக்கிறதென்று சொல்லிவிட்டு உடனே வீடு திரும்புகிறள். வீட்டுக்கு வந்து மேஜைமீதிருந்த கடிதத்தைப் பார்க்கிறள். உடனே பதைபதைத்து ஓடுகிறள். கதாநாயகன் சுருக்கை மாட்டிக்கொள்ளும் சமயத்தில் அவனைப் போய்க் கட்டிக்கொண்டு, கோவென்று கதறுகிறள்.

அந்தச் சமயத்தில் பாதிப் பாட்டும் பாதிப் பேச்சுமாகக் கதாநாயகனுக்கும் கதாநாயகிக்கும் நடந்த சம்பாஷணையின்போது, சபையில் கண்ணீர் விட்டுக் கதருதவர்கள் யாரும் இல்லையென்று சொல்லலாம். ''உங்களை விட எனக்கு இந்த நகை பெரிதா?'' என்று சொல்லிக் கதாநாயகி ஒவ்வொரு நகையாகக் கழற்றிக் கொடுக்கிறள். ஒவ்வொரு நகைக்கும் அவள் ஒரு பாட்டும், பதிலுக்குக் கதாநாயகன் ஒரு பாட்டும் பாடுகிறர்கள். இந்தக் கட்டத்தில் சபையில் முக்கியமாகப் பெண்மணிகள் பகுதியில் உண்டான அல்லோலகல்லோலத்தைச் சொல்லச் சாத்தியம்

இல்லை. விம்மி விம்மி அழுதபடியால் தொண்டை காய்ந்துபோய், சோடா வாங்கிக் குடித்துத் தாகசாந்தி செய்துகொண்டு, மறுபடியும் அவர்கள் அழலானார்கள். கதாநாயகி தன் வைரக் கம்மலைக் கழற்றிக் கொடுத்த போது ஒரு பெண்மணி உருக்க மிகுதியால் மூர்ச்சையடைந்தே விழுந்து விட்டாள் என்றால், வேறு சொல்லவும் வேண்டுமோ?

எல்லா நகைகளையும் கழற்றி வைத்துவிட்டுக் கதாநாயகி, ''இவைகளை எடுத்துக்கொள்ளுங்கள், நாம் இருவரும் கூலிவேலை செய்து பிழைப்போம். அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால் ஒரு வரம் கொடுங்கள்'' என்று கேட்கிறாள். ''என் உயிரைக் கேட்டாலும் தருகிறேன்'' என்கிறான் கதாநாயகன். ''இனி மேல் குதிரைப் பந்தயத்திற்குப் போவதில்லை என்று சபதஞ் செய்யுங்கள்'' என்கிறாள். ''ஆண்டவன் ஆணை! உன்மேல் ஆணை! நம் அருமைக் குழந்தையின்மேல் ஆணை! நான் இனிக் குதிரைப் பந்தயத்துக்குப் போவதில்லை. அதைப்பற்றி நினைப்பதுமில்லை'' என்று கதாநாயகன் சபதம் செய்கிறான். அச் சமயம் சபையில் வீற்றிருந்தவர்களில் அநேகரும் இவ்வாறே தங்களுக்குள் சபதம் செய்து கொண்டார்கள்.

நாடகம் சந்தோஷமாக முடிகின்றது. கதாநாயகன் நகைகளை விற்பதற்காகக் கிளம்பும் தறுவாயில் ஒரு தந்தியும் ஒரு கடிதமும் வருகின்றன. தந்தியில் அவனுக்கு ஜில்லா முன்சீப் உத்தியோகமான செய்தி இருக்கிறது. கடிதத்தில் கதாநாயகியின் பாட்டி இறந்துபோனதாகவும், அவள் தனது உயிலில் கதாநாயகிக்கு ரூ. 30,000 எழுதிவைத்திருப்பதாகவும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மங்களம் பாடித் திரை விழுந்து நாடகம் முடிவுறுகின்றது.

* * * *

எதிர்பார்த்த அளவுக்கு மேல் வெற்றியுடன் நாடகம் நடந்தேறியதென்பதில் சந்தேகமில்லை. பின்னும் இரண்டு இரவுகள் தொடர்ந்து நடத்தப்பட்டது. முன்னைவிட அதிக ஜனங்கள் கூடினார்கள். அதிகக் கண்ணீர் வடிக்கப்பட்டது. அதிகம் பேர் குதிரைப் பந்தயத்திற்குப் போவதில்லை என்று சபதம் செய்தார்கள். கடைசியாகப் பொதுஜனங்களின் பிடிவாதமான வேண்டுகோளின்பேரில் அடுத்த ஞாயிற்றுக்கிழமை மாலை 'மாடினி' நாடகம் நடத்தினார்கள். அதுவும் சிறப்பாக நடந்தேறியது.

திங்கட்கிழமை ராஜுவும் சீனுவும் உட்கார்ந்து கணக்குப் பார்த்தார்கள். எல்லாச் செலவுகளும் போக 5000 ரூபாய் மீதம் இருந்தது. தலைக்கு ரூபாய் 2500 என்று பிரித்துக்கொண்டார்கள். போட்ட திட்டத்தில் ஒன்றே ஒன்றுதான் தவறிற்று. புத்தகம் அச்சிட்டார்கள் அல்லவா? நாலு நாளும் நாடகக் கொட்டகையில் விற்றதில் மூன்று புத்தகங்கள்தாம் விற்பனையாயின. பாக்கி முழுவதும் மிஞ்சிவிட்டது. ஆயினும் இதைப்பற்றி அவர்கள் கவலைப்படவில்லை.

''இன்னும் பதினைந்து நாள் உனக்கு லீவு இருக்கிறதே? என்ன செய்யப்போகிறாய்?'' என்று சீனு கேட்டான்.

''ஊருக்குப் போய் ரொம்ப நாளாயிற்று. எல்லாரையும் அழைத்துக் கொண்டு போகலாம் என்று இருக்கிறேன்'' என்றான் ராஜு.

''சரி, போய்வா! வெகு நாளாக எனக்குக் கோடைக்கானலுக்குப் போக வேண்டுமென்று ஆசை. அங்கே போகிறேன்'' என்றான் சீனு.

அடுத்த சனிக்கிழமை உதகமண்டலத்தில் குதிரைப் பந்தய மைதானத்தில் இரண்டு மனிதர்கள் தற்செயலாகச் சந்தித்தார்கள். அவ்விடத்தில் அவ்வாறு ஒருவரை ஒருவர் சந்திப்போம் என்று அவர்கள் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. ஆதலால், பிரமித்துப்போய் ஐந்து நிமிஷம் அப்படியே ஸ்தம்பித்து நின்றார்கள்.

''நீ ஊருக்குப் போகவில்லை?'' என்றான் சீனு.

''நீ கோடைக்கானலுக்குப் போகவில்லையா?'' என்றான் ராஜு.

அப்பொழுது அந்த மைதானத்தில் 'தப்பிலி கப்' பந்தயத்திற்காகக் குதிரைகள் அதிவேகமாக ஓடி வந்துகொண்டிருந்தன. ★

—மே, 1932.

'தேவன்'

# மதுரஸா தேவி

தினசரிப் பத்திரிகைகளில் சில தினங்களாக ஓர் ஆச்சரியமான விஷயம் அடிபட்டுக்கொண் டிருக்கிறது. தேச சரித்திர ஆராய்ச்சிக் காரர்கள், மனித வர்க்கத்தின் பண்டைய வாழ்வைச் சோதனை செய்பவர்கள், கற்பனை மன்னர்கள் ஆகியவர்களின் மூளையை மிகவும் குழப்பியுள்ள செய்தி அது.

நேபாளத்தின் எல்லைக் கோட்டுக்கு அருகிலே, ரூப்கந்த் ஏரியின் சுற்றுப்புறத்தில், ஏராளமான மனித எலும்புகள் நாலு புறமும் சிதறிக் கிடக்கின்றன என்பதே அந்தச் செய்தி. ஆயிரக் கணக்கான வருஷங்களாக அவை அங்கே கிடந்திருக்க வேண்டும் என்று ஆரம்பத்தில் ஊகித்தார்கள் சிலர். மேலும் ஆராய்ச்சி செய்ததில், ''சுமார் நூறு வருஷந்தான் ஆகியிருக்கும்; ஏனெனில் செருப்புப் போன்ற தோலாலான பொருள்களும் அங்கே காணப்படுகின்றன'' என்று திட்டமாகச் சொல்கிறார்கள். தற்போது உத்தரப் பிரதேசத்தில் உதவி மந்திரியாக இருக்கும் ஸ்ரீ ஜகன்மோகன் நேகி, ''இவைகள் எல்லாம் சரியாக நூறு வருஷங்களுக்கு முன் திபேத்தைக் கைப்பற்றச் சென்ற ஜெனரல் ஜோராவர் ஸிங்கினுடைய சைனியத்தைச் சேர்ந்த சிப்பாய்களுடையவையே. திபேத் வீரர்கள் இவர்களை முறியடித்துத் துரத்தி வந்தபோது பெரும்பாலானவர்கள் மாண்டுபோனார்கள். எஞ்சியவர்கள் இந்த வழியாக ஓடி வந்திருக்கிறார்கள். ஒரு பனிப் புயலில் சிக்கி, இந்தக் கதியை அடைந்திருக்கிறார்கள். பனிப் பிரதேசமாதலால், சடலங்கள் கெடாமல் வெகு காலம் இருக்கின்றன'' என்று கூறுகிறார்.

அந்த விவரங்கள் எல்லாம் உண்மையாக இருக்கலாம். ஸ்தலத்தை ஆராய்ச்சி செய்யச் சென்றிருந்தவர்களில் ஓர் இளைஞர், எலும்புக் கூடுகளை யெல்லாம் ஒவ்வொன்றாகக் கவனித்திருக்கிறார். எல்லாரும் ஆண்களே என்று அவர் முடிவு கட்டும் சமயம், ஒரே ஓர் எலும்புக் கூடு மட்டும் ஒரு பெண்ணினுடையதாக இருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றி யிருக்கிறது. ''அந்தப் பெண்மணி யார்? அவள் மட்டும் அத்தனை பெரிய கூட்டத்தில் எப்படி வந்து சேர்ந்துகொண்டாள்? இந்தப் புதிருக்கு யாரேனும் பதில் சொல்ல முடியுமா?''-இதெல்லாம் நான் என்னையே ஒரு நாள் கேட்டுக் கொண்ட கேள்விகள்.

''முடியும்!'' என்ற பதில் என் காதில் விழுந்தது.

திடுக்கிட்டுப் போனேன். யார் அது பேசுகிறது? - என் எதிரில் அற்புதமான ஒரு பெண் உருவம் நின்றது. ரூப லாவண்யம் மிகுந்தவள் என்று நான் அவளை வர்ணித்தால் போதவே போதாது. தந்தம் போன்ற மேனி, உருக்கி வார்த்த தங்கப் பதுமை, சந்திர பிம்பம் போன்ற வதனம் என்று எப்படிச் சொன்னாலும், ஏதோ ஒன்று குறைவாக இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. மிகச் சன்னமான பட்டிலே உடை

உடுத்திருந்தாள்; பரிபூர்ணமான அங்க அமைப்புகளை அவை விளம்பரம் செய்தன. கடல் போன்ற அவள் கண்கள், சதா சலித்துக்கொண்டிருந்தன; நெற்றியின் மீது புரண்ட குழல்கள், அதன் மேன்மையை மேலும் உயர்த்தின.

''தாங்கள் யார்?'' என்று கேட்டேன்.

''நீங்கள் யாரைப் பற்றி நினைத்தீர்களோ, அவள்! மனிதர்களில் ஆணானாலும் பெண்ணானாலும், எலும்புக் கூட்டிலிருந்து உருவத்தைக் கற்பித்துக் கொள்ள முடியாது. இரண்டும் ஒரே பயங்கரந்தான்; ஆனால், படைத்தவன் தசையையும் குருதியையும் நரம்பையும் தோலையும் போட்டு மூடி விதம் விதமான ரூபங்களை அமைக்கிறான். ரூப்கந்த் ஏரியின் கரையில் இன்று எத்தனை எலும்புகளைப் பார்க்கிறீர்கள்! எங்கே, எந்தச் சித்திரகாரனாவது, அந்தக் கூடுகளைச் சேர்ந்த மனித உருவங்களைத் தீட்டட்டும்! ஏன், நான் ஒருத்தி எப்படி இருந்தேன் என்றாவது காட்டட்டுமே! முடியாது! நிச்சயமாக முடியாது! இன்னொரு வேடிக்கையையும் பாருங்கள்: உலகத்தில் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தான் வெகு அழகு என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள்! ஆனால், தங்கள் எலும்புக் கூடு எத்தனை கோரம் என்று சிந்தித்துப் பார்ப்பதே இல்லை. ஏன், நான் கூட இன்று என் எலும்புக் கூட்டைக் கண்டு திகைத்துப் போனேன்!''

''ஓஹோ!'' என்றேன்.

''நீங்கள் கேட்க விரும்பியது ஒன்று; நான் விவரித்துக்கொண்டிருப்பது வேறு ஒன்று. அத்தனை ஆண்களுக்கும் மத்தியில் நான் ஒருத்தி எப்படி வந்து சேர்ந்தேன்? - என்பது உங்கள் கேள்வி. ஏன் வந்தேன் என்பதும் இரண்டாவது கேள்வி. கொஞ்சம் அவகாசம் கொடுத்தால் சொல்கிறேன்.'' ஒரு மாயப் புன்னகை; அது மயக்கியது. ''சொல்!'' என்று கூவ விரும்பினேன். முடியவில்லை. எதிரே விறைத்துப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தேன். அவள் என் பதிலை எதிர்பாராமலே கதையை ஆரம்பித்துவிட்டாள்.

* * * *

சேனாபதி ஜோராவர் ஸிங் என்று நீங்கள் கேட்டிருக்க மாட்டீர்கள். சிம்மமேதான் அவர். அவருடைய தலைமையில் ஒரு பெரிய படை திபேத்தை நோக்கிச் சென்றது. வீரச் சீக்கியர்கள், பஞ்சாபிகள், காஷ்மீரிகள், டோக்ராக்கள், லடாகிகள் கொண்ட அந்தப் படையில் பெரும்பாலும் பராக்கிரமசாலிகள், பயம் அறியாதவர்கள் இருந்தனர். நிச்சயம் வெற்றியும் பெற்றிருப்பார்கள்; ஆனால், திபேத்தியர்களுக்கு முன்னதாகச் செய்தி எட்டிவிட்டது. சீனப் பட்டாளங்களைத் துணைக்கு அழைத்துக் கொண்டு தயாராக இருந்தார்கள். கால் வைத்ததும், அப்படி அப்படியே ஓடி வரவேண்டி வந்தது. எதிரிகள் வெட்டித் தள்ளினார்கள்; சுட்டுக் குவித்தார்கள்; துரத்தித் துரத்திக் கொன்றார்கள். நிடி கணவாயெல்லாம் பிணங்கள் அடைத்தன; ஆறுகள் சிவப்பாக ஓடின. தப்பின பேர் நூறு; அவர்களில் நான் ஒருத்தி!

என் பெயர் மதுரஸா தேவி. பிறந்த ஊர் காச்மீரம். நன்றாக நடனம் செய்வேன்; அற்புதமாகப் பாடுவேன்; என் அழகைக் கண்டு வியக்காதவர் இல்லை. சேனாபதி ஜோராவர் ஸிங்குக்கே என்மீது பிரேமை உண்டு. என்னை அவர்களுடன் வர அநுமதித்ததற்கு உண்மைக் காரணம் அதுதான் எனினும், போர் வீரர்களுக்குக் கானத்தினாலும் நடனத்தினாலும் உற்சாகம் கொடுக்க நான் ஒருத்தி வரவேண்டும் என்றார் அவர். பாதுகாப்புகள் எல்லாம் செய்து தருவதாகச் சொன்னார். ''போனவுடன் மண்டியிடப் போகிறது திபேத்; அதற்கு ராணி நீ!'' என்றார். நான் யோசனை செய்துவிட்டு ஒப்புக்கொண்டேன். ஜோராவர் ஸிங் அன்புப்

பிரேமையைக் கொடுத்தார்; எனக்காக உயிரைக் கொடுக்கச் சித்தமாக இருக்கும் வேறு வீரர்களும் அந்தச் சைனியத்தில் இருந்தார்கள்.

பழைய கதையைத் திருப்பிச் சொல்லப் போவதில்லை நான். ஒரே குழப்பம், கலவரம், ஓட்டம். என் கண்ணெதிரில் மனிதர்கள் வெட்டி வீழ்த்தப்படுவதைப் பார்த்தேன்; கும்பல் கும்பல்களாகச் சடலங்கள் குவிக்கப் படுவதைக் கண்டேன். சாவுக்கும் வாழ்வுக்கும் இடையே அதிக இடைவெளி இல்லை என்று விரக்தி ஏற்பட்டது. ஆனாலும் உயிர் தப்ப ஓடினேன். எத்தனையோ பேர் உதவி செய்தார்கள் வழி எங்கும். நான் அவர்களை மறக்கவில்லை. பிரதாப் ஸிங் நாலு ஆள் பலம் உள்ள வீரன். என்னை எத்தனை தூரம் சுமந்து வந்தான் அவன்! சுந்தர்ஸிங், எனக்காக எதையும் தியாகம் செய்வான். எவ்வளவு பணிவிடைகள் செய்தான்! ரக்பீர் ஸிங், (ஐயோ, எத்தனை அழகன் அவன்!) என் பக்கத்தை விட்டு அகலவே இல்லை. நான் வருகிறேன் என்றே இந்தச் சேனையுடன் அவன் வந்தான். இல்லாவிட்டால் வீட்டோடு இருந்திருப்பான்.

'அப்பாடா! பிழைத்தோம். இனியும் எதிரிகள் துரத்த மாட்டார்கள்' என்று ரூப்கந்த் ஏரியின் கரையை அடைந்தோம்.

மலைப் பிரதேசம் அது; சாதாரணமாக யாரும் அங்கே வர மாட்டார்கள். பெரும் பெரும் பாறைகளும் சரிவுகளும் நிரம்பி, ஒரு விதப் பயங்கரத்தை உண்டாக்கியது. சிறு சிறு குகைகள் மனிதர்கள் ஒண்டுவதற்கென்றே ஏற்பட்டவை போல் உள்ளவை, ஏராளம். அந்தக் குளிரை, அம்மா, என்னவென்று சொல்வேன்! காற்றிலே பனிக் கட்டிகள் மிதந்து வந்தன; பனி மழை, பனிப் புயல், பனி வாடை, சர்வம் பனி மயம்! உடம்பைச் சுற்றி எத்தனை கம்பளிகளைப் போர்த்துக்கொண்டாலும், எப்படியோ உள்ளே குளிர் புகுந்துகொண்டு, சுரீர் என்று குத்தியது. சடசடவென்று பற்கள் ஓயாது அடித்துக்கொண்டன. குளிர் காய்வோமென்று சுற்றிச் சுற்றிப் பார்த்தாலும், ஒரு மரம், ஓர் இலை, ஒரு சருகு தென்படவில்லை. பாறையைத் தவிர வேறு எதுவும் அங்கு இல்லை. இந்தப் பிரதேசத்தை நாம் உயிருடன் தாண்டி மீளுவோமா என்று எல்லாரும் கலங்கினோம். உட்கார்ந்து யோசனை செய்தோம். வேறு வழியின்றி அநேகர் தங்களுடைய துப்பாக்கிகளின் மரக் கைப்பிடிகளை ஒரு குவியலாகச் சேர்த்துப் போட்டு, நெருப்பு வைத்து, குளிர் காயத் தொடங்கிவிட்டார்கள்.

அங்கிருந்து உடனே ஓடினாலும், ஏரியைச் சுற்றிக்கொண்டு மலையைத் தாண்டுமுன் இரவு வந்துவிடும். இரவிலே பனிப் படலத்தில் அகப்பட்டுக் கொண்டால், நிச்சயம் இறந்த மாதிரிதான். அதற்கு, அங்கேயுள்ள குகைகளில் அன்று இரவைக் கழித்துவிட்டு, விடியற்காலை பிரயாணம் துவங்குவதே புத்திசாலித்தனம். ஆனால், ஒன்றிரண்டு தவிர, எந்தக் குகையும் மூன்று நாலு பேருக்கு மேல் பிடிக்காது. 'மூன்று நான்கு பேராகப் பிரிந்து, கோஷ்டி கோஷ்டியாகக் குகைகளில் இருந்து இரவைக் கழித்துவிட்டுக் காலையில் சேர்ந்துகொள்ள வேண்டியது' என்று முடிவு செய்தோம். ''ஓர் எச்சரிக்கை! இரவில் இங்கே பனி மழை பெய்யத் தொடங்கிவிடும். யாரேனும் வெளியே தலையை நீட்டிவிட்டீர்களோ, பிறகு யாராலும் காப்பாற்ற முடியாது. உறைந்து போய்விட வேண்டும். நடுக்கடலில் விழுந்தவனாவது சிறிது நேரம் நீந்தலாம்; இங்கே வெளிப்பட்டவுடனேயே மரணம்!'' என்று விஷயம் தெரிந்த குன்வார் பக்தா என்பவர் சொன்னார். அவ்வளவு பேரும், ''எங்களுக்குத் தெரியும்'' என்று ஒப்புக்கொண்டோம்.

அடுத்தபடி யார் யார் கோஷ்டி சேர்வது என்பது சர்ச்சையாயிற்று. நான் ஒரே ஒருத்திதான் பெண். எனக்குத் துணைக்கு வருவதற்கு மூன்று பேர் முன்வந்தார்கள்: பிரதாப்ஸிங், சுந்தர் ஸிங், ரக்பீர் ஸிங். இது யாவரும் எதிர்பார்த்ததே! மற்றவர்களில் ஏழு பேர் சேர்ந்த ஒரு

கோஷ்டி இருந்தது. அவர்கள் சொன்னார்கள்: ''எங்களுக்கு எட்டுப் பேர் இருக்கக்கூடிய குகை ஒன்று அகப்பட்டுவிட்டது. மிகவும் வசதியாகவும் இருக்கிறது. மதுரஸா தேவி மட்டும் சம்மதம் தெரிவித்தால், அங்கே வந்துவிடலாம்!'' என்று அழைத்தார்கள்.

பிரதாப் ஸிங் உடனே, ''நான் மூன்று பேர் இருக்கக் கூடிய அருமையானதொரு குகையைப் பிடித்துவிட்டேன். வெளியே என்ன புயல் அடித்தாலும், பனிப் பிரளயமே வந்தாலும் எங்களை அசைக்க முடியாது. மதுரஸா அங்கேயே தங்கலாம். அவர் என்னுடன் வேறு எவரையேனும் ஓர் ஆடவரை அழைத்துக்கொள்ளலாம்!'' என்றான்.

நான் அவ்வளவு பேரையும் பார்த்துப் புன்னகை செய்தேன். 'ஏ மூளை கெட்ட உலகமே! பெண்மேல் உனக்கு ஏன் இத்தனை மோகம்? ஒரு பெண் மனம் வைத்தால் உங்கள் அத்தனை பேரையும் அழித்து விடுவாள் என்பதை நீ ஏன் தெரிந்துகொள்ளவில்லை இன்னும்?' என்று நான் நினைத்துக்கொண்டேன். ஏழு பேராக வந்து நின்ற கோஷ்டியைப் பார்த்து, ''உங்கள் அன்புக்கு மிக வந்தனம். உங்கள் குகையில் இன்னும் ஒருவர் சௌக்கியமாக இருக்க வசதி இருக்கிறது. அது மிக நல்ல குகை என்று சொல்கிறீர்கள் அல்லவா? என் வேண்டுகோள் ஒன்று உண்டு. நான் அங்கே வரவில்லை; ஆனால், எனக்குப் பதிலாக அதோ நிற்கும் ரக்பீர் ஸிங் அவர்களுக்கு அந்த இடத்தைக் கொடுங்கள். நான் பிரதாப் ஸிங் கண்டு சொல்லும் குகைக்குச் சுந்தர் ஸிங்குடன் செல்கிறேன். காலையில் நாம் சந்திப்போம்'' என்றேன்.

ரக்பீர் ஸிங் முகத்தை நான் அப்போது பார்க்கவில்லை. ஆனால், அவன் என்னை ஒரு விறைப்பு விறைத்துவிட்டு, அந்தக் கோஷ்டியுடன் வெளியே சென்றான் என்பது மட்டும் தெரியும்.

**எ**திர்பார்த்தபடி கதிரவன் மலைவாயில் விழுந்தவுடனேயே குளிர் காற்று வீசத் தொடங்கியது. கையெழுத்து மறையும் நேரத்திற்கு நாங்கள் எல்லோரும் குகைகளுக்குச் சென்று ஒண்டிக்கொண்டோம். மேலும் ஒரு நாழிகைக்குள் 'உர்ர்'ரென்று சூறைக் காற்று வீசியது. அந்தப் பிரதேசங்களில் எப்போது என்ன நேரும் என்று சொல்ல முடியாது. சுழன்று சுழன்று அடித்தது ஒரு புயல். ஓவென்ற ஓலம் ஓயாமல் கேட்டது. காற்றிலே பெரும் பனிக்கட்டிகள் பறந்தன. சற்று முன் அமைதி நிலவிய ஏரிகரைப் பிரதேசத்தில் வாயுவும் வருணனும் சேர்ந்து மல்யுத்தம் ஒன்று நிகழ்த்திக்கொண் டிருந்தார்கள்.

என்னுடன் வந்த பிரதாப் ஸிங்கும் சுந்தர் ஸிங்கும் தங்கள் போர்வைகளை என்னிடம் கொடுத்துவிட்டு, குகையின் சுவரோரமாக ஒண்டிக்கொண்டார்கள். பிரதாப்புக்கு நான் அவனுடைய இஷ்டப்படி குகைக்கு வந்ததில் அளவு கடந்த ஆனந்தம். தன்னை அடைய வேண்டும் என்ற கோரிக்கையை நான் நிச்சயம் அங்கீகரிப்பேன் என்று எண்ணிவிட்டான். சுந்தர் ஸிங்கோ என்னைப் பெண் தெய்வமாகவே கருதினான். பிரதாப் கூப்பிட்டான் என்றாலும், தன்னையும் அழைத்துக் கொள்ள வேண்டியே நான் சம்மதித்தேன் என்று அவன் நினைத்தான்.

குகையினுள்ளே நல்ல இருட்டு; எனினும், சிறிது சிறிதாக எங்கள் கண்கள் அந்த அந்தகாரத்திலும் நோக்கப் பழகிக்கொண்டன. பிரதாப்பின் கைகள் பனியினால் கன்றிப்போய் விட்டன. சுந்தர் ஸிங்கோ, வெடவெடவென்று நடுங்கிக்கொண் டிருந்தான்.

''காலை வரையில் எப்படியோ இங்கே தள்ளியாக வேண்டும்!'' என்றான் சுந்தர்.

''ஆம்; வேறு வழி?'' என்று கேட்டான் பிரதாப், இரக்கமற்ற குரலில்.

''சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தார்கள். பிறகு, ''இங்கே நாம் வந்து புகுந்து கொண்டோமே! சிங்கம், புலி ஏதேனும் இதில் இருக்குமானால்—'' என்று ஆரம்பித்தான் சுந்தர். குளிரடக்க மாக இருந்த நான்கூடப் பயத்தினால் நடுங்கினேன்.

''ஒன்றும் ஆகிவிடாது. எல்லாரும் துப்பாக்கிகளைத் துண்டு போட்டுக் குளிர் காய்ந்தார்கள். நான் என் துப்பாக்கியை இதோ வைத்திருக்கிறேன். சிங்கம் வந்தால், ஒரே ரவையில் தீர்ந்துவிடும்!'' என்றான் பிரதாப், துப்பாக்கியை அருகில் நகர்த்திக்கொண்டு. அப்போதுதான் நானே அந்தத் துப்பாக்கியைக் கவனித்தேன்.

மறுபடி வெகு நேரம் மௌனம். நாங்கள் ஒருவருமே பேசவில்லை. நான் மட்டும் அவர்கள் முகத்தைக் கவனித்துக்கொண் டிருந்தேன். நேரம் ஓடிக்கொண் டிருந்தது; தூக்கம் என்பதோ வெகு தொலைவில் இருந்தது. என் மனத்தில் ஆயிரம் எண்ணப் புயல்கள்.

''பிரதாப்!'' என்று மெல்ல அழைத்தான் சுந்தர்; ''வெளியே புயல் பலத்துவிட்டது!''

''நாம் அதற்காக ஒன்றும் செய்துகொள்வதற்கில்லை. உன்னால் அதை நிறுத்த முடியுமானால் போய்ப் பார். அநாவசியமாகப் பேசாதே. விஷயம் ஏதுவோ அதைப் பேசு'' என்றான் பிரதாப். அவன் குரல் வெகு கடுமையாக என் காதுகளுக்குத் தொனித்தது.

''நமக்குள் பேசிக்கொள்ள வேறு என்ன விஷயம் இருக்கிறது இப்போது?''

''ஏன் இல்லை? அந்த விஷயம் நம் முன்னாலேயே இருக்கிறது. இதோ இந்த அழகிய உருவம்; அதைப்பற்றிப் பேசுவோம்!''

''என்னைப் பற்றியா நீங்கள் பேசப் போகிறீர்கள்? ரசமாக இருக்கும்போல் இருக்கிறதே! எங்கே ஆரம்பியுங்கள்'' என்றேன் நான், ஹாஸ்யமாகப் பேசுவதாக எண்ணிக்கொண்டு.

''ஆமாம்!'' என்றான் பிரதாப்; ''உன்னைப் பற்றித்தான். இந்தச் சுந்தர் உன்மீது ஆசை வைத்துக்கொண் டிருக்கிறான். நான் குருடன் அல்ல; நான் அதைக் கவனித்துக்கொண்டு வருகிறேன்!''

சுந்தர் உடனே, ''நானே அதை மறுக்கப் போவதில்லை. எனக்கு மதுரஸாவின் மேல் உள்ள காதல் எழுத்தில் அடங்காது; மொழியில் அடங்காது. அவளுக்காக நான் எந்த ஆபத்தையும் எதிர்ப்பேன்'' என்றான்.

பிரதாப் கனைத்தான். ''நன்றாக, பொருத்தமாகச் சொல்லி விட்டாய். உனக்கு இப்போது ஆபத்துத்தான் காத்திருக்கிறது. ஏன் என்றால், நான் காதலிக்கிற ஒரு தெய்வ மங்கையை, எத்தனையோ இரவு பகலாகக் கண் விழித்து அவள் நினைவாக இருக்கும் நான், வேறு ஒருவன் காதலிக்கப் பார்த்துக்கொண் டிருக்க மாட்டேன். அதை இன்றிரவு நம் மிடையே தீர்த்துக்கொண்டு விடலாம் என்றுதான் உன்னை அழைத்து வந்தேன்'' என்றான்.

''தீர்ப்பதற்கு என்ன இருக்கிறது? சௌந்தரியவதியான ஒரு பெண்ணைக் காதலிப்பது என் இஷ்டம்; என் உரிமை. உன்னைக் கேட்டுக் கொண்டு, உன் அநுமதியின் பேரில்தான் அவ்வாறு செய்ய வேண்டும் என்று சட்டம் இருக்கிறதா? என் காதலுக்குப் பதில் தெரிவிக்க வேண்டியது ஒரே ஒருவர்தாம்: அது மதுரஸா.... எங்கே, உன் அபிப் பிராயத்தை இவனிடம் சொல்லிவிடேன், மது'' என்று சுந்தர்ஸிங் அழுத்தம் திருத்தமாகக் கேட்டான்.

என் தர்ம சங்கடமான நிலைமையை நான் உணர்ந்துகொண்டேன்; எனவே மௌனம் சாதித்தேன். பிரதாப் கோபக் கண்களால் என்னை வெறிக்கப் பார்த்தான்; அவனுடைய புஷ்டியான கரங்கள் பரபரப்புடன் துடித்தன.

''சொல்லித்தான் ஆக வேண்டுமா?'' என்றேன் நான்.

''ஆம்! இங்கே இரண்டு பேரும் இருக்கிறோம். நீ எங்களில் ஒருவனைத்தான் ஏற்க முடியும். உன் தீர்மானத்தை இப்போதே சொல்லிவிடு'' என்றான் பிரதாப், பிடிவாதமாக. அவன் குரலே எனக்குப் பிடிக்கவில்லை.

மேலும் பேசாமல் இருந்தேன். என் குழப்பம் அதிகமாயிற்று. ''இன்னும் என்ன தயக்கம், மதுரஸா? சிறிய கேள்வி: உனக்கு என்மேல் காதலா? அல்லது இந்தச் சுந்தர் ஸிங்மீது காதலா?'' என்றான் பிரதாப்.

சுந்தர் ஸிங் தொண்டையைக் கனைத்து விட்டுக்கொண்டான். ''சொல்லிவிடேன், மது. பிரதாப் அவசரப்படுகிறானே!'' என்றான்.

நான் மேலும் சிறிது பிகு செய்துகொண்டேன்: ''நீங்களே என்னை வற்புறுத்திக் கேட்பதால் சொல்கிறேன். நான் பிரதாப்பைத்தான் நேசிக்கிறேன்'' என்றேன். வார்த்தைகள் என் வாயிலிருந்து வெளிப்பட்டதும், சுந்தர் ஸிங்கின் உடல் ஒரு முறை மின்சாரத் தாக்குதல் பெற்ற மாதிரி அதிர்ந்தது. எனக்கு அவன் முகத்தை நேர்க்கு நேர் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. தலையைக் குனிந்தபடி, ''சுந்தர், சுந்தர், என்னை மன்னித்துவிடுங்கள்!'' என்று ஏதோ குழறினேன்.

சமாளித்துக்கொண்டான் சுந்தர். வெகு நிதானமாக, ''மன்னிப்பதா? உன்னையா? குற்றம் ஏதேனும் உண்டென்றால், அது என்னுடையதுதான். பிரதாப் அழைத்தபோது, இந்தக் குகைக்கு வரும்படி நீ என்னைக் கூப்பிட்டதை நான் தவறாக ஊகம் செய்துகொண்டேன். நீ என்னையே விரும்புகிறாய் என்று மனப்பால் குடித்தேன். ஆகாயக் கோட்டைகள் கட்டினேன்....பரவாயில்லை, மது. நான் அதிருஷ்டஹீனன், அவ்வளவே! இனி நாம் நிம்மதியாகத் தூங்கலாம்'' என்றான்.

அவனுடைய ஒவ்வொரு சொல்லும் என் நெஞ்சில் ஒவ்வொரு கத்திக் குத்தைப் போல் பாய்ந்தது. வெளியே புயல் இன்னும் பலத்துவிட்டது. ''ஊ....ஊ....ஊ....'' என்ற ஓலம் குகையினுள்ளும் நுழைந்து எங்கள் காதை முட்டியது. இரண்டொரு பனிக்கட்டிகள் அந்த மறைவிடத்திலும் வந்து விழுந்தன. மூவரும் மேலும் நெருங்கி உட்கார்ந்துகொண்டோம். சுந்தர் உடல், பாவம், நடுங்கியது!

பிரதாப் இப்போது நெஞ்சில் ஈரம் இன்றிப் பேசினான்: ''சீசீ! முன்னமையே தெரியாமல் போச்சு! மூன்று பேருக்கு இந்தக் குகையில் இடம் இல்லை'' என்றான். பிறகு சுந்தரை வெறுப்புடன் பார்த்தான்.

சுந்தர் ஒன்றும் பேசவில்லை; நீண்ட பெருமூச்சு ஒன்றே அவன் அளித்த பதில்.

**எ**ன்னையும் அறியாமல் நான் சற்று அயர்ந்திருக்க வேண்டும். சடார் என்று ஓர் அதிர்ச்சியுடன் விழித்துக்கொண்டேன். ஏதோ ஓர் அரவம் என்னை எழுப்பியிருக்கிறது. திடுக்கிட்டு நாலு புறமும் பார்த்தேன். சுந்தர் ஸிங்கை அங்கே காணவில்லை. அவன் வெளியே சென்றுவிட்டான். அந்த வேளையில் வெளியே செல்வதென்றால் என்ன அர்த்தம் அதற்கு என்பதை நான் அறியாதவள் அல்ல. 'தற்கொலை!'

பிரதாப் என்னையே குறிப்பாகப் பார்த்துக்கொண்டிருந்தான். கண்களில், தன் இரையை வெறித்துப் பார்க்கும் துஷ்ட மிருகத்தின்

கடுமை ஒளி. முகமெல்லாம் வேட்கை, காம வேட்கை அதீதமாகத் தென் பட்டது. அவனைப் பார்க்க எனக்கு அச்சமாக இருந்தது. ''சுந்தர் ஸிங் எங்கே?'' என்று நான் கேட்கவில்லை. அது அநாவசியமான கேள்வி; பதில் எதுவும் கிடைக்காது. ஆகையால், ''பொழுது விடிய இன்னும் எத்தனை நேரம் இருக்கும், பிரதாப்?'' என்று மட்டும் கேட்டேன்.

அவன் சொன்ன பதில் என்னை உலுக்கியது. ''பொழுதே விடியா மல், மதுரஸா, நானும் நீயும் இப்படியே இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்'' என்றான், சற்று நெருங்கி உட்கார்ந்தபடி.

நான் அதைக் கவனிக்காதவள்போலவே, ''குளிர் அதிகமாகி வரு வதைக் கவனித்தால், மூன்றும் ஜாமமாக இருக்கும் என்று ஊகிக் கிறேன்'' என்றேன்.

பிரதாப் மிகவும் கேவலமாக நடந்துகொண்டான். பல்லை இளித் தான். ''நான் உன்னை அணைத்துக்கொண்டு உட்கார்ந்து குளிரை விரட்டுகிறேன், பார்'' என்றான்.

இதை மேலும் வளர விடக்கூடாது என்று நான் தீர்மானித்து விட்டேன். தைரியத்தை வருவித்துக்கொண்டு, ''சுந்தர் எங்கே?'' என்று கேட்டுவிட்டேன்.

''அவனுக்கு நீ இல்லை என்றவுடன் மனம் உடைந்து போனான்; முனகினான். வாழ்வு கசந்துவிட்டது. சட்டென்று வெளியே எழுந்து போனான், கோழை! காலையில் தேடினால், எங்கேனும் விறைத்துக் கிடைப்பான்.''

''பாவம்!''

''மதுரஸா, இங்கே அவன் இருப்பதில் புண்ணியம் இல்லை. நெருக் கடிதான். நமக்குக் குறுக்கே நிற்பான். போனதே புத்திசாலித்தனம்'' என்று சிரித்தான். பிறகு, மேலும் நெருங்கி, வெகு சுவாதீனமாக என் தோளில் கை வைத்தான். இதை எதிர்பார்த்தவளே ஆகையால், நான் அப்பால் நகர்ந்துகொண்டு, ''பிரதாப், தொடாதே என்னை!'' என்று கத்தினேன்.

''ஏன்? என் கண்மணியே, என்ன கோபம் உனக்கு?'' என்று மறு படி நகர்ந்தான் என் பக்கமாக.

''நில்!'' என்று ஒரு கர்ஜனை செய்தேன். சட்டென்று கீழே அவன் போட்டிருந்த துப்பாக்கியைக் கையில் எடுத்துக்கொண்டேன். அவன் தலைக்கு நேரே நீட்டி, ''இன்னும் ஓர் அடி முன்வைத்தாயோ, நிர்த் தாட்சிண்யமாகச் சுட்டுவிடுவேன்; செத்தாய் நீ!'' என்று எச்சரித்தேன்.

இதை அவன் எதிர்பார்க்கவே இல்லை. ''இது எல்லாம் என்ன விளையாட்டு, மதுரஸா? சற்று முன்புதான் என்னைக் காதலிப்பதாகச் சொன்னாய்; இப்போது சுட்டுக் கொல்வேன் என்று மிரட்டுகிறாயே; நடக்குமா?'' என்றான்.

''அதை நம்பினாயே, பிரதாப். அப்போது உன்னைக் காதலிக்கிறேன் என்று நான் சொல்லியிராவிட்டால், என்னையே நீ சுட்டுக் கொன்றிருப் பாயே. இப்போது சுந்தர் ஸிங்கை மட்டும் வெளியே விரட்டி யிருக்கிறாய்.''

''நானா விரட்டினேன்? உன் வார்த்தை அல்லவா அவனை விரட்டியது?''

''நான் வேறு எதைச் சொல்லித் தப்ப முடியும்? வழி ஏதும் இல்லையே! நீ என்னை இந்தக் குகைக்கு அழைத்தாய்; உன்னிடமிருந்து தப்பவே அவனை அழைத்துக்கொண்டேன்.''

''அடி கள்ளி! அப்படி யென்றால் எங்கள் இருவரையும் தவிர, உனக்கு ஒரு காதலன் இருக்கிறான் என்று சொல்!''

''நிச்சயமாக இருக்கிறான்.''

''யார் அவன்?....யார் அவன்?''

''நகர்ந்து போ. இல்லையேல், சுட்டுத் தள்ளிவிடுவேன். போ அப்பால். அதுதான் சரி...நான் உண்மையில் காதலிப்பது ரக்பீர் ஸிங்கை!''

''அவன் பணக்காரன் என்றா, அழகன் என்றா? ஹூ!''

''இரண்டும் இல்லை. குணவான்; கண்யமானவர் என்றுதான். என்னை இருதய பூர்வமாக அவர் விரும்புகிறார். அவரை நான் உன்னுடன் இங்கே அழைத்து வந்திருந்தால், கட்டாயம் சுந்தர் ஸிங்கின் கதியே அவருக்கும் நேரிட்டிருக்கும். ஆகையால்தான் எனக்காகக் கொடுக்க வந்த நல்ல இடத்தை அவருக்குத் தரும்படி சொன்னேன்; எனக்குத் தேவைப்படாத உங்கள் இருவருடனும் வந்தேன். இப்படி ஏதேனும் ஒரு போட்டா போட்டி நடக்கும், இருவரில் ஒருவர் ஒழிய வேண்டி வரும் என்பதெல்லாம் நான் எதிர்பார்த்ததுதான்..நில்! என்னை நெருங்காதே! சுட்டுவிடுவேன்!''

பிரதாப் என் வார்த்தையைக் கேளாமல் வந்தான். ஒரு கணத்தில் துப்பாக்கியின் குதிரையை இழுத்துவிட்டேன். ''டுமீல்!'' என்ற பெருஞ் சப்தம், குகையினுள் இரட்டை ஆரவாரத்துடன் எதிரொலி செய்தது. பிரதாப் மீது ரவை படவில்லை; எனினும், அவன் பயந்துவிட்டான். இரண்டாம் முறை நான் சுடுவதற்குத் தயாராவதற்குள், அவன் திரும்பித் தலை தெறிக்கக் குகையினின்றும் வெளியே ஓடிவிட்டான்.

எதற்கும் அவன் மறுபடி வராமல் இருக்கட்டும் என்று நான் குகை வாசல்வரை, குளிரையும் லட்சியம் செய்யாமல் சென்று, பல முறைகள் சுட்டேன். நானாகச் செய்யவில்லை அதை. என்னை ஓர் ஆவேசமே பற்றிக் கொண்டிருந்தது. ரூப்கந்த் ஏரிப் பிரதேசமெங்கும் துப்பாக்கி வேட்டுச் சத்தம்; மலைச் சரிவுகளில் எல்லாம் எதிரொலியின் முழக்கம் கேட்டது.

**நா**ன் அவ்வாறு செய்தது எவ்வளவு பைத்தியக்காரத்தனமான காரியம் என்பதைச் சிறிது நேரத்திற்குப் பின்னரே தெரிந்துகொண்டேன். சுற்று வட்டாரக் குகைகளில் ஒண்டிக்கொண்டிருந்தவர்கள் அனைவரும் விழித்துக்கொண்டார்கள். எதிரிகள்தாம் தங்கள் மறைவிடத்தை எப்படியோ கண்டுகொண்டு, நிசி வேளையில் தாக்க வந்துவிட்டார்கள் என்ற பீதி அவர்களை அகாரணமாகப் பற்றிக்கொண்டது. இன்னது செய்கிறோம் என்று நிதானியாமல், குகையிலிருந்து வெளிக் கிளம்பித் தாறுமாறாக நாலு புறமும் ஓடினார்கள். கவிந்திருந்த இருளில், ஒருவருடன் ஒருவர் மோதிக்கொண்டு மேலும் கிலி பிடித்துச் சிதறி ஓடினார்கள். இடையில், துப்பாக்கி வைத்திருந்த இரண்டொரு சிப்பாய்கள் தங்கள் ரவைகளைச் செலவு செய்யவே, குழப்பம் மேலும் அதிகமாயிற்று.

பனிப் புயல் அடித்தது. மேலும் மேலும், நிற்காமல் அடித்தது. காற்று உக்கிரமாக வீசியது. பல பேர்களின் கேலிச் சிரிப்பொலி போல் நாராசமாகக் கேட்டது. நானும் தடுமாறிக்கொண்டு வெளியே வந்துவிட்டேன். குகையினுள் தனியே இருக்க எனக்குப் பயமாக இருந்தது. என் நெஞ்சம் 'பட்பட்'டென்று அடித்துக்கொண்டது.

முன்னே ஓர் அடி எடுத்து வைத்தால், காற்றுப் பின்னே நாலடி தள்ளியது. பனித் துளிகள் கோணி ஊசிகள்போல் சுரீர் சுரீர் என்று தைத்தன. நான் ஓர் ஆசாமியுடன் மோதிக்கொண்டேன். கீழே விழுந்து

விடாமல் என்னைப் பிடித்து நிறுத்திவிட்டு அவன், ''அடடா! மதுரஸா தேவியா!'' என்றான் ஆச்சரியத்துடன். மறு பேச்சின்றி ஓர் ஓரமாக என்னை இழுத்துச் சென்றான். அங்கே அத்தனை குளிர் இல்லை.

அவனை நான் அடையாளம் கண்டுகொண்டேன். ஏழு பேர் அடங்கிய ஒரு கோஷ்டியாக வந்து என்னையும் அவர்கள் குகையில் தங்கும்படி அழைத்தவனே அவன்! எனது அந்தக் கேவலமான நிலையிலும் சிறிது ஆறுதல் மனத்திற்கு உண்டாயிற்று. அவனை நான் ஒரே ஒரு கேள்வி கேட்க விரும்பினேன். அதற்குப் பதில் கிடைத்துவிட்டால், அப்புறம் எனக்குக் கவலை இல்லை.

''ஐயா, அன்பரே, உங்கள் குகைக்கு நான் அனுப்பிய ரக்பீர் ஸிங், இப்போது அங்கே பத்திரமாக இருக்கிறாரா?'' என்று கேட்டேன்.

அவன் தயங்கினான். தலையை மெள்ள ஆட்டினான். ''ரக்பீர் ஸிங்கா? அவன் பெரிய முட்டாள். அம்மணி, என்னை மன்னியுங்கள். அவன் ஒரு மடத்தனமான காரியம் செய்தான்.''

''என்ன அது? சீக்கிரம் சொல்லுங்கள்!'' - என் உடம்பெல்லாம் பதறியது. அத்தனை குளிரிலுங்கூட, ரத்தம் கொதிக்கும் நீர்போல் எரித்துக்கொண்டு கடுவேகமாக ஓடியது.

''உங்கள் பணியை நிறைவேற்ற நாங்கள் அவனை எங்களுடன் அழைத்துக்கொண்டு போனோம். வெகு நேரம் அவன் உன்மத்தம் பிடித்தவன் மாதிரி அங்கே உட்கார்ந்திருந்தான். உணவு கொள்ள மறுத்தான். அவனை அணுகி உபசாரம் செய்தபோது, 'நான் எத்தனை பெரிய மடையன்! மதுரஸா என்னையே காதலிப்பதாக மனக்கோட்டை கட்டினேனே! இதைவிடப் பெரிய ஏமாற்றம் உண்டா? அவளுக்கு என் மீது எள்ளளவாவது பிரேமை இருந்தால், பிரதாப்புடன் வரும்படி என்னை அழைத்துப் போயிருப்பாள் இல்லையா? சீ! இதென்ன வாழ்க்கை? இந்த உயிர்தான் எதற்கு?' என்றான். நாங்களும் எவ்வளவோ சமாதானம் சொன்னோம்; அவன் காதில் ஏறவில்லை. ஒரே நிலையில் உட்கார்ந்து, ஒரு மூலையையே பார்த்துக்கொண் டிருந்தான்.''

''ஐயோ! அப்புறம்....அவர் இப்போது எங்கே? அவரிடம் ஓடி நான் உண்மையைச் சொல்ல வேண்டுமே! ஐயோ! ஐயோ! விரைவில் சொல்லுங்களேன்'' என்று அலறினேன்.

''அவர் எங்கேயோ? யாருக்குத் தெரியும் அது? எங்களையும் அறியாமல் நாங்கள் சற்றுக் கண் மூடிவிட்டோம். அது சமயம் பார்த்து ரக்பீர் குகையை விட்டு வெளியேறிவிட்டார். அவரைத் தேடிக் கொண்டு செல்லும் துணிவு எங்களில் யாருக்கும் வரவில்லை. தவிர, நிச்சயமாக இறந்திருக்க வேண்டிய ஓர் ஆளைத் தேடிக்கொண்டு சென்று உயிரை விட எவன் தயாராக இருப்பான்? அதுவும் விவேகமான செயல் இல்லையே. அம்மணி, அம்மணி, நில்லுங்கள்!''

என் தலை சுழன்றது. நான் அந்த ஆசாமியின் பிடியிலிருந்து திமிறினேன். அவன் என்னைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, ''நீங்கள் எங்கும் போகக்கூடாது. மேதா பஸ்திராமின் குகையில் அடக்கமாக இருக்கும். நான் அங்கு உங்களைக் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறேன்'' என்று மன்றாடினான்.

நான் குதி குதியென்று குதித்தேன்; அவனைத் தள்ளினேன்; வாயில் வந்தபடி திட்டினேன். கடைசியில் என்னைப் பிடித்திருந்த கரத்தையும் கடித்தேன். வலி தாளாமல், பிடியை இளக்கினான். ''ரக்பீர்! ரக்பீர்!'' என்று கூவிக்கொண்டு பனிப்படலத்தில், பனி மழையில், தலை தெறிக்க ஓடினேன். ''ரக்பீர்!'' - என் கேசம் அவிழ்ந்து புரண்டது. ''ரக்பீர்....ரக்பீர்!''

என் கண்கள் அருவியாகக் கொட்டின. ''ரக்பீர்! ரக்பீர்!''

பின்னால் அந்த ஆசாமி என்னைத் துரத்தி வருகிறான்; அவனிடம் அகப்படாமல் ஓடி என் ரக்பீரிடம் சேர வேண்டும். மேல்மூச்சு வாங்க ஓடினேன். கால்கள் துவண்டன. ஏதோ ஒரு கல் தடுக்கியது. குப்புற விழுந்தேன். மண்டையில் ஒரு பாறை மோதியது. காற்றும் மழையும் பனியும், ''ரக்பீர்! ரக்பீர்!'' என்று காது செவிடுபட ஓலமிட்டன. எத்தனை நேரம் ஓலமிட்டனவோ! என் நினைவு இழந்தேன்.

நான் மறுபடியும் கண் விழித்தபோது, விடிந்திருந்தது. நிர்மலமான ஆகாயத்தில் கதிரவன் பிரகாசித்துக்கொண் டிருந்தான். இரவு இந்த அமர்க்களமா நடந்தது என்று வியந்தேன். ஏரிப்பக்கம் எல்லாம் நூறு சடலங்கள் இறைந்து கிடந்தன - பனியில் புதைந்தும் புதையாமலும். ரக்பீரைத் தேடிக்கொண்டே சுற்றினேன். பிரதாப் கிடந்தான்; சுந்தர் ஸிங் கிடந்தான். அடி அம்மா! என் உடலும் கிடந்தது! அப்போதுதான் நானும் இறந்து போய்விட்டேன் என்று உணர்ந்தேன். அத்தனை அழகி, ஒரு பட்டாளமே எனக்காக உயிரை விடும் ஒரு ரூபவதி, இதோ தலைவிரி கோலமாய் உடலெல்லாம் சிராய்த்துக் கீழே கவனிப்பாரற்றுக் கிடந்தேன். எனக்குப் பத்துக் கஜத்துக்கு அப்பால் ரக்பீர் கிடந்தான்.

நூறு வருஷமாக நான் ரூப்கந்த் ஏரிகரையில் சுற்றுகிறேன். ரக்பீரைக் கூப்பிடுகிறேன். என்னை ஏனென்று கேட்பார் இல்லை. இப்போதுதான், ஓர் இளம் ஆராய்ச்சியாளர், என் எலும்புக்கூட்டைப் பார்த்து, ''இதோ ஒரு பெண்!'' என்று ஆச்சரியப்படுகிறார்.

ஐயா, நான் மிக மிக அழகி என்று எழுதுகிறீர்களா? நான் காதலித்த ரக்பீர் ஸிங் ஒரு ரூபவான் என்று வர்ணிக்கிறீர்களா? நூறு ஆண்களுடன் ஒரு பெண் ஓடிவந்த கதையையும், அந்த ஒரு பெண்ணால் நூறு பேரும் பனியிலே சிக்கி மாண்ட கதையையும் உலகுக்கு எடுத்துச் சொல்வீரா? எழுத்தாளரே, எனக்குப் பதில் கொடுங்கள்!

* * * *

**நா**ன் தலையைக் குலுக்கிக்கொண்டேன். மதுரஸா தேவி என் சொப்பனத்தில் வந்தாளா, அல்லது விழித்த நிலையில் என்னை மயக்கித் தன் வரலாற்றைச் சொன்னாளா என்று எனக்கு நிச்சயமாகக் கூறத் தெரியவில்லை. என் மனைவி மட்டும், நான் வெகு நேரம் அயர்ந்து தூங்கினதாகச் சாதிக்கிறாள். அந்த முடிவை வாசகர்களுக்கு விட்டு விடுகிறேன். ★

—நவம்பர், 1955.

டி. எஸ். இராமசந்திரையர்

# நாடி வைத்தியர்

திருவெண்காடு, சின்னப்பண்ணை சிதம்பர முதலியார் தம் வீட்டுப் புறத் திண்ணையில் உட்கார்ந்து கணக்குப்பிள்ளை காரியஸ்தர் களிடம் பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது சுமார் எட்டு மணி இருக்கும். அவர் கணக்குப் பிள்ளையைப் பார்த்து, ''அதோ தெருவில் வருகிறவர் யார்? புதியவராக இருக்கிறரே'' என்று கேட்டார்.

''அவரை நீங்கள் இன்னமும் பார்க்கவில்லையா? அவர்தான் வினை தீர்த்தான் குடியிலிருந்து வந்திருக்கும் வைத்தியர். இவ்வூருக்கு வந்து ஒரு மாதமாயிற்று. அவர் நாடி பார்ப்பதில் அதிகத் திறமையுள்ளவர். ஆதலால் அவரை நாடி வைத்தியரென்றே எல்லோரும் அழைக்கிறார் கள். அவரை இங்கே கூப்பிடுகிறேன்.''

''என்ன நாடி வைத்தியரே, இவ்வளவு காலையில் புறப்பட்டீர்? இங்கே வாரும்.''

''இங்கேதான் வர வேண்டுமென்று கிளம்பினேன். நல்ல சகுன மாயிற்று. முதலியாரவர்களை நெடு நாளாகப் பார்க்க வேண்டுமென்று ஆவல் கொண்டிருந்தேன். இன்றைக்கும் தரிசனம் கிடைத்தது.''

இவ்வாறு கூறித் திண்ணையருகில் வந்தவுடன் முதலியார் அவரைப் பார்த்து, ''வாரும்; உட்காரும். உம்மைப்பற்றி மிகவும் சிறப்பாகக் கணக்குப்பிள்ளை பேசுகிறார். ஏதோ நாடி பார்ப்பதில் மிக்க சாமர்த்திய முள்ளவராமே; இதோ என் கையைப் பாரும்'' என்று கூறிக் கையை நீட்டினார்.

வைத்தியர் முதலில் வலது கை நாடியைப் பார்த்தார்; பிறகு இடது கை நாடியைப் பார்க்கையில் முதலில் ஒரு விரலை வைத்தழுத்திக் கவனித்து, ''ஓ, நீர்க்கோவையா? சரி!'' என்று கூறினார். பிறகு மற்றொரு விரலைப் பக்கத்தில் வைத்துக் கவனித்து, ''வெங்காயம் சாப்பிட்டதாலும் தூக்கம் கெட்டதாலும் வந்ததா? சரி!'' என்றார். பிறகு பக்கத்தில் மற்றொரு விரலை வைத்துக் கவனித்தபின், ''என்ன? மிளகா? எவ்வளவு? பன்னிரண்டா? சரி'' என்று சொன்னார்.

இவைகளையெல்லாம் கேட்ட முதலியார் வியப்படைந்து, ''என்ன வைத்தியரே! நாடியோடு பேசுகிறீர். நான் வெங்காயம் சாப்பிட்டதும் கண் விழித்திருந்ததும் உண்மைதான். ஆனால் அவை எப்படி நாடியி லிருந்து உமக்குத் தெரிந்தன?''

''தாங்கள் தந்தி ஆபீசுக்குப் போயிருக்கிறீர்களே; அங்கே கடகட வென்று அடிக்கும் சப்தத்தினால் விஷயங்களை அவர்கள் எப்படிச் சொல்லு கிறார்கள்?''

''அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? அவர்கள் எழுத்துக்களுக்குச் சங்கேதங்கள் வைத்துக்கொண் டிருக்கிறார்கள். அதனால் அறிந்து கொள்ளுகிறார்கள்.''

''அதுபோலவேதான் நாடிகளுடைய பாஷைக்கும் சங்கேதங்கள் உண்டு. அவை எங்கள் குடும்பத்தவர்களுக்குத்தான் கிடைத்திருக்கின்றன. தேவருலகிலுள்ள வைத்தியர்களுள் தன்வந்தரிக்கு மாத்திரம் தெரியும்.''

''அப்படியா! உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?''

''அதுதான் ரகசியம். ஆனால் இவ்விடத்தில் கூறுவதனால் பாதகமில்லை; சொல்லுகிறேன்: எங்கள் முன்னோர் உஜ்ஜயினி நகரத்தில் ஆதி காலத்தில் இருந்து வந்தனர். அங்கே விக்கிரமாதித்தன் அரசாண்டு வருகையில் அவனுடைய குமாரனுக்கு மண்டைக் குடைச்சல் உண்டாகித் துன்பப்படுத்தியது. அக்காலத்திருந்த எங்கள் குலத்தவராகிய காலயுக்தி என்பவரை அழைத்து அரசன் கேட்டான். அவர், 'குமாரர் நீரை அருந்தும்பொழுது தவளையின் முட்டை ஒன்று உள்ளே சென்று இருதயத்தின் வழியாய்த் தலைக்கேறித் தவளையாகித் தங்கியிருந்ததால் குடைச்சல் உண்டாகின்றது' என்று சொன்னார்.

'என்ன காலயுக்தி, தவளை எப்படித் தலைக்குள் உயிரோடு இருக்கும்? நீர் சொல்லுவது புதுமையாக இருக்கிறதே!'

'மகாராஜா, இது ஒரு புதுமையா? கல்லிற்குள் தேரை இருந்து சப்தம் செய்வதைக் கண்டதில்லையா?, அதைப் போன்றதேதான் இதுவும்.'

'ஓ! அதனால்தான் குமாரன் தூங்குகையில் தலைக்குள்ளிருந்து சப்தம் கேட்கிறது. நல்லது; அதற்கு என்ன சிகிச்சை செய்வது? சொல்லும்.'

'தலையைப் பிளந்து தவளையை எடுக்க வேண்டும். அது செய்வதற்குத் தன்வந்தரியைத் தவிர வேறொருவருக்கும் தெரியாது. அவரை வரவழைக்க வேண்டும்.'

''அது கேட்ட அரசன் தனது தவவலிமையால் தன்வந்தரியை அழைத்துச் சிகிச்சை செய்யும்படி வேண்டினான். அவர் அதற்கிசைந்து குமாரனது தலை ஓட்டை நீக்கிப் பார்க்கையில் தவளை மூளையைக் கவ்விக் கொண்டிருந்தது. அதைப் பிடித்திழுத்தால் மூளை விழுந்துவிடுமே, என்ன செய்வதென்று சிறிது ஆலோசித்தார். அப்பொழுது பக்கத்திலிருந்த காலயுக்தி தம் கையில் தயாராக வைத்திருந்த நீர் நிறைந்த தட்டை மூளையினருகில் கொண்டு வந்தவுடன் நீரில் தவளை பாய்ந்தது. உடனே மண்டை ஓட்டை மறுபடியும் மூடிவிட்டுத் தன்வந்தரி காலயுக்தியைப் பார்த்து, உன் பெயருக்கு ஏற்றபடி தகுந்த உபாயம் செய்தாய். அதனால் எனக்கு உண்டாகிய ஆனந்தத்திற்கு அளவில்லை. நீ செய்த உபகாரத்திற்குப் பிரதியாக உனக்கு நாடிகளின் பாஷையை உபதேசிக்கிறேன். அதை உங்கள் குலத்தவர்களுக்கே உபதேசித்து வரவேண்டும்; அதுவும் மூத்த மகனுக்கே உபதேசித்து வரவேண்டும்' என்று சொல்லி உபதேசம் செய்தார். அது முதல் பரம்பரையாய் வந்துகொண் டிருக்கிறது.''

இது கேட்ட முதலியார் வைத்தியரை நோக்கி, ''நீர் சொல்வது சரிதான். ஆனால் மூன்று விரல்களால் பார்த்துத் தனித்தனியாய்க் கேட்டீர்களே; அதெப்படி? சொல்லும்.''

''முதலியார், வெகு சூட்சுமமாகக் கவனித்திருக்கிறீர்கள். அதுவும் அதிக ரகசியமானது; இதுவரையில் யாருக்கும் நான் சொன்னதில்லை. சாதாரணமாக வைத்தியர்களெல்லாம் இரண்டு கைகளிலும் நாடி பார்ப்பார்கள். ஆனால் அதன் காரணம் இன்னதென்று அறியார்கள். எல்லாரும் இரண்டு கைகளிலும் பித்த வாத கபமென்று மூன்று நாடிகள் பேசுவ

தாகக் கூறுவார்கள். அவர்கள் இதன் உண்மையை அறியார். வலக்கை நாடிகள் இம் மூன்றையுமே காட்டும். இடது கை நாடிகளோவென்றால் நோய், அதன் மூலகாரணம், அது தீரும் வழி ஆகிய மூன்றையும் முறையே காட்டும். இதுவும் தன்வந்தரியால் சொல்லப்பட்ட விஷயம். இதைக் குறிப்பதற்காகவே திருவள்ளுவரும், 'நோய் நாடி, நோய்முதல் நாடி, அது தீரும் வாய் நாடி' என்று மூன்று நாடிகள் சொல்லியிருக்கிறார்.''

''வைத்தியரே! சற்று நிறுத்தும்; என்ன, தோன்றியபடி யெல்லாம் சொல்ல ஆரம்பித்துவிட்டீர்! இந்தக் குறளில் நாடி என்பதற்கு ஆராய்ந்தறிந்து என்றல்லவோ பொருளுரைக்கிறார்கள்?''

''பண்டிதர்கள் அவ்வாறுதான் பொருள் கூறுகிறார்கள். ஆனால் நான் சொல்லியதுதான் அதன் உண்மைப் பொருளென்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் இதுதான் பொருளென்று திருவள்ளுவரே எங்கள் குலத்தவ ராகிய காலநேமிக்குக் கூறியுள்ளார். ஆதலால் இப்பொருள் எங்கள் குலத்தில் பரம்பரையாய் வந்துகொண் டிருக்கிறது.''

''இதென்ன விபரீதம்! திருவள்ளுவரை உங்கள் குலத்தவர் எப்படிச் சந்தித்தார்''

''அதைக் கூறுவேன்: நாயனார் சிவஸ்தலந்தோறும் சென்று வருகையில் வினைதீர்த்தான் குடியை அடைந்தபொழுது அவருக்குச் சுரம் கண்டது. அப்பொழுது அங்கே வந்து சேர்ந்திருந்த காலநேமியை அழைத்து அவர் கையைக் காட்டியபொழுது காலநேமி நாடிகளின் பாஷையை அறிந்து கூறக் கேட்டு அதிசயித்துத் தாமும் இதன் உண்மையை அறிவிக்க வேண்டியே இக் குறளில் நாடி என்னும் பதத்தை மூன்று தடவை உபயோகித்திருப்பதாகக் கூறினராம்.''

''வைத்தியரே, உம்மிடத்தில் பேசிக்கொண்டிருந்தால் பொழுது போவது தெரியாது. நல்லது; இப்பொழுது என் நீர்க் கோவைக்கு என்ன செய்ய வேண்டும்?''

''அதற்கா? பன்னிரண்டு மிளகெடுத்துச் சட்டியிலிட்டு வறுத்துக் கால்படி நீர்விட்டு வீசம் படியாகக் காய்ச்சி இறக்கி அதில் நான்கு சொட்டுத் தேன் விட்டு அருந்துங்கள். மிளகு பன்னிரண்டு இருப்பது அவசியம். ஏனெனில் ஆதித்தியர்கள் பன்னிருவர் அல்லவா? அவர்கள்தாமே நீரைச் சுருக்குபவர்கள்?''

இவ்வாறு கூறி வைத்தியர் எழுந்து சென்றார்.

முதலியார் அவருடைய சக்தியில் ஈடுபட்டவராய் அவரைக் குடும்ப வைத்தியராக வைத்து வேண்டிய அளவு திரவியம் அளித்து வந்தார்.

இவ்வாறு ஒரு வருஷ காலம் சென்றபின் அவ்வூரில் ஒரு விஷ சுரம் கிளம்பியது. முதலியார் வீட்டில் அனைவரும் சுரத்தால் வருந்தினர். அதே சமயத்தில் வைத்தியருக்கும் சுரம் கண்டது. முதலியார் இரண்டு மூன்று நாள் சொல்லியனுப்பியும் வைத்தியருக்கு வர முடியவில்லை. அப்பொழுது முதலியார் வைத்தியரால் வர முடியாவிட்டால் சிஷ்யனை யாவது மருந்துடன் அனுப்பும்படி சொல்லிவிட்டார். உடனே தம் சீடனாகிய மதிவாணனை அழைத்துக் கைபார்த்து நோயின் காரணங்களை எப்படி அறிந்து சொல்ல வேண்டுமென்பதை ரகசியமாகக் கூறிக் கட்டு மாத்திரையையும் கொடுத்தனுப்பினார். மதிவாணன் முதலியார் வீட்டருகில் வந்து வெளியில் சுற்றிப் பார்த்துவிட்டு உள்ளே நுழைந்து கூடத்தில் படுத்திருக்கும் முதலியார் அருகிற் சென்று உட்கார்ந்தான். முதலியார் கைகளைக் காட்டினார் சீடன் நெடு நேரம் கைகளை ஊன்றிப் பார்த்து ஒன்றும் பேசாமலிருந்தான். அது கண்ட முதலியார், ''என்ன மதிவாணா, பேசவில்லை? நாடி என்ன சொல்கிறது? சும்மா பயப்படாமல் சொல்'' என்றார்.

''என்ன சொல்லுகிறது? சுரம் கடுமையாய்த்தான் இருக்கிறது. ஒரு குதிரையைத் தின்றுவிட்டால் சுரம் எப்படிக் கடுமையாக அடிக்காமலிருக்கும்?''

''குதிரையாவது தின்னவாவது! என்ன பிதற்றுகிறாய்? மதிவாணா, உனக்குச் சுரம் அடிக்கிறதோ? சன்னி கண்டிருக்கிறதா?''

''அதெல்லாமில்லை. அதோ மூலையில் குதிரைஜேணம் மாத்திரம் வைத்திருக்கிறது. குதிரையைக் காணவில்லை. ஆகவே நீங்கள் அதைத் தின்றிருக்க வேண்டுமென்று தீர்மானித்தேன். என்னுடைய குரு தங்கள் வீட்டின் வெளிப்புறத்திலிருக்கும் குப்பையிலுள்ள பொருள்களால் என்ன பதார்த்தம் சாப்பிட்டீர்களென்று சொல்ல வேண்டுமென்றார். குப்பையில் ஒன்றும் காணப்படவில்லை. இங்கே குதிரைச் சாமான்கள் காணப்பட்டன. ஆனதால் நான் இவ்வாறு தீர்மானித்தேன்.''

இது கேட்ட முதலியார் தாம் அதுவரையில் வைத்தியரால் வஞ்சிக்கப்பட்டதை நினைந்து வருந்தி மதிவாணனை நோக்கி, ''நீ போய் வைத்தியரைச் சுரம் விட்டவுடன் வரச் சொல்'' என்றார்.

மதிவாணன் சென்று நடந்த விஷயங்களை வைத்தியருக்குத் தெரிவித்தான்.

அவர் நம்முடைய வஞ்சனை வெளியாகிவிட்டதே, இனி இங்கு இருக்கலாகாது என்று அன்றிரவில் சீடனும் தாமுமாய் வண்டியேறி ஊரை விட்டு ஓடிப்போயினர்.

மறுநாள் வைத்தியர் வீட்டிற்கு அனுப்பிய வேலைக்காரன் முதலியாரிடத்தில் வந்து வீடு பூட்டியிருப்பதாகவும் வைத்தியர் போன இடம் தெரியாதென்றும் சொன்னான். ★

—ஜுலை, 1934.

'புதுமைப் பித்தன்'

# மனக்குகை ஓவியங்கள்

கர்த்தராகிய பிதா, பரமண்டலத்தின் சாளரங்களில் ஒன்றைத் திறந்து எட்டிப் பார்த்தார்.

கீழே, பல யோஜனைகளுக்கு அப்பால், அவர் கற்பித்த பூ மண்டலமும், அதன் மீது ஊர்ந்து திரியும் சகல ஜீவராசிகளும், அவர் தமது சாயையில் சிருஷ்டித்து மகிழ்ச்சியுற்ற ஆதாம் ஏவாளின் வாரிசுகளும் தென்பட்டன.

ஒரு தாயின் பெருமிதத்துடன், ஒரு சிருஷ்டிகர்த்தரின் கம்பீர மகிழ்ச்சியுடன், அப் பூ மண்டலத்தைக் கவனித்தார்.

அன்று ஏழாம் நாள் தொழிலை (விளையாட்டை?) முடித்துக் கை கழுவி விட்டுச் சிரம பரிகாரம் செய்துகொண் டிருந்தபொழுது எந்த நிலையில் இருந்ததோ அதே நிலையில், மனிதனைத் தவிர்த்துப் பூமண்டலத்தின் மற்றைய ஜீவராசிகளெல்லாம் அவருக்குத் தென்பட்டன.

மனிதன் மட்டிலும், ஏக்கத்தாற் குழிந்த கண்களோடு, விலா வெலும்பெடுத்த கூனல் உடலை வளைத்து, நெற்றி வேர்வை நிலத்தில் சொட்டச் சொட்ட, எதையோ குகையொன்றில் வைத்து ஊதி ஊதி உருக்கிக்கொண்டு இருந்தான்.

பிதாவின் களங்கமற்ற நெற்றியில், கண்ணாடியில் கலந்த ஆவிபோலச் சோர்வு போர்த்திய துயரக்களை தோன்றி மறைந்தது.

தம் இரத்தத்தின் இரத்தமான, கனவின் கனவான, லட்சியத்தின் லட்சியமான, புதல்வனின் நினைவு தட்டியது போலும்!

இன்னுமா?

''ஹே மானுடா, ஏனப்பா உன் பார்வை குனிந்தே போய் விட்டது?'' என்ற குரல், பல யோஜனைகளுக்கு அப்பால் உள்ள மனிதனுடைய உள்ளத்தில் ஒலித்தது.

மனிதன், தன்னுடைய நம்பிக்கை வறண்ட கண்களைக் கொண்டு வானத்தை அண்ணாந்து பார்த்தான்.

''நீர் எப்போதும் அங்கேயே இருக்கிறீரே?'' என்று பதில் கேள்வி கேட்டான்.

''நான் என்ன செய்யட்டும்? உன்னை மாசுபடுத்தும் அந்தப் புழுதி தோய்ந்த கரங்களுடன், மார்புடன், என்னைக் கட்டித் தழுவ முயலுகிறாயே?''

''என்னைச் சிருஷ்டிக்க நீர் உபயோகித்த புழுதியை விட்டு நான் எப்படி விலக முடியும்? உம்மை எப்படி வரவேற்க முடியும்? நான்

நிமிர்ந்து நேராக நிற்பதற்கே இந்தப் புழுதிதானே ஆதாரம்! புழுதியைக் கண்டு அஞ்சும் உமக்கு, அதன் மீது நிற்கும் என்னை அறிந்து கொள்ளச் சக்தி உண்டா? நீர் அந்தச் சக்தி பெற்றுக் கீழே வரும்வரை, நான் இந்தப் புழுதியில் கண்டெடுத்த - அதில் என்னோடு பிறந்த என் சகோதரனை - இந்த இரும்புத் துண்டை வைத்து என்னைப் பாதுகாத்துக்கொள்கிறேன்'' என்று குனிந்து நெருப்பை ஊதலானான். குகையில் பளபளவென்று மின்ன ஆரம்பித்தது.

## 2

உத்தானபாதனது குழந்தை தெய்வத்திடம் வரம் கேட்பதற்காகத் தபஸ் செய்யக் கானகத்திற்கு ஓடிற்று.

மகாவிஷ்ணுவும் ஸ்ரீதேவியும் ஆகாய மார்க்கமாகச் செல்லும் பொழுது இக் குழந்தையைக் கண்டுவிட்டார்கள்.

ஸ்ரீதேவிக்குப் பசலைக் குழந்தையின் பக்தியைக் கண்டு பரிவு ஏற்பட்டுவிட்டது. விவரம் தெரியாத குழந்தைகள் கூடத் தன் கணவருக்கு இருக்கும், அந்தக் 'காத்து அளிக்கும்' சக்தியை அறிந்திருக்கின்றனவே என்பதில் ஒரு பூரிப்பு. கணவரைப் பார்த்துக்கொண்டாள்.

ஸ்ரீதேவியின் கடைக்கண் வீச்சுக்கிணங்கி வரங்களை வாரிச்சொரியக் குழந்தையை அணுகினார் மகாவிஷ்ணு.

குழந்தை ஓடிக்கொண்டிருந்தது.

பகற் கனவை ரசித்துப் பல முறை ஏமாந்த குழந்தை அது. எதிலும் சர்வ சந்தேகம் அதற்கு. மனத்தின் பேரில் அதற்கு அசைக்க முடியாத, நிரந்தரமான சந்தேகம்.

உத்தானபாதனது மடியில் உட்கார்ந்து விளையாடுவதாக, கொஞ்சுவதாக, நம்பி எத்தனையோ முறை ஏமாந்திருக்கிறது.

மகாவிஷ்ணு சங்கு சக்கராயுதராக, அதனை வழிமறித்து நின்று, ''குழந்தாய்!'' என்று அழைத்தார்.

''நீ யார்?'' என்று கேட்டது குழந்தை.

''குழந்தாய், என்னைத் தெரியாதா? நான்தான் மகா விஷ்ணு'' என்று புன்சிரிப்புடன் தம்மை அறிவித்துக் கொண்டார்.

''பொய்! நான் என்ன கனவு காண்கிறேனா?'' என்று தன்னைக் கிள்ளிப் பார்த்துக்கொண்டது குழந்தை.

''நிஜந்தான். இந்தா: இந்த வரத்தைக் கொடுக்கிறேன்; அதிலிருந்து தெரிந்துகொள்.''

''ஓஹோ, செப்பிடு வித்தைக்காரனா?''

''நான்தான் மகாவிஷ்ணு; என் பக்கத்தில் இருக்கும் ஸ்ரீதேவியைப் பார்.''

''பகல்வேஷக் காரனுங்கூடவா! எங்கப்பா கிட்டப் போ. சம்மானம் குடுப்பார். என்னை ஏமாத்த முடியாது!'' என்று சிரித்துக்கொண்டே, ''நேரமாகிறது; தபஸ் பண்ணப் போறேன்'' என்று காட்டிற்குள் ஓடி விட்டது அக் குழந்தை.

கொடுக்க விரும்பிய வரத்தை ஒரு நட்சத்திரத்தின் மீது வீசி எறிந்துவிட்டு ஆகாசகங்கையில் ஒரு முழுக்குப் போட்டார் பகவான்.

பசியால் தவிக்கும், 'கல்லினுள் சிறு தேரை' ஒன்று தென்பட்டது; அதை நோக்கி விரைந்து சென்றார்.

## 3

யமபுரி.

மார்க்கண்டச் சிறுவனுக்காகப் பரிந்துகொண்டு வந்த சிவபிரான் கையில் தோல்வியுற்று, தர்மராஜன் அப்பொழுதுதான் திரும்பி வந்திருக்கிறான்.

தனது தர்மாசனத்தில் உட்காரவும் அவனுக்கு அச்சம். தயங்குகிறான்.

ஆசனத்தடியில் விடாப்பிடியாக உட்கார்ந்துகொண்டு முரண்டு செய்துகொண்டிருந்த நசிகேதக் குழந்தை, ''மரணம் என்றால் என்ன?'' என்று மறுபடியும் தன் மழலை வாயால் கேட்டது.

எத்தனையோ தத்துவங்களைச் சொல்லிப் பார்த்தான். குழந்தையை ஏமாற்ற முடியவில்லை. தன் ஒற்றைக் கேள்வியை வைத்துக்கொண்டு அவனை யுகம் யுகமாக மிரட்டி வருகிறது, அக் குழந்தை.

தோல்வியின் சுபாவமோ என்னவோ! ''மனிதர்கள் என்னைக் கண்டு ஏன் மிரளுகிறார்கள், அஞ்சுகிறார்கள்? நான் உதவி செய்யத்தானே செல்லுகிறேன்? எனக்குப் பயந்து என்னையும் விடப் பெரிய எமனான சங்கரனிடம் சரண் புகுந்தாவது என்னை விரட்டப் பார்க்கிறார்களே! இது என்ன புதிர்? என்னைக் கண்டு பயப்படுவதற்கு என்ன இருக்கிறது?'' என்று அவனது ஏக்கப் படுதாவில் நினைவு அலைகள் தோன்றி விரிந்தன.

அன்றுதான் அவன் தன் தனிமையை முழுவதும் அறிந்தான்.

அப்பொழுதுதான் கிங்கரர் இருவர் தன் முன் கொண்டு நிறுத்திய மனித உயிரைப் பார்த்து, தன் அந்தரங்கக் கேள்வியை வாய்குழறிக் கேட்டுவிட்டான்.

''அதோ கிடக்கிறது பார், நான் போட்டுவிட்டு வந்த உடல்; அதில் போய் உட்கார்ந்து கொள். அப்புறம் உன் கிங்கரர்களை ஏவி, உன்னை அழைத்து வரும்படி உத்தரவு செய். அப்பொழுது தெரியும் உனக்கு'' என்று சொல்லிச் சிரித்தது அந்த மனித உயிர்.

## 4

பர வெளியிலே, பேரம்பலத்திலே நின்று, தன்னையே மறந்த லயத்தில், ஆனந்தக் கூத்திட்டுப் பிரபஞ்சத்தை நடத்துகிறான் சிவபிரான்.

ஒரு கால் தூக்கி உலகுய்ய நின்று ஆடுகிறான்.

பக்கத்தில் வந்து நின்றார் நாரதர். ''அம்மையப்பா! எட்ட உருளும் மண்ணுலகத்தைப் பார்த்தருள்க:....அதோ கூனிக் குறுகி மண்ணில் உட்கார்ந்து, ரசவாதம் செய்கிறானே.

''சிற்றம்பலமான அவனது உள்ளத்திலே தேவரீர் கழலொலி என்ன நாதத்தை எழுப்புகிறது தெரியுமா?

''துன்பம், நம்பிக்கை வறட்சி, முடிவற்ற சோகம்....''

தன்னை மறந்த வெறியில் கூத்தாடும் பித்தனுக்கா இவ் வார்த்தைகள் செவியில் விழப் போகின்றன! வீணையை மீட்டிக்கொண்டு வேறு திசை பார்த்து நடந்தார் நாரதர்.

## 5

கைலையங்கிரியிலே, கண்ணைப் பறிக்கும் தூய வெண்பனிமலையடுக்குகள், சிவந்த தீ நாக்குகளைக் கக்குகின்றன.

திசையும் திசைத் தேவர்களும், யாவரும் யாவையும் எரிந்து மடிந்து ஒன்றுமற்ற பாழாக, சூனியமாகப் போகும்படி பிரான், கோரச் சுடரான நெற்றிக் கண்ணைத் திறந்து தன் தொழில் திறமையில் பெருமிதங்கொண்டு புன்னகை செய்கிறான். கண்ணில் வெறியனின் பார்வை.

பார்த்த இடங்களில் எல்லாம் தீ நாக்கு நக்கி நிமிர்கிறது.

இடியும் மின்னலும் இருளும் ஒளியும் குழம்பித் தறிகெட்டு நசிக்கின்றன.

இக் குழப்பங்களையும் மீறி ஒரு சிறு குழந்தை அவனது காலடியை நோக்கி ஓடி வருகிறது.

தோலாடையைத் தன் தளிர் விரல்களால் பற்றி இழுக்கிறது.

பிரான் குனிந்து பார்க்கிறான், புன்சிரிப்போடு.

''அழிப்பதற்குச் சர்வ வல்லமை இருக்கிற தெம்பில் வந்த பூரிப்போ?'' என்கிறது குழந்தை.

''சந்தேகமா! நீதான் பார்க்கிறாயே!'' என்கிறார் பிரான்.

''உமக்கு எல்லாவற்றையும் அழிக்க முடியும். உம்மை அழித்துக் கொள்ள முடியுமா? நீர் மட்டும் மிஞ்சுவதுதான் சூனியம் என்று அர்த்தமா? உம்மையும் அழித்துக்கொள்ளும்படி நீர் தொழிலை நன்றாகக் கற்றுவந்த பின்பு நெஞ்சைத் தட்டிப் பார்த்துக்கொள்ளும்'' என்று சொல்லிக்கொண்டே அருகி நசித்தது அக் குழந்தை. ★

—மே, 1938.

## கு. ப. ராஜகோபாலன்

# மின்னக்கலை

அன்று வழக்கத்திற்கு விரோதமாகச் சோலை புல் கட்டுக் கொண்டு வந்தான்.

''என்ன, சோலை, உன் ஊட்டுக்காரிக்கு உடம்பு ஏதாவது சுகமில்லையா?'' என்று அவனைக் கேட்டேன்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லிங்கப்பா!''* என்று சொல்லி ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு, சோலை நெளிந்துகொண்டு போய்விட்டான்.

ஆனால் என் மனம் சமாதானப்படவில்லை. உயிரில் ஒரு விதமான ருசியும் இல்லாமற்போன எனக்குத் தினம் சாயங்காலம் மின்னக்கலையின் அழகான முகத்தைப் பார்ப்பது ஓர் ஆறுதலாக இருந்தது. ஒரு விதமான தாங்க முடியாத ஏமாற்றத்துடன் வாசலில் போட்டிருந்த கட்டிலில் போய்ப் படுத்துக்கொண்டேன்.

''ராத்திரி கரூர்லெ வெள்ளி ரதமாம். நான் பார்த்ததே இல்லை. இப்பவே சாப்புட்டூட்டா ஆறு மணி பஸ்ஸுக்குப் போகலாம்'' என்று என் மனைவி வாசல் திண்ணையில் நின்றுகொண்டு சொன்னாள்.

''நீ வேண்டுமானால் யாருடனாவது போய்விட்டு வா; நான் வரவில்லை. எனக்கென்னவோ மாதிரி இருக்கு'' என்றேன்.

''ஆமாம்! ஒரு நா மின்னக்கலையப் பாக்காட்டா அப்படித்தான் இருக்கும்!'' என்று என் மனைவி எரிச்சலுடன் சொன்னாள்.

''தாறுமாறாகப் பேசாதே! உன் இஷ்டப்படியே நீ செய், என் இஷ்டப்படி நான் செய்கிறேன்.''

''வாண்டாம் வாண்டாம்! நீங்க இல்லாமெ எனக்கென்ன வெச்சிருக்கு கோவில்லே!'' என்று சொல்லிவிட்டு என் மனைவி உள்ளே போய்விட்டாள்.

**அ**ரிசி மில்லும் பஸ்ஸும் வந்து கொடுமுடியின் அழகையே குலைத்துவிட்டன. அதற்கு முன் அந்த ஊர், அமைப்பும் அடக்கமுமாய் அசல் கிராமாந்தரமாக இருந்தது.

காவேரிக்கரையில் ஊர். சுபிட்சமான பெரிய அக்கிரகாரம்; வளப்பம் கொண்ட நல்ல குடியான தெருக்கள்; தெம்பான வியாபாரிகள். சுற்றிலும் பயிர் பச்சை, தோட்டம் துரவு, மாடு கன்று நிறைந்த ஊர். சதா உயிர் ததும்பிக்கொண் டிருக்கும் காவேரிக் கரையொன்றே போதும்.

---

* கவுண்டர்கள் 'ஆமப்பா!', 'வரேனப்பா' என்று வார்த்தைகளுக்கு 'அப்பா' சேர்த்தே சொல்லுவது வழக்கம்.

அதுவும் காலை வேளையில் பார்க்க வேண்டும். குடியானப் பெண்கள் காப்புகள் ஒலிக்கக் கையை வீசிக்கொண்டு காட்டுக்குப் போகும் காட்சி மனத்தைக் கவரும். அவர்களுடைய நடையிலேயே ஒரு சுறுசுறுப்பும் ஊக்கமும் இருக்கும். சோம்பலற்றவர்கள். நவ நாகரிக முறைகள் இன்னும் அந்தக் கவுண்ட ஜாதியை அவ்வளவாகப் பாதிக்கவில்லை. அப்பெண்கள் தலைமயிரை நன்ருகச் சீவி முடிந்திருப்பார்கள். சில பிராந்தியங்களில் செய்வதுபோல, மயிரை அள்ளிச் செருகுவதில்லை. இளம்பெண்கள் கூட ரவிக்கை அணிவதில்லை. செட்டிநாட்டுப் பெண்கள்போலச் சேலை கட்டுவார்கள்; ஆனுல் உடம்பைச் சுற்றினது போக மிகுந்த தலைப்பை இறுக்கி இடுப்பில் செருகிக்கொள்ளுவார்கள். எல்லோருமே பொதுவாக நல்ல உடற்கட்டுடையவர்கள். முகத்தைப் போலவே உள்ளத் தெளிவும் கொண்டவர்கள். அவ்வளவாகச் சூதுவாது தெரியாது, சாதாரணமாக.

கவுண்டர்கள் பயிர்த் தொழிலில் புலிகள். இடுப்புக் கோவணத்துடன் இரவு பகலாக நிலத்திலேயே பாடுபடுவார்கள். தஞ்சாவூர் திருச்சி ஜில்லாக் குடியானவர்கள்போல உடம்பு வணங்காதவர்கள் அல்ல. காவேரியையும் கிணற்றையும் வைத்துக்கொண்டு மூன்று போகம் பயிர் ஏற்றிவிடுவார்கள். உழவு மாடு இல்லாத கவுண்டனே சாதாரணமாக இருக்க மாட்டான்.

பிதுரார்ஜிதமாக எனக்கு அந்த ஊரில் ஒரு வீடும் கொஞ்சம் நிலமும் உண்டு. வடக்கே பல ஆண்டுகள் சர்க்கார் உத்தியோகம் செய்துவிட்டு மனைவியும் நானும் கடைசியாக அங்கே வந்து வாசம் செய்தோம். குழந்தைகள் இல்லாத குறையை நீக்க என் மனைவி பல ஸ்தல யாத்திரைகள் செய்து முடித்தாள். ஏதாவது பொழுதுபோக்க வேண்டுமே. வீட்டில் 'பல் பட்ட' கிடாரிக்கன்று ஒன்றைச் செல்வமாக வளர்த்து வந்தேன். அதற்குக் காமு என்று பெயர் வைத்துச் சதா சதிபதிகள் இருவரும் அதன் பணிவிடையில் ஈடுபட்டோம்.

ஊரில் எல்லாரும் என்னை ஒருவிதமான பித்தன் என்று எண்ணியிருந்தார்கள். ஆனுல் நான் ஒருவர் ஜோலிக்கும் போகாமல், நான் உண்டு, என் காரியம் உண்டு என்று இருந்ததால் என்னிடம் ஒரு மரியாதையும் மதிப்புங்கூட இருந்தன அவர்களுக்கு. ஓர் உத்ஸவம், பஜனை சமாராதனை என்ருல் தாராளமாகக் கொடுத்தேனுதலால் கிராமத்தில் ஒரு ஸ்தானமும் எனக்கு இருந்தது.

ஒரு நாள் சாயங்காலம் கயிற்றுக் கட்டிலைத் தெருவில் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். மூன்ரும் வீட்டுக் கணபதி ஐயர் விசிறியும் கையுமாக வந்து சேர்ந்தார்.

''இன்னிக்கிக் கட்டாயம் மழை வரும்'' என்ருர்.

எனக்கென்னவோ அந்த விஷயத்தில் அப்பொழுது அவ்வளவு சிரத்தை ஏற்படவில்லை. ''வரலாம்!'' என்றேன்.

தெருவழியே ஒரு கவுண்டப் பெண் புல்கட்டு எடுத்துக்கொண்டு போனுள். புல் தளதளவென்றும் பச்சைப் பசேலென்றும் இருந்தது. அதை எடுத்துச் சென்ற பெண் அதற்கு ஒப்பிடக்கூடிய புதுமையுடன் இருந்தாள். 'அனுக்ராதம் புஷ்பம்' (மோவாத மலர்) என்று துஷ்யந்தன் சகுந்தலையைப் பற்றிச் சொன்னது எனக்கு ஞாபகத்திற்கு வந்தது. அப்பொழுதுதான் பூத்த ஒரு புது மலர்போல இருந்தாள் அந்தப் பெண்.

எனக்கு வயசு நாற்பத்தைந்திற்கு மேலாகிறது. ஆசை, மீசை எல்லாம் நரைத்துப் போய்விட்டன.

அப்பொழுது நான் அந்தப் பெண்ணின் சோபையைக் கண்டு பிரமித்தேன் என்ருல் அது ஆசையால் அன்று! அழகும் புஷ்டியும் கொண்ட என்

ஆமுவைப் பார்க்கும் பார்வையுடன் பார்த்தேன். ஒரு வாலிபன் பார்க்கும் கண்ணுடன் நான் அவளைப் பார்க்கவில்லை.

''புல்லுக்கட்டு என்ன பிள்ளெ வெலை?'' என்று அவளைப் பார்த்துக் கேட்டேன்.

தெருவின் நடுவே சுமையுடன் நின்றுகொண்டு இளமையின் வெட்கத்தால் என்னைப் பார்க்காமல் பார்வையை ஒரு பக்கமாகச் செலுத்தியவளாய், ''ஒண்ணரைப் பணமப்பா!'' என்றாள்.

நான் தனியாக உட்கார்ந்திருந்தால் அவள் இரண்டரைப் பணம் சொல்லியிருந்தாலும் வாங்கியிருப்பேன். பக்கத்தில் கணபதி ஐயர் இருந்ததை உத்தேசித்து, ''சொல்லு, பிள்ளெ!'' என்றேன்.

''அரைப் பணத்துக்குச் சீரழிகிறது, சார், கட்டு'' என்றார் கணபதி ஐயர். பெண்ணின் முகத்திலே கோபக் குறி தோன்றியது. திரும்பிப் போக யத்தனித்தாள்.

''இந்தா பிள்ளே, என்ன அவ்வளவு கோவிச்சுக்கிறியே?'' என்று நான் கொஞ்சம் சிரித்துக்கொண்டு அவளைக் கூப்பிட்டேன்.

அவளும் லேசாகச் சிரித்துவிட்டு,''ஒரு பணம்னு போடறேனப்பா!'' என்றாள்.

பக்கத்திலே கணபதி ஐயர், ''அரைப் பணத்திற்குத் தானே போட்டு விட்டுப் போவாள், ஸார். நீங்கள் சும்மா இருங்கள்'' என்றார்.

அவர் சொன்னது என் காதில் படவில்லை. அவளைக் கண்டு நான் மெய்ம்மறந்து போனேன்.

நடுத்தரமான உயரம். அவள் பதினேழு பதினெட்டு வயசிற்குத் தகுந்த உடலமைப்புக் கொண்டிருந்தாள். கறுப்புமல்ல, சிவப்புமல்ல. பக்கத்துப் பார்வையில் முகவெட்டு மிகவும் கம்பீரமாக இருந்தது. ராணிபோல நிமிர்ந்து நின்றாள். சேலையின் தலைப்பை மடித்துத் தலையில் போட்டு அதன்மேல் புல்கட்டை வைத்துக்கொண் டிருந்தாள். கடிவாளத்தின் இழுப்பில் துடித்து நிற்கும் குதிரைபோல நின்றாள்.

''சரி, ரேழியில் கொண்டு போடு!'' என்று சொல்லிவிட்டு நானும் எழுந்து சில்லறை எடுக்க உள்ளே போனேன்.

நான் வருவதற்குள் கட்டைக் கீழே போட்டுவிட்டுத் தலைப்பை உதறி இடுப்பில் செருகிக்கொண்டு விட்டாள்.

''நாளைக்கும் கொண்டாரையா?'' என்று கேட்டுக்கொண்டே காசைக் கொடுத்தேன்.

''ஆகட்டுங்க'' என்று சொல்லிவிட்டு வெள்ளிமெட்டி ஒலிக்க நடந்து போய்விட்டாள்.

அடுத்த நாள் அவள் வந்தபொழுது அவளைச் சில கேள்விகள் கேட்டேன்.

''உன் பெயர் என்ன அம்மா?''

''மின்னக்கலை'' என்று சுவரில் சாய்ந்துகொண்டு வெட்கத்துடன் பதில் சொன்னாள்.

''கல்யாணம் ஆகிவிட்டதா?''

''ஆகிவிட்டது'' என்று அவள் குனிந்துகொண்டு தலையை ஆட்டினாள்.

''உன் புருஷனுக்கு என்ன வேலை?''

''கவுண்டன் ரயில்லே போட்டருங்க'' என்று தலைநிமிர்ந்து சொன்னாள்.

**நா**லைந்து மாதம் இந்தமாதிரி தினம் புல் கொண்டுவந்து போட்டாள். மாதம் நாலு ரூபாய் என்று மொத்தமாகப் பேசிவிட்டேன். மண் மணல் இல்லாமல் நல்ல புல்லாகக் கொண்டுவந்து போட்டாள்.

என் மனைவிக்கு என்னவோ அவளைக் கண்டது முதலே பிடிக்கவில்லை. காரணமின்றி அவளிடத்தில் ஓர் அசூயை கொண்டாள்.

''பிடி புல்லைக் கொண்டுவந்து போட்டுட்டு ஏமாத்தரு! அவள் பசப்பிலே நீங்க மயங்கிப்பேட்டேள்'' என்றாள் ஒரு நாள்.

''என்ன இப்படி அர்த்தமில்லாமல் பேசுகிறாய்? பிடி புல்லா கொண்டு வருகிறாள்? பெரிய கட்டு என்று எல்லாரும் சொல்லுகிறார்கள். அவள் பசப்புகிறாள் என்கிறாயே, அந்தக் குழந்தையைப்பற்றி நீ இப்படிச் சொல்லலாமா?'' என்று நான் சொன்ன பிறகு என் மனைவி என்னிடம் அவளைப்பற்றி அதிகமாகப் பேசுவதில்லை. ஆனால் அவள் மனத்தில் மட்டும் அந்த எண்ணம் விடவில்லை.

மின்னக்கலை தன்னுடன் ஓர் இளமையையும் இன்பத்தையும் தினமும் கொண்டுவந்தாள். அவளுடைய மிதப்பான நடையும் மெதுவான குரலும் எனக்கு ஆறுதலாக இருந்தன. என் வாழ்க்கையின் வெயில்தாபத்தினுடைய இறுதியில் அவள் தினமும் ஒரு மலர்க் காற்றுப்போல வந்து குளுமை கொடுத்தாள்.

என் வாத்ஸல்யத்தை ஊகித்து அறிந்துவிட்டவள்போல் என்னிடம் ஒரு மகள் போன்று நடந்துகொண்டாள்.

தீபாவளிக்கு நான் அவளுக்கு ஒரு சேலை வாங்கிக் கொடுத்தேன். என் மனைவி என்னுடன் ஒரு வாரம் பேசவில்லை.

''என்னடி முட்டாளாயிருக்கிறாயே? நமக்குக் குழந்தைகளா, குட்டிகளா? ஓர் ஏழைப் பெண்ணுக்கு உபகாரம் செய்தால் நல்லதுதானே?''

''என் தங்கை பெண்ணுக்குச் செய்யுங்களேன்!''

''அவளுக்குத்தான் பெற்றவன் பிடிபிடியாகச் செய்கிறானே.''

**ப**தினைந்து இருபது நாள் சோலையே புல் கொண்டுவந்து போட்டான். மின்னக்கலையைக் கண்ணால் பார்க்காத அப்பொழுதுதான் அவள் தேவை எனக்கு நன்றாக அர்த்தமாயிற்று. என் வாழ்க்கையில் காலியாக, நிரம்பாமல் இருந்த ஓரிடத்தை அவள் பூர்த்தி செய்துவிட்டாள். அவள் என் பார்வையில் இருக்கிறாள் என்ற திருப்தியே என் வாழ்க்கையை ஸபலமாக்கிற்று. அவளுக்கு ஆதரவாக இருக்கிறோமென்ற நினைவே எனக்குப் போதுமானதாக இருந்தது. அவளைக் காணாமல் எனக்கு இருப்புக் கொள்ளவில்லை.

ஒருவேளை என் மனைவி ஏதாவது அவளை வராதே என்று தடுத்திருப்பாளோ என்றுகூடச் சந்தேகப்பட்டேன்!

ஒரு நாள் அகஸ்மாத்தாக வயலுக்குக் குடியானத் தெரு வழியாகப் போகலாமென்று போனேன். சோலை வீடு அங்கு எங்கேயோ இருக்கிறதென்று தெரியுமே ஒழிய இடம் தெரியாது. ஒரு தெரு மூலை திரும்பி ஒரு குறுக்குத் தெருவில் நுழைந்தேன்.

அப்படியே நடுத்தெருவில் நின்றுவிட்டேன். எதிரே ஒரு சின்ன வீட்டின்முன், சாணி தெளித்து மெழுகியிருந்த மண் தரையில், எங்கோ

பார்த்துக்கொண்டு படுத்திருந்தாள் மின்னக்கலை. பக்கத்தில் ஒரு மொட்டை வண்டி இருந்தது.

அவளைப் பார்த்துக்கொண்டு அப்படியே நின்றேன். என்னை அறியாமலே என் கண்களில் நீர் நிறைந்தது. அவள் கர்ப்பம்! அதனால் தான்....என்முன் அந்தக் கோலத்துடன் வர வெட்கப்பட்டுக்கொண்டு தன் புருஷனை அனுப்பியிருக்கிறாள்!

ஆகையால் அவளை அப்பொழுது கலவரப்படுத்த எனக்கு இஷ்டமில்லை. ஆனால் திடீரென்று திரும்பி அவள் என்னைப் பார்த்துவிட்டாள்.

சட்டென்று எழுந்து ஓடிக் கதவின் பின் நின்றுகொண்டு, ''வாங்க சாமி, வாங்க! இந்த வண்டியிலே உட்காருங்க!'' என்று சொல்லிவிட்டு எதிர் வீட்டுச் சிறுமியைச் சமிக்ஞை செய்து அழைத்தாள். அவளை உள்ளே கூட்டிக்கொண்டு போய் வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு மூன்றும் ஓர் ஓலைத் தட்டில் வைத்து அவளிடம் கொடுத்தனுப்பினாள்.

''கவுண்டன் புல்லுக்குப் போயிருக்காரு. இதோ வந்துடுவாரு..'' என்று சொல்லிக்கொண்டு தெருக்கோடியை எட்டிப் பார்த்தாள்.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம் சோலை வந்தான்.

''என்ன சோலை, எங்கிட்ட ஏன் சொல்லவேயில்லை?'' என்று கேட்டேன்.

இருவரும் வெட்கித் தலைகுனிந்து கொண்டார்கள்.

''சோலை, நீயா புல் பிடுங்கப் போகிறாய்?''

''ஆமாங்க. போட்டர் வேலேலெ ஒண்ணும் வல்லிங்க. சின்ன டேசனுங்க.''

''பின் எப்படி காலக்ஷேபம்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

''ஒங்க நாலு ரூவாதானுங்க கஞ்சி ஊத்துது.''

''அட பாவி! என்னிடம் ஏன் சொல்லவில்லை?'' என்று பதைத்துப் போய்க் கேட்டேன்.

''நீங்க இன்னும் என்னதான் செய்வீங்க? அவ வீடு கூட்டலாம்னு-''

அவன் சொன்னது என் காதில் படவில்லை. எனக்கு உயிரில் ஓர் பற்றை ஏற்படுத்தி உற்சாகம் கொடுத்த மின்னக்கலை அவ்வளவு நாளாக அரைவயிறு கஞ்சி குடித்து வந்திருந்தவள் என்ற எண்ணம் என்னைத் திடுக்கிடச் செய்தது. என் குழந்தையைப் பட்டினி போட்ட குற்றவாளிபோல நான் வேதனை அடைந்தேன்.

''உனக்கு உழவு வேலை தெரியுமா?'' என்று திடீரென்று கேட்டேன்.

''நல்லாத் தெரியுங்க; ஊர்லெ எடமில்லீங்க.''

''என் பண்ணை ஆளாக இரு!''

சோலை வெலவெலத்துப் போனான். அவனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அவன் கண்கள் கலங்கிவிட்டன.

''பிள்ளைகுட்டி நல்லாயிருக்கணும்'' என்று கும்பிட்டான்.

''எனக்குப் புள்ளெயும் கிடையாது; குட்டியும் கிடையாது. எல்லாம் மின்னக்கலைதான்'' என்று முகத்தை மறுபக்கம் திருப்பிக்கொண்டு சொன்னேன். மின்னக்கலையின் முகத்தைப் பார்க்க வெட்கி, சொல்லிக் கொள்ளாமலே விர்ரென்று கிளம்பி வீடு வந்து சேர்ந்தேன். ★

—ஜூன், 1938.

ந. பிச்சமூர்த்தி

# மீனி

காந்திமதிப் பாட்டியின் வீட்டிற்கு முதல்நாள் இரவுதான் மீனி வந்திருக்க வேண்டும். ஏனெனில் அன்று இரவு முழுவதும் அலமாரியின் மேல் 'தொப் தொப்' என்று ஏதோ விழும் சப்தமும், சமையலறையில் பாத்திரங்களும் கரண்டிகளும் உருளும் ஓசையுமாக இருந்தன. கிழவிக்கு இன்னதென்று புரியவில்லை. அர்த்தராத்திரியில் எழுந்திருந்து போய்ப் பார்க்கவும் அலுப்பு. எலியாக இருக்குமென்று சபித்துக்கொண்டே மறுபடியும் கண்ணயர்ந்தாள்.

மறுநாள் அதிகாலையில் கிழவி திருப்பள்ளி எழுச்சிகளும் சிவன் தோத்திரங்களும் சொல்லி முடித்துவிட்டு எழுந்தபொழுது மீனி குறுக்கே ஓடிற்று. ''அட தரித்திரமே! நீதானா ராத்திரி முழுதும் கொட்டம் அடித்தாய்? போதாக்குறைக்கு முதல் முதல் உன் தரிசனம் தானா?..என்ன ஆபத்து வரப்போகிறதோ?'' என்று நொந்து கொண்டாள்.

அதற்குப் பிறகு பகல் முழுவதும் மீனி கண்ணில் படவில்லை. அன்று கிழவிக்குக் கறிகாய் நறுக்கும்பொழுது அரிவாள்மணை கூடக் கையில் படவில்லை. 'இப்படிச் சாஸ்திரம் பொய்யாகுமா?' என்று கிழவி யோசித்துக்கொண் டிருந்தாள்.

இரவு வந்தது. பலகாரத்திற்குப் பால் கொழுக்கட்டை செய்து ஜாக்கிரதையாய் மூடி வைத்துவிட்டுச் சுவாமி தரிசனத்திற்குச் சென்றாள். பலகாரத்திற்குக் காவலாகப் பேரன் சூரியநாராயண மூர்த்தியையும் அவன் தங்கை கௌரியையும் நியமித்தாள்.

சிறிது நேரம் சென்றது. சூரியநாராயணமூர்த்தி ராமசப்தம் சொல்லிக்கொண்டிருந்த சிரமத்தில் ஈடுபட்டிருந்தான். அண்ணனுடைய உத்தியோகத்தையும் சேர்த்துப் பார்த்துவந்த கௌரி அப்படியே கூடத்தில் தூங்கிப் போய்விட்டாள்.

உள்ளே தாம்பாளம் உருண்டு விழுந்தது. அந்தச் சப்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டுச் சூரி உள்ளே ஓடினான். பூனைக்குட்டி அந்தர்த்தானமாகிவிட்டது. பாத்திரத்தில் கொஞ்சம் பால் குறைந்திருந்தது. கிழவி வந்து தொணதொணக்கப் போகிறாளே எனப் பயந்து, தாம்பாளத்தை மறுபடியும் மூடிவைத்து விடலாமென்று கையில் எடுத்தான். சமயத்தில் கிழவி திரும்பி வந்துவிட்டாள். ஒரு விநாடிக்குள் விஷயம் விளங்கிவிட்டது. பாட்டியின் அம்பறாத்தூணியிலுள்ள அவ்வளவு வசவுகளும் அழகாய்ப் புறப்பட்டன. அப்புறம் சூரிக்கு இரண்டு அறை; தூங்குமூஞ்சி கௌரிக்கு நான்கு. வாரிச் சுருட்டிக்கொண்டு கௌரி எழுந்தபொழுது வீட்டு விட்டத்தின்மீது மியா, மியா என்று பிரலாபித்துக்கொண் டிருந்த பூனைக்குட்டியைப் பார்த்தாள். தன்

நிலைமையைப் பார்த்து இரங்குவதுபோல் கூவிய பூனைக்குட்டிக்கு மீனி என்ற அன்புப் பெயர் சூட்டினாள்.

அன்று முதல் அண்ணனுக்கும் தங்கைக்கும் மனஸ்தாபம். இரவு எட்டு மணிக்குத் தூங்கக் கௌரிக்கு யாதொரு நியாயமுமில்லை என்றும், படிப்பவனைச் சுயேச்சையாய் விடவேண்டியது ஸ்திரீ தர்மமென்றும், அதையெல்லாம் மறந்து தூங்கிப்போன கௌரி கணவன் வீட்டிற்குப் போய் நல்ல பெயர் வாங்கப்போவதில்லை என்றும் சூரி எண்ணிக்கொண்டிருந்தான். கௌரி நினைத்தாள்: 'எனக்குத்தான் தூக்கம் தலை சுற்றியடித்ததை இவன் பார்த்தானே; நானும் சொன்னேனே. கைசொடுக்கும் நேரத்தில் நெட்டுருச் செய்யவேண்டியதை ஒரு யுகம் வரையில் செய்தால் யார் ஜவாப்? மக்குப் பையன்! சமையலறையிலாவது விளக்கை வைத்துக்கொண்டு வாசிக்கலாகாதா? அதையெல்லாம் விட்டுவிட்டுக் கிழவிக்குத் தூபம் போட்டு எனக்கு அடிவாங்கி வைத்தானே. களிமண்! பிரம்மகத்தி! இவனுக்குப் படிப்பு வருமா?'

மீனியும் அன்று முதற்கொண்டு அங்கேயே ஸ்திரவாசமாகி விட்டது. ருசி கண்ட பூனை விடுமா? அங்கே இங்கே பாட்டி போயிருக்கையில் நெய்யைத் தின்றுவிடுவது, பாலைக் குடித்துவிடுவது, நைவேத்தியத்தைத் தொட்டுவிடுவது, நூற்கண்டைச் சிடுக்கடித்துவிடுவது-இப்படியெல்லாம் பூனைக்குட்டிக்குத் தெரிந்த அவ்வளவு விஷமமும் செய்தது.

ஒரு நாள் சமையல் அடுப்பிற்குள் மீனி தூங்கிக்கொண் டிருந்தது. காந்திமதிப் பாட்டி அதைப் பார்க்கவில்லை. ''இந்தாடா காபி'' என்று காபியை வைத்துவிட்டுக் காசித்தும்பைப் பூப்பறித்து வரச் சென்றாள். சூரி மசிக் கூடு, நோட் புஸ்தகங்கள் இவைகளை ஒழுங்குபடுத்திவிட்டு வருமுன் காபியில் பாதிக்குமேல் காணுமல் போய்விட்டது. பாட்டியினிடம் போய்ச் சொன்னான். ''உனக்கு நன்ருய் வேண்டும்!'' என்று கிழவி ஆசீர்வதித்தாள். சூரிக்கு வந்த ஆத்திரத்திற்கு அளவில்லை. அங்கிருந்த சுடு தண்ணீரை எடுத்துப் பூனையின்மேல் கொட்டினான். மியாவூ என்று நீளமாக அழுதுகொண்டே அது ஓடிவிட்டது.

இதைப் பார்த்திருந்த கௌரிக்குக் கண்ணில் ஜலம் வந்தது; தன் மீது சுடுதண்ணீர் விழுந்த எரிச்சல் உண்டாயிற்று. அதிலிருந்து மீனியின்மீது கௌரிக்குப் பின்னும் அதிகமான ஆசையும் நேசமும் உண்டாயின. கிழவிக்கும் சூரிக்கும் தெரியாமல் நெய்யுடன் கலந்த சாதத்தைக் கொல்லையில் கொண்டுபோய் மீனிக்குப் போடுவாள்; தன் காபியில் கடைசியில் பாக்கி வைத்து, கிணற்றங்கரையில் பாத்திரம் தேய்க்கும் பாவனையாய் மீனிக்குக் காபியைக் கொடுப்பாள்; மத்தியான வேளைகளில், பாட்டி தூங்கும்போதோ, பஞ்சீகரணம் போடும்போதோ மீனியுடன் கொல்லையில் விளையாடப் போவாள்.

நாளாக நாளாக ரகசியம் அம்பலமாகிவிட்டது. இருவருக்கும் வெட்கம் கெட்டுப்போயிற்று. கௌரி காபி குடிக்கும் பொழுதும், சாதம் அல்லது பட்சணம் சாப்பிடும்பொழுதும் பகிரங்கமாய் அவளிடம் வந்து மீனி கத்தும். அவள் பரிவுடன் தன்னுடையதை அதற்குப் பகிர்ந்து கொடுப்பாள். இதர வேளைகளில் வெறுமனே கௌரியின்மீது அன்புடன் மீனி உராயும்.

பூனையைப்பற்றிக் கிழவியின் உணர்ச்சிகள் ஒரு விதம். எவ்வளவு ஜாக்கிரதையாய்க் கிழவி வீட்டுக் காரியங்களைச் செய்தபோதிலும் முடிவில் எதிலாவது ஏமாருமல் இருக்க மாட்டாள். தவிர, தினசரி காலையில் பூனை தரிசனம். கண்ணுடிக் குப்பியில் அடைத்து வைத்திருக்கும் அக்கினித் திராவகத்தைப்போல் மீனியின் மீதுள்ள கோபத்தை அடைத்து வைத்திருந்தாள். அவள் இல்லாவிட்டால் தங்கப் பூனைகளாகச் செய்து தானம்செய்ய அவளிடம் ஐவேஜி ஏது? எனவே கிழவியின் ஆத்திரத்திற்கு இலக்கு, கௌரிதான்!

சூரியின் உணர்ச்சி மற்ருெரு விதம். என்றைத்தினம் மீனியின் சாக்கிட்டுத் தனக்கு அடி விழுந்ததோ அதுமுதல் அதை எப்படியாவது தொலைத்துவிடவேண்டும் என்றதாக நினைத்தான் அவன். அதற்குக் குறுக்கே நின்ருள் கௌரி. இல்லையா? தவிர அவளைப் பார்த்ததும் மீனி தாவிப் பாய்ந்து ஓடிப்போய்விடுவதும், கௌரியைக் கண்டால் கொஞ்சிக் குலாவுவதும் அவனுக்குப் பிடிக்கவில்லை; 'ஒரு பூனைகூட என்னைப் பார்த்து அலட்சியம் செய்யும்படி ஆகிவிட்டதா?' என்ற துயரம். இவ்வளவு எண்ணங்களும் சேர்ந்து, 'மீனியையும் கௌரியையும் ஏககாலத்தில் கர்வபங்கப் படுத்திவிடு' என்று சூரிக்கு உபதேசம் செய்துகொண்டிருந்தன.

ஒரு நாள் காலைவெயிலில், குட்டிச்சுவருக்குப் பின்னல் மீனி கால்களை நீட்டிக்கொண்டு சுகமாய்ப் படுத்துக் கிடந்தது. சூரி பார்த்தான். ஒரு பெரிய சாக்கைக் கொண்டுவந்து, 'திடும்' என்று பூனையின்மீது போர்த்திச் சாக்கையும் பூனையையும் அப்படியே தூக்கிக்கொண்டு வந்தான். கிழவி பார்த்து, ''அடே! பூனை ஹத்தி செய்யாதே. பிராயச்சித்தம் செய்யப் பணமில்லை!'' என்று கூப்பாடு போட்டாள்.

''ஒன்றும் செய்யவில்லை, பயப்படாதே'' என்று சொல்லிக் கொண்டே ஒரு கம்பிக் கூட்டில் கொண்டுபோய் அதை அவன் அடைத்துவிட்டான். சர்க்கஸில் சிங்கம் புலிகளைப் பழக்கவில்லையா? அதற்குப் பிறகு, 'இப்படிச் செய்', 'அப்படிச் செய்' என்று ஆட்டிவைத்தபடியெல்லாம் அவை ஆடவில்லையா? அதைப்போல, புலிக்குப் பதிலாகப் பூனையை வைத்துக் கௌரியைக் கண்டால் ஓடிப்போகும்படி பழக்கவேண்டுமென்ற உத்தேசம்போலும் சூரிக்கு! மீனி சிறிது நேரம் கத்திப் பார்த்தது. பிறகு கூண்டுக்குள் குறுக்கும் நெடுக்குமாய் நடந்து கம்பி இடுக்குகளில் முகத்தை விட்டுப் பார்த்தது. அப்பால் கம்பிகளை முன்கால்களால் பிருண்டிப் பார்த்தது. ஒன்றும் பலிக்கவில்லை. திரும்பவும் முன்போல் அலையத் தொடங்கிற்று. சிறிதுநேரம் சென்று சூரி பூனைக்குப் பால் கொண்டுபோய் வைத்தான். என்ன காரணத்தாலோ மீனி பால் சாப்பிட மறுத்தது. கண்களை மூடிக்கொண்டு ஏதோ குருட்டு யோசனை செய்தது.

நடந்தது அவ்வளவும் கௌரிக்குத் தெரியும். இருந்தாலும் அவ்வளவு வெளிப்படையாகச் சூரியுடைய விரோதி ஆவதற்குக் கௌரிக்குத் துணிவில்லை. இருந்தாலும் மீனியின் நிலைமைக்காக வருந்தாமல் இருக்கவில்லை. அன்று கௌரிக்குச் சாப்பாடுகூடச் சரியாகச் செல்லவில்லை. இரவு எப்பொழுது வரும் என்று காத்துக்கொண் டிருந்தாள்.

இரவு ஒன்பது மணி இருக்கும். எங்கே கூட்டில் பூனை செத்துப் போய்விடப்போகிறதோ என்று பயந்து மெதுவாக ஒருவருக்கும் தெரியாமல் கூட்டை அப்படியே வெளியே எடுத்துக்கொண்டுபோய்ப் பூனையை விட்டுவிடுவோம் என்ற எண்ணத்துடன் கிழவி அக்கூட்டண்டை வந்து சேர்ந்தாள். அங்கே கொஞ்சம் இருட்டு; அவ்விருட்டில் மற்ருேர் உருவம் தோன்றிற்று. ''யாரது?'' என்ருள். ''நான்தான்'' என்ருள் தூங்கிப்போய்விட்டதாக நினைத்தாளே அந்தக் கௌரி.

''இருட்டில் இங்கே என்ன செய்கிருய்?'' என்ருள் கிழவி.

''நீ என்ன செய்யப்போகிருய் பாட்டி?'' என்று பதில் கேள்வி கேட்டாள் கௌரி.

''பயப்படாதே; உன் பூனைக்குட்டியைச் சந்தில் கொண்டுபோய் விட்டுவிடுகிறேன். இல்லாவிட்டால் இந்தச் சூரி அதைக் கொன்றுவிடுவான்.... நீ என்ன செய்கிருய் இருட்டில்?''

''ஒன்றுமில்லை'' என்று கௌரி சொன்னது பொய். உண்மையில் சாயங்காலம் தனக்குக் கிடைத்த காபியில் கொஞ்சம் ரகசியமாய்

மிகுத்துவைத்து அப்பொழுதுதான் மீனிக்குக் கொடுத்து முடிந் திருந்தது.

''ஆனால் சரி, நீ இங்கேயே இரு; நான் கொண்டுபோய் விட்டுவிடு கிறேன்'' என்றாள் கிழவி.

கௌரிக்கு மீனியை இழக்கவும் இஷ்டமில்லை; குற்றவாளியைப் போல் கூட்டில் பார்க்கவும் இஷ்டமில்லை. முடிவில் எங்கேயாவது பிழைத்துக் கிடக்கட்டும் என்று தைரியம் மூட்டிக்கொண்டு, ''சரி பாட்டி, எடுத்துக்கொண்டு போ'' என்று தானும் சந்துவரையில் போய் விட்டு வந்தாள். 'சனி ஒழிந்தது' என்று கிழவி அக மகிழ்ந்துகொண் டிருந் தாள். கௌரிக்கோ துக்கம் நெஞ்சை அடைத்தது. அவரவர்கள் படுக்கப் போய்விட்டார்கள்.

நல்ல நிசிவேளை. பின்னும் ஓர் உருவம் பூனையைப் பார்க்க வந்தது— ஆஜர் பார்க்க! சந்தேகமென்ன? சூரிதான்! இருட்டில் குனிந்து பார்த்த பொழுது கூடு மட்டும் இருந்தது; பூனையைக் காணவில்லை. வடவாக்கினி போலக் கோபம் சீறியெழுந்தது; ''அந்தக் கௌரியை ஒரு கை பார்க் கிறேன். ராத்திரி பூனையை விரட்டிவிட்டால் எனக்குத் தெரியாமல் போய்விடுமா?....இருக்கட்டும்'' என்று சபதம் செய்தான்.

மறுநாள் பொழுது விடிந்தது. கிழவி படுக்கையை விட்டு எழுந்ததும் மீனி முகத்தில் விழித்தாள்; ''சிவ சிவ! போன சனியன் திரும்பிவந்து விட்டதா?'' என்று தலையில் அடித்துக்கொண்டாள். ஆனால் கௌரியின் மகிழ்ச்சிக்கு அளவில்லை. கொல்லைப் பக்கம் பல்துலக்கப் போனாள். வெந் நீர் அடுப்புக் கூரைமேல் பூனைக்குட்டி பதுங்கிக்கொண் டிருந்ததைப் பார்த்தாள்.

''அட மீனி!'' என்றாள் கௌரி.

'மியாவ், மியாவ்' என்று கத்திக்கொண்டே அவளருகில் வந்தது பூனை.

''என்னை விட்டுப் போகமாட்டாயோ? நல்ல மீனி! தங்கக் கம்பி! கண்ணு!''

'மியாவ் மியாவ்!'

''சூரி பார்த்தால் ஓடிப்போன திருடன் என்று உன்னைக் கொன்று விடுவானே. என்ன செய்கிறது?''

'மியாவ் மியாவ்!'

இப்படிக் கௌரியும் மீனியும் பிரேம பாஷையில் பேசிக்கொண் டிருந்தபொழுதே சூரி வந்துவிட்டான்.

''ஏண்டீ கௌரி! பூனைக்குச் செப்பிடு வித்தை தெரியும்போலிருக் கிறது. கூட்டிலே இருந்து தானே வெளியிலே வந்துவிட்டதே!'' என்று கண்ணைச் சிமிட்டினான்.

''போடா குரங்கு. உனக்கு என்னடா தெரியும் அதெல்லாம்?'' என்று சீறினாள் கௌரி.

மீனி காலபைரவனைக் கண்டதுபோல் எங்கேயோ நடுங்கிப் பதுங்கி விட்டது.

சூரிக்கு அவமானம் தாங்கவில்லை. 'நான் கௌரிக்கு அண்ணன் என்று உணரும்படி செய்யாவிட்டால் என் பெயரை மாற்றிக்கொள் கிறேன்' என்று ஓர் அந்தரங்கச் சங்கற்பம் செய்துகொண்டான். ஆனால் பதற்றமாய் ஒன்றும் செய்யவில்லை. தந்திரத்தைக் கைக்கொண்டான்.

''கௌரி, உன்மேல் எவ்வளவு ஆசை பார்த்தாயா மீனிக்கு! போன ஜன்மத்திலே அது உனக்குத் தங்கை. அதுதான் அவ்வளவு கொஞ்சுகிறது. அப்போது நான் ஓர் எலி. அதுதான் உங்கள் இரண்டு பேருக்கும் என்மேல் கோபம் வருகிறது. பழையதெல்லாம் போகட்டும். இனிமேல் எல்லாரும் சேர்த்தியாக இருப்போம். சரிதானா?'' என்று அழகாக உருக்கமாகப் பேசினான்.

கௌரி வெகுளிதானே! பேச்சு அவள் மனத்தைக் கரைத்தது. அண்ணாவுக்கு நல்ல புத்தி வந்துவிட்டதென்ற சந்தோஷத்தால் தன் பட்சணத்தில் ஒரு பங்கு அண்ணனுக்கு வழங்கினாள்.

மணி பத்து அடிக்கவே சூரி காலைப் பள்ளிக்கூடத்திற்குப் போய்விட்டுத் திரும்பினான். இரண்டாம் தரம் சாப்பிட்டானபிறகு ஓர் அழுக்குக் கடுதாசியை எடுத்து எழுதினான்—

''சார் அவர்களுக்கு,

எனக்கு ரொம்ப ரொம்பத் தலைவலி. பாட்டி மத்தியானமாய்ப் பள்ளிக்கூடம் போகாதே இன்னாட்டாள். எனக்குப் பொட்டில் மொளகு அறச்சுப் போட்டிருக்கு. எனக்கு லீவ் வேணும்.

டி. சூர்யநாராயணமூர்த்தி.''

இக் கடிதத்தை அடுத்த வீட்டுப் பையனிடம் கொடுத்தனுப்பி விட்டான். ''வயிற்று வலி; பள்ளிக்கூடம் போக முடியாது'' என்று பாட்டியிடம் சொல்லிவிட்டு ஒரு பாயை எடுத்துப் போட்டுக்கொண்டு நான்கு தரம் அங்கப் பிரதட்சிணம் செய்தான். பாட்டி குழந்தைக்கு ஓமமும் வெற்றிலையும் கொடுத்துவிட்டு, மூக்குக் கண்ணாடியை மாட்டிக்கொண்டு மெய்ம்மறந்து ஞானவாசிஷ்டம் படிக்க ஆரம்பித்துவிட்டாள்.

சமயம் வாய்த்ததென்று பாயை விட்டுச் சூரி மெதுவாய் நழுவினான். வீட்டின் இரண்டு கட்டிலும் கௌரியைக் காணவில்லை. 'திருடர்கள் கொல்லையில் இருப்பார்கள்' என்று எண்ணிக்கொண்டே குதிருக்குப் பின் வைத்திருந்த கிட்டிப்புள் கழியை முதுகுக்குப் பின்னால் ஒளித்து எடுத்துக்கொண்டு கொல்லைப்புறம் போனான்.

கௌரி ஒரு காலை நீட்டிக்கொண்டு ஆனந்த சாகரத்தில் மூழ்கியபடி உட்கார்ந்திருந்தாள். எதிரே அம்மானைக் காய்கள் கிடந்தன. மீனி அவற்றைக் கடித்துக் குதறிக்கொண் டிருந்தது. சூரிக்கு மீனியைக் கொல்ல வேண்டுமென்ற எண்ணமல்ல. பள்ளிக்கூடத்து வாத்தியார் ரூல் கழியால் லேசாகத் தலையில் தட்டுகிறாரே, அதைப்போல் மீனிக்கு இரண்டு தட்டுப் போட்டால் அது வழிக்கு வந்துவிடும் என்ற யோசனை. மெதுவாய், கௌரிக்குத் தெரியாமல் அவளுக்குப்பின் போய் நின்று, ஓர் அடி போட்டான். அது இவ்வளவு பலமாய் விழும் என்று அவனே எதிர் பார்க்கவில்லை. கௌரி அடிப்பதற்கு முந்திப் பார்த்துவிடப்போகிறாளே என்ற பயத்தாலேயே அடி அவனை அறியாமலே பலமாய் விழுந்துவிட்டது.

மீனி பிரமாதமாய் அழுதவண்ணம் ஒடிந்துபோன இடுப்பை இழுத்துக்கொண்டு ஒரு புதருக்குள் மறைந்தது.

சூரிக்கு அஸ்தியில் சுரம். அதைப் பொய்க்கேள்வியால் மறைக்கப் பார்த்தான். ''ஏண்டீ கௌரி! நான் விளையாட்டுக்குத்தானே மெது வாய்த் தட்டினேன்? உன்னைப்போலவே உன் பூனையும் மாமாலம் பண்ணுகிறதே!''

கௌரி பதில் சொல்லவில்லை. முகம் கடுகுபோல ஆகிவிட்டது. பூனை கிட்டப் போனாள் - தடவிக் கொடுப்பதற்காக. மீனி பழைய மீனியாகவே இல்லை. நல்ல பாம்புபோல் புதருக்குள் இருந்தபடியே சீறிற்று. ''மீனி! மீனி! நான் கௌரிதானே? ஒன்னோடெ சேத்திதானே? கோவிச்சுக்

கறயே? கொலைகாரன் சூரி இன்னு அடிச்சான்'' என்று அழுகையுடன் கெஞ்சினுள். மீனி புஸ் புஸ் என்று சீறியதுமல்லாமல் கௌரியின் கைகளைப் பிருண்டிவிட்டது. அவ்வளவு துன்பம் போலும் அதற்கு! கௌரிக்குப் பிருண்டினதுகூடப் பெரிதாகத் தோன்றவில்லை. தன்னையும் பார்த்து மீனி நடுங்கலாச்சே என்ற துக்கம். துக்கத்தால் அழுகை பலத்தது; தாரை தாரையாகக் கண்களில் நீர் வடிந்தது. கௌரி அழுவதைப் பார்த்த சூரிக்கு என்றும் அறியாதவாறு கண்ணீர் ததும்பிற்று. அண்ணனும் தங்கையும் ஒருவரைப் பார்த்து ஒருவர் தேம்பித் தேம்பி அழுதார்கள். அழுகை ஓய்ந்ததும் சூரி போய் மீனிக்கு வைத்தியம் செய்ய முயன்ருன். பிரயோஜனப்படவில்லை. பிறகு இருவரும் கைகோத்துக்கொண்டு உள்ளே போய்விட்டார்கள்.

இரவு வந்தது. கிழவி கௌரியைப் பார்த்து, ''எங்கே என் பிரதிவாதி - உன் மீனி?'' என்ருள். கௌரி கண்களில் வரும் ஜலத்தைக் கசக்கிக் கொண்டு, ''போ பாட்டி, உனக்கு வேறே வேலை இல்லையோ?'' என்ருள்.

அன்றிரவு பத்து மணிக்குமேல் மழை பிடித்துக்கொண்டது. ஒரே பாயில் படுத்துக்கொண் டிருந்த சூரியும் கௌரியும் மீனியை உத்தேசித்து மழையைத் திரும்பிப்போகும்படி பிரார்த்தித்துக்கொண் டிருந்தார்கள்.

மறுநாள் அதிகாலையில் கரிச்சான் குருவியும், சேவலும், பச்சைக் குழந்தைகளும் எழுந்திருக்கும் நேரத்தில் இருவரும் எழுந்திருந்து கொல்லைப்புதரில் போய்ப் பார்த்தார்கள். பூனை கண்ணில் படவில்லை. எங்கேனும் போயிருக்கும் என்று திருப்தி யடைந்தார்கள்.

அந்திப் பொழுது. பலமாய்க் காற்றுக் கிளம்பிவிட்டது. மரங்களெல்லாம் பேயாடின. தெருக்களில் தென்னை மட்டையும் உதிர்ந்த இலைகளும் விழுந்தன. இலைச் சருகுகள் சுழன்றன. வடகிழக்கிலிருந்து சமுத்திரமே புரண்டு வருவதுபோல் கருமேகக் கூட்டங்கள் வானில் வந்து நிரம்பின. ஓஹோ! மழைக் காலத் துவக்கம்!

பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிவந்த சூரிக்கு ஒரு குடைச்சல், சந்தேகம் - ஒருவேளை தாங்கள் காலை இருட்டில் பூனையைச் சரியாகத் தேடவில்லையோ என்று. அப்படி இருந்துவிட்டால் இரண்டாவது நாளும் மீனி மழையில் நனைந்துவிடுமே என்று நினைத்துக் கௌரியையும் அழைத்துக்கொண்டு கொல்லைப்புறம் போனுன்.

காலையில் பழைய பத்திரிகையோ இலைச் சருகோ என்று அலட்சியம் செய்தது இப்பொழுது மீனி என்று தெரிந்தது. குழந்தைகள் நெஞ்சம் இளகுநீராகிவிட்டது. பரபரப்பாக இருவரும் உள்ளே சென்று ஆளுக்கு ஒரு பிடி நெய்யுஞ் சாதமுமாய்க் கொண்டுவந்து மீனியின்முன் வைத்தார்கள். அது ஆவலின்றிக் கொஞ்சம் தின்றது. அன்ருவது மழையில் நனையாமல் உள்ளே இருக்கட்டும் என்று அவர்கள் மீனியைப் பிடிக்க முயன்றும் பயன்படவில்லை. வலி பொறுக்கமாட்டாமல் இருவர் கையிலும் கீறி ரத்தகாயம் அடித்துவிட்டது. கௌரி கண்கொட்டாமல் சூரியைப் பார்த்தாள். அவன் தலைகவிழ்ந்து கால் கட்டைவிரலால் மண்ணைத் தோண்டினுன். மழை வந்ததும் குழந்தைகள் உள்ளே போய்விட்டார்கள்.

அன்றுமுதல் எட்டுத் திக்கும் கரைந்து விடும்படியாக மழை பொழிந்தது. ஜலப் பிரளயம்; வெளியே தலை நீட்ட முடியாது. அப்படியும் குழந்தைகள் ஒவ்வொரு தினமும் புதரடியில் மீனிக்குக் கொண்டுபோய் ஏதேனும் ஆகாரம் வைப்பார்கள். மூன்ருவது நாள் போனபொழுது மீனி விறைத்துக் கிடந்தது. பாவம்! இரு குழந்தைகளும் அதைப் பார்த்து விம்மி விம்மி அழுதார்கள். அவர்களுக்குத் தேறுதல் சொன்ன கிழவியின் வார்த்தைகள் அவ்வளவும் புதுக்கோட்டை அம்மன் காசுகூடப் பெறவில்லை.

★

—ஜூலை, 1934.

ந. சிதம்பர சுப்ரமணியன்

# சசாங்கனின் ஆவி

குறுக்கும் நெடுக்குமாக நடந்துகொண்டிருந்த விஜயகீர்த்தியின் நடை, பொறுமை இழந்த அவன் மனத்தைக் காட்டிற்று. அரைமணி நேரத்திற்கு முன்பாகவே வந்திருக்க வேண்டிய சசாங்கன் இன்னும் வரவில்லை. ஏன் இன்னும் வரவில்லை?

ஒரு பக்கத்தில் இரண்டு ஆசனங்கள் போட்டிருந்தன. நடுவே உயரமான ஒரு பீடத்தில் சதுரங்கப் பலகையும் காய்களும் வைத்திருந்தன. பாத்திரத்திலுள்ள அகிற் கட்டைகளைக் கிளறிவிட்டு, வட்டமிடும் அகிற்புகையைப் போல வந்தாள் ஹேமாங்கனை. அரசனையும் தனித்து நிற்கும் சதுரங்கப் பலகையையும் பார்த்தாள். ''சசாங்கர் ஏன் இன்னும் வரவில்லை?'' என்று கேட்டாள்.

'இந்த நேரத்தில் இவர்கள் ஆட்டம் ஆரம்பித்திருப்பார்களே. சசாங்கன் இன்னும் வரவில்லையே?' என்றுதான் கேட்டாள். ஆனால், விஜயகீர்த்திக்கு அது மாறான எண்ணத்தை உண்டுபண்ணிற்று. 'என்னைப் போலவே, சசாங்கன் வரவை எதிர்பார்க்கும் ஜீவன் வேறொன்றும் இருக்கிறது. ஹேமாங்கனையும் அவனுக்காகத்தான் தவித்துக் கொண்டிருக்கிறாள்' என்று நினைத்தான்.

சில மாதங்களாகவே, சசாங்கனுக்கும் ஹேமாங்கனைக்கும் இடையே எழும் பேச்சு வார்த்தைகளிலிருந்தும் முகக்குறிகளிலிருந்தும் ஒருவிதச் சந்தேகம் அவனை அரித்துக்கொண்டிருந்தது. சசாங்கன் இருக்கும் பொழுது அவள் முகத்திலுள்ள ஒளி அவன் போனவுடன் போய்விடுவது போல அவனுக்குத் தோன்றிற்று. புவனத்தையெல்லாம் வென்ற தான் இந்தக் கணிகையின் மனத்தை மாத்திரம் ஜயிக்க முடியவில்லையே என்ற ஐயுறவு மனத்தில் புரையோடிக்கொண்டிருந்தது. அந்த எண்ணம் அமைதியடைய முடியாத ஒரு துன்பத்தைக் கொடுத்துக்கொண்டிருந்தது.

விஜயகீர்த்தி நினைத்ததைச் செய்தே தீருவான். அதில் வெற்றியும் பெறுவான். அவன் வெற்றி பெறாத காரியமே இல்லை; சசாங்கனிடம் தோல்வியுறுவதைத் தவிர. ஆகவே செல்வத்தையும் அன்பையும் வைத்துப் பூசிக்கும் பெண் தெய்வத்தின் அன்பை மாத்திரம் பெற முடியவில்லையே என்ற எண்ணம் அவனுக்குக் கசப்பாக இருந்தது.

ரூபம், யௌவனம், செல்வம், கீர்த்தி, அதிகாரம் - எல்லாம் நிறைந்த தன்னைவிடச் சசாங்கனிடம் அவள் மனத்தைக் கவரும் பொருள் என்ன இருக்க முடியும்? சசாங்கன் கவி, காயகன், வேதாந்தி, சுந்தரமானவன். தன்னைத் திரஸ்கரித்து அவனை அவள் நேசிக்கிறாளோ என்ற சந்தேகம், இயற்கையிலே அகம்பாவம் கொண்ட விஜயகீர்த்திக்குப் புல்லுருவி போல் படர்ந்திருந்தது.

கோபத்தைக் காட்டும் முகத்துடன், ஹேமாங்கனையின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் நந்தவனத்தை நோக்கி யிருக்கும் சாளரத்தருகே போய் நின்றான். ஹேமா நந்தவனத்துக்குள் போய்விட்டாள்.

பூக் கொய்துகொண்டிருந்த ஹேமாங்கனையின் காதில் பாட்டை முனகிக்கொண்டே வரும் சசாங்கனது குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தாள். இறைவனது பெருமையைச் சொல்லும் கவியை வாய்க்குள்ளே சொல்லிக்கொண்டு அசைந்து அசைந்து வந்தான் சசாங்கன். கை நிரம்பப் புஷ்பங்களை வைத்துக்கொண்டு பூத்து நிற்கும் மலர்க் கொடியைப்போல் நின்றாள் ஹேமாங்கனை.

''ஹேமா, எனக்கு இரண்டு மலர்கள் தரலாமோ?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டான் சசாங்கன்.

''எந்த மலர்கள் வேண்டும்?'' என்று கைகளை நீட்டினாள்.

''எது கை, எது மலர் என்பது தெரியவில்லையே?''

''கவிஞனுக்கும் கண் தெரியாது போல் இருக்கிறது.''

''கடவுளுக்கும் யோசனை இல்லை.''

''ஏன்?''

''கண்ணையும் படைத்துப் பெண்ணையும் படைத்திருக்கிறானே.''

''சரி, சரி; நீங்கள் பேசிக்கொண்டே இருப்பீர்கள். அரசர் ஒரு நாழிகையாக உங்களுக்காகக் காத்துக்கொண் டிருக்கிறார்.''

''நான் செய்திருக்கும் காவியத்தைச் சரிபார்த்துக்கொண் டிருந்தேன். நேரமாகிவிட்டது.''

''மன்னர் தங்கள் வருகைக்குத் தவித்துக்கொண் டிருக்கிறாரே.''

''என்ன சதுரங்கம்! வாழ்க்கை நியதியே சதுரங்க ஆட்டம் போலத்தான் இருக்கிறது. ஒரு கவி கூறியிருக்கிறான்—

எல்லாம் இங்கோர் சூதாட்டம்
இரவும் பகலும் மாறுட்டம்
வல்லான் விதியே ஆடுமகன்
வலியில் மனிதர் கருவிகளாம்
சொல்லா தெங்கும் இழுத்திடுவான்
ஜோடி சேர்ப்பான் வெட்டிடுவான்
செல்லா தாக்கி ஒவ்வொன்றாய்த்
திரும்ப அறையில் இட்டிடுவான்.

எனக்கு வாழ்க்கையும் அலுத்துவிட்டது. சதுரங்கமும் அலுத்துவிட்டது. வல்லான் விதி என்னை என்று வெட்டி அறையில் போடுவானோ?''

''என்ன, என்றுமில்லாமல் உங்களுக்கு இவ்வளவு விரக்தி! அதற்குக் காரணம், வாழ்க்கை அல்ல; தினசரி நீங்கள் ஜயித்துக்கொண்டே வருவதுதான். இன்று நீங்கள் ஜயிக்கப் போவதில்லை.''

''அதென்ன, உனக்கு அந்த எண்ணம் வந்தது? வாழ்க்கையில் ஜயம் ஏற்படாவிட்டாலும் ஆட்டத்தில் எனக்கு ஜயம் நிச்சயம். சந்தேகப்படாதே.''

''இன்று நீங்கள் ஜயிக்கப் போவதில்லை. எனக்குத் தோன்றுகிறது.''

''இன்றும் நான்தான் ஜயிப்பேன்.'' ஹேமா சந்தேகத்துடன் தலையை ஆட்டினுள்.

''பந்தயம் வைக்கவேண்டும்-என்கிருயா? நான் ஜயிக்காவிட்டால் இந்த முத்துமாலை உன்னுடையது'' என்று கழற்றிக் கொடுத்துக் கொண்டே, ''ஜயித்தால்?'' என்று கேட்டான்.

''இந்த மலர்கள்'' என்று கையிலுள்ள மலர்களை அவனிடம் கொடுத்தாள் ஹேமாங்கனை. சசாங்கன் நேரே அரசனிடம் வந்துவிட்டான். ஹேமாவும் திரும்பிவிட்டாள்.

சாளரத்தினருகே நின்றுகொண்டு மயில்கள் நடந்து போவதையும், தடாகத்தில் அன்னங்கள் ஜோடிகளாக நீந்துவதையும் பார்த்துக் கொண்டிருந்த மன்னனுக்கு இவர்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்தது தட்டுப்படாமல் இல்லை. அவர்கள் பேசுவதைக் கவனித்துக்கொண்டிருந்தான். தான் இங்கே ஒவ்வொரு கணமும் அவன் வருகையை எதிர்பார்த்து நிற்க, சசாங்கன் அவகாசமாக ஹேமாங்கனையுடன் சிரிப்பும் கேலியுமாக விளையாடிக்கொண் டிருக்கிருன். 'பேஷ், இவ்வளவு தூரம் வந்து விட்டதா?' என்று உள்ளூறக் கடிந்துகொண் டிருந்த போது, சசாங்கன் மாலையைக் கழற்றி அவளிடம் கொடுத்துக்கொண் டிருந்தான். அவள் மலர்களை அவனிடம் கொடுத்துக்கொண் டிருந்தாள். ஒரு நிமிஷம் அரசன் மனம் ஸ்தம்பித்து நின்றது. மதியிழந்து மயங்கி நின்ருன்.

மனத்தில் பயங்கரமான எண்ணம் புயலடித்துக் கிளம்பிக்கொண் டிருந்தது.

சசாங்கன் அரசன் முன் நின்ருன். அவன் வந்ததைக் கவனிக்காதவன்போல் இருந்தான் விஜயகீர்த்தி. ''இன்று மிகவும் நேரமாகி விட்டது'' என்று ஆரம்பித்தான் சசாங்கன் அரசன் அதைக் காதில் வாங்கிக்கொள்ளவில்லை.

அரசன் சுமுகமாக இல்லை என்று மாத்திரம் எண்ணிய சசாங்கன், ஆசனங்கள் போட்டிருந்த பக்கம் சென்று காய்களை வரிசையாக வைத்துவிட்டு, ''நான் இன்று ஓர் ஆட்டங்கூட உங்களை ஜயிக்க விடப் போவதில்லை'' என்ருன்.

வழக்கமாக இவர்கள் ஆட்டம் ஆரம்பிக்கும் பொழுதெல்லாம், ''நான் ஓர் ஆட்டம் ஜயிப்பேன்'' என்று சொல்லிக்கொண்டு அரசன் ஆரம்பிப்பது வழக்கம். தினசரி மூன்று ஆட்டம் ஆடுவார்கள். அதில் ஒன்றை ஜயிப்பதாக அரசன் வீறுப்புப் பேசுவது வழக்கம். ஆனுல், அந்த ஓர் ஆட்டத்தை ஜயிப்பதுகூட ஏக தேசத்தில், அத்தி பூத்தாற்போல் இருக்கும். தினசரி அதைச் சொல்லாமல் மாத்திரம் அரசன் விளையாட ஆரம்பிப்பதில்லை. தான் தாமதித்து வந்ததால் தன்னிடம் முகங்கொடுத்துப் பேசாமல் இருக்கிருன் என்று எண்ணிய சசாங்கன், அரசனை வம்புக்கு இழுத்து ஆட்டத்தில் உற்சாகம் உண்டுபண்ண வேண்டுமென்று நினைத்து, ''உங்களை ஓர் ஆட்டங்கூட ஜயிக்க விடப்போவதில்லை'' என்று ஆரம்பித்தான்.

அரசனுக்கு இந்த வார்த்தை உற்சாகத்தை உண்டுபண்ணவில்லை; எரிகிற கொள்ளியில் எண்ணெய் வார்த்தாற்போல் இருந்தது. சசாங்கனிடம் அவன் எவ்வளவோ வாஞ்சையும் நட்பும் கொண்டிருந்தாலும், சசாங்கன் ஆட்டங்களை அடிக்கடி ஜயிப்பதிலிருந்து அந்தரங்கமான அசூயையும் இருந்துகொண் டிருந்தது. யானைகளையும் குதிரைகளையும் கோட்டைகளையும் கொண்ட அநேக நிஜமான அரசுகளை யுத்தத்தில் அலட்சியமாக வென்ற தன்னை இந்தச் சசாங்கன் எதிர்பாராதபடி திடீர் திடீரென்று வெகு அலட்சியமாகவும் லாகவமாகவும் தோற்கடிக்கும் மாயத்தைக் கண்டு ஒரு பக்கம் அவனிடம் அளவிறந்த பிரமையும் மதிப்

பும் கொண்டிருந்தாலும் தினசரி தன்னைத் தோற்கடித்துக்கொண்டே வரும் அந்தக் கவிஞனிடம் பொறாமையும் கனிந்துகொண்டே இருந்தது. ஆகவே சசாங்கனுடைய அந்த வார்த்தைகளைக் கேட்ட அரசன் மனம் சிறிது நேரத்தில் வெடிப்பதற்குத் தயாராக இருக்கும் எரிமலையை ஒத்திருந்தது.

அப்பொழுதும் அரசன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. பேசாமல் வந்து உட்கார்ந்தான். அவன் காய்களைப் பார்த்த பார்வை, 'இன்று இவனை ஜயிப்பேன்; அல்லது இவன் உயிரையே வாங்குவேன்' என்று சொல்வதுபோல் இருந்தது.

ஆட்டம் ஆரம்பமாயிற்று. அணிவகுத்து நிற்கும் படைகள் ஒவ்வொன்றாய்க் கிளம்பின. சசாங்கன் இயற்கையாகவே சதுரங்க விளையாட்டில் நிபுணன். கல்மஷமின்றி நிதானமாக விளையாடினான். அரசனோ சசாங்கனைவிடக் கீழ்த்தரமான விளையாட்டுக்காரன். தவிர மனத்தில் ஆத்திரமும் கோபமும் அசூயையும் பொங்கிக்கொண்டு நின்றன. அரசன் விளையாட்டெல்லாம் தப்பும் தவறுமாய் இருந்தது. சசாங்கன் இதைக் கவனித்தான். இரண்டொரு தரம் அரசனுடைய பிழைகளைச் சுட்டிக் காட்டி, 'இப்படி ஆடினால் இது நேருமே' என்று ஜாக்கிரதைப்படுத்தினான். அரசனோ, 'இவன் சொல்லி நாம் கேட்பதாவது!' என்ற மனப்பான்மையோடு, "சும்மா இருக்கட்டும். வேண்டுமென்று யோசித்தே அங்கு வைத்திருக்கிறேன்" என்று பிடிவாதத்துடன் அதையே விளையாடுவான். அதன் பலன் முதல் ஆட்டம் அரசனுக்குத் தோல்வி.

இரண்டாவது ஆட்டம் ஆரம்பமாயிற்று. முதல் ஆட்டத்தில் விளையாடியதுபோல் அரசன் ஆத்திரத்தைக் காய்களிலும் விளையாட்டிலும் காட்டவில்லை. நிதானமாக விளையாடினான். ஜாக்கிரதையாகவும் புத்திசாலித்தனமாகவும் விளையாடியபோதிலும் வழக்கம்போல் சசாங்கன் வெற்றி பெற்றான்.

இரண்டாவது ஆட்டம் ஆரம்பித்தவுடன் ஹேமாங்கனை வந்து வழக்கமான இடத்தில் உட்கார்ந்துகொண்டாள். அவளுக்கும் சதுரங்கம் ஆடத் தெரியும். இரண்டாவது ஆட்டம் முடிந்தவுடன் எழுந்திருந்து போய் அரசனுக்குத் தாகத்திற்குக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு உட்கார்ந்துகொண்டாள்.

மூன்றாவது ஆட்டம் ஆரம்பமாயிற்று. அது ஆரம்பமானவுடன் ஹேமாவும் சசாங்கனும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர். அரசன் காய்களிலிருந்து கண்களை எடுக்கவில்லை. கடுகடுப்பான அவள் முகம் ஒரு தீர்மானத்தைக் காட்டிற்று.

காய்கள் நகர்ந்தன. யானையும் குதிரையும் ஒன்றை ஒன்று பொருது நின்றன. சிப்பாய்கள் ஒருவரை ஒருவர் பார்த்து உறுமிக்கொண்டிருந்தனர். இரண்டு அரசுகளும் பத்திரமாகக் கோட்டைக்குள் பதுங்கிக்கொண்டன. ஆட்டம் மும்முரமாக வந்துகொண்டிருந்தது. அரசன் ரதங்களைக் கொண்டு சசாங்கனின் யானைகளை விரட்டுவான். கவிஞன் தன் யானையினால் அரசனின் மந்திரியைத் தாக்கப் பார்ப்பான். இதுவரையில் ஆடாத முறையில், வெகு சாதுரியமாக ஆடி வந்தான் அரசன். அவன் ஆட்டம் சசாங்கனுக்குப் பிரமிப்பை உண்டுபண்ணக் கூடியதாக இருந்தது. ஒருகால் அரசனே ஜயித்துவிடுவானோ என்று ஹேமாங்கனை எண்ணினாள்.

கொஞ்சம் விறுவிறுப்பு உண்டாக்கிக்கொள்வதற்காகத் தாம்பூலத்தைத் தேடினான் சசாங்கன். அரசனுக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுப்பதற்காகத் தாம்பாளத்தில் கையை வைத்துப் பாக்கை எடுத்துக்கொண்டிருந்தாள் ஹேமாங்கனை.

காய்களைப் பார்த்தபடியே சசாங்கன் பாக்கை எடுத்துக்கொள்வதற்காகக் கையைத் தாம்பாளத்தில் வைத்தான். சசாங்கன் கை ஹேமாவின் கையின்மேல் தங்கி நின்றது. பேசாமல் இதுவரையில் ஆடி வந்த அரசன் ஜயித்துவிட்டோமென்ற உற்சாகத்தில், 'மந்திரி தொலைந்தான்' என்று சொல்லிக்கொண்டே கவிஞனுடைய மந்திரிக்கு முன்னால் தன் யானையை வைத்தான். இவ்வளவு நெருங்கிய ஆபத்தைக் கவனிக்காமல் ஆடிவிட்டோமே என்ற யோசனையில் பாக்கைக்கூட எடுத்துக்கொள்ளாமல் விழிகள் இரண்டும் விழுந்துவிடுவனபோலத் தன் மந்திரியையும் அரசன் யானையையும் கவனித்துக்கொண் டிருந்தான் சசாங்கன். எதிர்பாராத இந்த நெருக்கடியில் தன்னையும் மறந்து சிலைபோல ஆட்டத்தைக் கவனித்துக்கொண்டிருந்தாள் ஹேமா. தனக்கு இனி ஜயந்தான் என்ற நிச்சயத்துடன் அரசன் பலகையிலிருந்த கண்களை எடுத்து நிமிர்ந்து பார்த்தான். சசாங்கன் ஹேமாங்கனை இவர்களின் விழிகள் காய்களை நோக்கியிருந்தன.

கைகள் தாம்பாளத்தில் இருந்தன. உணர்வின்றிக் காய்களைக் கவனித்திருந்தார்கள். அரசன் தம்மைக் கவனிப்பதையும் அவன் மனத்தில் பயங்கரமான எரிமலை புகைய ஆரம்பிப்பதையும் பாவம், அவர்கள் அறியார்கள்! அதே நேரத்தில், மந்திரியின் உயிருக்காகத் தவித்துக் கொண்டிருந்த சசாங்கனுக்கு மின்னல் போன்ற ஒரு கற்பனை தோன்றிற்று. வெகு உற்சாகத்துடன், ''என் மந்திரியா தொலையும்? உங்கள் ஆட்டந்தான் தொலைந்தது. இதோ அரசு!'' என்று தன் மந்திரியைக் குறுக்கே இழுத்து யானையிடமிருந்து தப்பும்படியாகவும், அதே சமயத்தில் எதிரி அரசனைத் தாக்கும்படியாகவும் உள்ள ஓர் இடத்தில் வைத்தான். அவ்வளவுதான்; அந்த அரசுக்குப் பதில் இல்லை. அரசனின் 'அரசன்' கட்டுப்பட்டுவிட்டான்.

''ராஜா கட்டுப்பட்டுவிட்டதே'' என்று குதூகலத்தைக் காட்டும் தொனியில் கத்தினாள் ஹேமாங்கனை. ''ஆட்டம் போச்சு'' என்று கையைத் தூக்கி ஒரு சொடுக்குச் சொடுக்கிவிட்டு ஹேமாங்கனையைத் திரும்பிப் பார்த்தான் சசாங்கன்.

அந்தச் சந்தோஷம் நீடித்திருக்கவில்லை. அந்த நிமிஷமே மன்னனின் வாள் சசாங்கனின் மார்பில் பதிந்து போயிருந்தது.

எதிர்பார்க்க முடியாத இதைக் கண்டு ஹேமாங்கனை அப்படியே மூர்ச்சித்து விழுந்தாள். பிரக்ஞை வந்து அவள் கண்ணைத் திறந்தபோது, அவள் அந்தக்கரணத்தையே ஊடுருவிப் பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டிருந்தான் மன்னன்.

''எவ்வளவு நாளாகச் சசாங்கனுடன் இவ்வளவு நெருங்கிய பழக்கம்?'' என்றான். ஒன்றும் புரியாமல் மிரள மிரள விழித்தாள் ஹேமா. ''நந்தவனத்தில் மாலைகள் மாற்றிக்கொண்டதைப் பார்த்துக்கொண்டுதான் இருந்தேன். ஒளிக்காமல் உண்மையைச் சொல்'' என்று உறுமினான். ஹேமாங்கனைக்கு ஓரளவு அப்பொழுதுதான் விஷயம் விளங்க ஆரம்பித்தது.

''ஐயோ, ஒன்றுமே இல்லையே! சதுரங்க ஆட்டத்தை அவர் ஜயிக்க மாட்டார் என்றேன்; நான் ஜயிப்பேன் என்றார். மாலையைப் பந்தயமாக வைத்தார். வேறு ஒன்றும் இல்லையே?''

''ஓகோ! என்னை ஜயிப்பதாகப் பந்தயம் வேறு வைத்தானோ? இனி யாரை ஜயிக்கிறான், பார்ப்போம்! ஹேமா, எனக்கு இப்பொழுதுதான் எல்லாம் தெரிகிறது. சசாங்கனை இன்னும் லேசில் விடப் போவதில்லை. உன்னையும் சும்மா விடப் போவதில்லை. இன்னும் இருக்கிறது!'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

சில தினங்கள் சென்றன. விஜயகீர்த்தி சதுரங்கப் பலகையில் காய்களை வரிசையாக வைத்துக்கொண்டிருந்தான். அன்றைய விளையாட்டிற்குப் பிறகு இப்பொழுதுதான் அவன் ஆட உட்கார்ந்தது. பக்கத்து அறையில் நாளுக்கு நாள் பலவீனமடைந்து வரும் ஹேமாங்கனை படுத்துக்கொண்டிருந்தாள். அவள் மனம் இருண்டிருந்தது, சந்திரன் இல்லாத இரவைப்போல.

''ஹேமா, இங்கே வா; வந்து இதைப் பார்'' என்றான். அவள் மெதுவாக நடந்து வந்தாள்.

''இவை என்ன தெரியுமா? சசாங்கன் முதுகெலும்பினால் செய்த காய்கள்'' என்று வரிசையாக நிற்கும் காய்களைச் சுட்டிக் காட்டினான்.

அவள் அப்படியே அதிர்ந்து போனாள். பயங்கரமான அந்தக் காய்களையும், அவற்றைவிடப் பயங்கரமான அரசன் மனத்தையும் கண்டு திகைத்துத் திடுக்கிட்டாள்.

''சசாங்கனுடன் வேண்டிய மட்டும் ஆடியாகி 'விட்டது. அவன் ஆவியுடன் இனி ஆடப் போகிறேன்'' என்றான் அரசன். அவள் ஒன்றும் புரியாமல் தலை குனிந்துகொண்டிருந்தாள்.

''எப்படி என்று கேட்கிறாயா? கிட்டே வா. அதற்காகத்தானே உன்னைக் கூப்பிட்டேன்'' என்றான். அவள் உணர்ச்சியற்று வறண்ட மேகம் போல் இருந்தாள். அவனோ தகிக்கும் பாலைவனத்தைப் போல இருந்தான்.

''சசாங்கன் ஆட்டங்களை ஜயிப்பதில் உனக்குச் சந்தோஷமாகத்தான் இருந்தது. இப்பொழுது அவன் ஆவி ஜயிப்பதிலும் உனக்குச் சந்தோஷமாகத்தான் இருக்கும்'' என்று சொன்ன அவன் குரலின் வறட்சியும் உள்ளத்தின் ஈரமற்ற தன்மையும் ஹேமாங்கனைக்குப் பொசுக்கி எடுக்கும் வேதனையை உண்டுபண்ணின.

''இங்கே வந்து உட்கார்'' என்றான். அவன் குரலின் ஸ்தாயி ஏறிற்று. ''என் ஆட்டத்தை நான் ஆடப்போகிறேன். சசாங்கன் ஆட்டத்தை நீ ஆடு'' என்று சொல்லிக்கொண்டு உயிரை வாங்கக்கூடிய ஒரு புன்முறுவல் செய்தான். ஒவ்வொரு வார்த்தையும் அவள் உள்ளத்தைக் குத்திக்கொண்டிருந்தது. அவளுக்கு வருத்தமும் பயமும் பொறுக்க முடியவில்லை. இருந்தாலும், தப்ப முயல ஓடும் மிருகத்தைப் போல, ''முடியவே முடியாது. அந்தக் காய்களைத் தொடவே மாட்டேன்'' என்று நகர்ந்தாள்.

''மாட்டேன் என்றா சொல்லுகிறாய்? என்ன நேரும், தெரியுமா?''

''என்ன ஆகும்? இன்னொரு வரிசைக்கும் காய்கள் கிடைக்கும்'' என்று லட்சியமின்றிப் பதிலளித்தாள். அவள் மனம் மாறிவிட்டது. மகத்தான துணிவு உண்டாயிற்று. அவள் முகம் மிகுந்த அருவருப்பைக் காட்டிற்று. எதையும் செய்வதற்கு வேண்டிய நெஞ்சழுத்தமும் மனவலியும் உண்டாகி வந்தன. பழி வாங்க விரும்பும் ஜந்துவைப்போல் இருந்தாள்.

''எனக்கு இன்னொரு வரிசைக்குக் காய்கள் தேவைதான். அதற்காகத்தான் உன்னை ஆடச்சொல்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டே அவளைக் கரகரவென்று இழுத்து அவள் கையை அந்தக் காய்களின்மேல் வைத்தான்.

காய்கள் கையில் பட்டவுடன் ஒரு விநாடி அவள் உடம்பு முழுவதும் கூசி நடுங்கிற்று. மறுவிநாடி பாம்புபோல் சீறி விழுந்தாள். பேய் பிடித்தது போலத் தோன்றியது அவள் முகம். அவள் தோற்றத்தையும் முகத்தையும் கண்டு கலங்காத நெஞ்சத்தவனான அரசனும் சிறிது உள்ளூற நடுக்கம் கொண்டான். அந்தக் காயில்தான் ஏதாவது சக்தி இருந்திருக்குமோ?

அமானுஷ்ய சக்தியை அடைந்தவள்போலத் தோன்றும் அவளைப் பார்த்துப் பார்த்து ஒன்றும் தோன்றாமல் திகைத்தான் அரசன்.

''இந்த ஆட்டத்தை நான்தான் ஜயிக்கப்போகிறேன். இதுவும் உயிரை வாங்கும் ஆட்டமாகத்தானே போகிறது!'' என்று காயை அவள் நகர்த்தினாள். என்ன அப்படி ஆவேசம் திடீரென்று அவளுக்கு வந்துவிட்டது?

யோசனை செய்ய முடியாத நிலையில் இருந்த அரசன் வேறு வழியின்றித் தன் காயை நகர்த்தினான். வெறிகொண்டவளைப்போல் தோன்றினாள் ஹேமா. ''நீங்கள் சொல்வது ரொம்ப சரி. நீங்கள் என்னுடன் ஆடவில்லை. இந்த ஒவ்வொரு காயிலும் சசாங்கரின் ஆவி துடித்துக்கொண்டிருக்கிறது. சசாங்கரே ஆடுகிறார்'' என்று காயை நகர்த்தினாள்.

அவன் பார்த்தான். ஆம்; உண்மையிலேயே காய் ஒவ்வொன்றும் உயிர்கொண்டு நகருவதற்குத் தவித்துக்கொண்டிருப்பதாகத் தோன்றியது. ஹேமாவின் கையைக் காய்கள் இழுத்துக்கொண்டு போவது போன்ற ஒரு பாவனை அவனுக்கு உண்டாயிற்று.

அவள் ஆடினாள். அவனும் ஆடினான். ஆட்டம் விறுவிறுப்பாக விரிந்து வந்தது. ஹேமாவின் படைகள் அணிவகுத்து நிற்பதும் பலங்கள் ஒன்றுக்கு ஒன்று துணையாக வியூகத்தில் நிற்பதும் காட்சிக்கு வெகு அழகான தோரணையில் இருந்தது. சசாங்கன் விளையாட்டைப் போலவே இருந்தது. 'அவன் விளையாட்டைப் பார்த்துப் பார்த்து அந்த வழிகள் அப்படியே இவளுக்குப் பாடமாகிவிட்டனவா, அல்லது வேறு என்ன காரணமாக இருக்க முடியும். இந்த ஆராய்ச்சியில் ஈடுபடுவதற்கு அவனுக்கு நேரம் ஏது?

ஹேமாவின் படைகள் தாக்க ஆரம்பித்து விட்டன. அதிகமாக விளையாடாமல் ஆட்டங்களைப் பார்த்துக்கொண்டே வந்திருந்த அவள் இப்போது ஆடிவரும் இந்த விசித்திர விளையாட்டால் அவனுக்கு ஒரு பக்கம் பயமும் உண்டாயிற்று. அவளுடைய சாதாரணமான விளையாட்டாக இருக்க முடியாது என்ற எண்ணம் உள்ளூற அவன் மனத்தில் திகிலை உண்டுபண்ணிக்கொண்டேயிருந்தது. அவள் பேச்சும் தோற்றமும் அந்த எண்ணத்தை ஊர்ஜிதப் படுத்துவதற்கு ஏதுவாகவே இருந்தன.

''இது என் விளையாட்டு அல்ல. சசாங்கர் ஒரு கவிதை சொன்னார். அதைப்போல, என் மூலமாகச் சசாங்கரின் ஆவியே ஆடுகிறது'' என்று பேசாமல் விளையாடும் அரசனிடம் சம்பந்தமில்லாமல் சொன்னாள்.

மனம் குழம்பியிருந்த அரசன் மனத்தில் ஒரு பிராந்தி ஏற்பட்டது. ஒரு காயை நகர்த்தி வைத்துவிட்டு நிமிர்ந்து பார்த்தான். என்ன ஆச்சரியம்! சசாங்கன் அல்லவா ஆடிக்கொண்டிருக்கிறான்?

''உங்கள் குதிரை போச்சு'' என்றாள் ஹேமா. அப்பொழுதுதான் அவனுக்குச் சுய அறிவு வந்தது. ஆம், எதிரே சசாங்கன் ஆடவில்லை; ஹேமாதான் ஆடுகிறாள். வெகு நாள் அவனுடனேயே ஆடிய பழக்கத்தை ஒட்டி அந்தப் பிரமை உண்டாயிற்றுப் போலும் என்று சமாதானம் செய்துகொண்டான். ஆனால் அது ஒரு நொண்டிச் சமாதானமாகத்தான் அவனுக்குத் தோன்றிற்று. 'சை! ஏன் என் மனம் அதைரியப்படுகிறது?' என்று நெஞ்சைத் தைரியப்படுத்திக்கொண்டு தாகத்திற்குச் சாப்பிட்டுவிட்டுத் தாம்பூலம் தரித்துக்கொண்டான்.

ஹேமாவோ, நிமிஷங்கூட வீணாக்க விரும்பாதவளைப்போல அவசரப்பட்டுக்கொண்டிருந்தாள். அவள் காய்களோ அடுத்தபடி நகருவதற்குப் பறந்துகொண்டிருந்தன. அரசன் பலங்களோ சிதறிக் கிடந்தன. அவள் பலங்களோ அட்டகாசமாக முன்னேறியிருக்கின்றன.

''மகாராஜா, நான் ஆடமாட்டேன் என்றேன். என்னைப் பலவந்தமாக ஆடச் சொன்னீர்கள். இப்பொழுது இந்த ஆட்டத்தில் ஒரு பேயின் உற்சாகம் எனக்கு வந்துவிட்டது'' என்று சொல்லும் ஹேமா உண்மையில் ஒரு பேயைப் போலவே தோன்றினுள். ஸப்தநாடியும் ஒடுங்கிய பிராணியைப் போல ஆடினுன் அரசன். பயத்தையே அறியாத அவன் மனத்தில் எப்படியோ திகில் புகுந்துகொண்டு பாடுபடுத்த ஆரம்பித்து விட்டது. தடுமாறி நின்ருன் முன்னேற்பாடாகச் செய்துவைத்திருந்த எதிரிகளின் வலையில் சிக்கிக்கொண்டது போன்ற அச்சம் அவனுக்கு உண்டாயிற்று.

அவன் ஆட்டம் வரவர மோசமாகிக்கொண்டே வந்தது; மரணத் தறுவாயில் இருக்கும் ஜீவனைப்போல அவனுடைய பயமும் அதிகரித்து வந்தது. இறக்கப் போகிறவனின் துக்கத்தைப் போன்ற உணர்ச்சி இருந்தது.

''எனக்குத்தான் வெற்றி'' என்று சிரித்தாள் ஹேமா, ஒரு காயை நகர்த்திவிட்டு.

''இது என்ன, சசாங்கன் இப்படிச் சிரிக்கிருன்!'' என்று திகைத்தான் அரசன். மறு விநாடி, ஹேமாங்கனை அல்லவா விளையாடுகிருள்?

'அவள்தானே சிரிக்கிருள்?' என்று தெளிவு படுத்திக்கொண்டான். வர வர அந்த விளையாட்டும் சுற்றுணர்ச்சியும் வாழ்க்கைக்குப் புறம்பான அந்நிய உலகத்தின் ஆவியைக் கொண்டிருப்பதுபோல் தோன்றின. அவன் மனம் பிருடை தவிர்ந்த வாத்தியத்தைப் போல, சுருதி கலைந்து இருந்தது. யோசனையின்றிக் காய்களை நகர்த்தி வந்தான்.

ரதத்தை 'அரசன்' முன் கொண்டு வந்து நிறுத்தி 'அரசு' என்ருள் ஹேமா. விதியிடமிருந்து தப்ப முயலும் மனிதனைப் போலத் தன் காயைக் காப்பாற்ற முயன்ருன் அரசன். வேறு இடத்தில் 'அரசனை' நகர்த்தி வைத்தான். யானையை அரசனுக்கு முன் நிறுத்தி 'அரசு' என்ருள் ஹேமா. அவ்வளவுதான்: அந்த 'அரசு'க்குத் தப்ப வழி இல்லை. அரசனின் ரத்தம் கொதித்துக்கொண்டு கிளம்பியது. அவமானம் ஆத்திரம் பயம் எல்லாம் சேர்ந்து அவனுடைய ஒவ்வொரு நரம்பையும் சுண்டிச் சுண்டி இழுத்தன.

''சசாங்கரின் ஆவி வெற்றி பெற்றுவிட்டது. இனி நீங்கள் தோற்பதைவிடப் பிராணனை விடலாம்!'' என்று சொல்லிக்கொண்டே அந்தக் காய்களை அரசன் முகத்தில் எறிந்துவிட்டு ஹேமாங்கனை எழுந்திருந்தாள். அரசன் தலை 'கிறு கிறு'வென்று சுழன்றது. அந்தக் காய்கள் அவன் மேல் பட்டவுடன் ஆயிரம் பேர்கள் ஈட்டியால் அவனைக் குத்துவது போல இருந்தது.''ஐயோ'' என்று சொல்லிக்கொண்டு கீழே விழுந்தான். வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் இரத்தம் பீரிட்டுக்கொண்டு வந்தது.

அரசன் ஆட்டம் முடிந்தது. விதியின் ஆட்டமும் முடிந்தது.

—ஜனவரி, 1943.

தி. ஜ. ர.

# மரத்தடிக் கடவுள்

வா மகனே, இப்படி வா! அடடா! இந்த மழையிலே இப்படித் தவிக்கிருயே! பாவம்! ஆமாம், இதுதான் என்ன உக்கிரமான மழை! நகரத்தை நரகமாக்கும் மழை அல்லவா இது? ஜலதாரையை ஒளித்து நவநாகரிக நகரத்தை நிர்மாணிக்கிருன் மனிதன். மனிதன் ஒளித்ததை இந்த மழை அம்பலமாக்கிவிடுகிறதே! அடேயப்பா! இந்த மழையின் சரவீச்சிலே வேதனை தாளாத மண்ணுந்தை மாதிரி கட்டிடங்களெல்லாந்தான் எப்படி நெளிகின்றன! 'வெல்வெட்டு ஆடை போர்த்த முதலேகள் மனித குலத்திலேதான் உண்டு என்று நினையாதே; இதோ என்னைப் பார்' என்பதுபோல, ரஸ்தாக்களெல்லாம் தார் உரிந்து கரடு முரடான கப்பிக் கற்களைக் காட்டி நிற்கின்றன. மதுவுண்டு வெறி கொண்டு அடியற்று விழப்போகும் வீரர்கள் ரணகணத்திலே ஆடுவது போல் ஆடுகின்றன இந்த மரங்களெல்லாம். வானும் மண்ணும் பொரும் போரோ இது? அல்லது பிரளயந்தானே? - இப்படி யெல்லாம் நீ அஞ்சுகிருய் அல்லவா? அல்ல மகனே, அல்ல; இதுதான் தேவர்கள் உலா வரும் நேரம்; விளையாடும் நேரம்; பேசும் நேரம். அதனுல்தான் நான் உன்னேடு பேசுகிறேன். ஆம், நான் ஒரு தெய்வந்தான். தெய்வந்தான் உன்னேடு பேசுகிறேன். ஆனுல் உலா வந்த தெய்வம் அல்ல; சிறைப்பட்ட தெய்வம்.

எங்கே பார்க்கிருய்? இடிபடும் மேக மின்னலின் நடுவே இருக்கிறேன் என்ரு? மரத்தினூடே ஏன் பார்க்கிருய்? உச்சாணிக் கிளையிலே உட்கார்ந்திருக்கும் குரங்கல்ல நான். கிளைக் குரங்கு என்னைவிடப் பாக்கியசாலியாயிற்றே! குரங்காட்டியின் குரங்கைப்போல்தான் இன்று என்னையும் மனிதன் ஆட்டிவைக்கிருன். நான் தெய்வம். கடவுள், அப்பா, கடவுள்! ஹஹ்ஹா!

இன்னும் என்னை நீ கண்டுபிடிக்கவில்லையா? அடேடே! ஏன் ஓடப் பார்க்கிருய்? பயமா? என்ன பயம் வந்தது என்னிடம்? உடல் நனையக் கால் வலிக்க மனம் பதைக்க மூச்சு வாங்க ஓடாதே. இங்கே இந்த மரத்தடியிலே தங்கு; இதோ பார்: ஒரு சிறு மாடம் மாதிரி கட்டிய பொம்மை வீட்டில், சந்தனப் பொட்டிட்டு மஞ்சளும் குங்குமமும் பூசிச் செங்கல் உருவமாய் அமர்ந்திருக்கிறதே, அந்தக் கடவுள் நான்தான். ஏன் ஆச்சரியப்படுகிருய்? கிராமபோன் கத்தினுல் நீ ஆச்சரியப்படவில்லை; ரேடியோ குழறினுல் ஆச்சரியப்படவில்லை. ஜடத்தை மனிதன் பேச வைக்க முடியும்; கடவுள் பேச வைக்க முடியாதா? நான் கடவுள்: கடவுள்! செங்கல் அல்ல; செங்கல்லுக்குள் இருக்கும் கடவுள்!

ஆ! இதுதான் சரி. அப்படி உற்றுக் கேள். என் கதையைச் சொல்கிறேன். நான் பிறந்து வளர்ந்து வாழ்ந்த கதையைச் சொல்லுகிறேன். தெய்வங்களுக்கும் பிறப்பு உண்டு; வளர்ச்சி உண்டு; வாழ்வு உண்டு; சாவும்

உண்டு. அப்படியானல், தெய்வம் சுயம்பு என்பது பொய்யா என்று சந்தேகிக்கிருயோ? அது வேதாந்தம். வேதாந்தத்தின் முடிவு சூனியம். விவகாரத்திலே நீயும் நானும் ஒன்றுதான். இனிக் கேள் என் கதையை:

கொஞ்ச நாளைக்கு முன் ஒரு நாள் மாலையில் இந்த ரஸ்தாவிலே ஒரு குடும்பத்தார் வந்துகொண் டிருந்தார்கள். மனிதக் குடும்பந்தான். கடற்கரையில் காற்று வாங்க எத்தனையோ பேர் வருகிருர்கள் அல்லவா? இவர்களும் அந்தக் கும்பலோடு கும்பலாகத்தான் வந்துகொண் டிருந்தார்கள். ஒரு வாலிபன்; அவனுடைய மனைவி. அவர்களுடைய இரண்டு குழந்தைகள். மூத்தது ஐந்து வயசுப் பெண். அடுத்தது மூன்று வயசு மழலை மொழிச் சிறுவன். இன்னுங்கூட அவன் வாயில் பால்மணம் மாறவில்லை. பெண்தான் என்ன? பச்சைக்கிளி மாதிரி இருந்தாள். கொஞ்சிக் கொஞ்சித்தான் பேசினுள். தகப்பன் மகளைக் கைப் பிடித்து அழைத்து வந்தான். தாய் சற்று நேரம் பையனைத் தூக்கி வைத்துக்கொள்வாள். மற்றும் சிறிது நேரம் மெல்ல நடத்தி அழைத்துச் செல்ல முயல்வாள். குழந்தை ஒரு நிமிஷம் சிரித்துக் கொண்டே தள்ளாடித் தள்ளாடி இரண்டடி நடப்பான். பிறகு, ''ஊ! ஊ! தூக்கு..தூக்கு'' என்று கைகளை அகல விரித்துவிடுவான். தகப்பன் நகைப்பான். தாய் உள்ளம் பூரித்தாலும் முகம் சிணுங்கி, ''பொல்லாது; பொல்லாது'' என்று முணுமுணுத்தபடியே சிறுவனை வாரி எடுத்துக் கொள்வாள். அதோ பார், அந்தப் பாலத்துக்குப் பக்கத்தில் ஒரு மரம் இருக்கிறதே, அதன் அடியில் இவர்கள் சென்றுகொண் டிருந்தபோது, ''சுந்தா சுந்தா!'' என்று ஒரு குரல் ரஸ்தாவின் மறு பக்கத்திலிருந்து கேட்டது. அது இந்த வாலிபனின் ஆபீஸ் தோழன் அழைத்த குரல்தான். அவனும் அவனுடைய புதிய மனைவியும் இவர்களிடம் வந்தார்கள். புருஷனும் புருஷனும், பெண்ணும் பெண்ணும் பேசத் தொடங்கினுர்கள். குழந்தைகள் என்ன செய்வார்கள்? அவர்கள் விளையாடத் தொடங்கினுர்கள்.

மரத்தடியில் ஒரு செங்கல் கிடந்தது. அதைக் கையில் எடுத்தாள் கமலி. இதுதான் அந்தப் பெண்குழந்தையின் பெயர். அவளுடைய சட்டைப் பையிலே சிவப்பு, பச்சை, மஞ்சள், நீலம், ஊதா, வெள்ளை இப்படிப் பல வர்ணச் சாக்குக் கட்டிகள் இருந்தன. அவள் அவற்றை எடுத்து, அந்தக் கல்மீது குறுக்கும் நெடுக்குமாகக் கோடுகள் கிழித்தாள். சிறுவனும் பக்கத்திலே உட்கார்ந்து, காக்கைபோல் தலையை இப்படியும் அப்படியும் சாய்த்து, ஆனந்தம் பொங்க, ''ஊ...ஊ...ஊ'' என்று முனகிக்கொண்டே யிருந்தான்.

கிறுக்கி முடிந்தது. சிறுமி என்னை - ஆம், என்னைத்தான் மகனே! அந்தக் குழந்தைகளின் கள்ளமற்ற ஆனந்தத்திலே நான் பிறந்து விட்டேன்; அந்தக் கல்லிலே சாந்நித்தியம் ஆகிவிட்டேன். குழந்தைகள் உங்கள் உலகத்திலே - மானிட உலகத்திலே - இருப்பதாக நீங்கள், மானிடர்கள் நினைத்துக்கொண் டிருக்கிறீர்கள். அவர்கள் உங்களுக்கு நடுவே இருந்தாலும், உண்மையில் குழந்தைகள், தேவர்களின் உலகத்திலே - அற்புதக் கனவு உலகத்திலே வாழ்கிருர்கள். அவர்களுடன் கல்லும் மண்ணும் மரமும் பேசும்; அவற்றினுள் இருக்கும் ஆண்டவனே அவர்களுடன் பேசுகிருன். மரப்பாச்சியுடன் குழந்தை பேசும்போது அது உங்களுக்குப் பித்துக் கொள்ளித்தனமாய்த் தோன்றலாம். மரப்பாச்சி உண்மையிலே குழந்தையோடு பேசுகிறது. ஏனென்ருல், தேவர்களே குழந்தையோடு விளையாடுகிருர்கள்; கூடிப் பேசிக் குலவுகிருர்கள். மந்திரத்தை முணுமுணுத்தால், தேவர் வருவரென்று நீங்கள் நினைக்கிறீர்கள். மந்திரச் சொல் உண்டு. ஆனல், பார்வதி பரமேசுவரர்போல, அந்தச் சொல்லிலே பொருள் இணைபிரியாது இழையும்போதுதான் அதில் மந்திர சக்தி ஏறுகிறது. வறட்டுச் சொல்லுக்குத் தேவர்கள் கட்டுப்பட மாட்டார்கள். தெய்விகக் கனவு உலகத்திலே வாழும் நிஷ்களங்கமான

குழந்தைகளுக்குச் சொல் என்ற சாதனம் எதற்கு? கமலி என்னைக் கையிலே வாரி எடுத்தாள். இடுப்பிலே அணைத்துக்கொண்டாள். ''கோபாலகிருஷ்ணுடு! கோவிந்த ராமுடு!'' என்று குதலை மொழியில் பாடினாள். எதிரே நின்ற சிறுவனும் அதற்கு ஏற்றபடி குதித்துக் குதித்து ஆடினான். நான் அந்தக் கல்லிலே சாந்நித்தியம் ஆகிவிட்டேன்.

அந்தக் குழந்தைகளின் பாட்டும் ஆட்டமும் என்ன இன்பமாக இருந்தன! அவற்றிலே நான் லயித்துக் கிடந்தேன். ஆடிக்கொண்டேயிருந்த சிறுவன், ''ஊ..ஊ..'' என்று கையை நீட்டி என்னைத் தொட்டான். மெத்தென்று பட்ட அந்த விரலின் ஸ்பரிசம், புளகாங்கிதம் உண்டாக்கியது. சிறுமி அசைந்து திரும்பி, அவன் கைப்பிடியிலிருந்து என்னைப் பிடுங்கினாள். சிறுவன் அழுதான். அந்த அழுகையும் ஓர் அழகாய்த்தான் இருந்தது. தாய் திரும்பிப் பார்த்தாள்; சிடுசிடுப்புடன், ''இந்தா, கமலி, குழந்தையை அழ விடாதே. அந்தக் கல்லை அதனிடம் கொடு. இல்லாவிட்டால் அடிப்பேன்'' என்று சொல்லி, மீண்டும் தன் பேச்சிலே ஈடுபட்டாள். இவ்வளவுதான்! அந்தச் சின்னஞ்சிறு கமலிக்குத்தான் என்ன பயம்! அவள் உடனே என்னைச் சிறுவனின் கையில் கொடுத்தாள். சிறுவன் என்னை வாங்க முடியாமல் வாங்கினான். அவனால் தூக்க முடியவில்லை. என்றாலும், என்னைக் கைவிடவில்லை. கத்திக்கொண்டே என்னையும் போட்டுக்கொண்டு, தானும் விழுந்தான். என்மீது சிறுமி போட்ட வர்ணக் கோடுகளை யெல்லாம் சிறுவன் அழிக்கத் தொடங்கினான்.

''இந்தாடா கண்ணு, ஸ்வாமியை அழிக்காதேடா! அப்புறம் கண்ணைக் குத்திப்புடும்'' என்று சொல்லிக்கொண்டே, கமலி சிறுவனின் கையைப் பிடித்துக்கொண்டாள். ஆகா! அவர்களின் விளையாட்டும் பேச்சும் சண்டையும் அழுகையும் இந்த அத்தனையுமே எனக்கு மிக்க இன்பமாக இருந்தன. சிறுவன் சிரித்துக்கொண்டு, ''தூ..தூ..தூ'' என்று சிறுமியின்மீது எச்சிலை ஊதினான்.

இந்தச் சமயத்தில், பெரியவர்களின் பேச்சு முடிந்தது. புறப்பட்டார்கள். கமலி என்னைத் தூக்கிக்கொண்டே கிளம்பினாள். ''அட சனியனே! இந்தக் கல்லை ஏன் தூக்கிக்கொண்டு வருகிறாய்?'' என்று எரிந்து விழுந்து, என்னை அந்தத் தாய் பிடுங்கி எறிந்தாள். அவர்கள் போய்விட்டார்கள்.

நான் அந்த மரத்தடியிலேயே கிடந்தேன். அன்றிரவு இரண்டு மூன்று ஆட்கள் அந்தப் பக்கமாக வந்தார்கள். அவர்கள் அரைகுறையான கள் மயக்கத்தில் கியால் பாடிக்கொண்டே வந்தார்கள். நிலா வெளிச்சத்தில் அவர்களில் ஒருவன் கண்ணில் நான் தென்பட்டேன். என்மீது இருந்த கோடுகளைக் கண்டதும், ''அடே, சாமிடா!'' என்று அவன் கத்தினான். உடனே அவனோடு பிறரும் சேர்ந்துகொண்டார்கள். என்னை அந்த மரத்தடியிலேயே குத்திட்டு நிறுத்திப் பிரதிஷ்டை செய்தார்கள். என்முன்னே விழுந்து விழுந்து கும்பிட்டார்கள்.

இரண்டொரு நாள் சென்றதும், என் யோகம் வலுத்துவிட்டது. என் பக்த கோஷ்டி பெருத்துவிட்டது. தினந்தோறும் இரவிலே ரஸ்தாவின் சந்தடி அடங்கியதும், பலர் கூடி என்னை வணங்கினார்கள். பூ, குங்குமம், மஞ்சள் சந்தனம், வெற்றிலை பாக்கெல்லாம் கொண்டுவந்து எனக்கு அலங்கார உபசாரங்கள் நடத்தினார்கள். உடுக்கும் கையுமாய் ஒரு பூசாரியும் வந்து சேர்ந்தான்.

மகனே, உங்கள் உலகத்தில் எதற்கெடுத்தாலும் பூசாரி வந்து தோன்றிவிடுகிறானே, இது ஏன்? வியாபாரம் என்றால், தரகன் உருவம் எடுக்கிறான் அந்தப் பூசாரி. அரசியல் என்றால், அவன் பெரிய தலைவனுக்குப் பக்கத்திலே சிஷ்யகோடி உருவமெடுக்கிறான். இலக்கியத்துக்கு விமரிசகன் பூசாரி. சட்டத்துக்கு வக்கீல் பூசாரி. சாஸ்திரத்துக்குப்

பண்டிதன் பூசாரி. ஜனநாயகத்துக்கு முதலாளி பூசாரி. சுயமரியாதைக்குக் கலைவிரோதி பூசாரி. புரட்சிக்கு நாஸ்திகன் பூசாரி. அப்பப்பா! எதற்கெடுத்தாலும் ஒரு பூசாரி தேவையாயிருக்கிறுன்! உழைப்பவனின் வாயிலே மண்ணைத் தெள்ளிப் போடத் தரகன் வந்தால், நீதியை ஆழக் குழி வெட்டிப் புதைக்க வக்கீல் வருகிறுன். கவிஞனின் கவிதையைச் சமாதி செய்து கோரி கட்டி, தன்னைப் பார்த்து மக்கள் கன்னத்திலே போட்டுக்கொள்ளச் செய்கிறுன் இலக்கியப் பூசாரி. தெய்வத்துக்குத் திரைகட்டி மறைத்துவைக்கிறுன் கோயில் பூசாரி. எனக்கும் இப்படி ஒரு பூசாரி வந்து சேர்ந்தான்.

பாட்டும் பூஜையும் ஆட்டமும் வலுத்தன. கரகம் எடுக்க ஆரம்பித்தார்கள். கோழிகளின் தலைகளையும் என் முன்னே திருகிப் போட்டார்கள். ரஸ்தாவில் பாதிவரையில் கூட்டம் அடைத்துக்கொள்ளத் தொடங்கியது.

என்ன மகனே, அங்கே பார்க்கிறுய்? என் கதை பிடிக்கவில்லையா? புறப்பட்டுப் போகலாம் என்று எண்ணுகிறுயா? ஓ! மழை வெளிவாங்கி விட்டது. இனிக் கிளம்பலாம் என்ற எண்ணமா? சற்றுப் பொறு. புயலுக்கு முன்னே அமைதி நிலவும். இன்னெரு பாட்டம் மழை பலமாக அடித்துவிட்டே நிற்கப்போகிறது. அதற்குள்ளே என் கதையைச் சுருக்கமாகச் சொல்லி முடித்துவிடுகிறேன். அதைத்தான் நான் எவ்வளவோ சுருக்கிவிட்டேனே. உன்னை ஓர் உதவி கேட்பதற்காகத்தான் உனக்கு நான் இத்தனை கதையையும் சொல்லுகிறேன். இன்னும் கொஞ்சம் பொறுமையாய்க் கேள், சில நிமிஷ நேரம்.

உனக்கு ஒரு சந்தேகம்; இல்லையா? அதோ அந்தப் பாலத்தடி மரத்தின் கீழே அல்லவா இவ்வளவும் நடந்ததாகச் சொன்னேன்? அங்கே கிடந்த நான் இங்கே எப்படி வந்தேன்? இது உன் சந்தேகம்; நியாயமான சந்தேகம். ஒரு நாள் கூட்டம் மகாபலமாக இருந்தது. என் எதிரே அலங்கரித்த மதுக்குடங்களும் படையல் குவியல்களும் இருந்தன. ''மழைமேகம் போலே போலே'' என்று பாடித் தலையைப் பலமாக ஆட்டி உடுக்கை அடித்தான் பூசாரி. இந்த நேரத்திலே தடிகளுடன் சில போலீஸ் ஜவான்கள் அங்கே வந்தார்கள். ரஸ்தாவில் வண்டிப் போக்குவரத்துக்குக் கேடாக இருப்பதாகச் சொல்லி, இந்தக் கூட்டம் உடனே கலையவேண்டுமென்று அவர்கள் கட்டளை போட்டார்கள். அந்தக் காலம் கொஞ்சம் பரபரப்பான காலம் - அரசியல் பரபரப்பு. போலீஸ்காரர்கள் என்ன செய்தாலும் கேட்பாரில்லை. அவர்கள் அப்போது சர்வாதிகாரிகள். ஜனங்கள் ஓட்டம் எடுத்தார்கள். பூசாரி உடுக்கைத் தூக்கிக்கொண்டு கிளம்பினுன். ஜவான்கள் என்னைத் தூக்கி வீசி எறிந்தார்கள். அட பாவிகளா! அவர்களுக்குத்தான் என்ன துணிச்சல்! ஆனுல், அவர்களை நான் என்ன செய்ய முடியும்? ஜில்லா கலெக்டர் துரை கண்ணைத் திறந்து பார்த்து, அவர்களைத் தண்டிக்கமாட்டாரா என்று பிரார்த்தித்துக்கொண்டே நான் ஆகாயத்தில் பறந்தேன். என் சொந்த பலத்தால் நான் பறக்கவில்லை. ஜவான்களின் புஜபலம் எனக்குள் பொழிந்த சக்தியாலேயே பறந்தேன். அப்போது இந்த மரத்தடியிலே ஒரு குப்பை முட்டு இருந்தது. கணக்காய் அதைக் குறிபார்த்து வந்து விழுந்தேன். இல்லாவிட்டால் நான் உடைந்து சுக்கு நூருய்ப் போயிருப்பேன். அப்படித்தான் தொலைந்தேனு! பின்னுல் இப்படி என் நிம்மதி குலையாமல் தப்பியிருப்பேனே! யாருக்குத்தான் அழிய மனம் வருகிறது? கழியை ஊன்றிக் கூனிக் குறுகி ஒவ்வோர் அடியிலும் ஒடிந்து விழுவதுபோல் நடக்கும் கிழமுங்கூட உலகத்திலே சாசுவதமாய் இருக்கத்தான் விரும்புகிறது. அழிவு: அப்பாடா! அது மகா பயங்கரமானது!

நான் இந்த மரத்தடியிலே வந்து விழுந்தேனு; பூசாரி மெல்ல மறுபடியும் என்னிடம் வந்து சேர்ந்தான். ஓர் உண்டியல் பெட்டியும் தயாரித்து என் முன்னே வைத்தான். ஒரு கொத்தனை அழைத்து, எனக்கு

ஒரு சிறு மாடம் கட்டினுன். குதிரை வண்டிக்காரர்கள், ரிக்ஷாக்காரர்கள், கடைசியில் டாக்ஸிக்காரர்களுங்கூடத்தான் உண்டியலில் காசு போடத் தொடங்கினுர்கள். பழையபடி உடுக்கடியும் பூஜைகளும் ஆரம்பமாகிவிட்டன. இப்போது நான் பலமாய் ஸ்தாபிதமாகிவிட்டேன். எனக்கு நடந்த வைபவங்களெல்லாம் எனக்கே சற்று வேடிக்கையாக இருந்தன. கொஞ்சம் சந்தோஷம், சிறிது வேதனை எல்லாம் கலந்திருந்தன. இந்த இடம் வண்டிப் போக்கு வரத்துக்கு அவ்வளவு இடைஞ்சல் இல்லையோ, அல்லது போலீஸ்காரர்களின் சர்வாதிகாரத்துக்குச் சிறிது வீழ்ச்சி ஏற்பட்டதோ, எது காரணமென்று தெரியவில்லை. ஜவான்கள் இப்போது குறுக்கிடவில்லை. இப்படியாக நான் பிறந்து ஐந்தாறு மாத காலம் ஆகிவிட்டது. என்னுேடு ஒரே காளவாயில் வெந்த சகோதரக் கற்களை யெல்லாம்பற்றிச் சிந்தித்துப் பார்த்தபோது என் மனம் பூரித்தது. பாவம்! அவற்றில் சில, ஒரு கட்டிடச் சுவரிலே இடித்து நெருக்கி நின்று ஓர் உத்தரத்தைத் தாங்கிக்கொண் டிருந்தன. மற்றும் சில, மாடிப் படிக்கட்டிலே மனிதர்களின் காலடி பட்டுத் தேய்ந்துகொண் டிருந்தன. கொத்தர்கள் ஒரு வண்டியிலே என் சகோதரக் கற்களோடு என்னையும் ஏற்றிக்கொண்டு போனபோது, தறிகெட்டுக் கீழே விழுந்த நானே, இதோ என்ன கோலாகலத்துடன் வாழ்கிறேன்! 'ஓடிப்போனவனுக்கு ஒன்பதாம் இடத்தில் ராஜா' என்பது உண்மை, மகனே, உண்மை! ஆனுல் இப்போது இப்படி நான் நினைக்கவில்லை; அப்போது நினைத்து மகிழ்ந்தேன்.

நான் பிறந்து ஐந்தாறு மாதகாலம் ஆகிவிட்டது என்று சொன்னேன் அல்லவா? நான் எப்படிப் பிறந்தேன்? குழந்தைகளின் நிஷ்களங்கத்திலே பிறந்தேன் என்பதுதான் உனக்குத் தெரியுமே; முதலிலேயே சொல்லியிருக்கிறேனே. படைப்பின் ரகசியமே இதுதான். அறிவாராய்ச்சியிலே படைப்பு எதுவும் நிகழ்வதில்லை. அணுவைப் பிளக்கும் ஆயுதம் விஞ்ஞானியின் கற்பனையிலே பிறக்கிறது. கவிஞனின் கனவிலே பிறக்கிறது கவிதை. பிரம்மத்தின் மாயையிலே பிறக்கிறது பிரபஞ்சம். பக்தன் குழந்தையாகும்போது பிறக்கிறது தெய்வம். குழந்தையின் விளையாட்டே உன்னதமான பக்தி. என் பிறப்புக்குக் காரணபூதமான அந்தக் குழந்தைகளைப் பின்னுல் வெகு நாள்வரையில் காணவில்லை.

வழக்கம்போல, நேற்றிரவு எனக்குப் பூஜை நடத்திக்கொண் டிருந்தான் பூசாரி. சுற்றிலும் பல ஜனங்கள் சூழ்ந்திருந்தார்கள். கூட்டத்தின் ஓரத்திலே, அந்த வாலிபன் - கமலியின் தகப்பன் - வந்து நின்று வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தான். அவன் கையைப் பிடித்துக்கொண்டு, அந்த அழகிய சிறுமி கமலியுந்தான் நின்ருள். அவளைக் கண்டதும், எனக்கு ஒரு குதூகலம் உண்டாயிற்று. அன்று போல் மீண்டும் அவள் கையிலே போய்க் கொஞ்ச வேண்டும் என்று ஆவல் உண்டாயிற்று. 'கோபால கிருஷ்ணுடு, கோவிந்த ராமுடு' என்ற தேவகானத்தை மீண்டும் கேட்கவேண்டும்போல் ஒரு வேட்கை எழுந்தது. ஆம்; இதோ அவளும் என்னைக் கண்டுகொண்டாள். அவள் கிழித்த சில வர்ணக் கோடுகள், ஆறு மாதமாகியும் அழியாமல், புடைத்த நரம்புகள் போல் என்மீது விளங்கியதைத்தான் அவள் கண்டுகொண்டாளோ; அல்லது வேறே என்ன அடையாளம் கண்டாளோ? அந்தக் கோடுகளைத்தான் அழியவொட்டாமல், மீண்டும் அவற்றின்மேல் கெட்டி வர்ணச் சாயம் பூசியிருக்கிருனே, பூசாரி. அவற்றைத்தான் அவள் கண்டிருப்பாள். ''அப்பா! என் கல்லு, என் சாமி!'' என்று இதழ் விரிந்த மலர்ச் சிரிப்புடன், கண்ணை அகல விழித்துக்கொண்டே கமலி கத்தினுள். தகப்பனின் கையைத் திமிறிக்கொண்டு, என்னை எடுக்கக் கூட்டத்துக் குள்ளே பாய்ந்தோடி வந்தாள். குழந்தைக்கு ஏதோ சாமி ஆவேசம் வந்துவிட்டது என்று எண்ணி, கூட்டங்கூட வழி விலகிக்கொடுத்தது. குழந்தை உள்ளே வந்துவிட்டாள். என்னை அவள் கைவிரல் நுனி கூடத்

தீண்டிவிட்டது. ஆஹா! என்ன சுகமாயிருந்தது அது! ஆனால், பூசாரி விடுவானா? ''போ அப்பாலே!'' என்று உறுமி, அந்தக் கையை முரட்டுத் தனமாய்த் தள்ளிவிட்டான். ''சாமி உனக்காகவா ஏற்பட்டது?'' என்று கத்தினான் பூசாரி. சாமி பூசாரிக்காக அல்லவா ஏற்பட்டது? அவனது உண்டியல் பெட்டி நிறைவதற்காக அல்லவா ஏற்பட்டது?

குழந்தை மூர்ச்சித்துவிட்டாள். அவளால் அந்த அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லை. பூசாரி தள்ளியது அதன் காரணமல்ல. அன்றொரு நாள் எனக்கு உயிர் கொடுத்து என்னை விளையாடிக் கொஞ்சிய என் தாய் அவள். இன்று நடுவிலே முளைத்த ஒரு பூசாரி, அவள் என்னைத் தொடவும் கூடாதென்று தடுத்ததால் அவளுடைய உள்ளத்திலே ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. அவள் மூர்ச்சித்தாள். தெய்வக் கோளாறு என்றார்கள் மூட ஜனங்கள்; எனக்குக் கர்ப்பூர தீபாராதனை யெல்லாம் காட்டினார்கள். அவள் அதையெல்லாம் பார்க்கவில்லை. வாலிபன் அவளைத் தோளிலே சாய்த்து வீட்டுக்குத் தூக்கிச் சென்றான். அவளுக்குக் காய்ச்சல் வந்துவிட்டது. அதே பூசாரியை அழைத்துத் 'துண்ணூறு' போடச் செய்திருக்கிறார்கள். அவன் அங்கேயும் உண்டியல் பெட்டிசகிதம் போய்க் காலை மாலை இருவேளையும் உடுக்கடித்துத் 'துண்ணூறு' போட ஆரம்பித்துவிட்டான். அவன் 'துண்ணூறு' போடும் வரையில் சிறுமியின் காய்ச்சல் தீராது, மகனே. குழந்தையைக் காப்பாற்ற ஒரே ஒரு வழிதான் உண்டு. அது அந்தப் பூசாரியைத் தொலைப்பதுதான்.

ஆனால், ஐயோ, நான் என்ன செய்ய முடியும்! ஊர் ஜனங்களின் கண்ணைக் குத்த என்னால் முடியும்; பூசாரியை நான் ஒன்றும் செய்ய முடியாது. பாவிக்கும் பக்தர்களை நான் ஆட்டிவைத்தருள முடியும், என் அருளையே விலைக்கு விற்கும் தரகனை நான் என்ன செய்ய முடியும்? முதலைக்குத் தண்ணீர் பலம். பூசாரிக்கு நான் பலம். நான் தொலைந்தால், பூசாரிக்கு வேலை இராது. ஆகையால், மகனே, நீ எனக்கு ஒரு காரியம் செய்யவேண்டும். உனக்குக் கோடி புண்ணியம் உண்டு. இப்படியே என்னைப் பெயர்த்தெடு. நேரே கிழக்கே போ. அதோ பார், அங்கே ஆரவாரமாக ஆர்ப்பரித்துப் பொங்கியெழுந்து அலை வீசிக்கொண்டிருக்கிறதே ஆழங்காணாத கருங்கடல், அதன் நடுவே என்னை வீசி எறிந்துவிடு. இதுதான், மகனே, நான் உன்னைக் கேட்கும் வரம். ★

—நவம்பர், 1947.

## கி. வா. ஜகந்நாதன்

# கூன் பாண்டியன்

கழுத்தில் ருத்திராட்ச மாலையும் நெற்றியில் விளக்கமான திருநீறும் அணிந்து கொண்டு தூய்மையான ஆடைகளுடன் அமர்ந்து வைத்தியநாத முதலியார் தேவார பாராயணம் செய்துகொண்டிருந்தார். ஒவ்வொரு நாளும் அதிகாலையிலே நீராடிவிட்டுப் பூஜை செய்து தேவார பாராயணம் செய்வது முதலியார் வழக்கம். பரம்பரைச் சைவராகிய அவருக்குச் சைவத்தில் அழுத்தமான பற்று. தேவார பாராயணம் பண்ணும்போது அதில் மனம் அழுந்தி ஈடுபடுவார். சில சமயங்களில் உள்ளம் உருகிக் கண்ணீர் விடுவார்.

''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
நின்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தரவேண்டும்''

என்று மெல்ல ராகம்போட்டுப் படிக்கும்போது அவருடைய தொண்டையில் களகள சப்தம் உண்டாகும். வார்த்தை தடுமாறும். கண்ணில் குபுக்கென்று நீர் கொப்புளிக்கும். மேலே பாட முடியாமல் தத்தளிப்பார். உண்மையாகவே தெய்வத் திருவருளில் நம்பிக்கையும் தேவார திருவாசகத்தில் பெருமதிப்பும் உடையவர்; இளகிய உள்ளம் உடையவர். ஆதலால் தேவாரத்தில் இப்படிச் சில இடங்கள் வரும்போது அவர் உருகுவார்.

இன்று இப்போதுதான் பாராயணம் செய்ய ஆரம்பித்திருக்கிறார். கண் தேவார புத்தகத்தில் சென்றாலும், வாய் பழக்கத்தால் ராகம் போட்டுப் படித்தாலும், அவர் கருத்து எப்போதும் போல அந்தப் பாட்டின் பொருளிலே அழுந்துவதாகத் தெரியவில்லை. புத்தகத்தையே கூர்ந்து நோக்கிப் பாராயணஞ் செய்யும்போது, பழக்கத்தினால் உருவான இடங்கள் வந்தால் கண்ணை மூடிக்கொண்டு பாட்டைச் சொல்வார். அப்போதுதான் அவருக்கு அதிக உருக்கம் உண்டாகும். ஆனால் இன்றோ அவர் கண் புத்தகத்தைப் பார்ப்பதோடு நில்லாமல் இடையிடையே, எதிரே கூடத்தின் மற்றோர் ஓரத்தில் விளையாடிக்கொண்டிருந்த ஒரு குழந்தையின்மேல் பாய்ந்துகொண்டிருந்தது.

நெடுங்காலம் பழக்கமாக இருந்த ஒரு நெறி இப்போது சற்றுத் திறம்புகிறது. அதாவது என்ன வேடிக்கையானாலும் ஒரே நினைவோடு தேவார பாராயணம் செய்யும் அவர், வாய் தேவாரத்தைச் சொல்லிக் கொண்டிருக்க இடையிடையே கண்ணைக் குழந்தையினிடத்திலே போக்கினார். அதற்குக் காரணம் அவர் உள்ளம் இப்போது தேவாரத்திற் புதியவில்லை. எங்கெங்கோ சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருக்கிறது. மின்சாரத்தின் மூல விசையை முடுக்கிவிட்டால் பலபல விதமான பொறிகளும் இயங்குகின்றன; விசிறி சுழல்கிறது; விளக்கு எரிகிறது. இப்படித்தான்

அந்தக் குழந்தையின்மேல் பார்வை விழுந்தவுடன் அவர் சிந்தனை பெரு வேகத்தோடு எங்கெங்கோ செல்கிறது. பல வருஷங்கள் பின்னுக்கு இழுத்துச் செல்கிறது. பல பல இடங்களுக்கு அழைத்துப் போகிறது.

* * *

இதேமாதிரி ஒரு குழந்தையை அவர் சிந்தனை பற்றுகிறது: முப்பது வருஷத்துக்கு முன்னே பார்க்கிறது, இதே வயசு; மூன்று பிராயம். தளதளவென்று பொலிவு பெற்ற முகமும் பின்னி உச்சிப் பூச் சூட்டிய தலையும் கழுத்தில் சிறிய ருத்திராட்சமும் தங்கச் சங்கிலியும் நெற்றியில் திருநீறுமாகக் குழந்தை சிரிக்கிறது. பெரிய புராணத்தில் மனத்தைச் சிக்கவிட்ட அவருக்கு, 'திருஞானசம்பந்தர் இப்படித்தான் இருந்தாரோ!' என்ற எண்ணம் உண்டாகிறது. இறைவன் இந்த அழகிய குழந்தையைத் தமக்கு அருள் செய்தாரே என்று நினைந்து உள்ளம் பூரிக்கிறார். சம்பந்தப் பெருமான் யார்? என்றும் இளைய பிராணுகிய முருகனுடைய திருவவதாரம் அல்லவா? வைத்தீசுவரன் கோவில் அவருடைய குலதெய்வ ஸ்தலம். தலைமுறை தலைமுறையாகக் குழந்தைகளுக்கு முடி வாங்கும் இடம். அங்கே உள்ள முருகனுக்கு முத்துக் குமாரசாமி என்பது பெயர். அதே பெயரை அந்தக் குழந்தைக்கு வைத்தார். முத்துக் குமாரசாமி என்று வாய் நிறையக் கூப்பிட வேண்டுமென்று அவருக்கு ஆசை. சோம்பேறி உலகத்தில் அது நடக்கிற காரியமா? பெயரைச் சிதைப்பதுதானே மனிதன் இயல்பு? நல்ல வேளையாகக் குழந்தையின் பெயர் அவலட்சணமாகச் சிதையாமல் முத்து என்று நின்றது.

முத்துக்குமாரசாமி வைத்தியநாத முதலியாருடைய ஒரே மகன் என்பது அப்போது முதலியாருக்குத் தெரியாத சமாசாரம். அவன் முதல் மகன்; ஒரே மகன் என்ற உண்மை பிறகுதான் தெரிந்தது. இப்போது நிச்சயமாகத் தெரிந்த விஷயம்....

* * *

எதிரே உட்கார்ந்து விளையாடிக்கொண்டிருந்த குழந்தை பொம்மை மோட்டாரைத் திருக முயல்கிறது; முடியவில்லை. ''அம்மா'' என்று கத்துகிறது. முதலியார் சிந்தனை உலகத்திலிருந்து நிகழ்கால உலகத்திற்கு வந்தார். தேவாரம் திறந்தபடியே இருக்கிறது. அவர் வாய் பாடவில்லை. சிந்தனை அவரை ஆட்கொண்டிருந்தது. சுவாரஸ்யமாக வாசித்துக்கொண்டிருந்தபோது திடீரென்று பிடிலின் தந்தி அறுந்து போவதுபோல முப்பது வருஷங்களுக்குமுன் பின்னோக்கிச் சென்றுகொண்டிருந்த நினைவு பட்டென்று அறுந்துவிட்டது. ''ஏய்!'' என்று அவர் கூப்பிட்டார்.

''இதோ வந்துவிட்டேன்'' என்று ஒரு பெண்குரல் எதிர் பேசியது.

''குழந்தை எதையோ திருகுகிறான். கையிலே காயம் பட்டுவிடப் போகிறது. இங்கே பார்.''

''இதோ வந்தேன்'' என்று சொல்லிக்கொண்டு அந்தக் குரலுக்குச் சொந்தக்காரியான 45 வயசுக்கு மேற்பட்ட அம்மாள் ஒருத்தி பிரசன்னமானாள். வந்து குழந்தையை அணைத்துக்கொண்டு, ''போக்கிரி, கையைப் பொத்துக்கொள்ளாதே'' என்று சொல்லித் தானே அந்த விசையை முடுக்கிக் கீழே மோட்டாரை ஓடவிட்டாள். அது கிர்ரென்று வட்டமாகச் சுழித்து ஓடியது. ''பாத்தி, மோத்தார்; தாத்தா மோத்தார்'' என்று தன் மழலை மொழியால் பேசிக் குதூகலமடைந்தது குழந்தை.

தாத்தா என்ற சொல் முதலியார் காதில் விழுந்தது; அந்த ஒலி மற்றொரு முறை சிந்தனை உலகத்தின் வாசலைத் திறந்துவிட்டது.

தேவாரம் திறந்திருந்தும் அதை உள்ளத்திலே மூடிவிட்டு அந்த உலகத்திலே மறுபடியும் புகுந்தார் அவர்.

தாத்தா என்று மழலே மொழியிலே அழைக்கும் இந்த இனிய சொல்லுக்கு முதலியார் தம்மை விஷயமாக வைத்துக்கொள்ள முடியவில்லேயே! அப்பா என்று முப்பது வருஷத்துக்குமுன் அழைத்த குழந்தையின் ஞாபகந்தான் அவருக்கு வந்தது. கிரமமாக இருந்தால் தாத்தா என்று உரிமையோடு உழைக்கும் குழந்தை அவர் வீட்டிலே இருக்க வேண்டும். இதோ முன்னுலே, பழக்கத்தாலே தாத்தா என்று அழைக்கும் குழந்தை இருக்கிறதே என்ருல், இது கொண்டாடும் இடத்தில் வந்து பழகும் குழந்தை; அவ்வளவுதான்.

வைத்தியநாத முதலியார் அகக் கண்ணில் முத்து தோன்றினுன். எத்தனே ஆசையாக வளர்த்தார்! வளர்ந்த குழந்தைக்கு ஏதாவது குறை இருந்ததா? அப்பொழுதெல்லாம் அவருடைய ஜவுளிக்கடைக்கு மகோன்னத காலம். லக்ஷ்மி தாண்டவமாடிக்கொண் டிருந்தாள். குழந்தைக்கு எதில் குறை வைத்தார்? குழந்தை வளர்ந்து வரவர அதற்குக் கல்வி புகட்டின மாதிரியில்தான் ஏதாவது குற்றம் உண்டா? ஐந்து வயசில் 'தோடு கூற்றுப் பித்தா' மூன்றும் குழந்தைக்குச் சொல்லி வைத்தார். அந்த மூன்று தேவாரப் பதிகங்களின் முதல் பாட்டுக்களே முத்து பாடும் போது முதலியார் சாக்ஷாத் சிவலோகத்தில் இருப்பதாகவே எண்ணிக் கொள்வார். குழந்தையின் எழிலும் அறிவும் வளர்ந்துகொண்டு வந்தன.

இப்போது நினேக்கிருர்: எதற்காகப் பாழும் கோணல் எழுத்தைச் சொல்லிக் கொடுக்கச் செய்தோம் என்று. எதையும் விடாமற் பற்றிக் கொள்ளும் அறிவுடைய முத்துவுக்கு வீட்டிலேயே வந்து வாத்தியார் சொல்லித் தந்தார். பிறகு பள்ளிக்கூடம் போனுன். கல்வி அவனுக்கு விளேயாட்டாகத்தான் இருந்தது. ஹை ஸ்கூலுக்குப் போனுன்; படித்தான். தேர்ச்சி பெற்ருன். அந்த மட்டிலாவது நிறுத்தியிருக்கக் கூடாதா? காலேஜ் படிப்புப் படிக்க வேண்டுமென்று முதலியாருக்கே ஆசை தோன்றிற்று. இவ்வளவு இளமையில் விறுவிறென்று கல்வியில் ஏறி வரும் அவனேத் திடீரென்று நிறுத்துவது பாவம் என்று நினேத்தார். 'படித்து என்ன செய்யப் போகிருன்?' என்ற நினேப்பு ஒவ்வொரு சமயம் எழும். இப்போதே கடையில் உட்கார்த்திஞல் நல்லதல்ல என்ற நினேப்பே வெல்லும். "எத்தனேயோ பேர்கள் பிள்ளே படிக்கவில்லேயே என்று அங்கலாய்க்க, படிப்பதில் தீவிரமாக இருக்கும் இவனுக்குப் படிக்கும் விஷயத்தில் என்ன குறை? பணத்தில் குறைவா, அறிவில் குறைவா? ஒன்றும் இல்லே. அப்படி இருக்கப் படிக்கவொட்டாமல் செய்வது முட்டாள்தனம்" என்ற நண்பர்கள் பேச்சும் அவருக்கு ஊக்கத்தை அளித்தது.

சென்னேக்கு அனுப்பினுர். இன்டர் பரீட்சை தேறி முடிந்தபோது பையன் கிராப்பு வைத்துக்கொண்டான். அப்பொழுதே முதலியாருக்குச் சொரேரென்றது. "எல்லோரும் அப்படி இருக்கும்போது இவன் மாத்திரம் குடுமியோடு இருந்தால் இவனேக் கண்டு எல்லோரும் சிரிக்கமாட்டார்களா?" என்று அவர் மனேவி, குமாரன் பங்கில் வாதித்தாள். ஒருவிதமாகச் சமாதானம் செய்துகொண்டார்.

இன்டர் பரீட்சையில் முதலில் தேர்ச்சி பெற்றுப் பரிசுகள் வாங்கினுன். முதலியாருக்கு உண்டான பெருமிதத்துக்கு எல்லே எல்லே. அந்தச் சந்தோஷத்தில் கிராப்பு நினேவெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. சந்திப்பவர்களெல்லாம் முத்துவுக்குப் பரிசு கிடைத்ததைப் பற்றியல்லவா இப்போது விசாரிக்கிருர்கள்? அவருக்கு எத்தனே கௌரவம்! அது மட்டும் அல்ல. ஒரு புதிய வகையில் பலருடைய சிநேகம் ஏற்படத் தொடங்கியது. அவனுக்குத் தங்கள் பெண்களேக் கொடுப்ப

தற்குப் பலர் அடிபோட்டார்கள். உத்தியோகம் செய்பவர், பணக்காரர், மிராசுதார், மில் முதலாளி, கடைக்காரர் - இப்படியாகச் சமுதாயத்தின் மேல்தளத்திலே உலவுகிறவர்கள் பலர் தூதுவிடத் தொடங்கினர். ''இப்போது என்ன அவசரம்?'' என்று சுருக்கமாக விடை அளித்துவந்தாலும் முதலியாருக்கு உள்ளூற ஆசை ஒன்று இருந்தது. நல்ல குலமாகச் சைவப் பற்றுள்ள குடும்பத்தில் பெண் கொள்ள வேண்டுமென்பது அவர் கருத்து. அதுவும் நல்ல ஸ்தலமாக - திருவாரூரைப் போலச் சிறந்த ஸ்தலமாக இருக்கவேண்டும். 'அவனுக்குக் கல்யாணமாகிவிட்டால் பிறகு குடும்பப் பொறுப்பு அவனுக்கு வந்துவிடும். கடையையும் அவனிடம் ஒப்படைத்துவிட்டு, வருஷத்தில் சில மாதங்கள் அந்த ஸ்தலத்துக்குப் போய்த் தங்கியிருக்கலாம் அல்லவா? சம்பந்தியின் ஆதரவில் அல்ல. ஒரு வீடு பேசித் தனியே இருப்பதாகத்தான் ஞாபகம். என்றாலும் அண்டை அயலில் உறவினர் இருக்கும் இடத்தில் வசிப்பதைப்போல, முகமறியாத மூன்றாவது மனிதர் இருக்குமிடம் வருமா?

உலகவாழ்வில் குடும்பத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை மெல்ல முத்துவின் கையில் நழுவவிட்டுத் தாம் பூஜை, தேவார பாராயணம், ஸ்தல யாத்திரை இவைகளோடு நின்று இன்புறலாம் என்று ஒவ்வொரு கணமும் அவர் திட்டம் போட்டுவந்தார். அந்தத் திட்டம் அவ்வளவுக்கும் அஸ்திவாரமாக, நல்ல குடும்பத்தில் சம்பந்தம் செய்துகொள்வது என்ற காரியம் இருந்தது. பல பல பெண்களின் ஜாதகங்கள் வந்தன. நேர்முகமாகவும் சிபாரிசு மூலமாகவும் அகஸ்மாத்தாகவும் கல்யாணத்துக்கு இருக்கும் பெண்கள் உள்ள சைவக் குடும்பத்தைப்பற்றி அவர் அறிந்துகொண்டார்.

இறைவன் திருவருளால் நல்ல இடத்திலிருந்து தம் வீட்டுக்கு அலங்காரமாக ஒரு பெண் வருவாளென்றும், அவள் கையிலே வீட்டுப் பொறுப்பை ஒப்பித்துவிட்டுத் தம் மனைவியும் ஓய்வு பெறலாம் என்றும் அவர் எண்ணினார். தலயாத்திரை முதலிய காரியங்களுக்கு மனைவியில்லாமல் முடியுமா?

## 2

**பி. ஏ.** வகுப்பில் முத்து படித்துக்கொண் டிருந்தான். அவனுடைய படிப்பின் முன்னேற்றத்தைப் பற்றிய செய்தி முதலியார் காதில் விழும்போதெல்லாம் அவருக்குச் சந்தோஷம் உண்டாகி வந்தது. ஆனால் ஒரு நாள் யாரோ சென்னையிலிருந்து வந்த நண்பர் ஒருவர் அவர் சந்தோஷத்திற்கிடையே சிறிது நஞ்சைக் கலந்துவிட்டார்.

''என்ன போங்கள், உலகம் போகிற போக்கை. ஆசாரமாவது, ஜாதியாவது! எல்லாம் அடியோடு தொலைந்துபோகப் போகிறது! நானும் நீங்களும் பூஜைப் பெட்டியையும் தேவாரத்தையும் கட்டிக்கொண்டு அழுகிறோம். நம்முடைய பிள்ளைகளோ காலேஜில் படிக்கிறோமென்ற பெயரை வைத்துக்கொண்டு யார் யாரையோ கட்டிக்கொண்டு அழுகிறார்கள்'' என்றார் வந்தவர். அவர் பழைய நாள் பேர்வழி.

வைத்தியநாத முதலியார் காதில் இந்த வார்த்தை விழுந்தவுடன் அவருடைய நினைப்பு முத்துவினிடம் சென்றது.

''என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? எல்லோரும் அப்படிப் போய் விடுகிறார்களா? ஏதோ புதுப் பணம் படைத்த குடும்பங்களில் அப்படி நடக்கும். பரம்பரையாகச் சைவமாக இருக்கும் குடும்பங்களிலே பிறந்த பிள்ளைகள் அப்படி இருப்பார்களா? தாயார் தகப்பனார் எப்படி இருக்கிறார்களோ, அதைப் பொறுத்தது பிள்ளைகளின் நடத்தையும்''

என்று அவர் பொதுவாகவே பேசினர். உள்ளுக்குள் மாத்திரம் முத்துவின் கிராப்புத் தலே அவர் கண்ணே உறுத்தியது.

''நாம் என்னவோ அப்படித்தான் எண்ணிக்கொண்டு அப்பாவியாக இருக்கிறேம். நீங்கள் இங்கே திருச்சியில் இருந்துகொண்டு காவிரி ஸ்நானமும் தாயுமானவர் தரிசனமுமே கதியென்று ஒரு நாளேப் போலவே ரெயில் தண்டவாளத்தில் போகிறமாதிரி நடந்துகொண்டிருக்கிறீர்கள். உங்களேச் சேர்ந்தவர்களெல்லாம் அப்படியே இருப்பார்கள் என்பது என்ன உறுதி?''

அவர் எதையோ மனசில் வைத்துக்கொண்டு பேசுகிருரென்பது தெளிவாகத் தெரிந்தது. அந்தத் தொனியிலே இருந்த ஏளனக் குறிப்பு வைத்தியநாத முதலியாரின் உள்ளத்தை அறுத்தது.

''அது கிடக்கிறது. ஊரில் எல்லோரும் க்ஷேமந்தானே? நம் பையனே எப்போதாவது பார்க்கிறதுண்டா?'' என்று பேச்சை வேறு பக்கத்தில் திருப்புபவரைப் போல முதலியார் கேட்டார். வந்தவரோ அதைத்தானே எண்ணிப் பேசிக்கொண் டிருக்கிருர்? ''உங்கள் பையனு? அவன் எதற்கு என் கண்ணில் தென்படுகிருன்? காலேஜில் படிக்கப் போய்விட்டால் அப்புறம் அவர்களெல்லாம் கந்தருவ ஜாதியோடு சேர்த்தி. ஒட்டு உறவென்பதெல்லாம் அவர்களுக்கு இல்லே. அப்படி இருந்தாலும் அதற்கு நேரமேது? படிப்பைத் தவிர்த்து மற்ற விஷயங்கள் எத்தனேயோ இருக்கின்றன. போதாக்குறைக்குக் காலேஜில் வயசுவந்த பெண்களும் சேர்ந்து படிக்கிருர்கள். அவர்கள் மனசுக்கும் அறிவுக்கும் வேலே எவ்வளவு அதிகமாக இருக்கும், பார்த்துக்கொள்ளுங்கள்.''

''அது கிடக்கிறது, விடுங்கள். உலகம் நாசமாய்ப் போகட்டும். முத்து எப்போதாவது உங்களேச் சந்திப்பதுண்டா? அதைச் சொல்லுங்கள்.''—அப்பாவி முதலியார் அவர் பேசுவதற்கும் தாம் கேட்பதற்கும் சம்பந்தமே இல்லே என்று நினேத்தார்!

''முத்துவும் அந்தக் காலேஜில்தானே படிக்கிருன்? அவனுக்கு மாத்திரம் தனிப் போக்கு ஒன்று ஏற்படுமா? அப்படி ஏற்பட்டாலும் மற்றப் பிள்ளேகள் சும்மா விட்டுவிடுவார்களா?''

''அவன் நன்ருகப் படிக்கிருனென்றுதானே கேள்விப்படுகிறேன்? பரீட்சையில் நல்ல மார்க்கு வாங்கியிருக்கிருன்.''

''நானுந்தான் எவ்வளவோ கேள்விப்படுகிறேன். பரீட்சை மார்க்கைப்பற்றி எனக்குத் தெரியாது. பையன் நீங்கள் நினேக்கிறபடி இல்லே. குலம் கோத்திரம் தெரிந்து சீக்கிரம் அவனுக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி வையுங்கள்.''

''அவனேப்பற்றி என்ன கேள்விப்பட்டீர்கள்? சொல்லுங்களேன்.''

''சொல்லுவது என்ன இருக்கிறது? இவனேடு ஒருத்தி படிக்கிருளாம். என்ன ஜாதியோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். அந்தப் பெண்ணுக்கும் இவனுக்கும்..''

''ஹா!'' என்று திடுக்கிட்டார் முதலியார்.

* * * *

**உ**ண்மையும் அதுதான். முத்துக்குமாரசாமி இப்போது காதலுலகத்தில் பிரவேசித்துக்கொண் டிருந்தான். தன்னுடன் படிக்கும் கல்யாணியின் மேல் அவனுக்கு ஒரு கண் விழுந்தது. அவளுக்கோ இவன்மேல் இரண்டு கண்களும் விழுந்தன. மாதக்கணக்காகப் பழகுவதனல் ஒருவரை ஒருவர் நன்ருகத் தெரிந்துகொண்டார்கள். கல்யாணி சென்னேயில் இருந்த ஒரு வியாபாரியின் பெண். யதிராச பிள்ளேக்கு

அவள் நன்முகப் படிக்க வேண்டுமென்று ஆசை. அவளும் நன்முகப் படித்துவந்தாள். அறிவு அறிவை வியப்பது இயல்பு. கல்வியில் சிறந்த அவள் முத்துவின் அறிவுத் திறமையிலே ஈடுபட்டாள். முறை தவறி நடக்கும் குணம் அவளிடம் இல்லை. அவனுடைய திறமையை யும் குணத்தையும் தன் தகப்பனுருக்கு எடுத்துரைத்து அவனைத் தன் குடும்பத் தோழனுகச் செய்தாள். ஆகவே முத்து அடிக்கடி யதிராச பிள்ளை வீட்டுக்கு வந்து பழகத் தொடங்கினுன். நெருங்கிய உறவினர் வீட்டில் பழகுவதைப் போலப் பழகினுன். சில விசேஷ நாட் களில் அவ்வீட்டில் விருந்துண்டான்.

பரம சைவராகிய முதலியாருக்கு இந்த விஷயமெல்லாம் தெரி யாது. முத்துவும் எழுதவில்லை. கல்யாணியினிடம் அவன் மனம் சென் றது, இயற்கையாகவும் நியாயமாகவும் அவனுக்குப் பட்டது. ஜாதியோ சமயமோ அவன் கண்ணுக்கு முன் தடையாக நிற்கவில்லை. இன்னும் ஒரு வருஷம் படித்த பிறகு இருவரும் பி. ஏ. பரீட்சையில் தேர்ச்சி பெறுவார்கள். பிறகு இருவரும் பிரியப்போகிமுர்களா? இல்லை, இல்லை. வாழ்க்கைப் பள்ளியில் ஒன்முய்ப் புகுவார்கள். இதுவே முத்துவின் கனவு. கல்யாணியும் அப்படித்தான் கனவு கண்டிருக்க வேண்டும். அவள் சுதந்தரத்தைக் கட்டுப்படுத்துவார் ஒருவரும் இல்லை. அப்படி இருந்தால் முதலில் அவளைப் படிக்கவே வைத்திருக்க மாட்டார்களே.

* * * *

அடுத்த வருஷம் கிறிஸ்துமஸ் லீவுக்கு முத்து திரிசிரபுரம் வரவில்லை. மார்ச்சுப் பரீட்சைக்கு இப்போதிருந்தே படிக்க வேண்டி யிருப்பதால் தங்கிவிட்டதாகக் கடிதம் எழுதினுன். அவன் ஹாஸ்டலில் சேர்ந்து படிக்கவில்லை. தனியே 'ரூம்' வைத்துக்கொண்டு ஹோட்டலில் சாப்பிட்டு வந்தான். ஹாஸ்டலில் நடக்கும் சமபந்தி போஜனம் வைத்தியநாத முதலியாருக்குச் சம்மதம் இல்லை. இப்போது விடுமுறைக்கு ஹாஸ்டல் கிடையாது. தனியே ஹோட்டலில் இருந்த முத்துவுக்கு அநுகூலமாகப் போயிற்று.

சென்னையிலிருந்து வந்த மனிதர் சொன்னவற்றிலிருந்து வைத்திய நாத முதலியாருக்குக் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. லீவுக்கு முத்து வராததும் சேர்ந்துகொண்டது. எப்படியாவது அவனுக்குப் பரீட்சை முடிந்தவுடன் கல்யாணத்தைச் செய்து வைத்துவிடவேண்டுமென்று தீர்மானம் செய்துகொண்டார். ''இங்கே அவசரமாக ஒரு வேலை இருக்கிறது. உன் கல்யாண விஷயமாக ஏற்பாடு செய்யவேண்டும். இரண்டு நாள் வந்து இருந்துவிட்டு உடனே போய்விடலாம்'' என்று கடிதம் எழுதினுர். ''கல்யாணமா! படிப்பே முடிந்தபாடில்லை. பி. ஏ. முடிந்தவுடன் மேலே சில ஆராய்ச்சிப் படிப்புக்குத் திட்டம் போட்டுக்கொண் டிருக்கிறேன். கல்யாணத்தைப்பற்றி ஒரு முயற்சியும் வேண்டாம்!'' என்று எழுதிவிட்டான் பிள்ளையாண்டான்.

'இப்போது இதை வற்புறுத்த வேண்டாம்; பரீட்சை முடியட்டும்; அப்புறம் கையோடே சுப காரியத்தை முடித்துவிடலாம். இன்னும் மூன்று மாசந்தானே?' என்று எண்ணியதோடு தீவிரமாகப் பெண்க ளுடைய ஜாதகங்களைப் புரட்டத் தொடங்கினுர். ஆனல் அதற்குள் காரியம் மிஞ்சிப் போய்விட்டது. முத்துவுக்கும் கல்யாணிக்கும் கல் யாணம் நடத்தும் விஷயம் சென்னையிலேயே தீர்மானமாகிவிட்டது. யதிராசபிள்ளைக்கு முத்து உள்ளதைச் சொல்லிவிட்டான். தன் தகப்பனுர் இந்தக் கல்யாணத்துக்கு இணங்குவது நடக்காத காரியம் என்றும், தன்னை நம்பிக் கல்யாணம் செய்து கொடுப்பதையன்றி வேறு வழியில்லையென்றும் தீர்மானமாகச் சொல்லிவிட்டான். அவர் தர்ம சங்கடத்தில் மாட்டிக்கொண்டார். முற்போக்கு எண்ணமுடையவ

ராலும் முத்துவை அவனுடைய குடும்பத்திலிருந்து பிரிப்பது போலாகி விடுகிறதே என்று வருந்தினர். தாய் தகப்பனைப் பிரிப்பது நல்லதா, காதலர்களைப் பிரிப்பது நல்லதா?—

பெண்விடுதலை, காதல்மணம் முதலிய விஷயங்களில் திட்டமான கருத்தையுடைய அவருக்குக் காதலரை உலகமே எதிர்த்தாலும் ஒன்று படச் செய்வதுதான் நியாயம் என்று பட்டது.

எதற்கும் தன் தீர்மானத்தைத் தகப்பனாருக்கு எழுதிவிடுவதென்று முத்து நினைத்து நீண்ட கடிதம் வரைந்தான். கல்யாணியின் உயர்ந்த குணங்களையும், படிப்புத் திறமையையும், அவள் தகப்பனாருடைய கௌரவத்தையும் எழுதினன். தங்கள் ஜாதி அல்ல என்ற ஒன்றைத் தவிர எல்லாவற்றிலும் உயர்ந்த சம்பந்தம் என்பதை விளக்கினன். 'சுந்தரர்க்குப் பரவை வாய்த்ததுபோல எனக்குக் கல்யாணி வாய்த்தாள். இது புண்ணியத்தின் புண்ணியமென்றும் சிவனருளென்றுமே நான் கருதுகிறேன்' என்று முடித்திருந்தான்.

வைத்தியநாத முதலியாருக்கு வந்த கோபம் கட்டுக்கு அடங்கவில்லை. ''மகாபாவி! பெரிய புராணத்தை மேற்கோள் காட்டுகிறான். சுந்தரராம்! பரவையாம்! இவன் கண்டானும்!'' என்று ஆரவாரித்துச் சீறி எழுந்தார்.

''இந்தக் கல்யாணத்தை நடத்த நான் சம்மதிக்க மாட்டேன். மீறி நடந்தால் எனக்கும் உனக்கும் சம்பந்தமே இராது. நீ செத்துப் போய்விட்டாயென்று நினைத்துக் கொள்கிறேன்'' என்று சுருக்கமாக எழுதியனுப்பி விட்டார்.

பையன் வழிக்கு வருவானென்று எண்ணினர்; வரவில்லை. விவாக முகூர்த்தம் நடக்கிற தேதியில் அவருக்குப் பத்திரிகை வந்தது. தடுக்க அவருக்குச் சந்தர்ப்பம் இல்லை. பல்லைக் கடித்துக்கொண்டு பத்திரிகையைச் சுக்கு நூறாகக் கிழித்துவிட்டு உள்ளே போய்க் குப்புறப் படுத்துக்கொண்டு விம்மினர். அவர் மனைவியும் புலம்பினள். இனிமேல் என்ன செய்வது!

பரீட்சையில் முத்து முதல்வனாக நின்றான். கல்யாணியும் தேர்ச்சி பெற்றாள். காதல் மணம் செய்துகொண்ட பிறகு முத்து தன் முயற்சியினாலேயே தான் வாழவேண்டுமென்று உறுதி பூண்டான். தகப்பனாருடைய ஆதரவை அவன் இழந்தான்; மாமனார் ஆதரவில் வாழ்வது மதிப்பன்று என்றெண்ணி அதையும் இழக்கத் துணிந்தான். சிறப்பாகத் தேர்ச்சி பெற்றதால் ஏதோ ஒரு பாங்கியில் வேலை கிடைத்தது. இப்போதைக்கு இருக்கட்டுமென்று ஏற்றுக்கொண்டு, தன் மனைவியோடு தனியே வாழத் தொடங்கினன்.

**ம**னசு முறிந்து போன வைத்தியநாத முதலியார் 'உள்ளது போதும்' என்று சொல்லி இரண்டு வருஷங்களில் ஜவுளிக் கடையை ஒரு நண்பருக்குக் கொடுத்துவிட்டார். சேர்த்த பணத்தை வாங்கிக்கொள்ளக் கூடியவன் தமக்கு உதவாமற் போனபோது, மேலும் மேலும் யாருக்காகப் பணம் சம்பாதிக்க வேண்டும்? உள்ளத்துக்குள்ளே வருத்தம் நெருப்புத் தணலைப்போல அடங்காமல் இருக்க, அவர் சிவ பூஜையினாலும் தேவார பாராயணத்தினாலும் தல தரிசனத்தினாலும் அதை அவிக்கப் பார்த்தார். உலகத்தில் என்ன நடக்கிறதென்பதைப்பற்றி அவருக்குக் கவலையே இல்லை. ஊரில் நடப்பதைப்பற்றி அவர் சிறிதும் காதில் போட்டுக்கொள்வதில்லை. ஒரு விதத்தில் பற்றற்ற துறவியைப்போல வாழ்ந்து வந்தார். ''பாவம், நல்ல மனுஷன்! மனம் முறிஞ்சு போச்சு! ஒரு விஷயத்துக்கும் வரவில்லை'' என்று ஊரார் பேசிக்கொள்வார்கள்.

அவருடைய மனைவி, என்ன இருந்தாலும் பெற்ற தாயல்லவா? எப்படியாவது பிள்ளைக்கும் தகப்பனுருக்கும் சமாதானம் உண்டாக்க வேண்டுமென்று முயற்சி பண்ணினுள். ''அவனை நீங்கள் பிள்ளையாக ஏற்றுக்கொள்ள வேண்டாம். விரோதியாகப் பாவிக்காமல் இருங்களேன். உங்கள் மனசுதான் கல். என் மனசு கிடந்து தவிக்கிறதே! அவன் முகத்தையாவது பார்த்து ஆறுதல் பெறுவேனே!'' என்று அழாக் குறையாகக் கெஞ்சுவாள்.

''அதெல்லாம் என் காதில் போடாதே. நீ வேண்டுமாளுல் உன் அருமைப் பிள்ளையோடே போய் இருந்துவிடு. நான் நல்லதாய்ப் போயிற்றென்று எங்கேயாவது மடத்துக்குப் போய்க் காஷாயம் வாங்கிக்கொள்கிறேன்'' என்று முதலியார் சொல்வார். அவர் வார்த்தை பயமுறுத்துவதற்காகச் சொன்னதல்ல; அவர் அப்படியே செய்யக்கூடியவர்.

''ஒரு தடவை நீங்கள் பட்டணத்துக்குப் போய் அவனை நேரே பார்த்து ஒரு வார்த்தை கேட்டுவிட்டு வாருங்கள்'' என்பாள்.

''என்னத்தைக் கேட்பது? ஆற்றிலே கரைத்த புளியை உருட்டித் திரட்ட முடியுமா? போடி பைத்தியக்காரி. அதெல்லாம் மறந்துவிடு. 'உற்ருர் ஆருளரோ?' என்று தெரியாமலா அப்பர் சுவாமிகள் பாடினுர்?'' என்று பதில் வரும்.

''நாளுவது போய் வேறு ஒருவர் வீட்டில் இருந்து, பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று கெஞ்சுவாள்.

''பார்த்துவிட்டு வரவேண்டியதில்லை. அங்கேயே தங்கிவிடலாம்'' என்று கொதிப்போடு பதில் சொல்வார். அதற்கு மேலே பேச வகை இராது.

3

சில காலமாக - சில மாசங்களாக - முதலியாருடைய மனைவி தன் பிள்ளையைப்பற்றி அவரிடம் பேசுவதே இல்லை. காரணம் அவள் இப்போது ஒரு குழந்தையிடம் தன் அன்பு முழுவதையும் வைக்க ஆரம்பித்தாள். அது முதலியாருக்கு ஒரு வகையில் ஆறுதல் தந்தது.

ஒரு நாள் முதலியாருடைய மனைவி கோயிலுக்குப் போய்விட்டு வரும்போது ஒரு குழந்தையை எடுத்துக்கொண்டு வந்தாள். குழந்தையின் எழிலும் சுறுசுறுப்பும் முதலியாரின் உள்ளத்தைக் கவர்ந்தன.

''எங்கே இந்தச் சிநேகம் பிடித்தாய்?'' என்று கேட்டார் முதலியார்.

அவர் மனைவி அவருக்குப் பதில் சொல்லாமலே, ''மங்கையர்க்கரசி'' என்று கூப்பிட்டாள். நேரே உள்ளே சென்ற ஒரு பெண் வந்து முதலியாரை நமஸ்காரம் செய்தாள். குழந்தையின் தாய் அவள். முதலியார் மனைவி, ''கோவிலுக்குப் பக்கத்தில் குடியிருக்கிருர்கள். நான் அடிக்கடி கோவிலில் சந்திக்கிறதுண்டு. நல்ல பெண். தேவாரம் வெகு அழகாகப் பாடுகிருள். இந்தக் குழந்தையைப் பாருங்கள். என்ன அழகாக இருக்கிறது!'' என்று சொல்லிக் குழந்தையை முதலியார் அருகில் விட்டாள்.

முதலியார் குழந்தையை ஏற இறங்கப் பார்த்தார். மெல்ல எடுத்துக்கொண்டார். குழந்தை அழவில்லை; ''வேற்று முகம் இல்லை போல இருக்கிறது'' என்று சொல்லித் தம் மனைவியைப் பார்த்தார். அதற்குள் அந்தப் பெண், ''உங்களைக் கண்டால் இந்தப் போக்கிரிக்குப் பிடித்திருக்கிறது'' என்ருள்.

''என்னையும் போக்கிரி யென்ரு சொல்கிருய்?'' என்று முதலியார் கேட்டார்.

எல்லாரும் கொல்லென்று சிரித்தார்கள். இந்தக் காட்சி அந்த வீட்டிற்குப் புதியது.

''உன் பெயர் மங்கையர்க்கரசியா? நல்ல பேர். குழந்தைக்கு என்ன பேர் வைத்திருக்கிறீர்கள்?'' என்றார் முதலியார்.

''ஞான சம்பந்தம்'' என்று அந்தப் பெண் கூறினாள்.

''பேஷ்! அருமையான பேர். உன் புருஷர் என்ன வேலை பார்க்கிறார்?''

''குமாஸ்தா வேலை பார்க்கிறார்.''

''சைவர்கள்தானே?''

''ஆமாம்!'' என்று முதலியார் மனைவி பதில் சொன்னாள்.

அது முதல் மங்கையர்க்கரசியும் குழந்தையும் அடிக்கடி முதலியார் வீட்டுக்கு வருவதும் போவதுமாக இருந்தார்கள். ''ஒரு நாள் உன் புருஷரையும் கூட்டிக்கொண்டு வாயேன்'' என்று முதலியார் சொன்னார். ''இரவும் பகலும் வேலை. அவசியம் உங்களைப் பார்க்க வேண்டுமென்று அவர் சொல்லிக்கொண்டிருக்கிறார். வேளை வரவில்லை. நான் சொன்னேன் உங்களைப்பற்றி. அவர் ஏதாவது கோபித்துக்கொண்டால் நான் இந்த வீட்டுக்கு வந்துவிடுவேனென்றுகூடச் சொல்லியிருக்கிறேன். என்னை அந்தரத்தில் விட்டுவிட்டுப் போய்விடாதே என்று அவர் வேடிக்கையாகச் சொன்னார். நீங்களும் அங்கே வந்து உறவு கொண்டாடினால் சரியாகிவிடுகிறது என்றேன். ஏன், நான் சொன்னது என்ன, சரிதானே?'' என்று முதலியார் மனைவியைப் பார்த்து மங்கையர்க்கரசி கேட்டாள்.

''சரியான பேச்சு!'' என்று முதலியார் பதில் சொன்னார்.

மங்கையர்க்கரசி, ஞானசம்பந்தன் என்ற பெயர்களே முதலியாரைக் கவர்ந்தன. மங்கையர்க்கரசி இனிமையாகத் தேவாரம் பாடுவாள். அதைக் கேட்டு முதலியார் மிகவும் ஈடுபட்டார். வறண்ட பாலைவனம் போல இருந்த அவர் உள்ளத்தில் அன்பு சுரந்தது. குழந்தை நாளுக்கு நாள் அவர் உள்ளத்தில் இடங்கொண்டான்.

மங்கையர்க்கரசி தேவாரம் பாடும்போது அவர் உருகிப் போவார். ஒரு நாள் அவள், ''ஈன்றாளுமாய் எனக் கெந்தையுமாய் உடன் தோன்றினராய்'' என்ற பாட்டை அருமையாகப் பாடினாள். முதலியார் உருகிக் கண்ணீர் விட்டார். விம்மினார். பாட்டை நிறுத்தியவுடன் மங்கையர்க்கரசியை மேலும் கீழும் பார்த்தார். பெருமூச்சு விட்டார்.

''என்ன, அப்படிப் பார்க்கிறீர்களே!'' என்று சிரித்துக்கொண்டே கேட்டாள் மங்கையர்க்கரசி.

''ஒன்றும் இல்லை. ஏதோ பழைய ஞாபகம் வந்தது'' என்றார்.

''அதைத்தான் அவளுக்குச் சொல்லுங்களேன். நம்முடைய பெண்ணைப்போல ஆகிவிட்ட பிறகு அவளுக்குத் தெரிவதிலே என்ன தோஷம்?'' என்று எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த அவர் மனைவி சொன்னாள்.

''ஒன்றும் இல்லை. உன்னைப்போல ஒரு பெண் இந்த வீட்டில் இருந்து வாழ வேண்டியவள். நான் அதற்குக் கொடுத்து வைக்கவில்லை. நடக்க வேண்டியபடி நடந்திருந்தால் உன்னைப்போல ஒரு பெண் இங்கே எனக்கு மருமகளாய் வந்து வாழ வேண்டும்..'' என்று மேலே சொல்ல முடியாமல் தத்தளித்தார்.

''ஆமாம்; அம்மா கூடச் சொன்னார்கள். உங்கள் பிள்ளை உங்களை விட்டுவிட்டுத் தனியே இருக்கிறாராம்.''

"பிள்ளையாவது, மண்ணாவது! காலம் கெட்டுப் போயிற்று. அவன் எவளையோ கட்டிக்கொண்டு விட்டான். அவள் அவனை எப்படி எப்படி இழுத்துக் கூத்தடிக்கிறாளோ! ஹூம்! பிராப்தம் அவ்வளவுதான். நான் எத்தனை எண்ணியிருந்தேன்! உன் மாதிரி ஒரு நல்ல பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்திருந்தால்—"

அவர் மனைவி இடையிலே பேசினாள்: "உன்னைப்போல ஒரு மருமகள் வேண்டுமென்றுதான் அவர் திட்டம் போட்டிருந்தார். ஆனால் கடவுள்—"

"கடவுள் என்ன செய்வார் அம்மா? அவருடைய திருவருள் இல்லாவிட்டால் உலகம் நடக்காது. அவர் செய்வதெல்லாம் நல்லதென்றே ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று மங்கையர்க்கரசி சொன்னாள்.

'இவ்வளவு அறிவாளியாக இருக்கிறாளே, இந்தப் பெண்!' என்று ஆச்சரியப்பட்டார் முதலியார். 'இவளைப்போல ஒருத்தி அவனுக்குக் கிடைக்காமற் போனாளே!' என்று ஏங்கினார்.

## 4

அந்தக் குழந்தைதான் எதிரே உட்கார்ந்திருக்கிறது. அதன் பால் வடியும் முகத்திலே சொக்கிப்போன முதலியார் பாராயணத்தை மறந்து சிந்தனையில் ஈடுபட்டிருந்தார். 'மங்கையர்க்கரசி: என்ன அழகான பெயர்! அந்தப் பெயருக்கேற்ற பெண். அவளுக்கேற்ற குழந்தை. இருக்கிறபடி இருந்திருந்தால், முத்துவுக்கும் ஒரு மங்கையர்க்கரசி கிடைத்திருப்பாளே! அவர்களுக்குக் குழந்தை பிறந்தால் ஞானசம்பந்தன் என்றுதானே பெயர் வைத்திருப்போம்!'..முன்னாலே விளையாடிக்கொண்டிருந்த குழந்தையை மறுபடியும் பார்த்தார். 'இவனுக்கும் எனக்கும் என்ன உறவு? என் மனசைக் கரைக்கும் இந்தக் குழந்தையைப்போலத் தானே அவன் குழந்தையும் இருக்கும்!' இப்படிச் சென்ற சிந்தையை மீட்டுக்கொண்டார். "சம்பந்தம், இங்கே வா" என்று குழந்தையை அழைத்தார். அது மெல்லத் தளர் நடையிட்டு வந்து முதலியாரின் முதுகின்மேல் சாய்ந்துகொண்டது. அதில்தான் எத்தனை இன்பம்! ஏதோ நினைவு வந்தது முதலியாருக்கு. "மங்கையர்க்கரசி!" என்று கூப்பிட்டார். உள்ளேயிருந்து குழந்தையின் தாய் வந்தாள். "உன் புருஷர் எப்போது ஊரிலிருந்து வருகிறார்?" என்று கேட்டார்.

"ஏன், நான் இரண்டு நாள் இங்கே இருந்தது உங்களுக்குப் பொறுக்கவில்லையா? இப்போதே எங்கள் வீட்டுக்குப் போய்விடுகிறேன்" என்று பொய்க் கோபத்தோடு கேட்டாள் மங்கையர்க்கரசி.

"என்ன, இப்படிப் பேச்சிலே பிடித்துக்கொள்கிறாயே; நான் அப்படிச் சொல்வேனா? இன்னும் நான் அவரைப் பார்க்கவில்லையே; வந்தால் இங்கே அழைத்துக்கொண்டு வா. அல்லது நான்தான் உங்கள் வீட்டுக்கு வருகிறேனே!"

"உங்கள் வீடு எங்கே? எங்கள் குடிசை எங்கே? அங்கே வந்தால் என்னைப்பற்றிய நல்ல அபிப்பிராயமெல்லாம் உங்களுக்குப் போய்விடும். எங்கள் வீடு சேரிபோல இருக்கும்."

"நீ படித்த பெண். இங்கிலீஷ்கூடக் கொஞ்சம் தெரியும் என்கிறாய். நீ எல்லாவற்றையும் சுத்தமாக வைத்திருப்பாயென்று எனக்குத் தெரியாதா? இங்கே நீ பண்ணும் காரியத்தைக்கொண்டு அதை ஊகிக்கத் தெரியாத முட்டாள் என்று வைத்துவிட்டாயோ?"—முதலியார் சகஜமாகப்

பேசினர். அந்த நிலைக்கு அவரைக் குழந்தையும் தாயும் கொண்டுவந்து விட்டார்கள்.

''உங்களுக்குத்தான் இங்கிலீஷ் என்ருலே ஆகாது. அதிலும் படித்த பெண் என்ருல் அடியோடு பிடிக்காது. ஏதோ போனுல் போகிறதென்று என்னைக் கண்டால் வெறுப்பதில்லை. நானும் ஒரு பி. ஏ. யாக இருந்தால் என் முகத்தில்கூட விழிக்கமாட்டீர்களே!''

''என்ன அப்படிப் பேசுகிருய்? உன்னைப்பற்றிக் குறைத்துப் பேசினுல் என் மனசு கஷ்டப்படுகிறது. நீ பி. ஏ. படித்தால் மிகவும் நல்லது. உன்னுேடு சேர்ந்து அது நல்லதாகிவிடும். நான் என்ன, கல்வியறிவையே வெறுக்கிறவனு?''

''பின்னே அடிக்கடி இங்கிலீஷ் படிப்பென்று கரிக்கிறீர்களே?''

''நான் சுட்டுக்கொண்டவன் அம்மா, சுட்டுக்கொண்டவன். அந்த வேதனையைத் தாங்காமல் அப்படிச் சொல்கிறேன்.''

''என்னிடமும் அதே படிப்பு இருக்கிறதென்ருல் உங்கள் மனசு வேதனைப்படாதா?''

''அது வேறு விஷயம். படிப்பினுல் கெட்டுப் போகாத நிலை உனக்கு இருக்கிறது.''

''படிப்பினுல் மனிதர்கள் கெட்டுப் போகிருர்களென்று நீங்கள் சொல்லத்தான் கேட்கிறேன். நல்ல வேளை; நான் உங்களிடம் நல்ல பேர் எடுத்துவிட்டேன். இனிமேல் உண்மையைச் சொல்லலாம். நானும் பி. ஏ. படித்தவள்தான். எங்கள் தகப்பனுர் படிப்பினுல் அறிவு விரிவமென்று நம்புகிறவர். என்னைப் படிக்க வைத்தார்.''

''உன்னைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லையே! தேவாரம் பாடுகிருயே! முகத்தில் பளிச்சென்று திருநீறும் குங்குமமும் இட்டுக்கொள்கிருயே!''

''ஐயோ பாவம்! உங்களுக்கு யாரோ சரியானபடி போதித்திருக்கிருர்கள். இங்கிலீஷ் படிப்பில் திருநீறு பூசவேண்டாம், குங்குமம் இட்டுக் கொள்ளவேண்டாம், கடவுளை நம்பவேண்டாம் என்றுதான் இருக்கிறதென்று யாரோ உங்கள் அறிவில் ஏற்றிவிட்டார்கள். நான் சொல்கிறேன், கேளுங்கள். நல்லவன் கையில் பணம் கொடுத்தால் அவன் நல்லதற்கு உபயோகப் படுத்திக் கொள்வான். தீயவன் கையில் கொடுத்தால் அவன் தீய வழியில் செலவழிப்பான். கெட்டுப்போகிற பெண்களெல்லாம் இங்கிலீஷ் படித்துத்தான் கெட்டுப்போகிருர்களா? அப்படியானுல் ஆடவர்களை அது கெடச் செய்யாதா? எத்தனை ஆங்கிலம் படித்த ஆடவர்கள் இந்திய நாட்டுக்கு அணிகலமாக விளங்குகிருர்கள்? எத்தனை பேர் சிறந்த தலைவர்களாக இருக்கிருர்கள்?''

''சரி, சரி, உன்னைப் பேசவிட்டால் பெரிய பிரசங்கமே பண்ணிவிடுவாய் போலிருக்கிறது. நீ எம். ஏ. படித்தவளென்று சொல்லிக்கொள்; எனக்கு ஆட்சேபம் இல்லை. உன் புருஷர் எப்படிப்பட்டவரோ? இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. ஒருகால்—''

''நீங்கள் பெரிய சந்தேகப் பேர்வழியாக இருக்கிறீர்களே. அவர் என்னைக் காட்டிலும் அழகாகத் தேவாரம் பாடுவார். அவரே எனக்குத் தேவாரம் கற்றுக் கொடுத்தார். பிரசங்கங்கூடப் பண்ணுவார்.''

''அடேடே! அப்படியிருந்துமா, என் கண்ணிலே காட்டாமல் வைத்திருக்கிருய்?''

''அவரைக் காட்டிவிட்டால் பிறகு என்னை மறந்துவிடுவீர்களே! நானும், இங்கே தேவாரம் பாடாவிட்டால் வேறு எங்கே போய்ப் பாடுவேன்? நீங்கள் என்னை மறக்க, நான் தேவாரத்தை மறக்க வேண்டியது தான்!''

கேட்டுக்கொண்டே இருந்த முதலியார் திடீரென்று, ''ஏய், இங்கே வா'' என்றார். தம் மனைவியை அவர் அழைக்கும் பாணி அது. அவள் வந்தாள். ''மங்கையர்க்கரசி எவ்வளவு சாமர்த்தியமாகப் பேசுகிறாள் பார்த்தாயா? இவ்வளவு பேசுவாளென்று நான் நினைக்கவில்லையே!'' என்று புன்னகையோடு சொன்னார்.

''உங்கள் வார்த்தை நிமிஷத்துக்கு ஒரு தடவை மாறுகிறது. சிறிது நாழிகைக்குமுன் என்னைப் புகழ்ந்தீர்கள்; இப்போது வாயாடி, சண்டைக்காரி என்று வையாமல் வைகிறீர்கள்'' என்று வேடிக்கையாகக் கூறினாள், மங்கையர்க்கரசி.

முதலியார் முகம் சுருங்கியது. சற்றே வேதனை அடைந்தவர் போல, ''என்ன அம்மா அப்படிச் சொல்கிறாய்? உன்னைத் தவறு சொன்னால் எனக்கு வாய் வெந்துபோகும். நீ சாக்ஷாத் மங்கையர்க்கரசிதான்'' என்று குரல் தழுதழுக்க, மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும் பாவனையில் சொன்னார்.

''நான் மங்கையர்க்கரசி; அப்படியானால் என் கணவர் கூன்பாண்டியராக்கும்! அவர் காதில் பட்டால் என்ன சொல்வார்?'' என்று வேடிக்கையைத் தளர்த்தாமற் பேசினாள் அவள்.

முதலியார் பெரிய புராணத்தில் பெருமதிப்புடையவர். ''கூன் பாண்டியரல்ல; கூன் நிமிர்ந்த நெடுமாறர்'' என்று உடனே பதில் சொன்னார்.

''முன்னாலே ஏதோ தப்புப் பண்ணித் திருந்தினவர் என்று சொல்கிறீர்களா?'' என்று மடக்கினாள்.

''இப்படி இழுத்துக்கொண்டே போனால் பேச்சிலே நான் சிக்கிக் கொள்வேன். தோல்வியை ஒப்புக் கொள்கிறேன். மறுபடியும் கேட்கிறேன்: உன் புருஷரை என் கண்ணிலே காட்டப்போகிறாயா இல்லையா?''

''கேள்வியைப் பார்த்தால் உங்களுக்கு ஏதோ உரிமை இருப்பது போலவும், அதை ஸ்தாபித்துக் கொள்பவர் போலவும் இருக்கிறதே!''

''ஏய்; இங்கே வா. மங்கையர்க்கரசி 'லா பாயின்ட்' பேசுகிறாள் பார்த்தாயா? நீ வந்துதான் சமாதானம் பண்ணவேண்டும்.''

முதலியார் மனைவி வந்தாள். ''என்ன சொல்லுகிறீர்கள்?'' என்றாள்.

''இவள் புருஷரை அழைத்து வா என்று சொல்கிறேன். பிடி கொடுத்தே பேசமாட்டேன் என்கிறாள்.''

''நீங்களே சொல்லுங்கள் அம்மா: மங்கையர்க்கரசி என்று என்னைப் பாராட்டினால், என் கணவர் கூன்பாண்டியரென்றுதானே அவர் நினைக்கிறார்?''

''நான் அப்படிச் சொல்லவில்லையே! கூன் நீங்கிய பாண்டியரென்றல்லவா சொன்னேன்?''

''சரி, அப்படியே வைத்துக் கொள்வோம். அப்படியானால், அவருக்கு ஏதோ கூன் இருந்தது போலவும், அது நீங்கிவிட்டது போலவும்

அல்லவா ஏற்படுகிறது? அங்கே ஞானசம்பந்தர் கூன் நீக்கினரே; இங்கே யார் அப்படி?'' என்றாள் மங்கையர்க்கரசி.

''இதோ இருக்கிறனே!'' என்று முதலியாரின் மனைவி அங்கிருந்த குழந்தையைச் சுட்டிக் காட்டினாள்.

முதலியார் ஆசையோடு குழந்தையைத் தழுவிக்கொண்டார். ''ஞானசம்பந்தன், என் கண் ஞானசம்பந்தன்!'' என்று உருகிக் கண்ணீர் விட்டார்.

''ஆஹா! என்ன பொருத்தம்!'' என்று மங்கையர்க்கரசி சிரித்துக் கொண்டே சொன்னாள்.

''ஊரிலிருந்து வந்தவுடன் அவரை அழைத்துக்கொண்டு வருகிறாயா?''

''வருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. அவரைக் கண்டபிறகு என் மேல் அன்பு குறையக் கூடாது. இந்த ஞானசம்பந்தனையும் மறக்கக் கூடாது.''

''உங்களால்தானே அவர் உறவு எனக்கு?''

''இப்போது அப்படிச் சொல்வீர்கள். அவரைக் கண்டபிறகு எல்லாம் மாறிவிடும். அவர் அப்படிப்பட்டவர். அதுவும் உங்களைச் சந்தித்தால் அவரும் உங்களை விடமாட்டார்; நீங்களும் விடமாட்டீர்கள்.''

''நல்லதுதானே? நமக்கு ஒரு மகளும் மகனும் கிடைத்ததாக எண்ணிக்கொள்கிறேன்.''

''பேரன்?''

''இவனை விடுவேனா? என் கண் அல்லவா?''

''அப்படியானால் சரி.''

## 5

முதலியார் தேவார பாராயணம் செய்துகொண்டிருந்தார். இரண்டு நாட்களாக மங்கையர்க்கரசி வரவில்லை. அவளைக் காணாதது அவருக்கு ஏதோ மாதிரி இருந்தது. அவள் குழந்தையைக் காணாததனால் அவருக்கு இருப்பே கொள்ளவில்லை. தம் மனைவியைக் கேட்டார்.

''ஏதோ வீட்டில் வேலையாம். அவள் புருஷர் இன்றோ நாளைக்கோ வருகிறாராம்'' என்று சொன்னாள்.

பேசிக்கொண்டிருக்கும் போதே வாசலில் ''தாத்தா!'' என்ற சத்தம் கேட்டது. குடுகுடுவென்று குழந்தை ஞானசம்பந்தன் ஓடி வந்தான். இரண்டு நாளாகக் காணாத ஆவல் அவனுக்கு இருக்கும் அல்லவா? குழந்தைக்கு என்றும் இல்லாதபடி அலங்காரம் செய்திருந்தார்கள். முதலியார் எல்லாவற்றையும் மறந்து எழுந்து ஆவலோடு குழந்தையை வாரி எடுத்தார். அடுத்தபடி மங்கையர்க்கரசி மெல்ல வந்தாள். ''எங்கேயம்மா, இரண்டு நாளாகக் காணவில்லை?'' என்றார் முதலியார்.

''கூன்பாண்டியரை அழைத்து வந்திருக்கிறேன்.''

''என்ன விளையாடுகிறாயே!''

''இல்லை, இல்லை; கூன்பாண்டியரை நெடுமாறராக்க வேண்டும். இந்த ஞானசம்பந்தன் பாதி ஆக்கியிருக்கிறான். மற்றப் பாதியைச் சிவ பெருமானைப் போல, வைத்தீசுவரரைப் போல நீங்கள்தான் ஆக்க வேண்டும்!'' என்று சொல்லி வாசற்பக்கம் போனாள். ஒரு நிமிஷத்தில் அவள் கணவரை உள்ளே அழைத்து வந்தாள். கண்மூடிக் கண்திறக்கும் நேரத்தில் இருவரும் முதலியார் காலடியில் விழுந்து எழுந்தார்கள்.

முதலியார் கண்ணை முன்னே ஓட்டினார். ''என்ன, முத்துவா!'' அவர் ஸ்தம்பித்துப் போய்விட்டார்.

''அப்பா!'' என்றான் முத்து.

மங்கையர்க்கரசி குழந்தையை மெல்ல வாங்கிக் கொண்டாள். முதலியார் கண்ணில் நீர் சொரிந்தபடியே வேகமாகச் சென்று முத்துவைக் கட்டிக்கொண்டார்.

இந்த அரிய காட்சியை அருகில் இருந்தபடியே, முதலியார் மனைவி பார்த்துக் குதூகலம் அடைந்தாள். அவளுக்கல்லவா தெரியும், இதற்காக எவ்வளவு நாடகம் நடத்த வேண்டியிருந்தது என்று?

அன்றுமுதல் கல்யாணி மங்கையர்க்கரசி யாகிவிட்டாள். ★

—ஏப்ரல், 1947.

அகலிகை சாப விமோசனம்




க. ராமமோஹன் சாஸ்திரி

ஜனவரி, 1933

கி. சந்திரசேகரன்

# சாருபாலா

நிலைக்கண்ணாடியின் முன் நின்றுகொண்டிருந்தாள் சாருபாலா. அவளுக்கு நாற்பது வயசு முடிந்திருந்தும், கண்ணாடியில் தெரிந்த உருவம் இன்னும் பத்து வருஷங்கள் குறைவாகவே மதிப்பிடும்படி இருந்தது. தன் இடது கையை மடக்கி இடுப்பிலே குத்திட்டும், வலது கரத்தைத் தொங்கவிட்டும் அவள் நின்ற மாதிரி, நாட்டியக் கலையில் அவளுக்குள்ள ஈடுபாட்டைப் புலப்படுத்தியது. ஒரு கணம் தன்னையே அங்கம் அங்கமாய் ஆராய்ந்தாள். கீழே சாய்த்த பார்வையைத் தனது மார்பகத்தின் மேல் செலுத்தினாள். ஒரு முறை கண்ணாடியில் ஒய்யாரமாய் நிற்கும் வடிவைக் கண்டு மன எழுச்சியில் லயித்தாள். தலையைக் குனிந்து தன்னையே இரண்டாம் தடவை கவனித்துக்கொண்டாள். ஓர் இழைகூட வெளுக்காத அவள் கேசம், தைலமிட்டுப் படிய வாரப்பட்டு, கோடிட்ட வகிட்டின் இருபக்கமும் கறுத்து மின்னியது. அதைப் பார்த்தால், எதனால் புது நாகரிகத்தில் திளைக்கும் பெண்கள் சிறிதும் அழகின்றி மயிரை வாராமல் பிரித்து விட்டுக்கொள்ளுகிறார்கள் என்றே வியக்க வேண்டி இருந்தது. மேலும், நூல் பிடித்தாற்போல வகிடு எடுப்பதன் முழுத் தத்துவமும் கலையுணர்ச்சி மலிந்தவர்களுக்கு ஓர் விருந்தாகவே விளக்கம் தரும்படியாகச் சாருபாலாவின் தலையின் வட்டம் பொருத்தமாய் அமைந்திருந்தது.

அப்படியே அவள் அதிக நேரம் காட்சிதர இயலாததற்குக் காரணம் அவள் இருந்த அறையினுள் யாரோ நுழைந்த காலடிச் சப்தமேதான். அரவம் கேட்டுத் திரும்பியவள், குழியிட்ட கன்னங்களுடன், ''வாத்தியார் ஐயாவா? வாருங்கள். ஏது இவ்வேளைக்கு?'' என்று, உள்ளே வந்த ஒரு கிழவரை மிக்க மரியாதையுடனே வரவேற்றாள்.

''எல்லாம் காரியமாகத்தான். உன்னாலே ஆகவேண்டும்!'' என்று நட்டுவனார் மாரியப்பபிள்ளை சொல்லியவாறே தமக்காக அளிக்கப்பட்ட ஆசனமொன்றில் உட்கார முன்வந்தார்.

மாரியப்ப பிள்ளைக்கு வயசு சுமார் எழுபது இருக்கும். அவர் நெற்றியில் விபூதியை அப்பியிருந்ததால் புருவங்களின் நரையை நிர்ணயிக்க முடியவில்லை. தலை தும்பைப் பூவாய் வெளுத்திருந்தது; அது அவருக்குக் கண்யமான தோற்றத்தை அளித்திருந்தது. நெற்றி நடுவிலுள்ள பெரிய குங்குமப் பொட்டைப் பார்த்தால் கோவிலிலிருந்து நேரே திரும்பியவரென்று பட்டது.

ஆசனத்தில் அவர் அமருவதற்குள், 'தாத்தா, தாத்தா' என்று ஒரு கீச்சுக்குரல் அடுத்த அறையிலிருந்து கேட்டது. கிழவருடைய முகம் மலர்ந்தது. குரலைத் தொடர்ந்து, எட்டு வயசுக்குள் இருக்கும் ஒரு சிறுமி அவ்விடம் ஓடோடியும் வந்து, அவர் கையைக் கெட்டியாய்ப்

பிடித்துக்கொண்டு, ''தாத்தா, நீ எப்போ வந்தே?'' என்று கொஞ்சினாள்.

''என்னைக் கண்டால் எத்தனை குஷி பார்த்தாயா பரிமளாவுக்கு?'' என்றார் மாரியப்பபிள்ளை, சாருபாலாவின் பக்கம் திரும்பி.

அதற்குள், ''பரிமளா, போ அம்மா உள்ளே. பாடம் படி. வாத்தியார் கொடுத்த கணக்கைப் போடு. அப்புறம் தாத்தாகிட்டே வரலாம்'' என்றாள் சாருபாலா. அவள் குரலில் சிறிது கடுகடுப்புத் தொனித்தது.

கிழவரின் வலக் கையைத் தன் சிறு கரங்களால் சேர்த்துப் பிடித்திருந்த பரிமளாவின் உள்ளம் தளர்ந்தது. தானாகவே பிடியும் தளர்ந்தது. வாட்டமடைந்த முகத்துடன் அவள், ''தாத்தா, நான் சட்னு வந்தூடறேன். வரத்துக்குள்ளே நீ போகப்படாது. தெரியுமா?'' என்று தீராத வருத்தத்துடன் அவரிடம் தனக்குள்ள சலுகையைக் காட்டினாள்.

அவளைக் கிழவர் அப்படியே கைகளால் வாரித் தூக்கிக்கொண்டார்; சிறிது சிரிப்புக் கலந்து பேசவும் பேசினார்: ''நான் போகவில்லையடா, கண்ணு! கணக்கும் போடவேண்டாம், ஒன்றும் நீ செய்யவேண்டாம். இங்கேயே என்னோடு இரு'' என்றார். உடனே சாருபாலாவைப் பார்த்து, ''சாரு, என்னம்மா இத்தனை சின்னக் குழந்தைக்குச் சதா கணக்கும் பாடமும்? ஆட்டமும் பாட்டுமாக அதன் மனசைச் சந்தோஷமாக வைத்துக்கொள்கிறதா? இல்லை, இப்போதே மனசு ஒடிந்து போகிறதா? உன்னைச் சின்னப் பொழுதிலே யார் இப்படியெல்லாம் கசக்கினார்களாம்?'' என்று மனங் கசந்து சொன்னார்.

சாருபாலா பெருமூச்செறிந்தாள். நட்டுவனாரிடம் தனக்குள்ள முழு உரிமையுடனும் சொன்னாள்: ''என்ன இது? அதன் எதிரே ஏதுக்கு இதெல்லாம் சொல்றீங்க? ஏற்கனவே, சொன்னதைத் துளிக்கூட அது கேட்கிறதே இல்லை! நீங்க வேறே அதுக்கு எதிரே படிப்பு வேண்டாமென்று சொல்லிவிடுங்கள். அது வாத்தியாரை ஏமாற்றிக்கொண்டு திரிகிறது. இனிமேல் ஜாஸ்தி ஆகிவிடும் அதற்கு; அவ்வளவுதான். செல்லங் கொடுத்துக் கொடுத்துத்தான் கெட்டுவிட்டது'' என்று பின்னும் கடுமை தொனிக்கும் குரலில் பேசினாள்.

இதனிடையில் பரிமளா மாரியப்ப பிள்ளையின் தோள் பக்கம் திரும்பி, அவர் குடுமியில் செருகியிருந்த மல்லிகைப்பூவை எடுத்துக்கொண்டே, ''ஏன் தாத்தா, கோவிலுக்கா போனே? என்னை அழைச்சிண்டு போறேன்னையோன்னோ? போ, நீ ஏமாத்தறே!'' என்று துக்கத்துடன் சொல்லித் தன் தலையை அவர் தோளின்மேல் சாய்த்தாள்.

கிழவர் அவள் முதுகைத் தம் கையால் தடவிக் கொடுத்துக்கொண்டே சமாதானப்படுத்தினார். ''நிச்சயமாக நாளைக்கு அழைத்துக்கொண்டு போகிறேன். ஆனால் சமர்த்தாக அம்மா சொன்னதைக் கேட்க வேண்டும். கேட்கவில்லை; அழைத்துக்கொண்டே போகமாட்டேன்!'' என்று பயமுறுத்திக்கொண்டே குழந்தையைக் கீழே இறக்கிவிட்டார்.

பரிமளா தன் வலக்கை ஆள்காட்டி விரலினால் அடுத்த விரலைச் சுற்றிச்சுற்றி வைக்கப் பாடுபட்டுக்கொண்டே, ''ஏன் தாத்தா, இதானே கிளி?'' என்று அவரிடம் தன் இரண்டு விரல்களையும் காட்டினாள்.

மாரியப்ப பிள்ளையின் கிழ முகத்தில் ஒளி படர்ந்தது. சிறுமியைத் தம் பக்கம் இழுத்துக்கொண்டே, ''என்ன அழகு அம்மா, உன் பிஞ்சுக் கைக்குத்தான்! கிளி கொஞ்சுகிறது உன் விரலிலே! இதோ பார். உங்கள் அம்மா கிடக்கிறாள்! நான் உனக்கு நாட்டியம் சொல்லி வைக்கிறேன். நீ எல்லாம் செய்யலாம். பயப்படாதே! வருகிற விஜய தசமிக்குப் பாரேன், உனக்குப் பாடம் ஆரம்பித்துவிடுகிறேன்'' என்றார் தனியான மன எழுச்சியுடன்.

சாருபாலா சட்டெனக் குறுக்கிட்டாள்: ''ஐயோ, போதுமே என்னுடைய இந்த நாட்டியமும் கூத்தும்! அதற்கு ஒன்றும் இதெல்லாம் வேண்டியதில்லை. நன்றாகப் படித்துப் பாஸ் பண்ணி, எங்கேயாவது நல்ல இடத்திலே கல்யாணமாகிக் குடித்தனம் பண்ணட்டும். நீங்கள் விளையாட்டாகக்கூட இப்படிப் பேசாதீர்கள். என்னோடு இதெல்லாம் முடிந்துவிட வேண்டுமாக்கும்!'' என்று திரும்பவும் அதிருப்தி நிறைந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, பரிமளாவை வேகமாக அடுத்த அறைக்குள் போகும்படி தன் கையாலேயே பிடித்தும் தள்ளினாள். பாவம்! குழந்தை கிளி முத்திரையைக் கிழவருக்கு மறுபடியும் காட்டிவிட்டு, தன் ஆசை விழியின் மூலம் அவருக்குச் செய்தி சொல்லிக்கொண்டே அப்புறம் சென்றாள்.

மாரியப்ப பிள்ளைக்கு உண்மையிலேயே வருத்தம் ஏற்பட்டது. பழுக்காய்த் தட்டில் வைத்திருந்த வெற்றிலை பாக்கைத் தம் சமீபம் தள்ளிக் கொண்டார். பாக்குவெட்டியினால் சீவல் சீவிக்கொண்டே, சாருபாலாவை ஒரு தடவை கூர்ந்து கவனித்தார். அவளும் நேரே அவரைப் பார்க்கத் தயங்கியவளாய் இமைகளைக் கீழே சாய்த்தாள்.

கிழவர், ''உம், என்னம்மா சலித்துக்கொள்கிறாய்? நாட்டியமாடி என்னத்தையெல்லாம் இழந்துவிட்டாய்? புரியவில்லையே! தஞ்சாவூர் ஜில்லாவிலே மாரியப்பபிள்ளைக்கு ஒரு தனி மதிப்பு இருக்கிறதென்றால் அது யாராலே? உனக்கா தெரியாது? என்னவோ சும்மா அளக்கிறாய்! இந்தப் புதுச் சிநேகிதம் ஏற்பட்டதிலிருந்துதான் உன்னிடம் இத்தனையும் மாறுதல். நீ இப்படிக் கலையைப் பழிப்பாய் என்று சொப்பனத்திலேகூட நான் எண்ணவில்லை!'' என்றார். நிஜமான ஏக்கம் அவர் தொண்டையில் வெளிப்பட்டது.

''இந்தாருங்கள், கும்பிடுகிறேன், நூறு தடவை. புதுச் சிநேகம், புதுச் சிநேகம் என்று குத்திக் குத்திக் காட்டாதீர்கள். அவர்கள் என்ன, பரிமளாவை நாட்டியமாட வேண்டாம் என்று சொல்கிறார்களா? நான் அல்லவா அன்றையிலிருந்தே சொல்லிக்கொண்டு கிடக்கிறேன்? அவர்கள் தலையிலே பழியை ஏற்றாதீர்கள். எனக்குத்தான் வரவர இந்தப் பரதேசிப் பயல்களுக்காக, பாடுபட்டுச் சம்பாதித்த அற்புதக் கலையை விநியோகம் பண்ண மனசு வரவில்லை! வெறுமனேயாவது அவர்களைச் சொல்லாதீர்கள். அவர்கள்தாம் எத்தனை மரியாதை காட்டுகிறார்கள் உங்களுக்கு?''

சாருபாலா உணர்ச்சி ததும்பப் பேசிவிட்டாள். மாரியப்பபிள்ளை எதனால் அவ்வளவு தூரம் அவள் சுந்தர மூப்பனாரிடம் பரிவு காட்டுகிறாள் என்பதை உணராமல் இருக்கவில்லை. தாம் சொன்ன வார்த்தைகளின் உட்பொருளை நன்றாகவே சாருபாலா வாங்கிக் கொண்டு பேசினாள் என்பதை அவருடைய சூட்சும புத்தியா அறியாது?

சிறிது காலமாய், சுந்தர மூப்பனாருடைய சிநேகம் சாருபாலாவுக்கு இருந்துவந்தது. அவ்விதப் புதிய சிநேகத்துக்கு மூலகாரணம் தாமே என்பதை அவர் அறிவார். சிக்கில் கோவிலில் டிரஸ்டி ஹோதாவில் ஒரு சமயம் மூப்பனார் சதிர்க்கச்சேரி ஏற்பாடு செய்ய மாரியப்பபிள்ளையை அணுகினார். சாருபாலாவின் நடனம் ஏற்பாடானதற்குப் பிள்ளைதாம் காரணம். பிரமாத நாட்டியம் அன்று நிகழ்ந்தது. மாரியப்பபிள்ளைக்கும் வேண்டிய சௌகரியங்களைச் செய்து வைத்தார் மூப்பனார். நாட்டியம் இரவு நடு நிசிவரையிலும் தொடர்ந்தது. ஒரு மணிக்கு முடிவு அடைந்தது. ஆனால் மூப்பனாருக்கு, எல்லாம் புதிய அநுபவமாய்த் தோன்றியது. சாருபாலாவின்மேல் வைத்த கண்களை எடுக்கவே இல்லை. பிற்பாடு சிறிது சிறிதாய் அவளிடம் பழக்கமும் வைத்துக்கொண்டார். அவளுடைய நடனக் கலையில் அவருக்கு எவ்வளவு வரையில் பிணைப்பு என்பதை நிர்ணயிக்க முடியவில்லை. சாருபாலாவின் இருதயத்தில் மூப்பனாருக்கு இடம் கிடைத்ததை மாரியப்பபிள்ளை முதலில் வெறுக்க

வில்லை. ஆனால் சாருபாலாவின் மனசு வரவர நாட்டியத்தில் திளைக்காததைக் கண்டு அதற்குக் காரணம் மூப்பனாரின் பரிசயந்தான் என்று அறிந்து அவர் மனம் வெகுண்டது. சாருபாலாவும் நாட்டியக்காரியாய் வாழ்க்கையை நடத்துவதில் சிறிது அலுப்பு எய்தினாள். சமூகத்தில் கௌரவம் கிடைப்பதற்குத் தன் தொழில் தடை செய்வதாய் நம்பினாள். எப்படியும் தன் மகள் பரிமளாவைப் படிக்க வைத்து, தக்க இளைஞனுக்குக் கட்டிக் கொடுத்து, சீக்கிரமே வாழ்க்கையில் வேறு பாதையைப் பிடிக்கச் செய்வதே தனது முதற் கடமை என்றும் கருதினாள்.

சிறிது நேரம் ஒன்றுமே பேசவில்லை மாரியப்பபிள்ளை. வாயில் வெற்றிலையுடன் புகையிலையைப் போட்டு அடக்கிக்கொண்டிருந்தார். இடக் கையில் வைத்திருந்த புகையிலைத் தூளை வலக்கையின் விரல்களால் சேர்த்துப் பிசைந்துகொண்டிருந்தார். தம் உள்ளத்திலும் பழைய ஞாபகங்களை எண்ணிப் பிசைந்துகொண்டிருந்தார். சாருபாலா அவர் கண்டெடுத்த மாணிக்கம். பல ஆண்டுகளுக்கு முன் அவள் தாயுடன் குற்றாலத்தில் ஒரு நாள் சாயந்தரம் உக்தவேதீசுவரரின் ஆலயத்தில் அவளைச் சந்தித்தார். குழந்தையினிடம் சுபாவமான அபிநயக் கலைப் பண்புகள் நிறைந்திருப்பதை ஆராய்ந்தது அவருடைய சூட்சுமப் பார்வை. தாயிடம் வலியச் சென்று மகளுக்குத் தாம் நாட்டியமாடக் கற்றுத் தருவதாகக் கேட்டுக் கொண்டார். தாய் இருந்த தரித்திர நிலையில், யார் தன் குழந்தையை ஒரு ஜீவனத்துக்கு வழி காட்டுவதாயினும் அதில் திருப்தி பெறவே அவள் மனம் இடம் தந்தது. தஞ்சை ஜில்லாவில் சின்ன மேளம், சதிர் என்றால் பிரபல இடங்களில் மாரியப்பபிள்ளையும் சாருபாலாவும் சன்னத்தர்களானார்கள். மற்ற இடங்களிலும் பிள்ளைக்குக் கிராக்கி ஏற்பட்டபோதிலுங்கூட, சாருபாலாவின் நிருத்தத்திலும் அபிநயத்திலும் அவருக்கே தனியான மதிப்பு உண்டாயிற்று.

சாருபாலாவின் அங்க அசைவுகளில் உடலுணர்ச்சியை விலக்கி, நூதனக் கலை வடிவங்களையே அவர் கண்டார். அவளது கண்ணோட்டத்தில் ருசியான கலைச் செய்திகளை அநுபவித்தார். அவள் கண்கள் பேசின; உதடுகள் உபதேசித்தன; கண்ணில் தெரியாத மூர்த்தியொன்றை ஹஸ்த முத்திரைகள் அலங்கரித்தன. முத்திரைகளினால் எழும் பாஷை தவறின்றி அமைந்ததற்குப் பிள்ளைதாம் பொறுப்பாளி; என்றாலும், சாருபாலாவின் சொந்த மேதை தனிப்பாஷையொன்றைச் சாறாகப் பிழிந்து உள்ளங்களினூடே பாய்ச்சி, காவியமும் ஓவியமுமாய்ச் சிருஷ்டிகளை வழங்கிக் கொண்டே ஆடியதைப் பார்த்த யார்தாம், பிறர்கற்று வைப்பதன் விளைவல்ல அவை, தாமாகவே கலையுள்ளத்தில் உதயமாகி உருக் கொண்டு உவகையூட்டுவன என்பதை மறுப்பார்கள்?

பழைய ஞாபகங்களில் சுழன்றது அவருடைய மனம். எதையோ சொல்லுவதற்கு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டவர், வாயில் உள்ளதைத் துப்புவதற்காக வெளியே சென்று வந்து, வாயலம்பிவிட்டு, உட்கார்ந்துகொண்டு அவளை உற்றுப் பார்த்தார். மெதுவாய்ச் சொல்லலானார்:

"சாரு, நீ கெட்டிக்காரி, இன்றைக்கா நேற்றைக்கா உன்னை எனக்குத் தெரியும்? இருந்தாலும், நீ திடீரென்றுதான் இந்த விதம் பேச ஆரம்பித்திருக்கிறாய். மூப்பனார் எதையோ நினைத்துக்கொண்டிருக்கிறார். எவ்வளவு கௌரவமாய் நடந்தாலும், கலையைப்பற்றி அவர் ஒன்றும் தெரியாதவர். நீ அப்படி அல்லவே. இப்போதெல்லாம் எங்கேயாவது நாட்டியமாடக் கூப்பிட்டால் 'சூ' கொட்டுகிறாய். ஏன் இப்படி ஆகிவிட்டது உனக்கு? ஏதோ தெய்வக் குற்றம் போலேதான் என் மனசிலே படுகிறது. இல்லாவிட்டால் இவ்வளவு அபூர்வமான யோக்கியதையை நடுவயசிலே விட்டுவிடவா மனசு வரும்? யார் சொன்னார்கள், இதைவிடப் பள்ளிப் படிப்பு உயர்வு என்று? எதை

விட்டாலும் இந்த உயர்ந்த கலையை விடவே கூடாது. நான் ஒப்பவே மாட்டேன். பரிமளாவுக்கு நிச்சயம் நானே ஆடி அபிநயம் செய்யச் சொல்லி வைக்கிறேன். என்ன சூடிகையாக இருக்கிறாள் அவள்! மீன் குஞ்சுக்கு நீந்தவா கற்றுக் கொடுக்க வேண்டும்? நீ பார்த்தாயோ இல்லையோ, அது கிளி முத்திரை இட்டதை?'' என்று என்றைக்கும் இல்லாத படபடப்புடன் பேசினார்.

சாருபாலா கையைக் காட்டி அவரை நிறுத்தினாள். ''ஐயா, நான் சொல்ல வந்ததையும் வாங்கிக்கொண்டு பேசுங்கள். இந்த நாட்டியத்தை நீங்கள்தாம் சம்பிரதாய ரீதியில் சொல்லி வைக்கிறவர்கள். ஒருத்தரும் இதை இந்த நாளிலே கவனிக்க மாட்டார்கள். கையையும் காலையும் வெறுமனே நீட்டியும் ஆட்டியும் குதித்தால் போதும் என்கிறார்கள். அதுவும் சினிமாவிலே எந்தப் படத்தை எடுத்தாலும் நாட்டியம் என்ற பேரோடு ஒன்று புகுந்துவிட்டதே; பார்க்கச் சகிக்கவில்லையே. முகபாவம் ஹஸ்தசுத்தம் என்று யார் கேட்கிறார்கள்? ஏதோ தளுக்குக் குலுக்குப் பண்ணிக்கொண்டு மேடையிலே நடந்தால் போதும். நீங்கள் பழம் பசலிப் பேர்வழி. நம்புகிறீர்கள், பரத நாட்டியமே ஒசத்தி என்று; மண்ணாங்கட்டி என்றுதான் நான் நினைக்கிறேன்'' என்று சீறினாள்.

மாரியப்ப பிள்ளை இடத்தை விட்டு எழுந்திருந்தார். ''சரி, சாரு, இன்றைக்கு உன்னோடு வாய் கொடுக்க என்னால் முடியாது. வருகிறேன். ஆனால் ஒரு சின்ன விஷயம், மறந்து விட்டேனே! அதைச் சொல்லத் தான் முக்கியமாய் வந்தேன். பட்டணத்திலிருந்து எனக்கு சர் ராஜப்ப செட்டியார் கடிதாசு எழுதியிருக்கிறார். மேல்நாட்டுக் கலைஞர் கோஷ்டி ஒன்று பட்டணத்துக்கு வருகிறதாம். அப்போது அவர்களுக்கு நம் சம்பிரதாயச் சதிர் ஒன்று பார்க்க வேண்டுமாம். உன்னையே அதற்காக எதிர்பார்க்கிறார்கள். முடியுமா உன்னாலே, இந்தமாதிரி மனசு இருக்கும் போது? நீ சற்று மனசு வைத்தாயானால், வெளியூர்க்காரர்களுக்கு நம் உயர்வை நன்றாகக் காட்டலாம். இல்லாவிட்டால் என்னால் முடியாது என்று எழுதிவிடுகிறேன். என்ன, உன் உத்தேசம்?'' என்று கேட்டார். அவர் குரல் குழைந்தது.

சாருபாலா வியப்புடன் அவரைப் பார்த்து, ''என்னங்க, நான் என்ன, நன்றி கெட்ட ஜன்மமா, மாட்டேன் என்பதற்கு? உங்கள் வார்த்தையை எப்போது தட்டியிருக்கிறேன்? இந்தக் குழந்தைக்கு நாட்டியம் வேண்டாமென்று சொல்ல வந்தேனே தவிர, நீங்கள் ஓர் இடத்துக்கு வரவேண்டும் என்று நினைத்ததற்கு அப்புறம், வேண்டா மென்று சொல்லுவேனா? வருகிறேன் என்று பதில் தெரிவித்துவிடுங்கள்'' என்றாள்.

மாரியப்ப பிள்ளை சிரித்த முகத்துடன், ''அப்போது இன்றைக்கே பதில் எழுதிவிடுகிறேன். ஒரு விஷயம்: சொன்னால் தடை செய்யக் கூடாது. இந்தக் குட்டி பரிமளாவையும் கூட்டிக்கொண்டு பட்டணம் போகவேண்டும்'' என்றார் மெதுவாய், சாருபாலாவினிடமிருந்து என்ன பதில் வருமோ என்ற கவலையில்.

''அதற்கென்ன? அழைத்துக்கொண்டு போவோம். பார்க்கட்டும், பட்டணத்திலே பள்ளிக்குச் சின்னச் சின்னக் குழந்தைகளெல்லாம் போவதை. அதுவும் ஓர் அநுகூலந்தான். நல்ல படிப்பிலே ஆசை ஏற் பட முதலிலே மற்றவர்களையும் பார்க்கத்தானே வேண்டும்?'' என்றாள் சாருபாலா உற்சாகத்துடன்.

''நேரே கண்ணாலே பார்க்கத்தானே வேண்டும்? நன்றாகப் பார்க்கட் டுமே'' என்றார் மாரியப்ப பிள்ளை. அப்படிச் சொல்லுகையில் கடைசி வார்த்தைகளை அவர் அழுத்தியதை, சாருபாலா அப்போது அவ்வளவு கூர்மையாகக் கவனிக்கவில்லை.

சென்னையில் மேல்நாட்டுக் கலைஞர் கோஷ்டி வந்து இறங்கியது. கோஷ்டியார் வந்த விவரம் படங்களுடன் பத்திரிகைகளில் வெளியாயிற்று. மேலும் வரவேற்புக் குழுவினர் விருந்தாளிகளுக்கான உபசாரங்களில் சில நாட்டியக் கச்சேரிகளைத் தயாரித்துள்ள செய்தியும் முன்னதாகவே விளம்பரமாகி இருந்தது. சாருபாலாவின் நாட்டியம் நடைபெறுமென்ற விளம்பரமும் பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது. புது மோஸ்தர் நாட்டியங்களைப் பார்த்த சில இளைஞர்கள், பழங்காலத்துப் பரத நாட்டியத்தை வெளிநாட்டிலிருந்து வரும் விருந்தாளிகளுக்குக் காட்டுவதைச் சரியான காரியமாய்க் கருதவில்லை. ''மேலும் எத்தனை எத்தனை குமாரிகள், பேபிகள், நவநவமான ஆடை அலங்காரங்களுடன் திரை மேடையில் ஆடுகிறார்கள்! அவர்களை விட்டுவிட்டுப் பழங்காலத்துச் சராயும் கச்சமும் கட்டிக்கொண்டு, தலைச்சாமான் முதலிய கனத்த நகைகளைச் சுமந்துகொண்டு நிற்கும் நாட்டியக்காரியை ஒருகாலும் மேல் நாட்டினர் சகிக்க முடியாது'' என்றனர் மற்றும் சிலர். ''நாகுக்கான உடையும் மிளிரும் வைரங்களும் தேகமெல்லாம் பளிச்சிட, மின்சார தீபங்கள் வர்ணஜாலங்களை நிமிஷத்துக்கு ஒருவிதம் பொழிய, இக்காலத்திய எழில் பொருந்திய நாகரிக நாட்டியங்கள் எங்கே? ஒன்றையுமே புரிந்துகொள்ளாது வேர்வை உடலையெல்லாம் தெப்பமாய் நனைக்க, செவ்வந்திப் பூச் சுற்றிய ஜடையுடன் ஊசலாடும் உருவம் எங்கே? அதையா ரசிக்க முடியும்?'' என்றனர் இன்னும் சிலர்.

இத்தகைய சூழ்நிலையில்தான் மாரியப்ப பிள்ளை சாருபாலாவுடன் பட்டணம் வந்து சேர்ந்தார். சாருபாலாவைப் பழையபடியே நாட்டியத்தில் இறங்கச்செய்ய, சுந்தர மூப்பனாருக்கு இஷ்டம் இல்லை. ஆயினும் சர் ராஜப்ப செட்டியாரின் சிபாரிசுக்காகவும், மேல்நாட்டினர் பார்க்கிறார்கள் என்பதற்காகவும் சற்று இணங்கினார். சாருபாலாவோ, பட்டணம் போவதில் சுயமாய் அதிக ஆர்வம் காட்டாவிட்டாலும், தன் மகள் பரிமளாவின் எதிர்காலச் சௌகரியங்களை நினைந்துதான் ஒப்புக்கொண்டாள்.

பரிமளா பட்டணத்துக்கு வந்தது இதுதான் முதல் தடவை. சமுத்திரத்தைப் பார்த்துக் குழந்தை பிரமித்தே போய்விட்டாள். மெரினாவில் ஆயிரமாயிரமாய்க் கார்களின் வரிசையைக் கண்டு அவளுக்கு என்னவோ உடம்பிலே செய்தது. கைகளைக் கொட்டிக் கூத்தாடினாள். காரில் ஏறிக்கொண்டு ஊர் சுற்றுகையில், ''தாத்தா, இதென்ன, அதென்ன?'' என்று விடாமல் கேள்வி கேட்டு மாரியப்ப பிள்ளையை நச்சரித்தாள். அவரும் பொறுமையாய், தமக்குத் தெரிந்தவைகளை அவளுக்குச் சொல்லி வந்தார்; தெரியாதவைகளை, ''கேட்டுச் சொல்லுகிறேன்'' என்று சமாதானம் கூறினார்.

கலைஞர் கோஷ்டிக்காக நடந்த ஏற்பாடுகள் பலமாகவே அமைந்தன. இந்தியப் பண்பாட்டுக்குரிய பற்பல விசேஷ நிகழ்ச்சிகளைத் தயார் செய்திருந்தார்கள். இங்குள்ள கலைகளின் உயர்வைப் பிரகாசப்படுத்தப் பிரத்தியேகமாய் ஒவ்வொரு துறையிலும் உள்ள பிரபல வித்துவான்களை வரவழைத்து ஒழுங்காய்க் கச்சேரிகள் நடத்தத் திட்டங்கள் உருவாயின.

பெரிய மண்டபம் ஒன்றில் சாருபாலாவின் நடனம் தொடங்கியது. கிரமப்படி நிருத்த வகைகள் முதலில் ஒரு மணி சுமாருக்குச் சாருபாலாவினால் வெகு கவர்ச்சி தரும் பாணியில் செய்யப்பட்டன. நிருத்தமே உருவெடுப்பதாயின், சாருபாலாவின் வடிவத்தில்தான் வந்திருக்க வேண்டும் என ரசிகர்கள் கருதும்படி அவளுடைய நிருத்தம் அமைந்திருந்தது. அடைவுகளை வெகு லாகவமாய்ப் பிரயோகம் செய்து, முகபாவங்களை அவைகளுக்கு அநுகுணமாகவே விளக்குகையில் எல்லோருமே அநுபவித்தார்கள். அவள் கூத்தாடுகையில் கால்கள்தாம் அவளைத் தாங்குகின்

றனவா அல்லது இறக்கைகளே அவளை மேடையின்மேல் மிதக்க வைக்கின்றனவா என்று சந்தேகப்படும்படி இருந்தது. அவள் ஜலத்தின்மேல் அன்னப்பறவைபோல் நீந்துகிறுளா என்றே சிலர் பிரமித்து, தங்கள் ஆசனங்களை விட்டு அவளுடைய கால்கள் தெரிகின்றனவா என்று எழுந்து கழுத்தை நீட்டி உற்றுப் பார்த்தார்கள்.

அபிநயம் தொடங்கியது என்பதற்கு ஏற்றாற்போல் பதங்களை அவள் தன் குரலை இசைத்துப் பாடினதும் எல்லோரும் ஒரு தடவை 'அப்பாடி!' என்று நீண்ட மூச்சு விட்டார்கள். ஆடுவதைச் சற்றே நிறுத்திவிட்டு, சாருபாலா தனியே பாடினுல் தேவலை என்று எண்ணியவர் சிலர். சிலர் அவள் பாட்டின் கமகமயமான பிடிகளுக்கு அசைவு சுகம் அவள் அங்கங்களில்தான் உண்டாகும் என்ற நம்பிக்கையில் அவைகளை எதிர்நோக்கித் திளைத்தனர். உண்மையாகச் சிரமமின்றி, சாருபாலாவுக்கு அன்று காலும் கையும் இதர அங்கங்களும் சொன்னபடி கேட்டன. க்ஷேத்திரிய பதங்களுக்கு விரிவான வியாக்கியானம் அவள் செய்தபிறகு, தமிழ்ப் பதமொன்றைப் பாடி அபிநயம் பிடித்தாள். அன்று அவள் எடுத்துக் கொண்டது, 'ஏன் பள்ளிகொண்டீர் ஐயா' என்ற அருமையான சாகித்தியம். பக்தன் ஒருவன் ஸ்ரீரங்கத்தில் கோயில் கொண்டுள்ள பெருமாளை அவருடைய பன்னக சயனத்தில் பார்த்து அநுபவிக்கும் நிலையைத்தான் அந்தப் பாட்டு வருணிக்கின்றது. முக்கியமான சில கட்டங்களை ராமாயணத்தினின்றும் எடுத்திருப்பதால் அவைகளை அபிநயம் பிடித்தாள் சாருபாலா. சிறுபிராயத்தில் ராமன் தாடகையை அடித்துச் சாய்த்ததும், சிவதனுசை முறித்துச் சீதையை மணம் செய்ததும், பிறகு வனமேகியதும், சீதையைப் பறிகொடுக்கு முன் மாரீசனை மானுருவத்தில் கொன்றதும், சுக்கிரீவனுடன் நட்புப் பூண்டதும், அநுமனை இலங்கைக்கு அனுப்பியதும், சேது கட்டியதும், ராவணனைச் சங்காரம் பண்ணியதுமே அவள் அபிநயத்தினுல் தீட்டிய படங்கள். தாடகையைக் கொல்லுகையில், வயசில் சிறியவன் ராமன் என்ற கருத்தைச் சாருபாலா மிகவும் பொருத்தமாய்க் காட்டினுள். மண்டியிட்டு ஒரு காலைக் குத்திட்டு, வில்லை நன்கு வளைத்து, அம்பறாத் தூணியிலுள்ள பாணங்களை விடாமல் எடுத்து அரக்கியின்மேல் விடுவது போல் அபிநயம் கச்சிதமாய் அமைந்தது. பிற்பாடு ராவணனைக் கொல்லும்பொழுது கையில் வில் ஏந்தியதை நினைவூட்டினுலும், ராமன் பிரம்மாஸ்திரத்தைச் சத்துருவின்மேல் பிரயோகித்தான் என்பதை மறக்காமல், அவள் நின்றபடியே முன்காலைப் பூமியில் உதைத்துக் கம்பீரமாய் அஸ்திரத்தை ஏவியதுண்டே, அது ரசிகர் உள்ளங்களுக்கு எவ்வளவோ அறிவூட்டும் விளக்கமாகியது.

வெவ்வேறு வயசிலும், வெவ்வேறு அநுபவச் சூழ்நிலையிலும் ராமன் இருமுறை எதிரிகளைத் தாக்கியதாய்க் கதை இருப்பதை அபிநயக் கலையும் தெளிவுடன் பரிமளிக்கச் செய்ய இயலும் என்பதைச் சாருபாலாவின் அபூர்வக் கலைத்திறன் எடுத்துச் சொல்லியது. ஆனுல் மற்றவைகளைவிட ஒன்று உயர்ந்ததாய் அன்றைய நடிப்பில் துலங்கியது, கடைசியில் பகவானைப் பக்தன் கேட்கும் வார்த்தைகளுக்குச் சாருபாலா தந்த அநாயாசமான கருத்துரைதான் எனக் கூறவேண்டும். ''ராவணுதிகளை அடித்த வருத்தமோ?'' என்று ஓர் அடி வருகிறது. சாருபாலா அதற்கு இழைத்த பாவம் ஒரு தனி அநுபவமாகவே தோன்றும்படி இருந்தது. ராமன் கருணமூர்த்தி என்பதை இன்னும் பிரகாசப்படுத்தும்படியாக, தம் கையினுல் கொல்லப்படுவதற்குத் தகுதி வாய்ந்த ராவணனை மண்ணில் வீழ்த்தியதில் பெருமையைவிட, வருத்தத்தையேதான் அவர் அடைந்தார் என்பதான கருத்து, பிரமாதமாய்ச் சோபித்தது. கருணைக் கடலாய், அகன்றதோர் பரப்பாய், ஓர் ஓவியத்தை மனத்திரையில் தீட்டினமையால், உணர்ச்சியினுலும் பக்தியினுலும் உருகிய இருதயங்கள் 'ஆ ஆ' என்று அவ்விடத்தில் கூவி, வேறு உலகில் சஞ்சரித்ததை உணர்த்தினுர்கள். அங்கு அமர்ந்திருந்த மேல் நாட்டினர்களுக்கு அவர்களைப்போல் பக்தி

பரவசம் ஏற்படாவிடினும், கலையின்பம் உவகையாய்ப் பரிணமித்தது. அவ்வளவுதான்; விடாமல் கரகோஷம் கிளம்பிச் சில நிமிஷங்கள் தொடர்ந்து மண்டபத்தின் கூரையையும் பிய்த்தது.

சாருபாலா களைத்துவிட்டாள். இருப்பினும் சம்பிரதாயத்தினின் றும் சிறிதும் வழுவாத அவள் நேர்மையுணர்ச்சி, தில்லானு ஒன்றைச் சட்டென எடுத்துக்கொண்டு வெகு விமரிசையாய், தாளக் கோலங் களிட்டு, ரசிகர் உள்ளங்களை நிறைவெய்த வைத்துவிட்டது. இறுதியில் சுலோகமொன்றைச் சுருக்கமாய் அபிநயித்துவிட்டுத் தனது நாட்டி யத்தை மங்களம் பாடியும் ஆடியும் முடித்தாள்.

குழுமியிருந்தவர்கள் இடத்தை விட்டு நகராமல் அன்று கண்ட நாட்டியத்தைப் பார்த்து ரசித்தார்கள். சாருபாலாவுக்கு அபாரப் பாராட்டுகளை வெளிநாட்டினர் பிரதிநிதியும், இங்குள்ள வரவேற்புக் குழுவின் தலைவரும் தந்தார்கள். மொத்தத்தில் எல்லோரும், பரத முனிவரின் அழியாத கலையை இங்குள்ள நாட்டியப் பரம்பரைகள் போஷித்துக் காப்பாற்றியதையே ஏகோபித்துப் பாராட்டினுர்கள்.

பூமாலைகளும் புகழ்மாலைகளும் சாருபாலாவின் சிரத்தையும் கழுத் தையும் அலங்கரித்தன. வெயர்த்து, நிற்க முடியாமல் அவள் வணக்க மாய்க் கும்பிட்டுவிட்டு, வாய் வார்த்தைகளின்றி அங்க விநயத்தினுலேயே தனது பூர்ண நன்றியை அங்குள்ளவர்களுக்குத் தெரிவித்துக்கொண் டாள். அவளது உள்ளத்தே கனமின்றி உல்லாசமாய் ஆகாய வெளியில் மிதப்பது போன்ற ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவே அவள் துடிதுடித்தாள்.

கூட்டம் நகர்ந்ததும், தன் சொந்த ஜாகைக்கு மாரியப்பபிள்ளையை யுங்கூட அழைத்துக்கொள்ளாமல் கிளம்ப அவள் சித்தமானுள். பரிமளா அன்றுதான் முதல்முதலில் தாயின் முழுச் சதிர்க் கச்சேரியை விடாமல் தொடர்ந்து பார்த்தவள். அவளுடைய சின்னப் புத்திக்கு, தாய் எங்கேயோ ஒரு தேவலோகத்தைச் சேர்ந்தவள்போலப் பட்டது. பிரமித்து, வாய் புதைத்து அப்படியே குழந்தை வேறென்றையும் நினை யாமல் கடைசி வரையிலும் உட்கார்ந்துவிட்டாள். முடிந்த பிறகும் மண்டபத்தை விட்டு நகர அவளுக்கு மனசே வரவில்லை. மேடையின் மேல் விளக்குகளையும், தாயின் அலைமோதும் நடனக் கலையையும் அவள் தன் அகலக் கண்களால் விழுங்கிக்கொண் டிருந்தாள். மாரியப்பபிள்ளை அவளிடம் வந்து, ''என்ன குட்டி, எங்கே இருக்கிறுய்? ஏதாவது தெரி கிறதா? அம்மா உன்னை விட்டுப் போய்விட்டாள். வா, நாமும் போக லாம்'' என்றதுந்தான் சொப்பன உலகை விட்டு மண்ணுலகிற்கு வந்து சேர்ந்தாள். ஒன்றும் சொல்லாமலே கிழவர் கையைப் பிடித்துக்கொண்டு, காத்திருந்த ஒரு காரில் அவருடன் ஏறிக்கொண்டு, இறங்கியிருந்த ஜாகைக்குத் திரும்பினுள்.

தங்கள் விடுதியை அடைந்ததும், மாரியப்பபிள்ளை அங்கே கண்ட காட்சி வேடிக்கையாய் இருந்தது. சாருபாலா நகைநட்டு ஒன்றையும் கழற்றுமல், கையில் கடிதமொன்றைப் பிடித்துக்கொண்டு, அறையில் இங்குமங்குமாய் நடை போட்டுக்கொண் டிருந்தாள். தானுகவே பேசிக் கொண்டும் இருந்தாள். அவை கிழவரை எதையோ எண்ணவைத்துச் சிரிப்பு மூட்டின. அவருடைய நகையொலியைக் கேட்டதும் சாருபாலா சட்டெனத் திரும்பிப் பார்த்தாள். அவள் சொல்லிக்கொண்டிருந்த முடிவான வார்த்தைகள்தாம் அவரை அவ்வாறு செய்ய வைத்தன. ''என்ன நல்ல உலகம்! ஓர் அற்பச் செயலுக்காக எவ்வளவு நன்றி காட்டு கிறது! நான் அல்லவா உலகையும், உயர்ந்த கலையையும் அலட்சியம் செய்தேன்? என் கடமையைச் செய்யத் தவறினேனே?'' என்ற வார்த்தை கள் அவளிடமிருந்து வெளிவந்தன.

கையிலுள்ள கடிதத்தை அவள், பிள்ளையைப் பார்த்ததும், அவரிடம் நீட்டினாள். அவர் அதில் உள்ள வரிகளை ஒரு தரம் அல்ல, இரு தரம் வாசித்தார். கடிதம் பின்வருமாறு:

''அம்மணி, இன்று நீங்கள்தாம் நாட்டியமாடினீர்களா அல்லது தேவலோகத்தையே விண்டு இங்கே கொண்டு வந்து வைத்தீர்களா, தெரியவில்லையே! வால்மீகியின் ராமன், கம்பரின் ராமன், துளஸியின் ராமன் என்பதுபோல், உங்கள் ராமனும் உருவாகி, கனிவாய் எங்கள் முன் இன்று தோன்றினான். கருணைக் கடலேதான் ராமன் என்பதை இனி யாரும் மறக்க மாட்டார்கள், மறுக்கவும் மாட்டார்கள்.

''உங்கள் கலையைப் பரம்பரைத் தத்துவமாய் ஆக்க உலகம் இனி எதிர்பார்க்கும். உங்கள் நுட்பமான கலைத்திறன் உங்களுடன் நிற்கலாகாது. பரதரும் நந்திகேசுவரரும் ஆனந்த நடன மூர்த்தியினிடமிருந்து நேரில் கற்றதை உலகில் சாஸ்திரமாய்ப் பரவ வைக்கவில்லையா? நீங்களும் உங்கள் பிரத்தியேக உத்தி விசேஷத்தையும், பாவ வெளியீட்டையும் ஒருவர் இருவருக்காவது கற்று வைத்தால்தான் நீங்களும் கருணையை உணர்ந்த உத்தமப் பிறவி என்றாகும். இல்லையேல் கடமையைச் செய்யாதவர் ஆவீர். என் ஆர்வத்தினால் கூறியதில் பிழையிருந்தால் மன்னியுங்கள்.

இங்ஙனம்,
ஓர் ரஸிகன்.''

மாரியப்பபிள்ளை சாருபாலாவின் வதனத்தையே அதற்கு விடை கேட்கும் விதம் பார்த்தார்.

முகத்தில் ஜில்லென்று ஒரு காற்று அடித்துச் சாருபாலாவின் கூந்தலை நெற்றியில் ஊசலாட வைத்தது. அவள் கூந்தலைக் கையால் கோதிக் கொண்டே தனக்குள் பேசிக்கொண்டாள்: ''என் அநுபவம் இன்று உண்மையாயின், யாருக்காவது இதைச் சொல்லி வைத்தே தீருவேன்; இது நிச்சயம். என் கடமையுங்கூட.''

குழந்தை பரிமளா அப்பொழுதுதான் உள்ளே ஓடி வந்துகொண்டிருந்தாள். தாயைக் காணாத கண்களில் அவளைக் கண்டதும் பெருமிதம் பொங்கியது. சுபாவமாய் உள்ள வெட்கத்தையும் விட்டு அவள் கத்தினாள், ''அம்மா, உன்னாட்டமா நேக்கும் ஆடணும். தாத்தாதான் நான் நன்னா ஆடுவேங்கறாரே! கத்துக் கொடுக்கச் சொல்லு, அம்மா'' என்று.

அவளைச் சாருபாலா இரு கைகளாலும் கட்டி அணைத்து ஏந்திக் கொண்டு, தன்னையே மறந்தவளாய், ''என் செல்வமே, உனக்கு இல்லாமல் வேறு யாருக்காக இதை நான் கற்றுக்கொண்டேன்? நானே உனக்கு வருகிற விஜயதசமி அன்றைக்குச் சொல்லிவைப்பேன். என்னிடமுள்ளதை நீதானடி அடைய வேண்டும்'' என்றாள். தன் முகத்தைப் பரிமளாவின் கதுப்புக் கன்னத்திலும் புதைத்துக்கொண்டாள்.

வெற்றிக் குறியுடன் கையிலுள்ள புகையிலைத் தூளை மாரியப்ப பிள்ளை வாயில் அள்ளித் திணித்துக்கொண்டார். ★

—அக்டோபர், 1954.

த நா. குமாரஸ்வாமி

# சீமைப் பூ

அண்ணுவுக்கு டில்லியிலே பெரிய உத்தியோகம். இரண்டாயிரத்துக்குக் கிட்டத் தட்டச் சம்பளம் வாங்குகிருர். உத்தியோகம் உயர்ந்ததிலிருந்து அவருடைய நடை உடை பாவனே யாவும் புதுவிதமாய் மாறிவிட்டன. ஆங்கிலத் துரைமாரைப் போலவே ஆகிவிட்டார். நாலேந்து வருஷங்களுக்கு ஒரு முறை ஊர்ப்பக்கம் வருவார். ஒரு வாரத்திற்குமேல் கிராம வாழ்க்கை இருப்புக் கொள்ளாது. ''சுத்த 'டர்ட்டி ப்லேஸ்', 'ப்ரூட்ஸ் ஆல்' (ஆபாசமான இடம், காட்டு மிராண்டிகள்) என்று வைதுவிட்டுக் கிளம்பிவிடுவார். அண்ணு இப்படியாஞல் மன்னியோ அவரையும் மிஞ்சினவள். எல்லாச் சாமானும் இங்கிலீஷ் கடைகளிலிருந்துதான் வரவேண்டும். கறந்த பசும்பால் உதவாது; டப்பிப் பால்தான் அவளுக்கு ருசியாக இருக்கும். ஏனென்ருல் இங்கிலீஷ் மணம் அதில்தான் அதிகம்.

என் அண்ணுவுக்கு நான் கடைசித் தம்பி. எஸ். எஸ். எல். ஸி.க்கு மேல் எனக்குப் படிப்பு ஏறவில்லே. பிதுரார்ஜிதச் சொத்து ஒன்றுமே இல்லே. ஓர் ஓட்டு வீடுதான். இப்போது என் கண்காணிப்பில் உள்ள நில புலம் அண்ணுவின் ஆஸ்தியே. எத்தனேயோ பேர் இந்தக் காலத்தில் தம் உறவினருக்கு எத்தனேயோ வழிகளில் வேலே பண்ணி வைக்கின்றனர். ஆனுல் அண்ணு அந்த விஷயத்தில் நிர்த்தோஷி. அவர் பம்பாயில் இருந்தபோது, 'ஒரு வேலே பண்ணிவை' என்று கூச்சத்துடனேயே எழுதினேன். அதற்கு அவர், ''நான் இருக்கும்போது உனக்கு எதற்கடா வேலே? ஊரிலேயே என் நிலங்களேப் பார்த்துக்கொள்'' என்று மாதம் மாதம் முப்பது ரூபாய் அனுப்பிவருகிருர். அது மன்னிக்குத் தெரியுமோ தெரியாதோ? கிராமத்தில் உள்ள சின்ன வீட்டை எனக்கே கொடுத்துவிட்டார். தமக்காக ஒரு பெரிய பங்களா கட்டிக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் விழுந்தது. இது மன்னிக்குச் சற்றும் சம்மதம் இல்லே. 'போயும் போயும் குக்கிராமத்தில் பங்களா எதற்கு?' என்பது அவளுடைய எண்ணம். அவள் மனசு திருப்தி அடைவதற்கு அண்ணு தம் மைத்துனியின் பெண்ணுக்குப் பத்தாயிரம் ரூபாய்ச் செலவில் ஜாம் ஜாம் என்று கல்யாணம் பண்ணிஞர். அந்தச் சூட்டோடு சூடாக மாப்பிள்ளேக்கும் காயமான உத்தியோகம் டில்லியிலேயே, தம் இலாகாவிலேயே, பார்த்துத் தந்தார்.

ஊரில் என்னேயே வீடு கட்டச் சொன்ஞர். கிராமத்தில் அவ்வளவு பெரிய பங்களா அவசியம் இல்லேதான். ஆனுல் அண்ணு பிடித்தால் ஒரே பிடிதான். அவர் தந்த 'பிளான்'படியே வீட்டை அழகாகக் கட்டி முடித்தேன். நானே பக்கத்தில் இருந்து கவனித்துக்கொண்டதால் அவருக்கு இரண்டாயிரத்திற்கு மேல் மிச்சப்பட்டது. உள்ளுக்குள் சந்தோஷந்தான். அந்தத் தடவை எனக்கு ஐம்பது ரூபாய் மணி

யார்டர் வந்தது. என் குழந்தைகளுக்கு நாலைந்து தினுசுகளில் பம்பாய் ஸில்க் அனுப்பியிருந்தாள் மன்னியும்.

அண்ணு 'ரிடையர்' ஆக இன்னும் மூன்று வருஷங்கள் இருக்கின்றன. ஆறுமாதம் விடுமுறை எடுத்துக்கொண்டு ஊருக்கு வந்திருந்தார். மதனி அம்மாளுந்தான். புது வீட்டில் இறங்கினர். அவர் சொல்லாமல் இருக்கும்போது புங்கனூர்க் குட்டை ஒன்றை வாங்கினேன். அவர் அதிருஷ்டமோ, என் அதிருஷ்டமோ, அது வேளைக்கு இரண்டு படிக்குமேல் பால் சொரியும். முதலில் அண்ணு, ''எதற்கு இதை வாங்கிஞய்?'' என்ருர், நானே செம்பு வழிய வழியப் பாலைக் கறப்பதைப் பார்த்து மன்னி, ''பேஷ்!'' என்ருள். அவரும் தலையசைத்து, ''ரொம்ப பேஷ்!'' என்ருர்.

ஒரு நாள் சாயங்காலம், நான் கழனியெல்லாம் சுற்றிவிட்டு வீடு திரும்புகையில் அண்ணு சாய்வு நாற்காலில் சாய்ந்துகொண்டிருந்தார். ''பையா!'' என்று கம்பீரத்துவனியில் என்னைக் கூப்பிட்டார். நாலைந்து பிள்ளைகளுக்கு நான் தகப்பனு யிருந்தாலும் இன்னும் அவருக்கு நான் 'பையன்'தான்.

''ஏன் அண்ணு!'' என்றேன்.

''நீ என்ன பண்ணறே இந்த ஊரில் இருந்துகொண்டு? தண்டப் பொழுது போக்குறே'' என்ருர் திடுமென. எனக்குப் புரியவில்லை, அவருடைய கருத்து. ''கழனிக்குப் போகிறே. மீதி சமயம் ஊரில் அரட்டை அடிக்கிறே. இப்படி வீட்டைச் சுத்திக் காடுமாதிரி செடி முளைச்சிருக்கே. இதெல்லாம் போக்கிவிட்டு நல்ல பூந்தோட்டம் ஏன் வைக்கக்கூடாது? யாராவது பெரிய மனுஷ்யன் பார்க்க வரான்; இப்படிக் கச்சா பிச்சாவென்று இருப்பதைப் பார்த்தால் என்ன நினைப்பான்?''

''அப்படிக் கச்சா பிச்சாவென்று நான் கண்ட செடியையும் வைக்கவில்லையே, அண்ணு!''

''நான் தோட்டத்தைப் பார்க்காமல் சொல்லலே. இந்த மூலையில் ஏதோ ஒரு புதர்; அந்த இடத்தில் ஏதோ காட்டுக்கொடி படர்ந்திருக்கிறது. வாசல் பக்கம், ஒழுங்காக இருக்கவேண்டிய இடம், குத்துக் குத்தாக என்னவெல்லாமோ செடிகள். ரொம்ப மோசம்; உனக்கு நாசுக்காகவே வைத்துக்கொள்ளத் தெரியவில்லை.''

''இதெல்லாம் உபயோகமாகிற பூஞ்செடி அண்ணு. புதராக இருக்கிறது சம்பங்கிக் கொடி. வாசல் பக்கம் இருக்கும் குட்டையான செடி பவளமல்லிகை. அந்த மூலையில் அடர்த்தியாக இருப்பது துளசி, மாசிபத்திரம்; பூஜைக்கு எப்போதாவது உதவுமே என்றுதான் வளர்த்திருக்கிறேன். எடுக்கச் சொன்னுல் எடுத்துவிடுகிறேன்.''

''இந்தப் பூஞ்செடி, துளசியெல்லாம் யாருக்கு வேணும்? கண் மறைவாக வீட்டுக்குப் பின்னுல் எங்கேயாவது இருந்தாலும் பரவாயில்லை. வீட்டெதிரே விகாரமாக இருக்கிறது. நாட்டுப்புறத்தில் இருந்து இருந்து ரொம்பக் குறுகின எண்ணம் உனக்குப் படிந்துவிட்டது''

''இதைவிடப் போக்கிடம் வேறு ஏது அண்ணு எனக்கு? நிலத்தைப் பார்த்துக்கொள்ள நீதான் என்னை இங்கே இருக்கச் சொன்னே?''

''அதற்காகச் சொல்லலேடா; தோட்டத்தை இன்னும் அழகாக வைத்துக்கொள்ளலாமே என்றுதான் சொன்னேன். நான் இங்கிலீஷ் விதைகளுக்கு எழுதி யிருக்கிறேன். கூனூர் நர்ஸரியிலிருந்து இன்னும் ஒரு வாரத்திற்குள் வந்துவிடும். இப்போதுதான் விதை போடுவதற்கு ஏற்ற சமயம். வீட்டு முன்னுல் இருக்கிற செடியை எடுத்துவிடு. எடுத்து

விட்டுக் 'கேட்'டுக்கு இரண்டு பக்கமும் குழி எடு. அதில் நான் சொல்கிற படியே எருப் போடு. நன்ருக ஒரு வாரம் காய்ந்ததும் விதை நட வேண்டும். அது கிளைத்துப் பூத்தால் என்ன அற்புதமாகக் காட்சி அளிக்கும், தெரியுமா? வெள்ளைக்காரன் எவனுவது பார்த்தானேயானல் 'ஆ' என்று அப்படியே மலைத்து நிற்பான்'' என்ருர்.

நானும் உற்சாகத்தைக் காட்ட, ''அப்படியே செய்துவிடுகிறேன், அண்ணு'' என்றேன். அடுத்த நாள் காலை நானும் என் தமையனும் தோட்டத்தைப் பார்வையிட்டோம். எந்தச் செடியை வெட்டுவது, எதை வேருடன் கிளப்புவது, எதைப் 'போனல் போகிறது பாவம்' என்று விட்டுத் தொலைப்பது-இவ்வாருக ஓர் ஏற்பாடு செய்தோம். ''முன்னல் வாசல் 'கேட்' பக்கம் இருக்கிற அந்தச் சனியனை எடுத்து மறு வேலை பார்'' என்ருர்.

''ஐயோ அண்ணு, அது சம்பகச் செடி ஆயிற்றே; என்ன கஷ்டப் பட்டேன் தெரியுமா, அதை இங்கே பயிராக்க?'' என்றேன்.

''பிரமாதச் சம்பகச் செடி! கேட்டுக்கு இரண்டு பக்கமும், 'மார்னிங் ப்யூடி' என்ற கொடி படர்ந்து அது பூக்கும் அழகைப் பார்த்தால் நீ சொக்கிப் போய்விடுவே! என்னமாத்தான் இருக்கும்! அந்தப் புஷ்பத்திற்குச் சமானமா, உன் சம்பகம்?'' என்ருர் அண்ணு.

''சரி, சம்பகச் செடியை எடுத்துவிடுகிறேன்'' என்று நான் சற்று வேதனையுடன் சொன்னபோது, அவர், ''டில்லியில் எங்கள் ஆபீஸர் ஸர் ரன்அவே இருக்கிருனே, இந்த மார்னிங் ப்யூடிக்குத் தன் உயிரையும் கொடுக்கக் கூடியவன். அவர்கள் பங்களாவில்தான் இந்தக் கொடியின் அழகைப் பார்த்தேன். அது நம் வீட்டில் பூக்க வேண்டும். என்ன பூ, என்ன பூ என்று ஜனங்கள் திரண்டு வருகிருர்களா இல்லையா, பார்!'' என்ருர்.

இவ்வளவு அண்ணு உயர்த்திக் கூறவே அந்தப் பூவின் அழகைப் பார்க்க வேண்டுமென எனக்கும் ஆசை எழுந்தது. சீமைத் துரையே இப்படி அதைப் பார்த்து மெய்ம்மறப்பானுயின் சுதேசிகளான நம்முடைய நிலை எவ்வாறு இருக்கும் என்று நினைத்துக்கொண்டேன்.

அவர் சொன்னபடியே ஒரு வாரத்திற்கெல்லாம் பெரிய பார்ஸலாகச் சீமைப் பூஞ்செடி வித்துக்கள் வந்தன. ஒவ்வொரு தினுசு விதைகள் அடங்கிய காகிதப் பைக்குமேல் அந்த அந்தப் பூவின் அழகான வர்ணச் சித்திரம். சித்திரத்தில் உள்ளதுபோலப் பூப் பூக்குமோ என்பது தான் கேள்வி. அண்ணு ஒவ்வொரு பையாகப் பிரித்து, ''இது டாலியா, இது கிரிஸாஸ்தமும், இது பால்ஸம், இது பான்ஸி, பாக்ஸ்க்ளவ், மார்னிங் ப்யூடி! என்ன அமைப்பு, என்ன வர்ண சித்திரம் இந்தப் புஷ்பங்களில்!'' என்றெல்லாம் வியந்து பாராட்டினுர். நானும், ''பேஷ், அப்படியா! படத்திலேயே பூவின் வர்ணம் இவ்வளவு பளிச்சென்று இருக்குமானல் அசல் பூ இன்னும் எப்படி இருக்கும்!'' என்று கண்கள் விரிய ஓத்துப் பாடினேன்.

அடுத்த நாளே உரம் தயார் செய்யும் வேலை என் தலையில் விடிந்தது. கொடி படர்வதற்குக் 'கேட்'டின் இரு மருங்கிலும் கமான் வளைக்க மூங்கில் பிளாச்சு வாங்கிவர ஆளை ஏவினேன். ''ஐயா வூட்லே என்னமோ விசேசம். பந்தக் கால் நட்ருங்கோ'' என்று கிராமத்துப் பாமர ஜனங்கள் நின்று வேடிக்கை பார்த்தனர். நான் விரும்பி வளர்த்த சம்பகத் தருவை வெட்டிவிட்டேன். என் முகம் வாடி இருப்பதைப் பார்த்து அண்ணு, ''இந்தச் சம்பகம் வருஷத்தில் ஒரு தரமே பூக்கும்; ஆனல் 'மார்னிங் ப்யூடீ' வருஷ முழுவதும் பூக்கும்'' என்று எனக்குத் தேற்றரவு கூறினுர்.

அண்ணுவுக்கு வீட்டிலேயே ஒரு சின்ன 'மை லேடீஸ் கார்டன்' அமைக்க வேண்டுமென்ற ஆசை. தம்முடைய 'லேடி' பகல் வெயிலுக்குக் குளுகுளுவென்ற அதன் தண்ணிழலில் தங்கவேண்டுமென்ற அபிலாஷை. ''எல்லாம் படிப்படியாகத்தான் ஆகவேண்டும்'' என்ருர்.

''பையா, எரு எல்லாம் தயார் பண்ணிணுயா?''

''ஆச்சு அண்ணு'' என்றேன்.

''என்ன என்ன கலந்தே?''

''மாட்டுச் சாணம், அழுகிய சருகு, கொஞ்சம் வண்டல் மண் கலந்து வைத்திருக்கிறேன். கல் இல்லாமல் கட்டி கசடு உடைத்து மண்ணை மாவுப் பதமாக ஆக்கிவிட்டேன். நீங்கள் விதையை நடவேண்டியதுதான், அண்ணு!''

''பேஷ், நீ பூஞ்செடிக்குச் செய்திருக்கும் பக்குவம் செடி முளைச் சாற் போலத்தான்'' என்ருர் பரிகாசமாக. எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. இவ்வளவு அக்கறையாகக் கவனித்தும் கடைசியில் இந்த ஸொட்டுத்தானே? ''என்ன செய்யவேண்டும் அண்ணு? எனக்குத் தெரியாது போனுல் சொல்லு. செய்கிறேன்'' என்றேன்.

''இந்தப் பட்டிக்காட்டில் ரசாயன உரம் எங்கே அகப்படப் போகிறது?'' என்றதும் உள்ளே சென்று தோட்டக் கலையைப் பற்றிய ஆங்கிலப் புத்தகம் ஒன்றை எடுத்து வந்தார். 'ஹார்ட்டிகல்சரிஸ்ட்' என்ற நூலிலிருந்து விஷயங்களைத் தமிழில் எடுத்து எனக்குச் சொன்னுர். ''தாழைமட்கு ஒரு பாகம், புருப்பிழுக்கை ஒரு பாகம், வண்டல் மண் ஒரு பாகம் - மூன்றையும் கலந்து அதில் கொஞ்சம் மணலையும் கூட்டிக் குழிகளில் வைத்தால் என்னமாத்தான் செடி வளரும் போ. களகள வென்று இருக்கும். பூவும் நல்ல நிறமாக விழும். 'மார்னிங் ப்யூடி'யை அல்ப சொல்பமான பூ என்று எண்ணுதே, அப்பேன்! ராஜா இனத்தைச் சேர்ந்த மலர். அதற்கு ரொம்பக் குளிர்ச்சியும் கூடாது, வெப்பமும் ஆகாது. ஓலை மறைப்புக் கட்டவேண்டும், கொடி விடும்போது. அது சரிதான், தழை மட்கு என்ருல் அர்த்தம் தெரியுமா?'' என்ருர்.

''தழை அழுகிய உரந்தானே? நம் புழைக்கடையிலேயே மரத்தடியில் விசேஷமாகக் கிடைக்கும்'' என்றேன்.

''அப்புறம் புருப்பிழுக்கை..?''

''அதுதான் கொஞ்சம் கஷ்டம். தேடிப் பிடிக்க வேண்டும்.''

''வண்டல்..''

''வேணது, ஏரி மடுவிலிருந்து கழனிக்காக வாரி வைத்திருக்கிறேன். பத்துக் கூடை கொண்டுவந்தால் போகிறது'' என்றேன். அண்ணு செய்யும் இந்த வேடிக்கையைக் கடைசி வரைக்கும் பார்க்க வேண்டுமென்று எனக்குந்தான் ஆவல். இந்த 'மார்னிங் ப்யூடி'க்காக நான் இப்படி ஓடாக உழைப்பதற்குக் காரணமும் உண்டு. நான் அவருக்குச் சரியாகக் குதிக்காது போனுல் என்மீது கெட்ட அபிப்பிராயம் கொள்ள இடம் இருக்கிறது. மாதந்தோறும் அனுப்பும் ஜீவனும்சத்தின் வாயில் மண் விழுமே! குழந்தை குட்டிக்காரனுன நான் போகிற கதி? மன்னிக்கு மட்டும் தாராள மனசுதான்.

புருப் பிழுக்கைக்கு நான் அலைந்தது உண்டே, ஈசுவரா! ஐந்து மைலுக்கு அப்பால் ஒரு கோயில் கோபுரத்தில் புருக்கள் கூட்டமாகக் குடித்தனம் வைத்திருந்தன. அன்ருடம் ஒருவனை ஏவி ஏறச்சொல்லி ஒரு கூடைப் புரு எரு சம்பாதித்தேன். மூன்று உரத்தையும் அண்ணு சொன்ன அளவில் கூட்டி ஒரு வாரம் ஆற வைத்தேன்.

இதற்குள் அண்ணாவும், ''ஆச்சா, ஆச்சா?'' என்று துரிதப்படுத்திக் கொண்டே இருந்தார்.. ''இன்னும் இரண்டு நாள் ஆகிவிட்டால் பருவம் தவறிவிடுமே!'' என்றார். அவர் புத்தகத்தில் உள்ளதை அப்படியே கடைப்பிடிப்பவர். நான் உடலாலும், அண்ணா மூளையாலும் நடத்தும் தோட்ட வேலையைப் பார்க்க மன்னிகூட நடுநடுவே வருவாள். நானே மண்ணைக் கொத்தி உரம் வைப்பதைக் கண்டு அவள், ''அட ராமா! ஓர் ஆளை வைத்துக் கொள்ளக் கூடாதோ? இப்படி வேர்க்க வேர்க்க உழைப்பானேன்? கண்ணராவியாக இருக்கு!'' என்று வாசா அநுதாபத்தைக் காட்டுவாள்.

''மார்னிங் ப்யூடீ ப்யூடீ என்று டில்லியில் அடித்துக் கொள்வாயே, இதோ இன்னும் மூன்றே மாதத்தில் நம் அகத்திலேயே பார்த்து மனசார அநுபவித்துவிடு; அதுக்குத்தான் இவ்வளவு பாடும்'' என்றார் அண்ணா, தன் அன்பிற்குரியாளை நோக்கி.

''என்ன புஷ்பம்! எப்படிப் படரும்? வா வான்னு அழைக்கிற மாதிரியே பசுங்கொடி பூவோடு அசையும். அற்புதம்!'' என்பாள். மதனி இன்டர் பரீட்சை தேர்ந்தவள், பெரிய இடத்துப் பெண். அண்ணா அவளை விவாகம் செய்துகொள்ளாமல் இருந்தால் அவள் எம்.ஏ. வரைக்கும் எட்டிப் பார்த்தே இருப்பாள்; அவளுடைய நல்ல தசையினால்தான் அண்ணாவுக்குப் பெரிய உத்தியோகம் ஆயிற்றென்பது பல பேருடைய அபிப்பிராயம்.

''ஐயோ, இப்போ லேடி ரன்அவே வந்து பார்த்தால் நம்மைக் கண்டு பொறாமைப்படுவாள்'' என்றாள் தன் கணவனைப் பார்த்து.

''விதை இன்னும் நட்டாகவில்லை. பூப் பூத்த பிறகுதானே இதெல்லாம்?'' என்று நான் மனசுக்குள் சொல்லிக்கொண்டேன்.

ஊரெங்கும் பரவிவிட்டது, 'மார்னிங் பியூடி'யின் புகழ். ராமசுப்புவின் வாசல் திண்ணை பெரிது. ஊர் வம்பளப்பெல்லாம் அங்கேதான் நடக்கும். ராமசுப்பு மிராசுதார். நிலபுலம் நிறைய உண்டே தவிர ரொக்கம் கிடையாது. சுப்பாமணி அதாவது என் அண்ணாவின் பேரில் அவனுக்குச் சற்று அழுக்காறு. ''என்னவோ டில்லியில் பெரிய வேலை ஆய்விட்டதென்று தலை துள்ளிப்போகிறது. இவனுடைய பெரியவா இத்தனையூண்டு அகத்திலே குச்சு உள்ளிலே வாழ்ந்தது தெரியாதா என்ன? ரெண்டு பாஸ் பண்ணிவிட்டான். உத்தியோகமாகிவிட்டது. அவன் தம்பியைப் பார்; தரித்திரம் பிடுங்கித் தின்கிறது. எப்படியெல்லாமோ பணம் குவிச்சுப்பிட்டான்னு சொல்லறா. சீமைத் துரைதான் என்று எண்ணம். 'மோர்னிங் பியூடி' (அழுகிற அழகி) என்று பூஞ்செடி நட்டாலும் நட்டான். இப்படி ஊர் திமிலோகப்படுகிறது. பயல்கிட்டே இரண்டு காசு இருக்கோ இல்லையோ, அதுதான் நாலு நாய் பின்னாலேயே அலைகிறது!'' என்றான்.

இதற்குள் அண்ணாசாமி வாத்தியார் தம் இரட்டைக் குரலை எடுத்து, ''எப்போ சுப்பாமணி ஊரை விட்டுப் போனானோ தலைகீழாய்விட்டது அவன் சமாசாரம். அவன் சம்சாரத்தைப் பாரேன்; தரையைப் பார்த்தா நடக்கிறாள்? மடிதாறு வைச்ச புடைவை கட்டிக்கொள்வதில்லை. டில்லியில் அதுகூட இல்லையாம். கவுனோ என்னமோ சொல்வாளே, அதைத்தான் போட்டுக்கொள்கிறாளாம். ஏங்காணும் இவளை ஜாதிப் பிரஷ்டம் செய்யக்கூடாது?'' என்றார்.

அப்போது அந்த வம்பளப்புக் கட்சியில் சேர்ந்த ஒருவன் பட்டதும் படாததுமாய், ''ஓய், உம்ம பெண்ணை முதலில் கட்டுத்திட்டம் பண்ணும். அப்புறம் பிறத்தியாரைப்பற்றி ஒச்சம் சொல்லலாம்'' என்றான். சாஸ்திரியாரின் வாய் அடைத்துவிட்டது.

''அந்தச் செடி என்னமாகத்தான் பூக்கிறதோ! பார்ப்போமே'' என்ற முடிவிற்கு வந்ததும் அந்தக் கூட்டம் கலைந்தது.

* * * *

விதையை மன்னியின் கையாலேயே நடச் சொன்னார் அண்ணா. 10 அல்லது 15 குடம் தண்ணீர் நானே தூக்கி அன்றாடம் குழிகளில் கொட்டுவேன். போதாதென்பார் அண்ணா. ஒரு வாரத்திற்கெல்லாம் ஏழெட்டு முளைகள் வெளியே தலை காட்டின. மூன்றாவது இலையும் வெடித்துச் செடி வளரத் தொடங்கியது. ஆனால் திடீரெனப் பன்னிரண்டாவது நாள் செடியெல்லாம் வதங்கிவிட்டன. மறுநாள் எரிந்தே போயின. அன்று நிலங்களைப் பயிரிடும் வாரக்கார முனிசாமி வந்திருந்தான். பயிர் பச்சைகளைப்பற்றி அநுபவம் மிக்கவன். ''என்ன சாமீ, பாக்கிறீங்க?'' என்றான். ''இந்தச் செடி நன்றாகக் களகளவென்று தளிர்த்துத் திடீரெனக் காய்ந்துவிட்டது. ஏனோ தெரியவில்லை'' என்றேன். மண்ணை எடுத்து மோந்து பார்த்து, ''ரொம்பக் காரமான உரம். இளஞ்செடி தாளாது. பிஞ்சு கட்டுமண் ரவெ சேத்து மறுபடியும் விதையை ஊணுங்கோ. என்னமா முளைக்கிறது பாருங்கோ'' என்றான்.

அவன் சொன்னதில் நம்பிக்கை விழவில்லை, அண்ணாவுக்கு. ஆங்கிலப் புத்தகந்தான் அவருடைய பிரமாண நூல். தாமே ஏதோ யோசனை பண்ணி, ''மண்ணைப் பாதி எடுத்துவிடு; களிப்பிராத மண்ணைக் கொஞ்சம் கல; விதையை இந்த வாட்டி என் கையாலேயே நடுகிறேன்'' என்றார்.

அப்போது அந்தக் குடியானவன், ''சாமி, சின்ன ஐயா கையாலேயே நடட்டும். ஆகிவந்த கை. குழந்தை குட்டி எடுத்த கை. நம் ஐயா கையைக் கொண்டுதான் முதல் விதைப்பாடு போடுகிறோம் இந்த ஊரில். ஒண்ணு ஆயிரமாக விளையுது'' என்றான்.

அண்ணாவின் முகம் சுருங்கியது. என்னையே விதையைப் போடச் சொன்னார். மூன்றாவது நாளே முளை வெடித்து வந்தது. செடி கிளைத்து, மடமடவென்று மாரளவு கொடியும் ஓடிற்று. கொழு கொம்பை நிறுத்தி மூங்கிற் படலில் ஏற்றினேன். கசகசவென்று ஒரு மாதத்திற்குள் கொடி ஒன்றோடு ஒன்று பின்னிக்கொண்டு வாசலில் அலங்காரமாகப் படர்ந்து விளங்கியது. செடி நட்டு இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகி இருக்கலாம். ''பூ எப்போது பூக்கும்?'' என்று அண்ணா எதிர் பார்த்துக்கொண்டே இருந்தார். எந்த இடம் போனாலும் 'மோர்னிங் ப்யூடியாமே' என்று தம் கிராமிய மொழியில் ஊரார் என்னை விசாரிக்காமல் விடுவதில்லை. அண்ணாவுக்கு இந்தப் பக்கம் 'லீவ்' கழிந்து கொண்டே வந்தது. விளையாட்டாக மூன்றுமாத காலம் இந்தச் செடி ஜோலியிலேயே போய்விட்டது. 'லீவ்' முடிவதற்குள் அது பூத்து விடுமா என்ற ஆத்திரம் அவருக்கு. மழையும் பெய்து வெயிலும் நன்றாகக் காயவே, முகைப்பதம் வருவதன் குறிகள் தென்பட்டன.

கொடியின் ஒவ்வொரு கிளையையும் ஊன்றிக் கவனித்து வந்தேன். ஒரு நாள் பார்க்கையில் சுமார் நூறுக்கு மேல் அரும்பு கொப்பளித்திருந்தன. அண்ணாவிடம் ஓடிப்போய்ச் சமாசாரத்தை எட்டவிட்டேன். அவர் வந்து பார்த்தார். ''இன்னும் ஒரு வாரம்; கண்ணுக்கு ஒரே விருந்து பார்!'' என்று ஒரு குதி குதித்தார். ''ஒரு வாரம் எப்படிப் பொறுப்பேன்!'' என்று மன்னி துடித்தாள்.

மொட்டின் புற இதழில் மெல்லிய ஊதா நிறம் கலந்த வெளுத்த கோடுகள் தெரிந்தன. அவைதாம் இதழ் விரியும் இடம். இன்னும்

இரண்டே நாளில் மலரும் என்று எனக்குப் பட்டது. அந்த இரண்டு நாளும் அண்ணுவுக்குத் தூக்கமே வரவில்லை. தாமே முதலில் அந்தக் காட்சியைப் பார்க்க வேண்டுமென்று ஆசை. இரண்டாவது நாள் விடி காலையில் ஓர் ஆனந்தக் கூச்சல் கேட்டது. முகத்தை இன்னும் நான் கழுவக்கூட இல்லை. ஓடி வந்தேன். 'கேட்' அருகே கொடிக்குவை யெங்கும் ஒரே பூவின் கோலம். ''கடைசியாக மார்னிங் ப்யூடியைக் கண்டேன்'' என்று அண்ணு குதித்துக்கொண் டிருந்தார். மன்னியும் வராந்தாவில் இருந்தபடியே தூக்கம் தெளிந்த கண்களுடன் அந்த அற்புதக் காட்சியை விழுங்கிவிடுவது போல் கவனித்தாள். ஒரே குறை அவளுக்கு. டில்லியில் இவ்வளவு அழகாக இந்தச் செடி பூக்கவில்லையே என்பதுதான். வெல்வெட்டின் மழுமழுப்பான மென்மை; ஊதா கலந்த வெண்மை. மெல்லிய காற்றில் இணர்கள் ஒன்றை ஒன்று தழுவி விளையாடும் காட்சி அழகாகத்தான் இருந்தது. வாசனை இருக்கிறதோ என்று பூவை அணுகி மோந்தேன். மண்ணுங்கட்டி வாசனைதான்! அபூர்வமான வர்ணம் தோன்றுமென்று அண்ணு சொன்னர். பேதைபோல் சிரித்தது அந்த மலர். பொலிவோ, பகட்டோ அதனிடத்தில் இல்லை.

இந்தப் பூ மலர்ந்த அன்று தற்செயலாக வரலக்ஷ்மி விரதம் வந்தது. சீமை நாகரிகத்தின் சாயம் ஏறி இருந்தாலும் மதனி நம் தேசத்து நோன்பு அநுஷ்டானங்களை ஒன்றும் விடாதவள். நாகரிகம் ஒரு பக்கம்; ஆசாரம் ஒரு பக்கம். சோமு தீட்சிதர் எங்கள் வீட்டுக்கு உபாத்தியாயம். பூஜை செய்விக்க அவர் சற்றுப் பொழுதோடேயே வந்துவிட்டார். மதனி அம்மாள் எதையும் நேரத்தோடு செய்பவள். எது எப்படிப் போனுலும் ஒன்பதரைக்கெல்லாம் சாப்பிட்டாக வேண்டும். அவளுக்குப் பசி தாளாது. 'மார்னிங் ப்யூடி'யண்டை ஒரே கூட்டமாக ஜனங்கள் நிற்கவே, அவரும் அதைப் பார்க்க வந்தார். அண்ணுவைப் பார்த்து அவர், ''சுப்பாமணி, என்ன இப்படி எல்லாரும் காலங்கார்த்தாலே இந்தப் பூங்கொடியைப் பார்த்துக்கொண் டிருக்கிறீர்கள்?'' என்ருர்.

''ஓய், உமக்கென்ன தெரியும் இதன் அருமை? சீமையில்தான் இந்தச் செடி இப்படிப் பூக்குமாம்'' என்ருர் அண்ணு. கொடி அருகே சென்று, கூர்ந்து கவனித்தார் தீட்சிதர்.

''இந்தச் சனியன் பிடித்த கொடியை முன்னே அறுத்துப் போடுங்கள். வீட்டைத் துடைத்துவிடுமே! வயல் காட்டிலேதானே இது இருக்க வேண்டும்? அவலட்சணம், நல்ல நாளும் அதுவுமா!'' என்ருர்.

''இதன் பெருமை உமக்கு என்ன தெரியும்? மார்னிங் ப்யூடி, கடலின் நுரை என்று வெள்ளைக்காரன் போற்றி வளர்த்து அழகு பார்க்கிருன் ஓய்'' என்ருர் அண்ணு.

''சுப்பாமணி, இது கடல்பாலைப் பூ, வேருென்றுமில்லை. முன்னே வெட்டித் தள்ளுங்கள். உதவாது நமக்கு; சிரேயசுக்கு நல்லதன்று'' என்ருர் தீட்சிதர்.

''கடல்பாலைப் பூ? என்ன?'' என்ருர் அண்ணு.

''கடல்பாலையேதான்! எனக்குக் கண்ணில்லையா? இலையின் பின்புறம் பட்டுப்போல் மழமழவென்று இருக்கிறதே, பாரேன்'' என்ருர் தீட்சிதர்.

''இது கடல்பாலைப் பூத்தானு? உமக்கு நன்ருகத் தெரியுமா?'' என்றேன் நான், சந்தேகம் தெளிவதற்கு.

''அட ராமா! இன்னுமா அவநம்பிக்கை? குடியன் தோட்டத்தில் விசேஷமாக இருக்கிறது. வேலிக்கொடி இது. மரத்தை எல்லாம் கப்பிக்கொள்ளுமே இந்தப் பாழும் கொடி'' என்று கூறிவிட்டு, நாழிகை ஆகிவிட்டதால் உள்ளே விரத பூஜையைச் செய்விக்கச் சென்ருர் தீட்சி

தர். தட்சிணை - வாயனத்துடன் வெளியே வரும்போது அண்ணு அவரைப் பார்த்து, ''அப்படியானுல் அந்தத் தோட்டத்தைக் காட்டும். என் கண்ணுலேயே பார்த்துவிடுகிறேன்'' என்ருர்.

எங்கள் பின்ஞலேயே ஒரு கூட்டம் சென்றது தோப்புக்கு. ஆற்றங்கரையோரம் ஏராளமாகப் படர்ந்திருந்தது ஒரு கொடி. இலையுடன் பூவை அறுத்துவரச் சொன்னேம். 'மார்னிங் ப்யூடி'யின் இலையையும் பூவையும் அண்ணு மாதிரிக்கு எடுத்து வந்திருந்தார். இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தார். தடவித் தடவிப் பார்த்தார். மோந்து மோந்து பார்த்தார். கிள்ளிப் பார்த்தார். இரண்டும் ஒரே வகை தான்! அவருக்கு வாயே அடைத்துவிட்டது. அங்கே இருந்தவர்களை நோக்கி அசட்டுச் சிரிப்புச் சிரித்தார். வீடு திரும்பினேம். ''சாயந்தரம் வண்டி எப்போது, பார்!'' என்ருர் என்னை. ''பட்டணத்துக்கா? இன்று நவமியாச்சே. அதோடு வெள்ளிக்கிழமை. சிராவணமும் வருகிறது. இருந்துவிட்டுப் போயேன் அண்ணு'' என்றேன்.

''இல்லை, பையா; முக்கியமாகச் சிலரைப் பார்க்கவேண்டும். 'லீவ்' இன்னும் ரொம்ப நாள் இல்லையே. கட்டாயம் போகவேண்டும்'' என்று அந்தப்புரத்தினுள் மறைந்தார்.

எனக்கோ அழுகை வெடித்து வந்தது. ''ஐயோ, பாழும் கடல் பாலையே! உனக்காக என் உடலை மாய்த்துக்கொண்டேனே! கண்போல் வளர்த்த என் சம்பகத்தைப் பறி கொடுத்தேனே! அது இருந்தால் இத்தனை நாள் பூத்து ஊரே நறுமணம் கமழுமே!'' என்று அந்த 'மோர்னிங் ப்யூடி'யைச் சபித்தேன். அண்ணுவை அல்ல; அவர் எனக்குப் படி அளக்கும் மகாநுபாவர். ★

—அக்டோபர், 1951.

# பிடிவாதம்

முத்துக்குமர செட்டியார் தம் உறவினரின் முகத்தைச் சற்று ஆச்சரியத்துடன் நோக்கினார். அவர் கூறியதை இவரால் சரிவரக் கிரகிக்க முடியவில்லை. தமது கேள்விக்கு இவ்வித விடை கிடைக்குமென்றும் அவர் எதிர்பார்க்கவில்லை.

''என்ன?'' என்று மறுபடியும் கேட்டார்.

''நான் போன காரியம் பலிக்கவில்லை. அவ்வளவுதான். அவள் வர மாட்டாளாம். அவளுடைய சிற்றப்பாவாகிய உன் மாமன் அவளைக் கட்டாயப்படுத்த மாட்டேன் என்று சொல்லிவிட்டார். 'அவளாகப் போவதென்றால் போகட்டும்; எனக்குச் சந்தோஷம். அவள் மாட்டேன் என்றால் நான் ஒன்றும் சொல்லமாட்டேன்' என்று சொல்லிவிட்டார்.''

''ஏன் வரமாட்டாளாம்?''

''நான் ஏதோ இங்கே என் வேலையைச் செய்துகொண்டு திருப்தியாக இருக்கிறேன். இதை விட்டுவிட்டு எதற்காக வரவேணும்?' என்று கேட்டாளாம்.''

''எதற்காக வரவேணுமா? புருஷன் வீட்டிற்கு மனைவி வருவது ஒழுங்குதானே! எதற்காக வரணும்னு கேட்பானேன்?''

செட்டியாரின் அத்தான் மௌனமாக இருந்தார். அவருக்கு அபிராமியைத் தாம் சந்தித்த சமயம் அவள் கூறிய வார்த்தைகள், ஆணி போன்ற அழுத்தமான வார்த்தைகள் ஞாபகம் வந்தன.

''புருஷன் வீட்டிற்கு மனைவி வருவது ஒழுங்கு அல்லவா?'' என்ற இதே வார்த்தையை அவரும் அபிராமியைக் கேட்டிருந்தார்.

''புருஷன் என்பவன் யார்? பெண்டாட்டியை ரட்சித்துக் காப்பவன் புருஷன். பத்து வருஷமாகத் திரும்பிப் பாராமல் இருந்துவிட்ட பிறகு இப்பொழுது புருஷன் முறை எங்கிருந்து வந்தது?'' என்று அவளுடைய நயமான குரலில் அவள் எதிர்க் கேள்வி கேட்டாள். அவளுடைய முகத்தில் கோபம் தாபம் எதுவும் இல்லை. நிதானமும் தன்னடக்கமுமே இருந்தன. ஒரு நியாயாதிபதி கேட்பதுபோன்ற, உணர்ச்சியில்லாமல் கேட்கப்பட்ட அந்தக் கேள்விக்கு அவரால் விடை கூறவே இயலவில்லை.

''என்னவோ அறியாப் பிள்ளையாக இருந்துவிட்டான். இப்போது திருந்தி இருக்கிறான். ரொம்ப நல்லவன்; குணசாலி. தப்புத் தண்டா வேலை எதுவும் செய்யமாட்டான். அவன் கிட்ட எல்லாருக்கும் மதிப்பு ஜாஸ்தி'' என்று இவர் மேன்மேலும் முணுமுணுத்துக்கொண்டே போனார். அபிராமி அவரைத் தடுக்கவே இல்லை. அவர் சொல்வதை மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தாள். அவர் முடித்ததும், ''இது

வரையில் அவர் என்னிடம் நடந்துகொண்ட விதம் எனக்கு அவரிடம் மதிப்பை உண்டாக்கவில்லை. நானும் மதிக்கும்படி அவர் நடந்துகொண்டால் அப்புறம் பார்த்துக்கொள்ளலாம்'' என்றாள். அவள் முகத்தில் சிறியதான ஒரு புன்சிரிப்புத் தோன்றி மறைந்துவிட்டது.

''புருஷர் சற்று ஏறுமாறாக இருந்தாலும் பெண்கள் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். தெரியாதவன், செல்லப்பிள்ளையாக வளர்ந்தவன்; போனால் போகிறது என்று பொறுத்துக்கொள். நீ எவ்வளவோ படித்திருக்கிறாய். எல்லாம் தெரிந்துகொண்டிருக்கிறாய். அவன் இப்போது உன்னைப் பார்க்கவில்லை. பார்த்தால் உன் சாமர்த்தியத்தைக் கண்டு உன் அடிமை ஆகிவிடுவான். பெட்டிப் பாம்பாக இருப்பான்'' என்று அவர் மேன்மேலும் கூறினார்.

இச் சமயம் அபிராமி களுக்கென்று சிரித்துவிட்டாள். ''சபாஷ், அத்தான். தூதுக்கு நீங்கள் மிகவும் ஏற்றவர்'' என்று கூறிவிட்டு எழுந்து கைகளைக் கூப்பி, ''என்னை மன்னிக்க வேண்டும். எனக்குப் பள்ளிக்கூடம் போக நேரமாகிவிட்டது'' என்று சொல்லி மறு பேச்சில்லாமல் போய் விட்டாள். அவளைத் தடுத்து நிறுத்திப் பேச அத்தானுக்குத் தைரியமில்லை. அவள் தன்னைக் கேலி செய்கிறாள் என்று இவருக்குக் கலக்கம் உண்டாயிற்று. இதனால் அந்தச் சம்பாஷணையின் தொடக்கத்தில் இருந்த சொற்பத் தைரியமும் போய்விட்டது. மறு ரெயிலில் புறப்பட்டுச் சென்னை வந்து சேர்ந்தார்.

* * *

''ஏன் வரமாட்டேன் என்கிறாள்? சொல்லுங்கள்'' என்று செட்டியார் தம் அத்தை மகனை மறுபடியும் வற்புறுத்திக் கேட்டார்.

''அவள் என்னவோ சொல்கிறாள்.''

''என்ன சொல்லுகிறாள்?''

''அதெல்லாம் உனக்கு எதுக்கு அப்பா? அவள் பெரிய இஸ்கூலிலே வாத்தியாரம்மாவாக இருக்கா; அதை விட்டு வர இஷ்டமில்லையோ என்னவோ!''

''அந்தக் காரணமா சொன்னாள்?''

''நான் இங்கே திருப்தியாக இருக்கிறேன்னு சொன்னா! அப்புறம்..'' என்று தயங்கினார் செட்டியார்.

''அப்புறம் என்ன?''

அத்தான் நல்ல மனசு படைத்தவர். அபிராமி கூறியதை முத்துவிடம் சொன்னால் வருத்தப்படப் போகிறானே என்று இதுவரையில் சரியான விடையைச் சொல்லாமல் தட்டிக் கழித்து வந்தார். இப்பொழுது முத்து கட்டாயப்படுத்தவே, ''என்னவோ, அவள் மதிக்கும்படி நீ இதுவரையில் நடந்துகொள்ளவில்லையாம். அப்படிச் செய்தால் வருகிறேன் என்கிறாள்'' என்றார். இதைக் கூறிவிட்டு முத்துவின் கோபம் அதிகமாகிவிடப்போகிறதே என்று பயந்து தயக்கத்துடன் அவர் முகத்தை நோக்கினார்.

முத்துவின் கோபம் அதிகமாகவில்லை. அதற்கு மாறாக அது தணிந்துவிட்டதோ என்றுகூட அத்தானுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. ஒரு சிரிப்புக்கூட அவர் கண்களில் தோன்றி மறைவதை அத்தான் கவனித்தார். என்ன ஆச்சரியம்! இவ்வார்த்தைகளை அபிராமி கூறிய சமயம் அவள் கண்களில் எவ்விதப் பிரகாசம் இருந்ததோ அதே மாதிரிப் பிரகாசம் இப்பொழுது முத்துவின் கண்களில் தோன்றி மறைவதை ஒன்றும் அறியாத அப்பாவியான அத்தான் கவனித்து வியந்தார்.

முத்துவின் அடுத்த வார்த்தைகள் அவருடைய கோபம் இன்னும் தணியவில்லை என்பதைக் காண்பித்தன.

''சரி, புரிந்துகொண்டேன். இனிமேல் அவளைப்பற்றி என்னிடம் பேசாதீர்கள்'' என்றார்.

''பார்க்க என்னவோ நல்லாத்தான் இருக்கா. நகை ஒண்ணும் பூட்டிக்கலே. கிறிஸ்துவச்சி மாதிரி ஆயிட்டா. ஆனால்....''

''போதும், அவள் பேச்சே வேண்டாம்.''

அத்தான் வாயை மூடிக்கொண்டார்.

* * * *

அபிராமியின் வார்த்தைகள் செட்டியாரின் மனத்தில் பலவித உணர்ச்சிகளை உண்டாக்கின. தம்மை அவமரியாதை செய்வதற்கென்று மாத்திரம் கூறப்பட்ட வார்த்தைகள் அல்ல அவை, தம்மைச் சண்டைக்குத் தூண்டும் வார்த்தைகள் என்பதை இவர் சட்டென்று புரிந்துகொண்டார். ஆனால் அதுவே இவருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. 'முன்பு இருந்த அபிராமியா இவள்? இந்தப் புது அபிராமியை அறிய வேண்டும்' என்ற ஆவல் அவருக்கு ஏற்பட்டது.

முன்பு இருந்த அபிராமியை இவர் தமது ஞாபகத்திற்குக் கொண்டு வர முயன்றார்.

இவருக்குப் பால்ய வயசிலேயே விவாகம் ஆயிற்று. இவருடைய தகப்பனருக்கு மிக நெருங்கிய நண்பர் கறுப்பண்ணச் செட்டியார் என்பவர். தாம் வளர்த்துவந்த தாய் தந்தையற்ற அபிராமியை மிகப் பணக்காரரின் ஒரே பிள்ளையாகிய இவருக்கு விவாகம் செய்து வைக்க வேண்டுமென்று பெண்ணிற்கு எட்டு வயசு முதல் முனைந்துகொண்டிருந்தார். பெண்ணிற்குப் பதினன்கு வயசில் கல்யாணமும் நிச்சயமாயிற்று. ''பெண் சிவப்பாக இருக்கிறது; நிறைய நகை போட்டிருக்கிறாள்; அது போதும் நமக்கு'' என்று இவருடைய தகப்பனர் கூறிவிட்டார். விவாகம் விமரிசையாக நடந்தேறிற்று.

இவருக்குப் பெண் பிடிக்கவில்லை. மிகச் செல்வமாக வளர்க்கப்பட்ட அபிராமிக்குச் சரீரமும் சற்றுப் பலவீனமானது. மழை என்றால் ஜுரம், வெயில் என்றால் தலைவலி. ஆகையால் அவளைப் பள்ளிக்கூடங்கூடச் சரியாக அனுப்பாமல் அவளுக்குக் கமல நகைகள் செய்து போடுவதிலேயே கருத்துடன் கறுப்பண்ணர் இருந்துவிட்டார் என்பதை முத்துக்குமாரர் அறிந்தார்.

முத்து தம் மனைவியுடன் பத்தே தினம் பழகினர். அவளுக்குப் பேசத் தெரியவில்லை. சிரிக்கத் தெரியவில்லை. இவர் சற்றுக் கடுத்தால் அழ ஆரம்பித்துவிடுவாள். இவரிடம் பயப்பட்டு நடுங்கினாள். சரியான தேகவளர்ச்சி பெறாத அவளை அவள் அணிந்திருந்த கமல நகைகள் ஒரு பொம்மையைப்போல் காண்பித்தன.

வெறுப்புற்ற செட்டியார் மனைவியை உதறிவிட்டுச் சென்னைக்குப் போய்விட்டார். அப்போது இவருக்கு வயசு பதினெட்டு. பிற்பாடு தகப்பனர் எவ்வளவு மன்றாடியும் அவளைப் பார்க்க மறுத்துவிட்டார். வேறு விவாகம் செய்யவும் மறுத்தார். அதற்குமேல் இரண்டு வருஷத்தில் தகப்பனர் மரிக்கவே அவருடைய தொந்தரவும் நின்றது.

காலேஜில் இவர் நன்றாகப் படித்து முதல் வகுப்பில் தேறினர். மேல் படிப்பிற்கு இங்கிலாந்து போகுமாறு காலேஜ் உபாத்தியாயர்கள் கூறவே, அவ்விதமே சென்று அங்கே நாலைந்து வருஷங்கள் படித்துத்

தேறித் தம் தேசம் திரும்பிவந்தார். அதற்குமேல் சென்னையிலேயே தம் பாடமாகிய ரசாயனத்தில் ஆராய்ச்சி செய்வதற்கு ஒரு ரசாயனசாலை ஏற்படுத்திக்கொண்டு விஞ்ஞான ஆராய்ச்சியில் முனைந்தார். அவ்வித வேலையில் மேன்மேலும் பற்று ஏற்படவே இதர விஷயங்களின் தொந்தரவு அவருக்குப் பிடிக்கவில்லை. வீட்டைக் கவனிப்பது, தகப்பனார் வைத்துச் சென்ற சொத்துக்களைக் கவனிப்பது எல்லாம் யார்? மேலும் நாலைந்து மணிநேரம் ஆராய்ச்சி செய்துவிட்டு வெளியே வந்தால் வீட்டில் வேறு எவரும் இல்லாமல் தாம் ஏகாங்கியாய் இருப்பது இவருக்கு அருசியை உண்டாக்கிற்று. வேறு மானிடர் தோழமையை அவர் மனம் நாடிற்று. நண்பர்களை அடிக்கடி அழைத்துத் தம் வீட்டிலேயே வைத்துக்கொள்ள அவர் முயன்றார். ஆனால் அவர்களுக்கு இவருடைய ஆராய்ச்சி விஷயங்களில் சிறிதும் பற்று இல்லாமையால் சீக்கிரமே போய்விடுவார்கள்.

இவ்விதம் இருக்கையில்தான் அவருக்குத் தம் மனைவியைப்பற்றி அடிக்கடி சிந்தை உண்டாயிற்று. அவள் விஷயத்தில் தாம் நடந்து கொண்டது தவறோ என்று கூடச் சந்தேகிக்கலானார். 'அவள் இங்கு வந்து இருந்தால் வீட்டுத் தொல்லை இல்லாமல் இருக்கலாம்; நமது வேலைக்கும் இடையூறு இருக்காது' என்ற எண்ணத்துடன் வயோதிகரான அத்தானை அழைத்து இந்தத் தூது வேலைக்கு இசையுமாறு செய்தார். அப்பொழுதுதான் அத்தானின் மூலம் தம் மனைவி படித்துத் தேறித் தம்முடைய ஊரிலேயே ஒரு பள்ளிக்கூடம் அமைத்துக்கொண்டு ஓர் உபாத்தியாயினியாக இருக்கிறாள் என்பதை அறிந்தார்.

தாம் அழைத்ததும் அவள் வந்துவிடுவாள் என்ற நம்பிக்கையுடன் இருந்தார். அவள் வராதது மாத்திரம் அல்ல. அவளுடைய வார்த்தைகள் இவரைத் திடுக்குறச் செய்தன. முன் இருந்த அபிராமியா இவள்!

அத்தான் வந்து போனபிறகு இரண்டு தினங்கள் வரையில் செட்டியார் சும்மா இருந்தார். அதற்குமேல் யாரிடமும் ஒன்றும் சொல்லாமல் திடீரென்று ஒரு நாள் மாலை ரெயிலேறிச் செட்டிநாடு சென்றார்.

இவர் தம் மாமன் வீடு சென்ற சமயம் பகல் மணி பதினொன்று இருக்கும். ஸ்டேஷனிலிருந்து ஒரு வாடகை வண்டியில் வந்திருந்தார். வாசலில் எவரும் இல்லை. உள்ளே கூடத்தில் ஓர் ஊஞ்சல் பலகையில் கறுப்பண்ணர் படுத்திருந்தார். இவரைக் கண்டதும் எழுந்து உற்று நோக்கியவாறே, ''யார், தெரியல்லியே!'' என்றார்.

முத்துக்குமாரருக்குக் கறுப்பண்ணரைப் பார்த்தபோது நெஞ்சம் உருகியது. முன்பு விவாக சமயத்தில் அவருக்கு இருந்த உற்சாகமும், ஆசையும், தமக்குப் பெரிய இடத்து மாப்பிள்ளை கிடைத்துவிட்டார் என்ற பெருமையும் என்ன! இந்தப் பத்து வருஷத்தில் இவ்வளவு மாறுதலா?

''நான்தான் முத்து'' என்றார். ஆனால் இவர் அந்த வார்த்தையைக் கூறுவதற்கு முன்பே கறுப்பண்ணர் இவரை அடையாளம் கண்டுகொண்டார். மிகப் படபடப்புடன், ''வா, வா, உட்காரு'' என்று கூறித் தம் மனைவியிடம் தெரிவிப்பதற்காக அவசரமாக நான்கு அடி எடுத்து வைத்தவர், தொப்பென்று விழுந்துவிட்டார். முத்து அவரைத் தூக்கி எடுத்து ஊஞ்சலில் மெதுவாகப் படுக்கவைத்தார்.

அவர் 'படுக்க மாட்டேன்' என்று எழுந்து உட்கார்ந்துகொண்டு, ''அப்பா, முத்து, வந்தாயா, வந்தாயா?'' என்று உணர்ச்சி மிகுதியால் வாய் குழறக் கூறினார்.

முத்து அவர் பக்கத்தில் உட்கார்ந்தார்.

இதற்குள் கறுப்பண்ணரின் மனைவி மீனாக்ஷி உள்ளேயிருந்து வந்து தன் கணவர் பக்கத்தில் மருமகப்பிள்ளை உட்கார்ந்திருப்பதைக் கண்டு பிரமித்து நின்றாள். கிழவனார், ''காபி கொண்டு வா'' என்று அவளை அதட்டினார். அவள் சந்தோஷ மிகுதியால் பேச முடியாமல் உள்ளே சென்றாள்.

அவர்களுக்குத் தாம் தீங்கே செய்திருக்கவும் அவ்விருவரும் எல்லாவற்றையும் மறந்து தம்மிடம் காண்பித்த அன்பைக் கண்டு முத்துவின் மனம் உருகிற்று. இருந்தும் தாம் ஜாக்கிரதையுடன் நடந்துகொள்ள வேண்டும் என்பதை உணர்ந்து, ''என் காரியஸ்தனைப் பார்க்க வந்தேன். இன்றே திரும்பிப் போக வேண்டும்'' என்றார். கிழவனார் முகம் குன்றிற்று. முத்துவைக் கண்டதும் அபிராமியை நேரில் அழைக்க வந்திருக்கிறார் என்ற ஆசை அவருடைய உள்ளத்தில் எழுந்தது. ஆனால் இவ்வார்த்தைகள் அதை அடக்கின. கிழவனாரின் ஏமாற்றத்தை முத்து கவனிக்காமல் இல்லை. இருந்தும் தமது மிருதுவான குரலில் தாம் பேசும் வழக்கப்படி, பதற்றமில்லாமல், தம் நிலம், அந்த ஊரில் இருக்கும் தம் வீடு, கணக்குப் பிள்ளையின் வேலைகள் முதலியவற்றைப் பற்றிச் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். தகப்பனார் போன பிறகு தாம் இந்தப் பக்கமே வராமலிருந்ததனால் பல காரியங்கள் கெட்டிருப்பதைப்பற்றி வருத்தம் தெரிவித்தார். கறுப்பண்ணரின் குடும்ப க்ஷேமத்தை விசாரித்தார். மீனாக்ஷி காபி கொண்டுவந்தாள். முத்து கை கால்களைக் கழுவிக் கொண்டு காபி குடித்துவிட்டு, ''சரி, நேரமாகிறது. நான் போய் வருகிறேன்'' என்றார்.

பள்ளிக்கூடத்தில் இருந்த அபிராமியை அழைத்து வருமாறு ஆள் அனுப்பலாமா என்று மீனாக்ஷி கறுப்பண்ணரைக் காதோடு கேட்டாள். முத்துக்குமாரருக்குப் பாம்புச் செவிபோலும்! ''இல்லை, வேண்டாம்'' என்று அதற்கு விடையைத் தாமே கூறிவிட்டார். கறுப்பண்ணரும் மீனாக்ஷியும் எதுவும் சொல்ல இயலவில்லை.

''போய் வருகிறேன். மறுபடியும் வந்தால் இங்கே வந்து பார்க்கிறேன்'' என்று சொல்லிவிட்டு முத்துக்குமாரர் விடைபெற்றுச் சென்றார்.

கறுப்பண்ணரும் மீனாக்ஷியும் திரும்பத் திரும்ப மருமகன் வந்து போன விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டனர். ஆனால் ஏன் வந்தார் என்பது மாத்திரம் புரியவில்லை. ''என்ன மரியாதை, என்ன குணசாலி, பார்த்தாயா?'' என்றார் கறுப்பண்ணர்.

''எவ்வளவு அழகாய்விட்டார்! முகத்திலே என்ன பவுசு! உயரமும் பருமனுமாக ஆகிவிட்டாரே?'' என்றாள் மீனாக்ஷி.

''அபிராமி பிடிவாதம் செய்கிறாளே!'' என்று வருத்தப்பட்டார் கறுப்பண்ணர்.

அபிராமி மாலையில் வந்ததும் இருவரும் நடந்தவற்றை விஸ்தரித்தார்கள். திரும்பத் திரும்ப அவர் குணத்தைப் புகழ்ந்தார்கள். மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்த அபிராமி அவர்கள் முடித்ததும், ''போதும், அவர் பேச்சை இனி என் எதிரில் பேசாதீர்கள். பத்து வருஷகாலமாய் நான் கஷ்டப்பட்டதை என்னுடன் கூட இருந்து பார்த்துக்கொண்டிருந்தீர்கள். இப்போது ஒரு நாள் அவர் வந்து உங்களைப் பார்தது ஒரு சிரிப்புச் சிரித்தால் உடனே நல்லவர் ஆகிவிட்டாரா? நான் இந்த வீட்டில் இருக்க வேண்டுமானால் அவர் பேச்சை என் எதிரில் இனிப் பேசுவதில்லை என்று நீங்கள் ஒப்புக் கொள்ளவேண்டும். இல்லாவிடில் நான் இங்கே இருக்க மாட்டேன்'' என்றாள். அபிராமியின் பிடிவாதத்தை இந்தப் பத்து வருஷங்களாக அவர்கள் நன்கு அறிவார்கள். ''நான்

படிக்க வேண்டும்; எனக்கு நல்ல வாத்தியாரம்மா வைத்துக் கொடுங்கள். இல்லாவிட்டால் நான் ஓடிப்போய்விடுவேன்'', ''நான் சென்னையில் போய் வாத்தியாரம்மாளாகப் பயிற்சி பெறப்போகிறேன். போகத்தான் போகிறேன்'', ''சென்னையிலிருந்து திரும்பி வந்ததும், நான் ஒரு பள்ளிக்கூடம் வைக்கப்போகிறேன்.'' இப்படி ஒவ்வொன்றுக்கும் அவர்கள் விட்டுக் கொடுக்கும்படி ஆயிற்று. இந்த முறையும் இருவரும் ஒப்புக் கொள்ளும்படி ஆயிற்று.

இரண்டு வாரம் கழித்துச் செட்டியார் மறுபடியும் ஒரு தினம் திடீரென்று வந்தார். இந்த முறை வெறுங்கையுடன் வராமல் கறுப்பண்ணருக்கென்று ஒரு கூடை உயர்ந்த வகைப் பழங்களும், மீனுக்ஷிக்கு ரவிக்கைக்குப் பட்டுத் துணிகளும் வாங்கி வந்திருந்தார். மீனுக்ஷி சாப்பிட்டுவிட்டுப் போகவேண்டுமென்று வற்புறுத்தவே, சம்மதித்துச் சாப்பிட்டார். மீனுக்ஷியின் சமையலை வெகுவாய்ப் புகழ்ந்தார். கறுப்பண்ணரிடம் மிக விசுவாசத்துடன் பேசினதும் அல்லாமல் தம் நிலம், சொத்து இந்த விவ்காரங்களில் எவ்வாறு நடந்துகொள்வது என்றெல்லாம் கறுப்பண்ணரைக் கேட்டார். அவருடைய அநுபவம் நிறைந்த வார்த்தைகள் தம் மனத்தில் ஆழமாகப் பதிவதாகவும் காண்பித்துக்கொண்டார்.

அன்றும் அபிராமி மாலையில் வீட்டுக்கு வருவதற்குள் இவர் ரெயிலேறி ஊருக்குப் போய்விட்டார்.

அபிராமியிடம் மீனுக்ஷி ரவிக்கைத் துணிகளையும் பழங்களையும் காண்பித்தாள். அவள் மௌனமாக இருக்கவே, தைரியம் பெற்று நடந்தவை முழுவதையும் சொன்னாள். கறுப்பண்ணரும் மருமகப் பிள்ளை, தம்மை யோசனை கேட்கவே முக்கியமாக வந்தார் என்றார். பாவம், அப்பாவிகளான அவ்விருவரும் சென்னையிலும் சீமையிலும் படித்துத் தேறின அந்தத் தந்திரக்காரச் செட்டியாரின் கையில் களிமண் போலவே ஆயினர் என்பதை அபிராமி உணர்ந்தாள். கோபமும் ஆத்திரமும் அவளுடைய் உள்ளத்தில் பொங்கி எழுந்தன. என்ன செய்வது? தன் சுற்றத்தாரை இவ்விதம் தான் இல்லாத சமயத்தில் வந்து வசப்படுத்திக்கொண்டு தன் காலின் கீழே பள்ளம் பறிக்கிறார் கணவர் என்பதை அவள் உணர்ந்தாள். பற்களை நறநறவென்று கடித்தாள்.

லேடி ஆறுமுகம் அதே ஊரில் பிறந்து வளர்ந்த பெண். முத்துக் குமாரரின் பந்து! அவர் சென்னையிலிருந்து செட்டிநாடு வழியாக ராமேசுவரம் போகப்போகிறதாக மறுதினம் பத்திரிகையில் அபிராமி படித்தாள். உடனே உட்கார்ந்து அவருக்குத் தமது பள்ளிக்கூடத்தின் வருஷக் கொண்டாட்டத்திற்குத் தலைமை வகிக்க வேண்டுமென்று மிக வணக்கமாய்க் கடிதம் எழுதினாள். ''இந்த ஊர்ப் பெண்ணாகிய தங்களுடைய வரவு மாணவிகளுக்கு ஒரு பெரிய உத்சாகத்தை உண்டாக்கும். தங்கள் வாழ்க்கை அவர்களுக்கு ஓர் உன்னத லட்சியமாக இருப்பதுடன் வழி காட்டும் தீபச்சுடராகவும் இருக்கிறது'' என்றும் இன்னும் இதுபோன்ற சில மொழிகளையும் எழுதியிருந்தாள்.

முத்து, தம் மனைவியை நிராகரித்ததும், பிறகு அவள் சிரமப்பட்டுப் படித்துத் தேறித் தன் ஊரில் ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தி நடத்தி வருவதும் லேடி ஆறுமுகத்துக்குத் தெரியும். அதைப்பற்றி அவருக்கு இதுவரையில் பட்சபாதமற்ற மனப்பான்மை இருந்து வந்தது. ''யாருடைய தவறோ, நமக்குத் தெரியாது. நாம் அவர்கள் செய்கையைக் கண்டனம் செய்யக்கூடாது'' என்று இருந்தார் அவர். ரத்த சம்பந்தத்தினால் முத்துவின் சார்பாகவே அவர் அநுதாபம் இருந்தது எனலாம். இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் அபிராமியின் சார்பாக

அவருடைய அநுதாப முள் சாய ஆரம்பித்தது. அவர் மறு தபாலிலேயே தமது அங்கீகாரத்தை அனுப்பினார்.

லேடி ஆறுமுகத்தின் தலைமையின் கீழ்ப் பள்ளிக்கூட வருஷ விழா மிகச் சிறப்பாக நடந்தது. அபிராமி அந்த விசேஷத்திற்குக் குழந்தைகளின் பெற்றோர்களை மாத்திரமல்ல, ஊர்ப் பெரிய மனிதர் எல்லோரையுமே அழைத்திருந்தாள். லேடி ஆறுமுகத்தின் கீர்த்தியும் செல்வாக்கும் அதிகம். நம்ம ஊர்ப் பெண் ஸலூன் வண்டியில் வந்திருக்கிறாள் என்ற பெருமையே அவ்வூராருக்குப் போதுமானது. எல்லாரும் வந்திருந்து எல்லாவற்றிலும் பங்கெடுத்துக் கொண்டனர்.

அபிராமி, லேடி ஆறுமுகத்திற்கு உபசாரம் செய்தாள் என்று கூறுவது ரோஜாவை அது ஒரு புஷ்பம் என்று கூறுவது போன்ற வார்த்தையாகும். அவள் செய்ததை உபசாரம் என்பதும் சரியாகாது. வெளிப்பகட்டாக அவள் எதுவும் செய்யவில்லை. சகஜமாய் உறவினரும் கண்ணியமானவருமான ஓர் அதிதிக்குச் செய்வதையே தான் செய்வதாகக் காண்பித்தாள். அதற்கு மேற்பட்டதாகத் தன்னுடைய சந்தோஷத்தைக் காண்பிப்பதனாலும், சமயோசிதச் சொற்களாலும், லேடி ஆறுமுகம் மேடையில் நின்று பேசும்போது காது கொடுத்துக் கேட்கும் மரியாதையினாலும், பேச்சில் அந்த அந்த இடத்தில் அந்த அந்த ரஸபாவங்களைத் தான் பூரணமாக அநுபவிப்பதைக் காட்டும் முறையினாலும், லேடி ஆறுமுகமே பெண்களுக்கெல்லாம் சிறந்த பெண்மணி; சீதை சாவித்திரி போன்றவர்களின் அவதாரம், ரம்பை திலோத்தமையைத் தோற்கடிக்கும் அழகி, கருணை மிக்கவள், வள்ளல், கலை அரசி; அவளுடன் பேசுவதே ஓர் இன்பம்; அவளுடைய மேன்மைக் குணத்தினால் தான் அந்த ஊர்ப் பெண்கள் அவளுடன் சமமாகப் பழக அநுமதிக்கிறாள்' என்றெல்லாம் தோன்றும்படி செய்தாள். பத்து வருஷம் உள்ளம் குமுறித் துன்பத்தின் மூலம் கற்றிருந்த தந்திரத்தை எல்லாம் அவள் அன்று உபயோகித்தாள்.

லேடி ஆறுமுகம் சென்னை சென்றதும் முதல் வேலையாக மோட்டாரில் ஏறி முத்துக்குமாரரைக் காணச் சென்றார்.

''வா, அக்கா, வெகு நாட்களாய் இந்தப் பக்கமே வருவதில்லையே!'' என்று முத்து உபசரித்து அழைத்தார்.

''உன்னோடு சண்டை போட வந்திருக்கிறேன். அதென்ன? இவ்வளவு நல்ல பெண்! சாமர்த்தியசாலி! எத்தனையோ சவரணையாய்ப் பள்ளிக்கூடம் நடத்துகிறாள்! ஊரெல்லாம் நல்ல பேர். இங்கிலீஷ் படித்துப் பாஸ் செய்திருக்கிறாள். கண்ணுக்கு லட்சணமாக இருக்கிறாள்! அவளை ஒதுக்கி வைத்திருக்கிறாயே! இந்த அநியாயம் அடுக்குமா?'' என்றார் லேடி.

''நீ அவளை எப்பொழுது பார்த்தாய்?'' என்று புன்சிரிப்புடன் முத்து கேட்டார்.

''அவர்கள் பள்ளிக்கூட வருஷாந்தரக் கொண்டாட்டத்துக்கு என்னைக் கூப்பிட்டிருந்தாள்.''

''நீதான் அக்கிராசனம் வகித்தாயா?''

''ஆமாம்.''

''அதுதான் அவள் பட்சமாகப் பேசுகிறாய்'' என்று சிரித்தார் முத்து.

''நான் ஒன்றும் அப்படிப் பட்சபாதமாகச் சொல்லவில்லை. அந்தப் பதவியினால் ஏமாந்தும் போகவில்லை. அக்கிராசனம் வகித்தால் என்ன குற்றம்?''

''அந்தப் பெருமையில்தான் உன் ரத்த சம்பந்தமுள்ள சொந்தத் தம்பியின் கட்சியை விட்டுவிட்டு அவள் சார்பாகப் பேசுகிறாய்.''

லேடிக்கு அசாத்தியக் கோபம் வந்துவிட்டது.

''போ, போ, நான் இதற்கு முன்னே பள்ளிக்கூடமும் கண்டதில்லை. அக்கிராசனமும் வகித்ததில்லையாக்கும்! வருஷத்திற்கு நூறு இடத்தில் அழைத்திருக்கிறார்கள். தங்கமான பெண், அவள் அருமை உனக்குத் தெரியவில்லையே என்று சொன்னால் இப்பிடிப் பேசுகிறாயே! முட்டாள், மட்டி, மடையன்!'' என்று இரைந்துவிட்டு விர்ரென்று சென்று மோட்டாரில் ஏறிப் போய்விட்டார்.

அவள் கோபித்ததில் செட்டியாருக்கு வருத்தம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. தாம் கையாளும் தந்திரத்தையே அபிராமியும் இன்னும் திறமையுடன் கையாளுவதை உணர்ந்து அவர் மிகச் சந்தோஷப்பட்டதாகத் தோன்றியது.

மூன்றாவது முறை செட்டியார் கறுப்பண்ணரைப் பார்க்கப் போன சமயம் கறுப்பண்ணரின் தேகம் மிகத் துர்ப்பலமாக இருப்பதால் தம்முடன் சென்னைக்கு வந்து ஒரு மாதம் தங்கி வைத்தியம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தினார். மீனாக்ஷியம்மாளிடம் தம் இரு கைகளையும் கூப்பி, ''ஆச்சி, நீங்கள் வந்து இருந்து என் வீட்டை ஒழுங்கு செய்து கொடுத்தால் புண்ணியமாகும். சமையல்காரனின் சமையல் எனக்கு ருசிக்கவே இல்லை. அவன் யோக்கியமாக இருக்கிறானே என்று அவனைப் போகச் சொல்ல முடியவில்லை. ஆனால் சமையல் சுத்த மோசம்!'' என்று கெஞ்சினார். அந்த முறையும் அபிராமியைப் பாராமலே போய் விட்டார். அபிராமியின் பேச்சையே எடுக்கவில்லை.

மருமகப் பிள்ளையின் வேண்டுகோளைக் கேட்டு மனம் கசிந்த மீனாக்ஷி, அபிராமி மாலை வீடு வந்ததும் கணவன் வீட்டிற்குப் போகுமாறு அவளுக்குப் பெரிய பிரசங்கம் செய்தாள். கறுப்பண்ணரையும் தன்னையும் அவர் சென்னைக்கு அழைத்திருப்பதைக் கூறினாள்.

அபிராமி பல்லைக் கடித்துக்கொண்டாள். தன் சார்பாக இருப்பவரைச் செட்டியார் கலைத்து வருவதை உணர்ந்தாள். கோபத்துடன், ''உன் மருமகனார் சிரிப்பில் மயங்கிவிட்டாய். நான் அநுபவித்த அவமானமும் துக்கமும் உன் மனத்தை விட்டுக் கணத்தில் மறைந்து போய் விட்டன. அவர் இச்சகப் பேச்சைக் கேட்டு இப்போது என்னை இங்கே விட்டுப் பட்டணம் போகப் புறப்படுகிறாய். போ, போ, நன்றாகப் போ; சிற்றப்பாவும் போகட்டும். பத்து நாள் கூட இருந்து பழகினால் அப்புறம் அவர் குணம் தெரியும்'' என்று துடுக்காய்ப் பேசினாள்.

''குணத்துக்கு என்ன? அவர் குணத்தைப் பற்றி ஒருத்தரும் என் காது கேட்கத் தூஷிக்கவில்லை. எத்தனையோ தர்மம் பண்ணுகிறாராம். உன் பள்ளிக்கூடத்தைப்பற்றிக் கூடச் சொன்னேன். கவனமாகக் கேட்டார். ஹாஸ்டல் வேணுமென்று நீ சொல்வதைச் சொன்னேன். யோசித்துச் சொல்கிறேன் என்றார்'' என்றாள் மீனாக்ஷி.

''போதும், அவர் தர்மம் வேண்டாம். அது இல்லாமலேயே இத்தனை நாள் காலம் தள்ளியாகிவிட்டது. அது போகட்டும். என்னை நேரிலே பார்க்காமல் என் முதுகுக்குப் பின்னால் உங்களை வந்து வசப்படுத்துவானேன்?'' என்றாள் அபிராமி.

''நீதான் அவர் கூப்பிட்டால் போக மாட்டேன் என்றாயே. உன்னை எதற்காகப் பார்க்கிறது?'' என்று மீனாக்ஷி திரும்பிக் கேட்டாள்.

மேலும் ஆவலுடன், ''அடுத்த முறை வந்தால் இருந்து உன்னைப் பார்க்கச் சொல்லட்டுமா?'' என்றாள்.

''ஒன்றும் வேண்டாம். அந்தமாதிரி அசட்டு வார்த்தை எதுவும் சொல்லாதே'' என்று கண்டித்தாள் அபிராமி.

இரண்டு தினத்திற்கெல்லாம் அபிராமியின் பெயருக்கு, ''பெண்கள் பாடசாலைத் தலைமை உபாத்தியாயினி'' என்ற விலாசத்தோடு கடிதம் வந்தது. அதில் முத்துக்குமார செட்டியாரின் செக்கு ஒன்று பத்தாயிரம் ரூபாய்க்கு இருந்தது. கூட இருந்த கடிதத்தில் பெண்களின் ஹாஸ்டல் ஒன்று கட்டுவதற்கு நிதி தேவை என்று தாம் கேள்விப்பட்டதால் இந்தத் தொகையை அனுப்பத் துணிந்ததாகவும், அந்தப் பள்ளிக்கூடத்தின் விருத்தியில் தாம் மிகச் சந்தோஷிப்பதாகவும் எழுதியிருந்தது. கையெழுத்து முத்துக்குமாரன் என்று இருந்தது. முன்பின் அறிமுகமில்லாதவர்கள் எழுதக்கூடிய கடிதத்தின் தோரணையிலே இருந்தது. இருந்தும் தன் கணவரின் அந்த முதல் கடிதத்தைப் படித்த சமயம் அபிராமிக்கு உடல் முழுவதும் மயிர்க்கூச்சு உண்டாயிற்று. சந்தோஷம் என்றே சொல்லலாம். இருந்தும் நாளுக்கு நாள் அவரே வெற்றி பெற்று வருவதைப்பற்றி அவளுக்கு ஆத்திரம் உண்டாயிற்று. செக்கைக் கிழித்து அவர் முகத்திலேயே எறிய வேண்டும்போல் இருந்தது. திருப்பி அனுப்பிவிடுவது என்று தீர்மானித்தாள். ஆனல் அன்று தபாலுக்கு நேரமாகிவிட்டபடியால் மறுநாள் பார்த்துக்கொள்வோம் என்று செக்கை உள்ளே வைத்துப் பூட்டினுள்.

இரவு சாப்பிட்டானதும் அபிராமி தன்னுடைய மேஜையருகில் உட்கார்ந்து தன் கணவருக்குத் தன்னுடைய முதல் கடிதத்தை எழுத ஆரம்பித்தாள்.

''பெண்களை அலட்சியம் செய்பவர்களிடமிருந்து நாங்கள் பணம் வாங்கிக் கொள்வதில்லை.''

''செக்கிற்கு வந்தனம். திருப்பி அனுப்பியிருக்கிறேன். அது இல்லாமலேயே எங்கள் வேலை நடக்கும்.''

''இவ்வளவு பெரிய தொகையை எதற்காக அனுப்பி யிருக்கிறீர்கள்? பச்சாத்தாபமா? பாப பரிகாரமா?'' என்று இவ்வாறு பல கடிதங்கள் எழுதி எழுதிக் கிழித்து எறிந்துவிட்டு இரவு இரண்டு மணிக்கு அலுப்புற்றவளாய்ப் படுக்கச் சென்ருள்.

மறுதினம் தபாலில் அபிராமி அனுப்பிய கடிதத்தில், ''தங்கள் பெரிய நன்கொடைக்கு வந்தனம்'' என்ற வார்த்தைகளே இருந்தன.

தன்னுடைய சொந்தக் காரணத்திற்காகப் பள்ளிக்கூடத்திற்கு நஷ்டம் ஏற்படுத்தக்கூடாது என்றே தான் அந்தச் செக்கை அங்கீகரிப்பதாக அபிராமி தனக்குத்தானே சமாதானம் சொல்லிக்கொண்டாள். தன் கணவரின் தற்போதைய நற்குணத்தினுல் தன் மனமும் கரைந்து வருவதை அவள் இன்னும் ஒப்புக்கொள்ளவில்லை.

அபிராமிக்குத் தக்க துணையை ஏற்படுத்திவிட்டுக் கறுப்பண்ணரும் மீனுக்ஷியும் சென்னைக்கு மருமகப் பிள்ளையின் பங்களாவில் சுகவாசம் செய்யச் சென்ருர்கள். அபிராமி பள்ளிக்கூடத்திற்கு ஹாஸ்டல் கட்டுவதில் முனைந்தாள். அந்த வேலை அகப்பட்ட காரணமோ வேறு எதுவோ, அபிராமி இந்நாட்களில் புது உத்ஸாகத்துடனும் புது அழகுடனும் விளங்கினுள். முத்துக்குமாரரிடமிருந்து அவளுக்கு இப்பொழுது அடிக்கடி கடிதம் வரலாயிற்று. விஷயம் ஒன்றும் பெரிதல்ல. ஹாஸ்டல் வேலை எப்படி நடக்கிறது என்று விசாரிப்பார். கறுப்பண்ணர் சென்னை டாக்டரின் சிகிச்சையினுல் தேர்ந்திருப்பதாக எழுதுவார். மீனுக்ஷியின் சமையலைப் புகழ்வார். அவ்வளவே. இருந்தும் ஆரம்பத்தில் நான்கு வரிகளே இருந்த கடிதங்கள் நாளடைவில் முத்துக்குமாரரின்

அழகிய சிறு சிறு எழுத்துக்களில் இரண்டு மூன்று பக்கங்கள் கொண்டனவாக ஆகிவிட்டன.

அபிராமியும் விடை எழுதுவாள். பத்தாயிரம் ரூபாய் நன்கொடை அளித்ததற்குச் சிறிதாகிலும் நன்றி காட்டவேண்டாமா என்று எண்ணுவாள். ஆனால் அவளும் கடிதத்தில் சொந்த விஷயம் எதையும் எழுத மாட்டாள். அவர் கேட்டிருப்பவற்றிற்கு விடை எழுதுவாள். அவ்வளவே. கட்டிடப் பிளான்களை அனுப்பி அவர் அபிப்பிராயத்தைக் கேட்பாள். சர்க்கார் அநுமதி சீக்கிரம் கிடைக்க உதவி கேட்பாள். அதில் தவறு எதுவும் இல்லை அல்லவா?

இது நிற்க. இடையிடையே இவளை வந்து பார்த்துப் போகும் அக்கம்பக்கத்தார், ''அம்மா, அபிராமி, தை பிறந்ததும் நீ பட்டணம் போகப் போகிறாயாமே! இந்தப் பள்ளிக்கூடம் என்ன ஆகும்? எங்கள் குழந்தைகளுக்கு நல்ல ஏற்பாடாகப் பண்ணிக் கொடுத்துவிட்டுப் போ'' என்று சொல்லலானார்கள்.

''இல்லவே இல்லை. நான் ஒன்றும் பட்டணம் போகப் போகிறதில்லை'' என்று அபிராமி சாதிப்பாள்.

ஒரு முறை அங்கச்சி ஆச்சி, ''போ, போ. சும்மா சொல்லாதே. மாப்பிள்ளையே நேரே நம்ம கிருஷ்ணன் கிட்டே சொன்னாராம். என் பொண்டாட்டி தை பொறந்ததும் வரப்போறான்னு சொன்னாராம்'' என்றாள்.

''கிருஷ்ணன் எதுக்காக அங்கே போனான்?'' என்று அபிராமி கேட்டாள்.

''சும்மாநாச்சியுந்தான் போனான். கறுப்பண்ணர் இருக்காரே, பார்த்தூட்டு வரலாம்னு போனான். நல்லா ஆயிட்டாராம் உங்க சித்தப்பா'' என்றாள்.

செட்டியாரின் இந்தப் புதுத் தந்திரம் அபிராமிக்குக் கோபத்தை உண்டாக்கவில்லை. காரணம் என்னவோ!

இவ்விதம் கிருஷ்ணன் மாத்திரமல்ல;ராமன்,கோபாலன்,கோவிந்தன் என்று பட்டணம் போய்ச் செட்டியாரைப் பார்த்தவர்களிடமெல்லாம் அவர் இவ்விதம் தம் மனைவி தை மாதம் தம்மிடம் வரப்போவதாகப் பிரசாரம் செய்வதைக் கண்ட அபிராமி அதே ராமன், கோவிந்தன், கோபாலன் முதலியவர்களிடம் தான் தன் பள்ளிக்கூடத்தை விட்டு ஒரு நாளும் பிரியப் போகிறதில்லை என்பதை அழுத்தமாகக் கூறிவிட்டு, அதற்கு மேற்பட்டுப் பரிகாச வார்த்தையாக, ''நான் அங்கே போகப் போகிறதில்லை. அவரே இங்கே இந்த ஊரில் வந்து இருக்கப் போகிறார்'' என்றும் சொல்லிவைத்தாள்.

இவ்விஷயத்தை ராமன், கோவிந்தன், கோபாலன், கிருஷ்ணன் ஆகிய நண்பர்கள் மிகவும் சிரத்தையுடன் செட்டியார் காதில் படும்படி செய்தனர். அவர் அதற்கு விடை எதுவும் சொல்லவில்லை.

இரண்டு மாதம் கழித்து மீனாக்ஷியும் கறுப்பண்ணரும் ஊர் வந்து சேர்ந்தனர். இருவரும் புது யௌவனம் பெற்றவர்கள் மாதிரி ஆகியிருந்தனர். மருமகனார் பெருமையை மீனாக்ஷியம்மாளால் சொல்லி இயலவில்லை. அவருடைய மோட்டார், அவருடைய பங்களா, அவருடைய பவிசு, அவருடைய பணிவு, அவருடைய குணம், அவருடைய சாமர்த்தியம், அவருடைய அடக்கம், அவருடைய அழகு என்று அவள் வாய் ஓயாமல் பிதற்றிக்கொண்டே இருப்பாள்.

அபிராமி இப்பொழுதெல்லாம் அவர்களைக் கண்டிப்பதை விட்டுவிட்டாள். அவரைப்பற்றி அவர்கள் பேசுவது தன் காதில் படவில்லை

போல் இருந்துவிடுவாள். ஆனால் ஒரு வார்த்தை கேட்க மாத்திரம் அவளுடைய மனம் துடித்தது: . தன் விஷயமாக அவர் என்ன செய்யப் போகிறார் என்பதே. சித்தி சிற்றப்பா இருவரும் அதைப்பற்றி ஒன்றுமே சொல்லவில்லை.

ஹாஸ்டல் கட்டி முடிந்தாகிவிட்டது. கறுப்பண்ணனும் மீனாக்ஷியும் இங்கே வந்தாகிவிட்டது. இனி முத்துக்குமாரராகிலும் அபிராமியாகிலும் ஒருவருக்கு ஒருவர் கடிதம் எழுதிக்கொள்ள அவசியமில்லை. செட்டியார் கடிதம் எழுதுவதை நிறுத்திவிட்டார். அவரிடமிருந்து கடிதம் வராதிருக்க இவள் மாத்திரம் எப்படி எழுதுவாள்? அபிராமியும் கடிதம் எழுதவில்லை. ஆனால் தபால்களை ஆவலுடன் பார்ப்பதை மாத்திரம் அவளால் நிறுத்த முடியவில்லை. ''முழு முட்டாள் நான். ஒரு முறை மனத்தை அவருக்குக் கொடுத்து ஏமாந்தது போதாமல் மறுமுறையும் ஏமாந்து போக விரும்பும் ஜடம் நான்'' என்று தன்னை நொந்துகொண்டு தன் வேலையில் முனைந்தாள்.

தை மாதம். முதல் வெள்ளிக்கிழமை. மாலை ஐந்து மணி. பள்ளிக்கூட மாணவிகளை அம்மன் கோயிலுக்கு அனுப்பிவிட்டு, அபிராமி மாத்திரம் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த விளையாட்டு மைதானத்தில் ஒரு மரத்தடியில் பாயின்மேல் உட்கார்ந்து ஏதோ பாடத்தைத் திருத்திக்கொண்டு இருந்தாள்.

யாரோ வாசல் கேட்டைத் திறக்கும் சப்தம் கேட்டுத் தலை நிமிர்ந்தாள். உயரமான ஒரு புருஷர். தூரத்திலிருந்து யாரென்று அடையாளம் தெரியவில்லை. வேலையாள் ஓடிச்சென்று அவருடன் பேசிவிட்டு அவள் உட்கார்ந்திருக்கும் இடத்தைச் சுட்டிக் காண்பிப்பதையும், அவர் தன்னை நோக்கி வருவதையும் அபிராமி கண்டாள். அபிராமி கைப் புத்தகங்களை அடுக்கினாள்; அவர் வரும் நடையிலோ தோற்றத்திலோ, ஏதோ பழைய ஞாபகம் உண்டாயிற்று. மனம் மிகக் குழப்பமடைந்தது. எழுந்து நின்றாள். கால்கள் வெலவெலத்துப் போயின. நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது.

''புது ஹாஸ்டலைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்'' என்றார் முத்துக்குமாரர்.

அவர்தாம். பத்து வருஷத்தில் சற்று மாறியிருந்தார். ஆனால் அதே நிதானம். அதே மெதுவான பேச்சு. இன்னும் சற்று உயர்ந்து பருத்திருந்தார். மீசை முன்பைவிடப் பெரிதாகிவிட்டிருந்தது. அபிராமி தன் படபடப்பை அடக்கிக்கொண்டாள். அவர் யாரென்று தெரியாது போல் பாசாங்கு செய்யவில்லை. அவரைப் போலவே தானும் சகஜமாய், பள்ளிக்கூடத்திற்குப் பணம் அளிப்பவர்களுக்கென்று தான் பிரத்தியேகமாய்க் கையாளும் மரியாதைக் கவசத்தைப் பூண்டு அவரை அழைத்துச் சென்று ஹாஸ்டல் முழுவதையும் காண்பித்தாள்.

''எல்லாம் நன்றாக இருக்கிறது. ஆனால் என் யோசனைகளையே முழுவதும் உபயோகித்திருக்கிற மாதிரி இருக்கிறதே!'' என்றார் முத்து.

''ஆமாம்.''

''ஏன்? கடிதத்தில் கண்ட பிளான்களைப் பார்த்த பிறகு ஒன்றிரண்டு விஷயம் நான் சொன்ன முறை தவறு, பிளானில் கண்டிருப்பது போல் செய்வதுதான் நல்லது என்று எழுதியிருந்தேனே! அந்த மாதிரி செய்வதற்கென்ன?''

''என்னவோ, நீங்கள் எழுதின முறைதான் சரி என்று அவர்கள் சொன்னார்கள்'' என்று முணுமுணுத்தாள் அபிராமி.

''எவர்கள்?'' என்று அவ்விதம் சொன்னவர் பெயரைக் கேட்க மிக ஆவல் கொண்டவர் போலச் செட்டியார் அபிராமியைக் கூர்ந்து நோக்கினர். அபிராமியின் முகம் சிவந்தது.

''அவர்கள்'' என்று தலையைத் திருப்பிக்கொண்டு பள்ளிக்கூடப் பக்கமாய்க் கையை ஆட்டி வைத்தாள். அங்கே எவரும் இருப்பதாகச் செட்டியாருக்குத் தெரியவில்லை.

எல்லாம் பார்வையிட்டபின் மறுபடியும் இருவரும் மரத்தடிக்கு வந்து சேர்ந்தனர்.

''கட்டிடத்தின் திறப்பு விழா நடத்த வேண்டும். நீங்கள் வந்து நடத்திவைக்க வேண்டும்'' என்றாள் அபிராமி.

''எப்பொழுது?''

''அடுத்த வாரம் வைத்துக்கொள்ளலாமென்று நினைத்தேன். உங்களுக்குச் சௌகரியப்படுமா?''

''உம்; யோசித்துச் சொல்லவேண்டும்'' என்று கூறிவிட்டுச் செட்டியார் அபிராமியைப் பார்த்துப் புன்சிரிப்புடன் ஜேபியில் கையிட்டுப் பெரியதோர் சாவியை எடுத்து அபிராமியிடம் நீட்டினர்.

''இது என்ன?''

''எங்கள் வீட்டுத் திறப்பு விழா இன்றைக்குத்தான். அடுத்த வாரமல்ல. வந்து திறப்பாயோ? என்ன சொல்கிறாய்?'' என்று கூறி அபிராமியின் கண்களைச் சந்திக்க முயன்றார்.

அபிராமியின் கண்கள் பூமியை நோக்கின. அவளுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. பிறகு சற்று நிதானம் பெற்று, தலை தூக்கி, ''இன்றைக்கே எப்படிப் பட்டணம் போக முடியும்? ஏரோப்ளேன் ஏற்பாடு செய்திருக்கிறீர்களா?'' என்றாள் அபிராமி.

''பட்டணம் போவதாக யார் சொன்னார்கள்? என்னைத்தான் அங்கிருந்து லேடி ஆறுமுகம் துரத்திவிட்டாளே!'' என்று சிரித்தார் செட்டியார்.

''பின்?''

''பின் இந்த ஊர்தான். நீதான் ரொம்பப் பிடிவாதக்காரியாம்; இந்த ஊரை விட்டு வரமாட்டேனென்று பிடிவாதம் செய்கிறாயாமே! சரி, நமக்கென்ன, உன் இஷ்டப்படி நடப்போமென்று பட்டணம் வீட்டைக் காலி செய்து வந்துவிட்டேன்'' என்றார் செட்டியார்.

* * * *

**நா**லைந்து வருஷங்கள் ஆகிவிட்டன. இப்போது பட்டணத்து வீடு காலியாக இல்லை. அங்கே இரண்டு குழந்தைகள் கூடப் பங்களாத் தோட்டத்தில் விளையாடிக்கொண்டிருக்கிறார்கள். பள்ளிக்கூடத்தை ஒரு தேர்ந்த எல். டி. நடத்துகிறார் என்று கேள்வி. ஆகையால் பிடிவாதம் யாருக்கு அதிகம்? கணவருக்கா மனைவிக்கா என்பது தெரியவில்லை. ★

—நவம்பர், 1945.

அகிலன்

# பூச்சாண்டி

பேய் பிசாசுகளை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? நான் பார்த்ததில்லை. அவ்வளவு தூரம் எதற்கு? கடவுளைக்கூட நான் கண்டதில்லை!

கடவுள் இருக்கட்டும். நான் கடவுளை வைத்துப் பிழைக்கிறவன் அல்ல. புகழ் பாடிப் பிழைக்கும் பஜனைக் கோஷ்டியைச் சேர்ந்தவனும் அல்ல; இகழ் பேசிப் பிழைக்கும் பகுத்தறிவுக் கும்பலைச் சேர்ந்தவனும் அல்ல. இரண்டு பேரும் சேர்ந்து பகுத்தறிவில்லாத மக்களை, பக்தி இல்லாத மந்தைகளை நன்றாக ஏமாற்றட்டும். முட்டாள்கள் ஏமாறப் பிறந்தவர்கள்.

கடவுள் எனக்குக் காசு கொடுக்காததால், அவரை விட்டுவிட்டுக் கதைக்கு வருவோம். இப்போதைக்கு எனக்குப் படி அளக்கும் பரமசிவம், கண்கண்ட கருணை வள்ளல், இந்தப் பூச்சாண்டிதான்.

பூச்சாண்டிகளும் பயந்து நடுங்கக்கூடிய பயங்கரமான இருள்; பேய் பிசாசுகள் பேந்தப் பேந்த விழிக்கக்கூடிய அமாவாசை இருட்டு— நீங்கள்தாம் பிசாசுகளைப் பார்த்ததில்லையே என்று என்னைக் கேட்டு வைக்காதீர்கள். நான் பார்த்ததில்லை. உண்மை. நம்பவில்லை என்று யார் சொன்னது?

பிசாசுகள் நடுங்கக்கூடிய பொல்லாத இருட்டு என்று சொன்னேனா? சரி. அது ஓர் சவுக்கமரத் தோப்பு.

உச்சி வெயில் ஒய்யாரமாய்க் கொளுத்தும்போதே ஒளியின் ஜம்பம் அங்கே சாயாது. 'கரு கும்' என்று இருக்கும் நட்ட நடு -ராத்திரியில். அமாவாசை அன்றைக்குக் கேட்கவா வேண்டும்? வானத்துக்கும் பூமிக்கும் வளர்ந்து சவுக்க மரங்கள் ஐயனார் கோயில் ஈட்டி முனைகளைப்போல் குத்திட்டு நின்றன. அந்தத் தோப்புக்கு அந்த வேளையில் காற்றின் துணை கிடைத்துவிட்டது. கூத்துக்கும் கும்மாளத்துக்கும் குறைவில்லை; ஆங்காரத்துக்கும் ஓங்காரத்துக்கும் அணையில்லை.

சவுக்கத் தோப்புக்கு எதிர்த்தாற்போல் வறண்ட ஆறு. ஒரு காலத்தில் ஆறாக இருந்து நீராக ஓடி இப்போது அழிந்துபோய் மணலாய்க் காயும் மலட்டுத் தரைவெளி. அதில் புல்லோ, பூண்டோ, செடியோ, கொடியோ ஒன்றும் கிடையாது. ஈரம் இல்லாத கஞ்சப் பயல் நெஞ்சு மாதிரி காய்ந்து பொசுங்கி மொட்டையாய்க் கிடந்தது.

இந்த இரண்டுக்கும் மத்தியில் எல்லை வகுத்தாற்போல் ஒரு ஜோடிக் கருநாகப் பாம்புகள். அவைகளுக்கு ஒரே வயசு, ஒரே நீளம், ஒரே அகலம், ஒரே பருமன். பாம்புகளுக்குத் தலையும் காணோம்; வாலும்

காணேம். முதலும் முடிவும் அற்ற பராபரம்போல் எங்கிருந்தோ வந்தன; எங்கேயோ போயின. இடையில் எத்தனையோ காடுகள், மலைகள், வனம் வனந்தரங்கள்.

சக்தியும் சிவமும்போல அந்த ஜோடி எப்போதும் இணைபிரிவதே இல்லை. ஆனால் அவை ஒன்ருடொன்று ஒட்டாமல் ஒரே தூரத்தில் விலகி நின்றன. இந்தக் குளுமையான கருநாகப் பாம்புகளைப் பகலில் பார்த்தால் தண்டவாளங்கள் என்பார்கள். எதையுமே பகலில் பார்த்தால் ஒரு மாதிரி; ராத்திரியில் பார்த்தால் ஒரு மாதிரிதான்.

ராத்திரியில் எத்தனையோ விசித்திரமான காரியங்கள் எல்லாம் நடக்கின்றன. பிசாசுகளும் ராத்திரியில்தான் நடமாடுகின்றனவாம்.

அப்போது அந்த இடத்தில் எந்தப் பிசாசும் இல்லை. ஒரே ஒரு மனிதன் நின்றுகொண்டிருந்தான். அவனை மனிதன் என்ருல் நீங்கள் நம்பமாட்டீர்கள். அவன் பிசாசைப்போல் பயங்கரமாக இல்லாமல் பிசாசைவிடப் பயங்கரமாய் இருந்தான். அங்கே அவன் வருவதற்கு முன்பு பிசாசுகள் உலவிக்கொண்டிருந்தால் நிச்சயம் அவனைக் கண்டவுடன் அவைகள் சவுக்கத் தோப்பில் ஒளிந்துகொண்டிருக்க வேண்டும்.

கரடிக் குட்டி மாதிரி தாடி மீசை வளர்த்துக்கொண்டு அவன் அந்தப் பாம்புகளின் பக்கத்தில் வந்து நின்ருன். இடுப்பில் நாலு முழு அழுக்குத் துணி. கண்களின் சிவப்பு இருட்டில் தெரியவில்லை. நெற்றி நிறையத் திருநீற்றை அப்பிக்கொண் டிருந்தான். யாரையோ, எதையோ, அவன் ஆவலோடு, ஆத்திரத்தோடு எதிர்பார்ப்பதுபோல் தெரிந்தது.

மெதுவாய்த் தரையில் மண்டியிட்டு ஒரு பாம்பின் முதுகில் காதை வைத்து உற்றுக் கேட்டான். பாம்பு ஆடவில்லை; அசையவில்லை. அவன் முகத்தில் நம்பிக்கை ஒளி ஊறியது.

முன்போல எழுந்து நின்று அவன் திடீரெனச் சிரித்தான். இடி இடித்தாற்போன்ற சிரிப்பு. அந்தச் சவுக்கத் தோப்பு காற்ருேடு சேர்ந்து ஊளையிடுவதை ஒரு கணம் நிறுத்தி இந்தச் சிரிப்புக்கு மதிப்புக் கொடுத்தது.

தெற்கே அவன் பார்த்துக்கொண்டிருந்த திக்கில் ஓர் ஒளிப் புள்ளி தெரிந்தது. வானத்து மீன் குஞ்சு தரைக்குச் சற்று உயரத்தில் உதயமாகும் அபூர்வக் காட்சி. ஆனால் அந்த ஒளி அதோடு நிற்கவில்லை. நிமிஷத்திற்கு நிமிஷம் பெரிதாகிக்கொண்டே இருந்தது. கொஞ்சம் பெரிதாக, இன்னும் கொஞ்சம் பெரிதாக, மிகப் பெரிதாக மாறியது. நட்சத்திரமும் அல்ல, சந்திரனும் அல்ல; பிசாசு, கொள்ளிவாய்ப் பிசாசு!

அந்தப் பிசாசு அந்த மனிதனைக் குறி வைத்து அண்டம் அதிரப் பாய்ந்தோடி வந்தது. புதருக்குள் புகுந்த புள்ளிமானை மோப்பம் பிடித்து விட்ட வேங்கைப் புலி மாதிரி அது தாவி ஓடி வந்தது. மனிதன் அதைக் கண்டு அலட்சியமாய்ச் சிரித்தான். கருநாகப் பாம்புகள் அந்த ஒளிப் பெருக்கில் தங்கள் வழுவழுப்பான முதுகைக் குளிப்பாட்டிக்கொண்டு பளபளத்தன.

''ஹா! ஹா! ஹா! ஹூ, ஹூ, ஹூ!''

பிசாசு இப்போது அதிக நெருப்பை உமிழ்ந்தது. அதிகமாகக் கூச்சலிட்டது.

''ஜிகு, ஜிகு, ஜிகு, ஜிகு! குபு, குபு, குபு, குபு! ஜிகு, ஜிகு, குபு, குபு!—கூ! . . கூ! . . கூ!''

கண்ணைப் பறிக்கும் ஒளியைக் கக்கிக்கொண்டு, நெஞ்சை உலுக்கும் ஒலியை எழுப்பிக்கொண்டு அந்தப் பேய் மனிதனை நெருங்கியது. அவன் நிதானமாகக் கீழே படுத்து அதன் குறுக்கே விழுந்தான்.

''கிரீச்!''

அவனைத் தாண்டிக்கொண்டு போய், அவனுடைய ரத்தத்தைத் தன் கால்களில் பூசிக்கொண்டு அனல் மூச்சு விட்டபடி நின்றது அந்தக் கொள்ளிவாய்ப் பிசாசு. பகலில் நீங்களும் நானும் அதைப் பார்த்தால் ரெயில் என்று சொல்வோம். வெள்ளைக்காரன் நம்முடைய முதுகில் சவாரி செய்வதற்காக, நம்முடைய சவாரிக்கு ஏற்படுத்தியதாய் ஏட்டில் எழுதி வைத்து, நம்மை நம்பச் சொன்ன யந்திரப் பிசாசு.

டிரைவர் வண்டியை நிறுத்திவிட்டுத் தலை தெறிக்கக் கீழே இறங்கி ஓடி வந்தார். கரி தள்ளுகிறவரும் அவரைப் பின்பற்றினார். ரெயிலுக்குள் உறங்கிக்கொண்டும் உறங்காமலும், பேசிக்கொண்டும் பேசாமலும் வந்த பிரயாணிகள் கூட்டம் ஒன்றும் தெரியாமல் ஒரு கணம் திகைத்தது. கோழித் தூக்கம் போட்டவர்கள் கொக்கானார்கள்; விழித்துக்கொண்டு கழுத்துக்களை ஜன்னலுக்கு வெளியே நீட்டினார்கள். கண்கள் கூர்மையாயின; காதுகள் தீட்டப்பட்டன. சிலர் கீழே இறங்கி டிரைவருக்குப் பின் ஓடி வந்தார்கள்.

இன்னும் சிலருக்கும் கீழே இறங்கி வேடிக்கை பார்க்க ஆசைதான். டிக்கட் வாங்கிக்கொண்டு வண்டியில் ஏறி இருந்தால் நிச்சயம் அப்படிச் செய்திருப்பார்கள். இப்போது எதற்காக அநாவசியமாய்ப் போய் ஒருவனிடம் மாட்டிக்கொண்டு விழிக்க வேண்டும்?

சிறிய கூட்டம் அந்த ரெயிலுக்குப் பின்னால் கூடிவிட்டது. ரெயில்வே ஊழியர்கள் அத்தனை பேரும் அந்த இடத்தில் இருந்தார்கள். ஒருவனை மாத்திரம் அங்கே காணவில்லை. எவன் அந்த வேளையில் அதிகத் தேவையோ அவனை மட்டும் காணவில்லை.

செத்துப்போனவன் கச்சிதமாய்ச் செத்துப் போயிருந்தான். முன்பே ஒரு தரம் ரெயிலில் அகப்பட்டுச் செத்துப் போய்ப் பழக்கப்பட்ட மாதிரி அவன் செத்துக் கிடந்தான். தலை வேறு; முண்டம் வேறு. இரண்டே உருப்படிகள். சிதைவோ சித்திரவதையோ கிடையாது.

ரெயில்வே கார்டு சுற்று முற்றும் பார்த்தார். கூட இருந்த ஊழியர்களும் சுற்று முற்றும் பார்த்தார்கள்.

''போலீஸ் எங்கே? வண்டியில் யார் வந்தது?''

''9333ங்க!''

அப்போது அந்த 9333 பிரேக் வானில் படுத்துச் சுகமாக நித்திரை போய்க்கொண்டிருந்தது. அடுத்த ஸ்டேஷன் வருவதற்கு இன்னும் பதினைந்து மைல்கள் இருந்தன. இதுவரை அறுவடை செய்த மாமூலில் அதன் பங்கு முப்பது ரூபாய் முழுசாய்ப் பணப்பைக்குள் கலகலத்தது. புரண்டு படுக்கும்போது அந்தக் கலகலப்பு அதன் தூக்கத்தைக் கொஞ்சம் கெடுக்காமல் இல்லை. 'இந்த வெட்டிப் பயல்கள் நோட்டாய்க் கொடுக்காமல் எதற்காகச் சில்லறையாகத் தருகிறான்கள்!' என்று அரைத் தூக்கத்தில் சலித்துக்கொண்டபடியே அது புரண்டு படுத்தது.

''இந்தாப்பா, மூணு!''—நீளப் பெயராக இருப்பதால் கடைசி எண்ணைச் சொல்லித்தான் அதை வழக்கமாய்க் கூப்பிடுவார்கள்.

'மூணு' விழித்துப் பார்த்தது.

''ஸ்டேஷன் வந்திருச்சுங்களா?''

''ஸ்டேஷன் இல்லேப்பா; உனக்கு வேலே வந்திருக்கு!''

''வேலே வந்திருக்குங்களா?''

''ஆமா, வேலே வந்திருக்கு.''

வேலே என்றால் 9333-இன் அகராதியில் இந்த இரண்டு வருஷமாய்ப் பணம் என்று பொருள். இரண்டாவது உலகப் போர் என்று சொல்லப் படுகிற நீசப் படுகளம் அப்போது நடந்துகொண்டிருந்தது. பையில் இந்த நிமிஷம் குலுங்குகிற முப்பது ரூபாய் மறு நிமிஷத்தில் இன்னும் ஐந்தோ பத்தோ குட்டி போடப் போகிறதென்று அவனுக்குக் கும்மாளம். 'பணம் பணத்தோடு சேரும்' என்று சொன்ன பாவிப்பயல் இன்றைக்கு எதிர்ப்பட்டால் அவன் வாயில் பத்து வெள்ளி ரூபாய்களைத் திணிக்கலாம் போலிருந்தது.

பணத்தின் முகத்தில் விழிக்கப்போன போலீஸ், பிணத்தின் மூஞ்சியில் விழித்தான். பார்த்தவுடன் கண்களை ஒரு தரம் மூடித் திறந்தான். அதை உற்றுப் பார்க்கப் பிடிக்கவில்லை. தண்டவாளத்துக்குச் சற்று ஒதுக்கமாக அதைத் தள்ளிப் போட்டிருந்தார்கள்.

''சாகப்போகிற கழுதை ஊருக்குப் பக்கத்தில் விழுந்து செத்தால் என்ன? நடுக்காட்டுக்குத்தானு வந்து தொலையவேணும்?'' என்றான் மூணு.

''ஆறு கீறு, குளங்குட்டை கிடையாதா?'' என்று ஒத்துப்பாடினர் ஒரு பிரயாணி.

சற்று நேரத்தில் ரெயிலில் ஏறவேண்டியவர்கள் எல்லாரும் ஏறிக் கொண்டார்கள். இருக்க வேண்டியவன் மட்டும் அங்கு இருந்தான். பையில் இருந்த முப்பதில் ஒரு ரூபாயை மாத்திரம் வைத்துக்கொண்டு பாக்கியைத் தன்னை எழுப்பின நண்பரிடம் கொடுத்தான். வீட்டில் கொண்டுபோய்க் கொடுக்கச் சொன்னுன்.

''மடியிலே கனம், வழியிலே பயம்!'' என்றார் அவர்.

''திருட்டுக் காசு பாருங்க; கவனமாக இருக்கணும். இந்தக் காலத்தில் பொணங்கூடப் பண்மின்னு வாயைத் திறக்கும்!''

ரெயில் ஊதியது. நகரத் தொடங்கிய வண்டியில் நண்பர் ஓடிப் போய்த் தொத்திக்கொண்டார். அந்த ரெயில் ஒரு மனிதனைச் சாகடித்து விட்டுப் பல மனிதர்களைச் சுமந்துகொண்டு இன்னொரு மனிதனைச் செத்தவனுக்குக் காவல் வைத்துவிட்டுக் கிளம்பியது. வண்டியின் பின்புறத்தில் வட்டமாய் ஒட்டிக்கொண் டிருந்த சிவப்பு விளக்கைக் கவனித்தான் 9333. அது விளக்காக அவன் கண்ணுக்குப் படவில்லை; செத்துப்போன மனிதனின் ரத்தக் கறை.

## 2

ஒன்பதாயிரத்து முந்நூற்று முப்பத்து மூன்றின் பிறப்போ வளர்ப்போ ஒன்றும் சுவையானதல்ல. அவனுடைய வாழ்க்கையின் எந்தப் பகுதியும் வெட்கக்கேடான படலந்தான். ஏதோ ஒரு தாலுகாவில் ஏதோ ஒரு வட்டத்துப் பட்டாமணியத்தின் பத்தாவது பிள்ளையாய்ப் பிறந்தான். பதினைந்தாவது வயசில் பள்ளிப் படிப்புக்குப் புள்ளிவைத்தாயிற்று. ஐந்தாம் வகுப்பு வாத்தியார் அவனுடைய அப்பாவின் முறுக்கு மீசைக்கும் கெடுபிடிக்கும் பயந்துகொண்டு அவனுக்குப் பாஸ் போட்டார்.

அந்த வட்டாரத்தில் வேறு மிராசு, மிட்டா, ஜமீன் ஒன்றுமே இல்லாததால் பட்டாமணியத்தின் கொடி அங்கே பட்டொளி வீசிப் பறந்தது. அவரது செல்லப்பிள்ளை தினந்தோறும் அங்கு விதம் விதமான

திருவிளையாடல்கள் புரிந்து வந்தான். மாந்தோப்பில் மல்கோவா மாம் பழங்கள் மறைந்த மாயம் எல்லோருக்கும் தெரியும்; தென்னந்தோப்பில் மண் கலயங்கள் தொங்க, கள் மட்டும் காணுமற்போகும் ரகசியம் ஊர றிந்த செய்தி. தெரிந்து என்ன செய்வது? பட்டாமணியத்தின் பணப் பெட்டிக்குக்கூடப் பசி வந்து அடிக்கடி ஐந்தோ பத்தோ சாப்பிட்டுத் தொலைத்தது. கிராமத்திலுள்ள வயசுப் பெண்கள் தங்களுக்குள் காதைக் கடித்துக்கொண்டார்கள்; தேடுவாரற்ற தெருநாய் மாதிரி அவர்களைச் சுற்றிச் சுற்றி வந்து பல்லிளித்தாளும்!

கிராமத்தில் முகாம் செய்திருந்த ரெவின்யூ இன்ஸ்பெக்டரிடம் சொல்லிப் பட்டாமணியம் இவனுக்கு ஒரு வேலை வாங்கித்தரச் சொன்ஞர். எப்படியாவது இவனை ஊரைவிட்டு அனுப்பித் தம் மானத்தைக் காத்துக் கொண்டால் போதும் என்ற எண்ணம் அவருக்கு. ரெவின்யூ இன்ஸ் பெக்டர் பையனை அழைத்து வரச் சொல்லி, மேலும் கீழும் பார்த்தார். பையனு அவன்? தீவட்டித் தடியனுக்கு அண்ணன்!

''உனக்குப் பொய் சொல்லத் தெரியுமா?'' என்று கேட்டார்.

''தெரியாதுங்க!''

''அடிக்கத் தெரியுமா?''

''தெரியாதுங்க!''

''அடி வாங்கத் தெரியுமா?''

''தெரியாதுங்க!''

''இவனுக்குப் பொய் சொல்ல, அடிக்க, அடி வாங்கத் தெரியும்'' என்ருர் ரெவின்யூ இன்ஸ்பெக்டர்.

''இது மட்டுமா? இன்னும் ரொம்பக் காரியம் செய்வானுங்க'' என் ருர் மணியகாரர்.

''இந்த லட்சணத்தில் என்னைச் சிபாரிசு செய்யச் சொல்கிறீரா? எவன் ஐயா இவனை வேலைக்கு வச்சுக்குவான்?''

பட்டாமணியம் சும்மா இருந்தார். பட்டத்து இளவரசுக்கு அப் படியே அவர் கழுத்தைத் திருகிவிடலாமா என்ற ஆத்திரம். இன்ஸ் பெக்டரைச் சுற்றி நாலு வெட்டியான்கள் நின்றுகொண்டிருந்ததால் தன் கோபத்திற்குக் குழி வெட்டிக்கொண்டான்.

பேச்சில்தான் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் அப்படி இருந்தாரே தவிர, ஊருக்குப் போன ஒரு மாதத்துக்கெல்லாம் அவனுக்கு உத்தரவு வந்து விட்டது; ரெயில்வே போலீஸ் உத்தியோகம். இந்த உபகாரத்துக்காகப் பட்டாமணியம் தம்முடைய களஞ்சியத்திலிருந்து பத்து மூட்டை நெல்லை இன்ஸ்பெக்டர் பெயருக்குப் பட்டா மாற்றி வைத்தார்.

இருபது வருஷங்கள் ஆகிவிட்டன. இதற்குள் எத்தனையோ மாறுதல் கள். பட்டாமணியம் பரலோகம் போய்விட்டார். பாகப்பிரிவினைக்காக அடிதடி, கோர்ட்டு, வழக்கு விவகாரம் எல்லாம் முறைப்படி நடந்து முடிந்தன. இப்போது அந்தப் பத்துப் பிள்ளைகளுக்கும் பாகப் பத்திரப் படி 'ரத்த சம்பந்தமே தவிரச் சொத்து சம்பந்தம் இல்லை'. இவ னுடைய பங்குக்கு இரண்டு ஏக்கர் நன்செய், ஒரு பெண்டாட்டி, ஐந்து குழந்தைகள்: மூன்று ஆண், இரண்டு பெண். ஆருவது குழந்தை இப் போது அவன் வீட்டுக்காரியின் வயிற்றில் ஆறு மாதம்.

9333 எத்தனையோ ஏட்டையாக்களை, சப் இன்ஸ்பெக்டர்களை, சர்க்கிள்களைப் பார்த்துவிட்டான். பல ஊர்த் தண்ணீர் குடித்தாயிற்று. இவனுக்குக் கீழே இருந்து பலர் மேலே வந்துவிட்டார்கள். இவன் மட்டி

லும் இன்னும் வேலையை விட்டு வெளியே தள்ளப்படாமல் இருந்தது ஆச்சரியந்தான்.

ரெயில்வே போலீஸின் வேலை ஓர் எல்லைக்கு உட்பட்டிருந்தது. இந்த எல்லைக்கோடு அவனுக்குப் பிடிக்கவில்லை. தெருவெல்லாம் தலைநிமிர்ந்து நடக்கும் சிவப்புத் தொப்பிகளின் மேல் அவனுக்கு எல்லையற்ற பொறுமை.

இருபது வருஷமாய் எல்லா ரெயில்களும் தண்டவாளத்தின் மேல் தான் ஓடுகின்றன. கொஞ்சங்கூட முன்னேற்றத்தைக் காணவில்லை. புதுமை இல்லை; புரட்சி இல்லை! புரட்சிக்காரர்கள் செய்த புதுமையால் சில சமயம் ரெயில் தண்டவாளத்தை விட்டு முன்னேற்றப் பாதையில் போய்த் தலை கவிழ்ந்திருக்கிறது. அவ்வளவுதான்.

தெருத்தெருவாய், சந்து பொந்தெல்லாம் ரெயில் நுழைந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? மூணும் நம்பரின் அதிகாரம் மூலை முடுக்கெல் லாம் பரவாதா? அவனுடைய முறுக்கு மீசைக்கும் சிவப்புக் கண்ணுக்கும் அழுத பிள்ளை வாய் மூட வேண்டாமா?

இருந்தாலும் அவனுடைய அட்டகாசத்துக்குக் குறைச்சல் இல்லை.

அப்போது அரசியல்வாதிகள் அளந்து கொட்டுகிற காலம் அல்ல; அடி வாங்கும் காலம். அவர்களைக் கைது செய்து ரெயிலேற்றிக்கொண்டு போகும்போது ஆயிரக் கணக்கில் மக்கள் ஸ்டேஷனுக்கு வந்து அலைமோது வார்கள். அப்போது 9333-க்கு வருகிற ஆத்திரத்தையும் வெறியையும் பார்க்க வேண்டுமே! உத்தரவு கிடைத்தாலும் சரி, கிடைக்காவிட்டாலும் சரி, ஓங்கிய கை நிற்காது. வீசிய தடிக்குச்சி வீக்கம் காணாமல் விடாது.

மிரண்டு பதுங்கும் மனிதர்களை விரட்டி அடிப்பதில் அவனுக்கு இன் பம். மக்கள் அலறித் துடிப்பதைக் காண்பதில் ஆனந்தம். மற்றவர்களை - ஏழை எளியவர்களைத்தான் - ஆளவும் ஆட்டிவைக்கவும் தான் பிறந்திருப் பதாக அவனுக்கு நினைப்பு. இப்பேர்ப்பட்ட வீரன் இரண்டு ரூபாய்க் காசுக்காக ஒரு முதலாளிக்கு, டிக்கட் வாங்கிப் பழக்கமில்லாத பெரிய மனிதருக்கு, மெத்தை தட்டிப் போடத் தயங்க மாட்டான். காசுக்காக அவன் எதையும் செய்வான்.

பிச்சைக்காரப் பயல் ஒருவன் தனியாக ஒரு நாள் 9333-இடம் எக்கச் சக்கமாய் மாட்டிக் கொண்டான். ஒரே அறை! பிச்சைக் காசு ரூபாயும் சில்லறையும் கை மாறியது. பிச்சைக்காரனுக்குப் பிச்சைக் காரப் புத்தி போகுமா?

''ஸார்! பசிக்குது ஸார்; ரெண்டணுக் குடு ஸார்; பாக்கியை நீ வச்சுக்கோ!'' என்று கை நீட்டினன்.

''போடா!''

பிச்சைக்காரன் தனக்குள் முனகிக் கொண்டான்: ''பிச்சை எடுக்கு தாம் பெருமாள்; அத்தைப் புடுங்குதாம் அநுமார்!''

அநுமார் பெருமாளின்மீது பாய்ந்து அதை அப்பளமாய் ஆக்கி விட்டது. பெருமாளுக்குக் கோவணம் மட்டிலும் மிச்சம். அப்படியே ஒரு கொத்துத் தலைமயிரை அவரிடமிருந்து பிடுங்கிக்கொண்டுதான் அநுமார் நகர்ந்தது.

இன்னும் இதைப்போல எத்தனை எத்தனையோ! - இப்போது போலீஸ் புலி பிசாசுகளும் பயப்படக்கூடிய நடுக்காட்டில், நள்ளிருளில், பிணத்துக் குக் காவலாய்த் தனிமையில் நிற்கிறது.

# 3

ரெயில் கண்ணுக்கு மறைந்தது. 9333 வண்டிக்குப் பின்னல் தெரிந்த சிவப்பு விளக்கையே பார்த்துக்கொண் டிருந்தான். இருட்டு மங்கையின் நெற்றிப் பொட்டான அந்தச் செம்புள்ளி இப்போது முற்றும் அழிந்துவிட்டது.

அவனுக்குச் சிவப்பு நிறமென்றால் பிடிக்காது. ஏன் பிடிக்காதென்று அவனுக்கே தெரியாது. ஒருவேளை தன்னை வெள்ளைக்காரனின் தத்துப் பிள்ளை என்று நினைத்துக் கொண்டதால் வந்த கோளாருக இருக்கலாம். வெள்ளைத் தோலுக்குத்தான் சிவப்பு நிறமென்றால் கிலி ஆயிற்றே!

''டேஞ்சர் சிக்னல்; சிவப்பு எனக்கு வெறுப்பு!'' என்பான். ஆனால் சிவப்பான பெண்களுக்கும் அவர்களுடைய சிவப்புச் சேலைகளுக்கும் இது விதி விலக்கு. டேஞ்சர் இப்போது சிவப்புக்குத்தான்!

சிவப்பு விளக்கு மறைந்தவுடன் நிம்மதியாய்ப் பெருமூச்சு விட்டவன் அப்போதுதான் தன் கையிலிருந்த கண்ணாடி விளக்கைக் கவனித்தான். என்ன அக்கிரமம்! அதில் ஒருபுறம் சிவப்புக் கண்ணாடி; இன்னொரு புறம் பச்சைக் கண்ணாடி. சிவப்பின் வழியே ஒளி ரத்தவெள்ளமாய்ப் பாய்ந்தது.

கோபத்தால் அவனுடைய முறுக்கு மீசை துடித்தது. ஓங்கி அந்த விளக்கைத் தண்டவாளத்தில் மோதிச் சுக்கு நூறாய் உடைக்கலாமா என்று பார்த்தான். பிறகு இருட்டு மங்கையின் பயங்கரம் இன்னும் அதிகமாயிருக்கும். அமங்கலமாய்ப் போன ஆத்திரத்தில் அவனையே தூக்கி விழுங்கினால் என்ன செய்வது?

அவனுடைய கைக் கடிகாரத்தில் மணி ஒன்றரை. பொழுது விடியும் வரையில், இன்னும் நாலுமணி நேரத்திற்குமேல் அங்கு நின்று தொலைக்கவேண்டும். துணைக்கு இன்னோர் ஆளையாவது இறக்கி விட்டுப் போனார்களா?

பிணத்தின் முகத்தைப் பார்க்க வேண்டும் போலிருந்தது அவனுக்கு. பயம் தன்னை அறியாமல் தலைகாட்டுவதை உணர்ந்தான். சே! செத்த பிணத்திடம் பயப்படலாமா? பத்துப் பேருடைய பல்லை உடைக்கும் பலம் உடம்பில் இருக்கிறது. தடிக்குச்சி வேறு கையில் கொடுத்திருக்கிறார்கள். செத்தவன் பிழைத்து வம்புக்கு வந்தால்கூடக் கணுவுக்குக் கணு எலும்பை இறக்கலாம்.

ஒரு கையில் விளக்கும் இன்னொரு கையில் குச்சியுமாகப் பிணத்தருகில் போனான். தலை துண்டாகக் குப்புறத் திரும்பிக் கிடந்தது. முகம் தெரியவில்லை. மெதுவாய்க் குச்சியால் புரட்டினான். செத்துப் போன முகமாகத் தோன்றக் காணோம். தாடியும் மீசையும், விபூதியும் குங்குமமும் - குங்குமமா அது?

இன்னும் சற்றுக் குனிந்து அந்தப் பொட்டைக் கவனித்தான். இடது கையிலிருந்த விளக்கு அவன் பிடியிலிருந்து தானாகத் திரும்பிச் சிவப்புக் கண்ணாடி வழியே அந்த முகத்தை வேடிக்கை பார்த்தது. கோபத்தோடு பச்சைக் கண்ணாடிப் பக்கம் திருப்பினான். திருப்ப முடியவில்லை. யாரோ அந்த நிலையிலேயே அதைக் கெட்டியாகப் பிடித்திருப்பதுபோல் பிரமை தட்டியது. அப்போது விளக்குக்குள்ளே யிருந்த ஒளிக்கற்றை துடித்த துடிப்பு! ஏன் இப்படி நடுங்குகிறது?

அந்த முகத்தை அவனுக்கு இதற்கு முன்பு பார்த்த நினைவு. நன்றாக உற்று நோக்கினான். விபூதியும் குங்குமமும் அழியாமல் அப்படியே இருந்தன. அது விபூதி என்பதில் கொஞ்சமும் சந்தேகம் இல்லை. ஆனால் அந்தச் சிவப்புப் பொட்டு? கல்யாணத்தின்போது ஆரத்தி எடுத்து மாப்பிள்ளைக் கோலத்தில் ஒருவனுக்குச் செந்நீரில் திலகமிடுகிறார்களே

அந்த மாதிரி இருந்தது. 9333-க்கு ஒரு விபரீத ஆசை. வலதுகை ஆள்காட்டி விரலால் அதை மெதுவாய்த் தொட்டுப் பார்த்தான். குங்குமம் அல்ல; ரத்தம்! எவ்வளவு கணக்காக நெற்றிமையத்தில் அது ஒட்டிக் கொண்டிருக்கிறது!

கண்களை அகலத் திறந்து அவன் கவனித்தான்: 'அதே ஆசாமிதானு? அவன்கூட இப்படித்தான் தாடியும் மீசையும், திருநீறும் செம்மண்ணும், ஆடு வெட்டுகிற ஐயனர் கோயில் பூசாரி மாதிரி இருந்தான்.'

அவனுக்குச் சந்தேகம் வலுத்தது.

ஆள்காட்டி விரலில் ரத்தம் ஒட்டிக்கொண் டிருந்தது அருவருப்பாகப் பட்டதால் அதைத் தரையில் குனிந்து துடைத்தான். ரத்தக் கறை பிசாசாக அப்பிக் கொண்டது. லேசில் விடவில்லை. இன்னும் ஆத்திரத்தோடு தரையில் அழுத்தித் தேய்த்தான். குபுகுபுவென்று அவனுடைய விரல் நுனியிலிருந்து ரத்தம் பாய்ந்தது. ஒரு சொட்டு ரத்தத்திற்குப் பதில் ஒன்பது சொட்டு.

''அவனேதான்!'' என்ருன்.

''அவனேதான்!'' - எதிரொலியா?

அதற்குமேல் அந்த முகத்தைப் பார்க்க அவனுக்குப் பயம். இரண்டடி பின்னுல் எடுத்து வைத்து நகர்ந்தான். கண்கள் இரண்டும் ஒரு முறை மூடித் திறந்தன. - போலீஸின் கண்கள்தாம்!

விரல் நுனி அதிகமாய் எரிச்சல் எடுத்ததால் அதை வாயில் வைத்து உறிஞ்சினுன். அவனுடைய அங்கத்தின் ஒவ்வோர் அணுவிலும் அந்தக் கணத்தில் மின்சாரம் பாய்வதுபோன்ற உணர்ச்சி. மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன.

''எல்லாம் இந்தப் பொம்பளைங்களாலே வர்ற வினை!''

வினை என்ற சொல் அவனை மீறி வெளிவந்து விட்டதே தவிர, சுய நினைவோடு அவன் அதைச் சொல்லவில்லை. நல்வினை, தீவினை, கடவுள், பக்தி இந்தமாதிரி 'மூட நம்பிக்கை' ஒன்றும் அவனுக்குக் கிடையாது. தன் அறிவுக்குப் பொருந்தாத எதையும் அவன் நம்ப மாட்டான். அவனுடைய அறிவில் இருக்கும் ஆயிரம் ஓட்டைகள் அவனுக்குத் தெரியா.

பிணமாகக் கிடக்கும் மனிதனைப்பற்றி அவன் நினைத்தான். கூடவே பெண்களின் நினைவும் வந்தது.

''பொம்பளையா அவ? பிசாசு!''

திடீரென்று சிரிப்பு வெடித்தமாதிரி கலகலப்பு. மிரண்டுபோய்ப் பிணத்தை நோக்கினுன்; அது சிரிக்கவில்லை. பின்புறம் திரும்பினுன். சவுக்கத் தோப்பிலும் சந்தடி குறைந்திருந்தது. யோசித்தான். தோப்பிற்குள்ளிலிருந்து ஏதோ ஒன்று சிரித்திருக்கவேண்டும்; அல்லது அந்தப் பிணத்துக்குள்ளிலிருந்து கேலிச் சிரிப்பு வெளிப்பட்டிருக்க வேண்டும்; அல்லது அவனுக்குள்ளே இருந்து யாரோ நகைத்திருக்க வேண்டும்.- யார் அது?

## 4

அப்போது அவனுக்கு அந்தப் பெண்பிள்ளையின் ஞாபகம் வந்தது. 'அறிவில்லாதவர்கள் சொல்வதை நம்பினுல் அவள்கூட இப்போது ஒரு பிசாசாகத்தான் இருக்க வேண்டும். சற்று முன்பு சிரித்தது அவள் குரலா?'

இன்றைக்குப் போலவே நடுராத்திரி. சண்டைச் சமயமல்ல, கூட்டம் கிடையாது. ஸ்டேஷனை விட்டு ரெயில் நகர்ந்தவுடன் ஓடி வந்து ஒரு பெட்டியின் கைப்பிடியைப் பற்றித் தொத்தினன் போலீஸ். கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தான். ஆறேழு பேர்கள் மாத்திரமே உட்காரக்கூடிய மிகச் சிறிய இடம். எதிரும் புதிருமாய் இரண்டு பெஞ்சிகள் இருந்தன.

உள்ளே யாரும் இல்லாததால் சாவகாசமாய் உட்கார்ந்து பீடியைப் பற்ற வைத்து இரண்டு இழுப்பு இழுத்தான். மூக்கிலும் வாயிலுமாகப் புகை வெளியேறிற்று. இருந்தாற் போலிருந்து பெஞ்சிக்கடியில் தொங்கிய கால்களில் ஏதோ துணிமூட்டை தட்டுப்பட்ட மாதிரி இருந்தது. குனிந்து பார்த்தான். பெண்பிள்ளை ஒருத்தி நல்ல தூக்கத்தில் புரண்டு படுத்துக்கொண் டிருந்தாள்.

நன்ருகப் பார்த்தான். அவள் ஒரு புதுப் பிச்சைக்காரி. இந்தப் பக்கம் அவள் வந்து இரண்டு வாரங்கூட ஆகவில்லை. எவனே நொண்டிப் பயலோடு சேர்ந்து பாட்டுப் பாடிக் காசு வாங்கிக்கொண் டிருந்தாள். வயசும் குரலும் கூடிக் கலந்ததால் பிச்சைக் காசுக்குக் குறைவில்லை. முன்பே அவளைப் பல தடவைகள் கவனித்திருக்கிருன் 9333. 'நம்மை விட்டு எங்கே போகப் போகிருள்?' என்ற எண்ணம். கழுதை கெட்டால் குட்டிச்சுவருக்கு வராமலா போகும்?

தன்னை மறந்து தூங்கும் அவளை அங்கம் அங்கமாய்க் கண்களால் அளந்து பார்த்தான். பதினெட்டு முழச் சேலைக்கும் பாங்கான ரவிக்கைக்கும் அவள் எங்கே போவாள்? மானத்தை மறைத்து விட்டதாக அவள் நினைத்துத் தூங்கிக்கொண் டிருந்தாள். அவளிடம் அழகில்லை; வயசும் வளப்பமுந்தான். அவளுடைய நொண்டிப் புருஷன் எங்கே போனுனே தெரியவில்லை.

''இந்தா புள்ளே!''

வாரிச் சுருட்டிக்கொண்டு அவள் எழுந்தாள்.

''அடுத்த ஸ்டேஷனிலே இறங்கிட்றேனுங்க.''-உள்ளே இருந்து கொண்டே அவள் பேசினுள்.

''சரி புள்ளே, வெளியே வா! வந்து பெஞ்சிமேலே உட்கார்.''

''டிக்கட்டு வாங்கலிங்க; அடுத்த ஊர்லே இறங்கிட்றேனுங்க.''

''ஏன் இப்படிப் பயந்து சாகிறே? நான் உங்கிட்டே டிக்கட் கேக்கலே; எழுந்திருச்சு வா! இது என்ன, எங்க பாட்டன் வீட்டு ரெயிலா? என்னோட தலையிலேயா ரெயில் ஓடுது?''

''இல்லிங்க..''

''என்ன இல்லிங்க?'' - அவன் சிரித்தான்.

அவள் எழுந்து பெஞ்சின் ஓரத்தில் கூனிக் குறுகி நின்றுள். உடம்பு லேசாகப் பதறியது. கண்களில் பயம் கலந்த பார்வை. இரண்டு மூன்று முறை அவன் அவளை உட்காரச் சொன்னுன். அவள் கேட்கவில்லை.

''உட்காரப் போறியா, உன்னை உட்கார வைக்கட்டுமா?''

''இல்லிங்க.''

''உட்காராட்டி உன்னைத் தூக்கி வெளியே எறிஞ்சிடுவேன், பார்த்துக்க.''

அவள் உட்கார்ந்தாள்;

''இந்த வயசிலே நீ ஒரு நொண்டிப்பயலோட சேர்ந்துக்கிட்டுப் பிச்சை எடுக்கலாமா? வயசுப் பொம்பிளே வெளியே வரலாமா? இது உனக்கு நல்லா இருக்கா?''

''......''

''உனக்கு வேண்டியது சோறுஞ் சேலையுந்தானே? அதைக் குடுத்தா நான் சொல்றபடி கேக்கிறியா?''

''......''

''என்ன புள்ளே, இடிச்ச புளிமாதிரி உட்கார்ந்திருக்கே! - சொல்ற வேலையைச் செய்யறியா?''

''என்ன வேலையுங்க?''

''ரொம்ப நல்ல வேலைதான்! சொகுசான வேலை.-நல்ல சேலை கட்டலாம். நல்ல சோறு திங்கலாம். நாலு பேர் முன்னுலே நாயாக் குலைச்சுக் காசு கேட்க வேண்டாம்.''

என்ன வேலையென்று இன்னும் அவள் தெரிந்துகொள்ளவில்லை. ஆனுல் நாம் தெரிந்துகொள்ள வேண்டாமா? எந்த எந்த மாதிரி வேலைகள் எல்லாம் உலகத்தில் நடக்கின்றன தெரியுமா?

விபசாரம் செய்வது சட்டப்படி குற்றம். அதற்குத் தூண்டுவதும் குற்றம். ஆனுல் பட்டினி கிடப்பது குற்றமல்ல; பத்துப் பேர் உணவை ஒருவன் தின்பதும் குற்றமல்ல. ஆகையால் பட்டினியும் பசியின்மையும் சேர்ந்து சட்டத்தை இன்று படாத பாடு படுத்துகின்றன.

9333-க்கு இது உபதொழில். எத்தனையோ அநாதைப் பெண்கள் இல்லையா? சோறும் சேலையும் முதலீடு; வருவதெல்லாம் லாபம். காசைக் கொடுத்து நோயை விலைக்கு வாங்கிக்கொள்ள இந்த நாட்டில் காலிக் கூட்டத்துக்குத்தானு பஞ்சம்? சட்டம் என்ற சண்டிக் கழுதைக்கு மூஞ்சியில் ஒரு குத்தும், முதுகில் ஓர் உதையும் விட்டுக் காசைக் கறந்தான் அவன்.

பிச்சைக்காரிக்கு அது இன்னும் என்ன வேலை என்று புரியவில்லை. மிரண்டு மிரண்டு விழித்தாள்.

''என்ன வேலை தெரியுமா?'' - திடீரெனப் பாய்ந்து அவள் கையைப் பற்றினுன்.

அவள் முகம் பேயறைந்த மாதிரி ஆகிவிட்டது. வாய்விட்டுக் கத்தினுள். கத்தி என்ன செய்வது, ரெயிலின் சத்தத்தில்?

ரெயிலுக்கு இருந்தாற்போலிருந்து வெறி பிடித்துவிட்டது. மலை உச்சியிலிருந்து தலை குப்புற விழும் வேகத்தில் அது தடதடவென்று பதறிக்கொண்டு ஓடியது. எதிரே இருந்த இருண்ட உலகம் இரண்டாகக் கிழிந்து விழுந்தது.

கையை உதறிக்கொண்டு அவள் பின்னே நகர்ந்தாள். அவன் விகாரமாய்ச் சிரித்தான். மெதுவாக அவனும் அவளை நெருங்கினுன். ரெயிலின் சத்தம் அப்போது மிகப் பயங்கரமாக இருந்தது. ஆற்றுப் பாலத்தின் இறக்கத்தில் போய்க்கொண்டிருந்ததால் வானம் கிடுகிடுப்பதைப் போன்ற சத்தம்.

''என்னடி, பிச்சைக்காரக் கழுதை! பத்தினி வேஷமா போடுறே?''

''ஐயோ!....ஆ!''

அதற்கப்புறம் என்ன நடந்ததென்று போலீஸ்காரனுக்குத் தெரியாது. அவன் கண்கள் திறந்துகொண்டுதான் இருந்தன.. ஐம்புலன்களும் அவனுக்கு உயிரோடுதான் இருந்தன.

பின்புறமாக நகர்ந்தவள் அப்படியே கதவில் சாய்ந்தாள். வெளிப் பக்கம் திறக்கக் கூடிய கதவுகள் அவளுடைய சுமை தாங்காமல் வழி விட்டன. கீழே நுங்கும் நுரையுமாய், சுழித்து ஓடிக்கொண் டிருந்த காட்டாறு அந்தப் பிச்சைக்காரியை மடியில் ஏந்திக்கொண்டு, அவள் மானத்தைக் காப்பாற்றியது. உயிரைக் காக்கும் திறன் அதற்கு இல்லை.

எல்லாம் மின் வெட்டும் நேரத்தில் நடந்தன. நினைக்கும் போதெல்லாம் அவனுக்கு அந்தக் காட்சி கண்முன்னே வரத் தவறுவதில்லை. நினைக்கும்போது மட்டும் வந்தால் குற்றமில்லையே! நினைக்காத போதெல்லாம் வந்து வெறியாட்டம் போட வேண்டுமா?

மனம் என்கிற மாயப்பேய் மனிதனுக்குள்ளே இருந்து படுத்துகிற பாட்டை அவன் அப்போதுதான் உணர்ந்தான். அது சண்டித்தனம் செய்யத் துணிந்துவிட்டது. கிளைக்குக் கிளை தாவிக் கண்டதை யெல்லாம் கடித்துக் குதறும் கிழட்டுக் குரங்குபோல் அது கடந்தவற்றைத் தன் கூரிய பற்களால் கிழித்துக் கிழித்து அவனுக்கு வேடிக்கை காண்பித்தது.

''ஐயோ!....ஆ!''

இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்பு அந்தப் பெண்பிள்ளை அழுத குரல் இன்று அவனுக்குள்ளே இருந்து வீறு கொண்டெழுந்தது. அப்புறம் அவள் என்ன ஆனாள்?

நல்ல வேளையாக அந்த ஆற்றங்கரையில் நிற்காமல் வேறோர் இடத்தில் நிற்கிறோமே என்று தன்னைத் தேற்றிக்கொள்ளப் பார்த்தான். செத்துப்போன பெண்பிள்ளையிடம் ஓர் ஆண்மகன், போலீஸ்காரன், பயப்படலாமா? தண்டவாளங்களுக்கு அப்பால் எதிரே தெரிந்த மணல் வெளியைப் பார்த்தான். என்ன இது? எங்கிருந்து இந்த ஓங்காரச் சத்தம்? திடீரென்று புது வெள்ளம் பாய்ந்து மணலை விழுங்கி மறையச் செய்கிறதே!..அந்தக் காட்டாற்றில் அன்றைக்குச் சுழிப்பும் கொழிப்புமாய்த் திமிரோடு பாய்ந்த வெள்ளம் இன்றைக்குத் திசை மாறிவிட்டதா? – நட்டாற்றின் மத்தியில் நாணல் பூவைப்போல் ஒருத்தி ஒய்யாரமாக மிதந்து வந்தாள். அலையோடு அலையாகத் தன்னுடைய கருங்கூந்தலை வெள்ளத்தில் படரவிட்டு, அதையே படுக்கையாக்கி அசைந்து வந்தாள்.

''அலைமோதுதே, ஐயா! அலைமோதுதே!''

சந்தேகமே இல்லை. அந்தப் பிச்சைக்காரியின் குரல்தான். ரெயிலில் பிச்சை எடுக்க அவள் பாடுகிற பாட்டு...

போலீஸ் புலி உளறிற்று. உருவமில்லாத ஒலி அவன் தொண்டையிலிருந்து கிளம்பியது. துப்பாக்கிக் குண்டுபட்டுத் துடிக்குமே வேங்கை, அதன் குரல்போன்ற அண்டத்தை நடுங்கச் செய்யும் அலறல்...

கண்களை இறுக மூடிக்கொண்டான். இருந்தும் என்ன? அந்த ஆற்று வெள்ளம் ஏன் அவனுடைய மார்புக்குள் மளமளவென்று பாய்கிறது? ஏன் அந்தப் பெண்பிள்ளை அவனுடைய நெஞ்சைப் பிளந்து கொண்டு உள்ளே நுழைகிறாள்? அங்கே போய்த் தாமரை மொட்டுப் போல் தலைகீழாய்த் தொங்கும் அவன் இருதயத்தைக் கடித்து உறிஞ்சுகிறாள்?——ஏன், ஏன், ஏன்?

'கடவுளே!' - வேதனை தாங்காத இருதயத்தின் இருண்ட மூலையிலிருந்து ஓர் ஒலி ஏக்கத்தோடு இறைவனைக் கூவி அழைத்தது.

கண்களை அவன் திரும்பவும் திறந்து பார்த்தபோது எதிரில் ஆற்று வெள்ளமும் இல்லை; பெண்பிள்ளையும் இல்லை. பழைய மணல்வெளி பரந்து கிடந்தது. பாட்டொலி எங்கோ பதுங்கிக்கொண்டது.

## 5

இந்த நிமிஷ அவஸ்தைக்குள் அவனுக்கு வேர்வையால் உடம்பு முழுவதும் நனைந்துவிட்டது. பொத்தான்களைக் கழற்றிச் சட்டையைத் திறந்து விட்டுக்கொண்டான். அந்த இடத்தில் நிற்பதற்கு இருப்புக் கொள்ளவில்லை. தொலை தூரத்துக்கு விலகிப் போய்விட வேண்டும் போலிருந்தது. மெதுவாகத் திரும்பி நடந்தான்.

அவனுக்குப் பின்னால் யாரோ அவனைவிட வேகமாய் நடந்து வந்தார்கள். படீரென்று திரும்பிப் பார்த்தான். யாரும் இல்லை! திரும்பவும் நடந்தான்; திரும்பவும் அதேபோல் நடையோசை!—

அவனுக்குக் கோபம் வந்தது. ''எங்கிட்டே பூச்சாண்டியா காட்டுறே?'' என்று சொல்லிப் பல்லைக் கடித்தான். கையிலிருந்த தடிக் குச்சியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு காற்றை அடித்தான். குச்சியை அவன் வீசி எறிய விரும்பவில்லை. ஆனால் அது தானாக நழுவிக் காற்றில் பறந்தது. படம் எடுத்த நாகம்போல் சீறிக்கொண்டு அந்தப் பிரேதத்தின்மேல் போய் விழுந்தது.

குச்சி நழுவும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அவனுக்கு ஒரே திகைப்பு. உருவமில்லாத ஏதோ ஒன்று குச்சியை அவனிடமிருந்து வெடுக்கென்று பிடுங்கி எறிந்துவிட்டதா?

ஒரு கணம் தயங்கினான். திரும்பிப்போய் அதை எடுத்து வருவதா வேண்டாமா என்ற பிரச்னை. வெறும் கையோடு இருப்பதற்கு அவனுக்குப் பயமாக இருந்தது. அதைப் போய் எடுத்து வருவதற்கும் பயம். இந்தச் சிக்கலுக்கு வழி? கடைசியில் துணிந்து அந்தப் பிணத்தருகில் சென்றான். குனிந்து குச்சியை எடுக்கப் போனான்.

குனியும்போது கண்கள் அந்த முகத்தைக் கவனித்தன; 'சந்தேகம் இல்லை: அவன்தான்; அவனேதான்!'

''என்னப்பா, சுகமா இருக்கிறயா? நான் வெளியே வந்திட்டேன், தெரியுமா?''-பிணம் வாய் திறந்து பேசுவதுபோலிருந்தது. கைத் தடியை எடுத்துக்கொண்டு வெறுப்போடு அந்த முகத்தைப் பார்த்தான்.

நாலைந்து நாட்களுக்கு முன்பு இதே மனிதனை ரெயிலில் பார்த்த நினைவு போலீஸ்காரருக்கு. இரண்டு வருஷங்களுக்குப் பின்பு அது அவர்களுடைய முதற் சந்திப்பு. இதற்கு முன்பு அவனுக்குத் தாடிமீசை கிடையாது; திருநீற்றுப் பூச்சும் செம்மண் பொட்டும் இல்லை. இரண்டு வருஷச் சிறைவாசம் அவனைப் புது மனிதனாய்ச் செய்திருந்தது. கூண்டுக்குள் கிடந்த அவன் குண்டோதரனாய்ப் பெருத்திருந்தான்.

அப்போது அவன் 9333 - ஐக் கேட்ட முதற் கேள்வி இது: ''என்னப்பா, சுகமாக இருக்கிறயா? நான் வெளியே வந்திட்டேன், தெரியுமா?''

''அடையாளமே தெரியலியே? சாமியாராப் போயிட்டியா?''

''ஆமா, சாமியாராப் போய், சாமியைப் பார்க்கணுங்கற ஆசை!''

ஆசாமிக்கு அரைப் பைத்தியம் என்று தீர்மானித்தான் போலீஸ்.

''கடவுளைக் கண்ணாலே பார்க்கணும்; பார்த்து வரங் கேக்கப் படாது. காறித் துப்பணும். உன்னைப்போல அயோக்கியனை அவன் படைக்கலாமா?''

அதற்குமேல் அந்த இடத்தில் தங்குவது ஆபத்து என்று பட்டது போலீஸுக்கு. முன்பு ஒரு முறை அவனிடம் வாங்கிய அடி, உதை, குத்தெல்லாம் போதாவா? பாவி! மூக்கில் ரத்தம் கொட்டக் கொட்ட அவன் விட்ட குத்துகளை 9333 மறக்கவில்லை.

அதுவும் ஒரு வெட்கங்கெட்ட காரியந்தான். ரேஷன் காலத்தில் சட்ட விரோதமாய் ரெயிலில் கால் மூட்டை அரிசி கொண்டு வந்தாள் ஒரு விதவை. விதவை என்றால் கிழவியல்ல; அவள் தனியே வந்தாள். அவள் செய்த குற்றத்திற்குப் பரிகாரமாய் அவளை இன்னொரு குற்றத்துக்கு ஆளாக்கப் பார்த்தான். அவள் பதறி அடித்துக்கொண்டு வந்து அடுத்த பெட்டியிலிருந்த இவன் காலிலோ விழுந்தாள்.

அந்த மூன்றாவது மனிதனுக்குச் சட்டம் தெரியவில்லை; நியாயம் தெரிந்தது. அவனுக்கு மண்டையில் மூளை இல்லை: நெஞ்சில் உரம் இருந்தது; உடலில் வலு இருந்தது. 'டூட்டி'யில் இருந்த போலீஸை வாட்டி எடுத்துவிட்டான்.

இரண்டு வருஷம் அவன் இரும்புக் கம்பி எண்ண வேண்டியதாயிற்று.

ஜெயிலுக்குப் போய் வந்தபிறகும் அவனுடைய திமிர் குறையவில்லை என்று கண்டு மெதுவாய் அந்த இடத்தை விட்டு நழுவினான் போலீஸ். 'எங்கே போய்விடப் போகிறான்? இன்னும் இரண்டொரு கேஸில் மாட்டவைத்து உள்ளே தள்ளினால் தன்னால் வழிக்கு வருகிறான்.'

''இருந்தும் கெடுத்தான், செத்தும் கெடுத்தான்'' என்று தனக்குள் அவன் சொல்லிக்கொண்டான்.

இந்தப் பேச்சைக் காது கொடுத்துக் கேட்டாற்போல் சவுக்கத் தோப்பு, குபீரென்று சிரித்தது. திரும்பிப் பார்த்தான். ஒவ்வொரு சவுக்க இலையும் ஓர் ஊசி முனையாகிக் குத்துகிறது!

சிரிப்பது யார்? செத்துப் போனவன் பிசாசாக மாறிச் சிரிக்கிறானா? சே! பிசாசாவது, மண்ணாங்கட்டியாவது!

அவனுக்குள்ளே இருந்து இப்போது அந்தச் சிரிப்புக் கேட்டது.

''உன்னாலே என்னை என்னடா பண்ண முடியும்? உயிரோட இருந்தப்பவே அசைக்க முடியவில்லை; இப்ப மிரட்டிப் பார்க்கிறாணும்!''

பயமா, ஆத்திரமா, வெறியா என்று தெரியவில்லை. மிதமிஞ்சிய போதை அவனுக்கு. கையிலிருந்த தடிக்குச்சியால் ஓங்கி அந்தச் செத்த உடலை அடிக்கப் போனான்.

''உஸ்!..உஸ்!..''

அம்பைப்போல் காற்றைக் கிழித்துக்கொண்டு இரண்டு பறவைகள் அவன் தலைக்கு மேலே பறந்தன. ஒன்றை ஒன்று துரத்திச் சென்றன. பறவைகள் மறைந்த பிறகும் அந்த 'உஸ்' என்ற ஒலி மறையவில்லை.

அவனுக்குள்ளே இருந்து சிரிப்பும் குரலும் கேட்கத் தொடங்கின.

'ஹ ஹ ஹ் ஹா! ஹ ஹ ஹ் ஹா! உடம்பில்லேடா; உயிர்! தேக மில்லேடா; ஆவி! ஹ ஹ ஹ் ஹா!'

அடிப்பதற்குக் குச்சியை ஓங்கியவன் அயர்ந்துவிட்டான். ஆனல் அடுத்த கணம் அவனுடைய மூர்க்கத்தனம் அவனே விடவில்லை. தன்னுடைய பலமெல்லாம் சேர்த்து ஓங்கி அடித்தான்.

''சட்டுச் சட சட சட்! சடார்!..ஹா!..ஹூ!..ஹோ!''—மரம் முறிந்து விழுந்து அலறும் ஓசை.

திரும்பிப் பார்த்தான். கண்கள் நிலை குத்திவிட்டன. ஆயிரம் ஆயிரம் சவுக்க மரங்கள் நின்ற இடத்தில் ஒரு மரத்தைக் கூடக் காண வில்லை. அங்கே ஆயிரம் ஆயிரம் ஜடாமுனிகள்! ஆயிரம் ஆயிரம் கரும் பிசாசுகள்!

ஈயத்தைக் காய்ச்சி எலும்புக் குருத்துக்குள் பாய்ச்சுவது போலிருந்தது 9333-க்கு. பேய்கள் தலை விரித்தாடின. சடையும் முடியுமாய்க் கற்றை கற்றையாய்த் தொங்கிய மயிர்க் குவியலைக் காற்றில் சுழற்றிச் சுழற்றி வீசின. கைகளை அகல விரித்துக்கொண்டு அணு அணுவாக நகர்ந்து அவனருகில் வந்தன. அவை அலறிய அலறல்! உறுமிய உறுமல்!

கண்களை அவன் திரும்பவும் மூடிக்கொண்டான். உள்ளே பார்த்தான். சூருவளியில் அகல் விளக்குத் துடிப்பதுபோல் அவன் உயிர் அங்கே துடித்தது.

'உடம்பில்லேடா; உயிர்! தேகமில்லேடா; ஆவி!'

தன்னுடைய உயிர் கால்போன போக்கில் வெறி நாய்க்குப் பயந்தோடும் சின்னஞ் சிறு குழந்தைபோல் அவனுடைய உள்ளத்துக்குள் தறி கெட்டலைந்தது. பயத்தினல் பதைபதைக்கும் அந்தப் பாலகனின் பாதுகாப்புக்கு ஓர் காவலன் வேண்டி இருந்தது. அந்தக் காவலன் எங்கே?

தன்னுடைய உள்ளத்துக்குள்ளே, உயிருக்குள்ளே, உள்ளத்தின் உள்ளத்திலே, உயிரின் உயிரிலே அவனே இந்தக் கணத்தில் தேடி அலைந்தான் போலீஸ். அவன் தேடிய இடமெல்லாம் ஒரே இருள்! மின்மினிப் பூச்சி போல் ஒரு சொட்டு ஒளியாவது அங்கே காணேம். ஆனல் அவன் யாரைத் தேடினனே அந்த அவன் அங்கேதான் இருக்கிருன் என்பது போலீஸுக்குக் கடைசி நிமிஷத்தில் தெரிந்தது. இரண்டு அன்புக் கரங்கள் அவனே அணைத்துக்கொள்ளத் தயாராக இருந்தன. கரங்களுக்கு உரியவனைக் காண்பது எப்படி? அவன் கால்களைப் பற்றிக் கதறுவது எப்படி?

கண்களைத் திறந்தான் 9333.

ஆயிரம் ஆயிரம் ஜடாமுனிகளும் அப்போது ஒன்ருேடொன்று ஒட்டிக்கொண்டு அண்ட சராசரத்தையே ஆக்கிரமித்துக்கொண்டன. திரும்பிய பக்கமெல்லாம் ஒரே கறுப்பு. ஆகாயத்திலிருந்த அத்தனை நட்சத்திரங்களும் செத்துப் போய்விட்டன. மலையைவிடப் பெரிய மிருகம் மாதிரி ஒரே பேயாய் அது அங்கு நின்றது.

புயலும் கடலும் சேர்ந்துகொண்டு உறுமும் ஓசையைவிடப் பயங்கரமாயிருந்தது அந்தப் பிசாசின் பெருமூச்சு. 9333-இன் கைகள் நடுங்கின. முதலில் தடிக்குச்சி கீழே விழுந்தது. அடுத்தபடியாக விளக்குத் தரையில் புரண்டு அணைந்தது.

மடி கனத்தது; நெஞ்சும் கனத்தது; கால்களும் கனத்தன. கனம் தாங்காமல் நெஞ்சு வெடிக்கும் போல் தெரிந்ததால் அதை இரு கைக

ளாலும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டான்; கால்கள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு அவனைக் கீழே தள்ளின. அதன் பிறகு அவன் பயப்படவில்லை.

பொழுது விடிந்தது. சவுக்கத் தோப்பு சவுக்கத் தோப்பாய்த்தான் இருந்தது. வறண்ட ஆறு மணல்வெளியாய்த்தான் இருந்தது. தண்டவாளங்கள் இரும்புக்கம்பிகளாய்த்தான் இருந்தன. ஆனால் ஒரு பிணம் கிடந்த இடத்தில் இரண்டு பிணங்கள்!

ரெயில்வே டாக்டரும் ஊழியர்கள் சிலரும் அங்கே வந்தார்கள். ஒரு மூன்றாவது மனிதனும் வழிப்போக்கில் அங்கு வந்தான். அந்த வழிப்போக்கனையும் ரெயிலில் அடிபட்டுச் செத்தவனையும் மாறி மாறிப் பார்த்தார்கள் மற்றவர்கள். கிட்டத் தட்ட ஒரே மாதிரித் தோற்றம். வழிப்போக்கனுக்கும் முகத்தில் தாடி மீசை, நெற்றியில் வெள்ளை சிவப்பு எல்லாம் இருந்தன.

9333-இன் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு உதட்டைப் பிதுக்கினார் டாக்டர்.

''பிசாசு அடிச்சுப் போட்டிருக்கும்'' என்றான் ரெயில்வேக் கூலி.

''கடவுளுக்குக் கண் இருக்குங்க!'' என்றான் அந்த வழிப்போக்கன். முன்பொரு நாள் அவனைப் பார்த்துக் காறித் துப்ப நினைத்த அதே ஆத்திரக்காரன்தான் அவன். ★

—மே, 1953.

## கி. சரஸ்வதி அம்மாள்

# தெய்வத்திற்கு மேல்

"ஜோஸ்யரே, நான் பிழைப்பேனு? ஜாதகம் பார்த்தீர்களே" என்று படுத்த படுக்கையாக இருந்த மீனுக்ஷியின் தாய் ஜோஸ்யரைப் பார்த்துக் கேட்டாள்.

"அதுதான் இத்தனை நாழிகை உன் ஆம்படையானுக்கு எடுத்துச் சொல்லிண்டிருந்தேன். உனக்கும் சொல்லித் தைரிய மூட்டச் சொன்னுன். உள்ளே வந்தேன். ஆயுசுக்கு ஒண்ணும் பயமில்லே; கவலைப் படாதே. இன்னும் இரண்டு மாசந்தான் சனிதசையிலே சூரியனுடைய புக்தி படுத்தறது. இரண்டு பேரும் பரம வைரியோன்னே? சங்கராந்தி ஆகவேண்டியதுதான். சூரிய புக்தி முடிந்து சந்திர புக்தி ஆரம்பமாகிறது; அப்பறம் ஒண்ணும் பண்ணுது. படிப்படியாக் குணந்தான். நான் சொல்றேன்னு பாரு."

"என்னமோ, உங்க வாயாலே சொல்லுங்கோ. பலிக்கட்டும்."

"நானு சொல்றேன்? சாஸ்திரம்னு சொல்லறது?"

"அவர் ஜாதகத்தை, பையன் கிருஷ்ணமூர்த்தி ஜாதகத்தை ரெண்டையும் பார்த்தேளா? அதுலே ஏதாவது எனக்குப் போராதூன்னு இருந்தா?"

"ரெண்டையுந்தான் பார்த்தேன். எல்லாத்திலேயும் படுத்தறத்துக்கு வேணுங்கறது இருக்கு. அதுக்கு மேலே ஒண்ணுமில்லே."

இப்படிச் சொல்லிக்கொண்டே ஜோஸ்யர் அங்கு இவர்கள் சம்பாஷணையை ஆவலாய்க் கவனித்துக்கொண்டிருந்த சிறு பெண் மீனுக்ஷியைப் பார்த்து, "இந்தாடி குட்டி, உள்ளே கேட்டுக் கொஞ்சம் மோர்த் தீர்த்தம் வாங்கிண்டு வா, நல்ல ஆம்படையான் வருவன்" என்ருர் சிரித்துக் கொண்டு.

"போடி, தாத்தாவுக்கு மோர் வாங்கிண்டு வா" என்று அவள் தாய் சொல்லிவிட்டு, "வாஸ்தவமாகவே ஜோஸ்யரே, குழந்தை ஜாதகத்தையும் பார்த்து, எப்படி வாழ்க்கைப்படுவள், என்னமாயிருப்பள் எல்லாம் சொல்லுங்களேன். இருந்து பார்க்கிறேனே என்னமோ; காதாலேயாவது கேட்கிறேன்" என்ருள்.

'இருந்து பார்க்கிறேனே' என்ற தாயின் வார்த்தை மீனுக்ஷியின் கண்களில் கலகலவென்று கண்ணீரை வரச் செய்துவிட்டது. அதை அவர்கள் பார்க்காமல் இருக்க வேண்டியே அவள் மோர் வாங்கிவர உள்ளே ஓடினுள். அப்பொழுது மீனுக்ஷிக்கு ஏழு அல்லது எட்டு வயசிற்கு மேல் இல்லை. இருந்தாலும் தாய் பத்து மாதமாகக் காயலாவாகக் கிடப்பது அவளை உள்ளூறக் கவலைப்படுத்தியது. பாதி சமயம்

தன்னேடொத்த பெண்களுடன் விளையாட்டில்கூட அவள் மனம் செல்ல வில்லை.

திரும்பி அவள் மோருடன் வந்தபொழுது, ஓர் ஓலைச் சுவடியை வெகு கவனமாக மூக்குக் கண்ணுடி அணிந்து பார்த்துக்கொண்டிருந்தார் ஜோஸ்யர். அவர் சொன்னது முழுவதும் மீனுக்ஷிக்குத் தெரியாவிட்டா லும், ''தனுதிபதியும் லாபாதிபதியும் பரஸ்பர வீக்ஷண்யம், அம்மா! குழந்தைக்கு நல்ல தனலாபம் உண்டு'' என்று சொல்லிக்கொண் டிருந் தது தெரிந்தது.

ஜோஸ்யர் போனபிறகு மீனுக்ஷியைத் தன்னிடம் அணைத்துக் கொண்டு அவள் தாய், ''நல்ல பணக்காரியா யிருப்பயாம்டி கண்ணே! நல்ல மனசாய்த் தான தருமம் செய்துண்டிரு; தெரியுமா?'' என்ருள். பணக்காரி என்ற சொல், பணத்தின் பெருமையை அறியச் சக்தியற்ற அந்தச் சிறுமியைக்கூடச் சந்தோஷத்தால் தலைநிமிரச் செய்தது. அவர் கள் பேச்சைக் கேட்டுக்கொண்டே வந்த அவள் தமையன் கிருஷ்ண மூர்த்தி, ''பணக்காரி என்கிறதுக்குள்ளே சந்தோஷத்தைப் பாரு, தலை கழுத்துலே நிக்கல்லே!'' என்ருன் கிண்டலாக.

''போடா, குழந்தையை ஒன்னும் சொல்லாதே. உனக்குப் பத்து வயசு சின்னவள். உன்னை விட்டா அவளுக்கு யாரு? நீதான் அவளைப் பார்த்துக்கணும். நான் பிழைப்பேன்னு தோணல்லே'' என்ருள் அவர் கள் தாய், வருத்தத்துடன்.

''என்னம்மா, ஜோஸ்யர் சொன்னதை வேறு கேட்டுவிட்டு மறுபடி யும் இப்படிப் பேசறயே? சாவைப் பத்தியே நினைக்கப்படாதுன்னு, நீ அதுதான் சதா நினைவா இருக்கே'' என்ருன் கிருஷ்ணமூர்த்தி. 'அம்மா இருந்தாலும் செத்துப் போவதையே நினைச்சுண்டு இருக்கா. அதுதான் தப்பு' என்று மீனுக்ஷிக்கும் தோன்றிற்று. 'நான் பணக்காரியாவேன்னு ஜோஸ்யர் சொன்னு அம்மா நம்பரு; அவரே அவள் பிழைப்பாள்னு நம்ப மாட்டேங்கருளே, அது ஏன்?' அவளுக்கு அது புரியவே இல்லை. அதை நினைத்தபொழுது வேதனை வேறு தாங்காது உண்டாயிற்று.

கடைசியில் ஜோஸ்யர்கள், வைத்தியர்கள் எல்லாருக்கும் மேலாக அவள் தாய் நினைத்ததுதான் சரியாக இருந்தது. இரண்டு மாதம் கழித் துச் சூரிய புக்தி முடிந்து சந்திர புக்தி ஆரம்பிக்கும் அன்று, அவள் கண்மூடியே விட்டாள். சிறுமி மீனுக்ஷியின் மனத்தில் மட்டும் அவள் தாய் அவளை அணைத்துக்கொண்டு அன்று சொன்ன சொல் மறக்காமல் பதிந்தது. அவள் பணக்காரியாவாள், அப்பொழுது தான தருமங்கள் செய்வாள் என்பதுதான் அது.

அதற்கப்புறம் இப்பொழுது முப்பது வருஷங்கள் சென்றுவிட்டன. 'மீனுக்ஷி' என்ற அம்பாளின் பெயருக்கு இரண்டு பொருள்கள் கவிகள் சொல்லுகிருர்கள். மீன வடிவைப் போன்று அகன்று நீண்ட கண்கள் என்பது ஒன்று. மற்றதுதான் பின்னும் விசேஷமானது. மீன் குஞ்சு பொரிக்கும் முறையே தனி. தண்ணீரில் முட்டை இட்டுக்கொண்டே போய், போகும்போதே திரும்பிப் பார்த்துக்கொண்டே போகுமாம். அந்தப் பார்வை பட்டதுமே குஞ்சுகள் உயிர் பெற்றுவிடுமாம். ஸாக்ஷாத் அம்பிகையின் கடைக்கண் பார்வைக்கும் உயிர்களை உஜ்ஜீவிக்கும் சக்தி உண்டாதலால், மீனின் தன்மை பொருந்திய கண்கள் என்று பொருள் பட மீனுக்ஷி என்று பெயர் அமைந்தது என்பதாகச் சொல்லுகிருர்கள். நம் மீனுக்ஷியின் விழிகளும் நீண்டு அகன்றவையே. அதனுல் உயிர்ப் பிக்கும் சக்தியொன்றும் அவைகளுக்கு ஏற்பட்டுவிடவில்லை. அதற்கு மாருக அவளைச் சுற்றி அவள் அன்புக்குப் பாத்திரமானவர்களின் சாவைத்தான் அவை அதிகம் பார்த்தன.

அவள் தாய் இறந்து நாலைந்து வருஷம் கழித்து அவள் கல்யாணம் நடந்த வருஷமே அவள் தந்தையும் இறந்து போனார். பிறகு அவள் கணவனுடன் வாழ்ந்ததெல்லாம் நாலைந்து வருஷங்களுக்குள்ளேதான். அதிலும் அவள் முழுவதும் சந்தோஷமாக இருந்தாளென்று சொல்வதற்கில்லை. கணவன் செலவாளியாக இருந்தான் என்பதற்காக அவன் தமையன் சொத்தைத் திருப்பிக் கொடுத்து அவனைத் தனியே அனுப்பி விட்டான். தன் பங்குச் சொத்தையும் சேர்த்து இழக்க அவன் விரும்பவில்லை.

கணவன் பட்டணத்தில் சொற்ப உத்தியோகத்தில் இருந்தான். குதிரைப் பந்தயம், சினிமா இவ்விதம் பல துறைகளில் அவன் பணம் போய்க்கொண்டிருந்தது. திடீரென்று ஒரு நாள் இரவு பலத்த காயலாவாகிப் பிதற்றலும் பிடுங்கலுமாக அவன் வீடு திரும்பினான். ஒரு வாரத்திற்கெல்லாம் அந்த ஜுரம் அவனைக் கொண்டே போயிற்று. பிறகு மீனாக்ஷி தமையன் ஆதரவில் வந்து சேர்ந்தாள். ''உன்னை விட்டால் அவளுக்கு யாருடா?'' என்று அவள் தாய் அவளிடம் சொன்னது அப்படியே உண்மையாயிற்று. எங்கோ சேலம் ஜில்லாவில் அவள் கணவனுக்கு இருந்த வானம் பார்த்த சிறு பூமியிலிருந்து ஒரு காசும் அவளுக்கு வரவில்லை. ரொக்கம் பிரித்துக்கொண்டதை எல்லாந்தான் அவன் செலவழித்து விட்டானே. அவள் ஜாதகத்திலிருந்த தனயோகத்தின் பலன் அவ்வளவுதான். 'அம்மா இருந்தால் இப்போது தன் நிலைமையைக் கண்டு என்ன நினைப்பாளோ? அவளுக்குப் பெண்ணினுடைய தனலாபத்தில் அவ்வளவு நம்பிக்கை இருந்ததே!' என்று மீனாக்ஷி நினைத்தாள்.

அண்ணன் வீட்டில் அவளுக்கு ஒரு குறைவும் இல்லை. அவள்தான் வீட்டிற்கு எஜமானி. அவள் மனம் வருந்தக்கூடாதென்று எதிலும் அவள் இட்டது சட்டமாக அவன் வீட்டில் வைத்திருந்தான். மதனிக்கும் அடிக்கடி பிரசவித்து உடம்பு இருந்த துர்ப்பலத்தில் மீனாக்ஷி குடும்ப பாரத்தை முழுவதும் வகிப்பது சௌகரியமாகவே இருந்தது. அண்ணா குடும்பமும் ஐந்தாறு குழந்தைகளுடன் விருத்தியாகி இருந்தது. அவன் சம்சாரி என்ற பட்டம் பெற்று வரவு செலவுக் கணக்குப் பார்க்கும் நிலைமையில் இருந்தான். பட்டணத்தில் இருக்கும் பெரிய பிள்ளைக்கு மாதம் பிறந்தால் காலேஜுக்கும் ஹாஸ்டலுக்குமாகப் பணம் அனுப்பவேண்டியிருந்தது. குடித்தனக்காரர்கள் மாதமாதம் கூலி கூலியாக ரூபாய்க்கு எங்கே போவார்கள்! பெண்ணொன்று கல்யாணத்திற்கு வயசு நிரம்பி நின்றது. இன்னும் எவ்வளவோ சில்லறைச் செலவு.

அவன் சிரமப்படுவது மீனாக்ஷிக்குத் தெரிந்துதான் இருந்தது. கடன் வாங்கியும் சமாளித்துக்கொண்டிருந்தான். ஒரு பகுதி நிலத்தை விற்க அவன் அவர்கள் அம்மாஞ்சியுடன் யோசனை செய்துகொண்டிருந்தது அவன் சொல்லாவிட்டாலும் இவளுக்குத் தெரியவந்தது. அவர்கள் குடியானவன் குப்பன் ஒரு நாள் மீனாக்ஷியிடம் வந்து முறையிட்டுக் கொண்டான். ''அம்மா, எசமான் நிலத்தை விக்கப் போறாங்களாம். நீங்கதான் கூடாதுன்னு சொல்லித் தடுக்கணும்'' என்றான்.

மீனாக்ஷிக்குக் கேட்கத் தூக்கிவாரிப் போட்டது. இருந்தாலும் சமாளித்துக்கொண்டு, ''பணமுடைக்குக் கொஞ்சத்தை வித்தா என்னடா மோசம் போச்சு? கடன் வாங்குவதைவிட அது மேலல்லவா?'' என்று சொல்லிப் பார்த்தாள். குப்பன் ஒப்புக்கொள்ளவில்லை.

குப்பனுக்குத்தான் அவர்கள் குடும்பத்தினிடம் எவ்வளவு அபிமானம்! அவர்கள் தந்தை நாளிலிருந்து அவன் அவர்களுக்காகப் பாடுபடுகிறான். ''நமது கையை விட்டு நிலம் போயிட்டா அப்புறம் என்ன இருக்கு? கௌரவமே போயிடுமே. கூடவே கூடாது'' என்றான் குப்பன்.

''எப்படியாவது அண்ணுவுக்குச் சொல்லுங்க. நான் சொன்னத்துக்கு அவரு கேக்கல்லே. நீங்க சொன்ளுக் கேப்பாருன்னுட்டுத்தான் உங்களிடம் ஓடியாந்தேன்'' என்ருன்.

அதைப்பற்றி மீனுக்ஷி அண்ணுவைக் கேட்டாள். ''குப்பன் கூடாதுன்னு அடித்துக்கொள்கிருனே'' என்று சொல்லிப் பார்த்தாள். ''கடன் ஏறி, நிலம் முழுவதும் போவது தேவலையாமா?'' என்றுதான் அவள் தமையன் பதில் சொன்ஞன். அதற்குமேல் அவள் என்ன செய்வாள்? சமைத்துப்போட்டுச் செட்டாய்க் குடித்தனம் செய்யும் ஒத்தாசைதான் அவள் செய்யக்கூடியது. வேறென்ன அவளால் முடியும்? 'சண்டையினுல் ஏற்பட்டிருக்கும் பஞ்சம் கிராமத்தைக்கூடப் பீடித்திருக்கிறது. மலிந்து கிடக்கும் கறிகாய், நெய், பால், தயிர் எல்லாங்கூட விலை ஏறிக் கிராக்கியாகிவிட்டது. என்ன செய்வது?' என்று மீனுக்ஷி நினைத்தாள்.

இப்படி இருக்கும்போதுதான் ஒரு நாள் கிருஷ்ணமூர்த்தி கையில் ஒரு கடிதத்தோடு மீனுக்ஷியிடம் வந்தான். ''மீனுக்ஷி, இதற்கு என்ன சொல்கிருய்? உன் நிலத்தை யாரோ விலைக்குக் கேட்கிருர்களாம். ரூபாய் பதினுயிரம் தருகிருர்களாம்'' என்ருன்.

பதினுயிரமா! அவள் நிலந்திற்கா! அதென்ன அதிசயம்? அவள் காதுகள் சரியாகக் கேட்கின்றனவா? அவளுக்கு நம்பிக்கையே வரவில்லை.

''அதிலிருந்து காலணு வரவில்லையே, அண்ணு. அதற்கா அவ்வளவு தொகை கொடுக்கிறேன் என்கிருர்கள்?'' என்ருள் அதிசயத்துடன்.

''பர்மா போனதில் யாரோ செட்டி பணத்தோடு வந்திருக்கிருன். பாங்கிகளை நம்ப மனமில்லை. உங்கள் ஊரையே வாங்குகிருன் போல் இருக்கிறது. நமக்கென்ன? நல்லதாயிற்று. சந்தோஷமாக விற்றுவிடுவோமே'' என்ருன் அவள் தமையன்.

''பணம் வேண்டாம் என்பாரும் உண்டா? அதுக்குச் சொல்லல்லே அண்ணு. பாவம்! அதை வாங்குகிறவனுக்கு நஷ்டந்தானேன்னு பார்த்தேன்'' என்ருள்.

இளமையிலேயே வாழ்க்கை இன்பத்தைத் துறந்த அவளுக்குப் புராணக் கதைகளை வாசிப்பதும் நீதி சாஸ்திரங்களைப் பயில்வதும் பொழுது போக்காக இருந்தன. அந்தப் போக்கிலே சென்ற உள்ளத்தில் பாவ புண்ணியம், நியாய அநியாயம், பிறரிடம் கருணை, தெய்வ பக்தி ஆகியவை குடி புகுந்து நிற்பது இயல்புதானே?

''அவன் கேவலம் உழுது பயிரிட அதை வாங்குவதாகத் தோன்றவில்லை. அங்கு அவர்கள் ஏதோ தொழிற்சாலை ஏற்படுத்துவதாகக் கேள்வி. எதுவாய் இருந்தால் நமக்கென்ன? சரியென்று எழுதி ஏற்பாடு செய்யச் சொல்லிவிடுகிறேன்'' என்ருன் அவள் தமையன்.

மீனுக்ஷி ஒப்புக்கொள்ளத் தடை என்ன இருக்கிறது?'பணம் வந்தால் அண்ணுவுக்காவது உதவலாம்' என்று நினைத்தாள். விற்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்து கைக்குப் பணமும் வந்து சேர்ந்தது. 'ஜோஸ்யமும் ஒருவாறு பலிக்கத்தான் பலித்திருக்கிறது!' என்று மீனுக்ஷி எண்ணினுள்.

இதற்குள் ஊரெல்லாம் இது விஷயம் பரவி, ஏதோ லாட்டரி விழுந்த மாதிரித்தான் அமர்க்களப்பட்டது. எல்லாரும் வித விதமாய்

உவளைச் சந்தோஷம் விசாரித்தார்கள். அடுத்த தெருவில் இருந்த அவள் அம்மாஞ்சி, ''பெரிய பணக்காரியாய்ப் போயிட்டே. இனிமே மீனுக்ஷி அம்மாள் என்றுதான் சொல்லவேணும்! மீனுக்ஷி என்று ஏக வசனத்தில் என்னைப்போன்ற பந்துகூடச் சொல்லப்படாது; இல்லையா?'' என்றெல்லாம் வேடிக்கை செய்தான். மீனுக்ஷிக்குப் பணம் வந்ததில் சந்தோஷப்படுபவர்களில் முக்கியமாக அவன் ஒருவன். ஊரிலேயே எல்லோரும், 'லக்ஷக்கணக்கில் கிடைத்துவிட்டதா என்ன?' என்று மீனுக்ஷிக்கே தோன்றும்படி பேசினுர்கள்.

அவ்வூர்க் கோவில் தர்மகர்த்தா சுப்பையர் காதிலும் இது விஷயம் விழுந்தது. அவர் வயசு சென்றவர். மீனுக்ஷியைக் குழந்தை முதல் அறிந்தவர். இப்பொழுது அவ்வூரில் இடிந்து கிடந்த கோவிலைப் பல பேர் பண உதவியைக் கொண்டு புதுப்பிக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தார். புதுப்பித்த பெருமை முழுவதும் தம்மையே சேர வேண்டுமென்பது அவர் விருப்பம். அதற்கு ஒரு தடங்கல் இருந்தது. இன்னும் கோவில் கர்ப்பக்கிருகத்திற்கு விமானம் கட்டியாக வேண்டும். அதற்கு வேண்டிய பொருள் அனைத்தும் அவருக்குக் கிடைப்பதாக இல்லை. இப்பொழுது மீனுக்ஷிக்குப் பணம் கிடைத்திருக்கும் செய்தி தெரியவுமே, எப்படியாவது உபதேசம் செய்து அவள் மனத்தைத் தர்ம கைங்கரியத்தில் திருப்ப அவளைத் தேடி அவர் வெகு வேகமாக வந்தார்.

''அம்மா, இந்த அதிசயத்தைப் பாரு. சுவாமி காரியம் முடிவதற்கும் கிட்டத்தட்டப் பதினுயிரம் ரூபாய்தான் வேண்டியிருக்கிறது. உன் கைக்கும் அதே தொகை வந்திருக்கிறது. என்றென்றைக்கும் உன் பெயர் நிலைத்து விளங்கவேதான் இந்தமாதிரி நேர்ந்திருக்கிறது. அதிலும் சுவாமி தலைக்குமேல் இருக்கும் விமானத்துக்கு உன் பணம் உதவப் போகிறதென்றுல் அந்தப் புண்ணியமும் பேரும் யாருக்குக் கிட்டும்? நீ எத்தனை ஜன்மமாகத் தவம் செய்தாயோ, இந்த நல்ல சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது. உங்கள் அம்மாவுக்குக் கோவில் குளத்தில் இருந்த பக்திதான் இதற்குக் காரணம்'' என்றுர்.

பொதுக் காரியங்களுக்குச் சந்தா சேர்ப்பதையே தொழிலாகக் கொண்ட தர்ம தூதர்களுக்கும், இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்டுகளுக்கும் பேசச் சொல்லித் தரவேண்டுமா என்ன? கல்லையுங்கரைக்கும் அதிசய சாமர்த்தியம் அவர்களிடமுள்ள மூலதனம்.

தர்மகர்த்தாவின் பேச்சைக் கேட்கக் கேட்க மீனுக்ஷிக்கு மெய் சிலிர்த்தது. சுவாமியே தன்னிடம் யாசகத்திற்கு வந்ததுபோல் இருந்தது. அவள் சிறு பிராயம் முதல் ஈசுவர பக்தி மணம் வீசும் இடத்தில் இருந்தவள். அவள் வாழ்க்கையும் அதை ஒட்டியே அமைந்துவிட்டது. ஏதோ அண்ணு குடும்பத்திற்கு உழைத்தது போக மீதி நேரத்தைப் பகவந் நாம ஸ்மரணையில்தான் இதுவரையும் அவள் கழித்து வந்திருக்கிறுள். அதனுல்தான் தனக்கு இந்தப் பாக்கியம் இப்பொழுது கிட்டுகிறதோ என்று அவளுக்குத் தோன்றிற்று.

கோவில் கட்டி முடிவதற்கு வேண்டிய அதே தொகை அவளுக்குக் கிடைத்திருக்கிறது. அவ்விதம் நேர்ந்திருப்பது அவள் கோவிலுக்குக் கொடுக்க வேண்டும் என்பதற்காகவே போலும்! ஜோஸ்யப்படி அவள் பணக்காரியாகிவிட்டாள். அம்மாவின் விருப்பப்படி அவள் தருமம் செய்ய வேண்டும். அதற்கு இதை விட்டால் வேறு நல்ல சந்தர்ப்பம் அவளுக்கு எங்கே கிடைக்கப் போகிறது? அவள் வாழ்வு முழுவதற்கும் ஏழு ஜன்மத்திற்கும் இது ஒன்றே போதுமே; வேறு என்ன வேண்டும்? அண்ணுவுக்கு வேண்டுமானுல் உபகாரம் பண்ணலாம். அது சுவாமிக்குச்

செய்வதுபோல் ஆகுமா? ஒரு வேளை அண்ணா தனக்குப் பணமுடையாக இருக்கும்பொழுது வேறு ஏதோ செய்கிறாளே என்று நினைப்பானோ? அவன் இவ்வளவு நாளும் அவளை வைத்து ரட்சித்திருக்கிறான். அதற்கு ஒருவாறாகப் பிரதி செய்ய அவள் கடமைப்பட்டிருக்கிறாள். ஆனால் அவன் குடும்பத்திற்குத்தானே இவ்வளவு நாளும் அவள் சரீரத்தால் உழைத்திருக்கிறாள்? இன்னும் உழைக்கிறாள். அது போதாதா?—இவ்விதம் இரண்டு விதமாகவும் அவள் மனம் நினைத்தது.

அண்ணாவிடம் அவள் தன் எண்ணத்தைச் சொன்னபொழுது, அவள் பயந்ததுபோல அவன் தப்பாக நினைக்கவோ தடுத்துச் சொல்லவோ இல்லை. 'கைக்குப் பணம் வந்த வேகத்தில் அதை விட்டுப் பிரிய அவளுக்கு எப்படி மனசு வருகிறது?' என்றே அதிசயித்தான். தனக்குக் கொடுக்கக்கூடாதா என்று அவன் சிறிதும் நினைக்கவில்லை. இவ்வளவு நாளும் அவள் ஒத்தாசையை எதிர்பார்த்து வழக்கப்படாத அவன் மனசு இப்பொழுது மட்டும் எதற்காக மாற வேண்டும்? ஏதோ அவள் போகிற வழிக்குப் பேரும் புண்ணியமும் சம்பாதித்துக்கொள்வதில் அவனுக்கு வெகு திருப்தி. 'இவ்வுலகில் அவளுக்கு வேறு கிடைக்கக்கூடியது என்ன? நாலு பேர் புகழக் கேட்டாவது அவள் மனசு சந்தோஷப்படட்டுமே' என்று நினைத்தான். அதை அப்படியே மனசை விட்டு மீனாக்ஷியிடம் சொல்லவும் சொன்னான்.

அண்ணா மனசு தெரிந்தபோது அவளுக்கு நிம்மதி ஏற்பட்டது. தான் சிரமப்படும்பொழுது தனக்கு உதவாமல் ஏதோ புகழை விரும்பிச் சுயநலமாகக் காரியம் செய்வதாகவே அவன் கருதவில்லை. அதற்குமேல் அவள் வேண்டுவது என்ன! கோவில் கட்டி முடிந்து கும்பாபிஷேகம் நடப்பது போலவும், சுற்றுவட்ட ஊர்களிலிருந்து வந்து கூடிய ஜனங்கள் அவள் தான் கோவில் பூர்த்தியாகக் காரணமென்று தெரிந்து அவளைப் பிரமாதமாகக் கொண்டாடி அவளை நேரில் பார்க்க அவள் வீட்டு வாசலுக்கே வந்துவிட்டது போலவும், என்ன என்னவோ கற்பனையில் ஆழ்ந்துவிட்டாள். சுவாமி தலைக்கு நிழல் அவளால்தான் ஏற்படப் போகிறது. அவள் அண்ணா குடும்பத்துக்கு ஒரு குறையும் வரும்படி சுவாமி விடமாட்டார் என்று நிச்சயித்தாள்.

அவளுக்கு இருந்த சந்தோஷத்தில், ''ஏண்டா, சாமிக்குச் செஞ்சா புண்ணியந்தானே? அவர் பதிலுக்கு நன்னாப் பார்த்துப்பாரோன்னோ?'' என்று அண்ணாவின் நாலு வயசுள்ள கடைசிப் பையனிடம் சொல்லிக் கொஞ்சுவாள். அன்று இரவு அவள் தூங்கும்பொழுதுகூட இவ்வளவு நாளும் வராத அவள் தாய் கனவில் வந்து சந்தோஷத்தோடு அவளைப் பார்த்துப் புன்முறுவல் பூப்பதுபோல் இருந்தது அவளுக்கு. முப்பது வருஷங்களுக்கு முன் சிறுமியான அவளிடம் அவள் தாய் விரும்பிச் சொன்னதை இப்பொழுது அவள் அப்படியே நடத்தப் போகும்போது தாயின் ஆத்மா களிப்புறாமல் என்ன செய்யும்?

மறு நாள் அம்மாஞ்சி வந்தபொழுது அவனிடத்திலும் தன் எண்ணத்தை அவள் தெரிவித்தாள். ''உன் தர்ம சிந்தை ரொம்பவும் உயர்வானது. வெகு நல்ல காரியந்தான். இருந்தாலும், 'முழுப் பணத்தையும் கொடுத்துவிட வேண்டுமா?' என்றுதான் யோசிக்கிறேன்'' என்றான்.

''கோவில் பூர்த்தியாகக் கணக்காக அந்தத் தொகைதானே வேண்டியிருக்காம்?'' என்றாள் மீனாக்ஷி.

''கணக்கெல்லாம் சுப்பையர் சொல்லுகிறதுதானே? உண்மையை யார் கண்டது? பாதி சாமிக்கு, பாதி அவர் குடும்பத்துக்கு!'' என்றான் அம்மாஞ்சி.

''அதென்னமா நாம் சொல்கிறது? நல்ல காரியம் செய்கிறவர்களை இவ்விதம் தூஷிப்பது கெட்ட வழக்கம்'' என்று மீனுக்ஷி அம்மாஞ்சியைக் கடிந்துகொண்டாள்.

''நான் காரணம் இல்லாமலா சொல்லுகிறேன்? ஊருக்கெல்லாம் தெரிந்த ரகசியந்தான். உனக்குத்தான் தெரியாது. இந்த அபவாதத்தினுல்தான் பணங்கூட முன்போல இப்பொழுது அவருக்கு வசூலாகமாட்டேன் என்கிறது. அவர் குடும்பம் இருந்த வறுமை நிலை நாமெல்லாம் அறியாததா? இப்பொழுது இந்தக் கோவில் வேலை ஆரம்பித்த பிறகு அவர் வீட்டில் லக்ஷ்மி தாண்டவமாடுகிருளே. வீட்டு ஸ்திரீகள் பொன்னும் புடைவையுமாக ஜமாய்க்கிருர்கள். தேன் எடுப்பவன் புறங்கையை நக்காமல் இருப்பாஞ? பணத்தில் புழங்கும் பொழுது வீட்டிற்கும் கொஞ்சம் எடுத்துக்கொள்வது சகஜந்தானே? யாருக்காவது கணக்கு ஒப்பிக்க வேண்டுமா; அதில்லை பாரு?''

இப்படி அவன் சொன்ன பொழுது, சுப்பையரின் பேத்தியைச் சர்வாபரண பூஷிதையாகச் சரிகைச் சேலையும் அரையுமாக, சுவாமி சந்நிதியில் அடிக்கடி பார்ப்பது அவள் நினைவிற்கு வந்தது. அடுத்தாற்போல் அதே வயசுடைய தன் தமையன் மகளுக்கு அதில் கால்வாசி நகைகளோ புடைவைகளோ இல்லையே என்று நினைக்கவும், அம்மாஞ்சி சொல்வது சரியாக இருக்குமோ என்று அவளுக்குச் சந்தேகம் உதித்தது. சிரமப்படும் அண்ணு குடும்பத்திற்குக் கொடுக்காமல், பிறர் பணத்தில் சௌகரியமாக வாழும் மற்ருெரு குடும்பத்திற்கு இன்னும் பணம் உதவுவதாக முடியுமோ அவள் செய்யப் போகிற தர்ம காரியம்? வெகு அழகு! அவள் மூளை குழம்பியது; ஒன்றும் சொல்லத் தோன்ருமல் தயங்கிஞள்.

அந்தச் சமயத்தில், ''அத்தை, உனக்குக் கடுதாசு'' என்று சொல்லி அவள் மருமகள் ஒரு கடிதத்தை அவளிடம் கொடுத்தாள். ''யாரு எனக்கு எழுதறவா?'' என்று சொல்லிக்கொண்டே அவள் அதைப் பிரித்துக் கீழே கையெழுத்தைப் பார்க்கவும், ''எங்க மச்சினர்'' என்று அதிசயத்தோடு சொன்ஞள்.

அவள் முழுவதும் படிக்கும் மட்டும் பேசாமல் இருந்த அம்மாஞ்சி பிறகு, ''என்ன எழுதியிருக்கிருன்?'' என்று கேட்டான்.

''ஒன்றும் இல்லை. நிலம் விற்றது தெரிந்திருக்கிறது. நல்ல விலைக்குப் போனதற்குச் சந்தோஷம் விசாரித்திருக்கிருர்'' என்ருள்.

''போகிறது, எங்கே அதில் பங்குக்கு வந்துவிட்டானே என்று பார்த்தேன்'' என்ருன் அம்மாஞ்சி.

''இத்தனை காலம் திரும்பிப் பாராமல் இருந்துவிட்டு அப்படிக்கூட ஒருத்தர் வருவாரா?'' என்ருள் மீனுக்ஷி.

''ஏன் மாட்டான்? அன்று அவன் தம்பியின் உயிர் போய்க்கொண்டிருந்தபோது அவன் பேரில் வந்த போலீஸ் வாரண்டைக் கண்டு, எங்கே தன்னை என்ன பாதித்துவிடுமோ என்று விலகியவன்தானே அவன்?'' என்ருன் ஆத்திரத்துடன்.

''போலீஸா? வாரண்டா? அது என்ன?'' என்று கேட்டாள் மீனுக்ஷி. பிறகுதான் இவ்வளவு நாளும் அவளுக்குத் தெரியக்கூடாதென்று அவள் தமையன் வைத்திருந்த ஒரு ரகசியத்தை ஆத்திரத்தில் தான் நினைவில்லாமல் சொல்லிவிட்டது அவனுக்குத் தெரிந்தது. இனி விளக்கிச் சொல்லாவிட்டால் மீனுக்ஷி கேட்பாளா? இருபது வருஷத்திற்கு முந்தி நடந்து மறந்துபோன விஷயத்தை இப்பொழுது சொல்லும்படி ஆயிற்று.

அவள் கணவன் சினிமா 'நட்சத்திரம்' ஒருத்தியிடம் மோகங் கொண்டு அவள் இருப்பிடம் தேடிப் போனான். அங்கு அதுபோலவே வந்திருந்த மற்றோர் ஆளோடு கலகம் மூண்டு சண்டைபோட நேர்ந்தது. அதனால்தான் அன்று அவன் காய்ச்சலோடு ஜன்னி பிறந்து வீடு வந்தான். அந்த ஆள் இவன் தன்னை அடித்துக் காயப்படுத்திவிட்டதாகக் 'கேஸ்' போட்டுவிட்டான். இவன் வீட்டில் நினைவில்லாமல் கிடக்கிறான். அந்தச் சமயத்தில் இவன் பேரில் 'வாரண்ட்' வந்து நிற்கிறது. பிறகு என்ன?' கிருஷ்ணமூர்த்தி நிலைமையைச் சமாளித்துப் பணம் கொடுத்துச் சமாதானம் செய்தான்.

''அப்பொழுது நானும் கூட இருந்தேன். அதில் சம்பந்தம் வைத்துக்கொள்ளக் கூடாதென்று இந்த மனிதன் தூர விலகியே இருந்தான். அவ்வளவு நல்ல மனசு அவனுடையது'' என்றான் அம்மாஞ்சி.

''எனக்கு ஏன் இவ்வளவு நாளும் இத்தனை விவரமும் தெரியவில்லை?'' என்று கேட்டாள் மீனாக்ஷி.

''உனக்குத் தெரிந்தால், அவன் அகால மரணத்தால் ஏற்படும் வருத்தத்திற்கு மேலாக அவன் கெட்ட நடத்தைக்கு அவமானம் தாங்காது உன் இதயமே வெடித்துவிடுமென்று பயந்து அவன் ரகசியமாக எல்லாம் செய்தான். பின்னாடியும் ரகசியமாகவே வைத்திருந்தான். நான் இன்று அசட்டுத்தனமாய் வெளியிட்டுவிட்டேன். இருபது வருஷம் கழித்து இதற்காக நீ வருந்த மாட்டாயென்று நம்புகிறேன். வருந்தவும் கூடாது'' என்றான்.

சென்று போனதை நினைத்து அவள் மனசு வருந்தவில்லை. அண்ணாவின் அன்பை நினைத்துத்தான் உருகிவிட்டது. அவன் அந்தச் சமயத்தில் செய்த உபகாரம் பெரிதல்ல; கணவனின் நடத்தை அவள் இருதயத்தைப் பிளந்து மீளா வருத்தத்தில் ஆழ்த்திவிடும் என்பதற்காக அவன் ரகசியத்தைக் காப்பாற்றியதை நினைக்க நினைக்க நன்றி மேலிட்டு உணர்ச்சி பொங்கியது.

அவள் இந்தக் கோவிலைக் கட்டி முடிக்கப் பணம் உதவ நினைத்தாள். அவன் ஒரு கோயில் இடியாமல் காப்பாற்றினான். வெளிக் கோயிலை யாரும் பண உதவியால் கட்ட முடியும். மனக் கோயிலையோ? அது இடிந்துபோனால், அதைச் சரிபண்ணுவது சாத்தியமா? இப்பொழுது அவள் கணவன் விஷயம், அவளுக்குப் பிரமாதமாகப் படவில்லை. புதிதாய் அப்பொழுது அந்த இளவயசில் கேட்டிருந்தால் அவளால் தாங்கக் கூடியதா? தெய்வமே அவள் தமையன் உருவில் தோன்றி அவளைப் பொறுக்க முடியாத மனக் கஷ்டத்தினின்றும் அப்பொழுது காப்பாற்றி யிருக்கிறது. கோவில் தெய்வம் இதைவிட என்ன செய்துவிட முடியும்?

இருபது வருஷத்தில் ஒரு நாள்கூட ஒரு சந்தர்ப்பத்தில் அவன் அதைப்பற்றி ஒரு வார்த்தை சொன்னதில்லையே? அவனே மறந்து போயிருக்கிறான், நிச்சயம்! அவள் அதற்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறாள்? அவனுக்கு அவசியம் ஏற்பட்டிருக்கிறபொழுது அவனுக்கு இல்லாமல் தெய்வத்திற்கு என்று நினைத்து வேறொரு குடும்பத்திற்குப் பணம் கொடுப்பதையா அவள் செய்வது? தெய்வமேயன்றோ அதற்குக் கோபித்துக்கொள்ளும்! கோவிலுக்கு ஏதோ சிறு தொகை கொடுத்துவிட்டு, மீதத்தை அண்ணா காலடியில் அவள் சமர்ப்பிப்பாள். அவளுக்குத் தெய்வம் அவன்தான்.

அதை அம்மாஞ்சியிடம் சொன்னபோது அவன், ''உன் இஷ்டம். ஆனால் பழைய சமாசாரத்தை நான் வெளியிட்டதாகக் கிருஷ்ணமூர்த்தி

யிடம் சொல்லாதே. அவன் என்னிடம் அப்பொழுது சத்தியம் வாங்கிக்கொண்டிருக்கிறான். ஏதோ ஆத்திரத்தில் வாய் தவறிவிட்டது'' என்று சொல்லிச் சென்றான்.

அவன் வாய் தவறினதே நன்மை என்று மீனாக்ஷி நினைத்தாள். இல்லாவிட்டால் பெரும் தவறன்றோ அவள் செய்ய இருந்தாள்? அதற்குக் கடவுள்கூட அவளை மன்னித்திருக்க மாட்டார். நன்றி மறப்பது அவர் விரும்பக் கூடியதல்ல. பணத்திற்குத் தமையன்தான் உரியவன்.

இவ்விதம் தீர்மானித்த பொழுது அவள் பணத்தோடு கூடவே தனக்கு வரவிருந்த கீர்த்தியையும் தியாகம் செய்யத் தயாராக இருந்தாள். அவளுக்கே அது தியாகமென்று தெரியாது. ஒரு புறம் அன்பே உருக்கொண்ட தமையன்; இன்னொரு புறம் எல்லாம் வல்ல கடவுள் என்றல்லவா நிலைமை ஏற்பட்டிருக்கிறது? தமையனுக்குச் செய்வதில் கடமை இருக்கலாம்; புகழ் இல்லை. கடவுளுக்கு இருக்க நிழல் அவளால் என்றாலோ, அதில் அவளுக்குக் கிட்டும் புண்ணியம் அளவிடக் கூடியதா? உலகில் ஏற்படப்போகும் கீர்த்திக்குத்தான் ஓர் எல்லை உண்டா?

ஆனால் என்ன? மெல்ல எண்ணிப் பார்த்தாள். இருதயம் புண்பட்டுத் துடிதுடிக்காமல் ஒரு சமயம் காப்பாற்றிய தமையனை எண்ணியபோது, ''ஆம், அவன் தெய்வத்திற்குமேல்'' என்ற முடிவுக்கு வந்தாள். ★

—ஜனவரி, 1944.

# பாலம்

அந்த நீண்ட பாலத்தின்மீது தனியே நடக்கும்போதெல்லாம் என்னை அறியாமல் ஓர் அச்சம் ஏற்படும்; பைத்தியக்கார எண்ணங்கள் பல தோன்றி மறையும்: 'திடீரென்று யாராவது திருடர் இடைமறித்து, ஒன்றும் கிடைக்காத கோபத்தில் முதுகைப் பதம்பார்த்து விடுவார்களோ? அல்லது சமீபமாகப் பம்பாயில் நிரந்தரமாகிவிட்டிருந்த கலவரத்தின் எதிரொலி இங்கும் தோன்றி என்னைப் பலி கொண்டு விடுமோ?'

சில வழிப்பறிகளும், இரண்டொரு கத்திக் குத்துகளும் இடையே அங்கு நிகழ்ந்திருந்த போதிலுங்கூட, இன்றுவரையில் ஆபத்து எதுவும் இன்றி அதை நான் கடந்துகொண்டுதான் வந்தேன்.

ஒவ்வொரு தடவையும் பாலத்தைத் தாண்டியதும், என் தைரிய மற்ற தன்மையை எண்ணி வெட்கப்படுவேன். ஒரு முறையாவது இத் தகைய பயங்கர எண்ணங்கள் மனசில் எழாமல் அதைக் கடந்துவிட வேண்டுமென்று முயன்றிருக்கிறேன்; ஆனால், அதில் நிரந்தர வெற்றியை என்னால் காணவே முடியவில்லை.

**ப**ம்பாய்க்கு வந்து போகும் தென்னிந்தியர் எவருக்கும், மாதுங்கா வில் இருக்கும், ஜி. ஐ. பி. ரெயில்வேத் தொழிற்சாலையின்மீது போடப் பட்டிருக்கும் அந்த நீண்ட பாலத்தைப்பற்றித் தெரியாதிருக்க முடியாது. 'ஜி. ஐ. பி. மாதுங்கா', 'பி. பி. அண்டு ஸி. ஐ. மாதுங்கா' (சுருக்க மாக 'பி. பி. மாதுங்கா') என்று தபால் இலாகாவாலும் ரெயில்வேக் கம்பெனியாராலும் பிரிக்கப்பட்டிருக்கும் மாதுங்காவின் இரு பகுதி களையும் இணைக்கும் கால் மைல் நீளமுள்ள பாலம் அது. வண்டிகள் ஓடும் பாலம் அல்ல; இரு மாதுங்காக்களுக்கும் இடையே ஜி. ஐ. பி. ரெயில்வேக் கம்பெனியாரின் பிரம்மாண்டமான தொழிற்சாலை வழி அடைத்து அமைக்கப்பட்டிருக்கிறது. 'வண்டிகளைப்போல ஜனங்களும் அத் தொழிற்சாலையைச் சுற்றிக்கொண்டு ஒரு மாதுங்காவிலிருந்து மற் றொரு மாதுங்காவுக்குப் போக வேண்டாம்; குறுக்கேயே போகட்டும்' என்ற ரெயில்வேக் கம்பெனியாரின் காருண்ய நினைவின் சின்னமாக அது எழுப்பப்பட்டிருந்தது.

பாலம் மிகவும் குறுகலானது. சுமார் எட்டடி அகலங்கூட இராது. அதிலும் இரு புறத்திலும் ஆள் உயரத்திற்கு வேலி பிடிக்கப்பட்டு அடைக்கப்பட்டிருந்ததால், புதிதாக அதன் வழியே நடப்பவர்களுக்கு, இரு மலைகளினூடே செல்லும் ஒரு குறுகிய கணவாயைக் கடப்பது போன்ற உணர்ச்சி தோன்றும்.

இரு மாதுங்காக்களின் தனித்தனி ரெயில் நிலையங்களை ஒட்டி அந்தப் பாலம் போடப்பட்டிருந்ததால், ஜன நடமாட்டத்திற்குக்

குறைவே இல்லை. அதிகாலையிலிருந்து இரவு முன்னேரம் வரையில் அதன் வழியே நடந்து செல்வதுகூடச் சற்றுக் கஷ்டமாகவே இருக்கும். ஆயினும், இரவு பத்து மணிக்கு மேலாகிவிட்டால், அதில் செல்பவர்களுக்குச் சிறிது பயம் தோன்றவே தோன்றும். பகலில் ஜீவகளை ததும்பி நின்ற பாலம் இரவில் உயிரிழந்து, தனக்குத் துணை தானாக நின்றுகொண் டிருக்கும்.

யுத்தம் ஆரம்பிக்கு முன், பம்பாயில் தென்னிந்தியரின் ஜனத் தொகை ஒரு வரையறைக்குள் இருந்தது. அதனால் அன்று அவர்கள் ஜி. ஐ. பி. மாதுங்காவையே தங்கள் ஏகபோகமாகிக்கொண் டிருந்தார்கள். ஆனால், சண்டையின்போதும், அதன் பின்னும் தென்னிந்தியரின் வருகை படிப்படியாக அதிகரிக்கவே, மாதுங்காவின் வயிறு பிதுங்கும்வரையில் அதை அடைத்த பிறகு, நம்மவர்கள், 'ஜி. ஐ. பி., 'பி.பி.' ரெயில் பாதைகளை ஒட்டிய பம்பாயின் சுற்றுப்படுகைகளில் இடம் பிடிக்கலாயினர்.

அதிருஷ்டமோ, துரதிருஷ்டமோ, 'பி. பி.' ரெயில் பாதையை ஒட்டிய படுகைக் கிராமவாசியாக நான் இருந்தேன்.

படுகைவாசிகள் சிதறி வசித்தார்கள். அவர்களின் தொகையும் குறைவு. ஆகவே கூட்டுறவை விரும்பியோ, நண்பர் சுற்றத்தாரைக் காணவோ, தமிழ் மணத்தை நுகரவோ, ஏதாவது ஒரு காரணங் கொண்டு அவர்கள் ஜி. ஐ. பி. மாதுங்காவுடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டியது அவசியமாக இருந்தது. தினந்தோறும் இல்லாவிட்டாலும், வாரத்தில் ஒரு நாள் விடுமுறைத் தினத்திலாவது, அவர்களுக்கு மாதுங்காப் பிரயாணம் நிச்சயமாக இருந்தே தீரும்.

அதிலும் என்னைப் போன்ற இலக்கியப் பித்துக் கொண்டவனை மாதுங்கா ஆகர்ஷித்தது வியப்பே அல்ல; நண்பர்களைச் சந்திப்பதோடு இலக்கியக் கழகங்களில் பங்கெடுத்துக் கொள்ளவும், ஒவ்வொரு நாளிலும் மாலைப்பொழுதில் என்னை மாதுங்காவில் காணலாம். ஆகவே ஜி. ஐ. பி. ரெயில்வேத் தொழிற்சாலைப் பாலத்தோடு எனக்கு மற்றவர்களை விட அதிகத் தொடர்பு இருந்தது என்று கூறினால் தவறாகாது.

இரண்டு மாசத்திற்கு முன் இப்படித்தான் ஒரு நாள் மாதுங்காவிற்குப் போயிருந்தேன். நான் அதிகமாகப் பழகும் சங்கத்தில் ஒரு விழா. பிரபல ஆசிரியர் ஒருவர் தென்னாட்டிலிருந்து விழாவிற்குத் தலைமை வகிக்க வந்திருந்தார். அவர் பிரசங்கத்திலும் விழாவின் கோலாகலத்திலும் என்னை மறந்து இருந்துவிட்டு, இரவு பன்னிரண்டு மணிக்குப் பிறகு படுகையிலுள்ள என் வீட்டிற்குக் கிளம்பினேன்.

வழக்கமாகப் பாலம் வரையில் வந்து என்னை வழியனுப்புவதைக் கடமையாகச் செய்து வந்த நண்பர் அன்றும் என்னுடன் வந்திருந்தார். "என்ன, இந்த நடுராத்திரியில் வீட்டிற்குப் போக வேண்டும் என்கிறீர்களே! இங்கே படுத்திருந்துவிட்டுக் காலையில் போனால் போதாதா?" என்றார் அவர்.

நாங்கள் பாலத்தருகே வந்துகொண் டிருந்தோம். என் கண்கள் ஒரு முறை பாலத்தை ஊடுருவி நோக்கின. அதன் நீண்ட வெறிச் சென்ற தோற்றம் வழக்கமான பயங்கர நினைவுகளை உடனே என்னுள் கிளப்பிவிட்டது. இருந்தாலும் தைரியசாலியைப் போன்று, "எனக்கென்ன ஸார் பயம், ஆண்பிள்ளைக்கு?" என்று அந்த நண்பரிடம் சொன்னேன்.

"ஆமாம்; நடுவழியில் எவனாவது இடைமறித்து நாலு போடு போட்டானென்றால், உங்கள் தைரியமெல்லாம் தெரியும். போன வாரம் ஒருவரிடம் இருந்ததையெல்லாம் பிடுங்கிக்கொண்டு கைகால்கள் ஒடிய அடித்துவிரட்டிவிட்ட செய்தியாவது உங்களுக்குத் தெரியுமா, இல்லையா?"

அந்த நண்பர் வேண்டுமென்றே என்னைப் பயமுறுத்த எண்ணினாரோ, அல்லது அவர் கூறிய செய்தி உண்மையேதானோ, எனக்குத் தெரியாது. ஆனால் அப் பேச்சால் அவர் என் மனத்தின் உள்பாகத்தில் பெரிய திகிலையும், வெளியே வீறாப்பையும் கிளப்பி விட்டுவிட்டார் என்பது மட்டும் உண்மை. இருந்தாலும், விட்டுக்கொடுக்காமல் அவருக்குப் பதில் அளித்தேன். "ஆமாம், கையாலாகாத மனிதர் அகப்பட்டால், சும்மா தெருவோடு போய்க்கொண்டிருப்பவன்கூட நாலு கொடுத்தனுப்பத்தான் நினைப்பான்" என்றேன்.

"அதற்காகச் சொல்லவில்லை ராமு; கால நிலை சரியாக இல்லாத போது எதற்காக இந்த நடு ராத்திரியில் இப்படித் தனியே போகவேண்டும்? நான் சொல்கிறேன்: இனிமேல், ஒன்று : மாதுங்கா வேலைகளை இரவு முன்னேரத்தில் முடித்துக்கொண்டு ஜன நடமாட்டம் இருக்கும்போதே வீடு திரும்பிவிடுங்கள்; இல்லாவிட்டால், இரவு இங்கேயே தங்க ஏற்பாடு செய்துகொண்டு வாருங்கள்."

"இனிமேலுள்ள காரியங்களைப்பற்றிப் பிறகு ஆலோசித்துக் கொள்ளுவோம்: இப்பொழுது நான் போய் வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டேன்.

"கட்டாயம் வீட்டிற்குப் போய்த்தான் ஆகவேண்டுமென்றால் வாருங்கள்; பாலத்துக்கு அப்புறம் வரையில் உங்களைக் கொண்டு விட்டு வருகிறேன்" என்றார் அவர்.

"அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். இந்தப் பாலத்தை இப்படி அவ வேளையில் கடப்பது எனக்கு ஒன்றும் புதிதல்ல. நீங்கள் கவலைப்படாமல் வீட்டுக்குப் போங்கள்" என்று சிரித்துக்கொண்டே சொன்னேன்.

நண்பர் சற்று வருத்தத்துடனே வீடு திரும்பினார். நான் பெரிய தைரியசாலியைப் போன்று பாலத்தில் ஏறினேன். ஆனால், அந்தத் தைரிய நிலை ஒரு நிமிஷத்திற்குக்கூட என்னிடம் நிற்கவில்லை. முன்னால் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் நீண்டிருந்த வெறிச்சென்ற பாதையை மறுபடியும் நோக்கியபோது என் உடம்பு வழக்கத்திற்கும் அதிகமாக 'வெடவெட'வென்று நடுங்கிற்று.

கால்கள் என்னவோ உணர்ச்சியின்றி நடந்துகொண்டுதான் இருந்தன. ஆனால் மனம் விபரீத உணர்ச்சி அலைகள் மோதத் துடித்துக் கொண்டிருந்தது. 'அவர் அவ்வளவு வருந்தி அழைத்தபோது பேசாமல் திரும்பாமல் இருந்தேனே!' என்ற வரையில் என் ஆலோசனைகள் வந்து விட்டன.

எப்படியோ, பாலத்தில் பாதி தூரம் வந்துவிட்டேன். ஊசி விழுந்தால்கூட ஓசை கேட்குமாறு நிச்சப்தம். பெரிய பம்பாய் நகரமே உறங்கிவிட்டது. ஏன்? உலகமே உறங்கிவிட்டது. நான் மாத்திரம் கொழுப்பேறி நடந்துகொண்டிருந்தேன்.

அந்த நண்பர் கூறியதுபோல, பம்பாயில் அமளி அச்சமயம் சற்றுப் பரவித்தான் இருந்தது. நான் நடந்துகொண்டிருந்த அப் பாலத்தில், இரண்டொரு மாசங்களுக்கு முன்பு ஒரு கத்திக்குத்து நடந்திருந்தது. இப்பொழுது பார்த்து அச் சம்பவம் என் நினைவுக்கு வந்தது. அது சற்று முன்பே நினைவுக்கு வந்திருந்தால் நண்பருடன் திரும்பியிருந்தாலும் இருப்பேன். இனி என்ன செய்வது? வருவது வரட்டுமென்று நடக்க வேண்டியதுதான். இது வரையில் நினைத்திராத தெய்வங்களை யெல்லாம் நினைத்துப் பிரார்த்தித்துக்கொண்டே நடந்தேன்.

அப்பாடா! ஒரு மட்டும் பாலத்தின் கோடி வந்தது. படிகளிலும் இறங்க ஆரம்பித்துவிட்டேன். இன்னும் சில கஜங்கள் சென்றுவிட்

டேனுல் 'பி. பி.' மாதுங்கா ஸ்டேஷன். இனிப் பயம் இல்லை. இங்கிருந்து கத்தினுல்கூட ஸ்டேஷனுக்குக் கேட்காமல் இராது. அங்கே யாராவது இல்லாமலா போய்விடப் போகிருர்கள்?

சிறிது சாதகமான சமாதானம் கிடைத்துவிட்டால், மனசு அசாதாரணத் தைரியம் கொண்டுவிடுகிறது. இல்லாவிட்டால், உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு பாலத்தைத் தாண்டி வந்த நான், இறங்கிக் கொண் டிருந்த படிக்கட்டின் அடியில் குசுகுசுவென்ற பேச்சுக் குரல் கேட்டபோது, அவ்வளவு தைரியத்துடன் நின்று, ''யார் அங்கே?'' என்று கேட்டிருக்க மாட்டேன்.

''நான்தானுங்க; வழிப்போக்கனுங்க'' என்ற பதில் தமிழில் வந்ததும் என் தைரிய நிலை உச்சியை எட்டிற்று.

''யாரது? இப்படி வெளியே வா, வெளிச்சத்திற்கு'' என்று ஒரு வீரனைப்போல அதட்டினேன்.

கறுத்துத் தடித்த, ஆனுல் வலுக் குன்றிய ஓர் ஆண்மகன் பாலத்தடியிலிருந்து வெளியே வந்தான். திடகாத்திரமான சரீரம்; இருந்தாலும் சோர்வுற்றுக் காணப்பட்டான். இடையில் ஓர் அழுக்குத் துணியையன்றி உடம்பை எதுவும் மூடியிருக்கவில்லை. கிராப்புத் தலை எண்ணெய் வாசனை அறியாது மறந்துகொண் டிருந்தது. மீசையும் தாடியும் முகத்தை மறைத்திருந்தாலும், வாலிபப் பருவத்தில் இருப்பவன் என்பதை அறிவுறுத்தின.

''சாமி'' என்று கையெடுத்துக் கும்பிட்டுக்கொண்டு நான் நின்ற ராந்தல் கம்பத்தடிக்கு வந்தான்.

''யாரப்பா நீ? பாலத்தடியில் என்ன செய்கிருய்?'' என்று கேட்டேன்.

''சும்மா இங்கே படுத்து ராப் பொளுதெத் தள்ளிப் போடலாமின்னு வந்தேனுங்க'' என்ருன் அவன்.

''பேச்சுக் குரல் கேட்டதே? கூட யாரங்கே? அவனையும் வெளியே கூப்பிடு; பார்க்கலாம்.''

''அவன் இல்லேங்க; அவளு..அவளு..'' அவன் தயங்கினுன்.

''ஏன் தயங்குகிருய்? இங்கே கூப்பிடு; அந்த அவள் யாரென்று பார்க்கலாம்!''

என் மனசில் லேசாக ஒரு சந்தேக ரேகை எழுந்தது. முன்பு அந்தப் பாலத்தின் எதிரே இருந்த குப்பைமேட்டில், பிச்சை எடுப்பதையே தொழிலாகக் கொண்ட பாமரத் தமிழரின் கூட்டம் ஒன்று நிரந்தரமாக மனைவி குழந்தைகளுடன் குடிசை போட்டுக்கொண்டு தங்கியிருந்தது. சமீப காலத்தில் அந்த வட்டாரத்தில் நடந்த சில திருட்டுக்களுக்கு இந்த மக்களே காரணமாக இருக்கலாமென்று சந்தேகித்த போலீசார் அவர்களை அங்கிருந்து விரட்டிவிட்டார்கள். இப்பொழுது பாலத்தடியில் அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவன்போலத் தோன்றிய ஒருவனைக் கண்டதும், 'இவனும் அத்தகைய செய்கையில் எதிலாவது ஈடுபட இங்கே வந்து பதுங்கியிருப்பானே? கூட இருப்பது பெண் என்ருல், அவன் மனைவியாக இருப்பாள் என்று நினைத்துக்கொண்டு நான் பேசாமல் போய் விடுவேன் என்று சொல்லியிருப்பானே?' எனச் சந்தேகித்தேன்.

ஆனுல், அவன் பாலத்தடிக்குச் சென்று, ''ஏ முத்தம்மா; இந்தா. இப்படிச் செத்தே வந்திட்டுப் போ; யாரோ நம்ம தமிழ் ஐயா வந்திருக்கிருரு, பாரு'' என்று கூப்பிட்டதும், உண்மையாகவே ஒரு வாலிபப்

பெண் வெளியே வந்தாள். ''கும்பிடறேனுங்க'' என்று அவள் என் எதிரில் வந்து நாணிக் கோணி நின்றாள்.

கன்னங்கறேலென்ற இளமையோடிய தேகத்தை முழுவதும் மூட ஆடையின்றி, ஏதோ கிடைத்த கந்தலை அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சுற்றிக்கொண் டிருந்தாள். யௌவனத்தின் சோபை முகத்தில் காணப்பட்டாலும், நீண்ட அயர்வின் சாயலும் அதில் தென்படாமல் இல்லை.

என் மனசில் இருந்த சந்தேகம் இப்பொழுது விலகிப் போயிற்று. அவர்கள் கோலம் என் மனசைக் கனிய வைத்தது. ''இங்கே ஏனப்பா வந்து தங்கியிருக்கிறீர்கள்?'' என்று இரக்கம் தோன்றக் கேட்டேன்.

''நாங்க இந்த ஊருக்குப் புதுசுங்க; பொளுது சாயுறப்போதான் இங்கே வந்தோமுங்க'' என்றான் அவன்.

''நீங்க எந்த ஊரு?''

''எங்க ஊரு திருநெல்வேலியுங்க; ஆனா அதை வுட்டு வந்து ரொம்ப நாளாச்சுங்க.''

''எந்த ஊரில் இவ்வளவு நாளாக இருந்தீர்கள்?''

''கராச்சியிலேங்க.''

'கராச்சி' - அந்த ஒரு வார்த்தை என் மனநிலையை எவ்வளவு தூரம் மாற்றிவிட்டது? சமீபமாக அங்கிருந்து வந்திருந்த நம் அகதிகளில் சிலரைச் சந்தித்துப் பேசிக்கொண் டிருந்தேன். அங்கு அநுபவித்த கஷ்டங்களை அவர்கள் விஸ்தரித்தபோது என் கண்களில் நீர் சுரந்தது. நான் நினைத்தேன்: 'அவர்கள் படித்தவர்கள்; வாக்குவன்மை உடையவர்கள். அவர்களே அத்தகைய கஷ்டங்களை அநுபவித்திருந்தால், என் முன் நிற்பவனைப்போன்ற பேச்சுரிமையற்ற ஜீவன்கள் எவ்வளவு துன்பத்திற்குள்ளாகியிருக்க வேண்டும்?'

''உன் பெயர் என்னப்பா?'' என்று அவனைக் கேட்டேன்.

''சம்முகமுங்க'' என்றான் அவன்.

''அது சரி; ஏதாவது சாப்பிட்டீர்களா இன்று?''

''சாப்பாடேது ஒண்ணேது சாமி? மூணு நாளாக் கொலைப் பட்டினி. எப்படியாவது உயிர் பொளைச்சாப் போதுமின்னு ரெயிலேறிப்புட்டோம். உசிரைக் காப்பாத்திக் கொண்டாந்துட்டோம். இனிமேத்தான் சாமி, சாப்பாட்டைப் பத்தி நினைக்கணும்.''

நான் சட்டைப் பைகளைத் தடவினேன். நல்ல வேளையாக அதில் சிறிது பணம் இருந்தது. நடு இரவாகிவிட்டபோதிலும், ஸ்டேஷன் பிளாட்பாரத்திலிருந்த ஹோட்டல் திறந்தே இருக்கும். 'பாவம்; மூன்று நாட்களாய்ப் பட்டினி!' நினைப்பதற்கே பயமாக இருந்தது. அவர்கள் இருவரையும் அழைத்துக்கொண்டு ஸ்டேஷனுக்கு நடந்தேன்.

பசி ஆறியதும், அவர்கள் மறுபடியும் நன்றி தோன்ற என்னைக் கையெடுத்துக் கும்பிட்டார்கள். ஷண்முகம் அந்த ஸ்திரீயிடம் திரும்பி, ''இந்தா முத்தம்மா; செத்தெ முந்தி என்னமோ சொன்னியே? இப்போ பாத்தியா? அதுதான் நான் சொல்லலே: 'நம்ம மனுசங்க எவுங்களாவது கண்ணிலே பட்டா, நம்ம பசி ஆறிப்போவு'மின்னு; சரியாப் போச்சா?'' என்றான்.

''என் மவராசா, சாமி! புள்ளே குட்டியோடு நூறு வருசம் மவாராசா மாதிரியே வாளணும்!'' என்று என்னை வாழ்த்தினாள் முத்தம்மாள்.

நான் கடிகாரத்தைப் பார்த்தேன். கடைசி ரெயில் வருவதற்கு இன்னும் கால் மணி நேரம் இருந்தது. ஆகவே பேச்சைத் தொடர்ந்தேன்: ''என்னப்பா ஷண்முகம், உங்களுக்குக் குழந்தை எதுவும் இல்லையா?''

அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக்கொண்டனர். ''என்ன புள்ளே, சொல்லிப் போடட்டுமா?'' என்று முத்தம்மாளிடம் கேட்டான் ஷண்முகம்.

''அடி ஆத்தே, என்னைப் பயங்காட்டுறியாங் காட்டியும்? சொல்லிப் போடேன்.''

''ஆமாம்; நம்ம வவுத்துக்குச் சோறு போட்ட மவராசா முன்னுலே சொல்லிப் போடுறேன். அப்புறம் 'ஞுஞுமுஞ்ஞா' இன்னியாளு?''

அவர்கள் பேச்சின் உள்ளர்த்தத்தைத் தெரிந்துகொள்ள முடியாமல் நான் திகைத்தபோது ஷண்முகம் சிறிது வெட்கம் கலந்த தொனியில் சொன்னுன்: ''இல்லீங்க; நாங்க இனிமேத்தான் கலியாணம் கட்டிக் கிடணம்.''

''இவளுக்கு அப்பன் அம்மா யாரும் இல்லையா?''

''இருந்தாங்க சாமி; எல்லாரையும் பாவி துலுக்கங்க பத்து நாளைக்கு முன்னே கொன்னுப்போட்டாங்க.''

''அட பாவமே! அப்படியானுல் இவளை உனக்கு முன்பே தெரியுமா?''

''ம்ஹூம்; தெரியாதுங்க; அன்னிக்குக் கலகத்திலே, இவ ஐயா ஆத்தாவைக் கொன்னுப்போட்டு, இவளைக் குண்டுக்கட்டாக் கட்டித் தூக்கிக்கிட்டுப் போனுங்க. 'குய்யோ முறையோ'ன்னு கத்திக்கிட்டிருந்தா இவ. கலகத்துக்குப் பயந்து நான் ஓடியாந்துக்கிட்டிருந்தேன்; நம்ம பாசை காதிலே விளுந்ததும் பார்த்தேன். இவளை ரோட்டிலே போட்டுட்டுக் கலகக்காரங்க ஒரு கடைக்குள்ளே கொள்ளையடிக்க ஓடிக்கிட்டிருந்தாங்க. அப்பிடியே ஒரு எட்டிலெ அந்தக் கட்டோடே தூக்கிக்கிட்டு ஓடியாந்துட்டேன்.''

''ஆமாங்க; என் உசிரு, என் மானம் எல்லாத்தையும் காப்பாத்தி, இங்கே கூட்டியாந்திட்டு, இப்போ, ஒன்னெ ரயிலேத்தி விட்டுடுறேன், ஊருக்குப் போயுடு இங்கிருரு. இது நாயங்களா?'' என்று முத்தம்மாள் தொடர்ந்தாள்.

''ஏன் புள்ளே? நானு ஒன்னே ரயிலேத்தி விட்டுடுறேனின்னேன்? இந்தாங்க சாமி; இது பேச்சை நம்பாதேங்க. அதுவே என்னை ரயிலேத்தி விட்டுடுன்னிட்டு, இப்பொ எம் மேலே பளியெப் போடுது பாத்திங்களா?''

''பின்னே என்ன சாமி? பசி கொடலெத் திங்குது. ஒரு நேரம் சோத்துக்கு வளியெக் காணோம்; அப்ப வந்து, நீ என்னைக் கலியாணம் கட்டிக்கிடுன்னு கேட்டாரின்னு, என்ன சாமி சொல்லுது?''

''பாத்திங்களா சாமி, பளையபடியும் இது பொய் சொல்லுதே? என்னைக் கலியாணம் கட்டிக்கிடுன்னு இவளைக் கேட்டேன்? 'ஆயுடுச்சு, உசிரெக் காப்பாத்திக்கிட்டோம்; இனிமே பொளைப்புக்கு ஒரு வளி பாக்கணு'மின்னேன். அதுக்கு இவ சொன்னு: 'என்னுலெ நீங்க கயிட்டப் படவேண்டாம். என்னை ஊருக்கு ரயில் ஏத்தி விட்டுடுங்களி'ன்னு. ஊரிலே இவளுக்கு யாருமில்லேன்னு இவதான் ரெயிலிலே வந்துக்கிட்டிருக்கையிலே சொன்னு. 'ஊரிலே யாரு நீ வரலியேன்னு காத்திருக்காங்களாம்? நீ பேசாம என்னோடே இரு. நான் எப்படியாச்சும் ஒரு வேலை தேடிக்கிட்டு ஒன்னைக் காப்பாத்திக்கிடுறேன்.' இதுதானுங்க

நான் சொன்னேன். இதெத்தான், கலியாணம் கட்டிக்கிடக் கேட்டே ளிங்கரு.''

அவர்கள் ஊடல் பேச்சை நான் மிகவும் ரசித்தேன். கதை எழுதும் போது சில சமயங்களில், மிகவும் கஷ்டமான நிலைக்கு வருவதுண்டு; காதலனையும் காதலியையும் சந்திக்கச் செய்துவிடுவேன். பிறகு இருவரும் தங்கள் காதலைச் சொல்லாமல் சொல்லி வெளிப்படுத்த வேண்டும். இந்த இடத்தில் சம்பாஷணையை எப்படிக் கொண்டுபோவது என்று நான் மண்டையை உடைத்துக்கொள்ளுவேன். அதுபோன்ற ஒரு கட்டம் இப்பொழுது என் முன் எளிதாக விடுபட்ட விதத்தை நான் வியந்துகொண்டிருந்தேன்.

ஷண்முகம் தொடர்ந்து கேட்டான்: ''சாமி, எங்கேயாச்சும் ஒரு வேலை பார்த்துக் கொடுக்க மாட்டீங்களா?''

''ஆமாம் சாமி, ஒங்க சோத்தைத் திண்ணு ஒங்க முன்னாலேயே இன்னிக்கு ஒன்ணாயிட்டோம். இனிமேலும், என்னென்னிக்கும் ஒங்க உப்பையே தின்னு ஒன்ணா யிருக்கிறமாதிரி இவருக்கு ஒரு வேலை போட்டுக் குடுத்திடுங்க'' என்று குழைவோடு கெஞ்சினாள் முத்தம்மாள்.

''கராச்சியிலே நீ என்ன வேலை செய்துகொண் டிருந்தாயப்பா?'' என்று ஷண்முகத்தைக் கேட்டேன்.

''மில்லிலே இருந்தேனுங்க. இங்கேயும் எதினாச்சும் அதுபோல ஒரு வேலை கெடச்சிச்சின்னா....''

ரெயில் பிளாட்பாரத்துக்குள் வந்துகொண்டிருந்தது. மேலே பேசிக் கொண்டிருக்க எனக்கு நேரம் இல்லை. பையில் மிகுந்திருந்த பத்து அணாவையும் அவனிடம் கொடுத்து, ''இதை வைத்துக்கொண்டு நாளைக் குப் பகல் பொழுதைத் தள்ளுங்கள். சாயங்காலம் நான் இங்கே வருவேன். அப்பொழுது உனக்குத் தகுந்த வேலை ஏதாவது கிடைக்குமா என்று விசாரித்துக்கொண்டு வருகிறேன்'' என்று கூறி அவர்களை அனுப்பி விட்டு ரெயிலேறினேன்.

மறு நாள் மாலையில் என்னை எதிர்நோக்கிப் பாலத்தடியில் காத்து நின்றான் ஷண்முகம். என்னைக் கண்டதும், ''எதினாச்சும் அகப்பட்டுதுங்களா?'' என்று ஆவலுடன் கேட்டான்.

''வேலை நாம் நினைத்ததும் கிடைத்துவிடாதப்பா; சிநேகிதர்களிடம் சொல்லியிருக்கிறேன். எங்கேயாவது வந்தால் தெரிவிப்பார்கள். நான் உனக்கு வந்து சொல்லுகிறேன்'' என்றேன்.

''எதினாச்சும் பாருங்க சாமி. இத்தனை பெரிய ஊரிலே இருந்துக்கிட்டு, பிச்சை யெடுத்தா பொளைக்கிறதுங்க?''

அவன் ஆண்மகன். சோம்பேறியல்ல. தன் தேகத்தை ஓடாய்த் தேய்க்கவும் தயாராக இருந்தான். ஆனால் சும்மா எவரிடமும் கை நீட்ட விரும்பவில்லை. இருந்தாலும் வெளி உலகமோ, நான் அவனுக்கு வேலை கொடுக்கும்படி கூறிய நண்பர்களோ அதை உணர்ந்துகொள்ளவில்லை. அவர்களுக்கு அரை வயிற்றுக்கேனும் நிரந்தரமாகக் கஞ்சி வார்க்கும் சக்தி எனக்கு இருந்திருந்தால், நானே அவர்களை என்னுடன் அழைத்துப் போயிருப்பேன். அந்த நிலை எனக்கு இல்லையே! கடவுள் ஏழைகளின் வாழ்க்கையை நிலைநிறுத்தும் பணியை ஈவிரக்கமற்ற பணக்காரர்கள் கையில் அல்லவா ஒப்படைத்திருக்கிறார்? அதனால்தானே என்னவோ நான் இரண்டு மாசங்களாக எவ்வளவோ முயற்சி செய்தும் அந்த எளியோனுக்கு ஒரு வேலை தேடிக்கொடுக்க முடியவில்லை.

அந்த இரண்டு மாசங்களிலும் ஒரு வேளைகூட அவன் பிச்சை யெடுத்து வயிற்றை நிரப்பவில்லை. இரண்டொரு தடவை நான் மனம் உவந்து கொடுத்த சிறு பணத்தைக்கூட வாங்க மறுத்துவிட்டான். ''சாமி, நிலையான வேலை கெடைக்கலை யின்னாலும் எங்க வவுத்துக்கு ஏதோ கெடைச்சிக்கிட்டுத்தான் இருக்குதுங்க. ரெயிலடியிலே போய் நிக்கறேன். நாலு பேரு நாலு சாமானைக் கொடுத்து, சுமக்கச் சொல்லு றாங்க. ஏதோ கொஞ்சம் கெடைக்குது. எங்க பாடும் ஒரு வளியாக் களிஞ்சு போயிடுது. ஆனாலும் சாமி, ஒங்க முன்னாலே அன்னிக்கு எங்க சேர்க் கைக்கு ஒரு பாலம் போட்டுக்கிட்டோம். அந்தப் பாலத்தை, இதோ இந்தப் பாலுத்தைப்போலே நெலையா நிறுத்த ஒரு வேலை பார்த்துக் கொடுத்தேங்கன்னா, எங்க தலைக்கொளந்தைக்கு ஒங்க பேரு போட்டிடு வோமுங்க'' என்பான் அவன்.

அவன் வேண்டுகோள் என் உள்ளத்தைத் தொடும். 'இந்தச் சாது வின் பிழைப்புக்கு ஒரு நிரந்தர வழி காட்ட முடியவில்லையே!' என்று நொந்துகொண்டே போவேன்.

ஒரே ஒரு வேளைதான் அவன் பசியை ஆற்றினேன். அந்த நன்றியறி தலை அவன் வெறும் வார்த்தைகளால் மட்டிலுந்தானா காட்டினான்? இல்லை; செய்கையும் அதைத் தொடர்ந்தது. ஒவ்வொரு நாளும் வயிற் றுப் பிழைப்புக்கான தொழிலையும் பொருட்படுத்தாது என் வருகையை எதிர்நோக்கிப் பாலத்தடியில் நிற்பான். என்னைத் தொடர்ந்து பாலத் தின் எதிர்க் கோடி வரையிலும் வருவான். இரவு எவ்வளவு நேரமானா லும் சரி; நான் திரும்ப வரும் வரையில் அதே இடத்தில் காத்திருந்து, என்னைப் பத்திரமாகப் பாலத்தைக் கடக்கச் செய்து, ஸ்டேஷனில் கொண்டு ரெயிலேற்றிவிட்டுத்தான் திரும்புவான்.

''நீ எதற்காக அப்பா, நாலு கூலி வருகிற மாலை நேரத்தை எனக் காகக் காத்திருந்து வீணடிக்கிறாய்?'' என்று கேட்டால், சொல்லுவான்: ''இந்தப் பாலத்தைப்பத்தி ரொம்பக் கேட்டுத் தெரிஞ்சிக்கிட்டேனுங்க. நீங்க ராவுலே தனியே வருகிறீங்க; ஒங்களுக்கு எதினாச்சும் வந்துதுன்னா அது எனக்கு வந்ததுபோல இல்லீங்களா?''

'எனக்காகவே, அவன் வேறு வேலைக்கு யத்தனிக்காது இப்படி அந்தப் பாலத்தடியிலே குடி புகுந்துவிட்டானே?' என்றுகூட எனக்குத் தோன்ற ஆரம்பித்தது. இந்த எண்ணம் தோன்றியதிலிருந்து மனச்சாட்சி என்னை வருத்திக்கொண் டிருந்தது. 'உன்னால் எவ்விதப் பலனையும் அடையாத ஓர் ஏழையின் பிழைப்பை நீ வேண்டுமென்றே கெடுத்து விடுகிறாய்' என்றது இது. இந்த நினைவு நாளுக்கு நாள் வலு அடைந்தது காரணமாகச் சென்ற மூன்று நாட்களாக மாலையில் மாதுங்கா செல்லும் வழக்கத்தைச் சட்டென்று நிறுத்திவிட்டேன்.

ஆனால் மாதுங்கா நண்பர்கள் இதைக் கண்டார்களா? அவர்கள் ஏதேதோ விபரீதக் கற்பனை செய்துகொண்டு எனக்கு டெலிபோன் செய்தவண்ணமாக இருந்தார்கள். ''வீட்டில் மனைவி குழந்தைக ளெல்லாம் சௌக்கியந்தானே? பின் ஏன் உங்களை இரண்டு மூன்று நாட்களாகக் காணவில்லை?'' என்று வியப்புடன் கேட்டார் ஒரு நண்பர்.

இன்னொருவர் அதிலும் ஒரு படி முன்னேறி எனக்கே உடல் கோளாற்றைக் கற்பித்துக் கொண்டார். இவர்கள் எல்லோரையும்விடப் பெரிய போடாகப் போட்டார், என்னை வழக்கமாக வழியனுப்ப வரும் நண்பர். டெலிபோனைக் கையில் எடுத்ததும், ''என்ன ஸார்? ராமுவா பேசுகிறது? இருக்கிறீர்களா?'' என்று கேட்டார் அவர்.

''இல்லாமல் என்ன?'' என்றேன்.

''இல்லை; திங்கட்கிழமை இரவு விடை பெற்றுக்கொண்டவரை வழக்கத்திற்கு மாருக மறுபடி காணவும் இல்லை; தகவலும் இல்லை என்ற போது, நாள்தோறும் தனக்கு நித்திராபங்கத்தை ஏற்படுத்தி வந்த மனிதரைக் கடைசியில் பாலம் தண்டித்துவிட்டதோ என்று நினைத்தேன்'' என்று கூறிச் சிரித்தார்.

விஷயத்தைக் கூறியபோது அவர் இன்னும் கேலியாகச் சிரித்து விட்டு, ''பைத்தியமாயிருக்கிறதே உங்கள் முடிவு? யாரோ ஒரு வழிப் போக்கனுக்காக நண்பர்களோடு அளவளாவுவதையே தியாகம் செய்யத் துணிந்துவிட்டீர்களே! மிக அழகுதான், போங்கள். அதிருக்கட்டும்; இன்று இரவு கட்டாயம் மாதுங்காவுக்கு வாருங்கள். 'முருகதாசர்' என்ெருரு பக்தர் பஜனை ஸமாஜத்திற்கு வந்திருக்கிருர். தெரியுமோ, இல்லையோ? மிகவும் அற்புதமாகப் பாடுகிருர். பக்தி ரசம் பொழிகிறது அவர் பாடல்களிலே. உங்களுக்குப் பக்தி கித்தியெல்லாம் அவ்வளவு சுவாரஸ்யம் கிடையாதென்பது தெரியும். இருந்தாலும் சங்கீதமாவது, நண்பர்களைப் போலப் புறக்கணிக்கத் தக்கதாயிருக்காது என்று நினைக்கிறேன்'' என்று தாக்கினுர்.

ஷண்முகத்திற்கு வேலை தேடிக் கொடுத்து அவனைப் பாலத்தடியிலிருந்து கிளப்பும் வரையில் மாதுங்காவிற்குப் போவதில்லை என்றுதான் சங்கற்பித்துக்கொண் டிருந்தேன். ஆனுல் இந்த நண்பரின் தாக்குதல் என் சங்கற்பத்தையும் ஒருவாறு தாக்கிவிட்டது. அதோடு இலக்கியப்பித்தைப் போலச் சங்கீதப்பித்தும் எனக்கு நிறைய உண்டு. ஆகவே அன்று மாலை காரியாலயத்திலிருந்து போகும் வழியிலே, மாதுங்காவில் இறங்கிவிட நிச்சயித்தேன்.

ரெயில் வரும்போது மற்ெருரு நண்பரைப் பார்த்தேன். ''என்ன ஸார், உங்கள் பாலத்தடி ஆசாமி பெரிய பைத்தியமாயிருப்பான்போலிருக்கிறதே?'' என்ருர் அவர் என்னைக் கண்டதும்.

''ஏன்? என்ன?''

''நீங்கள் முன்பே சொல்லியிருந்தீர்கள் அல்லவா, அவனைப்பற்றி? எங்கள் மில்லில் ஒரு வேலை காலி வந்தது. உங்களுக்கு டெலிபோன் செய்யலாமென்று இருந்தேன். அதற்குள் அவனையே யதேச்சையாக ஸ்டேஷனில் சந்தித்துவிட்டேன். விஷயத்தைச் சொல்லி முந்தாநாள் மில்லுக்கு வரச் சொன்னேன்; வந்து வேலையை ஒப்புக்கொண்டான். அது சரிதான்; ஆனுல் எங்கள் மில்லின் வேலைக்காரர்களுக்கெல்லாம், மில் காம்பவுண்டுக்குள்ளே வாடகையின்றி வீடு கொடுக்கிருர்கள் என்பது உங்களுக்குத் தெரியுமே; அதைச் சொல்லி அவனுக்காக ஒதுக்கி வைத்திருந்த வீட்டின் சாவியைக் கொடுத்தேன். அவன் வீடு வேண்டாமென்று சொல்லிச் சாவியைத் திருப்பித் தந்துவிட்டான். பாலத்தடியில் வசிப்பது தான் அவனுக்குச் சௌகரியமா யிருக்கிறதாம். எப்படி இருக்கிறது இந்தப் பைத்தியம்? உங்களிடம் கேட்டுக்கொண்டு பிறகு சாவியை ஆபீஸில் திருப்பிக் கொடுத்து விடலாமென்று என்னிடமே வைத்துக் கொண் டிருந்தேன்'' என்று அந்த நண்பர் அதை என்னிடம் கொடுத்தார்.

நான் மாதுங்கா ஸ்டேஷனில் இறங்கினேன். ஷண்முகம் வழக்கம் போல் நின்றுகொண் டிருந்தான். ''ஏனுங்க, மூணு நாளா இந்தப் பக்கம் காணுமே?'' என்று கேட்டான்.

அவன் கேள்விக்குப் பதில் சொல்லாமல், ''உனக்கு வேலை கிடைத்து விட்டதாமே?'' என்றேன்.

''எல்லாம் நீங்க காட்டிய கருணையுங்க.''

''அது சரி; ஆனல் நீ ஏன் மில்லுக்காரர்கள் கொடுத்த ஜாகையை வேண்டாமென்று சொல்லிவிட்டாயாம்?''

''அது என்னத்துக்கு எனக்கு? நான் இங்கே யிருந்து பரேலுக்குப் போயுட்டேனின்ன உங்களை எப்படியுங்க தினமும் பார்க்கிறது?''

''என்னைப் பார்க்க வேண்டுமானல் வீட்டு விலாசம் தருகிறேன். விடுமுறை நாட்களில் அங்கே வா; அதற்காகச் சும்மா கிடைக்கிற ஜாகையை வேண்டாமென்கிருயே, பைத்தியக்காரா!''

''அதுக்கில்லீங்க; நான் என் பாட்டைப் பார்த்துக்கிட்டுப் போயிட்டேனின்ன, நடுச் சாமத்திலே இந்தப் பாதையிலே வருகிற உங்களுக்கு யாருங்க துணை வருவாங்க?''

என் சந்தேகம் சரியாகவே இருந்தது. உலகத்தில் நன்றியறிதல் சிறிதேனும் இருந்தது என்ருல் அது அவனைப்போன்ற ஏழைகளிடமே இருந்தது. நேற்று அந்தப் பாலத்தடியிலிருந்து அவர்களைக் கிளப்பி மில் வீட்டுக்கு அனுப்புவதற்குள் எனக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

தங்கள் மூட்டை முடிச்சுகளுடன் பரேலுக்கு ரெயிலேறும்போது ஷண்முகத்தின் கண்களில் நீர் ததும்பிற்று. ''சாமி, இனிமேலாவது ராவு முன்னேரத்திலே வீட்டுக்குத் திரும்பிடுறேனின்னு சொல்லுங்க'' என்றபோது உணர்ச்சிப் பெருக்கால் அவன் தொண்டை கம்மிற்று.

''ஆகட்டும்'' என்று அவனை அனுப்பிவிட்டேன். ஆனலும் இரவு வீடு திரும்புகையில் பழையபடி நடுராத்திரியில் தன்னந்தனியேதான் அந்தப் பாலத்தைக் கடந்துகொண்டிருந்தேன். ★

—ஜனவரி, 1948.

திச. ஜானகிராமன்

# சிலிர்ப்பு

திருச்சிராப்பள்ளியிலிருந்தே புறப்படுகிற வண்டி அது; மாயவரத்தோடு நின்றுவிடும். பத்தரை மணிக்குத் தொடங்கி மூன்று மணியோடு அதன் வாழ்வு முடிந்துவிடும். மதுரை, மானாமதுரை, ஈரோடு என்று எல்லா வண்டிகளையும் அனுப்பிவிட்டுத் திருச்சிராப்பள்ளி ஜங்ஷன் புயல் புகுந்து விளையாடின தோப்பைப்போல, ஒரே வெளிச்சமாக ஹோவென்று வெறிச்சிட்டுக் கிடந்தது. வாழைத்தோலி, ஆரஞ்சுத்தோலி, எச்சில் பொட்டணம், தூங்குமூஞ்சிகள்-இவற்றைத் தவிர ஒன்றையும் காணவில்லை. வண்டி புறப்பட இன்னும் அரைமணிதான் இருக்கிறது. எஞ்சின், கார்டு, ஒன்றும் வரவில்லை. வண்டிக்கு வண்டி ஒரு பரட்டை, அழுக்கு இப்படி ஏதாவது தூங்கிக்கொண்டிருந்தது. பங்களூர் எக்ஸ்பிரஸில் இறங்கி வந்த குடும்பம் ஒன்று, இரண்டாம் வகுப்பில் சாமான்களைப் போட்டுக் காவல் வைத்து எங்கேயோ போய் விட்டது. எக்ஸ்பிரஸ் வண்டி சென்றால் என்ன கூட்டம்! வரும்போது என்ன வரவேற்பு, என்ன உபசாரம்! போகும்போது எவ்வளவு கோலாகலம்! இது நாதியில்லாமல் அழுது வழிந்தது. ஷட்டிலிலும் கேடு கெட்ட ஷட்டில். ரயில் ஜாதியில்கூட ஏழை, பணக்காரன் உண்டுபோல் இருக்கிறது.

நான் தனியாகக் கடைசிப் பெட்டிக்கு முன் பெட்டியில் உட்கார்ந்திருந்தேன். பக்கத்தில் என் பையன் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். தலைமாட்டில் கையிலிருந்து நழுவிய ஆரஞ்சு உருண்டு கிடந்தது. அதைப் பார்க்கும்போது சிரிப்பு வந்தது எனக்கு. பையனைப் பெங்களூரிலிருந்து அழைத்து வருகிறேன். மாமா சம்சாரம் ஊருக்கு வந்திருந்தபோது அவனை அழைத்துப் போயிருந்தாள். நான் காரியமாகப் பெங்களூர் போனவன் அவனை அழைத்துக்கொண்டு வந்தேன். பெங்களூர் ஸிட்டி ஸ்டேஷனில் மாமா ரெயிலேற்றிவிட வந்திருந்தான். ரெயில் புறப்பட ஐந்து நிமிஷம் இருக்கும்போது ஆரஞ்சுப் பழக்காரனைப் பார்த்து, ''ஆரஞ்சுப்பா, ஆரஞ்சுப்பா'' என்று பையன் முனகினான். மாமா காதில் விழாதது போல அந்தண்டை முகத்தைத் திருப்பிக்கொண்டுவிட்டான். மாமாவின் சுபாவம் நன்றாகத் தெரியும் எனக்கு. பையனைச் சுடுகிறாப்போல ஒரு பார்வை பார்த்தேன். அவன் வாய் மூடிக்கொண்டது. ஆனால், வண்டி புறப்பட்டதுதான் தாமதம்: ஆரம்பித்துவிட்டான். ஆறு வயசுக் குழந்தை; எத்தனை நேரந்தான் அடக்கிக் கொண்டிருப்பான்?

''யப்பா, யப்பா!''

''ஏண்டா கண்ணு!''

''பிச்சி மாமாவுக்கு வந்து, தொளாயிர ரூபா சம்பளம். பணக்காரர். இவ்வளவு பணக்காரர்ப்பா!'' என்று கையை ஒரு கட வாத்திய அள

வுக்கு அகற்றி, மோவாயை நீட்டினன்; குறை சொல்லுகிருற் போல.

''அதுக்கு என்ன இப்ப?''

''வந்து, செத்தே முன்னடி ஆரஞ்சு கேட்டேனேல்லியோ, வாங்கிக் குடுக்காம எங்கேயோ பாத்துண்டு நின்னர்ப்பா.''

''அவர் காதிலே விழுந்திருக்காது. விழுந்திருந்தா வாங்கியிருப்பார்.''

''நான் இரைஞ்சுதான்பா சொன்னேன்.''

''பின்னே ஏன் வாங்கிக் கொடுக்கலே?'' கேள்வியை நானே திருப்பிக் கேட்டுவிட்டேன். பையன் திணறினன்.

''வந்துப்பா, வந்து. .பிச்சி மாமாவை வந்து ஒரு மூணு கால் சைக்கிள் வாங்கித் தான்னேன். வந்து, தரேன் தரேன்னு ஏமாத்திப்பிட்டார்ப்பா. .''

''அவர் என்னத்துக்குடா வாங்கணும்? நான் வாங்கித் தரேன்.''

''நீ எப்படி வாங்கித் தருவியாம்?''

''ஏன்?''

''உனக்கு நூறு ரூபாய்தானே சம்பளம்?''

''உனக்கு யார் சொன்ன?''

''வந்து, பிச்சி மாமாதான் சொன்ன.''

''உங்கிட்ட வந்து சொன்னரா, உங்கப்பாவுக்கு நூறு ரூபாதான் சம்பளம்னு?''

''வந்து எங்கிட்ட இல்லேப்பா. மாமி கிட்டச் சொன்ன. நீ வந்து மெட்ராஸ்லேந்து லெட்டர் எழுதியிருந்தே பாரு, புள்ளையார் பூஜை யன்னிக்கி; அப்பச் சொன்ன மாமிகிட்ட. வெறுமெ வெறுமெ நீ மெட்ராஸ் போறியாம். உனக்கு அரணக்கொடி வாங்க முடியாதாம்.''

இது ஏதுடா ஆபத்து!

''சரி, நாழியாச்சு. நீ படுத்துக்கோ.''

''எனக்கு மோட்டார் வாங்கித் தரயா?''

''தரேன்.''

''நெஜ மோட்டார் இல்லே. கீ கொடுக்கிற மோட்டார். இவ்வுளூண்டு இருக்குமே, அது.''

''அதான் அதான். வாங்கித் தரேன்.''

''யப்பா, ஆரஞ்சுப்பா.''

''நீ தூங்கு. திருச்சிணப்பள்ளி வந்தவுடனே வாங்கித் தந்துடறேன்.''

''போப்பா!''

''இப்ப எங்கடா வாங்கறது, ரெயில் போயிண்டிருக்கிறபோது?''

''அப்பன்ன ஒரு கதை சொல்லு.''

''அப்படிக் கேளு. நல்ல கதையாச் சொல்றேன். ஒரே ஒரு ஊரிலே. .'' பாதிக் கதையில் பையன் தூங்கிவிட்டான்.

''குழந்தை நல்ல சமத்து ஸார். ஷ்ரூடா இருக்கான். ஆனா எப்படி 'ஸ்டடி' பண்றான்!'' என்று திடீரென்று எதிரே இருந்தவர் மதிப்புரை வழங்கினார்.

''அதுதான் தலை பெரிசா இருக்கு!'' என்று பையனைப் பார்த்தேன். தலை சற்றுப் பெரிதுதான் அவனுக்கு. எடுப்பான முகம். மூக்கும் முழியுமான முகம். மொழுமொழுவென்று சரீரம். தளதளவென்று தளிரைப் போன்ற தோல். கன்னத்தில் தெரிந்தும் தெரியாமலுமிருந்த பூனை மயிர் ரெயில் வெளிச்சத்தில் மின்னிற்று. தலைமயிர் வளையம் வளையமாக மண்டி அடர்ந்து பாதி நெற்றிவரை விழுந்திருந்தது. அழகில் சேர்க்க வேண்டிய குழந்தைதான். நாளை மத்தியான்னம் அம்மாவைப் பார்க்கத்தான் போகிறான். அதுவரையில்? யாரோ அநாதையைப் பார்ப்பதுபோல் இருந்தது எனக்கு. தாய் பக்கத்தில் இல்லாவிட்டால் குழந்தைக்குச் சோபை ஏது? குழந்தையை இரண்டு மூன்று முறை தடவிக் கொடுத்தேன். கபடமில்லாத இந்தக் குழந்தையை எப்படி ஏமாற்றத் துணிந்தது பிச்சி மாமாவுக்கு? கிருபணன், கிருபணன் என்று வேலைக்குப் போன நாள் முதல் வாங்கின பிரக்கியாதி போதாதா? குழந்தையிடங் கூடவா வாங்க வேண்டும்? சரிதான், போனால் போகிறது என்று விட்டு விடக்கூடிய வலுவும் எனக்கு இல்லை. குழந்தையின் முகத்தைப் பார்க்கும்போதெல்லாம் துன்பம் கிளர்ந்தது. சிறிய அற்பமான நிகழ்ச்சி. ஆனால் எனக்குத் தாங்கவில்லை. பிச்சி மாமா எத்தி எத்திப் பிழைக்கிற வித்தைகள், பிறந்தது முதல் உள்ளும் புறமும் ஒன்றாமல் அவன் நடத்தி வருகிற வாழ்க்கை, பெண்டாட்டியிடங்கூட உண்மையில்லாமல் அவன் குடும்பம் நடத்துகிற 'வெற்றி'-எல்லாம் நினைவில் வந்து, திரண்டு சுழல் வண்டுகளைப் போலச் சுற்றி வந்தன. ராத்திரி முழுவதும் அதே தியானம். தூக்கமே இல்லை.

திருச்சி வந்ததும் ஆரஞ்சு வாங்கினேன். ''யப்பா, இதை ஊருக்குப் போய்த் திங்கறேம்ப்பா. அம்மா உரிச்சுக் கொடுப்பா கையிலே. வாங்கித் திங்கறேம்ப்பா'' என்று கெஞ்சினான்.

''ஆல் ரைட், அப்படியே செய்.''

வண்டி புறப்பட இன்னும் அரை மணி இருந்தது. தாகம் வரட்டிற்று. இறங்கிப் போய்த் தண்ணீர் குடித்துவிட்டு, வெற்றிலை போட்டுக் கொண்டு வந்தேன்.

திரும்பி வரும்போது, யாரோ ஓர் அம்மாள் என் பெட்டியில் ஏறிக்கொண்டிருந்தாள். கூட ஒரு பெண். எதிர்த்த பலகையிலேயே உட்கார்ந்துகொண்டார்கள்.

''இதுதானே மாயவரம் போகிற வண்டி?''

''இதேதான்.''

''எப்பப் புறப்படும்?''

''இன்னும் இருபந்தைந்து நிமிஷம் இருக்கு.''

''நீங்கள் எதுவரையில் போறேள்?''

''நான் கும்பகோணம் போறேன்.''

''உங்க குழந்தையா?''

''ஆமாம்.''

''அசந்து தூங்கறானே.''

''பங்களூரிலிருந்து வரோம். அலுப்பு; தூங்கறான்.''

''நீயும் படுத்துக்கறயா?''

''இல்லே மாமி. தூக்கம் வரலே'' என்றது அந்தப் பெண்.

''கொஞ்சம் தூங்குடி குழந்தை. ராத்திரி முழுக்கப் போயாகணும். நாளைக்கு வேறே, நாளன்னிக்கி வேறே போகணுமே.''

''இல்லே மாமி, அப்புறம் தூங்கறேன்.''

அம்மாளுக்கு நாற்பது வயசு இருக்கும். இரட்டை நாடி. ருமானி மாம்பழம் மாதிரி பளபளவென்று இருந்தாள். காதில் பழைய 'கட்டிங்' கில் ஒரு பெரிய ப்ளூ ஜாக்கர் தோடு. மூக்கில் வைர பேஸரி. கழுத்து நிறைய ஏழெட்டு வடம் சங்கிலி. கையிலும் அப்படியே. மாம்பழ நிறப் பட்டுப் புடைவை. நெற்றியில் பளீரென்று ஒரு மஞ்சள் குங்கும வட்டம். பார்க்கப் பார்க்கக் கண்ணுக்கு நிறைவான தோற்றம். பக்கத்தில் ஒரு தோல் பெட்டி. ஒரு புதுக் குமுட்டி அடுப்பு.

அந்தப் பெண்ணுக்கு எட்டு ஒன்பது வயசு இருக்கும்; மாநிறம்; ஒட்டி உலர்ந்த தேகம்; குச்சி குச்சியாகக் கையும் காலும்; கண்ணை வெளிச்சம் போட்டுப் பார்க்க வேண்டியிருந்தது; எண்ணெய் வழிகிற முகம்; தூங்குகிறாற்போல ஒரு பார்வை. கையில் ஒரு கறுப்பு ரப்பர் வளை; புதிதாக மொடமொடவென்று ஒரு சீட்டிப் பாவாடை; சிவப்புப் பூப்போட்ட வாயில் சட்டை; அதுவும் புதிதுதான்; கழுத்தில் ஒரு பட்டையடித்த கறுப்புக் கண்ணுடி மணிமாலை. பக்கத்தில் ஒரு சீட்டிப் பாவாடை, கொசுவி முறுக்கிச் சுருட்டிக் கிடந்தது. அதிலேயே ஒரு சட்டையும் திணித்திருந்தது.

அந்த அம்மாளுக்கும் பெண்ணுக்கும் என்ன சம்பந்தம்? எப்படிக் கேட்பது?

வண்டி புறப்படுகிற சமயத்திற்கு ஒரு மலைப் பழக்காரன் வந்தான். ஒரு சீப்பு வாங்கி ஒரு பழத்தை அந்தப் பெண்ணிடம் கொடுத்தேன். பதில் பேசாமல் வாங்கிக்கொண்டது.

''சாப்பிடு.''

''சாப்பிடு'' என்று அந்த அம்மாள் சொன்னதும் உரித்து வாயில் போட்டுக்கொண்டது.

''இந்தப் பொண்ணு கல்கத்தாவுக்குப் போறது.''

''கல்கத்தாவுக்கா!''

''ஆமாம், நம்ம பக்கத்து மனுஷா ஒருத்தர் அங்கே பெரிய வேலை யிலே இருக்காராம். அங்கே போறது. ராத்திரி மாயவரத்திலே இருந்து அவாளுக்குத் தெரிஞ்சவா யாரோ போறு. அவாளோட சேர்த்து விடணும். நல்ல பொண்ணு; சாதுவா, சமர்த்தா யிருக்கு.''

பிறகு நானே கேட்க ஆரம்பித்துவிட்டேன்.

''உம் பேரு என்னம்மா?''

''காமாக்ஷின்னு பேரு. குஞ்சுன்னு கூப்பிடுவா.''

''பேஷ், பேஷ்!''

''என்ன பெரிய பேஷாப் போடறேள்?'' என்று அந்த அம்மாள் சிரித்தாள்; ''இவ எப்படி இரண்டு பேரைச் சுமக்கிறுள்ளு!''

எனக்கும் சிரிப்பு வந்தது.

''அதுவும் சரிதான். ஆனுல் நான் நெனச்சது வேறே. எனக்குக் காமாக்ஷின்னு ஒரு தங்கை இருக்கா. இந்தச் சாயலாத்தான் இருப்பா.

நல்ல தெம்பான இடத்துலேதான் குடுத்துது. ஆனா மாப்பிள்ளை ரொம்ப உபகாரி. யாருக்கோ மேலொப்பம் போட்டார், இருபதி னாயிரத்துக்கு. அவன் திடீர்னு வாயைப் பொளந்துட்டான். அவர் குடும்பம் நொடிச்சுப்போயிடுத்து. ரொம்பக் கஷ்டப்பட்டார். இன்னது தான்னு சொல்லி மாளாத கஷ்டம். இப்பத்தான் நாலஞ்சு வருஷமா அவர் ஒரு வேலைன்னு கிடைச்சுப் பிடுங்கலில்லாமெ இருக்கார். அவ கஷ்டம் விடிஞ்சுடுத்து. அவளுக்கு அடுத்தவ இன்னொரு தங்கை. குஞ்சுன்னு பேரு. அவளுக்குக் கல்யாணம் பண்ண அலையா அலைஞ் சோம். கடைசியிலெ எனக்கு அத்தை பொண் ஒருத்தி. அவளுக்குக் குழந்தை இல்லெ. சீக்குக்காரி. தன் புருஷனுக்கே அவளைக் கொடுத் துடணும்னு தலைகீழ நின்னா. அப்படியே பண்ணிட்டார், எங்கப்பா. ஆனா, கல்யாணம் ஆன நாளிலிருந்து அவ பட்ட பாடு நாய் படாது. பத்து வருஷம் கழிச்சு ஒரு புள்ளைக் குழந்தை பிறந்திருக்கு, மூணும் வருஷம். அதுக்குப் பிற்பாடுதான் அந்த வீட்டிலெ அவளும் ஒரு மனு ஷின்னு தலைதூக்கி நடமாடிண்டிருக்கா.''

''ஆயிரம் இருக்கட்டும். பெண்ணிருக்கப் பெண் கொடுக்க லாமோ?''

''என்ன பண்றது? பிராப்தம். இவ பேரைக் கேட்டவுடனே ஞாபகம் வந்துது. ரெண்டு பேரும் ஒரே இடத்திலே அமைஞ்சிருக் கேன்னுதான் பேஷ் போட்டேன்.''

அந்தப் பெண் எப்படி இந்தப் பேச்சை வாங்கிக்கொண்டது என்று புரிந்துகொள்ள முடியவில்லை. அதே தூங்கும் பார்வையுடன் முகத்தில் ஓர் அசைவு, மாறுதல் இல்லாமல் எல்லாவற்றையும் கேட்டுப் பார்த்துக் கொண்டிருந்தது.

''குழந்தை, உனக்கு அப்பா அம்மா இருக்காளா?''

''இருக்கா.''

''அப்பா என்ன பண்றார்?''

''ஒண்ணாவது வாத்தியார்.''

''அக்கா, தங்கை, அண்ணா, தம்பி யெல்லாம் இருக்காளா?''

''இருக்கா...நாலு அக்கா......ரெண்டு அண்ணா, ஒரு தம்பி இருக்கான். அதுக்கப்பறம் ஒரு தங்கை.''

''அக்காவுக்கெல்லாம் கல்யாணம் ஆயிடுத்தா?''

''மூணு பேருக்கு ஆயிடுத்து. ரெண்டாவது அக்கா நாலு வருஷம் முன்னாடி குறைப்பட்டுப் போயிட்டா. எங்களோடேதான் இருக்கா.''

''அண்ணா என்ன பண்றான்?''

''பெரிய அண்ணா கிளப்பிலே வேலை செய்யறான். சின்ன அண்ணா சகிண்ட் பாரம் வாசிக்கிறான்.''

''நீ வாசிக்கலையா?''

''இல்லை, அண்ணா ஒருத்தன்தான் வாசிக்கிறான். எங்களுக்கெல் லாம் சம்பளம் கொடுக்க முடியலே, அப்பாவுக்கு.''

''அதுக்காக நீ வேலைக்குப் போறயாக்கும்?''

''ஆமாம். மத்தியான்னச் சாப்பாட்டுக்கே எல்லாருக்கும் காண மாட்டேங்கறது.''

''உனக்கு என்ன வேலை செய்யத் தெரியும்?''

''பத்துப்பாத்திரம் தேய்ப்பேன். காபி, டீ போடுவேன். இட்லி தோசைக்கு அரைப்பேன். குழம்பு, ரசம் வைக்கத் தெரியும். குழந்தைகளைப் பார்த்துப்பேன். கோலம் போடுவேன். அடுப்பு மெழுகுவேன், வேஷ்டி புடவை தோய்ப்பேன்.''

''புடவை தோப்பியா! உனக்குப் புடவையைத் தூக்க முடியுமோ?''

''நன்னாத் தோய்க்கத் தெரியும்.''

''இதெல்லாம் எங்கே கத்துண்டே?''

''ராமநாதையர்னு ஒரு ஜட்ஜி இருக்கார். அவாத்துலேதான் கத்துண்டேன்.''

''ம்ஹ்ம், ஸர்விஸ் ஆனவளா? அவாத்துலெ எத்தனை வருஷம் இருந்தே?''

''மூணு வருஷமா இருக்கேன்.''

''மூணு வருஷமா? உனக்கு என்ன வயசாறது?''

''இந்த ஆவணிக்கு ஒம்பது முடிஞ்சு பத்தாவது நடக்கிறது.''

''ஏழு வயசிலேயே உனக்கு வேலை கிடைச்சுட்டுது; தேவலே. என்ன சம்பளம் கொடுப்பா?''

''சம்பளம்னு கிடையாது. ரெண்டு வேளை சாப்பாடு போடுவா. தீபாவளிக்குப் பாவாடை சட்டை ஒரு ஜோடி எடுத்துக் கொடுப்பா.''

''இந்தச் சட்டை யார் வாங்கிக் கொடுத்தா?''

''அவாதான்.''

''கோலம் போட்டு, அடுப்பு மெழுகி, புடவை தோய்ச்சு, குழந்தையைப் பார்த்துண்டு, தோசைக்கு அரைச்சு எல்லாம் பண்ணினத்துக்கு இந்த ஆறுணச் சீட்டிதான் கிடைச்சுதா அவாளுக்கு! கழிசலாப் பார்த்துப் பொறுக்கி எடுத்துக் கொடுத்திருக்காளே.''

''........''

''நீ நல்லதா வாங்கிக் கொடுக்கச் சொல்லிக் கேட்கப்படாதோ?''

''........''

''ஜட்ஜ் வீட்டிலே சாப்பிட்டுண்டு இருந்தேங்கறே. உன் உடம்பைப் பார்த்தா அப்படித் தெரியலயே! பஞ்சத்திலே அடிபட்டாப்பலே, கண்ணு கின்னெல்லாம் உள்ளே போயி, ஒட்டி உலர்ந்து, நாய் பிடுங்கினாப்போல இருக்கியே.''

''பெரிய மனுஷாள்ளாம் தனி ரகம்னு உங்களுக்குத் தெரியாது போல் இருக்கு. அவா வத்தல் குழம்பு, சுட்ட அப்பளாம், மிளகு ரசம் இதைத்தான் பாதி நாள் சாப்பிடுவா. ராத்திரி, பருப்புத் துவையலும் ரசமுந்தான் இருக்கும். ஆனா அவா உடம்பு என்னமோ நிகுநிகுன்னு தான் இருக்கும். அது தனி உடம்பு நம்மைப் போல அன்னாடங் காய்ச்சிகளுக்குத்தான் இதெல்லாம் ஒத்துக்காது. ரெண்டு நாளைக்கு இப்படிச் சாப்பிட்டா, வாய் வெந்து, கண் குழிஞ்சு சோர்ந்து சோர்ந்து வரும்'' என்று அம்மாள் தன்னையும் என்னோடு சேர்த்துப் பேசினாள். மரியாதைக்குத்தான் அப்படிச் சொல்லியிருக்க வேண்டும். உடனே ஏதோ தவறாகப் பேசிவிட்டவள் போல, ''நான் என்னென்னவோ பேசிண்டிருக்கேனே; நீங்க என்ன பண்ணிண்டிருக்கேள்?'' என்று கேட்டாள்.

''பயப்படாதீங்கோ, நானும் அன்னுடங் காய்ச்சிதான். தாலுகாவிலே குமாஸ்தா.''

தஞ்சாவூர் ஸ்டேஷன் வந்துகொண்டிருந்தது.

''துண்டைப் போட்டுட்டுப் போறேன். கொஞ்சம் இடத்தைப் பார்த்துக்கோங்கோ; சாப்பிட்டுட்டு, குழந்தைக்கும் சாப்பாடு பண்ணி அழைச்சிண்டு வந்திடறேன்.''

''இன்னும் சாப்பிடலையா நீங்க? ஏம்மா, நீ என்ன சாப்பிட்டே காலமே?''

''பழையது.''

''எங்கே?''

''ஜட்ஜியாத்துலே!''

''பார்த்தேளா, பெரிய மனுஷான்னு இப்படின்னு இருக்கணும்! ஊருக்குப் போற குழந்தைக்கு, மூணு வருஷம் வீட்டோட கிடந்து உழைச்சிண்டிருந்த பொண்ணுக்கு கொஞ்சம் நல்ல சாப்பாடாப் போட்டு அனுப்பிச்சாத்தான் என்ன? ஒன்பதேகால் மணிக்கு, நான் புறப்படறபோது கொண்டுவிட்டா. அதுக்குள்ளே சமையல் பண்ண முடியாதா என்ன? நல்ல குளிர்ந்த மனசு! பழையது சாப்பிடுற ஆசாரம் அத்துப்போயிடப் போறதேன்னு கவலைப்பட்டுண்டு. போட்டாபோல் இருக்கு. ஏன் குழந்தை, அவாத்துலே யாராவது பழையது சாப்பிடுவாளோ?''

''நான்தான் சாப்பிடுவேன்.''

''ம்..ஹ்ம்; சரி. இப்பப் பசிக்கிறதோ உனக்கு?''

''இல்லை.''

''ஏதாவது சாப்பிடும்மா.''

''சரி மாமி.''

''நீங்க ஒரு பொட்டலம் சாம்பார் சாதமும் ஒரு தயிர் சாதமும் வாங்கிண்டு வாங்கோளேன்.''

''நானே அழைச்சிண்டு போயிட்டு வரேனே.''

''ரொம்ப நல்லதாப் போச்சு. இந்தாருங்கோ.''

''என்னத்துக்குக் காசு? நான் கொடுக்கிறேன்.''

''வாண்டாம்னு நீங்க எப்படிச் சொல்ல முடியும்? நான்னு அவளை அழைச்சிண்டு வரேன்!''

தர்ம சங்கடமாக இருந்தது. வாங்கிக்கொண்டேன். பையனை எழுப்பினேன். அவசரமாகக் கூட்டத்தில் புகுந்து இரண்டையும் இழுத்துச் சென்றேன்.

''இது யாரப்பா?''

''இந்தப் பொண்ணு மாயவரம் போயிட்டுக் கல்கத்தாவுக்குப் போறா. உன்னோடே இவளும் சாப்பிடுறதுக்கு வரா.''

இரண்டு அநாதைகளும் சாப்பிடும்போது எனக்கு இனம் தெரியாத இரக்கம் பிறந்தது. தாயை விட்டுப் பிரிந்த அநாதைகள்! ஆனால் எவ்வளவு வித்தியாசம்! ஓர் அநாதை இன்னும் இரண்டு மணி நேரத்தில் தாயின் மடியில் துள்ளப் போகிறது. இன்னொன்று தாயிடமிருந்து தூர தூரப் போய்க்கொண்டே இருக்கப் போகிறது.

''ஸ்ஸ்....அப்பா, அப்பா!'' என்று பையன் வீரிட்டான். மிளகாய்!

''தண்ணியைக் குடி. ம்..ம்.''

அந்தப் பெண் உடனே எழுந்துபோய்க் கவுண்டரிலிருந்து கை நிறையச் சர்க்கரையை அள்ளி அவனிடம் கொடுத்தது.

சற்றுக் கழித்து, ''அம்பி, தயிர் சாதம் கட்டி கட்டியாக இருக்கு. இரு. பிசைந்து தரேன். அப்புறம் சாப்பிடலாம்'' என்று சாப்பிடுவதை விட்டுக் கையை அலம்பி வந்து ரெயில்வே சாதத்தை நசுக்கிப் பிசைந்து பக்குவப்படுத்திக் கொடுத்தது.

அவள் பிசைவதைப் பார்த்துப் பையன் என் பக்கம் திரும்பிப் புன் சிரிப்புச் சிரித்தான்.

''ஏண்டா சிரிக்கிறே?''

''அவ பிசைஞ்சு கொடுக்கிருப்பா!'' அதற்குமேல் அவனுக்குச் சொல்லத் தெரியவில்லை.

அவனுக்குக் கையலம்பி, வாய் துடைத்து விட்டதும் அவள்தான்.

''இந்தா, ஜலம் குடி'' என்று அவனுக்குத் தண்ணீர் கொடுத்தாள்.

''வாண்டாம்.''

''ஜலம் குடிக்காட்டா ஜீரணமாகாது. இதைக் குடிச்சிடு.''

பாடாகப் படுத்துகிறவன், பதில் பேசாமல் வாங்கிக் குடித்து விட்டான். ஏதோ வருஷக்கணக்கில் பழகிவிட்டதுபோல, அவனைக் கையைப் பிடித்து ஜாக்கிரதையாக அழைத்துக்கொண்டு வந்தது அந்தப் பெண். அவனும் அவள் இழுத்த இழுப்புக்கெல்லாம் வந்துகொண்டிருந்தான்.

''கல்கத்தாவுக்குப் போறேங்கிறியே. அவாளைத் தெரியுமோ?''

''தெரியாது மாமா... பெரிய வேலையிலே இருக்காராம் அவர். மூவாயிர ரூபாய் சம்பளமாம். குழந்தையை வச்சுக்கணுமாம். அதுக்குத்தான் என்னைக் கூப்பிட்டிருக்கா.''

எந்தக் குழந்தையையோ பார்த்துக்கொள்ள எங்கிருந்தோ ஒரு குழந்தை போகிறது. கண்காணாத தேசத்திற்கு ஒரு தாய் அந்தக் குழந்தையை அனுப்புகிருள். அதுவும் ஒரு பாவாடையைச் சுருட்டிக் கொண்டு கிளம்பிவிட்டது.

''ரொம்பச் சமர்த்தும்மா இந்தக் குழந்தை'' என்றேன் அம்மாளிடம்.

''நாதனில்லாட்டாச் சமர்த்துத் தானு வந்துடறது. ஒட்டி ஒட்டிண்டு பழகறது அது. கல்கத்தாவுக்குப் போகாட்டால் நானே இதை வச்சிண்டிருப்பேன். பாருங்களேன். பசிக்கிறது கிசிக்கிறதுன்னு நாமாக் கேட்கிற வரையில் வாயைத் திறந்ததோ? என்னமோ பகவான்தான் காப்பாத்தணும்.''

பையன் ஆரஞ்சை மறுபடியும் கையில் எடுத்து வைத்துக் கொண்டான்.

''ஏண்டா குழந்தை, உரிச்சுத் தரட்டுமாடா?''' என்ருள் அம்மாள்.

''வாண்டாம், ஊரிலே போய் அம்மாவை உரிச்சுக் குடுக்கச் சொல்லப் போறேன்.''

''நானும் அம்மாதாண்டா.''

பையன் சிரித்து மழுப்பிவிட்டான். ஒரு நிமிஷமாயிற்று. ''உனக்கென்ன வயசு?'' என்று திடீரென்று பையன் குஞ்சுவைப் பார்த்து ஒரு கேள்வி போட்டான்.

''பத்து.''

''பத்து வயசா? அப்பன்னு நீ வந்து அஞ்சாவது படிக்கிறியா?'' என்று விரலை எண்ணிக்கொண்டே கேட்டான்.

''இல்லை.''

''ஏண்டா, பத்து வயசுன்னு அஞ்சாவது படிக்கணுமா?''

''ஆமாம்ப்பா. எனக்கு ஆறு வயசு. ஒண்ணாவது படிக்கிறேன். ஆறு ஏழு எட்டு ஒன்பது பத்து. அவ அஞ்சாவது.''

''அவ படிக்கலைடா.''

''நீ படிக்கலை?''

''வீட்டிலேயே வாசிக்கிறியா?''

''ம்ஹ்ம்.''

''அவ கல்கத்தாவுக்குப் போருடா. அதான் படிக்கலை.''

''அங்க எதுக்குப் போருளாம்?''

''வேலை பாக்கப் போரு.''

''போப்பா..ஏண்டி, நீ வேலை பார்க்கப் போறியா?''

''ஆமாம்.''

பையன் அவளையே சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தான். அவனுக்கு நம்பிக்கை வரவில்லை. மீண்டும் கேட்டான், ''உனக்கு சைகிள் விடத் தெரியுமா?''

அந்தப் பெண் வாய்விட்டுச் சிரித்தது. முதல் முதலில் அது சிரித்ததே அப்போதுதான்.

''எனக்கு எப்படிச் சைகிள் விடத் தெரியும்? தெரியாது.''

''அப்படீன்னு எப்படி வேலைக்குப் போவியாம்?''

''நடந்து போவேன்.''

மறுபடியும் அவளைப் பார்த்து யோசித்துக்கொண்டிருந்தான் பையன். அவன் அப்பா சைகிளில் வேலைக்குப் போகும்போது அவள் மட்டும் எப்படி நடந்து போக முடியும் என்று அவனுக்குப் புரியவில்லை. இரண்டு குழந்தைகளும் வயல் வெளிகளைப் பார்த்துக்கொண்டு வண்டியின் வேகத்தை ரசித்துக்கொண்டிருந்தன.

''இந்தப் பொண்ணு யாரை நம்பி இப்படிப் போறது?..போகிற இடம் எப்படி இருக்கோ!'' என்று கேட்டேன்.

''இந்த ஜட்ஜுக்கு ஒன்றுவிட்ட மச்சினராம் அவர். மூவாயிர ரூபாய் சம்பளம் வாங்கருராம், ஏதோ கம்பெனியிலெ. நம்ம பக்கத்துக் குழந்தைன்னு விசுவாசமாத்தான் இருப்பா. என்னதான் இருக்கட்டுமே, நல்ல சாப்பாடு, துணிமணியெல்லாம் கொடுக்கட்டும்; எத்தனை பண்ணினாலும் அது பிறத்தியார் வீட்டுக் குழந்தை, வேலைக்கு வந்திருக்கிற குழந்தைங்கிற நினைவு போயிடுமா அவாளுக்கு? இதுதான் அவாளைத் தாயார் தோப்பனார்னு நெனச்சுக்க முடியுமோ?..ஆனா இது ஒட்டி ஒட்டிண்டு வித்யாசமில்லாம பழகுகிறதைப் பார்த்தா எங்கேயும் சமாளிச்

சுண்டுடும்போல்தான் இருக்கு. இருந்தாலும் பெத்தவா கிட்ட இருக்கிற மாதிரி இருக்க முடியுமா, ஸ்வாமி? நீங்களே சொல்லுங்கோ.''

எனக்கு வயிற்றைக் கலக்கிற்று. நானே முகம் தெரியாத, உற்ருர் உறவினர் இல்லாத புது ஊருக்குப் போவதுபோல ஒரு சூனியமும் பயமும் என்னைப் பற்றிக்கொண்டன.

''கடவுள் இதையுந்தான் காப்பாத்தப் போருன். இல்லாவிட்டால் மனிதர்களை நம்பியா பெத்தவர்கள் இதை விட்டுவிட்டிருக்கிருர்கள்?'' என்றேன்.

''கடவுள்தான் காப்பாத்தணும். வேறே என்ன சொல்லத் தெரியறது நமக்கு? சுத்திச் சுத்தி அதுக்குத்தான் வந்துடரோம். ஆளு இப்படி அனுப்பும்படியான நிலைக்கு ஒரு குடும்பம் வந்துடுத்தே. அது எப்படி ஏற்பட்டதுன்னு யார் யோசிக்கருா? அதுக்கு என்ன பரிகாரம் தேடறது? அந்த வாத்தியாரோட குழந்தைகளுக்கெல்லாம் தலைக்கு இத்தனைன்னு பள்ளிக்கூடம் வச்சிருக்கிறவன் படி போட்டிருந்தான்னு, இப்படிக் கண் காணுத தேசத்துக்கு இது போகுமா?''

''அப்புறம் ஜட்ஜு வீட்டுக் குழந்தைகளை யாரு பாத்துப்பா?''

''அதுவும் சரிதான்.''

''வீட்டுக்கு வீடு வாசல் படி. கொடுக்கிறவனும் வாத்தியார் மாதிரி ஆண்டியோ என்னமோ?'' என்றேன்.

ஒன்றும் புரியவில்லை.

குழந்தையைப் பார்த்து எல்லார் நெஞ்சமும் இளகிற்று. பக்கத்தில் தஞ்சாவூர், ஐயம்பேட்டை என்று நடுவில் ஏறி உட்கார்ந்து கொண்டவர்களுக்கு அரைகுறையாகக் கேட்டாலும், நெஞ்சு இளகிற்று. அம்மாள் உட்கார்ந்திருந்த பலகையின் கோடியில் உட்கார்ந்திருந்தவர் - ராவ்ஜி மாதிரி இருந்தது - உதட்டைக் கடித்து ஜன்னலுக்கு வெளியே தலையைத் திருப்பிக்கொண்டார். நெஞ்சைக் குமுறி வந்த வேதனையை அடக்கிக் கொண்டு தைரியசாலியாக அவர் பட்ட பாடு நன்ருகத் தெரிந்தது.

கும்பகோணம் வந்துவிட்டது.

''போயிட்டு வறேம்மா, குழந்தே. போயிட்டு வரட்டுமா?'' என்று ஒரு ரூபாயை அதன் கையில் வைத்தேன்.

''நீங்க எதுக்காகக் கொடுக்கறேள்?'' என்று அம்மாள் தடுத்தாள்.

''எனக்கும் பாத்யமுண்டு. நீங்களும் அழச்சிண்டுதானே போறேள்? இது வாத்தியார் குழந்தைதானே? உங்க குழந்தை யில்லையே! நீங்க கொண்டாடற பாத்யம் எனக்கும் உண்டும்மா. நான் என்ன செய்யறது? எனக்கு என்னமோ கொடுக்கணும்போல் இருக்கு. எனக்கும் இதுக்கு மேலே வக்கில்லை.''

''ஹ்ம்'' என்று இரட்டைநாடிச் சரீரத்தில் ஒரு பெருமூச்சு வந்தது. ''வாங்கிக்கோடியம்மா. உங்களுக்கு ஒரு குறைவும் வராது, ஸ்வாமி'' என்ருள் அம்மாள்.

''யப்பா, இதைக் கொடுத்துட்டு வரேம்பா'' என்று என் பையன் ஆரஞ்சைக் காண்பித்தான்.

''கொடேண்டா, கேட்பானேன்?''

''வாண்டாண்டா, கண்ணு: குழந்தை, பாவம்! அம்மா உரிச்சுக் குடுக்கணும்னு சொல்லிண்டிருந்தது.''

''யப்பா..வாங்கிக்கச் சொல்லுப்பா'' என்று பையன் சிணுங்கினான்.

"வாங்கிக்கோம்மா."

"பெண் வாங்கிக்கொண்டது.

"ஸ்வாமி, நல்ல உத்தமமான பிள்ளையைப் பெத்திருக்கேள். வாடா கண்ணு. எனக்கு ஒரு முத்தம் கொடுத்துட்டுப் போ" என்று அம்மாள் அழைத்தாள். பையன் கொடுத்துவிட்டு ஓடி வந்தான்.

என் மெய் சிலிர்த்தது. முகத்தைக் கூடிய வரையில் யாரும் பார்க்காமல் அப்பால் திருப்பிக்கொண்டு கீழே இறங்கி அவனைத் தூக்கிக் கொண்டு நடந்தேன். அவனுக்கு நடக்கவா தெரியாது? எனக்கு என்னவோ அவனை வாரி அணைத்துக்கொள்ள வேண்டும் என்று உடம்பு பறந்தது. தூக்கி எடுத்துத் தழுவிக்கொண்டே போனேன். உள்ளம் பொங்கி வழிந்தது. அன்பையே, சச்சிதானந்தத்தையே கட்டித் தழுவுகிற ஆனந்தம் அது. ★

—நவம்பர், 1953

'ஆர்வி'

# கண்கள்

ஆயிஸா பீவிக்கு நல்ல கட்டு மஸ்தான உடம்பு. அவளுக்கு இருபத்தெட்டு வயசாகிறதென்று யாரும் சொல்லமாட்டார்கள். பெண்களுக்குத் தன் வயசைக் குறைத்துச் சொல்லிக் கொள்வதுதான் வழக்கமாமே. ஆனால் ஆயிஸாவுக்கு ஐந்தாறு வயசைக் குறைத்துத்தான் சொல்ல வேண்டியிருக்கும்.

பதினெட்டு வயசில் அவளுக்குக் கல்யாணம் ஆயிற்று. அது முதல் இன்று வரையில் அவள் உருவத்திலோ தோற்றத்திலோ மாறுதலே உண்டாகவில்லை. வாழ்க்கையில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டிருந்தாலும் அவள் அன்று பார்த்த மாதிரியே இன்றும் இருந்தாள். நிறத்தில் ஆயிஸா பாரஸீகத்து ரோஜாவல்ல; அராபியப் பாலையிலே பழுத்த பேரீச்சையின் நிறந்தான். அதாவது மாநிறத்திலும் சற்று மட்டான நிறந்தான். இருந்தாலும் நீண்ட கண்களும் வண்டான விழிகளும் அவளுடைய தளதளப்பான மேனிக்கு அழகு முத்திரை வைத்திருந்தன. தாம்போடு துள்ளி ஓடும் ஆட்டிளங் குட்டியை ஒரு தாவில் லாவிப் பிடித்துவிடுவாள். குட்டிச்சுவர் மேலே ஏறிக் காலை நீட்டிக்கொண்டு படுத்து, சொகுஸாக அசைபோடும் வெள்ளாட்டைக் குண்டுக்கட்டாக அப்படியே தூக்கி வந்துவிடுவாள். ஆட்டுச் சுழிபோல நெற்றியிலே காதோரம் இரண்டு சுருள் வந்து காற்றில் பறந்து ஆடும். சுரைக்கொடி படர்ந்த வீட்டையும் அதன் சாரத்தில் கட்டியிருந்த கடையையும் கீற்று வைத்து மறைத்திருக்கும் பின்புறத்துத் தோட்டத்தையும் மளிகைக் கடைக் கட்டெறும்பைப் போலச் சுற்றிச் சுற்றி வருவாள். சும்மா போவாள். வேலி மறைக்கும் அந்தக் கடையையும் கல்லாப்பெட்டியடியையும் சந்தடி கேட்டால் எட்டிப் பார்ப்பாள். ஏழெட்டு ஹார்லிக்ஸ் பாட்டிலுக்கும் கள்ளிப்பெட்டிகளுக்கும் காவலாக ஹனீபா உட்கார்ந்திருப்பான். சில புட்டிகள் அழுக்கடைந்து காலியாகக் கிடைக்கும். சிலவற்றில் சோம்பும் முருங்கைப்பட்டையும் அடைத்திருக்கும். பூண்டும் தனியாவும், பலப்பமும் துவர்பாக்கும், மிளகாயும் புகையிலைத் தழையும் வெங்காயமும் கடையிலிருக்கும் சாமான்கள். பயறும் இருக்கும்; பருப்பும் கொஞ்சம் இருக்கும். எல்லாமே தட்டுமுட்டுக்குத்தான். ஹனீபாகூட அப்படித்தான். புருஷத்துணை இல்லாத ஆயிஸா, 'சாண் பிள்ளையானாலும் ஆண்பிள்ளை' என்று அவனை அழைத்து வந்து, கடைக்கு என்று விட்டிருந்தாள்.

நோஞ்சல் பூனை போல ஆறு வயசில் வந்த ஹனீபா, இந்த எட்டு வருஷத்தில் கொழுகொழுவென்று வளர்ந்துவிட்டான். ஆயிஸாவுக்கு அவனைப் பார்க்கும் போதெல்லாம் ஒரு பெருமை; ஆறுதல். ஊட்டி வளர்த்த பெருமை; உள்ளூற அரித்து வந்த உள்ளத்துக்கு மருந்தாக அவன் இருப்பதில் ஆறுதல்.

காதர் பாட்சா மவுத்தானபோதுதான் இந்தப் பையன் அவளிடம் வந்து சேர்ந்தான். அவள் கணவன் முரண்டுத்தனமாகச் சிங்கப்பூருக்குச் சவருபோன மறு வாரமே, கப்பல் ஏறின சேதி கேட்டதுமே, அவள் தந்தை காதர் பாட்சா கண்ணை மூடிவிட்டார். இது எட்டு வருஷத்துக் கதை. இந்த எட்டு வருஷத்தையும் எப்படியோ கழித்துவிட்டாள். இனித்தான் அவளுக்குக் கஷ்டமாக இருக்கும் போலிருந்தது.

ஹனீபா தன் தாய் வீட்டுக்குப் போகப்போகிறான். தந்தையை இழந்த அவன், தாய்க்குத் துணையாக இருக்க வேண்டியவன். அவனைப் பார்க்கும்போதெல்லாம் அவளுக்குப் பெற்ற தாயைவிட, துக்கம் பீரிட்டுக்கொண்டு வந்தது.

ஹனீபா ஊருக்குப் போகப் பஸ் ஏறினபோதுதான் அவள் துள்ளலுக்கும் சுறுசுறுப்புக்கும் துவட்சி கண்டது. சுற்றி வந்த விழிகளிலே மறைந்து ஒளிந்திருந்த சோகம், கண்ணீராய்த் திரண்டு உருண்டு விழுந்தது. உடம்பு இளைக்காவிட்டாலும் உருக்குலைந்து போயிருந்த உள்ளம் இந்தப் பிரிவுத் துன்பத்தைத் தாளாமல் சோர்ந்து விழுந்துவிட்டது. ஆயிஸா அன்று கடையை ஹர்த்தால் செய்துவிட்டாள்.

''என்ன பீவி! கடையைக் குடுத்திடப் போறியா?'' என்று வாண்டையார் வீட்டு ஆச்சி வந்து விநயம் இன்றி விசாரிக்கத் தொடங்கிவிட்டாள். ஆச்சிக்கு வீட்டிலே வேலையில்லை. சீசனுக்குத் தகுந்த வேலைதான் அவளுக்கு. மாதத்துக்கு ரூபாய் மூன்ருவது கொண்டு வந்து கொடுத்தால்தான் மருமகளிடம் அவளுக்கு ஒருவேளைச் சோருவது உண்டு. அதற்காகச் சாலையிலே திருட்டுப் புளியம்பழம் பொறுக்குவது, மட்டை பொறுக்குவது, சாணம் தட்டி விற்பது என்று ஏதாவது செய்துகொண்டே இருப்பாள். இப்படியே சிறுவாடு சேர்த்து, மருமகளுக்குத் தெரியாமல் அவள் பணம் பண்ணியிருந்தாள். அலைந்து ஆடித் திரிவது எத்தனை நாள்? ஆயிஸா பீவியின் கடைமேலே அவளுக்கு எப்போதும் ஒரு கண் இருந்தது. ஹனீபா ஊருக்குப் போனதில் ஆச்சிக்குப் பேரானந்தமேதான்.

ஆயிஸா எரிச்சலோடு, ''தம்பி எப்பப் பஸ் ஏறப்போருன்னு வந்திகளா? காத்துக்கிட்டு இருந்தாப்போல வந்திட்டிகளே?'' என்ருள்.

''இல்லே. ஒரு நல்ல வெலையா வச்சுக் குடுத்திடப்போறியோன்னு தருமுத் தேவரு விசாரிச்சுக்கிட்டு இருந்தாரு. அதனுலேதான் நான் கேட்டேன். இல்லாட்டி எனக்கென்ன பைத்தியமா?'' என்ருள் ஆச்சி.

ஆயிஸாவுக்கு அது பொய்யான பேச்சு என்று தெரியும். அதனுல் அவள் துக்கத்திலும் குறும்பாக, ''எம்மாம் பணம் வச்சிருக்கிறிய, ஆச்சி?'' என்று கேட்டாள்.

ஆச்சிக்கு உயிர்நிலை ஒடுங்கிவிட்டது. அவள் பேச்சைச் சட்டெனத் திருப்பி, ''முந்தாநாளு வந்துதே. கப்பலு காயிதமா?'' என்ருள்.

''ஆமா . . மாம்'' என்ருள் ஆயிஸா.

''அப்துல்லு வருராமா?''

''ஆமா ஆச்சி, ஆமா.''

ஹனீபாவை உடனே அனுப்பச் சொல்லி அவன் தாய் எழுதியிருந்த கடிதந்தான் அது. ஆனுல் அக்கப்போர் ஆச்சியின் வாயை அடக்க ஆயிஸா வேண்டுமென்றே மாற்றிச் சொன்னுள்.

''பாத்தியா? கோனுரு வூட்டுக் கோயிந்தி சொல்லிச்சு, 'இருக்காது'ன்னு. இப்பல்ல புரியுது வெசயம்! இனிமே கடைகண்ணி, பழையபடி கண்ணுராக்கு வேலை..அப்துலுக்கு, சம்பாரிக்கச் சொல்லியா தாரணும்? அடீம்மா! அதன் தம்பி அஜீஸ்ஸுன்னுலும் ஒரு போக்கு. மொத்தனமா

இருப்பான். அப்துல்லு காரியக்காரனுச்சே. சவருபோன பணத்தைச் சாக்கிலேதான் கட்டி எடுத்தாருவான்.''

பணம் என்ற நினைப்பு வந்ததுமே ஆச்சியின் வாய் பிளப்பதை ஆயிஸா பார்த்துக்கொண்டேயிருந்தாள். அந்தப் பொக்கை வாயினுள்ளே, அவளுக்கு ஆச்சியின் பணத்தாசை மட்டும் தெரியவில்லை. வேறு உலகமே தெரிந்தது. அவள் கணவன் அப்துலும் அதனுள் உட்கார்ந்து வாயைப் பிளந்துகொண்டிருந்தான். பணத்தாசை பிடித்துத்தானே குருத்துப்போல ஒருத்தியை வாடி வதங்கப் போட்டுப் போய் விட்டான்?

ஆயிஸாவுக்கு அந்த ஆச்சியைப் பார்க்கவே பிடிக்கவில்லை. ''போங்க ஆச்சி, வேலையிருந்தாப் பாருங்க!'' என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள்ளே நுழைந்தாள். அங்கே எல்லாம் வெறிச்சோடிக் கிடந்தது.

ஆயிஸா தன்னுடைய கயிற்றுக் கட்டிலிலே சாய்ந்து படுத்துக் கொண்டாள். காலின் மூலையிலே டக்கென்று தலை இடித்துக்கொண்டது. அவ்விதம் இடித்துக்கொண்ட அதிர்ச்சியிலே அவள் நினைவுக் கோட்டையின் திட்டி வாசல் திறந்துகொண்டதுபோல் இருந்தது.

இந்தக் கட்டிலில்தான் அவளுக்கு முதல்முதல் ஆண்டவனின் வஞ்சனை வெட்ட வெளிச்சமாயிற்று.

இந்தக் கட்டிலில்தான் முதல்முதல் அப்துல் வந்து உட்கார்ந்தான். ''இல்லே, இல்லே. தவறு, தவறு!'' ஆயிஸா பாக்கைக் கடிக்கப் போய் நாக்கைக் கடித்துக்கொண்டுவிட்டாள்.

அப்படித்தானே ஆயிற்று அவள் கதையும்! அப்துல் அவளை நிக்காஹ் செய்துகொண்டானே, அது ஊருக்குத் தெரியும்; உலகுக்குத் தெரியும். ஆனால் எப்படி அது ஆயிற்று?

ஆயிஸாவுக்கு நாக்கு விண்ணென்று தெறித்தது. அள்ளிக் கொடுக்கும் நாக்கு, பல்லிலே அகப்பட்டுக்கொண்டு விட்டதே!

அப்துல்லும் அஜீஸும் இரட்டையர்கள் என்பது அப்போது அவளுக்குத் தெரியாது. அவர்களைப் பிறந்தது முதல் பார்த்து வரும் கிள்ளிமேட்டு மக்களுக்கே தினசரி ஆள்மாறாட்டம் ஏற்படுவதுண்டு. உருவத்தில்தான் அவர்கள் ஒரே அச்சு என்றால் குரல், குணம் ஆகிய எல்லாவற்றிலுமே அவர்கள் ஒரே அச்சுத்தான். தன்மையிலே நுணுக்கமான வேறுபாடு இருக்கலாம்.

கிள்ளிமேட்டு வாசிகள் அப்துல் என்று நினைத்துக்கொண்டு அஜீஸுடன் பேசுவார்கள். அஜீஸ் என்று எண்ணி அப்துலிடம் ஏமாறுவார்கள். இது தினசரி நடக்கிற காரியந்தான்.

ஒரு நாழிகை முன்னால் பிறந்த அஜீஸ், தம்பி; சற்றுப் பொறுத்துப் பிறந்த அப்துல், அண்ணன். அண்ணன் தம்பி ஒற்றுமைக்கு ஈடு இணையே கிடையாது.

ஊரிலே அந்த ஒரு வீடுதான் தனிக் குடும்பம். அதுவும் பால்ய வயசிலேயே பெற்றோரை இழந்த அந்த இரட்டையர்களுக்கு அந்த ஊரில் உள்ளவர்கள் அனைவரும் அந்நிய மதத்தினர் என்ற எண்ணமே என்றும் உதித்ததில்லை. ஊரார் கொண்டாடும் பண்டிகைகளில் அவர்களுக்கும் பங்கு உண்டு. ஊராருக்கெல்லாம் அவர்கள் பண்டிகைகளோடு சரி; ஆனால் இரட்டையர்களுக்குத் தங்களுடைய பங்கு சேர்ந்து ரெண்டு பங்குப் பண்டிகைகள். ஊரோடு சேர்ந்து அவர்களும் பொங்கலுக்கும் தீபாவளிக்கும் புதுக் கைலி வாங்கி உடுத்துக்கொள்வார்கள். புதுத் தொப்பி வாங்கி அணிவார்கள்.

அப்துல் பண விஷயத்திலே பலே சூரன். அஜீஸ் காரியம் எதையும் கருத்தாகச் செய்து முடிப்பதிலே சூரன். சிறு சிறு குத்தகைகளை யெல்லாம் ஏலம் கேட்டு, எடுத்து நடத்துவது பரம்பரைப் பாத்தியமாய்ச் செய்து வந்த தொழில். ரோட்டுக் குத்தகை, முடைசல் குத்தகை, வாய்க்கால் வெட்டு, சாலைக் குளங்களின் பாசிக் குத்தகை - ஐந்நூறு, ஆயிரம் என்று சிறு சிறு கைமுதல் போட்டுச் சம்பாதிப்பார்கள். சொற்ப நிலமும் உண்டு.

கிள்ளிமேட்டிலிருந்து கீரங்குடிக்கு நாலு மைல், சாலைக்குக் கப்பி போடும் வேலையை அவர்கள் மேற்கொண் டிருந்தார்கள். அண்ணனும் தம்பியும் மாறி மாறி வேலைத் தலையை மேற்பார்வை பார்க்கப் போவார்கள்.

அன்று தம்பிக்காரன் அஜீஸ் போனான். கூலி வேலை செய்பவர்களுக்கு அன்றாடம் கூலி போட்டுவிடுவது வழக்கம். அஜீஸ் மடி 'நிறைய அணுச் சில்லறைகளைக் கட்டிக்கொண்டு கீரங்குடிக்கு வந்து சேர்ந்தான்.

காதர் பாட்சாவின் கடை, சாலையை விட்டுச் சற்றுத் தள்ளி இருந்தது. கும்பலாகக் கூடி நின்ற ஆண் பெண்களுக்கெல்லாம் சிரித்த முகம் மாறாமல், சிணுங்கு முகம் காட்டாமல் அஜீஸ் கூலி போட்டு முடித்த அழகே தனி.

இந்தச் சந்தடியையும் அஜீஸையும் வேலி ஓரமாக நின்று வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தாள் ஆயிஸா. காதருக்குத் தாயில்லா ஒரே பெண் அவள். கோஷா முறை கட்டி வராது அங்கெல்லாம். கிராமத்திலுள்ள மற்றப் பெண்கள் மாதிரித்தான் ஆயிஸாவும். காதர் பாட்சா கல்லாப் பெட்டியில் உட்காராதபோதெல்லாம் ஆயிஸாதான் கடையைப் பார்த்துக்கொள்ள வேண்டும். இல்லையோ, கடை முறுக்கைக் காக்கை கொண்டு போய்விடும்.

ஆயிஸாவுக்கு எல்லாம் நேற்றுப்போல இருந்தது. அஜீஸ் அன்று தலை நிமிர்ந்து பார்த்ததை அவள் நெஞ்சு இன்றுகூட மறக்கவில்லை. அந்தக் கண்கள்தாம் எப்படி அவளைப் பார்த்தன! ஆயிஸா உடலைச் சிலுப்பிக்கொண்டு நிமிர்ந்து பார்த்தாள். எப்படிப் பார்த்தாளோ அவளுக்கே இன்று தெரியாது. இதற்கு முன் எவ்வளவோ பேரைப் பார்த்திருக்கிறாளே; நாணம் என்பது நாண்போல் எழுந்து அவள் உள்ளத்தில் எங்கேயோ போய்ப் பாய்ந்தது. அவள் தலையைக் குனிந்து கொண்டு விட்டாள்.

ஆயிஸாவின் தந்தை காதர் பாட்சா அஜீஸின் வயசுக்கு மீறிய சாமர்த்தியத்தை வியப்புடன் பார்த்துக்கொண் டிருந்தார். ஆயிஸாவை விட அஜீஸ் மனங் குழம்பிப் பம்பரக் கிறுகிறுப்பிலிருந்து மீண்டு, ''காக்கா! கொஞ்சம் தண்ணி வேணுமே! கொண்டாரச் சொல்றியளா?'' என்றான்.

காதர் பாட்சா எழுந்திருக்கப் போனார்.

''நீங்க வாணும், வாப்பா. இதோ வாரேன்'' என்று இரண்டு துள்ளலில் ஓடினாள் ஆயிஸா.

சாலையில் அப்போது பஸ் வந்து நின்றது. பஸ்ஸிலே வழக்கமாய் வருகிற வெற்றிலைக் கட்டு வந்திருந்தது. காதர் பாட்சா கட்டை இறக்கிக்கொண்டு வர எழுந்து சாலையை நோக்கி ஓடினார். போகும்போது, ''தம்பி, குந்திருந்து தண்ணி வந்தாக் குடிங்க. இதாலே வந்துட்டேன்'' என்று போனார்.

ஆயிஸாவுக்கு வெட்கத்துடன் சிரிப்புப் பொத்துக்கொண்டுதான் வந்தது. அஜீஸ் தண்ணீரைப் பருகாமல் ஆயிஸாவின் கண்ணைப் பருகிக் கொண் டிருந்தான்.

''தாகமிண்டீங்களே!''

''ஆமா ஆமா, தாகந்தான்!''

''பின்னே, குடிக்கலாமே.''

அஜீஸ் இரண்டே விழுங்கில் தண்ணீரைக் குடித்துத் தீர்த்தான். நன்றிச் சிரிப்பு ஒன்று சிரித்தான். ஆயிஸா உள்ளே சிட்டாக ஓடிவிட்டாள். போன பிறகுதான், 'போதுமா?' என்றுகூடக் கேட்காமல் வந்துவிட்டோமே என்று அவளுக்கு இருந்தது. ஆனால் மீண்டும் வந்து கேட்க அவள் கால்கள் சண்டித்தனம் செய்துவிட்டன; இசையவே இல்லை.

காதர் பாட்சா வந்ததும், ''வாரேன் காக்கா! இன்னும் மூணு நாளைக்கு இங்ஙனேதான் வேலை'' என்று சொல்லி அஜீஸ் விடைபெற்றுக் கொண்டு போனான். கோணிப் படுதா அசைந்தது. அதில் இருந்த ஓட்டையிலே இரண்டு வண்டுகள் சுழன்றன.

பொழுதைக் கணக்குப் பண்ணிக் கழித்துக்கொண்டிருந்தாள் ஆயிஸா. கூலிபோடும் மாலை நேரம் மறு நாள் மயங்கி வந்தது. இன்று அஜீஸுக்குப் பதிலாக அப்துல் சில்லறையைக் கட்டிக்கொண்டு வந்தான். ஆனால் ஆயிஸா அவனை அஜீஸாகவே எண்ணிக்கொண்டுவிட்டாள். வருஷ வருஷங்களாய்ப் பார்த்தவர்களே தடுமாறும்போது, அசைப்பில், அரைப் பார்வையில், அந்தப் படபடப்பில் பார்த்த ஆயிஸா....

கிட்டத்தட்ட அஜீஸ் கண்ட நிலையிலேயே அப்துல் இன்று ஆயிஸாவைப் பார்த்தான். ஆயிஸாவின் இளநகை தெரிந்தும் தெரியாமலும் அரும்பி நிற்பதைக் கண்டு பிரமித்தான்.

வேறு வேலைமேல் போயிருந்த அஜீஸ், ஆயிஸாவின் நினைப்பு வரவே விழுந்தடித்துக்கொண்டு அவளைப் பார்க்க ஓடி வந்தான். ஆனால் பாதி வழியிலேயே அப்துலுடன் அவனும் திரும்ப வேண்டியதாயிற்று. வரும் வழியெல்லாம் இருவர் உள்ளத்திலும் ஆயிஸாவே நிழலாடிக்கொண்டிருந்தாள். மட்டான மா நிறத்தாள்; கட்டுமஸ்தான சரீரத்தாள்; வயசான பருவத்தாள்; வண்டுக் கண்ணினள்; அவளைப் பற்றித் தனக்குத் தான் தெரியும் என்று ஒவ்வொருவனும் எண்ணிக்கொண்டான்.

கீரங்குடியில் இன்னும் இரண்டு நாள் வேலை இருந்தது. அப்துல் தம்பியைப் பார்த்து, ''அஜீஸ், நீ இரண்டு நாளைக்குக் காளவாய் வேலையைப் பார்த்து முடித்துவிடு. நான் ரோட்டு வேலையைப் பார்க்கிறேன்!'' என்று எப்போதும் வேலையைப் பங்கிட்டுக்கொள்வதுபோலச் சாதாரணமாகச் சொன்னான்.

அஜீஸுக்கு மண்டையில் அடித்ததுபோல் இருந்தது. மூன்று முறை வேலையை மாற்றிக்கொள்ளலாம் என்று சொல்ல நினைத்தான். ஆனால் மூன்று முறையும் தொண்டையில் ஏதோ அடைத்துக்கொண்டுவிட்டது. சொன்னால் தன் எண்ணம் ஜாடையாகவேனும் வெளிப்பட்டுவிடுமோ என்று சந்தேகம் தட்டியது. ஆயிஸாவின் அந்தக் கண்கள், ''ஓடி வா, ஓடி வா!'' என்று வட்டமடித்தன. எப்படி வர முடியும், அண்ணனை மீறி?

மறு நாள் அப்துல் சீக்கிரமாகவே கீரங்குடிக்குப் போய்விட்டான். கடை வாசலில் கிடந்த கட்டிலில் போய் உட்கார்ந்தான். கடை மூடிக் கிடந்தது. அப்துலுக்குச் சூழ்நிலை சரியாகப் படவில்லை. சுற்றிச் சுற்றிப் பார்த்தான். ஆயிஸா ஆட்டுக் குட்டி ஒன்றை மார்போடு அணைத்துத் தூக்கிக்கொண்டு வந்தாள். அப்துலைக் கண்டதுமே அவள் கையும் மெய்யும் தம் வசமிழந்தன. தொப்பென்று ஆட்டுக் குட்டியைக் கீழே போட்டு

விட்டுத் தலைப்பினால் உடம்பை இழுத்து மூடிக்கொண்டாள். சிரிக்கும் கண்கள் குமிழியிட்டன.

இவ்வளவு அருகில் நின்று எப்படி அவனைப் பார்க்க முடிந்தது? உயிரை இழுக்கும் அந்தக் கண்கள் எங்கே? ஆயிஸா தடுமாறினாள்.

அப்துல் கூச்சத்துடன், ''காக்கா எங்கிட்டுப் போயிக்கிறாக? கடையைப் பூட்டுப் போட்டிக்கிறாகளே!'' என்றான்.

இருதயத்தில் அலை அலையாக மோதும் அந்த இன்னிசைக் குரலா இது? இன்று அந்தப் பார்வை அவளைக் குருடாக அடிக்கவில்லையே! இன்று அந்த வார்த்தைகள் அவளை ஊமையாக அடிக்கவில்லையே!

'ரொம்பத்தான் நோட்டம் பார்த்தால்! இரண்டு நாளுக்குள்ளே வேறே தினுசாக மாறிவிடுவார்களா!' என்று ஆயிஸா மனத்துக்குள்ளே தன்னைத் திடப்படுத்திக் கொண்டாள்.

''வாப்பா சந்தைக்குப் போயிக்கிறாக! வந்துடுவாக!'' என்று ஆயிஸா துள்ளியோடிய ஆட்டுக் குட்டியைத் தூக்கிச் சென்றாள்.

அன்று காதர் பாட்சாவிடம் அவன் தன்னைப் பற்றித்தான் திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டான்.

மறு நாள் அவன் வந்தபோதும் அந்தச் செல்ல ஆட்டுக் குட்டி ஆயிஸாவின் பிடிக்கு அகப்படாமல் டிமிக்கி கொடுத்துக்கொண்டிருந்தது. அப்துல் அதை ஓட விடாமல் எதிரே நின்று மறித்துக்கொண்டான். அதைக் குனிந்து பிடிக்க முயன்றபோது மடியில் இருந்த அணுச் சில்லறையெல்லாம் அவிழ்ந்து இறைந்தன.

ஆயிஸாவும் அவனும் அவற்றையெல்லாம் பொறுக்கி எடுக்கு முன்னே ஆட்டுக் குட்டி பூவரச மரத்தின்மீது ஏறிவிட்டது ''நம்பளை இது ஏமாத்திடிச்சு!'' என்று ஆயிஸா குழந்தை போலத் தன்னை மறந்து, கைகொட்டிச் சிரித்தாள்; அப்துலும் கூடவே சிரித்தான்.

அவன் போன பிறகு, அன்றிரவு காதர் பாட்சா ஆயிஸாவைக் கூப்பிட்டு, ''கிள்ளிமேட்டுத் தம்பி எப்படிக்கிறாக?'' என்று நாத் தழுதழுக்கக் கேட்டார்.

ஆயிஸா தன் முகத்தைக் கைகளால் மூடி மறைத்துக்கொண்டாள். காதர் பாட்சாவுக்கு விஷயம் விளங்கிவிட்டது. ''அடுத்த மாசம் நிக்காஹ்! தம்பிக்குக் கண்டிராக்டுப் பணம் கைக்கு வந்துடணுமில்லே!'' என்றார்.

ஆயிஸா இப்போதும் முகத்தை மூடிக்கொண்டு கட்டிலில் திரும்பிப் படுத்தாள்.

ஒவ்வொரு நாளும் அப்துல், தம்பியிடம் விஷயத்தைச் சொல்லிவிட நினைத்தான். நேரம் கழித்து இப்போதெல்லாம் வீட்டுக்கு வரும் காரணத்தைக் கேட்டால் அவனுக்கு மிகவும் சுலபமாக இருந்திருக்கும். அஜீஸ் சமையல் செய்து வைத்துவிட்டு அண்ணனை எதிர்பார்த்துக் கொண் டிருப்பான். பத்து நாள் ஆனபிறகு அஜீஸ் புகையும் விறகோடு போராடுவதைக் கண்ட அப்துல், ''தம்பி, எத்தினி நாளைக்கு இந்த வம்பு? நிக்காஹுக்கு ஏற்பாடு செய்திட்டேன்'' என்றான்.

அஜீஸ் அவனை ஆச்சரியத்துடன் ஏறிட்டுப் பார்த்தான், 'எப்போது, ஏது' என்பதுபோல.

அப்துலுக்கு அதற்குமேல் சொல்ல முடியவில்லை. வெட்கம் வந்து தடுத்தது. அண்ணனும் தம்பியும் கூடிப் பேசி முடிவு கட்டாத காரியம் முதல்முதல் இதுதானே?

''எந்த ஊரு?'' என்றான் அஜீஸ்.

''ரொம்பத் தூரமில்லே, தம்பி. நாலஞ்சு கல்லுக்குள்ளாறதான்! பொண் பேசி முடிவாயிருச்சு. உன்னைக் கூட்டிப் போய்ப் பேசணமிண்டுதான் நெனச்சி. ஆனா நானே போயித்தேன்.''

''நாலஞ்சு மைலுக்குள்ளாறவா?''

''ஆமா தம்பி, கீரங்குடிக் காக்கா காதர் பாட்சா ஈக்கிறாகள்ளே, அதுக மகதான்—''

''என்னது, கீரங்குடியா?''

அப்துல் தலையை ஆட்டி அதை உறுதிப்படுத்தினான்.

'கீரங்குடியிலே அந்த ஒரு பொண்ணுதானா? எத்தினியோ பொண்ணு!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு அஜீஸ் சமாதானம் செய்து கொள்ளப் பார்த்தான். மனசு என்ன என்னவோ எல்லாம் எண்ணித் தவித்தது. அண்ணனிடம் அதற்குமேல் கேட்பது அவன் விவகாரங்களில் தலையிடுவதுபோல்தான் படும்.

அப்துல் பேசத் தொடங்கினான்:

''தம்பி, நாளைக்குச் சாங்கிசன் ஆன பணத்தைக் கசானாவிலே போய் வாங்கியாந்து, அவுககிட்டே பத்து நோட்டிலே ஒரு நோட்டைக் கொடுத்திட்டு வந்திரு. உன்னைக் கொணந்து கொடுக்கச் சொல்றேன் ணிண்டு வந்திக்கிறேன். நீயுந்தான் அவுகளைக் கண்டுக்கிணமில்லே?''

''ஆவட்டும்'' என்று சொல்லிவிட்டு அஜீஸ் தூங்குவதுபோல் பாசாங்கு செய்தான்.

அவன் கீரங்குடிக்குப் பஸ்ஸில் வந்து இறங்கியபோது உச்சிவேளை. கடைவாசலிலே இரண்டு சேரிப் பெண்டிர் ஆயிஸாவுடன் சிரித்துப் பேசிக்கொண் டிருந்தனர். ஒருத்தி சிரிப்புக்கு அடங்காமல் அவிழ்ந்த கொண்டையை அள்ளிச் செருகிக்கொண்டாள். மற்றொருத்தி ஆண் மகன் வருவதை உணர்ந்து ஓரமாக ஒதுங்கிக்கொண்டாள்.

ஆயிஸா அப்போதுதான் அவனை நன்றாக நிமிர்ந்து கண்ணெடுத்துப் பார்த்தாள். ஏதோ மின்சாரம் தீண்டிவிட்டதோ!

அப்துல்லாவின் தம்பி அஜீஸ் என்பவன் வரப்போகிறான் என்பது அவளுக்குத் தெரியும். அவன் அப்துலோடு இரட்டையாகப் பிறந்தவன் என்பதும் அவளுக்கு நேற்றுத் தெரியும். அப்போதுகூட அவள் அவனைப் பார்த்திருப்பதாகச் சந்தேகப்படவில்லை. பார்த்தால் வித்தியாசமே தெரியாது என்று அப்துல் நேற்று அவள் தந்தையிடம் சொன்னதை அவள் மறைவில் கேட்டுக்கொண்டுதான் இருந்தாள். ஆனால் -

ஆயிஸா மயில் தோகையைச் சிலிர்ப்பது போல் சிலுப்பிக்கொண்டு ஸ்பிரிங் மாதிரி துள்ளி எழுந்தாள். அவள் கண்ணிலே ஈட்டி பாய்வது மாதிரி இருந்தது. இந்தக் கண்களுடைய பார்வை எங்கே, அப்துலுடைய பார்வை எங்கே? அந்த வித்தியாசம் அவள் பார்வைக்குத்தான் தெரிந்தது. யாரோ தன்னை வஞ்சித்துவிட்டது போலிருந்தது.

நடையிலே கிடந்த கட்டிலில் அவனை உட்காரச் சொல்லக்கூட முடியாமல் ஆயிஸா கோணிப் படுதாவினுள் தலையைப் புதைத்துக் கொண்டாள். 'இந்தக் கண்களுக்கு அல்லவா என் மனசைப் பறி கொடுத்தேன்; ஆனால்—?' என்று எண்ணும்போதே கண்ணீர் வடிந்தது.

அஜீஸ் எப்படிப் பேசினன்! இன்னும் அவனுக்குத் தானும் வஞ்சிக்கப்பட்டு விட்டோம் என்பது தெரியாது. ஒரு சிறு மயிரிழையில் தொங்கிய ரத்தினத்தை மகாசமுத்திரத்தில் நழுவ விட்டுவிட்டோம் என்பது தெரியாது.

''இந்த ஊரிலே காதர் பாட்சா அப்படீண்டு ஈக்கிருகளாமில்லே?''

''ஆமா....''

''எங்கிட்டு?''

''இங்கிட்டுத்தான்...''—ஒரு விம்மல் சத்தம் படுதாவுக்குள் ளிருந்து கேட்டது.

மின்னலும் இடியும் கண்ணையும் காதையும் பறித்துக்கொண்டு போனதுபோல் அப்படியே விறைத்துப்போய் நின்றான் அஜீஸ். பொட்டையன் பார்வைதான்! செவிடன் காதுதான்!

''இங்கிட்டா, இங்கிட்டா?'' என்று திருப்பித் திருப்பிக் கேட்டான். அருகில் கிடந்த கட்டிலில் தொப்பென்று விழுந்துவிட்டான்.

அந்தக் குரலும் பார்வையும்!

''நீங்களா, நீங்களா....தெரியலியே, தெரியலியே!''—ஆயிஸா முகத்தைத் திரையினால் மூடிக்கொண்டு அழுதாள்.

அல்லாவின் ஆணை!

**அ**ப்துலுக்கும் ஆயிஸாவுக்கும் 'நிக்காஹ்' நடந்த அன்று அஜீஸ் சிங்கப்பூர் போகும் கப்பலில் ஏறிவிட்டான். இரட்டைப் பறவையிலே ஒரு பறவை பறந்தோடிவிட்டது. அந்த இடத்திலே இந்தப் பேடை வந்து சேர்ந்தது.

இரவெல்லாம் மோட்டு வளையை வெறித்துப் பார்த்தது; துயிலெல்லாம் பெருமூச்சாக, கப்பலில் போன மச்சானுக்குத் தந்தியாக நீண்டது. பேச்சிலே எதையோ பறி கொடுத்துவிட்ட ஏக்கம்; பார்வையிலே எதையோ பறி கொடுத்துவிட்ட சோகம். அப்துல் பக்கத்திலே அந்தப் பேடை அனலில் இட்ட புழுவாகத் துடித்தது.

இரண்டு வருஷங்கள் துன்பமாய் நெளிந்தன. அப்துலுக்கும் கசந்து விட்டது. அஜீஸ் காரியத்தைச் செய்து முடிப்பதில் கைகாரன். பண விஷயத்தில் அப்துல் கருத்தானவன். பணத்தாசை தங்கிவிட்டது; அதைச் செய்து முடிக்கும் சக்திதான் பறந்துவிட்டதே!

எடுத்த குத்தகையெல்லாம் நஷ்டம்; செய்த வேலையெல்லாம் இரட்டிப்பு வேலை. காண்ட்ராக்டு கொடுக்கவே யாரும் முன்வரவில்லை. கையைக் கையைப் பிசைந்துகொண்டு அப்துல் நின்றான். சொற்ப நிலந்தான் மிச்சம்.

அப்துலுக்கு அஜீஸின் ஞாபகம் வந்தது. தனக்குள்ள பங்கை உடனே விற்றான். ஆயிஸாவின் கையிலே ஒரு பகுதிப் பணத்தைக் கொடுத்துவிட்டு,''நானும் சவரு போகப்போகிறேன்'' என்றுகிளம்பினான்.

ஆயிஸாவுக்கு அடிவயிற்றைக் கலக்கியது. காதர் பாட்சா ஓடி வந்து, ''எனக்கு ஒரே மக. அதைத் தவிக்க விட்டுட்டுப் போகாதீங்க, தம்பி!'' என்று காலைப் பிடித்துக்கொள்ளாத தோஷமாய்க் கதறினார்.

''சும்மாண்டு இரிங்க. கப்பலுக்குப் போனவங்க கைநிறையக் கொண்டாந்தாக்கா சரியாப் போயிரும். இங்ஙனே இருந்திக்கிட்டு என்னண்டு செய்ய?'' என்று புறப்பட்டுவிட்டான் அப்துல்.

அதே ஏக்கம். மகளுடைய ஏக்கத்தைப் புரிந்து கொள்ளாமலே காதர் பாட்சா படுக்கையில் விழுந்து, அதற்குப் பிறகு எழுந்திராமலே இரண்டு வாரத்தில் 'மவுத்'தாகிவிட்டார்.

ஆயிஸா அன்றுமுதல் தனியானாள். அதற்குப் பிறகுதான் அவள் அத்தை மகன் ஹனீபாவைக் கூத்தாநல்லூரிலிருந்து அழைத்து வந்து வயிறு வளர்க்கக் கடையை நடத்தி வந்தாள்.

எட்டு வருஷங்கள் ஆகிவிட்டன. அப்துல் போய்த்தான் சேர்ந்தானோ, போகாமலேதான் இருந்தானோ, ஆயிஸாவுக்கு ஒரு வரி எழுத வேண்டுமே! எழுதவே இல்லை. செப்பாலே அடித்த ஒரு காசு அனுப்ப வேண்டுமே! அனுப்பவே இல்லை. ஏன் என்று ஆண்டவனுக்குத்தான் தெரியும். மற்றவருக்குத் தெரியாது.

ஹனீபா வந்ததிலிருந்து அவள் எல்லாவற்றையும் மறந்துவிட நினைத்தாள். அல்லாவின் மீது அசையாத நம்பிக்கையால் ஓரளவு வெற்றியும் கண்டாள். ஹனீபாதான் அவளுக்குத் துணை; ஆறுதல்; அதனால்தான் அவளுக்குப் பெருமை, பற்றுதல் எல்லாம். அவன் வந்தது வேறொரு காரியத்துக்குச் சௌகரியமாக இருந்தது. அவனைப்பற்றி விசாரித்து வருஷத்துக்கு இரண்டு முறையாவது ஊரிலிருந்து ஆயிஸா பீவிக்குக் கடிதம் வரும்.

ஊர்ப் பெண்களுடைய வாயை அடக்க, அவர்களிடையே பெருமையாக விளங்க அந்தக் கடிதம் அவளுக்கும் பயன்படும்.

''அவுகதான் எழுதிக்கிருக!'' என்று பெருமையோடு சொல்லிக் கொள்ள முயலுவாள். என்ன இருந்தாலும் பூரிப்பு வருமா? கீரங்குடிப் பெண்கள், ஆச்சிமார்கள் அவள் எதைச் சொன்னாலும் நம்பத் தயாராக இருந்தார்கள்; நம்புவது போலாவது காட்டிக்கொண்டார்கள்.

இனிமேல் அந்தக் கடிதங்கூட வராதே!

ஆயிஸா தனியாகப் படுத்து ஒரு பாட்டம் அழுது தீர்த்தாள். அவள் மூக்கைச் சிந்திச் சிந்தி எரிச்சல்கூட எடுத்துவிட்டது.

''பீவி, பீவி!''—வெளியிலிருந்து வாண்டையார் வீட்டு ஆச்சியின் குரல் வந்தது. எழுந்து பார்த்தாள். இருள் வந்துவிட்டது. முகத்தைத் தண்ணீரை விட்டுக் கழுவிக்கொண்டு வெளியே வந்தாள்.

''ஏதோ பஸ்ஸு வந்து நிக்கிது, பாரு!''

வாண்டையார் வீட்டு ஆச்சி சந்தேகப்பட்டுத்தான் கூப்பிட்டாள். கண்டக்டர் பஸ் மீது ஏறினான். புழுதிப் படலத்தைக் கிளப்பிவிட்டு வந்த பஸ் தன்மீதே அது கவிந்து விடுவதைப் பொறுத்துக்கொண்டு நின்றது.

ஆயிஸாவுக்கு நெஞ்சில் ஏதோ ஊறல் எடுத்தது. இருதயத்தின் ஒரு கோடியிலே பளிச்சென்று ஒரு மின்னல்.

இடுப்பில் தண்ணீர்க் குடத்துடன் வந்த கோனார் வீட்டுக் கோயிந்தி ஆயிஸாவின் வீட்டு வாசலிலேயே நின்றாள் வேடிக்கை பார்க்க.

புழுதிப் படலம் பஸ்ஸைத் திரையிட்டு மறைத்தது. ஆயினும் கோயிந்தி சொல்லிவிட்டாள்: ''ஒரே பிரம்புப் பெட்டிங்களாக இல்லே வரிசை இறங்கருப்பலே இறங்குது!''

''கப்பலுக்குப் போன மனுசன்தாண்டி வர்றாருடியோவ்!'' என்று கூவினாள் ஆச்சி.

எத்தனை தினுசான பெட்டிகள்! சாமான்கள்! பாய்கள், தலையணைகள் கூடவா?

கோயிந்தி, "எப்படித்தான் இத்தினியும் பஸ் கொண்டுச்சு? ஆயிஸா வூடு அடங்காதே?" என்றாள்.

ஆயிஸாவுக்கு மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. பூமி, பஸ், கடை, சாமான்கள், வீடு, ஆச்சி, கோயிந்தி-எல்லாம் 'கிர் கிர்' என்று காலோடு தலையாகச் சுற்றின.

பஸ், 'புர்'ரென்று சத்தம் போட்டுக்கொண்டு புறப்பட்டது; ஆச்சி அவசர அவசரமாகச் சாலைக்கு ஓடினாள்.

சில்க் கைலி, சில்க் சட்டை, சில்க் கோட்டு, சில்க் டை, சிங்கப்பூர் ஸில்க் குடை, அழகான தொப்பி, பூட்ஸ், தங்கத்திலே செயின் போட்ட கடிகாரம், பத்து விரலுக்கும் கல் பதித்த மோதிரங்கள், தங்கத்திலே பித்தான்கள், ஊக்குகள் - எல்லாம் தகதகவென்று டால் வீசின.

வாண்டையார் வீட்டு ஆச்சி பிளந்த வாயுடன், "வாங்க ஐயா, வாங்க! சவுரு போய் வாரீங்களா?" என்றாள்.

"காதர் பாட்சா வூடு இதுதானே?"

"ஆமாங்க. தெரிஞ்சுதான் கூப்பிட்டேன். அம்மா, ஆயிஸா! வந்திட்டாக! வந்திட்டாக!" என்று ஆச்சி அங்கிருந்தபடியே கூப்பாடு போட்டாள். "ஏலே, இங்ஙனே வாடா! இந்தச் சாமான் பெட்டியையெல்லாம் கொண்டுபோய் வையிடா. ஐயா காசு கொடுப்பாக!" என்று மாட்டுக்காரப் பையன் ஒருவனைப் பார்த்துச் சிபாரிசு செய்தாள்.

'சரக், சரக், சரக், சரக்' என்று கால் பூட்ஸ் கட்டியங் கூற, காலடிச் சத்தம் வீட்டு நடையேறி அருகில் வந்தது. அத்தர் நெடி அதற்கு முன்னே வந்தது.

"யாரு வூட்டுலே?"

"ம்ம்...." முனகல் குரலைத் தவிர வேறு பதில் சத்தம் கேட்கவில்லை.

"ஒரே இருட்டாக் கெடக்குதே! வூட்டிலே யாருமில்லியா?"

கோட்டுப் பையில் கைவிட்டு எடுத்து, 'சக்'கென்று தீக்குச்சி கிழிக்கும் சப்தம் 'புஸ்' என்று விரிந்தது.

விரிந்த இரண்டு விழிகள் எதிரே இரண்டு விழிகளை மட்டும் பார்த்தன.

ஆயிஸா குச்சி எரியுமட்டும் அந்தக் கண்களைக் கூர்ந்து பார்த்தாள். குச்சியைப் பிடித்த கை மீண்டும் ஒரு குச்சியை எடுத்துக் கிழிக்கப் போயிற்று. அவள் அந்தக் கையை அசைய வொட்டாதபடி இறுகப் பற்றிக்கொண்டாள்.

இன்ப வாடை ஒன்று வீசியது.

"என்னைத் தெரியுதா? நான் யாருண்டு தெரியுமா, பீவி?" என்று அந்த மின் அலை அவள் இருதயத்திலே பரவிப் பாய்ந்தது; கிசு கிசுவென்று மெல்லக் கேட்டது.

ஆயிஸாவின் மற்றொரு கை அவன் வாயை வேகமாகப் பொத்தியது.

"பேசாதிரிங்களேன், பேசாதிரிங்களேன்!" என்று ஆயிஸா மூச்சு முட்டத் தடுமாறினாள்.

மௌனம்; அமைதி.

''அண்ணுச்சி 'மவுத்'தாயிட்டாக, தெரியுமா?''

''.............''

''அவுக இங்கிட்டிருந்து வந்த மறு மாசமே மவுத்தாயிட்டாகளாம். எனக்குப் போன மாசந்தான் சேதி தெரிஞ்சிச்சு, ஆயிஸா...உடனே மறு கப்பல்லே கிளம்பிட்டேன்.''

''.............''

''நான் அஜீஸ், ஆயிஸா!''

* * * *

பொழுது விடிந்தது.

கீரங்குடி மக்கள் எல்லாம் அக்கரைச் சீமைக்குப் போய் வந்திருக்கும் அப்துலே வரவேற்று உபசாரம் சொல்லக் கூடினார்கள். ★

—அக்டோபர், 1954.

## ராஜம் கிருஷ்ணன்

# மீட்சி

கீழே ஓடும் சாக்கடையின் குறுக்கே போட்டிருந்த கல் வாசற்படியிலே சுரத்தின்றிக் கன்னத்தில் கை வைத்தவண்ணம் பிரேமா உட்கார்ந்திருந்தாள். காலையிலிருந்து அன்று அவளுக்கு ஏனோ ஒன்றுமே பிடிக்கவில்லை. பொழுதே போகவில்லைபோல் இருந்தது. அவளுடைய வீட்டுக்கு எதிரே ஆலமரத்தடியில் அவளை ஒத்த பிராயத்தினர்தாம் விளையாடிக்கொண் டிருந்தனர். தினமும் அந்தச் சிறுவர்கள் பள்ளிக்கூட உபாத்தியாயருக்கு 'டிமிக்கி' கொடுத்துவிட்டு அங்கு வந்துதான் விளையாடுவார்கள். ஆனால் பிரேமாவின் அம்மா அவளுக்குக் கண்டிப்பான உத்தரவிட்டிருந்தாள். அந்தக் கும்பலுடன் சேர்ந்து அவள் விளையாடவே கூடாது. அவர்கள் பெட்டிக் கடைப் பக்கத்திலிருந்து பொறுக்கி வரும் துண்டு பீடிகளைப் புகைத்துக்கொண்டு காசு வைத்துக் கோலி ஆடுவார்கள். தெரு நாய்களைப்போல் புழுதியில் ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக் கட்டிப் புரளுவார்கள். அவர்களுடைய புத்தகப் பைகள் எல்லாம் ஆலமரத்தடி மேடையில் தூங்கும்.

பிரேமாவும் அவளுடைய தாய் கண்ணம்மாவும் அந்தப் பக்கத்துக்குப் புதிதானவர்கள். கண்ணம்மாவுக்குப் பஞ்சாலையில் வேலை. விடிய ஆறு மணிக்கே புறப்பட்டால்தான் அவளுக்குப் படியளக்கும் பஞ்சாலைக்குக் குறித்த நேரத்தில் செல்ல முடியும். பிரேமாவை அப்போதே எழுப்பி அவள் உட்கார்த்தி வைத்துப் போய்விடுவாள். அந்த வீட்டில் அவர்கள் இருந்த ஒரே அறைதான் குடியிருக்கத் தகுதி வாய்ந்ததாகத் தெருவைப் பார்த்துக்கொண்டு இருந்தது. மீதி இடங்கள் எல்லாம் கூரை விழுந்து குட்டிச்சுவர்களாகக் காட்சி அளித்துக்கொண் டிருந்தன. திரும்ப அம்மா வரும்வரை, அதாவது மாலை ஆறு மணிவரை, பிரேமாவுக்குச் சர்வ சுதந்தரந்தான். வீட்டில் இருக்கும் பண்டங்களில் எது வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் எடுத்துச் சாப்பிட்டுக்கொள்ளலாம். ஆனால் ஒரே ஒரு தடை மட்டும் அவளுக்குச் சிறைவாசத்தையும் விடக் கொடுமையானதாகக் கஷ்டம் கொடுத்தது. பிரேமா அந்த வாசற் படிக்குள்ளேதான் விளையாடிக்கொள்ளலாம். வீட்டை விட்டு எங்கும் நகரக் கூடாது என்பதுதான் உத்தரவு.

மாலை கண்ணம்மா வீடு திரும்பியபின் தண்ணீர் கொண்டுவந்து, அடுப்பு மூட்டிச் சோறாக்குவாள். பிரேமாவுக்குத் தலை வாரி, மேலுக்குத் தண்ணீரோ வெந்நீரோ ஊற்றிக் குளிப்பாட்டிவிடுவாள். அப்புறம் சுடு சோறு உண்டபின் இருவரும் தூங்குவார்கள். ஞாயிற்றுக்கிழமை ஒரு நாள் மட்டும் அவளுக்கு ஓய்வு நாள். அன்று அவர்கள் காலையிலேயே எண்ணெய் தேய்த்துத் தலை முழுகுவார்கள். காயும் கறியுமாய்ச் சமைத்து உண்டுவிட்டு, கோயம்புத்தூருக்குச் சினிமாப் பார்க்கச் செல்லுவார்கள்.

சலித்து ஓய்ந்து உட்கார்ந்திருந்த பிரேமாவுக்கு, 'நிதம் ஞாயிற்றுக் கிழமையாக இருக்கக்கூடாதா?' என்று இருந்தது.

அப்போதுதான் சின்னி அவள் அருகில் வந்து நின்றாள். சின்னிக்கு நாலு அல்லது ஐந்து பிராயந்தான் இருக்கக்கூடும். அவளைவிடச் சிறியவள்தான். அவள் போட்டிருந்த அழுக்குக் கவுன் பின்புறம் பித்தானில்லாமல் தொங்கியது. நான்கு நாட்களுக்குமுன் சீவிப் பின்னலிடப்பட்ட சடையினின்றும் மயிர்கள் பறந்து பறந்து முகத்தை மறைத்தன. வழிந்த மூக்கைப் புறங்கையால் துடைத்தவண்ணம் பிரேமாவை உற்றுப் பார்த்துக்கொண்டே நின்றாள் சின்னி.

பிரேமா சட்டென்று எழுந்து, "பாண்டி ஆடலாம் வாரியா?" என்று கேட்டாள். அவள் தலையை அசைத்தாள்.

அந்தக் கணமே இருவரும் தோழிகளாகி விட்டனர்.

"உங்க வூடு எங்கே இருக்குது?" என்று பிரேமா அவளைப் பாண்டியாடியபின் விசாரித்தாள்.

"பிள்ளையார்க் கோயிலுக்குப் பொறவிலே இருக்குது பார், குட்டியண்ணந்தோப்பு, அங்கே இருக்குது. எங்கம்மா பொரி கடலை கொண்டுட்டுக் கோயமுத்தூர் போவாங்க. சாயங்காலந்தான் வருவாங்க. எங்கய்யா ராவுதான் வூட்டுக்கு வருவாரு" என்று அவள் கேட்காத விவரங்களையும் சின்னி சேர்த்துத் தெரிவித்தாள்.

பிரேமாவுக்குத்தான் அந்த வீட்டையும் ஆலமரத்தடியையும் விட்டால் வேறு இடம் தெரியாதே? ஆனால் அதற்காக அவள் கவலைப்படவில்லை. பதிலாக, "எங்கம்மாளுக்குப் 'பார்வதி மில்'லிலே வேலை. பொழுது போய்த்தான் வருவாங்க. நீ நிதம் இங்கே வரியா? எங்கம்மா பழம் மிட்டாய் அல்லாம் வாங்கியாருவாங்க. உனக்கும் தருவேன். உம்?" என்று தலையை ஆட்டிப் பெருந்தன்மையுடன் ஆசை காட்டினாள்.

சின்னியின் கௌரவ உணர்வு அவ்வளவு சீக்கிரம் அவளுடைய இரக்கத்துக்கு இலக்காக விரும்பவில்லை.

"எங்கம்மாளுந்தான் பொரி கடலை கொண்டாருவாங்க. எங்க ஐயாவுக்குந்தான் மில்லிலே வேலை" என்றாள் விட்டுக்கொடுத்துக்கொள்ளாமல்.

"உங்க வூட்டை யார் பார்த்துக்குவாங்க?" பிரேமாவுக்கு இது பெரிய பிரச்னையாயிற்றே?

"எங்கண்ணன் இருக்குது. தங்கச்சிப் பாப்பா இருக்குது. அவன் வூட்டைப் பூட்டிப்போட்டு இங்ஙனே வந்திட்டான். அதோ பாரு, மரத்தடியிலே தங்கச்சிப் பாப்பா" என்று ஆலமரத்தடி மேடையில் படுக்க வைத்திருந்த குழந்தையைச் சின்னி காட்டினாள்.

"நாளைக்கும் வாரியா? நெதம் இங்கே விளையாடலாம்" என்றாள் பிரேமா. சின்னி தலையை முழுச் சம்மதத்துடன் அசைத்தாள்.

சின்னி இதற்குப் பிறகு தினம் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல வீட்டை விட்டு அங்கு வந்துவிடுவாள். விளையாட என்று மட்டும் சொல்லிவிட முடியாது. சின்னியைக் கவர்ந்தது பிரேமாவின் தோழமை மட்டுமல்ல. பிரேமாவுக்கு அவளுடைய அம்மா தினமும் நிசமாகவே ஏதாவது தின்பண்டம் வாங்கித் தருவது வழக்கமாக இருந்தது. முதலில் சின்னி விட்டுக் கொடுத்துக்கொள்ளாமல், 'எங்கம்மாளும் பொரி கடலை வாங்கித் தருவாங்க' என்று சொல்லிக்கொண்டாலும், பிரேமாவுக்குச் சமமாக ஆக முடியாது என்று உறைத்துவிட்டது. மேலும் மாம்பழம், சாக்லேட், மிட்டாய் முதலியவற்றின் தனித்தனியான

ருசி அந்தப் பொரிகடலைக்கு ஏது? அதுவும் நல்ல வியாபாரம் ஆகியிருந் தால்தான் அவளுடைய அம்மாள் 'செலவுச் சாமான்கள்' வாங்கிக் கொண்டு சிரித்த முகத்துடன் வருவாள். இல்லாவிட்டால் வெடு வெடு கடு கடு என்று வருவாள். சின்னி ரோதனை செய்தால் சுடச் சுட உதை களே கிடைக்கும்.

பிரேமா வாயால் தாராளம் காட்டியது போல் கையால் காட்டி விடமாட்டாள். சின்னி ஊறும் நாவை உள்ளுக்கு இழுத்துக்கொண்டு கெஞ்சும் விழிகளுடன் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே தன் கையி லுள்ள பண்டத்தை ருசித்துச் சப்புக் கொட்டிக்கொண்டு தின்பதில் அவ ளுக்குப் பரமானந்தம். சின்னி ஊறும் எச்சிலை உதட்டில் நனைய வைத் துக்கொள்வாள். கை தன்னையும் அறியாமல் அவளிடம் நீளும். பிறரை இரங்கச் செய்து தான் மேலான நிலையில் இருக்கும் பெருமையில் மூழ்கிய படியே அவள் சிரிப்பாள். சிரித்துக்கொண்டே தன் தாராள மனப்பான் மையை ஓர் அரசிக்குரிய பெருமிதத்தோடு பிய்த்து எறிவாள். மாம் பழமானால் பல்லால் தோலை உரித்துக் கொடுப்பாள். சாக்லெட்டானால் நெல்லளவு மீதியுடன் மேலே சுற்றப்பட்ட காகிதம் கிடைக்கும். மிட் டாயானால் அவள் சப்பி ஈர்க்கில் மீதி வைத்துத் தருவாள். சின்னி அந் தத் தானத்தைக் கடைசி வரையில், சக்கையிலும் சக்கையாகத் தேயும் வரையில் ரசிப்பாள்.

அப்படி அந்தத் தின்பண்டங்களின் சிறு பகுதிகளை ரசிக்கும்போ தெல்லாம் முழுசும் ஒரு நாள் கிடைக்காதா என்று சின்னியின் உள்ளம் ஏங்கும். தொடர்ந்து சிந்தனைகளும் கேள்விகளும் உள்ளத்தில் வட்ட மிடும். அவளுடைய ஐயாவும் மில்லிலேதானே வேலை செய்கிறார்? நிறையச் சம்பளம் கிடைக்குமே? ஏன் ஒன்றும் வாங்கி வருவதில்லை? சின்னிக்குத் தந்தையுடன் நெருக்கமான பழக்கமே இருக்கவில்லை என்று சொல்ல வேண்டும். அவள் காலையில் எழுந்திருக்குமுன் அவன் வேலைக்குப் போய்விடுவான். இரவு அவன் வருவதற்குள் அவள் அநேகமாக உறங்கி விடுவாள். விடுமுறை நாட்களில் அவள் வீட்டில் இருப்பது உண்டு. ஆனால் நெருங்கிச் சல்லாபிக்கச் சந்தர்ப்பங்கள் ஏற்படுவது துர்லபம். அவன் வீட்டில் இருந்த போதெல்லாம் அவளுடைய அம்மாவிடம் சண்டை கள் போடுவான். அடிக்கவும் உதைக்கவுங் கூடத் தயங்க மாட்டான். கடைசியில் சின்னி, முருகன் எல்லாரையுமே சேர்த்துத் திட்டிவிட்டு வெளியேறிவிடுவான்; சின்னியின் அம்மா அழுவாள். அழுதுவிட்டுக் கூடையைத் தூக்கிக்கொண்டு கோயம்புத்தூர் போய்விடுவாள். 'எல்லா அப்பாக்களும் இப்படித்தான் இருப்பார்களா? பிரேமாவுக்குங்கூட அம்மா தானே எல்லாம் வாங்கித் தருகிறாள்?'

சின்னி ஒருவழியாய் முடிவுக்கு வந்தாள்.

**அ**ன்று ஞாயிற்றுக்கிழமை. பிரேமா புதுச் சட்டை, லோலாக்கு எல்லாம் போட்டிருந்தாள். தலையை வாரி இரு பின்னல்கள் போட்டு, பட்டு நாடாக் கொண்டு அவளுடைய அம்மா முடிந்திருந்தாள். ஆல மரத்தடியில் நின்றவளாய், கையில் இருந்த மசால் வடையைக் கடித்துக் கொண்டு இருக்கும்போது சின்னி வந்தாள். அவளைக் கண்டதுமே பிரேமா வுக்குக் கர்வம் கண்களில் பளபளத்தது. ''நாங்க இன்னிக்குக் கோயமுத் தூருக்குச் சினிமாப் பாக்கப் போகப் போறோமே?'' என்று நீட்டினாள்.

மசால்வடையைத் துளி விண்டு அவளுடைய கையில் வைத்தபடி, ''நீ பார்த்திருக்கிறியோ சினிமா! நல்ல நல்ல சேலை கட்டி ராஜா ராணி அல்லாம் வருவாங்க. கலர் கலர் டான்ஸ் ஆடுவாங்க'' என்று விசா ரித்தாள்.

சின்னிக்கு இந்த ஆசை காட்டும் பேச்சுப் பிடிக்கவில்லை.

''உங்க அய்யாவுங்கூட வருவாரா பிரேமா?'' என்று விசாரித்தாள். முதல் நாள் ஏற்பட்ட சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்துகொள்ளவே இந்தக் கேள்வி கேட்டாள்.

'ஐயா' என்ற பெயரைக் கேட்டதுமே பிரேமா டக்கென்று, ''எங்க ஐயாதான் ஆஸ்பத்திரியிலே செத்துப் போனாரே? எங்கம்மா அப்புறந் தான் இங்கே வந்தாங்க. எங்க மாமன் சினிமாக் கொட்டாய்க்கு வந்திருப் பாரு. அவரு நல்லவரு. நேத்து ராவுங்கூட இங்கே வந்திருந்தாரு. எங் கம்மாளுக்குப் புதுச் சேலை, எனக்கு இந்தப் பட்டுச் சட்டை, அல்லாம், இந்த வடைகூட, அவருதான் வாங்கியாந்தாரு'' என்றாள்.

அந்தச் சமயம் பிரேமாவின் அம்மா வாசல் படியில் வந்து நின்று கொண்டு, ''தட்டிலே சோத்தை வச்சிட்டு எங்கே போனே?'' என்று அவளை அதட்டி அழைத்தாள்.

பிரேமா உள்ளே ஓடிவிட்டாள்.

சின்னி மலங்க விழித்துக்கொண்டு நின்றாள். கண்ணம்மா வைப் பார்த்த பிரமிப்பு இன்னும் அவளுக்கு அடங்கவில்லை. இடையிலே புது மஞ்சள் வாயல் சேலை. கறுப்புப் பட்டு ரவிக்கை உடலோடு ஒட்டி இருந்தது. தலையிலே கொண்டை. மேலே கனகாம்பரப் பூ. ஆஸ் பத்திரியில் இருக்கும் 'மிஸி அம்மா'வைவிடப் பிரேமாவின் அம்மா அழகாக இருக்கிறாள் என்று சின்னி முடிவு கட்டினாள்.

கோயம்புத்தூருக்குப் போகும் பஸ் அந்த ஆலமத்தடியிலிருந்து ஐந்தாறு கஜம் தள்ளியிருக்கும் சாலை வழியேதான் செல்லும். பஸ் ஸுக்குக் காத்து நிற்பவர்கள் வெயிலுக்காக அந்த மரத்தடியில் வந்து நிற்பார்கள்.

சின்னி அங்கு நிற்கையிலேயே அவளுடைய அம்மா கூடையுடன் அங்கு வந்தாள். அன்று அத்தனை நேரம் அவளுக்கு வீட்டில் வேலை இருந்தது. பொரிகடலை வியாபாரத்துக்கு இனிமேல்தான் போகப் போகிறாள்.

சின்னியை அங்கே கண்டதும் முத்தம்மாளுக்குக் கோபம் வந்தது. ''வூட்டிலே புள்ளையைப் பார்த்துக்கோன்னேன்; இங்கே எங்கேடி வந்தே? போ!'' என்று அதட்டினாள்.

சின்னி படியவில்லை. கண்ணம்மாவைப் பார்த்து மலைத்த அவள் கண்களுக்கும் கருத்துக்கும் அவளைக் கண்டதும் மிரட்டலைக் கேட்டதுமே ஆத்திரம் பொங்கி எழுந்தது. ''போ, மாட்டேன் போ!'' என்று அம்மா வைப் பிடித்துத் தள்ளினாள்.

''என்ன கேடு வந்திச்சி உனக்கு?'' என்றாள் முத்தம்மாள்.

''வெவ்வெவ்வே, மூஞ்சியைப் பாரு!'' என்று சின்னி அழகு காட்டினாள்.

''ஏன்? உங்கப்பனிடம் கத்துக்கிட்டியா? போடி அப்பாலே'' என்று அவளை வெருட்டித் தள்ளினாள்.

அப்போது எதிர் வீட்டுக் கதவு திறந்தது. காண்போர் சொக்கும் எழிலுடனும் ஒயிலுடனும் கண்ணம்மா முதலில் வந்தாள். பின்னால் புதுச் செருப்புச் சப்திக்க, பிரேமாவும் ஓடி வந்தாள். கதவைப் பூட்டிச் சாவியைப் பர்ஸில் போட்டுக்கொண்டு அவள் ஆலமரத்தடியை நோக்கி வந்தாள்.

பிரேமா கூசிக் குன்றி நிற்கும் சின்னியைக் கண்டு மௌனச் சிரிப்புச் சிரித்தவளாய், தாயின் முன்றானையைப் பிடித்துக்கொண்டு நடந்தாள்.

தனக்குப் பத்தடி தூரத்தில் வந்து நின்ற கண்ணம்மாளைக் கண்டதும் முத்தம்மாளின் முகம் கடுகடுவென்று ஆயிற்று. காரணமில்லாமல் காறி உமிழ்ந்தாள்.

கீழே புழுதியில் படுத்திருந்த சொறி நாயை அப்போதுதான் கண்டவள்போல, ''கண்ட நாயிங்களும் ஊரிலே வந்து ரோதனை குடுக்குதுங்க!'' என்று குறிப்பாய்க் கூறி ஒரு கல்லை எடுத்து ஓங்கி வீசினாள்.

நாய் குறைத்துக்கொண்டு பத்தடி தள்ளிப் போயிற்று.

''இந்தப் பாழாய்ப்போன பஸ் எப்போ வந்து தொலைக்குதோ தெரியலியே?'' என்று அவள் முணுமுணுக்கையிலேயே அந்தப் பாழாய்ப் போன பஸ் சாலையில் வரும் குரல் கொடுத்தது. புளி மூட்டை அடைத்துக் கொண்டாற்போலச் சினிமாவுக்குச் செல்லும் கும்பலை ஏற்றிக் கொண்டு வந்த அது, மஞ்சள் சேலை உடுத்து நின்றவருக்கு அருகேயே மயங்கினாற் போல் நின்றுவிட்டது. அவள் ஒரு கணத்தில் தொத்திவிட்டாள். கண்டக்டரின் உத்தரவுக்காக உள்ளே ஏறாமல் நின்றாள்.

முத்தம்மாள் பறிபோகும் ஆவேசத்துடன் ஓடி வந்தாள். கூடையால் அவளை இடித்தபடி, ''என்ன வழியை மறிக்கிறே? இடத்தை உடு'' என்றாள்.

''ஏம்மா கூடையைப் போட்டு இடிக்கிறே?'' என்று முகத்தைச் சுளித்துக்கொண்ட கண்ணம்மா ஒரு கையில் பிரேமாவையும் பற்றி இழுத்துக்கொண்டு உள்ளே ஏறிவிட முயன்றாள். முத்தம்மா விடவில்லை. கூடையை முன்னுக்கு வைத்து மறித்தாள்.

கண்டக்டரின் கவனம் திரும்பியது. ''என்னம்மா கூடையை வழியிலே நீட்டிக்கிட்டு?'' என்று அவன் ஆத்திரத்துடன் காலால் தள்ளினான்.

மின்னல்போல் கண்ணம்மா பிரேமாவுடன் ஏறிவிட்டாள்.

''இறங்கு, இறங்கம்மா, எடு கூடையை! அவ்வளவுதான்!'' என்று முத்தம்மாளை ஒதுக்கிவிட்டு அவன் ஊதலை ஊதிவிட்டான்.

மனிதச் சுமை சுமந்த இரக்கமில்லாத அந்தப் பெரு வண்டி அலட்சியமாக உறுமிவிட்டு அனல் புழுதியைக் கிளப்பிக்கொண்டு அகம்பாவத்துடன் மறைந்தது.

ஏமாற்றம், தோல்வி, நிராசை எல்லாவற்றினாலும் தாக்கப்பட்ட முத்தம்மாள் தன் நாவினால் அந்தக் கண்டக்டரையும் மஞ்சள் சேலையில் மயக்கிய கழுதையையும் பழிதீர்த்துக்கொள்ளத் தொடங்கிவிட்டாள். ஏடும் எழுதுகோலும் நாணிக் கூசும் சொற்களை எல்லாம் பிரயோகித்தவளாய் அவள் பத்திரகாளி போல் வீடு திரும்பினாள்.

அவளுக்கு அத்தனை கோபம் வந்து சின்னி கண்டதில்லை. பின்னாலேயே தாயைத் தொடர்ந்து ஓடினாள்.

வீட்டின் முன் முற்றத்திலே முருகையன் சகாக்களுடன் கோலாகலமாகப் புகை குடித்தவண்ணம் குண்டாட்டத்தில் ஈடுபட்டிருந்தான். குமுறிக் கொப்புளித்துச் சீறிப் பெருகும் ஆத்திரத்துடன் வந்த முத்தம்மாளைக் கண்டதுமே உபாத்தியாயர் வரக் கண்ட வகுப்பறைபோல் அங்கே சத்தம் அடங்கியது. தாழ்வாரத் திண்ணையிலிருந்து உருளவிருக்கும் கைக்குழந்தையைத் தள்ளி விட்டுவிட்டு, அவள் கையைச் சொடுக்கிக் கொண்டு எவளோ பழிகாரிக்கு ஆயிரம் சாபங்கள் கொடுத்தாள்.

அவளுடைய அடிநெஞ்சிலிருந்து ஜ்வாலையாய் மண்டி வந்த தீ அந்தச் சொற்களின் மூலமாக அவியவில்லை. அவளை இன்னும் உந்தியது. பழி வாங்கத் துடித்தது.

சிலையாய் நின்றவள், ''மொட்டையா!'' என்று விளித்தாள்.

மொட்டையன் அந்தக் கோஷ்டியில் முதிர்ந்த அரும்பு. மொட்டைக் கைக் கரும்பனியனில் வாட்டசாட்டமான தேகம் வலிமையைக் காட்ட நிற்பவன். குச்சி குச்சியாய் நிற்கும் தலைமயிரும் கலங்கிச் சுழலும் விழிகளும் அரும்பும் இளம் மீசையும் அரும்பு பிரியுமுன் அனல் கக்கும் புழுதிச் சுழற்காற்றின் வெறியின் வயப்பட்டு மாசடைந்ததை எடுத்து உரைத்தன.

அவனை மட்டும் அழைத்துக்கொண்டு போய் முத்தம்மாள் ரகசியம் பேசினாள். சின்னி அவளை விட்டு அசையவே இல்லை.

''அந்தப் பாவி, பழிகாரி, என் வயிறு எரிவதைப் போல் வயிறெறிந்து ஓடணும்'' என்ற இடைப்பல்லவிதான் கேட்டது.

வேட்டைக்குச் சந்தர்ப்பம் கிட்டினாற்போல மொட்டையன் ஒரு துள்ளுத் துள்ளினான். ''நல்ல தேட்டை கொடுத்தீங்க அத்தை. இப்பவே ஓடிப்போயி..'' என்று சந்தோஷ ஆரவாரம் செய்தான்.

''நேத்துத்தான் சம்பளப் பணம் வந்தது. அல்லாத்தையும் சுருட்டிக்கிட்டுப் போகமாட்டா. இல்லே, எதாச்சும் அகப்பட்டதை யானும் சுருட்டிக்கிட்டு வந்திடு. பாவி!'' என்று பல்லைக் கடித்துக் கையை நெரித்தாள் முத்தம்மாள்.

சின்னிக்கு விளங்கவும் இல்லை; ஒன்றும் விளங்காமலும் இல்லை. இருளும் ஒளியுமாய், கலங்கியதும் கலங்காததுமாய், மனசில் அலை மோதின.

மொட்டையன் நல்லவனுக்கு நல்லவன். திருடனுக்குத் திருடன். அயோக்கியனுக்கு அயோக்கியன். முத்தம்மாள் நல்லவள். அவளுக்கு நல்லவனாகிவிட்டான்.

ஒரு நோட்டுக் கற்றை, பத்து ஐந்து ரூபாய் நோட்டுக்கள், அவன் அங்கிருந்து கிளப்பி வந்துவிட்டான்.

பணத்தைத் தொட்டதும் முத்தம்மாளின் எரிந்த நெஞ்சு தணிந்தது. வெயிலில் காய்ந்து புனலில் முழுகியதைப் போல, உஷ்ணம் குளிர்ச்சிப் புன்னகையில் மடிந்து முகத்தில் மலர்ச்சியை உண்டு பண்ணியது. முழுசாக ஒரு ரூபாயை அவனுக்குக் கூலியாக உள்ளங்கையில் வைத்தாள்.

சின்னிக்கு விழிகள் நிலைத்தன.

''பிரேமா வூட்டிலேந்துதானே மொட்டையனைத் திருடச் சொன்னே? ஏம்மா?'' என்று கோபத்துடன் தாயின் சேலையைப் பிடித்து அவள் இழுத்தாள்.

பிறர் காசை எடுப்பது தவறு என்பதை அவள் நன்கு அறிவாள். மணியகாரர் வீட்டு வாசலில் அம்மை குத்தும் அம்மாளுடைய பர்ஸை எடுத்துவிட்டு முருகனே ஏட்டையாவிடம் சாட்டையடி பெற்றிருக்கிறான். அம்மாவே ஏன் அவனைத் திருடி எடுத்துவரச் சொன்னாள்?

''நான் அவுங்க வாரையிலே சொல்லிடறேம் பாரு. ஐயா ஒனக்கு அதாம் ஒதை குடுக்கிறாரு!'' என்று நியாயம் பேசி விரலை ஆட்டிப் பயமுறுத்தினாள் அவள்.

''அந்தக் கொள்ளையிலே போறவ, உங்க அப்பனையே மடக்கி வாயிலே போட்டுக்கிட்டாளே? ஏண்டி வயித்தெரிச்சலைக் கொட்டிக்கிறே? இந்தச் சம்பளத்தைப் பிடுங்கிக்கிட்டு, புள்ளையும் குட்டியுமா குலை எரிய வைக்கிறாளே? நன்றி கெட்ட கழுதை, எதினாலும் போய்ச் சொன்னியோ, உயிரை எடுத்துப் போடுவேன்!'' என்று மகளை அதட்டினாள்.

சின்னிக்கு இன்னும் தெளிவாக விளங்கவில்லை. அப்பனை மடக்கி எப்படி வாயிலே போட்டுக்கொள்ள முடியும்? அவன் என்ன தோசையா, பிட்டா? ஆனால் அவனுடைய சம்பளப் பணத்தை அவள் ஏன் பறித்துக் கொள்கிறாள்? சின்னியின் உரிமை உணர்வில் குபீர் என்று தீப் பற்றிக் கொண்டது.

கவிந்து வந்துகொண் டிருக்கும் இருளில் அவள் ஆலமரத்தடியை நோக்கி ஓடி வந்தாள். அங்கே பஸ் நின்றிருந்தது. பிரேமாவின் வீட்டின் முன்—அதோ, தெரு விளக்கு அடிக்கும் வெளிச்சத்தில் . .

பட்டுச் சட்டையும் சரிகை மேல்வேட்டியும் அணிந்து . . அவளுடைய ஐயாதாம் அவர்! சந்தேகமே இல்லை.

இரைக்க இரைக்க ஓடி வந்தாள் சின்னி.

பிரேமாவின் கையைப் பற்றிக்கொண்டு செல்லமுத்து நின்றிருந்தான். கண்ணம்மா பூட்டைத் திறந்துகொண் டிருந்தாள்.

கொதித்தெழுந்த உணர்வுடன் சின்னி பின்னாலிருந்து அப்பனின் கையைப் பற்றி இழுத்தாள்.

அவள் திடுக்கிட்டுத் திரும்புவதற்குள் கண்ணம்மா கதவைத் திறந்துவிட்டு, ''ஐயோ!'' என்று கூவினாள்.

''பாருங்க, ஓட்டைப் பிரிச்சு எந்தப் பயலோ உள்ளாற வந்து பெட்டி சட்டியை எல்லாம் உடைச்சு . .'' அழுகுரலில் ஓலமிட்டுக் கொண்டு தன் தகரப் பெட்டியில் இருந்த உடைமைகளை எல்லாம் அவள் அவசரமாக எடுத்து இறைத்தாள். ''பணத்தைப் பார்த்து எடுத்திருக்கிறாங்க. நேத்து நீங்க தந்த பணத்திலேதான் மிச்சம் வச்சிருந்தேன். எஞ் சம்பளப் பணங்கூடப் பத்து ரூபாய் உண்டு. சட்டிபானை எல்லாம் உடைச்சுப் போட்டு, பட்டப் பகலிலே தெரிஞ்சு வேணுமின்னு செய்தாப்போலச் செய்துட்டாங்களே!''

சொல்லிச் சொல்லி அவள் பிரலாபித்தாள்.

''இந்தப் பக்கம் நெடுகிலும் களவாணிப் பயலுகதான், கண்ணம்மா. நான் போலீஸிலே தகவல் கொடுத்துப் போடறேன் இப்பவே. இன்னம் சாமான் சட்டி எதுனாலும் போயிருக்குதா பார்'' என்றான் செல்லமுத்து.

''எனக்கு இந்த ஊரே புடிக்கலிங்க. தலைக்குத் தலை கண்டபடி வாயிலே வந்தாப்போலப் பேசுறாங்க, நாயின்னும் பேயின்னும். எங்கனாலும் போயிடலாம் போலிருக்கு!''

கண்ணீர்த் துளிகள் அவளுடைய எலுமிச்சம் பழக் கன்னங்களில் உருண்டு விழுந்தன.

சின்னியின் பொறுமை இதற்குமேல் நீடித்திருக்கவில்லை.

''நீ ஏன் எங்க ஐயனின் சம்பளப் பணமெல்லாம் புடுங்கிக்கிட்டே? நல்லா வேணும். எங்கம்மாதான் மொட்டையனை வுட்டு வூட்டிலே பூந்து திருடச் சொன்னாங்க!''

சிறுமியின் விழிகள் பளீரென்று ஒளிர்ந்தன. பருத்திப் பஞ்சுபோல் கள்ளங்கவடற்று வெடித்த உண்மையைக் கேட்டதும் கண்ணம்மா பளீரென்று அறை வாங்கினவள் போல் திடுக்கிட்டாள்.

''உங்க ஐயாவா? இவுரா?''

''ஆமாம், எங்க ஐயாதான்!'' - உரிமையுடன் செல்லமுத்துவின் கையைப் பற்றினுள் சின்னி.

உறுத்துப் பார்த்த செல்லமுத்துவுக்குத் திடீரென்று முளைத்த அந்தக் குட்டிச்சாத்தானை அப்படியே வெளியே பிடித்துத் தள்ள வேண்டும்போல ஆத்திரம் துடித்தது.

''ந்தா! இங்கே எங்கே வந்தே?'' என்று அந்தப் பிஞ்சுக் கரத்தை உலுக்கி அவன் அதட்டினுன்.

''உடுங்க!'' என்ற கண்ணம்மா விழிகளை உருட்டி அவனைச் சுழற்றிச் சுழற்றி அடித்தாள்.

''பொய்யா சொன்னீங்க, பெண்சாதி புள்ளை இல்லாத தனியாளுன்னு? பச்சைத் துரோகம் பண்ணிப்போட்டா? பாவி! நம்பினேனே?''

இந்தத் தாக்குதலில் அரண்டு போன செல்லமுத்து குற்றவாளியாய்ப் பதுங்கினுன்.

'பெண் அபலையாய் இருக்கும்வரை அநுபவி. புலிபோல் சீறினுல் பின்வாங்கு' என்ற அநுபவக் கீற்றின் அடிச்சுவட்டிலே அடுத்த கணம் அவன் மௌனமாக வெளியேறினுன்.

கண்ணம்மா அரற்றி அரற்றி அழுதாள்; விம்மினுள். அவளுக்கு உரிமையில்லாத பொருள் அவளுக்குத் தக்கவில்லை. ஓட்டைக் குடிலுக்குள் உடைந்த பானைதான் அவளைக் கண்டு அநுதாபப்படுவதுபோல் காட்சி அளித்தது.

தெருவிலே சின்னி வெற்றிப் பெருமிதத்துடன் தந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு வீட்டுக்கு நடந்துகொண் டிருந்தாள். ★

—ஜூலை, 1955.

# நொண்டிக் குருவி

''காக்கை குருவி எங்கள் சாதி—நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்''

என்று பாடிக்கொண்டே வீட்டுக்குள் நுழைந்தேன். கல்லூரியிலிருந்து மாலையில் வீடு திரும்பும் எனக்குச் சாதாரணமாக அலுப்பும் சலிப்பும் நிறைந்திருக்கும். அன்று மட்டும் என் மனத்தில் குதூகலம் பொங்கி வழிந்துகொண் டிருந்தது. என் அறைக்குள் சென்று புத்தகங்களையும் பையையும் மேஜைமேல் சாய்த்தேன். இரண்டு கைகளையும் ஒரு தடவை மேலே உயர்த்தியபடியே உதறிக்கொண்டேன். 'அப்பப்பா, என்ன புழுக்கம்!' என்று சொல்லிக்கொண்டே முகத்தில் வழிந்த வேர்வையைத் துடைத்துவிட்டேன். பிறகு பையை எடுத்துக்கொண்டு அப்பாவைப் பார்க்க மாடிக்குச் சென்றேன்.

''உள்ளே வரலாமா?'' என்று மெல்லிய குரலில் கேட்டுக்கொண்டே கதவைத் தட்டினேன்.

''ஜானகி, வாயேன். இப்பொழுதுதான் உன்னைப்பற்றி நினைத்துக் கொண் டிருந்தேன். உனக்கு நூறு வயசு'' என்று சொல்லிக்கொண்டே கதவைத் திறந்தார் அப்பா.

''எதற்காக இவ்வளவு அவசரமாக என்னைப் பார்க்க வந்தாய்?'' என்று என்னை விசாரித்தபடியே தம் மேஜைமேல் இருந்த ஏதோ மஞ்சள் தடவிய கடிதத்தை மறைத்துவிட்டு அப்பா தம் இடத்தில் உட்கார்ந் தார். எதையும் என்னிடம் மறைத்து வைக்காத அவருடைய அந்தச் செயல் எனக்கு வியப்பைத் தந்தது.

''அப்பா, இன்று நடந்த கல்லூரிக் கலை விழாவில் எனக்கு இரண்டு பரிசுகள் கிடைத்திருக்கின்றன. பார்க்கிறீர்களா?'' என்றேன்.

''என்ன பரிசு? குங்குமச் சிமிழா, குத்து விளக்கா?'' என்று கேட் டார் அப்பா. அவர் கேள்வியில் அலட்சியமும் முகத்தில் கேலியும் கலந் திருந்தன. அப்பாவிடம் தனியாக எட்டு வருஷம் பழகியிருக்கிறேன். ஒரு சமயங்கூட அவர் என்னிடம் இவ்வளவு அலட்சியமாகப் பதில் அளித்ததே இல்லை. அவருடன் நான் எவ்வளவோ தடவை வேடிக்கை யாகப் பேசியிருக்கிறேன். ஆனால் இந்தத் தடவை மட்டும் அவருடைய வார்த்தைகள் என்னை மிகவும் துன்புறுத்திவிட்டன. என் கண்களில் நீர் துளும்பாதபடி என் உணர்ச்சியை அடக்கிக்கொண்டேன்.

''அம்மாவைப் போலவே உன் நிறம் பொன்னாக இருக்கிறது. உன் எடுப்பான மூக்கும் விழியும் அவளையே நினைவூட்டுகின்றன. நீ நடந்து வரும்போதும் கைகளை வீசிக்கொண்டு பேசும்போதும் காரியங் களைச் செய்துகொண்டே பாடும்போதும் உன் உருவம் என் கண்களில் தோன்றுவதே இல்லை. உன் அம்மாதான் இன்னும் உயிருடன் வீட்டில்

நடமாடுவதுபோல உணருகிறேன்'' என்று அடிக்கடி என்னிடம் சொல்லும் அப்பாவா என் மனம் நோகும்படி இப்படிப் பேசினுர்?

''ஜானகி, வேடிக்கையாகத்தான் கேட்டேன். இதைப் போலத்தான் அவளும் என்னிடம் ஏதாவது மிகவும் ஆசையாகச் சொல்ல வருவாள். நான் கொஞ்சம் அலட்சியமாகப் பேசிவிட்டாலோ உன் முகம் இப்பொழுது வாடி யிருக்கிறதே, இதைப்போல வாடிவிடும். உடனே நான் என் வேடிக்கைப் பேச்சுக்கு உன் அம்மாவிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்வேன்'' என்று அவர் பேச்சை முடிப்பதற்குள்ளாகவே, ''அம்மாவிடம் நீங்கள் மன்னிப்புக் கேட்பதுகூட உண்டா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டேன். கொஞ்ச நேரத்துக்கு முன்பு அப்பாவின் மேல் இருந்த என் கோபம் பறந்தோடிவிட்டது.

''ஆமாம், ஜானகி. கல்யாணமான புதிதில் நான் எவ்வளவோ தடவை அவளிடம் மன்னிப்புக் கேட்டிருக்கிறேன். 'தெரிந்தோ தெரியாமலோ ஏதாவது நான் பிழைகள் செய்திருந்தால் மன்னித்துவிடு' என்று சாகும்பொழுதும் அவளைக் கேட்டேன். 'உங்களை மன்னிக்க நான் யார்? அப்படி ஒரு பிழையும் நீங்கள் எனக்குச் செய்யவில்லையே!' என்று மலர்ந்த முகத்துடன் பதில் தந்த உன் அம்மாவின் இனிய சுபாவத்தை இன்றும் என்னுல் மறக்க முடியவில்லை. ஆனுல் அவளுக்குத் தந்த ஒரு வாக்குறுதியை மட்டும் கொஞ்ச காலம் வேண்டுமென்றே மறந்தே விட்டேன்'' என்று தழுதழுத்த குரலில் பேசி முடித்தார்.

அம்மாவைப் பற்றிய பேச்சோ நினைவோ வந்துவிட்டால் அப்பா பிரமை பிடித்தவர்போல் சிறிது நேரம் அப்படியே உட்கார்ந்துவிடுவார். அப்போதெல்லாம் என் மனமும் வேதனையில் ஆழ்ந்துவிடும். நல்ல வேளையாக அப்பாவே என் பரிசைப்பற்றி மீண்டும் விசாரித்தார்.

கல்லூரியில் நடைபெற்ற கலைவிழாவைப் பற்றியும், 'காக்கை குருவி எங்கள் சாதி' என்ற தலைப்பில் நான் பிரசங்கம் செய்து இரண்டு பரிசு பெற்ற விவரத்தையும் அவருக்குக் குதூகலத்துடன் எடுத்து உரைத்தேன். அவர் என்னைப் பாராட்டுவார் என்று மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்தேன்.

''ஜானகி, உன் பிரசங்கம் மிகவும் நன்ருக இருந்திருக்கலாம். அதைப் பாராட்டிப் பலர் பரிசுகளையும் அளித்திருக்கலாம். நானும் என் கல்லூரி நாட்களில் லட்சிய வாழ்வை வற்புறுத்திப் பேசியிருக்கிறேன். ராஜரிஷி ஜனகனைப்போல வாழ்க்கை நடத்தவேண்டும் என்று கனவு கண்டுகொண் டிருந்தேன். என் வாழ்க்கையில் உனக்கு ஜானகி என்று பெயர் வைக்க முடிந்தது. ஆனுல் ஜனகர் பெற்ற ஞானத்தை என்னுல் அடைய முடியவில்லையே!''

அப்பா நல்ல வேளையாக அத்துடன் நிறுத்திக்கொண்டார். அதற்கு மேலும் கொஞ்ச நேரம் பேசியிருந்தால் நான் அங்கேயே அழுதிருப்பேன். ஈரத் துணியைப் பிழிந்ததுபோல என் உள்ளம் வேதனையால் நைந்து கசங்கியிருந்தது. கண்களில் நீர் மல்காமல் எப்படியோ பொறுத்துக்கொண்டேன். இரண்டாவது பரிசு பெற்ற கமலாவின் வீட்டில் அவள் அம்மாவும் அண்ணனும் எவ்வளவு பாராட்டினுர்கள்! என்னைக் கல்லூரி முழுவதும் கொண்டாடி என்ன பயன்? நான் பெற்ற பரிசைப்பற்றி ஒரு வார்த்தை அப்பாவுக்குச் சொல்ல விருப்பம் இல்லை. ஜனகராம் ஜனகர்! பெற்ற பெண் அடைந்த பரிசைப் பாராட்டத் தெரியவில்லை. இப்படியா அந்த ஜனகர் அருமைச் சீதையை வளர்த்திருப்பார்? பெண்ணின் பெருமையை அறிந்து போற்றத் தாய் என்று ஒருத்தி அவசியம் வேண்டித்தான் இருக்கிறது. ''பாவம், ஜானகி தாயில்லாப் பெண். அம்மா இருந்திருந்தால் அவளுக்கு எப்பொழுதோ கல்யாணம் நடந்திருக்கும். அவருக்கோ பெண்ணிடத்தில் அலட்சியம்'' என்று பக்கத்து

வீட்டு மாமி பேசுவது உண்மைதான் என்று பல எண்ணங்கள் ஒவ்வொன்ருகத் தோன்றிக்கொண்டே வந்தன.

''ஜானகி, ஏன் பேசாமல் இருக்கிருய்? நான் சொன்னது உண்மைதான். நீ பேசிவரும் லட்சியங்களை வாழ்க்கையில் நடத்திக் காட்ட வேண்டிய காலம் வந்துவிட்டது'' என்ருர் என் அப்பா சிரித்துக்கொண்டே. எரிமலை உள்ளுக்குள் புகைந்துகொண் டிருக்கும்போது அருகில் உள்ள நிலங்களில் வெடிப்புத் தோன்றுமே, அதைப்போல இருந்தது அப்பாவின் சிரிப்பு.

''ஏன்? ஹானர்ஸ் படிப்பு முடிந்ததும் காக்கையையும் குருவியையும் பிடித்து வீட்டில் வளர்த்து வரவேண்டும் என்பது உங்கள் ஆசையா? நீங்கள் விரும்பினுல் அப்படியே செய்கிறேன்'' என்று அடக்கி வைத்திருந்த ஆத்திரத்தைக் கொட்டிவிட்டுப் படபட என்று மாடிப் படிகளில் இறங்கிக் கீழே சென்றுவிட்டேன். என் அறைக்குச் சென்று மேஜைமேல் தலை கவிழ்ந்தபடியே உட்கார்ந்தேன்.

'பெண் உள்ளத்தை அறிய முடியாத வேதாந்தி. இவருடன் வாழ்ந்தது போதும்' என்றுதானே அம்மா எட்டு வருஷங்களுக்கு முன்பே மறைந்துவிட்டாள்? அந்த மாதிரி நானும் போய்விட்டால்தான் என்ன? இல்லை, அம்மாவாவது இப்பொழுது இருந்திருந்தால் அவள் மடியில் தலை வைத்து வேதனை தீர அழுது தீர்த்துவிடலாமே! அவள் இப்பொழுது இருந்திருந்தால் நிச்சயமாக என்னை ஹானர்ஸ் வரை படிக்க வைக்க அநுமதித்திருக்க மாட்டாள். அவளுக்குப் பெண்கள் அதிகமாகப் படிப்பது பிடிக்காது. எனக்குச் சீக்கிரமே கல்யாணம் செய்து வைத்திருப்பாள். பரவாயில்லை. அன்பும் பிரியமும் இல்லாத இந்த அப்பாவிடம் இருந்து மனம் புழுங்குவதைவிட அவரிடமே....

என்னை அறியாமலே வெட்கம் என் சிந்தனைப் போக்கைத் துண்டித்துவிட்டது. மனம் கட்டுக்கு அடங்காமல் எங்கேயோ செல்வதைப் பார்த்து எனக்குள்ளேயே சிரித்துக்கொண்டேன். அம்மாவைப்பற்றி நினைத்ததில் என் உள்ளம் சிறிது ஆறுதல் பெற்றிருப்பதாக எண்ணினேன். அறையில் பெரியதாக மாட்டியிருந்த அவளுடைய உருவப் படத்தின் முன்னுல் ஒரு குத்துவிளக்கு இருந்தது. அதை ஏற்றினேன். 'அம்மா! இந்த வீட்டில் இருந்து நான் சலித்துவிட்டேன். இதோ இந்த வருஷம் படிப்பும் முடிந்துவிட்டது. எப்படியாவது சீக்கிரம்..' அதற்கு மேல் வார்த்தை எழவில்லை. தூண்டிய விளக்கொளியில் அம்மாவின் முகம் புன்னகை பூத்து விளங்கியது. இனி என் வாழ்வில் புதிய மலர்ச்சி தோன்றும் என்ற நம்பிக்கை பிறந்தது.

அரை மணி நேரம் கழிந்திருக்கும். அப்பா எங்கேயோ வெளியே புறப்பட்டுச் சென்ருர். அவர் மேஜைமேல் நான் வைத்துவிட்டு வந்த என் தங்கக் கோப்பையை எடுத்துவர மாடிக்குச் சென்றேன். அப்பாவின் டைரி மேஜைமேல் திறந்து கிடந்தது. என்னைப்பற்றி அவர் ஏதோ எழுதியிருப்பதும் தெரிந்தது. படபடத்த நெஞ்சுடன் டைரியை எடுத்தேன். சடசட என்று சிறகடித்துக்கொண்டு ஒரு மூலையிலிருந்து இன்னெரு மூலைக்கு ஒரு குருவி பறந்தோடியது. நடுங்கிய கைகளில் டைரியைப் பிடித்தபடியே சில வார்த்தைகளை மட்டும் படிக்க முடிந்தது.

''ஜானகி தாயில்லாப் பெண்ணுகிவிட்டாள். அவளை நெடு நாள் கல்யாணம் செய்யாமல் வைத்திருந்தால் பலர் பலவிதமாகச் சொல்வார்கள். பேச்சுக்கு இடம் வைக்காதீர்கள்'' என்று அவள் சொல்லிவிட்டுப் போய் எட்டு வருஷங்கள் கழிந்துவிட்டன. அவள் என்னை விட்டுப் பிரிந்ததனுல் ஏற்பட்ட தனிமையை என்னுல் சகிக்க முடியவில்லை. என் வாழ்வின் ஒவ்வோர் அம்சத்திலும் ஒன்றியிருந்த அவளுடைய பிரிவு என்னைப் புழுப்போலத் துளைத்து வருகிறது. ஜானகியின் நடையிலும்

பேச்சிலும் சிரிப்பிலும் நான் தினந்தோறும் அவள் சாயலையே காண்கிறேன். மனைவியின் பிரிவினால் என் மனத்தில் பதிந்திருந்த வடுவை ஜானகியினால்தான் ஆற்ற முடியும் என்று நினைத்தேன். எனவே உடனே அவளைக் கல்யாணம் செய்துகொடுக்காமல் கல்லூரியில் சேர்த்தேன். என் மனைவி என்னை விட்டு நீங்கவில்லை என்ற பிரமையை அவள் தோற்றமும் பேச்சும் தந்து வந்தன. என் வேதனையை ஆற்றும் அருமருந்தாக அவள் எவ்வளவு நாள் இங்கே இருப்பாள்? அவளும் அன்பை நாடி ஏங்கும் வயதை எட்டிவிட்டாள். இந்தச் சித்திரையில் அவள் புக்ககம் எப்படியும் போகத்தான் போகிறாள். ''செடி கொடி விலங்குகளுடன் பழகும் என்னாலேயே வளர்த்த பெண்ணான சகுந்தலையை விட்டுப் பிரிய முடியவில்லையே. அன்றாட வாழ்க்கையில் உள்ள சாதாரண மனிதர்கள் தங்கள் சொந்தப் பெண்ணை எப்படித்தான் புக்ககத்துக்கு அனுப்புகிறார்களோ?'' என்று கண்வர் சாகுந்தல நாடகத்தில் வருத்தமடைந்தாராம். அது எனக்கு மிகவும் பொருத்தமாகவே இருக்கிறது....

அதற்குமேல் என்னால் படிக்க முடியவில்லை. இனி ஒரு நாளும் அப்பாவின் மனம் நோகும்படி நடந்துகொள்வதில்லை என்று உறுதி கொண்டேன். ஆனால் அடுத்த நாளே—

## 2

அடுத்த நாள் கல்லூரி விடுமுறை. நான் பரிசு பெற்றதற்காக என் தோழிகளுக்குச் சிற்றுண்டி விருந்து நடத்த எனக்கு விருப்பம். மத்தியானம் சாப்பிட்டபிறகு என் விருப்பத்தை அப்பாவிடம் சொன்னேன். ''சரி, அதற்கு என்ன?'' என்றார்.

''உங்கள் மாடி அறைதான் பெரிதாக இருக்கிறது. அங்கே பார்ட்டி நடத்த இடம் தருகிறீர்களா?'' என்றேன்.

அவருடைய சம்மதி கிடைத்துவிட்டது. இனிமேல் தோழிகளுக்குச் சமாசாரத்தைச் சொல்லி அழைத்துவர ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற வேகம் என்னை உந்தித் தள்ளியது. ''ஒவ்வொருவராகச் சொல்லி அழைத்து வருவதற்குள் மூன்று ஆகிவிடும். அதற்குள் இங்கே எல்லாம் தயாராகிவிடும் அல்லவா? ஆபீஸ் அறையை மட்டும் விருந்தாளிகள் வந்து தங்கிச் செல்வதற்கு ஏற்ற வகையில் ஒழுங்கு செய்துவிடுகிறீர்களா?'' என்று நிதானமாகக் கேட்டேன்.

''நீ வருவதற்குள் எல்லாம் தயாராகிவிடும். நானும் சாப்பிட்டு விட்டு மயிலாப்பூர் போய்விடுவேன். இல்லாதபோனால் உங்கள் விருந்துக்கு என்னைத் தலைமை வகித்துப் பேசச் சொல்லிவிடுவீர்களே!'' என்று அப்பா சிரித்துக்கொண்டே சொன்னார்.

அப்பாவைப்பற்றி எவ்வளவு தவறாக எண்ணிவிட்டேன்! அவருக்குப் பெண்ணாகப் பிறந்ததற்கு நான் பெருமைப்பட வேண்டும். அறிவும் குணமும் நிறைந்த இவரையா நான் உணர்ச்சியற்றவர், வெறும் புரொபசர், வறட்டு வேதாந்தி என்று இழிவாக நினைத்தேன்! இனி அவ்விதம் கனவிலும் நினைக்கமாட்டேன் என்று எண்ணிக்கொண்டே தோழிகள் வீட்டுக்குப் புறப்பட்டேன்.

நான் வீடு திரும்பியபோது மணி நாலாகிவிட்டது. என் நெருங்கிய தோழிகள் அனைவரையும் அழைத்து வந்துவிட்டேன். எல்லாரையும் மாடிக்குப் போகச் சொல்லிவிட்டுச் சிற்றுண்டிக்கான ஏற்பாடு எதுவரையில் இருக்கிறது என்று பார்ப்பதற்காகச் சமையல் அறைக்குச் சென்றேன். சமையல்கார மாமி தயாராக இருந்தாள். அப்பாவே ஒவ்வொன்றையும் கவனித்துவிட்டு இப்பொழுதுதான் சென்றாராம். நான் எதிர்பார்த்ததற்கு மேலாகவே எல்லாம் அமைந்திருந்தன. என் தோழிகள்

எவ்வளவு மகிழ்ச்சி அடைவார்கள் என்று எண்ணிப் பூரித்துப் போனேன். அடுத்த கணமே எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. மாடியிலிருந்து என் தோழிகள் எல்லோரும் கொல்லென்று சிரிப்பது காதில் விழுந்தது. என் மனத்தில் நிறைந்து வழிந்த மகிழ்ச்சி ஒரே நிமிஷத்தில் காட்டாறு போல வடிந்து மறைந்துவிட்டது. ''என்ன அது?'' என்று கேட்டுக் கொண்டே மாடிக்கு விரைந்து ஓடினேன்.

மாடி அறையில் அவர்கள் நின்றிருந்தார்கள். அங்கே ஒரே குப்பை கூளம்; பஞ்சும் வறட்டியும் சிதறிக் கிடந்தன. அறையின் மத்தியில் குருவிக் கூடு ஒன்று கிடந்தது. நொண்டிக்கொண்டே ஒரு குருவி அதைச் சுற்றி வந்தது. இதைப் பார்த்ததும் எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

''கல்லூரியில் பேசியதைப் போல வீட்டிலும் குருவி வளர்க்க ஆரம்பித்துவிட்டாள் ஜானகி'' என்றாள் ஒருத்தி, குறும்புத்தனமாகச் சிரித்துக்கொண்டே.

''ஜானகி சீக்கிரம் காக்காய் பிடித்து வளர்க்கவும் போகிறாள்!'' என்றாள் இன்னொருத்தி. என் முகம் சுண்டிவிட்டது.

''போதும் வேடிக்கை. ஆசையாக அழைத்திருக்கிறாள். அவள் மனம் நோகும்படி நடந்துகொள்வது நியாயமா? எங்கிருந்தோ வந்த குருவி கூட்டைத் துவம்சம் செய்திருந்தால் அதற்கு அவள் என்ன செய்வாள்? ஜானகி, நீ போய் வேண்டிய ஏற்பாடுகளைச் செய். நான் ஒரு நிமிஷத்தில் அறையைச் சுத்தம் செய்துவிடுகிறேன்'' என்று கமலா மட்டும் அவர்களை அடக்கிச் சமாளித்திருக்கா விட்டால் நான் அப் பொழுது இருந்த களேபரத்தில் அழுதே இருப்பேன்.

''கூண்டையும் குருவியையும் என்ன செய்வது?'' என்றாள் கமலா.

''தூக்கி எறி. விரட்டு சனியனை!'' என்றேன் எரிச்சலுடன்.

''பாவம், அது என்ன செய்தது ஜானகி? தாயைப் பிரிந்து தனியாக இங்கே வந்துவிட்டது. அதைத் துரத்துவானேன்? அது இங்கேயே ஒரு மூலையில் கிடக்கட்டுமே'' என்று என்னைக் கமலா சமா தானம் செய்தாள்.

அதற்கு மேல் நான் ஒன்றும் சொல்லவில்லை. எல்லோருக்கும் சிற்றுண்டி வழங்குவதில் கவனம் செலுத்தினேன். ஆரம்பத்தில் இருந்த உற்சாகம் எல்லாம் இந்தக் குருவி செய்த கூத்தில் குன்றிவிட்டது. மற்றவர்களின் ஏளனத்துக்கு ஆளானோமே என்ற வருத்தம் மனத்தில் எழ எழக் குருவியின் மேல் கோபமும் அதிகரித்தது.

சிற்றுண்டி முடிந்து சிநேகிதிகள் ஒவ்வொருவராகத் தங்கள் வீட்டுக்குப் புறப்பட்டார்கள். மயிலாப்பூருக்குக் கமலா புறப்பட்டாள். ''இரு, வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கீழே சென்றேன். ஒரு பழைய கூடையைத் தேடிப் பிடித்துக் கொண்டுவந்தேன்.

''எல்லா விருந்தாளிகளையும் அனுப்பிவிட்டேன். இந்த வேண்டாத விருந்தாளியைக் காதைப் பிடித்துத் திருகி அனுப்ப வேண்டாமா?'' என்று உதட்டைக் கடித்துக்கொண்டே கமலாவிடம் சொன்னேன்.

''பாவம்! அதை ஒன்றும் செய்யாதே. இங்கேயே இருக்கட்டுமே!'' என்று அவள் பரிந்து பேசினாள். பிடிவாதமாகக் குருவிக் கூட்டையும் குருவியையும் 'கூடையில் போட்டு எடுத்துக்கொண்டேன். கடைசியில் அந்தக் கூடையை லஸ் சர்ச் ரோட்டுக்கு அருகில் ஓர் ஓரமாக வைத்து விட்டு நிம்மதியாக வீடு திரும்பினேன்.

நான் வீட்டுக்குத் திரும்பியபோது அப்பா வாசலில் நின்றுகொண் டிருந்தார். ''மாலைப்பொழுது வேடிக்கையாகக் கழிந்ததா?'' என்று

என்னை விசாரித்தார். அவர் உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவதாக எனக்குத் தோன்றியது.

''ஆமாம்'' என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு உள்ளே சென்றேன். தோழிகளின் நடுவே அடைந்த அவமானம் இன்னும் என் நெஞ்சை விட்டுப் போகவில்லை. அப்பா மாடிக்குச் சென்றார். சில நிமிஷங்களுக்குப் பிறகு அவர் கீழே இறங்கி வந்தார். ''ஜானகி, மேலே ஒரு குருவி இருந்ததே, அது எங்கே?'' என்று கேட்டார். அவர் குரலில்தான் என்ன அக்கறை! என்ன அன்பு!

''வந்த விருந்தாளிகளோடு வேண்டாத விருந்தாளியையும் அனுப்பி விட்டேன்'' என்று அலட்சியமாகப் பதில் அளித்தேன்.

''என்ன?'' என்றார் அப்பா. ஆச்சரியமும் கவலையும் அவர் குரலில் தோய்ந்திருந்தன.

''எனக்குப் பிடிக்கவில்லை, துரத்திவிட்டேன்'' என்றேன்.

''ஜானகி, நீ செய்தது ரொம்பப் பிசகு. பாவம், அது உனக்கு என்ன தப்புச் செய்துவிட்டது?''

''என்ன செய்ததா? அவர்கள் வந்திருந்த சமயத்தில் கூட்டைத் துவம்சம் பண்ணி அறை முழுவதும் பஞ்சும் குச்சியுமாக ஒரே கந்தர கோளமாக்கி இருந்தது. அதனால் நான் எவ்வளவு அவமானப்பட்டேன் தெரியுமா?'' என்று சற்றுக் கடுமையாகவே பேசினேன்.

''தாயைப் பிரிந்து வந்த குருவியோ என்னவோ? இடம் புதிது; பயம் வேறு. வீட்டுக்குப் புதிதாகத் தனியே குழந்தை வந்தால் அழுது பிடிவாதம் பிடிப்பதில்லையா? அதனால் அதை நாம் உடனே அடித்துத் துரத்திவிடுகிறோமா?''

''குழந்தையும் குருவியும் ஒன்றாகிவிடுமா?''

''ஜானகி, நீ நேற்றுக் கல்லூரியில் பேசியதை இவ்வளவு விரைவில் மறந்துவிடுவாய் என்று நான் நினைக்கவில்லை. பரிசும் பாராட்டும் விருந்தும் கேளிக்கையுமே உன் நினைவில் இருக்கின்றனவே ஒழிய உண்மையான அன்பு உன்னிடம் சிறிதும் இல்லை. வெறும் பாசாங்கும் போலி நடிப்புமே நீ கல்லூரியில் கற்றுக் கொண்டாயா? நொண்டிக் குருவிக்கு இரக்கப்படாத நீயா நேற்றுப் புத்தரின் கருணையைப் பற்றியும் பாரதியின் 'காக்கை குருவி'யைப் பற்றியும் பேசினாய்?''

அப்பா ஏன் ஒரு சாதாரணக் குருவியைப் பிரமாதப்படுத்துகிறார் என்று எனக்குத் தெரியவில்லை. எனக்கும் கோபம் வந்துவிட்டது.

''அப்பா, நீங்கள் ஆத்திரத்தில் பேசுகிறீர்கள். பொல்லாத குருவியிடம் என்ன அன்பு வேண்டியிருக்கிறது? இங்கே அது வளர்ந்துவர நான் நிச்சயம் இடம் தர மாட்டேன். வீடு முழுவதும் மலத்தைக் கழித்து அசுத்தம் செய்து சதா தொல்லை கொடுத்துக்கொண்டே இருக்கும் இந்தக் குருவியிடம் இவ்வளவு அன்பாக இருக்கிறீர்களே! இதன் கால் காயம் குணமானதும் தானே இது எங்கேயாவது ஓடிவிடப் போகிறது. பிறகு இங்கே வரவே வராது. சில நாளைக்கு மட்டும் இங்கே இருந்து வேண்டிய வசதிகளை அநுபவித்துவிட்டு இறகு முளைத்ததும் பறந்து போய்விடக் கூடிய இந்தக் குருவியிடம் இவ்வளவு அன்பு வைக்கிறீர்களே. நீங்கள் ஜனகர் அல்ல, அப்பா; ஜடபரதர்! அவர் மானைக் கண்டு மனம் தடுமாறினார். நீங்கள் குருவியைக் கண்டு....''

''அதிகமாகப் பேசாதே. நீ எனக்குப் புதிதாக ஒன்றும் சொல்ல வேண்டாம். எனக்குத் தெரியும் எல்லாம். இறகு முளைத்தால் பறந்து விடுமாம். உண்மைதான். நீயும் ஒரு நொண்டிக் குருவிதானே!

கொஞ்ச நாள் இங்கே இருந்து உண்டு உடுத்துக் களித்துப் பேசி விளையாடுகிறாய். இப்பொழுதே உனக்குச் சிறகு முளைத்துவிட்டது. நீ வேறு எங்கேயோ ஒரு புது வீட்டுக்குப் பறந்து போகப் போகிறாய் என்பதும் நிச்சயம். நீ என்னை விட்டுப் பிரிந்து செல்லக் கூடியவள் என்பதற்காக உன்னை நான் உதாசீனமாக நடத்துகிறேனா?'' அப்பாவின் குரல் தழுதழுத்தது. மேலும் ஏதோ பேச ஆரம்பித்தார். இதுவரை அவர் பேசிய வார்த்தை ஒவ்வொன்றும் என்னை முன் போலக் குத்திக்கொண்டிருந்தது. என் பொறுமை எல்லை மீறியது. மேலும் அவர் பேச்சைக் கேட்க எனக்கு விருப்பமில்லை.

''எனக்குப் பிடிக்கவில்லை. துரத்திவிட்டேன். இந்த நொண்டிக் குருவியையும் உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் துரத்திவிடுங்கள்! எங்கேயாவது போய்ச் சாகட்டும்'' என்று ஆத்திரத்துடன் சொல்லிவிட்டு மேலே அங்கே நிற்க முடியாமல் என் அறைக்குச் சென்று படுத்தேன்.

அப்பாவுடன் சேர்ந்தாற்போல இருபத்துநான்கு மணிநேரம் நிம்மதியாகவே இருக்க முடியாது. நேற்று மாலை எவ்வளவு ஆசையாக வந்தேன்! ஏதோ அலட்சியமாகப் பேசி என் மனத்தை நோகச் செய்தார். காலையிலே சர்க்கரைப் பாகிலே தோய்ந்த திராட்சை போல இனிக்க இனிக்கப் பேசினார். இப்பொழுதோ வேப்பங்காய், எட்டிக்காய், சுண்டைக்காய், பாகற்காய் இவை எல்லாம் சேர்ந்தாற்போலக் கசப்பாகப் பேசுகிறார். எப்படித்தான் இவருடன் அம்மா பல வருஷம் வாழ்க்கை நடத்தினாளோ?

'எல்லாவற்றிலும் அம்மாவையே உரித்து வைத்தாற்போலப் பிறந்திருக்கிறாயே. இந்தப் படபடப்பும் ஆத்திரமும் எங்கிருந்து வந்தன?' என்று அப்பா என்னைப் பல தடவை கேட்டிருக்கிறார். எங்கிருந்து வந்தன? அப்பாவிடம் உள்ள குணம் மகளுக்கு அமைந்ததில் என்ன பிசகு? அப்பா திட்டும் வசவுகளையும் செய்யும் கண்டிப்புகளையும் அம்மாவைப் போலப் பொறுமையாக என்னால் சகித்துக்கொண்டிருக்க முடியாது. இந்தத் தொல்லை போதும் என்றுதான் அம்மா என்னைத் தவிக்க விட்டுச் சென்றாள். தாயில்லாப் பெண் என்று ஊரார் கண்டும் காணாமலும் பேசுகிறார்கள். அப்பா நேரிலேயே, ''நொண்டிக் குருவி, சீக்கிரம் தொலைந்தால் நல்லது'' என்கிறார்.

பல விதமான எண்ணங்கள் தோன்றித் தோன்றி மூளையைக் குழப்பின. கண்களில் நீர் மல்கிக்கொண்டே இருந்தது. எனக்குத் தெரிந்து இந்த மாதிரி அம்மா செத்தபோதுதான் அழுதிருக்கிறேன். நானும் அம்மாவைப்போல நிம்மதியாகச் செத்துவிட்டால்? சீசீ! நான் ஏன் சாக வேண்டும்? அதற்குமேல் என்னால் ஒன்றும் நினைக்க முடியவில்லை. என் அறையில் சூழ்ந்திருந்த இருள் என் மனத்தையும் கவ்விக்கொண்டது.

காலையில் எழுந்திருக்கும்போது மணி எட்டு இருக்கும். தலையணை முழுவதும் கண்ணீரால் நனைந்திருந்தது.

''ஜானகி!'' என்ற அப்பாவின் குரல் கேட்டுப் படுக்கையிலிருந்து எழுந்து கதவைத் திறந்தேன்.

''ஏன் அம்மா, உடம்பு சரியில்லையா?'' என்றார் கனிந்த குரலில்.

''ஆமாம்'' என்றேன். உடனே அதைத் தொடர்ந்து, ''இல்லை'' என்றேன்.

''ஏன், ஒரு மாதிரியாக இருக்கிறாயே!'' என்று நெற்றியைத் தொட்டுப் பார்த்தார்.

''உடம்பு சுடுகிறதே'' என்றார். அவருக்கு இருந்த கவலை வார்த்தைகளில் பிரதிபலித்திருந்ததைக் கவனித்தேன்.

'உள்ளத்தில் எழுந்த கொதிப்பின் வேகம்' என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன்.

''ஜானகி, நேற்று இரவே உன்னிடம் சொல்ல மறந்துவிட்டேன். இன்று உன்னைப் பார்க்க யாரோ வருவதாகச் சொல்லி யிருக்கிறார்கள். அவர்களை வேறு ஒரு நாளைக்கு வரச் சொல்லிவிடுகிறேன்.''

''என்ன அப்பா, ஏதோ புதிர் போடுகிறீர்களே'' என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

''ஜானகி, உனக்குச் சீக்கிரம் கல்யாணம் செய்வதாக உன் அம்மாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற ஏற்பாடுகள் செய்து வருகிறேன். உன் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளை அறிய இயலாதவன் அல்ல நான்.''

அவர் சற்று நிறுத்திக்கொண்டார். தம் மனத்தை அழுத்திவந்த பாரத்தில் சிறிது குறைந்ததுபோல ஒரு பெருமூச்சு விட்டார். அவரைப் பார்க்க எனக்கே பரிதாபமாக இருந்தது. நேற்று இரவு கடுமையாகப் பேசியதற்காக அவர் எவ்வளவு வருத்தப்பட்டுப் பேசுகிறார்! அவருடைய இளகிய உள்ளம் தெரியாமல் நானும் படபடப்பில் பேசிவிட்டேன்.

மயிலாப்பூரில் அவர் எனக்காக ஒரு வரன் பார்த்திருக்கிறாராம். உத்தியோகம், அந்தஸ்து, குணம் எல்லாம் விசாரிக்காமலா இருப்பார்? எல்லா வகையிலும் எனக்கு ஏற்ற வரனும். அவர்கள் வீட்டில் என்னை நன்றாகவே தெரியுமாம். அவர் என் யோசனையைக் கேட்டார். வேளைக்கு ஒரு தரம் இயல்பு மாறும் அப்பாவுடன் இருந்து சலித்த நான், வரனைப் பார்க்காமலே கல்யாணம் செய்துகொள்ளத் தயார் என்று துணிந்து சொல்லிவிட்டேன்.

அதிகம் வளர்ப்பானேன்? என் கல்யாணம் வைகாசி மாதத்தில் விமரிசையாக நடைபெற்றது. என் கைபிடித்தவர் எல்லா வகையிலும் உயர்ந்தவர்தாம். அப்பா எனக்கு எப்பொழுதுமே நல்லதைத்தான் செய்துவருகிறார். முது நெல்லிக்காய் முன்னே கசந்து பின்னே இனிக்கும் என்பார்களே, அது உண்மைதான். அப்பாவின் வார்த்தைகள் எப்போதும் இனிமையாகத்தான் இருக்கின்றன. நான் அவரை எடுத்துக்கொள்ளும் முறையில்தான் மாறுதல்கள் இருக்கின்றன.

கல்யாணம் முடிந்ததும் கையோடு அவர் என்னை அழைத்துப்போக விரும்பினார். துணைக்கு அப்பாவை வரச் சொன்னேன். அவர் வர மறுத்துவிட்டார்.

''ஜானகி, உலகத்தவர் கண்களில் உன் அம்மா என்னை விட்டுப் பிரிந்து சென்றுவிட்டாள்; ஆனால் உண்மையில் நான் அவளை விட்டுப் பிரியவே இல்லை. அன்றும் இன்றும் அவள் என் மனத்தில் நிலையாக இருந்து வருகிறாள். இன்று நீயும் என்னிடமிருந்து புக்ககம் செல்கிறாய். நான் உன்னை ஆத்திரத்தில் நொண்டிக் குருவி என்றேன். நான்தான் இன்று நொண்டிக் குருவி என்று உணர்ந்துகொண்டேன். இந்தக் குருவியை அம்மா கொஞ்ச காலம் பராமரித்து வந்தாள். நீ சிறிது காலம் கவனித்து வந்தாய். இனி இது தன் சொந்த இறகால்தான் பறந்து திரிந்து உணவு தேடிக்கொள்ள வேண்டும். நான் இனிமேல் தனி ஆள். பிறர் அன்பை யாசித்து நிற்க வேண்டிய நிலையில் இருக்கிறேன். என்னை விட்டுப் பிரிந்து செல்கிறாய், சௌக்கியமாக இரு'' என்று ஆசீர்வதித்து வழி அனுப்பினார்.

அப்பாவின் வார்த்தைகள் என் மனத்தை உலுக்கிவிட்டன. அவர் என் பிரிவைத் தாங்க மிகவும் கஷ்டப்படுகிறார் என்பதை உணர்ந்து

காரில் என் கணவருடன் மயிலாப்பூருக்குச் சென்றபோது அப்பாவின் வாடிய முகமே என் கண்முன் ஓவியம்போல நின்றிருந்தது. மிதிலைநகர் எரியும்போது வேதப் பொருளை விசாரணை செய்துகொண் டிருந்த ஜனகனைப் போன்றவர் அல்ல என் தந்தை; மானைக் கண்டு மனம் நெகிழ்ந்த ஜடபரதரும் அல்ல; தாயற்ற சகுந்தலையை ஆசிரமத்தில் வளர்த்த இளகிய உள்ளம் பெற்ற கண்வர் என்றே அவரைச் சொல்லவேண்டும்.

''வீடு வந்ததும் பேசலாம் என்று மௌனமாக இருந்தாயா? இதோ லஸ் சர்ச் ரோட் வந்துவிட்டது. வீடும் வந்துவிட்டது'' என்று சொல்லிக்கொண்டே பெரிய பங்களாவுக்குள் காரைக் கொண்டு போய் நிறுத்தினார் என் கணவர்.

வந்ததும் வராததுமாக அவர் பங்களா முழுவதையும் எனக்குச் சுற்றிக் காண்பிக்கிறேன் என்று கையைப் பிடித்து அழைத்துச் சென்றார். எனக்கு வெட்கமாக இருந்தது; அவர் பின்னால் செல்வதற்கு ஆசையாகவும் இருந்தது.

''மாடியில் சிறிய குடித்தனம் ஒன்று இருக்கிறது. வா, அங்கேயும் போய்ப் பார்க்கலாம்'' என்று அவர் அழைத்தார். என் கையைப் பிடித்துத் தடதடவென்று இழுத்துக்கொண்டே மாடிக்குச் சென்றார். புதிதாகக் குடித்தனக்காரர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப்போகிறாரே என்ற சங்கோசத்தினால் என் முகம் சிவந்தது.

மேலே மாடியில் பெரிய ஹால் ஒன்று இருந்தது. புத்தக அலமாரிகள் நிறைந்திருந்தன. ஹாலின் நடுவே கச்சிதமாக நாலைந்து ஸோபாக்கள் போட்டிருந்தார்கள். சுவரில் ரவிவர்மாவின் சகுந்தலை ஓவியம் மாட்டியிருந்தது. அவள் துஷ்யந்தனுக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருக்கிறாள். நானும் நாளைக்கே அப்பாவுக்கு என் நன்றியையெல்லாம் தெரிவித்து ஒரு நீண்ட கடிதம் எழுதத்தான் போகிறேன்.

''ஜானகி'' என்று அவர் அழைத்த திக்கிலே சென்றேன்.

''இதோ பார். இதுதான் இங்கே உள்ள ஒண்டுக் குடித்தனம். மூன்று மாதத்துக்கு முன் என் மோட்டார் அடியில் சிக்கிச் சாக இருந்தது, இந்தக் குருவிகளில் ஒன்று. அதன் நொண்டிக் காலுக்கு யாரோ அக்கறையாக மருந்து வேறு கட்டியிருந்தார்கள். வளர்த்தவர்களின் அன்பைத் தெரிந்துகொள்ளாத இந்தப் பொல்லாத நொண்டிக் குருவி இங்கே ஓடி வந்துவிட்டதே! காக்கை பருந்து கண்களில் பட்டிருந்தால் இதன் கதி என்ன ஆகியிருக்கும்! ஏதோ என்னிடம் வந்தது, பிழைத்தது!'' என்று சொல்லிக்கொண்டே போனார்.

என் தலை கவிழ்ந்தது. கண்களிலிருந்து இரண்டு சொட்டு நீர்த் திவலைகள் விழுந்து என் கணவரின் பாதத்தை நனைத்தன.

அவர் திடீரென்று பேச்சை நிறுத்தி, என் முகத்தை நிமிர்த்தினார்.

''ஏன், உனக்குக் குருவிகளைக் கண்டால் பிடிக்காதா? உனக்குப் பிடிக்கவில்லை என்றால் துரத்திவிடுகிறேன்'' என்றார் அவர். அவருடைய சாந்தம் ததும்பும் வார்த்தைகள் என் மனத்தின் இருளைப் போக்கடித்தன. உண்மையான அன்பை உணர்ந்தேன். குழந்தையாகட்டும், குருவியாகட்டும், வளர்ப்பவர்களுக்கு வாஞ்சை ஒன்றாகத்தான் இருக்கும் என்பதையும் தெரிந்துகொண்டேன்.

''வேண்டாம், நொண்டிக் குருவி இங்கேயே இருக்கட்டும். எனக்குக் குருவிகளிடம் மிகவும் பிரியம் உண்டு'' என்று மனப்பூர்வமாகப் பதில் அளித்தேன்.

★

—ஜனவரி, 1954.

மகாமகோபாத்தியாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர்

# பிச்சைப் பாட்டு

சென்னையில் இப்பொழுதுள்ள ராஜதானிக் கல்லூரி (Presidency College) ஆரம்பத்தில் ஒரு சிறு பள்ளிக்கூடமாக இருந்தது. அப்போது மாகாணப் பள்ளிக்கூடம் (Provincial School) என்ற பெயரால் அது வழங்கி வந்தது. அக்காலத்தில் அதில் வெவ்வேறு துறைகளில் ஆசிரியர்களாக இருந்தவர்கள் பற்பல அரிய காரியங்களைச் செய்திருக்கிறார்கள். தமிழ் நாட்டிற் சிறந்த புகழ் வாய்ந்தவர்களாக விளங்கிய வித்துவான் தாண்டவராய முதலியார் முதலியவர்கள் அதில் தமிழ்ப் பண்டிதர்களாக இருந்தார்கள். அவர்களுள் ஒருவரான விசாகப் பெருமாளையரென்ற வீர சைவ வித்துவான் இலக்கணப் பயிற்சி மிக்கவர். அவர் இயற்றமிழாசிரியர் என்னும் சிறப்புப் பெயர் பெற்றவர். அவருடைய சகோதரராகிய சரவணப் பெருமாளையரும் தமிழ்ப் புலமை மிக்கவர். இவ்விருவரும் சில நூல்களை இயற்றியுள்ளார்; சில பழைய நூல்களைப் பதிப்பித்தும் இருக்கின்றனர். இவர்களிடத்திற் பாடங்கேட்ட சிறந்த மாணாக்கர்கள் பலர். தில்லையம்பூர்ச் சந்திர சேகர கவிராஜ பண்டிதர் என்பவர் அவர்களுள் ஒருவராவர்.

இவர் தமிழ் மொழியிற் பேரன்புடையவர்; சிறந்த நூற் பயிற்சியுள்ளவர். தம் ஆசிரியர் இயற்றிய பஞ்சலட்சண வினா விடை, பாலபோத இலக்கணம் ஆகியவற்றையும், வேறு நூல்களாகிய நன்னூல் விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, தண்டியலங்காரம், வச்சணந்திமாலை, விஷப் பிரதிவிஷத் திரட்டு, அரபத்த நாவலர் இயற்றிய பரதநூல் முதலியவற்றையும் ஆராய்ந்து பதிப்பித்திருக்கிறார். இவர் பல மாணாக்கர்களுக்குப் பாடஞ் சொல்லியும் வந்தார்; சித்தூர் ஹைஸ்கூலில் பல வருஷங்கள் தமிழாசிரியராக வேலை பார்த்தார்; திரிசிரபுரம் சி. தியாகராச செட்டியார் ஆறு மாதம் ஓய்வெடுத்துக்கொண்ட காலத்தில் கும்பகோணம் காலேஜிலும் பண்டிதராக இருந்து பாடஞ் சொன்னவர்.

மற்ற வித்துவான்களோடு இவர் மனங்கலந்து பழகிப் பொழுது போக்குவார். இவரிடம் பொறாமை என்பது மருந்துக்கும் இல்லை. பழம் புலவர்களுடைய வரலாறுகளை அறிவதிலும்

முன்னோர் பாடல்களைத் திரட்டுவதிலும் இவருக்கு மிக்க ஊக்கம் இருந்து வந்தது. எங்கே சென்றாலும், அங்கே வழங்கும் புலவர் வரலாறுகளையும் பழம்பாடல்களையும் கேட்டு இவர் தொகுத்து வந்தார். பலரிடம் வினாவி அவர்கள் எழுதியனுப்பும் தனிச் செய்யுட்களையும் சேர்த்து வந்தார். பழைய பாட்டென்று யார் எதைச் சொன்னாலும் பொறுமையோடு கேட்டு எழுதிக் கொள்வார். இங்ஙனம் பல வகையாகச் சேர்த்துத் தனிப் பாடற்றிரட்டு என்னும் புத்தகத்தை ஏறக்குறைய எழுபது வருடங்களுக்கு முன் வெளியிட்டார். இக்காலத்தில் பல தனிப் பாடற்றிரட்டுக்கள் உலாவுகின்றன. முதல்முதலில் அத்தகைய நூலை வெளியிட்ட பெருமை சந்திரசேகர கவிராஜ பண்டிதரையே சார்ந்ததாகும்.

இவர் என்பால் அன்புடையவராக இருந்தார். இவருடைய புத்தகத்திற் சேர்த்துக்கொள்ளும்படி நானும் பல செய்யுட்களை எழுதி அனுப்பியதுண்டு. அக்காலத்தில் நான் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்து வந்தேன். இவர் திருவாவடுதுறைக்கு வந்த சமயங்களில் இவரோடு மனமகிழ்ந்து பொழுதுபோக்குவது எனது வழக்கம். என்னுடைய தமிழாசிரியராகிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் காலம் சென்றுவிட்டமையால் பழைய நூல்களில் உள்ள சில சந்தேகங்களை அக்காலத்தில் இவரிடம் கேட்டுத் தெளிந்துகொண் டிருக்கிறேன். கோபம் சிறிதும் இல்லாமல் பொறுமையோடு இவர் பேசுவார்; விஷயங்களை ஆராய்வார்; பிறர் தூஷித்தாலும் கவனியார். தாம் தனிப் பாடல்களைச் சேகரித்த வரலாறுகளைப்பற்றி அவ்வப்போது சொல்வார். அவற்றை அக்காலத்தில் கேட்டபோது எனக்கு அளவிறந்த வியப்பு உண்டாகும். அவர் கூறியவற்றுள் ஒன்றை இப்போது தெரிவிக்கிறேன்.

## 2

சந்திரசேகர கவிராஜ பண்டிதர் சென்னையில் இருந்தபோது வண்ணார்பேட்டையிலுள்ள சஞ்சீவிராயன் தெருவிற் சில வருஷங்கள் வசித்துவந்தார். ஒரு நாள் இரவில் நிலா நன்றாக எறித்தது. இராப் பிச்சைக்காரன் ஒருவன் வீடுதோறும் சென்று அன்னப் பிச்சை வாங்கிக்கொண்டே வந்தான். அவன் பல ஊர்களைச் சுற்றினவன். பல பாட்டுக்களை அவன் அறிந்திருந்தான். "அம்மா, பிச்சை!" என்று மட்டும் சொல்லிப் பிச்சை வாங்காமல், இனிய சாரீரத்தோடு தமிழ்ப் பாடல்களைப் பாடி அன்னங்கேட்பது அவன் வழக்கம்.

பிச்சைக்காரன் பாடிக்கொண்டே சந்திரசேகர கவிராஜ பண்டிதர் இருந்த தெரு வழியே வந்தான். அவனுடைய இனிய குரல் வீட்டுக்குள் இருந்தவர்களை வெளியே வரச் செய்தது. பெண்டிர் அவன் பாட்டில் மயங்கி அவனுக்கு மனமுவந்து அன்னம் அளித்தனர்.

அவன் தெம்மாங்கு, வெண்ணிலாப் பாட்டு, பராபரக் கண்ணி முதலியவற்றைப் பாடுவான். ஒரு கண்ணியில் ஓரடியையே திருப்பித் திருப்பிப் பாடுவான். ஒரு தெரு முழுவதற்கும் அந்த ஒரு கண்ணியே அவனுக்குப் போதியதாக இருக்கும். அன்று வீசிய நிலாவொளியில் அவனுடைய ஞாபகம் நிலாவைப்பற்றிய பாட்டொன்றிற் சென்றது.

"ஊரைச் சுடுமோ"

என்று அவன் ஆரம்பித்தான். தமிழ்ப் பாட்டாக யார் எதைச் சொன்னாலும் கேட்பதில் ஆவல்கொண்ட கவிராஜ பண்டிதரை அந்த ஒலி வீட்டுக்குள்ளிருந்து வெளியே வருவித்தது. பண்டிதர் பிச்சைக்காரனருகிலே சென்று நின்றார். அவன், "ஊரைச் சுடுமோ" என்னும் தொடரையே பல முறை நீட்டியும் குறுக்கியும் சொல்லிக்கொண்டு ஒவ்வொரு வீடாகச் சென்றான். பண்டிதருக்கோ அந்த நிமிஷத்திலேயே பாட்டு முழுவதையும் அவன் சொல்லக் கேட்கவேண்டுமென்ற ஆவல் உண்டாயிற்று. அவனாகச் சொல்லட்டுமென்று காத்திருந்தார். "ஊரைச் சுடுமோ" என்பதற்கு மேல் ஓரெழுத்துக்கூட அவன் வாயிலிருந்து வரவில்லை.

இவர் பொறுமையை இழந்தார்; அந்தப் பாட்டை முழுவதும் சொல்லிவிடப்பா" என்று கேட்டார். பிச்சைக்காரன் தலையெடுத்துப் பார்த்தான். ஒன்றுமில்லாமற் பிச்சை வாங்குவதைவிடச் சில பாட்டுக்களைப் பாடிப் பிச்சை வாங்க எண்ணித் தான் பாடிவரும் பாட்டை ஒரு பெரியவர் கவனத்தோடு கேட்டு வருகிறாரென்பதை அவன் உணர்ந்தபோது அவனுக்குச் சிறிது கர்வமும் உண்டாயிற்று.

"இதோ சொல்கிறேன்" என்று கூறி மறுபடியும், "ஊரைச் சுடுமோ" என்றே தொடங்கினான். 'இவனுக்கு இதற்கு மேல் தெரியாதோ?' என்ற சந்தேகம் பண்டிதருக்கு உண்டாயிற்று.

பல முறை, "ஊரைச் சுடுமோ" என்பதையே திருப்பித் திருப்பிச் சொல்லிவிட்டு அப்பால் பெரிய புதையலை வெளியிற் கொண்டுவந்தவன் போல அவன்,

"உலகந் தனைச்சுடுமோ"

என்றான்.

அதைக் கேட்ட பண்டிதர் அந்தப் பாட்டு ஒரு வெண்பாவாக இருக்க வேண்டுமென்று ஊகித்தறிந்தார். 'பாட்டின் இனிமை முதலடியிலேயே ததும்பி நிற்கிறது! பின் அடிகள் எவ்வளவு இனிமையாக இருக்குமோ!' என்று ஏங்கினார். "ஐயா, நான் மறந்துவிட்டேன். தானாக வந்தால் வரும்; நானாக நினைத்தால் வருவதில்லை" என்றான் பிச்சைக்காரன்.

"யோசித்துப் பாரப்பா" என்று சொல்லிப் பண்டிதர் அவனைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று அன்னமிடச் செய்தார். அவன் தன்னால் ஆனவரைக்கும் நினைத்து நினைத்துப் பார்த்தும் வரவில்லை. முதலடிக்கு மேலே பாடும் வழக்கம் அவனுக்கு இல்லை.

"பாட்டு முழுவதும் உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார் பண்டிதர்.

"நன்றாகத் தெரியும். எனக்கு ஒரு கிழவனார் அந்தப் பாட்டைச் சொல்லித் தந்தார். பிச்சைக்காரனுக்கு ஓரடி போதாதா, ஐயா?" என்றான் அவன்.

பண்டிதர், "எப்போதாவது பாட்டு முழுவதும் ஞாபகம் வந்தால் வந்து சொல்; இனும் தருகிறேன்" என்றார்.

பிச்சைக்காரன், "என்னால் முடிந்தவரையிற் பார்க்கிறேன்" என்று கூறிவிட்டு அடுத்த தெருவுக்குப் போனான். பண்டிதருக்குத் தம் வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. அவன் உற்சாகங் கொண்டு ஒருகால் அடுத்த தெருவில் பாட்டு முழுவதையும் சொல்லக்கூடுமோ என எண்ணினார்; அவனைப் பின் தொடர்ந்தார். அவன் அங்கும், "ஊரைச் சுடுமோ" என்ற பாட்டையே பாடினான். தெருக்கோடியில் அவனுடைய வாயிலிருந்து இரண்டாவது அடியும் வந்தது:

"ஊரைச் சுடுமோ உலகந் தனைச்சுடுமோ
ஆரைச் சுடுமோ அறியேனே"

என்று அவன் பாடினான். பண்டிதர் சந்தோஷத்தால் துள்ளிக் குதித்தார்; 'எத்தனை அழகான வெண்பா' என்று மகிழ்ந்தார். 'மற்றப் பகுதியும் இப்படியே இவன் வாயிலிருந்து நழுவி வராதா!' என்று ஆவலோடு எதிர்பார்த்தார். அன்று அந்த இரண்டடிக்கு மேல் பிச்சைக்காரன் திருவாய்மலரவில்லை.

அப்பால் இரண்டு மூன்று நாட்கள் அன்னப்பிச்சை கேட்டு வந்த அவனிடம் இந்தக் கவியைப் பிச்சை கேட்டுக்கொண்டே பண்டிதர் தொடர்ந்து அலைந்தார். ஒரு பயனும் உண்டாகவில்லை. பிச்சைக்காரனும் நாள் முழுவதும் பாட்டை ஞாபகப்படுத்திப் பார்த்தான்; தோற்றவில்லை.

நான்காம் நாள் அவனுக்கு ஞானோதயமானது போலப் பாட்டின் பின்பகுதி உதயமாயிற்று. அதைக் கேட்ட பண்டிதர் சிறந்த குரு ஒருவரிடம் உபதேசம் பெற்றுப் பிரம்மானந்தத்தை அநுபவித்தவர் போலானார். பல வருஷங்கள் தவஞ்செய்து ஓர் அருமையான பிள்ளையைப் பெற்றால் தந்தைக்கு எவ்வளவு ஆனந்தம் உண்டாகும்! பண்டிதர் அடைந்த ஆனந்தம் அதைவிட அதிகமென்றே சொல்ல வேண்டும்.

பண்டிதர் பிச்சைக்காரனுக்கு 'இனாம்' கொடுத்தார். வேறு சில செய்யுட்களையும் கேட்டுத் தெரிந்துகொண்டார். அந்தப் பிச்சைக்காரன் தந்த பிச்சையாகிய பாட்டைத் தனிப் பாடல் திரட்டிற் சேர்த்துப் பதிப்பித்தார். அது வருமாறு:—

"ஊரைச் சுடுமோ உலகந் தனைச்சுடுமோ
ஆரைச் சுடுமோ அறியேனே—நேரே
பொருப்புவட்ட மானநகிற் பூங்கொடியீ ரிந்த
நெருப்புவட்ட மான நிலா."

[இது விரகதாபத்தால் வருந்திய தலைவி ஒருத்தி நிலா வொளியை வெறுத்துக் கூறியது.]

பண்டிதர் பதிப்பித்த தனிப் பாடல் திரட்டில் உள்ள மற்றப் பாட்டுக்கள் சிலவே அவருடைய ஞாபகத்தில் இருந்தன. அவற்றுள்ளும் இந்தப் பாட்டே அவருடைய மனத்தில் பசுமரத் தாணி போலப் பதிந்து நிலவியது. ★

—மே, *1937.*

ரா. இராகவையங்கார்

# ஸரஸ்வதி

எல்லாவற்றிற்கும் காரணனாகவுள்ள முழு முதற் கடவுளின் சக்திகள் பல படியாகக் கேட்கப்படுகின்றன என்பது நம் வேதத்திற் கண்ட துணிபு. இங்ஙனம் எண்ணிறந்த சக்திகளை யாவரும் எளிதில் ஒருவாறு உணர்தற்பொருட்டு மூன்று சக்திகளாகப் பாகுபடுத்து நூல்கள் ஓதும். தெய்வ சக்திகள் பலவும் இம்மூன்றன் வகையாமென்பது நம் முன்னோர் கருத்தாம். மூன்று சக்திகள் இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி என்பன. இம்முறையே கூறினும் ஞான சக்தியே தலைமையான தென்பது பல்லோர்க்கு உடன்பாடாகும். ஒன்றை அறிதலும் அறிந்தபின் அதனிடம் விருப்பம் எழுதலும் அதன்மேல் அதற்கு முயலுதலும் நாளும் இவ்வுலகிலே நாம் காண்பனவாம். இச்சா சக்திக்குத் தலைமை கூறுவோர், அறிய வேண்டும் என்னும் இச்சையே முதற்கண் நிகழ்வதென்றும் அங்ஙனம் இச்சை நிகழாத இடத்துக் கண்ணெதிர்ப் பட்டதையுங் காணாது உயிர்கள் செல்வன என்றும் வாதிப்பர். சரசுவதி அந்தாதி யுடையார்,

> "தேவருந் தெய்வப் பெருமானு நான்மறை செப்புகின்ற
> மூவருந் தானவ ராகியுள் ளோரு முனிவரரும்
> யாவரு மேனைய வெல்லா வுயிரு மிதழ்வெளுத்த
> பூவரு மாதி னருள்கொண்டு ஞானம் புரிகின்றதே"

என்பதனால் ஞான சக்தியின் தலைமையைப் புலப்படுத்தினர். எங்ஙனம் ஆயினும் உலக நிகழ்ச்சிக்கு இம் மூன்று சக்திகளும் இன்றியமையா என்பது எளிதில் ஒருவர் ஊகித்து உணரத்தகும். பரதெய்வம் இம்மூன்று சக்திகளுடன் கூடியே படைத்தல், அளித்தல், அழித்தல் என்னும் முத்தொழிலும் உண்டாக்கலால் இச் சக்திகளை அத் தெய்வத்திற்கு வசமான பெண்பாலாக்கிப் போற்றுவது இந் நாவலந்தீவிற் பண்டுதொட்டே நடைபெறும் வழக்கமாகும். ஞான சக்தியை ஸரஸ்வதி, கலைமகள் என்னும் பெயர்களானும், இச்சா சக்தியை இலக்குமி, திரு என்னும் பெயர்களானும், கிரியா சக்தியை உமை, மலைமகள் என்னும் பெயர்களானும் கூறுவதுண்டு. ஒவ்வொரு சக்தியையே தலைமையாகக் கொண்டு கூடிய இடத்து அத் தெய்வமும் பிரமன், விஷ்ணு, சிவன் என மூவகையாகப் பிரித்தோதப்படும் என்பர். இச்சா சக்திக்குத்

தலைமை கூறுவோர் விஷ்ணு, பிரமன், சிவன் என்று வைப்பர். இம் முறை உலகெலாம் புகழும் கவிஸார்வபௌமனாகிய காளி தாசனுக்கும் உடன்பாடென்பது சாகுந்தல நாடகத்தின் இறுதி யிற் கூறிய பரத வாக்கியத்தால் அறியக் கிடக்கின்றது. அதன் மொழிபெயர்ப்பு-

"ஒக்கவுயிர் வாழ்கென வுழைக்கநில மன்னர்
ஒண்மறையின் வீறுகலை வாணியுயர் வாக
செக்கரொடு நீலொளிசெய் சத்திகொள் சுயம்பு
சென்மமினு மில்லபடி செய்தருள்க எற்கும்"

என்பது. இதன்கண் இலக்குமியைக் கூடிய திருமாலின் அமிச மான நிலமன்னர் உயிர் வாழ்கென உழைக்க என்றதனால் இச்சா சக்தி உயிர் வாழ்தற்பொருட்டே நிகழ்க என்றும், "வேதமாதா ஸரஸ்வதீ" (பாரதம்) என்பதனால் ஞான நிதியாகிய வேதத்தினும் சிறப்பித்துப் போற்றப்படும் கலைவாணியாகிய ஞான சக்தியே உயர்த்தப் பெறுவதாகும் என்றும், சுயம்பு ஆகிய சிவபிரான் தழுவிய சக்தி உயிர்கட்குச் செய்யும் வினைகளிலெல்லாம் மிகவும் உயர்ந்ததாகிய பிறவி நீக்கத்தை (மீள மீளப் பிறப்பதொழிந்து வீடு பெறுதலை) எனக்கும் செய்தருள்க என்றதனாற் கிரியா சக்தியே ஆத்மாக்களுக்கு விடுதலையைச் செய்வதாக என்றுங் குறித்தது காண்க. இதனால் இம்* மூன்று சக்தியையுமே இச் செய்யுள் விஷயமாகக் கொண்டுள்ளது என்பது எளிதில் உணரத் தக்கது. எற்கும் என்ற உம்மையால் எல்லாவுயிரும் வீடு பெறுதலையும் குறித்ததாம். இங்ஙனம் எல்லாவுயிரும் இங்கும் வாழ்ந்து பிறவி நீத்து வீட்டினும் வாழ நினைக்கும்படி தன்னறிவை விசாலப்படுத் திய கலைவாணி உயர்த்தப் பெறுக என்று வாழ்த்தினன் கவிஸார்வ பௌமன் என்று துணிக. இவன் இம் மூன்று சக்தியினுள்ளும் ஞான சக்தியே தலைமையின் உயர்த்தப் பெறுவதாக என்று பாடி யது அச் சக்தியின் அருளமிழ்துண்டு வரகவியாய சிறப்பான் என்று கூறுதலும் உண்டு. ஸரஸ்வதி தம்பலம் உமிழ உண்டு ஞான மெய்தினன் இவனென்று சொல்வாரும் உண்டு. 'சரசுவதி தம்ப லங் கொடுக்க உண்டு கூத்தமுதலியார் பாடிய பாட்டு' என்ற தலைப்புத் தமிழ் நாவலர் சரிதையினுங் காணப்படுவது. சரசுவதி யந்தாதியில்,

"உரைப்பா ருரைக்குங் கலைகளெல்லா மெண்ணி னுன்னையன்றித்
தரைப்பா லொருவர் தரவல ரோதண் டரளமுலை
வரைப்பா லமுதுதந் திங்கெனை வாழ்வித்த மாமயிலே
விரைப்பா சடைமலர் வெண்டா மரைப்பதி மெல்லியலே"

என்பதனால் 'முலைவரைப் பாலமுது தந்து வாழ்வித்தல்' கூறு

* ஒவ்வொரு சக்திக்கும் மூன்று மூன்று நாளாகப் பகுத்துக் கன்னி மாதத்தில் வழிபடும் விழா, நவராத்திரி என்று இப்போது கொண்டாடப் பட்டதாகும்.

கின்றார். இஃதே தாய்த் தன்மைக்கேற்ப உள்ளதென்றறிக. கூத்தன் கவிச் சக்கரவர்த்தியும்,

"ஆற்றங்கரைச் சொற் கிழத்தி வாழியே
கூத்தன் கவிச்சக்ர வர்த்தி வாழியே"

என்று வாழ்த்துதலான் ஞான சக்தியும் ஞான சக்தியின் அருள் பெற்ற புலவனும் வாழ்ந்தால் இவ்வுலகு நிரம்பியதாகுமென்று கருதினான். இனி இந்த ஞான சக்தியின் தோற்றம் முதலியவற்றைப் பற்றி நம் இதிகாச புராணங்கள் பல படியாகக் கூறும். பாரதம், "வாசுதேவன் முகத்தினின்று அக்கினி பிறந்தது, அவன் சுவாசத்தினின்று வாயுவும் ஸரஸ்வதியும் வேதங்களும் பிறந்தன" என்று கூறும். ஸ்ரீ பாகவதம் (4-ஆம் ஸ்கந்தம்) பிரமன் ஸரஸ்வதியைப் பெற்றான் என்றும், அவன் தான் பெற்ற மகளைக் காம விருப்புடன் நோக்கினான் என்றும், அதைக் கண்டு பிரம்மரிஷிகள் பிரமனை வெறுத்தனரென்றும், அதனால் அவன் நாணினன் என்றும், பின் அவள் அவன் தேகத்திலே கலந்து மறைந்தனள் என்றும் கூறும். மத்ஸ்ய புராணம் பிரமன் ஸரஸ்வதியை உண்டாக்கி அவளைக் காமித்து நோக்க அவள் நாணி நாற்றிசையினும் மறைய, மறைந்த திசையெல்லாம் வெவ்வேறு முகம் படைத்துக்கொண்டு இருந்தபடியே நோக்கினான் என்றும் இதனால் உள்ள முகத்துடன் திசைமுகமும் பெற்றானென்றுங் கூறும். இவற்றால் ஞான சக்தி காமம் ஒழிதற்குக் காரணமாதலல்லது காமத்திற்குக் காரணமாகாள் என்று கூறியவாறும். கம்பர் இராமன் வில் முறித்தது கூறியவிடத்து, "காமத்தாலன்று கல்வியினாலென்றார்" என்று காமத்தின் மாறாகக் கல்வியைக் கூறுதலானும் இதனுண்மை ஆராய்ந்துகொள்க. "ஞானமின்றேற் காமத்தைக் கடக்கலாமோ" என்று அவரே பாடுதல் காண்க. விரிப்பிற் பெருகும்.

"எழுத்து மொழி நன்மெய் யின்பொருளேஞ் சின்பம்
கொழித்த வியலிசைகள் கொங்கை—விழுப்பால்
மதிநுட்ப மெம்மோய் வளர்த்தபெரு மக்கள்
அதிநுட்ப நூல்கண் டவர்." —பாரிகாதை.

இதனால் இந்த ஞான சக்திக்கு எழுத்துக்களாகிய மொழியே அவயவங்களாகிய நல்ல திருமேனி என்றும், அம்மொழியிலுள்ள இனிய பொருளே இருதயம் என்றும், இன்பம் கொழித்துள்ள இயலும் இசையும் இரு தனங்களென்றும், மதிநுட்பமே அவற்றின் வரும் சிறந்த பாலமுதென்றும், இவையுடைய எம்முடைய தாய் ஆகிய அவள், உலகில் வளர்த்த பெருந்தகைச் செல்வப் புதல்வர் அதிநுட்ப நூல் கண்டவர் என்றுங் கூறியவாறும்.

"இலங்குந் திருமுக மெய்யிற் புளக மெழுங்கண்கணீர்
மலங்கும் பழுதற்ற வாக்கும் பலிக்கு மனமிகவே
துலங்கு முறுவல் செயக்களி கூருஞ் சுழல்புனல்போற்
கலங்கும் பொழுது தெளியுஞ்சொன் மானைக் கருதினர்க்கே."
—சரசுவதி யந்தாதி.

★

—நவம்பர், 1933.

## எஸ். அநவரதவிநாயகம் பிள்ளை

# விநோதரச மஞ்சரி

தமிழ் மொழியிற் காணும் சிறந்த பழைய வசன நூல்களில் இது ஒன்று. பஞ்சதந்திரம், கதாமஞ்சரி முதலிய நூல்கள் இதற்கு முன்னே ஏற்பட்டிருந்தனவாயினும் இதற்குப் பெயர் அமைந்தது போலவே, இந்நூல் விநோதரசங்கள் செறிந்து தமிழ் மக்களுக்குப் பெரிதும் உவகை தருவதாயிற்று.

இந்நூலை இயற்றிய அஷ்டாவதானம் வீராசாமி செட்டியார், சென்னைத் துரைத்தன வித்தியாசாலையின் தமிழ்ப் பண்டிதர்களில் ஒருவராக இருந்தனர். (Late Tamil Pandit, Presidency College, Madras.) அவர் நூதனமாக இயற்றிய இந் நூல் மேற்படி வித்தியாசாலையில் திராவிடாந்திர பாஷா போதகராக இருந்த (Professor of Oriental Literature, Presidency College, Madras) கனம் பொருந்திய பெர்ஸிவல் ஐயரால் பிரதமத்தில் கி. பி. 1876-இல் அச்சிட்டு வழங்கியது.

இரண்டாம் பதிப்பு (Royal 12 mo pp. ii + 428) கி. பி. 1891-இல் ஊ. புஷ்பரத செட்டியாரால் தமது கலாரத்நாகர முத்திராலயத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. இரண்டாம் பதிப்பில் நூல் வரலாறும், இரண்டாம் பதிப்பின் வரலாறும் காணப் படுகின்றன.

முதற் பதிப்பு பிரசித்த புஸ்தக நிலையங்களில் எங்கும் காணப் படாமையானும் இவ்விரண்டாம் பதிப்பும் அருகிக் காணப்படுதலானும் இக்காலத்துப் பதிப்புக்கள் வரலாறுகளை மாற்றியுரைத்தலானும் இரண்டாம் பதிப்பிற் காணும் இவ்விரண்டு வரலாறுகளையும் இங்குத் தருதல் பலர்க்குப் பயன்படக்கூடும்.

**நூல் வரலாறு :** — தமிழ்ப் பாஷையிலுள்ள நூல்கள் அனைத்தும் சாதாரணமாக உணர்தற்கரிய செய்யுள் நடையாயிருப்பதனுல் அவை ஐயந்திரிபறக் கற்றோர்க்கன்றி மற்றோர்க்கு எளிதிற் புலப் படாமை நோக்கி, வசன நடையாயிருந்தால் யாவர்க்கும் உபயோகமாமென்று கருதி, சென்னைத் துரைத்தன வித்தியாசாலையில் திராவிடாந்திர பாஷா போதகராகிய கனம் பொருந்திய பெர்ஸிவல் ஐயரவர்களுடைய அனுமதி கொண்டு, மேற்படி வித்தியாசாலையில் தமிழ்ப் பண்டிதராகிய அ. வீராசாமி செட்டியாரால் அவரவர்

ஆவசிகமாக அறிய வேண்டிய விஷயங்களைத் தெய்வங் கொள்கை, கற்ருய்ந் தொழுகல், கற்பு நிலைமை, செய்ந்நன்றி மறவாமை, கீத வாத்திய விநோதம், பயணிலுழவு, மகா பண்டிதனைச் சிறுபிள்ளை வென்றது, காலபேத இயல்பு முதலியவாக நூதனமாய் வகுத்தும் முற்காலத்திலிருந்த கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, காளமேகம் முதலிய வித்துவான்களின் சரித்திரங்களிலும் அவர்கள் பாடிய பாடல்களிலும் சிலவற்றைத் தொகுத்தும் அப் பாடல்களுக்கு உசிதமாக உரையெழுதியும், அவற்ருல் உலக வழக்குச் செய்யுள் வழக்குகளை ஒருவாறு விளக்கியும், ஆங்காங்குச் சமயோசிதமும் சாதுரியமுமாகிய பற்பல பழமொழிகளைச் சேர்த்தும், வாசிப்பவர்களுடைய நாவிற்கு நயமும், செவிக்கின்பமும், மனத்துக்கு மகிழ்ச்சியும், அறிவுக்கு விர்த்தியும், பொழுதுபோக்கற்கு உல்லாசமுமாம்படி சில காலம் தொடங்கித் தினவர்த்தமானியில் அச்சிடுவித்துப் பிரசுரம் செய்து வந்தும் அவைகள் அப் பத்திரிகையின் கையொப்பக்காரர்களுக்கேயன்றி ஏனையோர்க்குப் பயன்படாததையும், கையொப்பக்காரர்களிலும் பெரும்பான்மையோர் அப்போதைப்போது பார்த்தும் பாராமலும் கைவிட்டதையும் குறித்துணர்ந்து சகலர்க்கும் பயன்படும் பொருட்டு முழுவதும் ஒருசேரத் திரட்டி மறுபடி அச்சிட்டுப் புத்தகமாக்கி இறுதியில் அவிவேக பூரண குரு கதையும் சேர்த்து விநோதரச மஞ்சரி என்று பெயரிடப்பட்டது.

**இரண்டாம் பதிப்பின் வரலாறு :**— சென்னைத் துரைத்தன வித்தியாசாலையில் திரவிடாந்திர பாஷா போதகராயிருந்த காலஞ் சென்ற கௌரவந் தங்கிய பெர்ஸிவல் ஐயர் (Rev. P. Percival) அவர்களுடைய அனுமதி கொண்டு 1876-ஆம் ஆண்டில் பிரசுரஞ் செய்த விநோதரச மஞ்சரி முதற் பதிப்பு செலவான பின்பு சில அசந்தர்ப்பத்தால் மறுபதிப்பு உடனே அச்சிடப்படாமல் நின்றிருந்தது.

இது சேதியறிந்த புதுவை யரசாட்சிக்குட்பட்ட காரைக்காலில் அச்சுக்கூடம் வைத்திருக்கும் புலவரொருவர் அச்சமயம் தமதியற்கைச் செயலுக்கொத்ததாக விருப்பதெனத் தேர்ந்து, உடனே விரைந்து இப்புத்தகத்தைக் காரைக்காலில் பற்பல பிழைகள் செறிய ஆபாசமாக அச்சிட்டுத் திருநெல்வேலி, இரங்கூன், பினங்கு முதலான தமிழ் வழங்குந் தேயங்களுக்கனுப்பி விற்று வந்தனர்.

பிந்தி இந் நகரவச்சுக்கூடக்காரருள் அப்புலவர் செயலையவாவிய சிலருமவ்வாறே யச்சிட்டு வழங்குகின்றனராம். அதனுல் விநோதரச மஞ்சரி படித்துத் தமிழ் வசன நடை கற்க விரும்பும் வித்தியார்த்திகளும் அவ்வாபாசப் பதிப்புகளையே வாங்கி வாசிக்கும்படி நேர்ந்தது. "அன்னநடை கற்கப்போய் தன்னடையுமிழந்ததுபோல" அப்பதிப்புகளி னிடையிடையே செறிந்து கிடக்கும் பிழைகளைக் கற்று இடர்ப்படுகின்றனர். இதைக் கண்ட சில அறிஞர்கள், விநோதரச மஞ்சரியைப் பழையபடி திருத்தமாய் அச்சிட்டு வெளிப்படுத்துவது பேருதவியாகுமென்று தெரிவித்தன

ராகையால் இவ்விரண்டாம் பதிப்பிற் சிற்சிலவிடங்களைப் புதுக்கி யுங் கூட்டியுந் திருத்தியும், காளமேகப் புலவர் சரித்திரம்போல ஔவையார் சரித்திரத்தையும் யாமறிந்தவாறு தொகுத்துத் தெளிவு பெற எழுதிச் சேர்த்தும், புத்தகம் இனிது முடியுமாறு சிறு கூனன் கதை ஒன்று எழுதிக் கடையிற் கூட்டியும் பிரசுரஞ் செய்தனம்.

## March 1891

### விநோதரச மஞ்சரி அடக்கம்



### இரண்டாம் பதிப்பிற் சேர்க்கப்பட்டவை



### இக்காலத்துப் பதிப்பிற் காணப்படுவன



★

—டிசம்பர், 1932.

## மு. இராகவையங்கார்

# பட்டினப்பாலைப் பரிசில் மண்டபம்

சங்ககாலத்தே வாழ்ந்த புலவர்களுள் உருத்திரங்கண்ணனார் என்பவரும் ஒருவர். உருத்திரன் என்பாருடைய மகனாரான கண்ணனார் என்பது இப்பெயர்த் தொடர்க்குப் பொருள். சேந்தம்பூதனார், கீரங்கொற்றனார் என்பனவும் இவ்வாறே விரியும். உருத்திரங்கண்ணனாரை அந்தணர் குலத்தவராகக் கூறுவர் பேராசிரியர்.* இக்கண்ணனார், சோழன் கரிகாற்பெருவளத்தானைப் பட்டினப் பாலையாலும், தொண்டைமான் இளந்திரையன் என்ற அரசனைப் பெரும்பாணாற்றுப்படையாலும் பெரிதும் சிறப்பித்துப் பாடியவர் என்பது பத்துப் பாட்டால் அறிந்தது. இவையன்றி, பாலைத் திணையில் இவர் இயற்றிய பாடல்கள் அகநானூற்றில் ஒன்றும் (167), குறுந்தொகையுள் ஒன்றும் (352) உள்ளன. இவற்றுள் பட்டினப்பாலையைச் சோழன் கரிகாலன்மேற் பாடி அவனால் பதினாறு நூறாயிரம் பொன் பரிசு பெற்றார் இப்புலவர் என்பர்; இதனை,

> "தத்து நீர்வராற் குடுமி வென்றதும்
> தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
> பத்தொ டாறுநூ றாயி ரம்பெறப்
> பண்டு பட்டினப் பாலை கொண்டதும்"

என்ற சயங்கொண்டார் வாக்கால் (இராச பாரம்பரியம்) அறியலாம். (பதினாறு நூறாயிரம் என்பதனைப் பதினாறு கோடி என்று மிகைப்படுத்திப் பாடிய பின்னோரும் உண்டு.†)

பட்டினப்பாலை என்பதற்கு, காவிரிப்பூம்பட்டினத்தைப் பாலைத்திணை ‡ வகையாற் சிறப்பித்த பாட்டு என்பது பொருள். 301 அடிகள் கொண்ட இப்பாட்டைப் பாடிக் கண்ணனார் பெற்ற

* தொல். மரபியல், 'ஊரும் பேரும்' என்ற சூத்திரவுரை.

† "பாடியதோர் பாக்கொண்டு பண்டு பதினாறு, கோடி பசும்பொன் கொடுத்தோனும்" என்று சங்கரசோழனுலா ஆசிரியரும், "பாடியதோர் வஞ்சிநெடும் பாட்டாற் பதினாறு கோடிபொன் கொண்டதும்நின் கொற்றமே" என்று தமிழ் விடு தூதுடையாரும் கூறுதல் காண்க.

‡ வேற்று நாட்டிற்குச் செல்லத் தொடங்கிய தலைவன் தன் நெஞ்சை நோக்கித் "தலைவியைப் பிரிந்து வாரேன்" என்று செலவழுங்கிக் கூறியது, இத் திணைவகை என்க.

பரிசு குறித்த விசேடச் செய்தி ஒன்று சிலையெழுத்தொன்றன் மூலம் இப்போது தெரிய வருகின்றது. திருச்சி ஜில்லா திருவெள்ளறை என்ற தலத்தில் வரைந்துள்ள அப் பாடற் சாசனம் பின் வருமாறு :

"வெறியார் தளவச் செயத்தொடை மாறன் வெகுண்டதொன்றும்
அறியாத செம்பியன் காவிரி நாட்டின் அரமியத்துப்
பறியாத தூணில்லை கண்ணன்செய் பட்டினப் பாலைக்கன்று
நெறியால் விடுந்தூண் பதினாறு மேயங்கு நின்றனவே."

இவ்வரிய பாடலுள் *, 'செயமாறன்' என வருவது மாறவர்மன் சுந்தரபாண்டியன் என்பானையும், 'செம்பியன்' என்றது மூன்றாம் இராசராசனையும் குறிப்பன என்றும், அவ்விருவர்க்கும் நடந்த போர்களிலே பாண்டியனது வெற்றித் திறத்தைப் புகழ்வது இப்பாடல் என்றும் கூறுவர். இதனால், காவிரி நாட்டில் இருந்த சோழன் மாளிகைகளையெல்லாம் பாண்டியன் தகர்த்து வந்தபோது அவற்றின் பெரிய பெரிய தூண்கள் யாவும் பிடுங்கிப் பாழ்படுத்தப்பட்டன என்றும், அவற்றுள் சோழன் அரண்மனையுள் இருந்த மண்டபம் ஒன்றின் பதினாறு தூண்கள் மட்டும் அழிக்கப்படவில்லை என்றும், அத்தூண்கள் 'கண்ணன்செய் பட்டினப்பாலைக்கு அன்று நெறியால்' விடப்பட்டவை என்றும் கூறப்பட்டிருத்தல் காணலாம். முன்பு கூறியபடி பட்டினப்பாலைக்குப் புலவர் பெற்ற பரிசு பதினாறு லட்சம் பொன் என்பதன்றி வேறு செய்தி யொன்றும் இதுவரை அறியப்பட்டதில்லை. அதனால் இச்சாசனப் பாட்டுப் புதிய செய்தி ஒன்றைக் குறிப்பதெனலாம். எனினும் வேறு பழம்புலவர் கூற்றும் இதனை ஆதரிப்பதுண்டாயின், அது பெரிதும் நம்மால் போற்றத்தக்கதன்றோ?

இச்சாசனப் பாடல் கி. பி. 1238-ஐ அடுத்து நிகழ்ந்த சோழ பாண்டியர் போர்ச் செய்தியைக் குறிப்பதென்பது, வேறு சாசனப் பிரமாணங்களால் தெளியப்படுகின்றது. இது நிகழ்ந்த ஒரு நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்தவர், கவிச்சக்கரவர்த்தியான கூத்தர் பெருமகன்; இவர் தம்மைப் பெரிதும் அபிமானித்து வந்த இரண்டாங் குலோத்துங்க சோழனைப் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்தால் சிறப்பித்துப் பாடியுள்ளார்.† அதனில்,

"அன்று கவிக்கு வியந்து நயந்து
தரும்பரி சிற்கொருபேர்

---

* வெறி ஆர் தளவத் தொடை - மணம் பொருந்திய முல்லை மாலை. அரமியம் - அரண்மனை (பிங்.) இப்பாடல், செந்தமிழ்ப் பத்திரிகை 41-ஆம் தொகுதியுள் ராவ்ஸாகிப் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களால் குறிப்புடன் வெளியிடப்பட்டுள்ளது.

† இந்நூல், தஞ்சை வித்துவான் திரு. உலகநாத பிள்ளையால் 1930-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

ஆழியில் வந்து தராதலம் நின்று
புகாரில் அனைத்துலகும்
சென்று கவிக்கும் அகூத்தது தூண்வயி
ரத்தினு முத்தினுமே
செய்ததொர் பொற்றிரு மண்டபம்
நல்கிய செயகுல நாயகமே" (41),

"நாவலனே கிடையா* நவமணி மண்டபம்நின்
பாவல னேகவரப் பண்டு பணித்தவனே" (83)

என வரும் இரண்டு செய்யுட்கள் குறிப்பிடத்தக்கன. இவற்றால் புகார் நகரில் இருந்த மணிமண்டபம் ஒன்று புலவரொருவர் பாடற்கு வியந்தும் நயந்தும் சோழ முன்னோன் ஒருவனால் பரிசளிக்கப்பட்டதென்றும், அது கடலினின்றும் பூமிக்குக்கொணர்ந்து அப்புகாரில் நிறுவப்பட்டதென்றும், மக்களெல்லாம் தங்கும் அகன்ற உள்ளிடத்தையும் வயிரம் முத்துக்களால் இழைக்கப்பட்ட பொற்றூண்களையும் உடையதென்றும் தெரியலாம். இவற்றை நோக்குமிடத்து, முற்கூறிய சாசனப் பாடலிற் கண்ட இச்செய்தியே கூத்தரால், அவர் காலநிலைக்கு ஏற்பப் பெரிதும் வருணிக்கப்படுகின்றது என்பது நன்கு விளங்கும். அதனை விரித்து விளக்குவேன்.

(1) 'காவிரிநாட்டின் அரமியம்' என்று சாசனக்கவி கூறுவது கூத்தரது வாக்கில் புகார் என்று (காவிரிப்பூம்பட்டினம் என்று) விளக்கப்படுகின்றது. சோணாட்டில் பேர் பெற்றிருந்த அரமியம் (அரண்மனை) புகாரில் உள்ளதே என்பது சொல்லாமலே விளங்கும்.

(2) 'பட்டினப்பாலைக்கு அன்று...விடுந்தூண்' என்று சாசனங் கூறுவது, 'அன்று கவிக்கு வியந்து நயந்து தரும் பரிசிற்கு' என அப்புலவர் வாக்கில் குறிக்கப்பட்டது. வியத்தலும் நயத்தலும் புலவர்க்குக் கூறுவதினும் அவரது கவிக்கே ஏற்புடையவாதல் காண்க.

(3) 'நெறியால் விடுந்தூண் பதினாறும்' என்று சாசனக்கவி கூறுவது, 'பொற்றிரு மண்டபம்' எனக் கூத்தர் வாக்கில் விளக்கப்பட்டுளது. மண்டபம் நிருமித்தற்குச் சிற்ப நூல் முறைப்படி அளந்திட்ட தூண்கள் என்பார், 'நெறியால் விடுந்தூண்' என்றார். எனவே, வெறுந் தம்பங்கள் அல்ல அத்தூண்கள் என்பது பெறப்படும்.

(4) 'திருமண்டபம் நல்கிய செயகுல நாயகமே' எனக் கூத்தர் பாடுதலால், அம் மண்டபம் அளித்தவன் பெருவீரனான சோழமுன்னோன் என்பது தெரியலாம். பட்டினப்பாலை, கண்ணனார் என்ற பெயர்கள் அக் கூத்தர் வாக்கிற் பயிலாது போயினும், பாடிய கவி

* 'வருணிப்பதற்கு ஏற்ற நாவன்மை உலகிற் கிடையாத நவமணி மண்டபம்' என்று பொருள் கொள்ளத் தகும்.

ஞர்க்கு இப் பெருங் கொடையை உதவியவன், சாசனக்கவி கூறிய படி, பட்டினப்பாலைக்குப் பரிசளித்த சோழனன்றி வேறு எவனும் இல்லை என்பது அறியத்தக்கது.

(5) 'ஆழியின் வந்து தராதலம் நின்று புகார் நகரில் நிறுவப் பட்டது' என்ற கூத்தர் கூற்ருல் அம்மண்டபம் அந்நிய தேயத்தி னின்று மரக்கல மூலம் கடல் வழியே தரைக்குக் கொண்டுவந்து காவிரிப்பூம்பட்டினத்தில் நிறுவப் பெற்றது என்பது பெறப்படும்.

(6) அம்மண்டபத் தூண்கள் 'வயிரத்தினும் முத்தினுமே செய்தது' எனக் கூத்தர் பாடுதலால் சாசனங்கூறும் தம்பங்கள் பதி ஞறும் மதிப்பு மிக்க மணிமண்டபம் ஒன்றற்கு உரியன என்பதும் விளக்கமாம்.

(7) 'நவமணிமண்டபம் நின்பாவலனே கவர' என்று அடுத்து வரும் கூத்தர் பாட்டால், பரிசில் பெற்ற கண்ணனூர் சோழன் வாயிற் புலவருள் ஒருவர் என்பதும், 'பாவலர் போட்டி' ஒன்றில் அவர் அம் மண்டபத்தைப் பெற்றவர் என்பதும் புலப்படுவன.

(8) இத்தகைய சித்திர மண்டபங்கள் பல வெளிநாடுகளி லிருந்து புகார் நகர்க்குக் கொண்டுவரப்பட்டோ வேற்று நாட்டுத் தொழிலாளர்களால் நிருமிக்கப்பட்டோ விளங்கினவாம்; உதா ரணமாக:—

" மகதநன் ஞட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்" (சிலப். 5,101-2)

" வச்சிரம் அவந்தி மகதமொடு குழீஇய*
சித்திர மண்டபத் திருக்க வேந்தன்," (ஷை 28,86-7)

" மகத வினைஞரும் மராட்டக் கம்மரும்
அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்
கொண்டினி தியற்றிய கண்கவர் செய்வினை
......பசும்பொன் மண்டபத்து"

(மணி. 19, 107-110)

முதலியன காண்க. இம்மாளிகைகள் போன்றதொன்றே மேற் கூறிய பரிசில் மண்டபமாம்.

இவற்ருல், பட்டினப்பாலைப் பரிசாகப் பதினறு நூருயிரம் பொன்களுடன் பொன்மண்டபம் ஒன்றும் பெற்றவர் உருத்திரங் கண்ணனூர் என்பது, சயங்கொண்டார், கூத்தர், சாசனக் கவிஞர் வாக்குக்களால் விளக்கமாகின்றது. ஆனல், பதினறு லட்சம்

---

* "இந்நாடு மூன்றும் உடையோர் திறையிட்ட பந்தர், தோரணவாயில், பட்டி மண்டபம் இவை கூடிய மண்டபம்" என்பர் அரும்பதவுரை யாசிரியர்.

பொன் பரிசு பெற்ற செய்தி சயங்கொண்டாராலன்றி வேறு எவ ராலும் கூறப்படாமை வியப்பேயாகும். அவர்க்கு அடுத்திருந்த கூத்தருங்கூட, தம் உலா முதலியவற்றில் அச்செய்தி குறிப்பிட்ட னர் இல்லை. அவரது பிள்ளைத்தமிழ்க் கவிகளும் சாசனப் பாட் டும் மண்டபப் பரிசிலை மட்டுமே வருணிக்கின்றன. இவற்றிலி ருந்து, பட்டினப்பாலைக்குப் பரிசிலாக அமைந்தது புகார் மண்ட பமே என்றும், அது முத்து வயிரங்கள் இழைத்த பதினறு பொற் றூண்களுடையது என்றும், அம் மண்டபத்தை இடம் விட்டுப் பெயர்த்தல் கூடாமையால், அதற்குப் பிரதியாக ஒவ்வொரு தூணும் ஒவ்வொரு லட்சம் பொன் மதிப்பில், 16 தூண்களுக்கும் பதினறு லட்சம் பொன்களைச் சோழன் புலவர்க்கு வழங்கலாயி னன் என்றும், ஆயினும் "பட்டினப்பாலைப் பரிசில் மண்டபம்" என்ற கௌரவம் அம் மண்டபத்துக்கு எந்நாளும் வழங்கலாயிற்று என்றும் நாம் கருத இடம் உண்டு. பாண்டியன், சோழ மாளிகை களை இடித்தழித்து வந்தபோது மதிப்புக்குரிய அத் தூண்கள் மண்டபத்துடன் நின்றனவோ, அன்றி அஃது அழிந்த நிலையில் தனியே நின்றனவோ தெரியவில்லை.

எவ்வாறுயினும், புலவர் பெருமான் ஒருவற்குப் பிரபலனை சோழன் வியந்து அளித்ததனுலும், பிற்காலக் கவிஞர்களால் அது சிறப்பிக்கப்பட்டும் போற்றப்பட்டும் வந்ததனுலும், போரிடையே சோழமாடங்களையெல்லாம் இடித்து அழித்து வந்த நிலையிலும், செந்தமிழ் வேந்தனை பாண்டியன், பழைய தமிழ் வரலாற்றுச் சின்னமான அம் மண்டபத் தூண்களை மட்டும் அழியவிடாமல் போற்றி வந்தவன் என்ற அரிய செய்தி இதனுல் விளங்கும். பழஞ் செற்ற மிகுதியால் *'பழிக்குப் பழி' வாங்கி வந்த காலத்தும் அரச ரிடையே தமிழபிமானம் சிறந்து விளங்கியது என்பதற்கு இச் செய்தி தக்க எடுத்துக்காட்டாகும். ★

—அக்டோபர், 1956.

* பகைவனை இராசராசனுக்கு III முன்பு ஆண்ட மூன்றும் குலோத் துங்கன் தன் கோபமிகுதியால் மதுரையுட் புகுந்து அங்கிருந்த அரண்மனை மாடங்களையெல்லாம் இடித்துப் பாழ்படுத்தினன் என்றும், அதற்குப் பிரதி பழிக்குப் பழிவாங்க வேண்டியே சுந்தர பாண்டியன் இவ்வாறு சோழ மாளிகைகளைத் தகர்க்கலாயினன் என்றும் சரித்திர வாயிலாக அறியப்படு கின்றது. (மூன்றும் குலோத்துங்கன், பக். 51.)

# சோழ மண்டலத்துத் தமிழும் ஈழ மண்டலத்துத் தமிழும்

## 1

**வ**டநாட்டிலிருந்து வெளிவரும் 'மாடர்ன் ரெவ்யூ' என்னும் ஆங்கில மாசிகை யொன்றிலே "தமிழ் மொழி ஒலியியல்" (The Phonetics of the Tamil Language) என்னும் பொருள் பற்றி ஒரு வியாசம் எழுதி வெளியிட்டேன். தென் மொழிச் சார்பாகிய பொருளினை மேற்றிசை மொழியில் எழுதி வடநாட்டு மாசிகை யிலே வெளியிட வேண்டிய காரணம் என்னவென்று அன்பர்கள் வினவலாம். காரணம் உண்டு. ஆனால், அதனைச் சொல்லத் தொடங்கினால், இலக்கண நூலார் கூறிய 'மற்றொன்று விரித்தல்' ஆகும்; ஆதலினாலே அதனை விடுத்து, எடுத்துக்கொண்ட விஷயத் தோடு தொடர்புடைய பொருளை மாத்திரம் பேசலாமென்று எண்ணுகிறேன். குறித்த வியாசத்திலே தமிழ் நாட்டு மக்கள் இக் காலத்திலே, திண்ணையிலும், தெருவிலும், கடை வீதியிலும், தொழிற்சாலையிலும் வழங்கும் தமிழ் மொழியின் சிறப்பியல்புகள் சிலவற்றை எடுத்துக் காட்டினேன். அஃதன்றியும் ஸ்ரீமான் டி. கே. சிதம்பரநாத முதலியாரை யுள்ளிட்ட தமிழன்பர்கள் தமிழ் மக்களது வழக்கு மொழியாகிய உயிர்த் தமிழினது அழகினையும் ஆற்றலினையும் தீர விசாரித்து ஆவன செய்தல் வேண்டுமென விண்ணப்பித்துக் கொண்டேன்.

ஈழ நாட்டிற் பிறந்தேனாயினும் ஈழத்து வழக்குத் தமிழில் எனக்கு அதிகப் பழக்கமில்லை. கற்றது புத்தகத் தமிழ்; கலந்து பழகி ஒருசிறிது பயின்று கொண்டது சோழ நாட்டுத் தமிழ். இலங்கையிலே நான் நண்பரோடு உரையாடும்போது, என் உரை யைக் கேட்டோர், "சாமி பேசுவது வடக்கத்திய தமிழ்" என்று சொல்ல நான் பல முறை கேட்டதுண்டு. இலங்கையிலுள்ளோர் தென்னாட்டுத் தமிழரை வடக்கத்தியார் என்பது வழக்கம். தென்னாடு ஈழத்திற்கு வட நாடுதானே? இஃது இப்படியிருக்க; ஒரு நாள் சென்னை ஜார்ஜ் டவுனிலே ஒரு கடைக்காரன் என்னை நோக்கி, "சாமிக்கு ஊர் பாலைக்காடா?" என்று வினாவியதுண்டு.

உயிர்த் தமிழுக்கும் புத்தகத் தமிழுக்கும் உள்ள எழுத்துத் திரிபு வேறுபாடுகளைக் காட்டுவதற்கு நான் கைக்கொண்ட மேற்கோள்கள் பொதுவாகத் தென்னிந்தியத் தமிழிலிருந்து எடுக்கப்பட்டவை. "தமிழ் மொழி ஒலியியல்" என்னும் வியாசத்திலே யாழ்ப்பாணத்து வழக்குத் தமிழை அதிகம் எடுத்துக் காட்டவில்லை.

இங்கிலையிலே, என் மாணவரும் நண்பருமாகிய பேராசிரியர் கணபதிப் பிள்ளை தாம் எழுதி வெளியிட்ட "நானுடகம்" என்னும் புத்தகப் பிரதி ஒன்று அனுப்பி வைத்தார். "உடையார் மிடுக்கு", "முருகன் திருகு தாளம்", "கண்ணன் கூத்து", "நாட்டவன் நகர வாழ்க்கை" என்னும் நான்கு நாடகங்களின் தொகுதி, "நானுடகம்" எனப் பெயர் பெற்றது. ஆக்கியோனது முன்னுரையிலிருந்து சில பாகங்களை இங்குத் தருகின்றேன். "நாடகம் என்பது உலக இயல்பை உள்ளது உள்ளபடி காட்டுவது. ஆகவே வீட்டிலும் வீதியிலும் பேசுவது போலவே அரங்கிலும் ஆடுவார் பேசல் வேண்டும்......கொடுந் தமிழ் மொழி அவ்வந் நாட்டிற்கே உரிய மொழியாம். ஆகவே சோழ மண்டலத்துத் தமிழர் ஈழ மண்டலத்துத் தமிழை அறிவதற்கு வழி யாது? அன்றியும் உயிருள்ள மொழியெல்லாம் இடைவிடாது மாறிக்கொண்டே வரும். ஒருவனை ஐந்து வயதிற் பிடித்த படமும் ஐம்பது வயதிற் பிடித்த படமும் ஒரு தன்மையவாய் இருக்குமோ? ஆண்பாலாருக்கும் பெண்பாலாருக்கும் பருவம் ஏழு என வகுத்தார் ஆன்றோர். அப்படியாயின் ஒவ்வொரு பருவத்திலும் படம் பிடித்தல் விரும்பத் தக்கது. அது போலவே அவ்வக் காலத்துக் கொடுந் தமிழையும் தீட்டி வைத்தல் வேண்டும். இற்றைக்கு முப்பது ஆண்டுகட்கு முன்னே யாழ்ப்பாணத்திற் பேசிய தமிழோ இன்று நாம் பேசும் தமிழ்? இங்ஙனம் யாம் கூறுவது சொல்லை மட்டும் எண்ணியன்று; சொல்லின் வடிவம் மாற மாற இலக்கணமும் மாறும், பொருளும் மாறும். ஆகவே, அவ்வக் காலத்துச் சொல்லின் வடிவும் பொருளும் இலக்கணமும் தீட்டி வைத்தல் இன்றியமையாதது. இதன் உண்மை ஆங்கிலம் முதலிய மேனாட்டு மொழி வல்லுநர் அறிவர். நம் தமிழ் மொழி வல்லுநரும் இவ்வுண்மையை அறிவரோ?

"இந்நான்கு நாடகத்திலும் வழங்கிய பாடை யாழ்ப்பாண குடா நாட்டுக்குப் பொதுவாயும் பருத்தித்துறைப் பகுதிக்குச் சிறப்பாயும் உள்ளது.

"இந்நாடகங்களுள் முதல் மூன்றும் இலங்கைப் பல்கலைக் கழகக் கல்லூரித் தமிழ்ச் சங்கத்து ஆண்டு விழாக்களில் சங்கத்து அரிவையரும் ஆடவரும் கல்லூரி அரங்கில் ஆடியவை."

புத்தகம் கிடைத்ததைக் குறித்து நான் எழுதிய மறுமொழி வருமாறு:

"பேரன்பு வாய்ந்த திருவாளர் க. கணபதிப் பிள்ளை அவர்களுக்கு,

'நாஞடகமும்', காதலி ஆற்றுப்படையும் கிடைத்தன. முற்றும் படித்து மகிழ்வுற்றேன். 'பொருளோ பொருள்' எனப் பெயரிய மற்றுமொரு நாடகம் அண்மையில் அரங்கேறியதாக ஈழகேசரியிற் படித்தேன். மட்டக் களப்பு வழக்கு மொழியினையும் ஓரிரண்டு நாடகங்களிலே படம் பிடித்து வைப்பது நன்று. விஜயதசமி வாழ்த்துரை கூறி முடிக்கிறேன்.

அன்புள்ள
**விபுலாநந்தர்.''**

மட்டக்களப்பு நான் பிறந்த நாடு; ஈழத்தின் கிழக்குப் பாகத்தி லுள்ளது. அந்நாட்டு வழக்கு மொழி யாழ்ப்பாணத்து வழக்கு மொழியினின்றும் வேறுபட்டது. அவ்வேறுபாடுகளுள் ஒரு சில வற்றை இக்கட்டுரையிற் குறிக்கிறேன்.

ஆங்கிலத்திலே சிறந்த நாடக நூல்கள் பலவற்றை இயற்றித் தந்த ஜார்ஜ் பெர்னுர்ட் ஷா என்னும் பேரறிஞர் எழுதிய **பிக்மாலியன்** என்னும் நாடகத்திலே, ''மொழியொலியியல் (phonetics) நூலினை ஆராய்ந்துணர்ந்த பண்டிதனொருவன் பூ விற்பவளாகிய ஏழைப் பெண்ணொருத்தியை ஆறு மாத காலம் பேசப் பயிற்றி உயர்குடிப் பிறந்த சீமாட்டி (Duchess) களுடைய குழுவிலே சேர்த்துவிடு கிருன். அவளது பேச்சின் திறம் உயர்குடியோரது பேச்சினை ஒத் திருந்தமையின் அவள் ஏழைக் குடும்பத்துப் பெண் என்பதை யாரும் அறிந்துகொள்ளவில்லை. ஒருவர் பிறந்த தாலுகா, ஜில்லா, அவரது குலம், கோத்திரம், தொழில், பொருணிலை என்னும் இவற்றை அவரது மொழியினின்று அறிந்துகொள்ளுகிருேம். ஆதலினுலே, எல்லாரும் எவ்விடத்தும் உயர்ந்தோர் வழக்கையே கைக்கொள்ள வேண்டுமென்பது எனது கருத்தன்று. தாம் தாம் வழங்குகின்ற வழக்கு மொழியையே நயம்பட உரைக்கப் பயின்று கொள்ள வேண்டும். சம்பாஷணையிலே சொல்நயத்தோடு பொருள் நயமும் அமைய வேண்டும்.

நண்பர் **கணபதிப் பிள்ளை** லண்டன்மா நகரிலே டாக்டர் (Doctor of Philosophy) பட்டம் பெறுவதற்காகக் கல்வெட்டுச் சாசனங்களிலுள்ள வழக்கு மொழியினது இலக்கணத்தினை ஆராய்ந்தவர். கம்பன் இராமாயணம் அரங்கேற்றிய காலத்திலே எல்லோரும் கம்ப ராமாயண நடையாகப் பேசினுர்களெனக் கொள்வது மயக்கவுணர்வாகும். அக் காலத்து வழக்குத் தமிழ், அக் காலத்தில் ஏற்பட்ட கல்வெட்டுச் சாசனங்களிலே படம் பிடித்து வைக்கப்பட்டிருக்கிறது. சங்க மருவிய கலித்தொகை யென்னும் அழகிய தமிழ் நூலிலே உலக நடையும் வழக்கு மொழியும் சிற்சில இடங்களிலே அழகாகப் படம் பிடித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைப் படிக்கும்போது ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த தமிழ் நாட்டு மக்கள் நம்மின் வேறுபட்டவரல்லர் என அறிந்து உளமகிழ்வெய்துகின்றேம்.

இவ்வாராய்ச்சியின் இன்றியமையாமையையும் இதனது பொது வியல்பையும் இதுவரையும் காட்டினேன். இனி வடநாட்டு மாசிகையிலே யானெழுதிய முடிவுகளையும் 'நாடக'த் தொகுதியினை ஆராய்ந்து கண்ட முடிவுகளையும் தருகிறேன்.

## 2

**1.** வழக்கு மொழி எழுத்துத் தொகையிலும், மாத்திரையளவிலும் சுருங்கி நடத்தலை விரும்பும். தேவை இல்லை—தேவல, நிரம்ப=ரொம்ப, பயல்=பய, வாருங்கள்=வாங்க, கேட்கிறார்=கேக்கார், இருக்கிறது=இருக்கு [ஈற்றுகரம் குற்றியலுகரம்; இனிமேற் காட்டும் வழக்கு மொழிக் குற்றியலுகர ஈறுகளை இருதலைப் பிறையினுள் ( ) அடைத்துக் காட்டுவாம்.] போகவிட்டு=போட்டு. (இடைக் காலத்துச் சீவகசிந்தாமணி முதலிய நூல்களிலே "போகவிட்டு" என்பது "போகட்டு" என்று வருவதைப் பலவிடங்களிலும் காணலாம்.) ஏன் அடா=ஏண்டா (தமிழ் நாட்டுப் பிராமணர் வழக்கு). ஏன் அடா=ஏன்ற்ரா. (ஈழ நாட்டு வழக்கு. "attack" என்னும் ஆங்கில மொழியிலுள்ள இணை ttயினது ஓசையை ஒத்தது, "கற்றார், பெற்றார்" என்னும் மொழிகளில் வரும் இணை "ற்ற்" ஓசை. கணபதிப் பிள்ளை இவ்வோசையினைத் தனி "ர"வினாலே குறித்து "ஏன்ரா" என்று எழுதுகிறார். இணை "ற்ற்" ஓசையிலுள்ள அழுத்தம் தனி "ர"வுக்கு இல்லை. "ஏண்டா", "ஏன்ற்ரா" என்னும் இரண்டினையும் ஒப்பு நோக்குமிடத்து இரண்டிலும் அகரம் கெட, ஒன்றில் நிலைமொழி னகரவொற்று வருமொழிக்கேற்ப ணகரமாகத் திரிந்ததெனவும், மற்றையதில் நிலைமொழி திரிபின்றி நிற்க வருமொழி டகரம் நிலைமொழியீற்றுக்கு இனமாகத் திரிந்ததெனவும் காணலாம்.)

**2.** செந்தமிழ் "டகரம்" கொடுந்தமிழில் "றகரம்" ஆதலும், (3) செந்தமிழ் "றகரம்" கொடுந் தமிழிலே "தகர"மாதலும், (4) செந்தமிழ்த் "தகரம்" கொடுந் தமிழிலே "சகர"மாதலும் விதி.

இம்மூன்று திரிபும் எய்தும் ஓர் உதாரணத்தை முதலிலே தருகிறேன். "போய்விட்டது" 1-ஆம் விதியினாலே "போயிட்டுது" என்றாகும். தென் பாண்டி நாட்டாரும் ஈழ நாட்டாரும் 2-ஆம் விதியை மேற்கொண்டு "போயிற்றுது" என வழங்குவர். முஸ்லிம்களுள் ஒரு சாரார் 3-ஆம் விதிக்கிணங்கப் "பேய்த்துது" என்பார். 4-ஆம் விதியினாலே இத் தொடர் "போச்(சு)" என்றாகும். இம்முறையே "ஆகிவிட்டது" "ஆச்(சு)" என்றாகும். வெற்றிலை=வெத்திலை, சற்றே=சத்தே, விற்று=வித்து, வைத்த=வச்ச, தெரிந்துவிட்டது=தெரிஞ்சிச்(சு) என ஆகும்.

**5.** உயிர்ப்பின்னோ, இடையினவொற்றின் பின்னோ வருகிற உயிரேறிய ககரம் வடமொழி "ஹ" போன்ற ஓசையுடையது. இத்தகைய "ஹ" ஓசை பெற்ற ககரம் வழக்கு மொழியிலே கெடும்.

கெட்ட பின் முன்னின்ற உயிர் நீளுதலும் உண்டு. அலேகிருய்= அலேருய், அலேறே; அகத்துக்காரர்=ஆத்துக்காரர் (தமிழ் நாட்டுப் பிராமண மகளிர் வழக்கு); அகமுடையான்=ஆம்பிடையான் (மற்றையோர் வழக்கு).

*6.* மெல்லொற்றின் பின்வரும் ககரம் வடமொழி வருக்கத்து மூன்ரும் எழுத்தின் ஓசை பெறும்: என்கிருர்கள்=எங்கிருங்க. போய் விடுங்கள்=போங்க. ஏனைய வல்லொற்றுக்களும் இன மெல்லெழுத்தாகும். வேண்டும் என்ருல்=வேணும்ஞு.

*7.* வருமொழி வல்லொற்றுக்கு இனமாக ஈற்றில் நின்ற மெல் லொற்றுத் திரியும்: ஆண்பிள்ளே=ஆம்பிள, பெண் பிள்ளே= பொம்பிள, பெண்டாட்டி=பொம்மஞட்டி.

*8.* ழகரம் சென்னேயில் யகரமாதலும், தென் பாண்டி நாட்டிலும் ஈழத்திலும் ளகரமாதலும், சென்னே ரிக்ஷா வண்டிக்காரர் வாயில் ஸகரமாதலும் உண்டு: வாழைப் பழம்=வாயப் பயம், வாளப் பளம்; இழுத்துக்கொண்டு=இஸ்த்துக்கினு.

*9.* குற்றியலுகரம் வல்லொற்றூர்ந்து மொழியீற்றில் வருவது செந்தமிழ் இலக்கண விதி. கொடுந்தமிழிலே குற்றியலுகரம் மெல்லொற்று இடையொற்று ஊர்ந்து ஈற்றில் வருதலும், வல் லொற்றூர்ந்து இடையில் வருதலும் உண்டு: ஐயர்=ஐய(ரு), யார்?=யா(ரு)? நெல்=நெல்(லு), கள்=கள்(ளு), பெண்=பொண் (ணு); இருக்கும்=இருக்கு(ம்).

*10.* உடம்படுமெய் யகரம் மொழிமுதலில் நிற்கும் ஏகாரத் தின் முன் வருதலுண்டு: ஏன் ஐயா=யேங்யா.

*11.* மொழி முதல் வகரம் உகரமாதல் உண்டு: வீடு=ஊடு.

*12.* இகரம் எகரமாகத் திரிதல் உண்டு: நிறைய=நெறைய.

*13.* "ஐ" "எய்" ஆதல் உண்டு: வைகிருர்=வெய்கிருர்.

*14.* எகரம் ஒகரமாதல் உண்டு: பெண்பிள்ளே=பொம்பிள.

இத்திரிபுகள் ஏன் நிகழுகின்றன என்பதற்கு "மொழியொலி யியல்" ஆராய்ச்சியிலிருந்து காரணங் காட்டலாம். உரை பெருகு மாதலின் அது செய்வதை யொழித்து யாழ்ப்பாணத்து வழக்கு மொழியியல்பு சிலவற்றை ஆராய்வாம்.

*15.* யாழ்ப்பாணத்து வழக்கு மொழியில் ஐகாரம் குறு குவதில்லே. நெட்டெழுத்திற்கு உரிய இரண்டு மாத்திரையையும் பூர்ணமாகக் கொண்டு ஒலிக்கும்.

*16.* ஆல், ஒடு, இல் என்னும் வேற்றுமையுருபுகளும், போல் என்னும் உவமவுருபும் ஏகாரம் பெற்று, அவ்வேகாரம் ஐகார

மாகத் திரியப் பெறுவன. மேலைய விதியின்படி ஐகாரம் பூர்ண மாக ஒலிக்கும்.

17. ஆறும் வேற்றுமைச் சொல்லுருபாகிய "உடைய" ஈற்று யிர் மெய் கெட்டு முதல் "உ" "அ" ஆகும். 2-ஆம் விதியின்படி டகரம் றகரமாகவும் பெறும்.

18. ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபாகிய "இடத்திலி ருந்து" என்பது "இடத்திலையிருந்து", "இட்டையிருந்து" என ஐகாரம் பெறும். அவ்வைகாரமும் பூரணமாய் ஒலிக்கும்..

19. விளியேற்றுமை ஏகாரமும் வினு ஏகாரமும் பூரணமா யொலிக்கிற ஐகாரமாகும். தொகுத்து நோக்குமிடத்து முதலாம் நான்காம் வேற்றுமை யொழிந்த வேற்றுமைகளிலெல்லாம் ஐகா ரம் நிறைவாக ஒலிக்கும். மேலைவிதிகள் பெற்று வரும் இவ்வுதா ரணங்களை நோக்குக:

அவனோடு = அவனோடை, எங்களுடைய = எங்கடை, நேரத் திலே = நேரத்திலை, எங்கே கிடைக்கிறது = எங்கை கிடக்கு, என் னுடைய அப்பன் = என்ற்றையப்பு, அவனைப் போல் = அவனைப் போலை, அவனுல் = அவனுலை, அவனிடத்திலிருந்து = அவனிடத் திலையிருந்து. உங்களைத்தான் (ஐகாரக் குறுக்கம்) = உங்களைத் தான் (ஐகாரம் பூரணவொலி). மட்டக் களப்புத் தமிழில் ஐகா ரம் அகாரமாய் நடக்கும். மேற்காட்டிய உதாரணச் சொற்கள் முறையே எங்கட, நேரத்தில, எங்க கிடக்குது, அவனப் பெல (ஓகாரம் எகரமாயினமையும் நோக்குக), அவனுல, அவனட்டெ ருந்து, ஓங்களத்தான் (உகரம் ஒகரமாயினமை நோக்குக).

20. ஒன்றுமுதல் ஒன்பது வரையுமுள்ள எண்கள் யாழ்ப் பாணத்தில் ஒண்டு, இரண்டு, (சிறுபான்மை ரண்டு), மூண்டு, நாலு, அஞ்சு, ஆறு, ஏளு, எட்டு, ஒன்பது என நிற்பன. மட்டக் களப்பில் ஒண்டு, ரெண்டு, மூணு, நாலு, அஞ்சு, ஆறு, ஏளு, எட்டு, ஒன்பது என நிற்பன.

21. யாழ்ப்பாணத்தில் அகரவீற்றின் பின்னும் யகரம் உடம் படுமெய்யாகும். காணவில்லை = காணயில்லை. மட்டக் களப்பில், "காணல்ல." யாழ்ப்பாணத்திலே யகரத்தின் முன்னிற்கும் அகரம் ஐகாரமாதல் உண்டு: காணையில்லை.

22. "ஏன்" விகுதி "அன்" ஆகும்: இருக்கிறேன் = இருக் கிறன், வருகிறேன் = வாறன்.

23. ஒகார வினுவின் முன்னிற்கும் ஆகாரம் இகரமாகும்: பண்ணுகிருயோ = பண்ணுகிறியோ, விட்டாயோ = விட்டியோ.

24. மட்டக் களப்பிலே மொழி முதல் ஒகர ஓகாரங்கள் எகர ஏகாரங்கள் ஆவதுண்டு: சொல்லுங்கள் = செல்லுங்க

போய்விட்டார்=பேய்த்தார் (பெரும்பான்மை முஸ்லிம்களிடையே காணப்படுவது). மட்டக் களப்புத் தம்பிலிவில் என்னும் கிராமத்திலே மொழி முதல் ஐகாரம் எகரமாதல் உண்டு. மைத்துனன், மைத்துனி=மெச்சான், மெச்சி.

25. நன்னூலார் கூறின "கா" என்னும் அசைநிலை இடைச்சொல் மட்டக்களப்பிலே வழக்கில் உள்ளது. இதனை அதிகமாகப் பெண்கள் வழங்குவார்கள். இதனை அவதானித்த ஒரு புலவன் "ஆடவர் தோளிலுங்கா, அறிவையர் நாவிலுங்கா" என்று கூறினுன் என்பதாகக் கேள்வி. ஆடவர் பாற்குடங்களை உறியில் வைத்துக் காத்தடியின் இருதலையிலுங் கட்டித் தோளில் எடுத்துச் செல்வர். மகளிர் உரையாடும்போது, "என்னகா சொல்ரு? ஏங்கா நீ வரவில்லை? எலக்கா இங்கே சத்து வந்திற்றுப்போ" என்று இப்படிக் "கா" அசைத்துப் பேசுவது அந்நாட்டு வழக்கம். "எலக்கா" என்பதிலே கலித்தொகையில் வரும் "எல்லா" திரிந்து நிற்பதை நோக்குக.

## 3

இட வேறுபாட்டாலும், குழு வேறுபாட்டாலும் கொடுந்தமிழ் விகற்பங்கள் பலவேறும் எனக் கண்டாம். இனி, தமிழ் நாடக நூலோர் சுவை, குறிப்பு, சத்துவம், அவிநயம், பொருள், சாதி, யோனி, விருத்தி, சொல், சொல்வகை, வண்ணம், வரி, சத்தி, சேதம் என நாடகவுறுப்புப் பதினுன்கு என்பர். வடநூலார்க்கும் இவை ஒப்பனவே. தசரூபகம் 2-ஆம் அதிகாரம், 58-ஆம் சூத்திரம்: "உலக வழக்கினை நுணுக ஆராய்ந்துணர்ந்து, நாடகக் கட்டுரை நடந்தேறிய தேசத்தாருக்குரிய பாஷை, வேஷம், கிரியை என்னும் இவற்றை மாறுபாடின்றி வழங்கவேண்டும்." 59,60-ஆம் சூத்திரங்கள்: "ஸம்ஸ்கிருதம் ஆடவருள் உயர்ந்தோராலும், தவத்தராலும், ஓரோவழித் தவமூதாட்டியராலும், பட்டத்தரசியராலும், மந்திரி புதல்வியராலும் கணிகை மாதராலும் பேசுதற்குரியது. பிராகிருதம் பெண்பாலருக்குரியது. சௌரசேனி ஆடவருட் கீழாயினுருக்குரியது. பைசாசம் கடையாயினுருக்கு உரியது. மாகதியின் இயல்பும் அதுவே. பல தேய மாக்களுக்கும் அவ்வத் தேய வழக்கு மொழியுரியது." இந்த விதியினைத் தமிழுக்குக் கொள்ளுங்கால் ஸம்ஸ்கிருதம் என்ற மொழி நின்றவிடத்துச் செந்தமிழ் எனவும் ஏனையவிடத்துக் கொடுந்தமிழ் எனவுங் கொள்க.

ஆசிரியர் தொல்காப்பியனுர் காலத்திலே "சேரி மொழி"யெனக் குறிக்கப்பட்டதும், உரையாசிரியரால் "பாடி மாற்றங்கள்" என வழங்கப்பட்டதும் ஆங்கிலத்திலே "Dialects" என்று குறிக்கப் பட்டதேயாகும். இஃது இட வேறுபாட்டினுலும், குழு வேறுபாட்டினுலும் வேறுபடும் மரபினை மேலே காட்டினும்.

"சேரி மொழியாற் செவ்வி திற்கிளந்
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே"

என்பது தொல்காப்பியச் சூத்திரம். 'சேரிமொழி என்பது பாடி மாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணாமைப் பொருட்டொடரானே கொடுத்துச் செய்வது புலனென்று சொல்லுவர் புலன் உணர்ந்தோர் என்றவாறு. அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன என்பது கண்டுகொள்க' என்பது உரை; கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டினைச் செந்துறை மார்க்கத்தன என்பர். சேரிமொழிச் செய்யுளினை வெண்டுறை மார்க்கமென்றார். இதனாற் செந்தமிழ், கொடுந்தமிழ் என வகைப் படுத்தியது செந்துறை வெண்டுறை என்னும் வகுப்பினோடு ஒரு புடையொக்கும் என அறிகின்றாம்.

நாடக நூலுக்குக் கொடுந்தமிழ் வழக்கு வருமென்பது ஒரு பாலாக, 'அறநூல் (Ethics and law), பொருணூல் (Natural and Social Sciences), இன்பநூல் (Fine Arts), வீட்டுநூல் (Religion and Philosophy) என அறிஞர் வகுத்துரைத்த நூல்களைச் செந்தமிழில் எழுதுவது முறையா? கொடுந்தமிழில் எழுதுவது முறையா?' என்னும் வினா எழுகின்றது. ஆராய்ந்து கற்கும் அறிவுடையோருக்கு உரியவாதலானும், இடவேறுபாடு, பால்வேறுபாடு, வருணவேறுபாடு என்னும் வேறுபாடுகளை இகந்து நிற்பவாதலானும் அறிவு நூல்கள் செந்தமிழ் மொழியிலே ஆக்கப்பட வேண்டுமென்பது முடிவாகிறது. அஃதன்றியும் கோட்டமுடைய தமிழ் கொடுந்தமிழ் எனப் பெயரெய்தி நின்றது. நூலோவெனின் மனக் கோட்டத்தைத் தீர்ப்பதற்காக அமைவுற்றது.

"உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு"

என்பவாகலின் தான் கோடியது பிறிதொன்றினது கோட்டத்தைத் தீர்க்கும் ஆற்றல் இலதாதலின், கொடுந் தமிழிலே நூல் அமையாதென அறிகின்றாம். ★

—ஜனவரி, 1941.

டி. கே. சிதம்பரநாத முதலியார்

# 'கால்மணி நேரம் தமிழுக்கு'

மூன்று மாசத்துக்கு முன்தான் ரவீந்த்ர நாத டாகூர் நம்முடைய சென்னைக்கு வந்து சில உண்மைகளை நமக்குத் தெரிவித்தார். அவைகளில் ஒன்று: "கவியை அநுபவித்து விடுவதற்காக எத்தனையோ பாஷைகளைக் கற்றேன். இங்கிலீஷ் மாத்திரம் அல்ல; பிரஞ்சு பாஷை, ஜெர்மன் பாஷை, லத்தீன், கிரீக்கு ஆகிய புராதன பாஷைகள் எல்லாம் கஷ்டப்பட்டுக் கற்றேன். என்ன பலன்? கவியின் இதயம் தெரிந்ததா? இல்லவே இல்லை. என் தாய் மொழி ஒன்றின் மூலமாகத்தான் எனக்கு அது தெரிய வந்தது!" இது நமக்கு லகுவில் விளங்கி விடாது என்று எண்ணி, தாம் சொன்ன வார்த்தைக்கு ஒரு தீர்மானமும் கொடுத்தார். அதாவது: "பிற பாஷைகளின் மூலமாகக் கவியின் உயிர்நிலையை அறியப் புகுவது காதலியின் அருள் முறுவலைப் பெறுவதற்காக வக்கீலுக்கு வக்காலத்துக் கொடுக்கிற அழகுதான்."

இதெல்லாம் வங்காளிகளைப் பார்த்துச் சொன்னதாகத்தான் வைத்துக்கொள்ள வேண்டும். தமிழரைப் பற்றிய உண்மை அதாவது தமிழைப் புறக்கணிப்பதையும், தமிழ்ப் பாட்டில் ஒன்றும் இல்லை, தமிழுக்கென்று தனி நயம் (தமிழ் ஜீனியஸ்) கிடையாது என்றெல்லாம் சர்தாரணமாகச் சொல்லிக்கொண்டும் அதைவிட நம்பிக்கொண்டும் இருக்கிறதையும் டாகூர் தெரிந்திருந்தால் எப்பேர்ப்பட்ட ஆவேசமும் ஆங்காரமும் வந்திருக்குமோ சொல்ல முடியாது.

ஒரு தேசத்தாருடைய நாகரிகத்துக்கும் பாஷைக்கும் விரோதிகளாய் இருப்பவர் பொதுவாக அந்தத் தேசத்தை அடியோடு அழிக்கப் பார்க்கும் அக்கம்பக்கத்திலுள்ள தேசத்தார்தான். கொரியா தேசத்தாருக்குச் சொந்தமான நாகரிகமும் அதற்கேற்ற பாஷையும் உயர்தர நிலையிலேயே இருந்தன. ஜப்பான், கொரியாவைக் கைப்பற்றின உடன் கொரியர்கள் தங்களுக்கு உரிய நடை உடை பாவனையை விட்டுவிட வேண்டும், கொரிய பாஷையை ஒழித்துவிட வேண்டும், ஜப்பானியர்களைப் போலவே எல்லா விதத்திலும் இருக்க வேண்டும், முக்கியமாக ஜப்பான் பாஷையைத்தான் கற்கவேண்டும் என்றெல்லாம் கொடுங்கோன்மை

நடத்தினார்களாம். இது போலவே ஐரோப்பா கண்டத்திலும் ஒரு தேசத்தார் தங்களுக்கு உட்பட்ட பிற தேசத்தாருடைய நாகரிகத்தையும் பாஷையையும் வேரோடு களைந்தெறியப் பார்த்தார்கள், இன்றைக்குமே பார்க்கிறார்கள் என்பது தெரிய வருகிறது.

ஆனால் தமிழ்ப் பாஷைக்கும் தமிழ் நாகரிகத்துக்கும் உலை வைக்க அயல் தேசத்தார் படை எடுத்து வரவேண்டிய அவசியம் எல்லாம் இல்லை. தமிழ் மக்களே அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள் என்றால் பொருந்தும். ஜப்பான் மாதிரி சட்ட திட்டங்கள் ஏற்படுத்தவில்லைதான். அந்தச் சட்ட திட்டங்கள் கொரியர்களுக்குத் தங்கள் பாஷையில் முன்னிருந்ததைவிட அதிகமாக ஆர்வங்கொள்ளக் காரணமாக இருந்தன; பாஷைமேல் ஏதோ மிதந்தாற் போலிருந்த ஆசையை இதயத்துக்குள் செலுத்தி ஒரே படியாய்ப் பதிந்து நிற்கும்படி செய்துவிட்டன. நம்மவர்கள் செய்கையோ கொடுமையிலும் கொடுமை. ஆபத்தில் இருக்கிறோம் என்ற உணர்ச்சியே இல்லை. 'தமிழ் எதற்கு? தமிழில் என்ன இருக்கிறது? தமிழைப்பற்றிப் புகழ்ந்து பேசுகிறதும் பாராட்டிப் பேசுகிறதும் வெறும் படாடோபம்; தேச பக்தி என்று சொல்லுவதில் உளுத்துப்போன பொக்கான பாகம் அது; அக்கம் பக்கத்தில் உள்ளவர்களையும் அவர்கள் பாஷைகளையும் குறித்து வந்த விரோதம்! இப்படியெல்லாம் சொல்லுகிறவர்கள் யார்? அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் அல்ல; தமிழ் நாட்டிலேயே இருந்துகொண்டு, வீட்டில் பெண்டு பிள்ளைகளோடு தமிழிலேயே பேசிக்கொண்டிருக்கிற தமிழ் மக்களே. இவ்வளவுக்கும் காரணம் ஏதோ உலகத்தில் இல்லாத, தமிழ் மக்களிடத்தில் மாத்திரம் அமைந்துள்ள, சீர்கேடல்ல. நம்மவரும் மற்ற உலகத்தாரைப் போல ஒரே விதமான சீலம் படைத்தவர்கள்தான். வங்காளிகளை மட்டும், இல்லாத ஒரு பக்குவத்தில் படைத்துவிட்டானா பிரமன்? இல்லை. என்றாலும், வங்காளிகள் ஒவ்வொருவரும், ரவீந்த்ரநாத டாகூரிலிருந்து ரயில்வே போர்ட்டர் வரையும் ஏகோபித்து, தங்கள் தாய்ப் பாஷையினிடத்தில் அபார ஆர்வமும் அக்கறையும் கொண்டிருக்கிறார்கள். இதற்காக மேல்நாட்டார்கள் அவர்களை மதிக்கிறார்கள்.

தமிழர்களைப்பற்றி இப்படிச் சொல்ல முடியுமா? யூனிவர்ஸிட்டி பட்டம் ஒன்று இரண்டு கிடைக்க வேண்டியது; பதவியும் ஏதாவது கிடைத்துவிட வேண்டியது; உடனே, 'தமிழ் படிக்கிறவன், தமிழ் தெரிந்தவன்' என்று தம்மை எண்ணிவிடுவார்களோ என்ற பயம் ஏற்பட்டுவிடுகிறது. இதற்கெல்லாம் பள்ளிக்கூடங்களும் கற்பிக்கிற முறையும் காரணந்தான்; ஆனாலும், முக்கிய காரணம், நம்முடைய மூதாதைகளின் பூர்வ வினையே.

அவர்கள் எவ்வளவோ அரிய நூல்களை எழுதி வைத்துவிட்டுத்தான் போனார்கள். திருக்குறள் என்ன, கம்பராமாயணம் என்ன, கலிங்கத்துப் பரணி என்ன, சிலப்பதிகாரத்தில் பதித்து வைத்திருக்கிற வைர மணிகள் போன்ற வரிப் பாடல் என்ன;

இவைகளின் வாடாத பெருமையையும் அழகையும் நம்மவர் அநுப விக்கிறார்களா? ஒப்புக்கொள்ளுவதுதான் உண்டா? தமிழர் இவை களை அநுபவியாமல் வேறு யார் அநுபவிக்க? செவ்வாய் கிரகத்தில் யாரோ மக்கள் இருக்கிறார்களாம்; அவர்களா வரப்போகிறார்கள் அநுபவிக்க? தமிழுக்குத் தமிழர்தான் கதி; தமிழர்க்கும் தமிழே கதி.

இந்த உண்மை மகாமகோபாத்தியாய சாமிநாத ஐயர் அவர் களுடைய மனசில் ஐம்பது வருஷத்துக்கு முன்னமே பட்டுவிட்டது. அன்றுமுதல் இன்றுவரையும் அவர்கள் தமிழ் மக்களைத் தமிழ் படிக்கும்படி சதா தூண்டிக்கொண் டிருக்கிறார்கள். படிக்கிறவர் களைக் கண்டுவிட்டால் கூத்தாடுவார்கள்.

சுமார் நாற்பது வருஷத்துக்கு முன், திருச்சிராப்பள்ளிக்கு வந்து, எஸ். பி. ஜி. காலேஜில் தமிழின் அருமையைப்பற்றியும் வளத்தைப்பற்றியும் பிரசங்கம் செய்தார்கள். நானும் பிரசங்கத் தைக் கேட்கப் போயிருந்தேன். அப்போது நாலாவது பாரத்தில் வாசித்துக்கொண் டிருந்த சிறு பையனாக இருந்ததால், "கும்பகோணம் சாமிநாத ஐயரைப் பார்க்கப் போயிருந் தேன்" என்று சொல்லுவதுதான் பொருந்தும். இருந்தாலும் ஐயரவர்கள், தமிழ் மகளின் நகை ஜாபிதாவை எடுத்துக் காட்டியபோது, அதாவது தலைக்குச் சூளாமணி, மார்புக்குச் சிந்தாமணி, காதுக்குக் குண்டலகேசி, கைக்கு வளையாபதி, இடைக்கு மணிமேகலை, கடைசியாகக் காலுக்குச் சிலப்பதிகாரம் என்று முடித்தார்களோ இல்லையோ, அப்படியே மயங்கிப் போய் விட்டேன். அன்று இரவெல்லாம் ஒரே சொப்பனம்—தமிழ் அணங்கு வருகிறதும், தன் அபூர்வ அணிகலங்களை இப்படியும் அப்படியுமாகத் திருப்பித் திருப்பிக் காட்டுகிறதுமாய் இருந்தது. பிரசங்கத்தின் இறுதியில் ரொம்ப ஆற்றாமையோடு ஒரு விஷயத்தை வலியுறுத்தினார்கள். "மாணவர்களுக்கும் கனவான் களுக்கும் ஒரு வார்த்தை: இங்கிலீஷைப் படிக்க வேண்டாமென்று நான் சொல்லவில்லை. எவ்வளவு வேண்டுமானாலும் படியுங்கள். ஆனால், தமிழுக்குத் தினம் அரைமணி நேரம் ஒதுக்கி வையுங்கள்; கால்மணி நேரம் படித்தாலும் போதும்; பெரிய காரியம்" என்று, தம் ஆர்வத்தை எல்லாம் சேர்த்து ஒருமுனைப்படுத்திச் சொன்னார் கள். இன்றைக்கும் என்னால் அந்த ஆர்வத்தை மறக்க முடிய வில்லை. இந்த ஆற்றாமை நாற்பது வருஷத்துக்கு முன். இடையில் தமிழ்ப் பயிற்சி சிறிது விருத்தி அடைந்திருக்கிறது என்றாலும், மூன்று கோடி ஜனங்கள் தமிழர் என்று எண்ணும் போதும், வங்காளிகளுக்குத் தாய்மொழியிலுள்ள உணர்ச்சியும் உறுதியும் நம்மவருக்குத் தமிழ் சம்பந்தமாக இல்லையே என்று எண்ணும் போதும் நாமும் ஐயரவர்களோடு சேர்ந்து ஆற்றாமைப்பட வேண் டியதாய்த்தான் இருக்கிறது.

பண்டைக் காலத்து உயர்தர இலக்கியங்கள் சம்பந்தமாக நம்மவருக்கு அவ்வளவாக அக்கறை ஏற்படாவிட்டாலும், ஒரு விதத்தில் தற்போது நாம் எல்லோரும் சந்தோஷம் கொண்டாட வேண்டி யிருக்கிறது. நாற்பதினயிரம், ஐம்பதினயிரம் என்று சொல்லும்படியாகத் தமிழ்மக்களுக்கு - ஆடவர் பெண்டிர் பிள்ளைகள் எல்லோருக்கும், இங்கிலீஷ் படித்தவர்களுக்குங்கூட - தமிழ் வசனம் வாசிக்கிற பழக்கம் ஏற்பட்டு, தமிழணங்கின் சௌலப்பியம், விசித்திரமான நடன கதிகள், உல்லாசப் போக்குகள், நம் நெஞ்சொடு நெஞ்சுவைத்து இதயத்துக்கு இதயம் பேசும் தனித்த அருமைப்பாடுகள் எல்லாம் தெரியவும் அநுபவிக்கவும் நேர்ந்திருக்கிறது. சமீபத்தில், 'ஆனந்த விகடன்' புகுந்து விளையாடாத வீடில்லை, ரயிலில்லை, ஊரில்லை, தோட்டமில்லை. அடுக்களை இல்லை, பெட்ரூம் இல்லை, தோட்டி இல்லை, தொண்டைமான் இல்லை என்று சொல்லத் தோன்றுகிறது. ஒரேபடியாய், பேஸ்து வைத்தமாதிரி இருந்த தமிழகம் திடீரென்று குலுங்கக் குலுங்கச் சிரிக்கிறதைக் காண்பதில், ஐயரவர்களுக்கு நம்மைப் போலவே சந்தோஷம்.

வசனத்தின் ருசியைக் கண்டுவருகிற தமிழ் மக்கள் நாளடைவில் பண்டைய இலக்கியங்களின் அருமையையும் உணர்ந்து பாராட்டக் கூடும். ரவீந்த்ர நாத டாகூர் சொன்ன சொல்லின் உண்மை இன்னதென்று அவர்களுக்கு நன்ருய்ப் பட்டுவிடும். ஐயரவர்கள் நமக்குச் செய்துள்ள உதவியும், அது எவ்வளவாக நம்முடைய நன்றிக்கு விஷயமாய் இருக்கிறது என்ற உண்மையும் அப்போதுதான் தென்படும்.

★

—மார்ச், 1935.

நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை

# கற்றது கைம்மண்ணளவு

**1904**-இல் நான் கோயம்புத்தூர்க் காலேஜில் நான்காவது பாரத்தில் படித்துக்கொண் டிருந்தேன். அப்போதுதான் முதல் முதல் கம்பராமாயணத்தில் ஒரு சிறு பகுதி எங்கள் பாடமாக வந்தது. ஸ்ரீ வேங்கடரமண ஐயர் என்ற எங்கள் தமிழ்ப் பண்டிதர் அந்தக் கம்பராமாயணப் பாட்டுகளுக்கு வெகு ரசனையோடு ஆடிப் பாடி அர்த்தம் சொல்லுவார். அப்போது என் மனத்தைக் கவர்ந்த பாட்டு:—

பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிகர் சீறடிய ளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்

என்று சூர்ப்பனகையின் வருகையை வர்ணிக்கும் பாட்டு.

இதை அந்த ஆசிரியர் அபிநயத்தோடு பாடி அர்த்தம் சொன்னார். அன்று முதல் கம்பராமாயணப் பாட்டுகளில் எனக்கு ஓர் அலாதி ஆசை உதித்தது. மேலும் நாங்கள் படிக்கிற காலத்தில் தமிழ்ப் பாட புத்தகத்தில் உள்ள எல்லாச் செய்யுட்களையும் மனப் பாடம் பண்ணி ராகத்தோடு ஒப்பித்தாக வேண்டும். அப்படிப் பாடம் பண்ணி ராகத்தோடு ஒப்பிப்பதற்கும் கம்பராமாயணப் பாட்டு எனக்குக் கவர்ச்சி தந்தது. அதனால் நாளுக்கு நாள் கம்பராமாயணத்தில் எனக்கு அதிகக் கவனம் சென்றது. என் தமிழறிவு வளர்ந்ததற்கே கம்பராமாயணந்தான் காரணம்.

பள்ளிக்கூடத்தை விட்ட பின் அடிக்கடி கம்பராமாயணச் செய்யுட்களை நானே படிப்பதிலும் அநேக வித்துவான்களுடைய கம்பராமாயணப் பிரசங்கங்களைக் கேட்பதிலும் ஆர்வம் மிகுந்தது. *1911*-ஆம் வருஷத்தில், காலஞ்சென்ற மோ. வே. கோவிந்தராஜ ஐயங்கார் என்பவருடைய கம்பராமாயணப் பிரசங்கத்தைக் கேட்க நேர்ந்தது. அவர் வடமொழியிலும் நல்ல பாண்டித்தியம் உள்ளவர். வால்மீகி ராமாயணத்தையும் நன்றாக ஆராய்ந்தவர். வால்மீகி ராமாயணத்தையும் கம்பராமாயணத்தையும் ஒப்பிட்டு அவர் கம்பனுடைய கவிதா மேதையைப் புகழ்ந்து பேசிய பிரசங்கத்தைக்

கேட்டு நான் பூரிப்படைந்து நானே அவருடைய நட்பை நாடினேன். வெகு நெருங்கிய நண்பர்களாகிவிட்டோம். அவரிடம் முறைப்படிக் கம்பராமாயணப் பாடம் கேட்கத் தொடங்கினேன். அப்படிப் படித்துக்கொண்டு வரும்பொழுது மந்தரை சூழ்ச்சிப் படலத்தில்,

வெயின்மு றைக்குலக் கதிரவன் முதலிய மேலோர்
உயிர்மு தற்பொருள் திறம்பினும் உரைதிறம் பாதோர்
மயில்மு றைக்குலத் துரிமையை மனுமுதல் மரபைச்
செயிரு றப்புலைச் சிந்தையால் என்சொனுய்? தீயோய்

என்ற பாட்டுக்கு அர்த்தம் செய்யவேண்டிய சமயம் வந்தது. இந்தப் பாட்டு, கைகேசி கூனியைக் கடிந்து பேசுகிற பேச்சு. கூனி, "கைகேசி, நாளை ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யப் போகிறார்களாம். அதனால் உனக்கும் உன் மகன் பரதனுக்கும் கேடுகாலம் வந்துவிடும். நீ உடனே உன் மகன் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேணுமென்று முயற்சி செய்" என்று தூண்டுகிறாள். அதைக் கேட்ட கைகேசி கடுங் கோபங் கொண்டு சீறுகிற பேச்சு இந்தப் பாட்டு.

"அடீ கூனீ! உன்னுடைய அற்ப புத்தியினால் என்ன வார்த்தை சொல்லிவிட்டாய்! இந்தக் குலம் சூரிய குலம். அதில் தோன்றிய மன்னர்கள் தங்களுடைய உடல் பொருள் ஆவி மூன்றையும் இழந்துவிட நேரிட்டாலும் முறை தவறிய காரியம் செய்ய மாட்டார்கள். அவர்கள் மயிலைப்போல் முறை தவறாத குணமுடையவர்கள். மனுவின் சந்ததியைச் சேர்ந்தவர்கள். அப்படிப்பட்ட வம்சத்தின் பரம்பரையான பெருமையைக் கெடுக்க, மூத்தவனாகிய ராமனை விட்டு இளையவனாகிய பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று கேட்கச் சொல்லுகிறாயே! அடி கொடியவளே!" என்கிறாள் கைகேசி.

இதில் 'மயிலைப்போல முறை தவறாத' குலம் என்று வருகிறது. முறை தவறாத தன்மைக்கு மயிலை உபமானமாகச் சொன்னதன் மர்மம் என்ன? மற்றப் பட்சிகளிடத்தில் இல்லாமல் மயிலுக்கு மட்டும் உள்ள எந்தச் சிறப்பு இதற்குப் பொருந்தும் என்பது ஒன்றும் எங்களுக்கு விளங்கவில்லை. அதற்காக நாங்கள் புரட்டிப் பார்த்த எந்த அர்த்த புத்தகத்திலும் இதற்குச் சரியான பொருள் கிடைக்கவில்லை. ஒரு புத்தகத்தில், "மயில் முறைக் குலத்துரிமையாவது: மயில் முதலில் பொரித்த குஞ்சுக்குச் சிறகு முளைத்த பிறகுதான் இரண்டாவதற்குச் சிறை முளைப்பது. அதுபோல இராமனுக்குப் பட்டம் கட்டியபின் பரதனுக்குப் பட்டம் கட்டுதல் முறைமை என்பதாம்" என்று அச்சடிக்கப்பட்டிருந்தது. இதைப்போல அறிவில்லாத அர்த்தத்தை அச்சடித்திருக்கிறார்களே என்று அதிசயப்பட்டோம். எல்லாப் பட்சிகளிலும் முதலிற் பொரித்த குஞ்சுக்குத்தான் முதலில் சிறகு முளைக்கிறது. இதை மயிலுக்கு மட்டும்

சொல்லுவது மடமை. ஆதலால் அந்த அர்த்தம் பொருந்தாமை கண்டு நாங்கள் பல பேரிடம் இதைக் கேட்டும் பயன் அடைய வில்லை. இது என்னவோ ஏதோ விளங்கவில்லையே என்று விட்டு விட்டோம்.

1915-ஆம் வருஷத்தில் நான் 'ஸயின்டிபிக் அமெரிக்கன்' (Scientific American) என்ற ஓர் ஆங்கில சஞ்சிகையை அகஸ் மாத்தாகப் பார்க்க நேர்ந்தது. அந்தச் சஞ்சிகை உலகத்தில் விஞ் ஞானம் அடைந்து வருகிற விருத்தியை அப்போதைக்கப்போது வெளியிடுகிறது. ஓர் உயர்ந்த பத்திரிகை. அந்தப் பத்திரிகை நல்ல நல்ல படங்களுடன் பளபளப்பான காகிதத்தில் வெகு அழ காக அச்சடிக்கப்பட்டிருக்கும். அதிலுள்ள படங்களை ஒவ் வொன்றாகப் பார்த்துக்கொண்டு வரும்போது ஓர் அழகான மயில் தன் தோகையை முழுதும் விரித்து ஆடுவது போலவும், அதனரு கில் வேறு சில மயில்கள் இருப்பது போலவும் ஒரு படம் என் கண்ணைக் கவர்ந்தது. வெகு நேரம் அந்தப் படத்தின் அழகைப் பார்த்துவிட்டு அதன்கீழ் அச்சடித்திருந்த விஷயத்தைக் கவனித் தேன். அதில் 'பட்சி சாஸ்திர ஆராய்ச்சி' என்ற தலைப்புடன் ஒரு வியாசம் இருந்தது. அதைப் படித்தேன்.

ஒரு பெரிய அமெரிக்கப் பிரபு ஏராளமான பணச் செலவில் ஒரு பட்சி சாஸ்திர ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்தி, பல ஜாதிப் பட்சிகளின் இயல்பைக் கண்டறிவதற்கான ஏற்பாடுகளைச் செய் திருந்தார். வெகு விஸ்தாரமானதும் மரங்களடர்ந்ததுமான ஒரு வனத்தில் ஒவ்வொரு ஜாதிப் பட்சிக்கும் ஒவ்வோர் இடம் ஏற் படுத்தி அந்தப் பறவை எப்படி எப்படி முட்டையிட்டு எப்படி எப்படிக் குஞ்சு பொரித்துக் குடும்பம் நடத்துகிறது என்பதை யெல்லாம் வெகு நுணுக்கமாகப் பதிவு செய்துகொண்டு ஆராய்ந்து வந்தார். அந்த ஆராய்ச்சியின் ஒரு பகுதியே நான் பார்த்த மயில் படமும் அதைப் பற்றிய கட்டுரையும். அந்தக் கட்டுரையில் ஒரு மயிலானது தன்னுடைய எல்லாக் குஞ்சுகளுடனும் குடும்ப சகித மாகத்தான் ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குப் போகும் என்றும், அப்படித் தாய்ப் பறவையோடு குஞ்சுகளெல்லாம் சேர்ந்திருக்கிற சமயத்தில் கலாபம் விரித்து ஆடவேண்டிய சந்தர்ப் பம் வரும்போதெல்லாம் அந்தக் குஞ்சுகளில் மூத்த குஞ்சுதான் முதலில் கலாபம் விரிக்கும் என்றும், அதற்குப் பிறகுதான் மற்றக் குஞ்சுகளெல்லாம் கலாபம் விரிக்கும் என்றும் கண்டறியப்பட்ட தாக எழுதியிருந்தது. மூத்த குஞ்சு என்பதற்கு என்ன அடையா ளம் என்றால், ஒவ்வொரு குஞ்சும் முட்டையிலிருந்து வெளிவந்த உடனே அங்குள்ள ஆராய்ச்சிக்காரன் ஒவ்வொரு குஞ்சின் காலி லும் ஒவ்வொரு நிறமான வளையத்தை மாட்டிவிட்டுப் பதிவு செய்துகொண்டான் என்ற விளக்கமும் எழுதப்பட்டிருந்தது.

இதைப் படித்தவுடனே எனக்கு ஒரே ஆனந்த பரவசம் உண் டாகிவிட்டது. 'மயில் முறைக்குலம்' என்று கம்பன் பாடியிருப்

பது இதுதான் என்று தீர்மானித்து அதை என் நண்பர் கோவிந்த ராஜ ஐயங்காரிடம் சொன்னேன். அவரும் அதை ஆமோதித்தார்.

அதுமுதல் இதைக் கண்டுபிடித்துவிட்ட இறுமாப்பு என் மனத்தில் இடங்கொண்டது. பல இடங்களில் சென்று கம்ப ராமாயணத்தைப் பற்றிப் பேசும்போதெல்லாம் இதை எப்படியாவது இழுத்துப் புகுத்தி இந்த 'மயில் முறை' என்பதற்கு மற்ற எவருக்கும் தெரியாத அர்த்தத்தை நான் சொல்லுவதாகச் சொல்லிப் பெருமை அடித்துக்கொள்வதில் ஒரு பிரியம் வந்துவிட்டது. கம்ப ராமாயணம் படித்தவர் யாரைக் கண்டாலும் நான் இந்த 'மயில் முறைக்குலம்' என்ற பாட்டுக்கு அவர்களை அர்த்தம் கேட்பேன். அவர்கள் விழிப்பார்கள். நான் ஆனந்தம் அடைவேன். வெகு நேரம் அவர்களைத் திண்டாடச் செய்து, அதன் பிறகு என்னுடைய அர்த்தத்தைச் சொல்லுவேன். அவர்கள் அதிசயப்பட்டு என்னைப் புகழ்வார்கள். சில பேர் நான் இப்படி அர்த்தம் சொல்லுவதற்கு என்ன ஆதாரம் என்று கேட்பார்கள். உடனே நான், "இது பட்சி சாஸ்திரம். இந்த அர்த்தம் பட்சி சாஸ்திரத்தை அறிந்தவர்கள் தாம் சொல்ல முடியும்" என்று மட்டும் பட்சி சாஸ்திரத்தைக் கரை கண்டுவிட்ட நிபுணன்போல் காட்டிக்கொள்வேன். 'ஸயன்டிபிக் அமெரிக்கன்' என்ற பத்திரிகையில் பார்த்ததாகச் சொல்ல மாட்டேன்.

இப்படியாகக் கொஞ்ச காலம் சத்தியமில்லாத பெருமையில் சந்தோஷப்பட்டுக்கொண் டிருந்தேன்.

கரூர் எனக்கு மாமனூர் வீடு. அடிக்கடி அங்கே போய்த் தங்குவது சகஜம். அப்படி ஒரு முறை அங்கே தங்கியிருந்தபோது அவ்வூர்ப் பசுபதீசுவர சுவாமி கோயிலில் யாரோ ஒரு பெரியவர் தொடர்ச்சியாகக் கம்பராமாயணப் பிரசங்கம் செய்து வருவதாகக் கேள்விப்பட்டேன். பிரசங்கத்தைக் கேட்கப் போனேன். பிரசங்கம் வெகு நன்றாக இருந்தது. சுமார் எழுபது வயசுள்ள ஒரு கிழவர் இனிமையான குரலில் பாட்டுக்களைச் சந்தத்தோடு பாடி அதிசயிக்கத் தகுந்த முறையில் அர்த்தம் சொல்வதைக் கேட்டு ஆனந்தமடைந்தேன். தொடர்ச்சியாக அவருடைய பிரசங்கத்தைக் கேட்பதற்கென்றே பல நாள் அங்கே தங்கினேன். அந்தப் பிரசங்கியின் பெயர் கோபால ஐயங்கார் என்று நினைவு. நான் போயிருந்தபோது அவர் சொல்லிக்கொண்டிருந்த பகுதி விபீஷணன் அடைக்கலப் படலம்.

'எவ்வளவு இனிமையாகப் பாடி எத்தனை அழகாக அர்த்தம் சொன்னாலும் இந்தக் கிழவருக்கு "மயில் முறை" என்பதற்கு நான் கண்டுபிடித்திருக்கிற அர்த்தம் தெரிந்திருக்க நியாயமில்லை. இவர் 'ஸயன்டிபிக் அமெரிக்கன்' சஞ்சிகையைப் பார்த்திருக்க முடியாது. இவரைச் சந்தித்து அது விஷயமாக இவரையும் கொஞ்சம் "கிண்டல்" செய்து திண்டாடவிட்டு நம்முடைய அர்த்தத்தைச் சொல்ல வேணும்' என்ற ஆசை என்னுள் எழுந்தது.

ஒரு நாள் அவரைப் பார்க்கவென்று அவர் தங்கியிருந்த வீட்டிற்குப் போனேன். என்னைப் போலவே அவரைப் பார்க்க வேறு சில கம்பராமாயண ரசிகர்களும் தமிழ்ப் பண்டிதர்களும் அங்கு வந்திருந்தார்கள். அந்தக் காலத்தில் எனக்குக் கவிஞன் என்ற பட்டம் இல்லை. வெறும் சித்திர வித்துவான் என்றும், தமிழில் ஆர்வம் உள்ளவன் என்றும் அறிமுகப்படுத்தப்பட்டேன். வெகு வைதிக வழக்கங்களுடைய அந்தக் கோபால ஐயங்கார் என்னை இனிய முகத்துடன் பழைய தமிழறிஞர்களுக்குள்ள பணிவு தணிவுகளுடன் ஏற்று உபசரித்தார். கம்பராமாயணத்திலும் திருக்குறளிலும் வேறு பல தமிழ் இலக்கியங்களிலும் உள்ள பல செய்யுட்களையும் அங்கங்கே பாடிக் காட்டி எங்களுடன் சல்லாபித்தார்.

வெகு நேரம் கழித்து விடை பெற்றுக்கொள்ளப் போகிற சமயத்தில் நான் ஏதோ அர்த்தம் தெரியாமல் கேட்கிறது போலப் பாசாங்கு பண்ணிக்கொண்டு, "மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் 'மயின் முறைக் குலத்துரிமையை' என்று வருகிறதே; அதில் 'மயில் முறை' என்பது என்ன?" என்று கேட்டுவிட்டு, அதற்கு அர்த்தம் தெரியாமல் அவர் விழிக்கப் போகிறார் என்று அவர் முகத்தைப் பார்த்துக்கொண்டே யிருந்தேன்.

அவர் முகக் குறிகளில் வியப்போ, திகைப்போ, விழிப்போ காணப்படவில்லை. வெகு நிதானமாக, "அதுவா! அது என்னவென்றால், காட்டிலே மயில் இயல்பாக வசிக்கும்போது - வீட்டிலே வளர்க்கப்படும் மயில் அல்ல - ஒவ்வொரு தாய்மயிலும் அதன் குஞ்சுகளும் குஞ்சுகள் நன்றாக வளர்ந்த பிற்பாடும் எங்கே போனாலும் ஒரே குடும்பமாகச் சேர்ந்தே போகும். இரை தேடுவதானாலும் அக்கம் பக்கமாகத்தான் இருக்கும். இப்படி ஒவ்வொரு மயில் குடும்பமும் தனித்தனிக் கூட்டமாகத்தான் சஞ்சரிக்கும். அப்படி இருக்கும்போது அவைகளுக்குள் களிப்பு வந்து கலாபம் விரிக்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டால், மூத்த ஆண்குஞ்சுதான் முதலில் தோகையை விரித்து ஆடும். அதன் பிறகுதான் இளைய ஆண் குஞ்சுகள் தோகையை விரிக்கும். இப்படி முதலில் கலாபம் விரிக்கிற உரிமை மூத்த ஆண்குஞ்சுக்குத்தான் உண்டு என்பதுதான் இந்த 'மயில் முறைக் குலத்துரிமை' என்பது" என்றார்.

உடனே என் தலை சுழல ஆரம்பித்துவிட்டது. என் மூக்கு அறுபட்டு முகத்தில் கரி தடவிவிட்டது போன்ற ஒரு கவலை வந்துவிட்டது. 'அடடா! இந்த அர்த்தம் இந்தக் கிழவருக்கு எப்படித் தெரிந்தது? என்னைப்போல 'ஸயின்டிபிக் அமெரிக்கனை' (Scientific American)ப் பார்த்த யாரோ இவருக்குச் சொல்லியிருக்க வேணும். இல்லாவிட்டால் இது இவருக்கு எப்படித் தெரியும்?' என்றெல்லாம் எண்ணி ஏங்கி, "இது தங்களுக்கு எப்படித் தெரிந்தது? இதற்கு என்ன ஆதாரம்?" என்றேன்.

அதற்கு உடனே அவர், "இது நம்முடைய புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. நம்முடைய புராணங்களில் எத்தனையோ

அருமையான அநுபவ அறிவுகள் நிறைந்திருக்கின்றன. ஆனால் புராண நூல்களை இப்போது யாரும் படிப்பதில்லை. நாங்கள் பாடம் கேட்டுக்கொண்ட காலத்தில் பல புராணங்களைப் படித்தறிந்த பிறகுதான் பண்டிதனாக முடியும். தமிழாசிரியர்களிடத்தில் முறைப்படி பாடங் கேட்டுக்கொள்ளுகிற வழக்கந்தான் இப்போது இல்லையே! அதனால் தமிழ் நூல்களில் அநேக உண்மைகள் நாம் அறிய முடியாமல் போய்விட்டன'' என்றார்.

"இது எந்தப் புராணத்தில் எப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது?'' என்று கேட்டேன்.

அவர் ஒரு புராணத்தின் பெயரைச் சொல்லி அந்தப் புராணத்தில் அதற்கான ஒரு பாட்டையும் ஒப்பித்தார். அந்தப் பாட்டில் அவசியமான இரண்டடிகள் பின் வருமாறு:

"பலாவம் பொழிலுறை ஒருதாய் உயிர்த்த பலமயிற்கும்
கலாவம் புனைந்த களிமயில் மூத்தது!''

என்பது. இதன் பொருள், கானகத்திலே வசிக்கிற ஒரு தாய் வயிற்றில் பிறந்த பல மயில்களும் சேர்ந்திருக்கும்போது எந்தக் குஞ்சு முதலில் கலாபம் விரிக்கிறதோ அதுதான் மூத்த குஞ்சு என்று தீர்மானம் செய்துகொள் என்பது. இதை அவர் சொன்ன பிறகு, இந்த விஷயம் 'ஸயின்டிபிக் அமெரிக்கன்' என்ற பத்திரிகையிலிருந்து நான் கண்டுபிடித்துவிட்டதாக எனக்கு இருந்த கர்வம் பங்கப்பட்டது.

இந்தப் பாட்டையும் இந்தப் பாட்டு எந்தப் புராணத்தில் இருக்கிறதோ அந்தப் புராணத்தின் பெயரையும் ஒரு துண்டுக் காகிதத்தில் குறித்துக் கொண்டேன். ஆனால் பாட்டை மட்டும் உடனே மனப்பாடம் செய்துகொண்டு அந்தத் துண்டுக் காகிதத்தை என்னுடைய பெட்டியில் எங்கேயோ வைத்துவிட்டேன்.

பிரசங்கம் செய்ய அவசியமாக மனத்தில் இருக்க வேண்டியவை இந்த இரண்டு அடிகள்தாமே? அதனால் இந்தப் பாட்டு எந்தப் புராணத்தில் இருக்கிறதோ அந்தப் புராணத்தைப் படிக்க வேண்டுமென்ற சிரமத்தைக்கூட நான் மேற்கொள்ளவில்லை.

அதனால் அந்தத் துண்டுக் காகிதத்தை அடியோடு மறந்து போகவே, அது காணமற் போய்விட்டது.

அதற்கப்புறம் நான் பிரசங்கம் செய்யும்போதெல்லாம் 'மயில் முறைக்குலம்' என்பதைப் பற்றிச் சொல்ல வேண்டியபோது இந்தப் புராணப் பாட்டின் இரண்டடிகளைச் சொல்லி, நான் 'ஸயன்டிபிக் அமெரிக்கனி'ல் கண்டதையும் சொல்லுவேன். இப்போது தான் அமெரிக்கர் ஒருவர் ஆராய்ந்து கண்டுபிடித்த இந்த மயில் முறை இயல்பு நெடுங்காலத்துக்கு முன்னாலேயே தமிழ் இலக்கியத்தில் உள்ளது என்றும் பெருமை பேசிப் பிரசங்கம் செய்து வந்தேன்.

சுமார் பதினறு வருஷங்களுக்கு முன்னல் காலஞ்சென்ற உயர்திரு வெள்ளகால் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் அப்போது நாமக்கல்லில் வக்கீலாக இருந்த அவருடைய உறவினர் வேங்கடபதி முதலியார் வீட்டிற்கு விருந்தினராக வந்தார். வெள்ள கால் சுப்பிரமணிய முதலியார் மிகப் பெரிய மனிதர். கம்பராமா யணத்தைத் தம் உயிர்போல் கருதியவர். கம்பராமாயணத்தில் மிகச் சிறந்த ஆராய்ச்சியாளர்.

அவர் எந்த ஊருக்குப் போனலும் அந்த ஊரில் கம்பராமா யணத்தில் ஆர்வம் உள்ளவர்களைத் தாமே சென்று பார்த்துக் கம்ப ராமாயணத்தைப் பற்றிச் சல்லாபிப்பார். அந்த முறையில் என் னைப் பற்றிக் கேள்விப்பட்ட அவர் என்னைப் பார்க்க என் வீடு தேடி வந்தார். அவர் வரப்போகிருர் என்பது எனக்குத் தெரியாது. அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தேன். என்ருலும் அதற்கு முன் அவரைப் பார்த்ததில்லை. அவருடன் வந்த அவருடைய உற வினர் அவர் இன்னர் என்று எனக்குச் சொன்னவுடன், வயசிலும் படிப்பிலும் என்னைக் காட்டிலும் எவ்வளவோ பெரிய அவர் என் னைப் பார்க்க என் இடத்தைத் தேடி வந்தாரே என்ற மகிழ்ச்சி யுடன் அவர் வரவைப் பெரும் பாக்கியமாகக் கருதி நான், "என்ன மாதவம் செய்தது இச்சிறு குடில்" என்று வரவேற்று வணங் கினேன்.

அவர் உடனே அதைத் திருப்பி, "என்ன மாதவம் செய்தது இச்சிறு உடல்" என்று சொன்னர். அப்போது நான் அடைந்த பெருமை அளவிடற்கரிது.

எல்லாருமாக உட்கார்ந்து சுமார் ஒரு மணிநேரம் கம்பன் கவித்திறத்தைப் பற்றியும் திருக்குறளைப் பற்றியும் பேசிக்கொண் டிருந்தோம். அப்போது அவரிடத்திலும் இந்த 'மயில் முறைக் குலம்' என்பதைப்பற்றிக் கேட்டேன். அவரும் உடனே அந்தப் 'பலாவம் பொழிலுறை' என்ற புராணப் பாட்டைச் சொல்லி, ஏற்கனவே அதைப்பற்றித் தம்முடைய கம்பராமாயண ஆராய்ச்சி யில் விளக்கியிருக்கிறதாகச் சொன்னர். அதன்பின் திருக்குறளில் வெகு ரசமாக அநேக விஷயங்களை நான் அதுவரையில் கேட்டி ராத முறையில் சொன்னர். அந்தச் சுவாரஸ்யமான திருக்குறள் பேச்சில் என்னையே முற்றும் மறந்துவிட்ட நான் அந்தப் 'பலாவம் பொழிலுறை' என்ற பாட்டு எந்தப் புராணத்தில் எந்த இடத்தில் இருக்கிறது என்பதைக் கேட்டுக்கொள்ளத் தவறிவிட்டேன்.

அதன் பிறகு இதுவரையிலும் இந்தப் பாட்டு எந்தப் புராணத் தில் இருக்கிறது என்று அறிந்துகொள்ளச் சந்தர்ப்பமே இல்லாது போய்விட்டது.

சமீபத்தில் நான் திருநெல்வேலி போயிருந்தேன். அங்கே, 'மதுரைத் திரவியம் கல்லூரி'க்கு வெள்ளகால் சுப்பிரமணிய முதலியாரவர்களுடைய புத்திரர்கள் பரிசாகக் கொடுத்த சுப்பிர மணிய முதலியாருடைய புத்தகங்களை ஒரு 'லைப்ரரி' ஆக்கி அந்த

'லைப்ரரி'யைத் திறக்கும்படி என்னைக் கேட்டுக் கொண்டார்கள். அப்போது நான் ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் என் வீட்டுக்கு வந்ததையும் இந்த 'மயில் முறை' விஷயமாகப் பேசினதையும் சொல்லி அந்தப் 'பலாவம் பொழிலுறை' என்ற பாட்டு எந்தப் புராணத்தில் இருக்கிறது என்பது தெரியவில்லை என்றும் சொல்லி, அதை அறிந்தவர் யாராவது இருந்தால் எனக்கு அறிவிக்க வேணும் என்றும் சொன்னேன். அப்போது எனக்கு யாரும் இதைப்பற்றிச் சொல்லவில்லை.

நான் நாமக்கல்லுக்கு வந்த பின் திருநெல்வேலி அரசியலார் போதனா முறைப் பள்ளி மாணவர் பெ. வேங்கடராமன் என்ற ஒருவர் எனக்கு இதைப்பற்றி எழுதியிருக்கிறார். அவர் என்னுடைய திருநெல்வேலிப் பிரசங்கத்தைக் கேட்டவராம். அவர், வெள்ளகால் சுப்பிரமணிய முதலியாரவர்களே இந்தப் 'பலாவம் பொழிலுறை' என்ற பாட்டைப்பற்றி அவருடைய 'கம்பராமாயண ஆராய்ச்சி' நூலில் இந்தப் பாட்டு, தணிகைப் புராணத்தில் களவுப் படலத்தில் 244-ஆவது பாட்டாக இருக்கிறதாக விளக்கியிருக்கிறாரென்று எழுதியுள்ளார்.

அப்பாடா! இத்தனை நாளாச்சு இந்தப் பாட்டு எதில் இருக்கிறது என்று அறிந்துகொள்ள; அதுவும் கடந்த சுமார் முப்பத்தைந்து வருஷங்களாக நான் கேட்ட எந்தத் தமிழ்ப் பண்டிதரும், பெரிய பெரிய படிப்பாளிகளும் இதை எனக்குச் சொல்லக்கூடவில்லை. கடைசியில் ஒரு மாணவர் இது இருக்கிற இடத்தைக் காட்டினார். ஆதலால் 'கற்றது கைம்மண்ணளவு! கல்லாதது உலகளவு.'

★

—அக்டோபர், 1949.

ராவ்ஸாஹெப் எஸ். வையாபுரிப் பிள்ளை

# தாய்மொழி

தமிழ்க் குடும்பத்திலுள்ள நண்பர் ஒருவர் ஆங்கிலத்தில் நல்ல பயிற்சி உள்ளவர். சதா ஆங்கிலத்தில்தான் பேசுவார். இவருக்கு ஏற்றாற்போல் இவருடைய மனைவியாரும் ஆங்கிலத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவர். ஆகவே, தப்பித் தவறிக்கூடத் தமிழ் இவர்கள் பேச்சில் நுழைய இடமில்லை. தங்களுடைய பையனையும் ஆங்கில தர்பாரிலேதான் வளர்த்து வந்தார்கள். அவன் பேசுவதும் ஆங்கிலத்தில்தான். தாங்கள் அருமையாய் வளர்த்து வந்த நாயினிடங்கூட ஆங்கிலத்தில்தான் பேசுவது. நாய்க்கு ஆங்கிலத்தில் குரைக்க முடியவில்லையே என்று தம்பதிகளுக்குச் சிறிது வருத்தந்தான்.

இவர்களுடைய பையனுக்குத் தாய்மொழி எது? பெற்றோர்களுக்கு ஆங்கிலத்தைத் தாய்மொழி எனக் கூறுவதில்தான் திருப்தி. உண்மையில் தாய் சொல்லுவித்த மொழியும் அதுதான். பையனுக்கும் ஆங்கிலம் தவிர வேறு மொழியும் தெரிய மாட்டாது. என்றாலும் அவன் தாய்மொழி ஆங்கிலம் என்று சொல்ல யாரும் துணிய மாட்டார்கள்.

இம்மாதிரியான ஆங்கிலமோகம் பிடித்த குடும்பம் மிக அருகித்தான் இருக்க முடியும். ஆனால், இக்காலத்தில் சமுதாயங்களே பிறழ்ந்து மாறுபடும் நிலைமையில் உள்ளன. தமிழ்க் குடும்பங்களில் பிறந்தவர்கள் இங்கிலாந்து சென்று ஆங்கில மாதரை மணந்து திரும்புவது அடிக்கடி நிகழ்கிறது. இவர்கள் குடும்பத்தில் பிறந்தவர்கள் ஆங்கிலம் பேசுவது இயற்கையே. இவ்வாறு கலப்பு மணங்களில் பிறக்கும் குழந்தைகளுக்குப் பெரும்பாலும் தாய் பேசும் மொழியே சொந்த மொழியாக அமைந்துவிடுகிறது.

மேலே குறிப்பிட்ட இருவகைக் குடும்பங்களையும் கவனித்தால், ஒன்றில் தாய் புதிதாகக் கற்றுச் சொல்லுவிக்கும் மொழி தாய்மொழியாகாது என்றும், மற்றொன்றில் தாயின் குடும்பத்தார் பரம்பரையாகப் பேசும் மொழிதான் குழந்தைக்குரிய தாய்மொழியாகும் என்றும் தெளிவாகிறது.

தாயோடு மட்டும் குழந்தை பழகும் காலம் பெரும்பாலும் மூன்று அல்லது நான்கு ஆண்டுகளுக்கு மேற்படுவதில்லை. இவ்

வாண்டுகளிலே அந்தக் குழந்தை கற்றுக்கொள்வதும் மிகச் சொற்பமேயாகும். கொச்சைப் பேச்சுக்களும் பாச்சி முதலிய மழலைப் பேச்சுக்களும் கற்றுக்கொள்ளும். இதற்குப் பின்பு குழந்தை தன்னோடு பருவத்தால் ஒத்த மற்றக் குழந்தைகளோடும் பிறரோடுந் தான் பெரும்பாலும் பழகுவது. பள்ளிக்குச் செல்லும் பருவம் முதற்கொண்டு குழந்தை பிறரோடு பேசுதல், பழகுதல் முதலியவற்றிலே தன் நேரத்தில் பெரும் பகுதியைச் செலவிடுகிறது. ஆகவே, தாய் உண்மையில் சொல்லிக் கொடுப்பது மிகமிகச் சொற்பமே ஆகும்.

இதனால் ஒருவனது பெற்றோரின் குடும்பத்தினர் தலைமுறை தலைமுறையாகப் பேசிவந்த மொழி எதுவோ அதுதான் அவனது தாய்மொழியாகும். இக்கருத்தையே வேறொரு முகமாக நோக்கினால், ஒருவன் எந்தச் சமுதாயத்திற்கு அங்கமாகப் பிறக்கிறானோ, அந்தச் சமுதாயம் பேசிவரும் மொழிதான் அவனுடைய தாய்மொழியாகும். பெற்றோர்கள் சமுதாயத்தின் பிரதிநிதிகள் என்ற அளவில்தான் தாய்மொழி பற்றிய இவ் விவகாரத்தில் உதவி புரிகிறார்கள். சமுதாயத்தின் அங்கம் என்ற நிலை ஒன்றே முதல்முதலில் ஒருவனுக்கு ஏற்படுவது. பிற்பாடுதான் சமுதாயத்தினின்றும் வேறுபட்ட தனிநிலையை அவன் அடைகிறான். From Status to Contract' என்று ஆங்கிலத்தில் கூறும் உண்மை, மொழி விஷயத்திலும் பொருந்துவதாகவே உள்ளது.

இவ் விஷயத்தை இங்கே வற்புறுத்திக் கூறுவதற்கு ஒரு முக்கியமான காரணம் இருக்கிறது. தாய்மொழியானது பூர்விகச் சொத்துக்குச் சமமானது. அது பரம்பரைக் கிரமத்தில் தலைமுறை தலைமுறையாக அநுபவிக்கப்பட்டு வருவது. இந்த உண்மையையும் அதனால் பெறப்படும் அநுமான ஸித்தமான பிற உண்மைகளையும் நாம் தெரிந்துகொண்டால், தாய்மொழியின் அமைப்பு முதலியன நமக்கு எளிதில் வெளியாகும்.

வேறொரு சிறு விஷயம். தமிழ்ச் சமுதாயத்தினர் அனைவரும் மக்கள் தாயத்தினர். அதாவது தந்தையின் சொத்து மகனுக்குத் தாயமாக இறங்கி வரும். தந்தைவழிக் கிரமம் என்றேனும் மகன் வழிக் கிரமம் என்றேனும் சொல்லலாம். நமது மலையாளச் சகோதரர்கள் மருமக்கள் வழியைச் சார்ந்தவர்கள். அதாவது ஒருவன் சொத்து அவனுடைய சகோதரிகளின் குழந்தைகளுக்குத்தான் செல்லும். இக்கிரமத்தை முடிவாகப் பார்த்தால், தாய்வழிக்கிரமம் என்றுதான் இதைச் சொல்லுதல் வேண்டும். இவ்விரு முறைகளில், தந்தைவழிக் கிரமத்தை நாம் சார்ந்தவர்களாயிருந்தும் நமது மொழியைத் தந்தை மொழி என்னாது தாய்மொழி என்று கூறுவானேன்? ஒரு காலத்தில் நாமும் தாய்வழிக் கிரமத்தைச் சார்ந்தவர்களாயிருக்கலாம் என்று நினைக்கலாம். இது தவறென்பது, தாய்வழிக்கிரமத்திற்கு யாதொரு சம்பந்தமும் இல்லாத ஆங்கிலரும் தம் மொழியை 'mother tongue' (தாய்மொழி) என்றும், அங்ங

னமே ஜெர்மானியர் 'die Muttersprache' என்றும் அழைத்த லால் புலனுகும்.

அங்ஙனமாயின், காரணந்தான் யாது என்ருல், சில உண்மை களே அது வெளிப்படுத்துகிறது. தாய்க்கும் குழந்தைக்கும் இருப் பதுபோல் அத்தனை நெருங்கிய தொடர்பு வேறு யாதொன்றும் கிடையாது. இதனுல்தான், 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என நம் முன்னோர்கள் சொல்லுகிருர்கள். குழந்தைக்கும் தாய்க்கும் உள்ள பரஸ்பர அன்பு இணையற்றது. தாய் தந்தை என்ற இருவருள் தாய், பழமை போற்றும் சமுதாய ஆற்றலாகவும் தந்தை புதுமை விரும்பும் சமுதாய ஆற்றலாகவும் விளங்குகிருர் கள். இங்குக் குறிப்பிட்ட மூன்று விஷயங்களும் தாய்மொழிக்கும் நமக்கும் இருக்கும் அந்நியோந்நிய சம்பந்தத்தையும், தாய்மொழி மீது நாம் கொள்ள வேண்டும் பேரன்பையும், தாய்மொழியைப் போற்றி வளர்ப்பதில் அதன் பழைய மரபு சிதைதல் கூடாது என்னும் கொள்கையையும் நமக்கு வற்புறுத்திக் காட்டுகின்றன. இவ்வுண்மைகளை யெல்லாம் பொதிந்தே 'தாய்மொழி' என்று வழங்கி வரலாயிற்று என்று எண்ணுகிறேன். தாய்மொழி என்று முதல் முதலில் வழங்கினோர் இவ்வுண்மைகளை ஆழச் சிந்தித்துப் பெயர் அமைத்தனரென்று நான் கூறமாட்டேன். ஆனல், அவர் கள் உள்ளத்தின் அடிப்படையிலே, இவ்வுண்மைகள் அவர்களும் அறியாதபடி புதைந்து கிடந்ததன் விளைவாக இப்பெயர் தோன்றி யிருக்கலாம் என்று எண்ணுகிறேன்.

பெயர்க் காரணம் எப்படியாயினும் இருக்க. பரம்பரைக் கிரமத்தில் தலைமுறை தலைமுறையாக வழங்கி வருவது தாய்மொழி என்றேன். இவ்வாறு சொல்வதால் புதிதாக என்ன தெரிந்து கொண்டோம் என்று நீங்கள் கேட்கலாம். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, பல நூறு தலைமுறைகளாக, நம் முன்னோர்களால் போற்றி வளர்க்கப்பட்டு வருவது நமது தாய்மொழி. ஆதியில் என்ன நிலையிலே நமது மொழி இருந்தது? பின் எவ்வெக் காலத் தில் மாறுபாடு அடைந்து வந்திருக்கிறது? இம்மாறுபாடுகள் என்ன என்ன காரணங்களால் நேர்ந்தன? இவைபோன்ற கேள்வி கள் பற்றி நமது மொழியை ஆராய்ந்தால் நமது தலைமுறையின் தொடக்கம்வரை அதன் இயல்பும் கதியும் நிலைமையும் விளங்கும். மூலத்திராவிட மொழியோடு மிக நெருங்கிய தொடர்புடையதாய் அம்மொழியின் சீமந்தபுத்திரி என்னும் நிலையில் தமிழ் இருந்தது. பின்னுல் ஆரியக் கலப்பும் நாகரிகமும் முதிரவே, தமிழ் மொழி மிகப் பெரியதோர் அபிவிருத்தியடைந்தது. பின்னர், சமயக் கலப்பு ஏற்படவே, பாகதம் முதலிய வேற்று மொழிக் கலப்பினுல் வளர்ச்சி யுற்றது. பின்னர் அரசியற் குழப்பங்கள், தெலுங்கு முதலிய பிற மொழியாளர்கள் தொடர்பு இவற்ருலும் தமிழ் மொழி அடைந்த பேத கதிகள் பல. பின் போர்த்துகீயர், பிரெஞ்சு, ஆங்கிலர் முதலிய ஐரோப்பியர் கூட்டுறவு. இக் கூட்டுறவினுல் நிகழ்ந்த மொழி அமைதி. இத்தனை சரித்திரமும் நமது தாய்மொழியிலுள்ள

சொற்களிலும் இலக்கியங்களிலும் பிரதிபலிக்கின்றன. தலைமுறை தலைமுறையாய் வழங்கி வரும் மொழி என்ற மாத்திரத்தில் இத்தனை பூர்வ வரலாறு அனைத்தையும் நாம் ஞாபகத்துக்குக் கொண்டு வருகிறோம்.

எவ்வகையான வேறுபாடும் இன்றி, தோன்றிய காலத்தில் இருந்தது போலவே தமிழ்மொழி இருந்து வருகிறது என்று கருதுவோர் தமிழ் வரலாறும், தமிழிலக்கிய வரலாறும் அறியாதார் என்றுதான் கூறவேண்டும். ஆதியில் இருந்த கலப்பற்ற தூய நிலைக்கே நமது மொழி பின்னோக்கிச் செல்வதே தக்கதாகும் என்பது, இயற்கைக்கு மாறாகச் செல்வதுதான் உயர் நெறியென்பவர் கொள்கையோடு ஒக்கும். யாராலும் எவ்வகைக் கழகத்தாராலும் இது செய்யக் கூடியதன்று. சில நூற்றாண்டுகளுக்கு முன்னே, 'இயற்கை நிலைக்குத் திரும்புக' (Return to Nature) என்ற கூக்குரலானது ஐரோப்பிய நாடுகளில் கிளம்பி, பலரையும் தன் எளிமையால் மயக்கி, முடிவில் அதன் பொய்ம்மை வெளியாகவே, பரிகாசஹேதுவாய் மறைந்தொழிந்தது அரசியலுலகில் இக்கொள்கை ஏற்பட்டது போலவே, மொழி நூல் உலகிலும் இக்கொள்கை தமிழ்நாட்டில் அங்கங்கே தோன்றியுள்ளது. கொள்கையின் முடிவு எவ்வாறாகும் என்பதில் சிறிதும் ஐயப்பாடில்லை. தலைமுறை தலைமுறையாக வழங்கிய மொழி என்ற அளவில், மேற்கூறியது போன்ற கொள்கைகளால் பாதிக்கப்படாமல், தன் பூர்வ சரித்திரத்திற்கு ஏற்பவே தமிழ் மொழியின் வருங்காலச் சரித்திரமும் நிகழும் என்ற உண்மையானது நமக்கு வெளியாகிறது.

இன்னும் ஓர் உண்மையும் இப் பாரம்பரிய உணர்ச்சியினால் நாம் அநுமானிக்கக் கூடியதாக உள்ளது. இவ்வுண்மை 'தாயவுரிமை' பற்றிய உதாரணத்தால் நன்கு விளங்குவதாகும். தாயமுறையில் இறங்கும் சொத்தைப் பூர்வார்ஜிதம், பிதிரார்ஜிதம் என்று இரண்டு வகையாகப் பிரிக்கலாம். தந்தையால் சம்பாதிக்கப்பட்டுத் தந்தை வழியாக மகனுக்கு வரும் சொத்து, பிதிரார்ஜிதம் ஆகும். வெகு காலமாக முன்னோர்களால் சம்பாதிக்கப்பட்டுத் தந்தை வழியாக மகனுக்கு வரும் சொத்து, பூர்வார்ஜிதமாகும். மகன் தானே சம்பாதிக்கும் சொத்து, சுயார்ஜிதமாகும். நமது தாய்மொழியிலும் பூர்வார்ஜிதம் போல நமக்கு வந்தவை ஒரு பெரும் பகுதியாகும்.

இந்தப் பூர்வார்ஜிதத்தைச் சிறிது கூர்ந்து பார்ப்போம். அது முழுமையும் நமக்குக் கிடைத்துவிட்டதென்று சொல்லமுடியாது. ஒரு பெரும் பகுதியை நாம் இழந்துவிட்டோம் என்றுதான் சொல்ல வேண்டும். நம் முன்னோர்கள் ஈட்டிவைத்த இலக்கிய நிதியில் ஒரு பகுதிதான் இப்பொழுது கிடைத்திருப்பது. எத்தனையோ அரிய நூல்கள், காவியங்கள், இலக்கணங்கள், கலை நூல்கள் இறந்துவிட்டன. இவ்வாறு இறந்து போனது ஓர்

ஆச்சரியமும் அன்று. 'சாதலும் புதுவதன்றே' என்றார் ஒரு தமிழாசிரியர். நமது மொழியில் மாத்திரமன்று, பண்டைமொழிகள் பலவற்றினும் இது கேட்கப் படுவதொன்றே. இதற்குரிய காரணங்களும் மிகப் பலவாம். அரசியற் பிறழ்ச்சி, சமுதாயத்தில் அமைதியின்மை, நூல்களைப் பாதுகாக்கும் வசதிக் குறை, நம்மவர்களின் அஜாக்கிரதை, மதத் துவேஷம், நெருப்பு, வெள்ளம் முதலியன முக்கிய காரணங்களாகும். இக் காரணங்களால் இறந்து போனவை போக இப்போது எஞ்சியிருக்கும் நூல்கள் தாமும் நம் முன்னோர்களது பெருமையை நன்கு புலப்படுத்துகின்றன. நல்ல இலக்கிய பரம்பரையிலே வந்துள்ளோர் என்று நாம் கர்வங்கொள்ளுதல் முற்றும் தகுதியுடையதே யாகும். நமது தாய்மொழி தலைமுறை தலைமுறையாகத் தக்க அறிவாளர்களால் போற்றப்பட்டு வந்துளதென்று நாம் இறுமாப்புக் கொள்ளலாம். இவ்வகை உணர்ச்சியினால் உண்டாகும் மனவெழுச்சி நமக்கு நிறைந்த செல்வம் அல்லவா? 'செல்வம் என்பது சிந்தையின் நிறைவே' என்பதன்றோ தமிழ்க் கொள்கை? இம் மனவெழுச்சி மாத்திரம் அன்று; இறந்து படாமல் இன்றுகாறும் நிலைத்துள்ள நூல்களின் அறிவுச் செல்வம், கலைச் செல்வம், சொற் செல்வம் இவை யனைத்தும் நமக்கு நிலைபேறான செல்வங்களாம். ஆகவே, பூர்வார்ஜித இலக்கியத்தால் நமது தாய்மொழி பெற்றுள்ள செல்வம் மிகப் பெரிதென்றே சொல்லி அமைவோம்.

ஆனால், பூர்வார்ஜித இலக்கியம் அனைத்தும் திடீரென ஒரு காலத்தில் தோன்றியதா? அல்ல. திடீரென ஒரு தலைமுறையாரால் இயற்றித் தொகுக்கப்பட்டதா? அல்ல. ஒவ்வொரு தலைமுறையாரும் அவ்வவர்க்குக் கிடைத்த இடம், பொருள், ஏவல் முதலிய வசதிகளைக் கொண்டு அவ்வத் தலைமுறையில் மேம்பட்டு விளங்கிய லட்சியங்களுக்கேற்ப, இயற்றிச் சேர்த்துச் சேர்த்துத் தொகுத்ததாகும், இப் பூர்வார்ஜிதம். எனவே, ஒவ்வொரு தலைமுறையும் இப் பூர்வார்ஜிதம் ஈட்டுவதில் ஏதேனும் ஒரு வழியில் உழைத்து வந்திருக்கிறது. இம் முறையிலே, நமது தலைமுறைக்கு முந்திய நமது தந்தையின் தலைமுறையினரும் உழைத்து வந்திருக்கிறார்கள். பிற்பட்டுக் கூறிய இவ்வுழைப்பின் பயனைத்தான் நாம் பெற்றுள்ள பிதிரார்ஜிதம் என்று கொள்ளலாம். இப் பிதிரார்ஜிதத்தின் தன்மை என்ன?

முதலாவது, இப் பிதிரார்ஜித உழைப்பின் காலத்தை வரையறுத்துக்கொள்வது நலமாகும். இவ்விருபதாம் நூற்றாண்டுக்கு முன்புள்ள ஐம்பது ஆண்டுகளைப் பிதிரார்ஜித காலம் என்று கொள்ளுவோம். இக் காலத்திலே தமிழ் மக்களில் சிறந்தவர் பலர் வாழ்ந்து நூதன முறையில் தமிழ்த் தொண்டுகள் புரிந்து வந்தனர். பழைய முறைகளைப் பின்பற்றி உழைத்து வந்தவர்களுள்ளும் சில பெருமக்கள் இருந்தனர். உதாரணமாக, ஸ்ரீ ஆறுமுக நாவலர், ஸ்ரீ ராமலிங்க சுவாமிகள், ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலியோர்களைக் கூறலாம். இவர்கள் தமிழின் தொன்மைத் தன்மைக்கேற்ப,

பழைய மரபினைப் பின்பற்றி நூல்கள் முதலியன இயற்றி வந்தார்கள். ஆனால், புது முறையில் நூல்கள் இயற்றியவர்கள் ஆங்கிலம் கற்றறிந்தவர்கள். இவர்கள் மேல்நாட்டு இலக்கிய முறைகளையும் விஞ்ஞான சாஸ்திரக் கருத்துக்களையும் தமிழ் நாட்டில் பரப்புதற் பொருட்டு நூல் இயற்றினார்கள். கெமிஸ்தம் (Chemistry) முதலிய விஞ்ஞான நூல்கள் தமிழில் தோன்றின. மனோன்மணீயம் முதலிய நாடகங்கள் புது முறையில் அமைக்கப் பட்டன. நூதனமாய்க் கதைகள் எழுதப்பட்டன. புது முறையில் கல்வி பயிலுவதற்கேற்ற பல கருவி நூல்கள் இயற்றப் பட்டன.

இவற்றால் நமது தாய்மொழிக்கு ஏற்பட்ட நன்மைகள் மிகப் பல. உண்மையான சாஸ்திர அறிவு பெருகுவதற்குரிய கருவியாய் நம் மொழி அமைய வேண்டும் என்ற கருத்து எழுந்தது. இக் கருத்துக்கு ஏற்ப, தாய்மொழியும் பக்குவப்பட்டு வரலாயிற்று. புது வாழ்க்கையாலும், புது நாகரிகத்தாலும், புதுச் சொற்களாலும் நமது மொழி வளரலாயிற்று. உதாரணங்கள் தருகிறேன். நாற்காலி என்ற சொல் நான்கு கால்களையுடைய ஆசனவகை வழக்கத்தில் வந்த பிற்பாடு தமிழ் மொழியில் புகுந்தது. மேஜை என்ற சொல் போர்த்துகீய மொழியிலிருந்து தமிழில் வந்தது. இங்ஙனமே, சில நூறு சொற்களையேனும் எடுத்துக் காட்டுதல் கூடும்.

கடைசியாக நமது தலைமுறையார் ஈட்டிவரும் சுயார்ஜிதத்தைப் பற்றிக் கூறுவேன். ஐரோப்பியரது விரிந்த கலைஞானமும், விஞ்ஞான வுணர்ச்சியும், இலக்கிய முறைகளும் நமது மொழியில் வேரூன்றத் தொடங்கிவிட்டன. எல்லாரிடத்தும் அறிவுத் தாகம் தோன்றி ஒரு நூதனக் கிளர்ச்சியை உண்டுபண்ணிவிட்டது. நமது பாரத தேசத்திலுள்ள பிற மொழிகளோடு போட்டியிட்டு நல்ல இலக்கியக் கதைகளை இயற்றுவதில் நம்மவர்கள் முனைந்திருக்கிறார்கள். அந்நிய மொழியில் உண்டான நல்ல நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து அறிவையும் இலக்கிய வுணர்ச்சியையும் வளர்ப்பதற்கு முயன்று வருகிறார்கள். விஞ்ஞான நூல்கள் நல்ல முறையில் வெளிவர ஆரம்பித்துவிட்டன. நமது தாய்மொழியைத் தேசாபிமானம் என்கிற புதுக் கண் கொண்டு பார்க்கத் தொடங்கி விட்டார்கள். இங்ஙனமாகப் பல திறப்பட்ட இலக்கிய முயற்சிகளால் நமது மொழி வளர்ந்து வருகிறது.

இந்தச் சுயார்ஜித முயற்சிகளில் இடையூறுகள் இல்லை என்று சொல்ல முடியாது. நமது தாய்மொழி அவையனைத்தையும் வெற்றிகொண்டு மேன்மேலும் அபிவிருத்தியடைந்து, 'என்றுமுள தென்றமிழா'கப் புத்துயிராக வழங்கி வருவதற்கு ஒவ்வொரு தமிழ் மகனும் ஓயாது உழைத்துவரல் வேண்டும். ★

—ஜனவரி, 1948.

டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை

# கொல்லிமலை வீரன்

சேல நாட்டிலே கொல்லி என்னும் மலையொன்று உண்டு. அம் மலை முன்னாளில் சேரகுல மன்னர்க்கு உரியதாய் இருந்தது. வளமார்ந்த அம்மலையின் சோலையில் செந்தேன் துளிக்கும்; செழும் பலாப் பழுக்கும். ஈசனருள் விளங்கும் அறைப்பள்ளி என்னும் திருக்கோயிலும், தீயவரை மருட்டி அழிக்கும் தெய்வப் பாவையும் அம் மலையில் உண்டு.

இத்தகைய கொல்லி·மலையிலே குறுநில மன்னனாக வாழ்ந்தான் ஓரி என்ற பெயர் பெற்ற வீரன். வில்லாண்மையில் அவன் நிக ரற்றவன். முடிவேந்தரும் அவனுதவியை நாடினர். அமர்க்களங் களில் அவன் வில்லால் மடிந்த வீரர் எண்ணிறந்தவர். காற்றின் வேகமும் கனலின் வெம்மையும் வாய்ந்த அவ்வில்லை 'வல்வில்' என்று புகழ்ந்தனர் வீரர்.

போர் ஒழிந்த காலத்தில் அவ்வீரன் வேட்டையாடிப் பொழுது போக்குவான். அவன் ஆடிய வேட்டையொன்று பாட்டில் அமை யும் பெருமை பெற்றது. ஒரு நாள் வல்வில் எடுத்துத் தன்னந் தனியனாய்க் கொடிய விலங்குகள் உலாவும் கொல்லிமலைக் காட் டின் உள்ளே சென்றான் ஓரி. ஒரு பெரிய யானை அவன் கண் ணெதிர்ப்பட்டது. உடனே வல்வில் வளைந்தது; அடுகணை எழுந் தது; வேழத்தின் தலையில் வேகமாகப் பாய்ந்து வெளிப்பட்டது. பின்னும் விசையாகச் சென்று குறுக்கிட்ட ஒரு பெரும் புலியைக் கொன்றது. அதனையும் கடந்து ஒரு கலைமான் மீது பாய்ந்தது. மேலும் சென்று காட்டுப் பன்றியொன்றை வீட்டியது. அம்மட் டிலும் அமையாது புற்றிலே இருந்த ஓர் உடும்பின் மீது பாய்ந்து கடுஞ்சினம் தீர்ந்தது.

அவ் வேட்டையைக் கண்டது ஒரு பாணர் கூட்டம். வியப் பும் திகைப்பும் உற்றது. "கொல்லிமலையில் இப்படிக் கொலை புரிந்தவன் எவன்?" என்று அறிந்துகொள்ள ஆசைப்பட்டது. "இவன் விளையாட்டின் பொருட்டு வேட்டையாடும் வீரனா? அன்றி விலைப் பொருட்டால் விலங்குகளைக் கொலை செய்யும் வேடனா?" என்று ஒருவரை ஒருவர் வினவினர்.

அப்போது வில்லாளன் அவர் நின்ற பக்கம் திரும்பினான். அவன் ஏற்றமும் தோற்றமும் அவர் கண்களைக் கவர்ந்தன. வண்ண மேனி; திண்ணிய தோள்; நறுஞ்சாந்தம் பூசிய பரந்த மார்பு; நெடிய கை; கொடிய வில்; கழல் அணிந்த கால்; ஏறு போன்ற நடை—இவற்றைக் கண்டனர் பாணர். 'கொல்லிமலை யாளும் கொடைவள்ளல் இவன்தானா?' என்ற எண்ணம் அவருள்ளத்தில் எழுந்தது. 'நாம் கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததோ!' என்று அதிசயித்தார்.

அந் நிலையில் கொல்லிமலைச் சாரல் இன்னிசை யரங்கமாயிற்று. பாணரிடையே ஆர்வம் பெருகிற்று. முழவும் சிறுபறையும் முழங்கின; குழலும் யாழும் இயங்கின; இசைத் தழும்பேறிய கைகள் தாளமிட்டன. பாணர் தலைவன் பண்ணோடு ஒரு வண்ணம் பாடினான். அப்பாட்டை ஆர்வத்தோடு கேட்டான் வீரன். தமிழிசை கேட்டு மனந்தழைத்தான். பாட்டை முடிக்கும்பொழுது, "நல்லிசை யாளும் கொல்லிக் கோவே" என்று எடுத்து இசைத்தான் பாணப் புலவன்.

தன் பெயரைக் கேட்டபோது நாணித் தலை கவிந்தான் தலைவன்; பாடிய பாணர் பசி தீர ஊன் கலந்த சோறும் உயர்ந்த மதுவும் அளித்தான்; நல்ல பொன்னும் மணியும் பரிசாகக் கொடுத்தான்.

படைத் திறமும் கொடைத் திறமும் வாய்ந்த "வல்வில் ஓரி"யைப் பாடினார் வன் பரணர். அவரது பாட்டின் சுவையறிந்து மகிழ்ந்தது பழந்தமிழுலகம். கவியரசராகிய கம்பர் உள்ளமும் அப் பாட்டிலே கவிந்ததென்றால் அதன் செம்மைக்கு வேறு சான்றும் வேண்டுமோ?

கோசல நாடு செய்த தவப்பயனாகத் தோன்றிய இராமன் வில்லின் செல்வனாய் விளங்கினான். கொல்லிமலையில் ஓரியின் வல்வில் செய்த வேலையைப் பாணர் கண்டு வியந்தாற் போலவே கோசல நாட்டில் இராமனது வில்லின் வன்மையைக் கண்டு இன்புறும் பேறு பெற்றார் கோமுனிவர்.

தருவனத்தில் அம்முனிவர் இயற்றிய தவ வேள்வியைத் தடுத்து அழித்து வந்தாள் தாடகை என்னும் அரக்கி. அவ்வேள்வியைக் காக்க எழுந்தது இராமன் வில். வன்மை சான்ற அந்த அரக்கியை இலக்காக வைத்து வில்லை வளைத்தான் இராமன். எழுந்தது சுடுகணை. தாடகையின் கல்லொத்த நெஞ்சைத் துளைத்தது. அவ்வளவில் நிற்கவில்லை. பின்னும் சென்று நேராக நின்ற மலையைத் துளைத்தது; மரத்தைத் துளைத்தது; மண்ணையும் துளைத்து நின்றது. அவ்வில்லின் செயல் கண்டு வியந்து மகிழ்ந்தான் முனிவன்.

கோசல நாட்டு வில்லாளன் அஞ்சன வண்ணன்; செங்கமலக் கண்ணன்; நிமிர்ந்த தோளன்; நீண்ட கையன். அவனை "வல்வில் இராமன்" என்று புகழ்ந்தார் கம்பர்.

செந்தாமரைக் கண்ணொடும்
 செங்கனி வாயினொடும்
சந்தார்தடந் தோளொடும்
 தாழ்தடக் கைகளோடும்
அந்தார்அக லத்தொடும்
 அஞ்சனக் குன்றமென்ன
வந்தான் இவனாகும்அவ்
 வல்வில் இராமன் என்றாள்

அரக்கர்கோன் தங்கையாகிய சூர்ப்பணகை.

★

—செப்டம்பர், 1946.

தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

# நிமிர்ந்து நின்றான்

எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னர், ஒரு நாள்: உலகம் பெருங் காடாகக் கிடக்கின்றது. விலங்குகளுடைய செங்கோல் நடக்கின்றது. பெரிய பெரிய மரங்கள்; பெரிய பெரிய பாம்புகள்; பெரிய பெரிய பல்லிகள். இப்படிப் பல வாழ்ந்து மறைகின்றன. இவற்றிடையே ஒரு புறம் குரங்கு போன்ற வடிவம் தோன்றுகிறது. பொதுவாக ஐந்தடி இருக்கும். வால் இல்லை. ஆம்; இவன்தான் சிறுமா மனிசன். புலிக்கும் பல்லிக்கும் அஞ்சிக் கிளைகளில் இலை மறைவில் பதுங்கி ஒதுங்குகிறான். மழைக்கு நடுங்கிக் குகையில் புகுகின்றான். இவனைப் பொருட்படுத்தும் உயிரே இல்லை.

நாலுகாற் பாய்ச்சலாக விலங்கோடு விலங்காய்த் திரிகின்றான் அவன். ஒரு நாள் கதிரவன் செக்கச் சிவந்து தொடு வானத்தில் அழகாகக் காட்சி அளிக்கின்றான். கிளையில் உறங்கிய சிறுமா மனிசன் விழித்தெழுகின்றான். முன் நாள் அலைந்த அலைச்சல்: திமிர்விட்டுக் கிளையைப் பற்றித் தொங்கிச் சிறிது ஊசலாடுகிறான். தரையில் கால் பட்டதும் அப்படியே நிற்கின்றான்.

புதுமை! புதுமை! முன்காணாத காட்சி! உலகமே புதிதாகத் தோன்றுகிறது. நாலுகாற் பாய்ச்சலாக வாழ்ந்தபோது மண்ணுங் கட்டித் தரையினையே கண்டு வாழ்ந்த காட்சிபோல இல்லை. மூக்கிற்கு அப்பால் தோன்றாத நிலைமை மாறிவிடுகிறது. தொடுவானம் வரை எல்லாம் வெட்டவெளியாக விளங்குகிறது. நிமிர்ந்து நின்றதும் விண்ணுலக வாயிலே திறந்ததுபோலத் தோன்றுகிறது. நோக்க மாறுபாடு மிக மிகப் பெரிது. ஆழ்ந்து அகன்று ஓங்குகிறது அவனுடைய நோக்கம். காட்சிக்கு ஏற்பக் கருத்தும் விரிகிறது.

கருத்தோடு கையும் விடுதலை பெறுகிறது. முன்னங்காலாய் முடிந்து கிடந்தது முழுதும் சிறந்து முடுகித் திரிகிறது. கண்டதனை எல்லாம், எட்டுவதனை எல்லாம் தொட்டும் பிடித்தும் எடுத்தும் தடவியும் பார்க்கிறது. கண்ணறிவும் கையறிவும் இவ்வாறு ஒன்றாக இயைந்துவிடுகின்றன. 'எக்ஸ்பெரிமெண்ட்' (experiment) என்ற செய்கைக் காட்சியே விஞ்ஞானியின் சிறப்பு நிலை. அனைத்

தினையும் செய்து பார்த்தே உண்மை காண முயல்கின்ருன் விஞ்ஞானி. விடுதலை பெற்ற கை கொண்டு அனைத்தினையும் அன்னையினும் அன்போடு கையால் தடவியும் முத்தமிடுவதுபோல வாயிவிட்டும் கைகொண்டு ஆராயும் இந்தக் காட்டாளிடத்தே அந்த நிலையில் விஞ்ஞானி பிறக்கின்ருன். கை என்பது 'செய்' என்ற சொல்லின் மாற்று வடிவம் என்பர். செய்வது கை; செய்து காண்பது கை; காட்சிக்குப் பெருந்துணையாய்க் கருத்தினை வளர்ப்பது கை. உலகினை அறியச் சுவடிகள் இல்லாத அந்த நாளில் கை கொண்டு செய்து பார்த்துத்தான் அறிய வேண்டும். மூளையின் வளர்ச்சிக்கும் கைத்தொழில் வளர்ச்சிக்கும் இன்றியமையாத் தொடர்புண்டு என்பதற்கு இந்தச் சிறு மாமனிசனே சிறந்த சான்று ஆவான். மூளையிற் சிறந்தவன் மனிதன் ஒருவனே. கை இரண்டு பெற்றவனும் மனிதன் ஒருவனே.

கையாற் சிறந்தவன் மனிதன். தோளே அவனது தோழன். இயற்கைக் கைகொண்டு வாழும் இவன் உலகனைத்தினையும் செயற்கைக் கைகளாகக்கொண்டு திகழ முயல்கின்ருன். கைக்கு எட்டாத தனைக் கொம்பு கொண்டு எட்டுகின்ருன்; உதிர்க்கின்ருன்; அடிக்கின்ருன். ஆம், கொல்லவும் செய்கின்ருன். உலகில் உள்ளவை அனைத்தும் இவன் கையிற் சிக்கியதும் இவனுடைய ஆற்றலாக மாறிவிடுகின்றன.

விஞ்ஞானி காணும் பொறிகளும் அணுக்குண்டுகளும் அவனுடைய கையும் தோளுமே ஆம். கை பெற்ற மனிதன் உலகினைக் கட்டி ஆளுதல் வியப்போ? அவன் கையிலே செங்கோலை அடையாளமாக இன்றும் உலகம் வைத்துக் காண்கிறதன்ருே?

கை வளரக் கருத்து வளரும் நுட்பத்தினை அறியாத நம் கல்வி முறை நேர் வழி காணுது மூலைமுடுக்கில் சிக்கி அலைவது இயல்பே தான். செய்து காண்பதே செவ்விய கல்வி எனக் கண்ட காந்தியார் தொழிலடியாகக் கல்விக் கோட்டையைக் கட்ட முயலுவதன் நுட்பமும் வரலாற்று முறையில் பழைய மரபாக நிற்பதே ஆம்; செய்து காண்போனே சிறந்த மகனுவான். உழைப்போர் கையே வன்கை. உழையாதார் கையே மென்கை. மக்கள் வாழ்க்கை வஞ்சனைப் பேயின் மல்லாட்டத்தில் தலைகீழாக உருண்டதும், "உழைக்கும் வன்கையே அடிமையின் கை; உழையாது உண்ணும் கையே மென்கை" என்று தொழிலின் இழிவினையும் தொழிலாளியைச் செல்வச் செருக்கால் வேலை வாங்கும் ஆண்மையின் உயர்வினையும் பாடிப் புகழும் பண்பாடு பரவுவது இயல்பே ஆம். இந்தச் செயற்கைச் சீர்கேட்டிலன்ருே உலகம் இன்று சிக்கி உழலுகிறது? "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்; வீணில் உண்டு களிப்போரை நிந்தனை செய்வோம்" என்று பாரதியார் பாடும் ஆனந்தப்பள்ளு, கையின் விடுதலையில் எழுந்த ஆனந்த சுதந்திரத்தினைப் பழைய மரபினை ஒட்டி வரலாற்று வழி பிறழாது பாடுவதேயாம். பாரதியார் புதுக்கால் ஒன்றும் வெட்ட

வில்லை; தூர்ந்துபோன பழைய வாய்க்காலினையே புதுக்குகின்றார். உலகப் பண்பாடு வேறு வாய்க்காலில் பாய்வதற்கு இடம் இல்லை.

சிறுமா மனிசனைச் சிறிது திரும்பிப் பார்ப்போம். அநுமன் நினைவிற்கு வருகிறான். குரங்கு போலக் கிளைகளிற் பாய்ந்துலாவிய அவன், நிமிர்ந்து நின்று தாவிக் குதித்த கதைதானே இராமாயணம்? மனிதனது எதிர்கால வாழ்வினை எல்லாம் அநுமனிடம் காணலாம். அநுமனின் திருவிளையாடல்களைக் கம்பன் பரக்கக் கூறியதெல்லாம் புனைந்துரையாகாமல் எதிர்காலத்தின் ஞானக் காட்சியாக விளங்கக் காண்கிறோம். கதிரவன் தேரோடே ஓடிக் கற்ற அநுமன் யார்? பகலெல்லாம் கதிரவன் தேரோட இந்தச் சிறுமாமனிசனும் உலகில் ஓடி அலைந்து அனைத்தினையும் கண்டறிகின்ற கதையும் பொய்யா? நிமிர்ந்து நின்ற புகழைக் கம்பனோடு கண்டு களித்துக் கவி பாடலாம்.

மின்நெடுங் கொண்டல் தாளின் வீக்கிய கழலின் ஆர்ப்பத்
தன்நெடும் தோற்றம் வானோர் கட்புலத்து எல்லை தாவ
வல்நெடும் சிகர கோடி மகேந்திரம் அண்டம் தாங்கும்
பொன்நெடும் தூணின் பாத சிலைஎனப் பொலிந்து நின்றான். ★

—ஜனவரி, 1948.

## டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன்

# தேக சுகம்

குழந்தை பிறந்ததும் அழுகிறது. அந்த அழுகை ஆகாரத்துக்கு அல்லவா? ஆகையால் நம் உணவுதான் முதன்மையான ஸ்தானத்தில் இருக்கிறது. போஷணை சரியாக இல்லாவிட்டால் வியாதிக்கு இடம் உண்டாகும். சரியான உணவு கிடைப்பதாக வைத்துக்கொண்டாலும், சில விஷயங்களைக் கவனித்தே ஆகவேண்டும். சாப்பிடும் பண்டங்களைக் கையாளுகிற சமையற்காரன், பாற்காரன் முதலியோர் டைபாய்டு, சீதபேதிக் கிருமிகளைத் தம் கைகளில் (நக இடுக்குகளில்) அறியாமலே தூக்கிச் செல்லுகிறார்கள். பெரிய சிறைச்சாலைகளிலும் மாணவர் விடுதிகளிலும் உள்ள அநேகருக்கு இவ்விதக் கொள்ளை நோய்கள் (Epidemic Diseases) வந்ததற்குக் காரணம் அங்குள்ள சமையற்காரர்களும் பாற்காரர்களுமே என்று பல தடவைகளில் தெரிய வந்தது. இது தவிர வீட்டிலுள்ள ஈக்களும் நம்முடைய ஆகாரங்களின் மூலம் இவ்வியாதிகளைப் பரப்புகின்றன. மேலும் நமக்குக் கரண்டிகளை உபயோகித்துச் சாப்பிடும் வழக்கம் இல்லாததால், சாப்பிடுமுன்பு கைகளையும், நக இடுக்குகளையும் நன்றாகக் கழுவிச் சுத்தம் செய்துகொள்வது மிகவும் நல்ல வழக்கம்.

சாப்பிடும்போது மனச் சந்துஷ்டியுடன் சாப்பிட வேண்டும். மன வியாகுலமோ, கவலையோ கொஞ்சமும் கூடாது. இன்பம் உண்டாகும் வண்ணம், நல்ல இடத்தில் நண்பர்களுடனும் உறவினர்களுடனும் கூடிச் சாப்பிடுவது பழங்கால வழக்கம். "கூடிப் புசி" என்னும் பழமொழி இன்னும் வழங்குகிறது. மன வியாகுலத்துடன் உண்டால் ஜீரணசக்தி குறைவுபடும். ஆகாரம் அதிகச் சூடாகவோ, அதிகக் குளிர்ச்சியாகவோ இருக்கக்கூடாது. மஸாலை, பெருங்காயம், மிளகாய் மற்றுமுள்ள தாளிக்கும் திரவியங்கள் அநாவசியமாக வயிற்றுக்கு அதிக வேலை கொடுக்கின்றன. இதனால் நம்முடைய ராஜதானியில் வயிற்றிலும் சிறு குடலிலும் புண்கள் அதிகமாகக் காணப்பட்டு, கடைசியாகப் பெரிய சஸ்திர சிகிச்சையில் (Surgery) வந்து முடிகின்றன.

நாம் சாப்பிடும் உணவை மெதுவாகவும் நன்றாகவும் மென்று உமிழ்நீருடன் கலக்கும்படி செய்த பிறகே விழுங்கவேண்டும்.

இதனால் ஆகாரம் வாயில் முதல் முதலில் ஜீரணமடைகிறது. ஜீரண நீர்கள் எல்லாம் கரடுமுரடாக உள்ள பதார்த்தங்களின் மேலாக மட்டுமே கலக்கும். பற்களால் மிருதுவாகச் செய்த பண்டங்களோடு சேர்ந்தால் ஜீரண நீர்கள் அவற்றின் ஒவ்வோர் அணுவையும் நன்றாக ஜீரணப்படுத்தி, வயிற்றின் வேலையைக் குறைத்தும், வயிற்றில் புளிப்பு (Fermentation), புளியேப்பம், உப்புசம், வயிற்றுவலி இவைகளைத் தடுக்கும். சாப்பாட்டில் தண்ணீர் எவ்வளவுக்கு எவ்வளவு குறைவோ அவ்வளவுக்கு அவ்வளவு நல்லது. சாதாரணமாக அநேகர் சாப்பிடும்பொழுது மடக்கு மடக்கென்று தண்ணீர் அருந்துகிறார்கள். அதனால் ஜீரண நீர்கள் மிகவும் நீராகி (நீர்த்துப் போய்) நன்றாய் வேலை செய்வதில்லை. தென்னிந்திய உணவுகளில் ரசம், மோர் முதலானவைகளில் எவ்வளவு நீர் சேர்ந்திருக்கிறது என்பதை நாம் உணரவேண்டும்.

தண்ணீரும் நம் தேகத்திற்கு மிகவும் அவசியமான பொருள் தான். ஆனால் அதை ஆகாரத்திற்கு ஒன்றரை அல்லது இரண்டு மணிநேரத்துக்குப் பிறகுதான் நிறைய அருந்த வேண்டும். அச்சமயத்தில் அத் தண்ணீர் ஜீரணமான உணவுச் சத்தைக் கரைத்து ரத்தத்தில் சேர்க்கவும், வேண்டாத பொருள்களைக் குடலின் கீழ்ப் பாகத்திற்கு அடித்துக்கொண்டு போகவும் உதவியாக இருக்கும். அழுக்கு மேற்குடலில் சேராமல் கீழுள்ள பெருங்குடலில் போய் மலமாகச் சேருகிறது. தவிர, தண்ணீர் ரத்தத்தில் சேர்ந்து, அதிலுள்ள அழிவு பதார்த்தங்களை வேர்வையாகவும் மூத்திரமாகவும் வெளியில் கொண்டுவந்து விடுகிறது. காலையில் பல் துலக்கியவுடனும், இரவில் படுக்கப் போகுமுன்பும், ஒரு தம்ளர் குளிர்ந்த தண்ணீர் குடிப்பது நல்ல பழக்கம். குடிக்கும் தண்ணீர் சுத்தமாயும் கிருமிகள் இல்லாததாயும் இருக்கவேண்டும் என்பதைக் குறிப்பிட வேண்டியதில்லை. அதற்காக நன்றாய்க் கொதிக்க வைத்துக் குளிரச் செய்த தண்ணீரையே உபயோகப்படுத்துவது மிகவும் நல்லது.

இது சம்பந்தமாக, மற்றும் சில பானங்களைப்பற்றிய சில விஷயங்களை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். கரியமில வாயு (Carbon-di-oxide) கலந்த சோடாத் தண்ணீர் வயிற்றுக்குச் சுகமாக இருக்கும். ஆனால் ஜீரணசக்தி சரியாக இருந்தால் அது அவசியம் அன்று. எலுமிச்சம்பழ ரசத்தைச் சர்க்கரையுடன் தண்ணீரில் சேர்த்து, நீரிழிவு இல்லாமலிருப்பவர்கள் குடிக்கலாம். நீர் மோரும் இளநீரும் உடலுக்கு நல்லவை. காபியும் டீயும் உற்சாகமளிப்பனவாக இருந்தாலும், தேக சௌக்கியத்திற்கு அவசியமல்ல. அவை அளவுக்கு மீறினால் அஜீர்ணம், படபடப்பு, தூக்கமின்மை, நரம்புச் சோர்வு முதலியவற்றை உண்டாக்கும். ஆனால் அவற்றிலுள்ள பாலையும் சர்க்கரையையும் தனியாகவோ அல்லது கோகோவுடனே, ராகிக் கஞ்சியுடனே சாப்பிட்டால் நல்ல உணவாகும். சாராயம் சேர்ந்த பானங்கள் மிகத் தீமை விளைவிக்கும். இளம் பருவத்திற்குப் பின் வயசு முதிர முதிர வேலைக்குத் தக்கபடி, ஆகாரத்தையும் குறைத்துக்கொண்டே வரவேண்டும்.

சுருட்டு, பீடி முதலிய லாகிரி வஸ்துக்களை உபயோகித்தால் அஜீர்ணம் உண்டாவதுடன், ரத்தக் குழாய்கள் சீக்கிரமாகக் கனத்து அதிக ரத்த அழுத்தமும் (High Blood Pressure), வேறு பல வியாதிகளும் ஏற்பட ஏதுவாகின்றன.

உடல் வலிவுக்குத் தக்கபடி எல்லா வயசிலும் தேகாப்பியாசம் செய்யவேண்டியது அவசியம். அதேபோல் தேகத்திற்கு ஓய்வும் வேண்டும். கடும் வேலை செய்பவர்கள் கொஞ்சம் அதிகமாகவே தூங்கவேண்டும். தூங்கச் செல்லும்போது வயிற்றில் ஆகாரம் மிகவும் குறைவாக இருக்கவேண்டும். நல்ல காற்றுள்ள அறையில் ஜன்னல்களை நன்றாய்த் திறந்து வைத்துக்கொண்டு தூங்க வேண்டும். எவ்வளவு குளிராக இருந்தாலும், கம்பளத்தினால் முகத்தைப் போர்த்துக்கொள்ளக் கூடாது.

தினந்தோறும் காலையில் எழுந்திருந்ததும் ஒரு தடவை சரியானபடி மலசுத்தி செய்யவேண்டியது மிகவும் அவசியம். மலச்சிக்கலால் விளையக்கூடிய தீங்குகள் கொஞ்ச நஞ்சம் அல்ல. பெருங்குடலில் எப்பொழுதும் விஷக் கிருமிகள் இருக்கின்றன. அவைகளால் உண்டாகிற விஷ பதார்த்தங்கள் வெளியில் போக வேண்டும். மலச்சிக்கலால் ரத்தம் கெட்டுப் பலவித விஷ வியாதிகள் ஏற்படும். இவற்றைத் தடுக்க வேண்டுமானால் ஆகாரத்தில் கறிகாய்கள், நெய், எண்ணெய், பால், தயிர் இவை எல்லாம் சேர்த்துக்கொள்ள வேண்டும். தினந்தோறும் ஒரே வேளையில் காலம் தவறாமல் மலசுத்தி செய்யும் வழக்கத்தை அநுசரிப்பது மிகவும் முக்கியம். கீழ்க்குடலுக்கு ஒரு வழக்கத்தை உண்டாக்குவது சுலபமான விஷயம். மலச்சிக்கலுக்கு வழக்கமாய் மருந்து சாப்பிடுவதோ, எனிமா எடுத்துக்கொள்வதோ கூடாது. ஏதாவது வயிற்றுவலி இருந்தால் அநேகர் உடனே பேதிக்கு மருந்து சாப்பிடுகிறார்கள். வயிற்றுவலிக்குக் காரணங்கள் பல இருக்கின்றன. சில வயிற்றுவலிகள் குடல் வியாதிகளால் ஏற்படுகின்றன. அப்பொழுது பேதி மருந்து சாப்பிடுவதைப்பற்றி ஒரு வைத்தியர்தாம் தீர்மானிக்க வேண்டும். உதாரணமாக, குடல் அநுபந்தம் (Appendicitis) என்ற வியாதி மும்முரமாக இருக்கையில் அநேக வியாதிஸ்தர்கள் வைத்தியரின் உத்தரவு இல்லாமல் பேதி மருந்தைச் சாப்பிட்டதனால் குடலில் துவாரமுண்டாகி எதிர்பாராத மரணத்தை அடைந்திருக்கிறார்கள். இம்மாதிரி அநேகம் தாய்மார்கள் குழந்தைகளின் வயிற்று வலிக்கு அறியாமல் பேதி மருந்தைக் கொடுத்துத் தம்முடைய குழந்தைகளுக்குக் கொலையாளியாக இருந்திருக்கிறார்கள் என்று ஒரு பெரிய சஸ்திர வைத்திய நிபுணர் தமது புஸ்தகத்தில் எழுதியிருக்கிறார்.

தேகசுத்த விஷயங்களில் முதலில் கவனிக்க வேண்டியவை பற்களேயாகும். நாம் சாப்பிடும் ஆகாரத்தின் சிறு சிறு அணுக்கள் பற்களுக்கிடையே அகப்பட்டுக்கொண்டு, அழுகி நோய்க் கிருமிகள் வளர வசதியளிக்கின்றன. ஆகவே எயிறுகளிலும்,

பற்களுக்கு அஸ்திவாரமாக இருக்கும் இரண்டு தாடை எலும்பு களிலும் சீழ் உண்டாகி, எச்சில் விழுங்கும்போது வயிற்றுக்குள் அந்தச் சீழ் போவதுமல்லாமல், சிறு ரத்தக் குழாய்கள் வழியாக ரத்தத்திலும் சேர்ந்து வாத நோய்களை உண்டாக்கலாம். இவ் வியாதிஸ்தர்களோடு பேசும்போது, அவர்கள் வாய் நாற்றம் அரு வருப்பாக இருக்கும். இவ்வியாதிஸ்தர்களில் சிலர், மூட்டுநோய் என்று வரும்போது அதற்குக் காரணமாக இருக்கும் பற்களை எடுத்துவிட வேண்டும் என்றால் டாக்டரைப் பார்த்து நகைக்கின் றனர். "என்ன டாக்டர்! மூட்டு எங்கு இருக்கிறது? பல் எங்கு இருக்கிறது? அந்த இரண்டுக்கும் என்ன சம்பந்தம்?" என்கிறார் கள். ஏனெனில் ஒவ்வொரு சமயமும் உமிழ்நீரோ ஆகா ரமோ விழுங்கும்போது கொஞ்சம் சீழையும் விழுங்குகிறார்கள் என்பதை அவர்கள் அறியவில்லை. வேறு சிலர், "என்ன டாக்டர், நம்முடைய முன்னோர்களுக்கு இந்த வியாதியே தெரியாதே. பழைய நாள் கிழவர்களில் எத்தனை பேர்களை நல்ல கெட்டியான பற்க ளோடு பார்த்திருக்கிறோம்! அவர்களெல்லாம் நம்மைப்போலவா ரோமக் குச்சிகளையும் (Brushes) பிசின்களையும் (Pastes) உபயோ கித்தார்கள்?" என்று பரிகாசமாய்ப் பேசுகிறார்கள். அவர்களுக் குச் சில விஷயங்கள் தெரியவேண்டும். எகிப்து தேசத்தில் அநேக ஆயிரக்கணக்கான வருஷங்களுக்குமுன் புதைக்கப்பட்டி ருந்த மனித தேக எலும்புகளை விஞ்ஞான சாஸ்திரிகள் சோதித் துப் பார்க்கும்போது பல் தாடை எலும்புகளில் இப்பொழுதுள்ள பல வியாதிகள் அந்தப் பண்டை நாட்களிலும் இருந்ததற்கு அத் தாட்சிகள் இருந்தன. அந்த நாட்களில் நாகரிகத்தினால் உண்டா கும் அசௌகரியங்கள் இல்லாமல் இருந்ததால் அப்பொழுது இருந்த ஜனங்கள் அவசரமில்லாமல் தேகத்திலுள்ள முக்கிய அம் சங்களை நன்கு கவனித்து வந்தார்கள். கறிகாய்களை மிகவும் வேக வைக்காமல் பற்களை நன்றாக உபயோகித்து வந்தால் அவை பலமாக இருந்தன. கரியையும் மற்ற மருந்துப் பட்டைகளையும் பற்பொடியாகச் செய்து உபயோகித்தும், ஆல வேல விழுதுகளின் நுனிகளால் பற்களின் இடைகளை நன்றாகச் சுத்தம் செய்து வந் தார்கள். நாமும் ஏன் அப்படிச் செய்யக்கூடாது? இரவில் படுக் கப்போகும் சமயத்திலும் ஒரு தடவை பல் துலக்குவது நல்ல பழக்கம்.

அடுத்தபடியாக, நம்முடைய தேகத்தோலை உடம்பிலுள்ள சதைக்கு உறையாக மட்டும் கருதக் கூடாது. அதற்கு வேறொரு முக்கியமான வேலையும் இருக்கிறது. அது நமது தேகத்தின் உஷ்ண நிலையைச் சரியான அளவில் வைத்துக்கொள்கிறது. ஆத லால், நம் தேசம் போன்ற உஷ்ணப் பிரதேசங்களில் அதை நன்றாகப் பாதுகாத்து வரவேண்டும். தேகத்தில் மிகச் சிறிய துவாரங்கள் அநேகம் இருக்கின்றன. நாம் அறியாமல் எப்பொழு தும் இத் துவாரங்கள் வழியாய்த் தேகத்திலுள்ள தண்ணீர் ஆவி யாகி, நம்மைச் சூழ்ந்திருக்கும் காற்றில் போய்க் கலந்துகொண்டே

இருக்கிறது. இந்த நீர், தேகத்துக்கு வேண்டாத விஷப் பொருள்களைத் தேகத்திலிருந்து வெளியேற்றுகிறது. ஆகையால் இந்தச் சிறு துவாரங்கள் அழுக்குகள் நீங்கி நன்ருய்த் திறந்திருக்க வேண்டும். எனவே இவற்றைச் சுத்தமாக வைக்க ஸ்நானம் செய்ய வேண்டியது அவசியம். குளிர்ந்த நீரில் குளிப்பதே உடம்புக்கு நன்மை விளைக்கும். மிதமாகச் செய்தால் உடம்பைத் துடைத்துக் கொண்டதும் தேகத்தில் உஷ்ண உணர்ச்சி இருக்கவேண்டும். எண்ணெய் தேய்த்துக் குளிப்பதில் பயன் உண்டு. சருமத் துவாரங்களிலுள்ள கொழுப்புச் சேர்ந்த அழுக்குகள் எண்ணெயில் சுலபமாய்க் கலந்து சிகைக்காய் அல்லது சோப்பினுல் நீக்கப்படுகின்றன.

தேகத்தில் பூசிக்கொள்ளும் பவுடர், பிசின் வகைகள் அவசியமே இல்லை. அவற்றை உபயோகித்துத்தான் தீரவேண்டுமென்ருல் ஒவ்வொருவருக்கும் அவை தனித்தனி டப்பிகளில் இருக்க வேண்டும். ஒருவர் உபயோகித்ததை மற்ருெருவர் உபயோகிக்கக் கூடாது. அணிந்துகொள்ளும் ஆடைகள் நம் தேசத்துக்கு மெல்லியனவாயும், லேசாயும், காற்று அவற்றின் வலைக்கண்கள் வழியாக உள்ளும் வெளியும் செல்லும்படியும் இருக்கவேண்டும். அவை உடம்பை எவ்விதத்திலும் பந்தனம் செய்யக்கூடாது. பெரும்பான்மையோர் பாதங்களுக்குச் செருப்பு அணிவதில்லை என்பது வருந்தத்தக்கது.

தேக ஆரோக்கியத்திற்கு மிகவும் உதவுவது மனச் சந்துஷ்டியோடு இருப்பதே. தினசரி வழக்கமான வேலைகள் முடிந்த பிறகோ சாயந்தர நேரங்களிலோ சோர்வுற்ற நம் மனத்திற்குக் களிப்பூட்டும்படியாகப் பொழுதைப் போக்கவேண்டும். எத்தகையோரிடத்தும் கூடிக் கலகலப்பாய்ப் பேசி உறவாட வேண்டும். அதனுல் நம் மனவியாகுலம் அகலும். ஏனெனில் ஏகாந்தத்தில் பெரிய அபாயம் உண்டு. அப்படி இருப்பவர்கள் உலக அநுபவத்தை நன்கு அறியாமல், தங்களுடைய சிறு குற்றங்குறைகளையே பெரியனவாக எண்ணி, தங்களை மற்றவர்களைவிடத் தாழ்மையானவர்களாகக் கருதி ஏங்குகிருர்கள். மற்றவர்களுடைய குற்றங் குறைகளை அறிந்து, தாங்கள் அநேகரைவிட எவ்வளவோ மேம்பட்டவர்கள் என்பதை உணருவதில்லை. ஆகையால் தான் இவ்வுலக வாழ்க்கையில் வெறுப்பையே அடைகின்றனர். வீணுக எதற்கும் கோபிக்கக்கூடாது. என்ன செய்தாலும் பரபரப்புக் கூடாது. மனம் சந்தோஷம் அடைந்தால் உடல் நலம் பெறும். ★

—டிசம்பர், 1944.

பெ. நா. அப்புஸ்வாமி - ஜே. பி. மாணிக்கம்

# விசேஷச் சார்பு நிலைக் கொள்கை

**பௌ**திகத்திலும் கணிதத்திலும் அதிமேதாவியாக விளங்கிய ஐன்ஸ்டைன் வெளியிட்ட கொள்கைகள் உலகத்தைப் பிரமிக்கச் செய்யும் அளவில் புதியவை; மிக மிக விந்தையானவை; ஆயினும் உண்மையானவை. அவற்றுள் ஒன்றாகிய 'விசேஷச் சார்பு நிலைக் கொள்கை' என்பதைப்பற்றி இயன்ற அளவில் எளிமையாக இங்கே கூற முயலுவோம்.

## இரண்டு சிரமங்கள்

சார்பு நிலைக் கொள்கையை எளிய சொற்களால் விளக்குவதில் இரண்டு பெரிய சிரமங்கள் இருக்கின்றன. சார்பு நிலைக் கொள்கையின் கருத்துக்களைக் கவனித்தால், அவைகளும் நம்முடைய சாதாரண அநுபவங்களின் மூலமாக நாம் தெரிந்து கொண்டிருக்கும் விஷயங்களும் ஒன்றுக்கொன்று நேர் விரோதமாக இருப்பதாகத் தோன்றுகின்றன. இப்படி விபரீதமாக உள்ள விஷயங்களை நம்புவதுகூட முதலில் கஷ்டமாகத்தான் இருக்கும். ஆனால், வர வர அவற்றை நம்புவது எளிதாகி விடலாம். பல துறைகளிலும் இப்படி நடப்பதுண்டு. இந்த உதாரணத்தைப் பாருங்கள். பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த மக்கள், 'பூமி தட்டையானது; ஒரு தளப் பரப்பாக உள்ளது' என்று நம்பி வந்தார்கள். பிற்காலத்திலே தோன்றிய விஞ்ஞானிகள், 'இது தவறு; பூமி உண்மையில் உருண்டை வடிவமானது' என்று நிரூபித்தார்கள். ஆனால், பாமர மக்களுக்கு இதை எப்படி நம்புவது என்று முதலில் தெரியவே இல்லை. 'பூமி உருண்டையா யிருந்தால், நமக்கு நேர் எதிர்ப்புறத்திலே, நம்முடைய காலடிக்குக் கீழே உள்ள மக்கள் தலைகீழாக அல்லவோ தொங்குவார்கள்? இது எப்படி முடியும்?' என்று திகைத்தார்கள். இதைப் போன்ற சிரமம் சார்பு நிலைக் கொள்கையிலும் இருக்கிறது. இதுதான் முதலாவது கஷ்டம்.

சார்பு நிலைக் கொள்கையைத் தெளிவாகவும் திருத்தமாகவும் வெளியிட வேண்டுமானால், கணிதம் என்பதன் சங்கேத மொழிகளால்தான் அப்படிச் செய்யமுடியும். அதிலும் சாதாரணக் கணிதம் போதாது. எளிதில் விளங்காத சிக்கலான கணிதத்தின் சங்கேத

மொழிகளின் மூலமாகத்தான் அக் கருத்துக்களை வெளியிட முடியும். சாதாரணமாக, நாம் வழங்கும் சொற்களைக் கொண்டு சார்பு நிலைக் கொள்கையை வெளியிட முயன்றால் என்ன ஆகும் என்பதை ஒரு சிறு கதையால் விளக்கலாம்.

## ஓர் உப கதை

ஒருவர் நீதி மன்றத்துக்குச் சென்று, தமக்கு விவாக ரத்து வேண்டுமென்று மனுச் செய்துகொண்டார். "உம் மனைவியை விட்டுப் பிரிய விரும்புவதற்குக் காரணம் என்ன?" என்று நீதிபதி அவரைக் கேட்டார். அதற்கு அந்த மனுதார், "என் மனைவி ஓயாமல் சொல்மாரி பொழிந்து கொண்டே இருக்கிறாள். அதனால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போல் வருகிறது. இரவில் அவள் விடாமல் பேசுவதால் என்னால் தூங்கவே முடிவதில்லை" என்றார். அப்போது நீதிபதி, "அவள் எதைப்பற்றிப் பேசுகிறாள்?" என்று கேட்டார். "அதைத்தான் அவள் சொல்வதில்லை" என்றார் மனுதார்.

ஐன்ஸ்டைன் வெளியிட்ட மிக ஆழ்ந்த கொள்கையைப் பற்றிக் கூற முயலும் சாதாரணமான எளிய பேச்செல்லாம் கிட்டத்தட்ட இப்படிப்பட்ட 'ஒன்றும் சொல்லாத' பேச்சாகவே முடிகிறது. இருந்தாலும், அந்தக் கொள்கையின் தன்மையை ஓரளவாவது தெரிந்துகொள்ள வேண்டும் அல்லவா? அதன் பொருட்டு ஐன்ஸ்டைன் வெளியிட்ட விசேஷச் சார்பு நிலைக் கொள்கையைப் பற்றியும், மனத்தைத் திடுக்கிடச் செய்யும் அதன் விளைவுகள் சிலவற்றைப் பற்றியும் கூடிய வரையில் எளிய சொற்களால் விளக்க முயலுவோம்.

## ஓர் உதாரணம்

ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியை மதிப்பிட முயன்றால், சில வேளைகளில், அதன் அளவு மதிப்பிட முயலுவோனுடைய மன நிலையை ஒட்டி வேறுபடுகிறது. இது சாதாரண அநுபவம். நீதி மன்றத்தில் நீதிபதியின் முன்னிலையில் குற்றம் சாட்டப்பட்டுக் கவலையோடு நிற்கும் கைதிக்கு நீதிபதி தீர்ப்புச் சொல்லுமுன் ஆலோசனை செய்யும் ஐந்து நிமிஷங்கள் ஐந்து மணி நேரம்போல் தோன்றுகின்றன. தன் காதலியோடு அன்பாகப் பேசிக் குலாவும் காதலனுக்கு ஐந்து மணி நேரம் ஐந்து நிமிஷம்போல் தோன்றுகிறது. இவ்விரண்டு மதிப்புக்களும் தவறான மதிப்புக்கள் என்பதில் சந்தேகம் இல்லை. இந்த மதிப்புக்கள் மன நிலையைச் சார்ந்தவை. இவையும் சார்பு நிலை மதிப்புத்தான். ஆனால், ஐன்ஸ்டைன் குறிப்பிட்டது இவ்வகைச் சார்பு நிலையை அன்று.

## மற்றோர் உதாரணம்

தெற்கு வடக்காக உள்ள ஒரு தெருவில் ஒருவன் நடந்து போகிறான். அவன் பக்கமாக அவன் செல்லும் திசையாகவே

விரைந்து நடக்கும் ஒருவனைப் பார்த்து அவன், "ஸ்ரீராம் வீடு எது?" என்று கேட்கிறான். "வலப் பக்கத்தில், நடுவில் உள்ள மூன்று மாடி வீடு" என்று பதில் சொல்லுகிறான். இரண்டு நொடிகளுக்குப் பிறகு, அவன் தனக்கு எதிரே வரும் ஒருவனைப் பார்த்து, "ஸ்ரீராம் வீடு எது?" என்று மறுபடியும் கேட்கிறான். அதற்கு அவன், "இடப் பக்கத்தில், நடுவில் உள்ள மூன்று மாடி வீடு" என்று விடை அளிக்கிறான். இவர்களில் யார் சொன்னது சரி? ஒருவன் வலப் பக்கம் என்கிறான்; மற்றொருவன் இடப் பக்கம் என்கிறான். இருவர் சொன்னதும் சரிதான், அல்லவா? ஒருவனைச் சார்ந்த மட்டில் வலப் பக்கமாக உள்ள ஒன்று மற்றொருவனைச் சார்ந்த மட்டில் இடப் பக்கமாக இருக்கிறது. ஐன்ஸ்டைன் சார்பு நிலை என்று வெளியிட்டதன் தத்துவம் இதை ஒத்ததுதான் என்று ஒருவாறு சொல்லலாம்.

## சார்பு நிலை என்றால் என்ன?

ஒரே விஷயத்தை அல்லது நிகழ்ச்சியை இரண்டு பேர்கள் கவனிக்கிறார்கள். என்ன நடந்தது என்பதைப்பற்றி அவர்கள் இருவரும் நேர் எதிரிடையான முடிவுகளைக் கொள்கிறார்கள். ஆயினும் அவர்கள் இருவர்களுடைய முடிவுகளும் சரியான முடிவுகள். இப்படி உள்ள ஒரு நிலைதான் சார்பு நிலை. இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் ஒருவன் மற்றவனைப் பார்த்து, "நீ சொல்வது தப்பு" என்று சொல்ல முடியாது. இந்த இடத்தில் தனி, அல்லது சார்பிலாத் தன்மை என்பது என்ன என்று தெரிந்துகொள்வது நல்லது. எந்த இயற்கைத் தோற்றமாவது நிகழ்ச்சியாவது எல்லாருக்கும் - அவர்கள் உள்ள நிலை ஏதாக இருந்தாலுமே, அல்லது அவர்களுடைய இயக்கம் எப்படிப்பட்டதாக இருந்தாலுமே - ஒன்று போலவே தோன்றுமானால், அப்படிப்பட்டதைத் தனியானது, சார்பில்லாதது என்று சொல்லலாம்.

## சார்பு வேகம்

ரெயில் பாதைக்கு ஒருபோகாக உள்ள ஒரு நேர்பாதையில் ஒரு சிறுவன் நின்றுகொண்டிருக்கிறான். அப்போது அந்த ரெயில் தண்டவாளங்களின்மீது ஒரு ரெயில் 30 மைல் வேகத்தோடு செல்கிறது. அந்தப் பாதையில் ஒருவன் ரெயில் ஓடும் திசையாகவே மணிக்கு 10 மைல் வீதமாகச் சைக்கிளின்மீது செல்கிறான். அந்தச் சைக்கிள்காரனைப் பொறுத்த வரையில் ரெயிலின் சார்பு நிலை வேகம் மணிக்கு 30—10, அதாவது 20 மைலாக இருக்கும். அதே பாதையில் அதே திசையாக மணிக்கு 25 மைல் வேகத்தில் மோட்டார் சைக்கிளில் செல்லும் ஒருவனுக்கு அந்த ரெயிலின் சார்பு வேகம் (அதாவது ரெயில் செல்வதுபோல அவனுக்குத் தோன்றும் வேகம்) மணிக்கு 30—25 அதாவது 5 மைலாக இருக்கும். ஆகவே, ரெயிலின் வேகத்தைக் கவனிக்கும் இம்மூவருக்கும் அதன் வேகம் வெவ்வேறாகத் தோன்றும். ஆனால் ஒவ்வொருவரைச் சார்ந்த மட்

டில் அந்த அந்த வேக மதிப்புத் திருத்தமான மதிப்பாகவே இருக்கும்.

## சார்பு இயக்கம்

இன்னும் ஒன்று. பாதையில் செல்லும் இம் மூவரும் ரெயில் நேர் கோட்டிலேயே ஓடுகிறது என்று ஒப்புக்கொள்ளுவார்கள். ஆனால், சந்திர மண்டலத்தில் உள்ள ஒருவன் அந்த ரெயில் ஓடுவதைக் கவனிப்பதாக வைத்துக்கொள்வோம். அவனுக்குப் பூமி ஓர் அச்சில் சுழல்வதுபோலத் தெரியும். இதனால் ரெயிலின் போக்கில் வேறோர் இயக்கம் - அதாவது, இருப்புப் பாதையின்மீது அது ஓடும் இயக்கத்தைத் தவிர மற்றோர் இயக்கம் - இருப்பதும் அவன் கண்ணுக்குத் தெரியும். ஆதலால் சந்திர மண்டலவாசிக்கு ரெயில் ஒரு வகையாக வளைந்து செல்வதுபோலத் தோன்றும். செவ்வாய்க் கிரகத்தில் வசிக்கும் ஒருவன் அந்த ரெயிலைக் கவனித்தால் அவனுக்கு அதன் இயக்கம் வேறொரு வகையான வளைவில் நிகழ்வதுபோல் தோன்றும். ஏனென்றால், பூமி சூரியனைச் சுற்றி ஓடும் காரணத்தால் அந்த ரெயிலுக்கு வேறொரு வகையான இயக்கமும் ஏற்படும் அல்லவா? ஆகையால், 'அந்த ரெயிலின் நேர் வேகம் என்ன?' என்னும் வினவுக்கு அதை வெவ்வேறு இடங்களிலிருந்து கவனிக்கும் ஒவ்வொருவனும் வெவ்வேறான விடையை அளிப்பான். ஆயினும் அந்த விடைகளில் ஒவ்வொன்றும் சரியான விடைதான் என்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

## தனி வேகம் உண்டா?

"அப்படியானால், அந்த ரெயிலுக்கு அதைக் கவனிப்போர் இருக்கும் இடத்தையும், அவர்களுடைய இயக்கத்தையும் சாராததான, தனிப்பட்ட நேர் வேகம் ஒன்றும் கிடையாதா?" என்று நீங்கள் கேட்கலாம். நாம் காட்டிய உதாரணத்தில், அந்த ரெயிலுக்கு ஓர் இயக்கம் இருக்கிறது. அது போலவே அதைக் கவனிப்போர் ஒவ்வொருவருக்கும் ஓர் இயக்கம் இருக்கிறது என்பது கவனிக்க வேண்டிய விஷயம். பூமியிலிருந்து கவனிப்பவர்கள் எல்லோரும் பூமியோடுகூட இயங்கி வருகிறார்கள்; சந்திர மண்டலவாசி சந்திரனோடு இயங்குகிறான். செவ்வாய்க் கிரக வாசி, செவ்வாய் சூரியனைச் சுற்றி ஓடும்போது, செவ்வாயோடு இயங்குகிறான்.

அது சரிதான். ஆனால் மிகப் பிரம்மாண்டமான பிரபஞ்சத்தில் அசைவே இல்லாமல், நிலையாய் இருக்கும் பிரதேசம் ஒன்றுமே இல்லையா? அப்படிப்பட்ட ஓர் இடத்திலிருந்து கவனிக்கும் ஒருவன் அந்த ரெயிலின் 'உண்மையான' அதாவது தனித்த, சார்பில்லாத இயக்கத்தைக் காண முடியாதா? அப்பேர்ப்பட்ட இடத்திலிருந்து கவனிக்கும் ஒவ்வொருவருக்கும் அந்த ரெயில் ஓடும் இயக்கம் ஒன்று போலத் தோன்றாதா? ஆம்; தோன்றும். உண்மைதான். ஆனால், இயற்கையில் அசைவே இல்லாத, சற்றுமே அசையாத, பொருள் ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று விஞ்ஞானிகள் எவ்

வளவோ முயன்று பார்த்து வருகிறார்கள். ஆயினும், இதுவரை அவர்களுடைய முயற்சி சிறிதுகூடப் பலிக்கவில்லை; அவர்கள் அடைந்ததெல்லாம் தோல்விதான். இந்தச் சந்தர்ப்பத்தில் மிக்கெல்ஸன், மார்லி என்னும் இருவர்கள் சேர்ந்து செய்த பரிசோதனை ஒன்றைப் பற்றிச் சொல்வது பொருந்தும்.

## பரிசோதனைக்கு அடிப்படை

பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு ஜடப் பொருளும் இடைவிடாமல் இயங்கிய வண்ணமாகவே இருக்கிறது என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். நம்முடைய பிரபஞ்சம் அமைதியற்ற பிரபஞ்சம் என்பது தெளிவாகத் தெரிந்தது. இப்படிப்பட்ட பிரபஞ்சத்தில் சார்பிலா வேகத்தைக் கண்டுபிடிப்பது எப்படி? விஞ்ஞானிகள் பல வகையாகச் சிந்தித்துப் பார்த்தார்கள். பிரபஞ்சம் எங்கும் நிறைந்த ஈதெரில் (ஆகாசத்தில்) அதிவேகமாகச் செல்லும் ஒளியை உபகரணமாகக் கொண்ட தக்க ஒளிக் கருவிகளின்மூலம், பிரபஞ்ச வெளியில் எங்காவது சார்பிலா வேகத்தைக் காண முடியாதா என்று ஆலோசனை செய்தார்கள். எல்லாவற்றையும் எண்ணிப் பார்க்கும்போது, எங்கும் நிறைந்த இந்த ஈதெர் என்னும் பொருள் அசைவில்லாமல், பிரபஞ்சம் முழுவதையும் வியாபித்துப் பரந்து கிடக்கக் கூடும் என்று நினைப்பது நியாயந்தான் என்று அவர்களுக்குத் தோன்றிற்று.

## ஓர் உபமிதி

இந்தப் பரிசோதனையின் தத்துவத்தை ஓர் உபமிதியால் விளக்கலாம். இ என்பது ஆராய்ச்சி செய்பவர் நிற்கும் இடம். அவருடைய கையில் ஒரு சிறு துப்பாக்கி இருக்கிறது. அ, ஆ என்பவை இரண்டும் இ என்னும் இடத்திலிருந்து சம தூரத்திலுள்ள இரண்டு குன்றுகள்; இஅ என்பதும் இஆ என்பதும் ஒன்றுக்கொன்று செங்குத்தாக உள்ள நேர்கோடுகள். இ இருக்கும் திசையிலிருந்து ஆ இருக்கும் திசையை நோக்கி, காற்றானது மாறுபடாத வேகத்தோடு அடித்துக்கொண்டிருக்கிறது.

ஆராய்ச்சி செய்பவர் தம் கையிலுள்ள துப்பாக்கியைச் சுடுகிறார். அ விலிருந்தும் ஆ விலிருந்தும் அந்தத் துப்பாக்கி ஓசை பிரதிபலித்து மீளும்; இயை வந்து அடையும். ஆனால், அ விலிருந்து வரும் எதிரொலி, ஆ விலிருந்து வரும் எதிரொலியை விட முன்னால் கேட்டுவிடும்.

இது உண்மைதான் என்பதை எளிதாகக் கணக்கிட்டு நிரூபிக்கலாம். இதைச் சாதாரணமாக மற்றோர் உதாரணத்தால் விளக்குவதுண்டு. ஒரு மைல் அகலமுள்ள ஓர் ஆறு இருக்கிறது. அது மணிக்கு 3 மைல் வீதம் ஓடிக்கொண்டிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அசைவில்லாத, நிலை நீர்க் குளத்தில் மணிக்கு 5 மைல் வீதம் படகைச் செலுத்தக்கூடிய ஒரு படகோட்டி அந்த

ஆற்றில் தன் படகை விடுகிறான். அவன் ஒரு மைல் அகலமுள்ள அந்த ஆற்றைக் கடந்து, மறுபடியும் தான் இருந்த கரைக்கு வர (மொத்தம் இரண்டு மைல்) அதிக நேரம் ஆகுமா? அல்லது ஆற்றின் போக்குக்கு எதிர்ப் போக்காக ஒரு மைல் சென்று, ஆற்றின் போக்கோடு ஒரு மைல் வந்து (மொத்தம் இரண்டு மைல்), தான் புறப்பட்ட இடத்துக்கு வர அதிக நேரம் ஆகுமா?

## ஒரு சிறு கணக்கு

சற்றே கணக்குப் போட்டுப் பார்க்கலாமா? அசையா நீரில் படகின் வேகம் மணிக்கு 5 மைல். ஆகையால், ஆற்றைக் குறுக்காகக் கடந்து மீள (இரண்டு மைல் செல்ல) ஆகும் நேரம் அரை மணி நேரத்துக்குக் குறைவு. ஆனால் ஆற்றை எதிர்த்துப் போகும் போது படகின் வேகம் மணிக்கு 5—3, அல்லது 2 மைல். ஆகவே, 1 மைல் எதிர்த்துப் போக அரை மணி ஆகும். ஆற்றேடு திரும்பி வரும்போது படகின் வேகம் மணிக்கு 5+3 அதாவது 8 மைல். 1 மைல் ஆற்றேடு வர அரைக்கால் மணியே ஆகும். ஆக மொத்தம் அரையே அரைக்கால் மணி ஆகும். ஆதலால் ஆற்றின் குறுக்கே போய் மீளுவதற்கு ஆகும் நேரத்தைவிட, அதை எதிர்த்துச் சென்று திரும்ப அதிக நேரம் ஆகும்.

இது போலவேதான் நாம் சொல்லிய துப்பாக்கி எதிரொலிப் பரிசோதனையிலும். ஆகையால், ஒலியானது இ யிலிருந்து அ வுக்குச் சென்று மீளுவதற்கு ஆகும் நேரத்தைக் காட்டிலும், இ யிலிருந்து ஆ வுக்குச் சென்று மீளுவதற்கு ஆகும் நேரம் அதிகம். இது ஒலித் துறைப் பரிசோதனை.

## மிக்கெல்ஸன் - மார்லி பரிசோதனை

சூரியனைச் சுற்றி ஓடும் பூமி அதன் அயன வீதியில் செல்லும் வேகம் நொடிக்குச் சுமார் $18\frac{1}{2}$ மைல் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். இப்படி அது ஓடும்போது, நீரைக் கிழித்தோடும் கப்பலைப்போல், ஈதெரைக் கிழித்துத் தள்ளிக்கொண்டு, இருபுறமும் அதன் ஊடாகவும் ஈதெர் வழிந்தோட, முன் செல்லுகிறது என்று சொல்லலாம் அல்லவா? அப்படிப் பாய்ந்தோடும் ஈதெருக்கு ஒரு செயற்கை வேகம் ஏற்படுகிறது. திறந்த மோட்டார் காரில், காற்றே வீசாத வேளையில் வேகமாகப் போகும்போது நம்மீது காற்று மோதி வீசுகிறது அல்லவா? வானவெளியிலே பூமி வேகமாக ஓடும்போதும் இவ்வகையான ஈதெர் ஓட்டம் (வீச்சு) ஒன்று ஏற்படவேண்டும். பூமி செல்லும் திசையாக ஓர் ஒளிக் கிரணத்தைச் செல்லச் செய்தால், அந்தக் கிரணமானது எதிர்த் திசையாக வீசும் ஈதெர் ஓட்டத்தினால் - ஆற்றுப் படகைப்போல் - தடைப்படவேண்டும். அந்தக் கிரணம் மீளும்போது அதன் வேகம் ஈதெர் ஓட்டம் துணை செய்வதால் மிகுதிப்பட வேண்டும். ஆனால், பூமி செல்லும் திசைக்குச் செங்கோணமாக உள்ள திசையில் சென்று

மீளும் ஒளியின் வேகம் மாறுபடாது. அசைவில்லாத ஈதரில் அதன் வேகம் எப்படி இருக்குமோ அப்படியே இருக்கும்.

மிக்கெல்ஸனும் மார்லியுமாகச் செய்த பரிசோதனையில், இ என்னும் இடத்திலிருந்து இஅ என்னும் திசையாக ஒரு கிரணமும், இஆ என்னும் திசையாக மற்றொரு கிரணமும் சமகாலத்தில் செல்ல விடப்பட்டன. இஅ வும் இஆ வும் சம தூரங்கள். அந்தக் கிரணங்கள் இரண்டும் முறையே க. 1 என்னும் கண்ணாடியாலும், க. 2 என்னும் கண்ணாடியாலும் பிரதிபலிக்கப்பட்டன. பிறகு, இ யில் வைக்கப்பட்டிருந்த ஓர் உணர்ச்சி மிக்க அளவு கருவியை வந்தடைந்தன. அந்த இரண்டு கிரணங்கள் போய் மீளுவதற்கு ஆன நேரத்தை மிகவும் திருத்தமாகக் குறித்து, அந்த நேரங்களுக்கு இடையே ஏதாவது வித்தியாசம் இருந்தால், அதைச் சிறிதுகூடப் பிழை இல்லாமல் காட்டக்கூடிய நுட்பமும் உணர்ச்சியும் திறமையும் வாய்ந்தது அந்தக் கருவி.

இது மிகவும் அற்புதமாக அமைக்கப்பட்ட பரிசோதனை; ஈடிணையற்ற அழகு வாய்ந்த பரிசோதனை என்று இதை விஞ்ஞானிகள் பாராட்டினார்கள். அத்துணை நுட்பமான தூரங்களையோ, கால வேற்றுமைகளையோ அளக்கக்கூடிய கருவி அதுவரை அமைக்கப்பட்டதில்லை. மிக்கெல்ஸன், மார்லி இருவரும் பரிசோதனைத் துறையில் மகா நிபுணர்கள்; மிக மிகக் கைதேர்ந்தவர்கள். அந்தப் பரிசோதனைக்கு அடிப்படையான தத்துவத்திலும் எவ்வகையான குற்றமும் இல்லை. ஆகவே, விஞ்ஞான உலகம் முழுவதும் புதிய விஞ்ஞானச் செய்தி ஒன்று கிடைக்கப் போகிறது என்று மிகவும் ஆவலோடு, ஆத்திரத்தோடு, எதிர்பார்த்திருந்தது. அந்தச் செய்தி மிக மிக முக்கியமானதாக இருக்கும் என்பதையும் அது அறிந்திருந்தது. அவ்விரண்டு கிரணங்களுக்கும் இடையே நிகழ்ந்த ஓட்டப் பந்தயத்தில் வெற்றி பெற்ற கிரணத்துக்கும் தோல்வி அடைந்த கிரணத்துக்கும் இடையே உள்ள கால வித்தியாசம் ஒரு நொடியின் மிக மிகச் சிறிய பின்னமாகத்தான் இருக்கும்; ஆயினும் அது எவ்வளவு என்று தெரிந்துவிடும் என்று காத்து நின்றது. ஆனால், இலவு காத்த கிளியின் கதையையே அடைந்தது!

## எதிர்பாராத முடிவு

ஏனென்றால், அவ்விரண்டு கிரணங்களுக்கும் போக வர ஆன நேரத்தில் யாதொரு வித்தியாசமும் - எத்துணைச் சிறிய வித்தியாசமுங்கூட - காணப்படவில்லை. அந்தப் பரிசோதனையைப் பலமுறை மீண்டும் மீண்டும் நிகழ்த்திப் பார்த்தார்கள். ஒரு தடவையாவது வித்தியாசம் தென்படவில்லை. அந்த இரண்டு கிரணங்களும் ஒரே கணத்தில், சிறிதுகூட வித்தியாசம் இல்லாமல், சிறிதுகூட விலகாமல் திரும்பாமல், அதே இடத்தை வந்து அடைந்தன. இதைக் கண்டு விஞ்ஞானிகள் அனைவரும் திகைப்படைந்தார்கள்.

## சில பிரச்னைகள்

இப்படி எதிர்பாராத வகையான முடிவினால் எழும் பிரச்னைகள் சிலவற்றைக் கவனிப்போம். பிரபஞ்ச வெளியிலே செல்லும் பூமிக்கு ஒரு தனி (சார்பிலா) இயக்கம் இருக்கிறதா? ஈதெர் என்று ஒன்று இருக்கிறதா? ஒளியின் வேகம் ஒரு நிலை எண் அல்லவா? அது சார்பிலா எண்ணு, அன்ரு? எவ்வகைச் செயலாலும் பாதிக்கப்படாததாயும், எந்நிலையிலும் மாருததாயும், யாவர்க்கும் ஒன்றுபோல் உள்ளதாயும் இருக்கும் தன்மை உடையதல்லவா ஒளி ?

## ஐன்ஸ்டைன் வருகை

மேலே சொன்ன பரிசோதனையை மிக்கெல்ஸன் 1881-இல் முதல் முதலாகச் செய்து பார்த்தார். பிறகு 1887-இல் மார்லியோடு சேர்ந்து அந்தப் பரிசோதனையை மீண்டும் செய்தார். பின்பு, தாம் மட்டும் 1928-இல் மறுபடியும் செய்தார். இதற்கிடையில் 1905-ஆம் வருஷத்தில் இந்தப் பரிசோதனையால் ஏற்பட்ட புதிர் போன்ற நிலையை விளக்கும்பொருட்டு ஐன்ஸ்டைன் தம்முடைய ‘விசேஷச் சார்பு நிலைக் கொள்கை’யை வெளியிட்டார். ஐன்ஸ்டைன் வெளியிட்ட ‘விசேஷச் சார்பு நிலைக் கொள்கை’, ‘பொதுச் சார்பு நிலைக் கொள்கை’ என்னும் இரண்டு கொள்கைகளையும் மிகப் பரந்த விஞ்ஞானப் பொது விவரணங்கள் என்று சொல்லலாம். அவை இரண்டும் நியூட்டன் வெளியிட்ட ஆகர்ஷண சக்திக் கோட்பாட்டைப்போல் மிகமிகப் பிரசித்தி பெற்றவை; மிகமிக முக்கியமானவை.

## அடிப்படைத் தத்துவம்

ஐன்ஸ்டைன் வெளியிட்ட விசேஷச் சார்பு நிலைக் கொள்கைக்கு அடிப்படையான ஆதாரங்கள் இரண்டு. **முதலாவதாக,** எல்லா இயக்கமும் சார்பு இயக்கந்தான். தனியான (அதாவது சார்பிலா) இயக்கத்தைத் தெரிந்துகொள்ளுவது சாத்தியமே இல்லை. **இரண்டாவதாக,** ஒளியின் வேகம் ஒரு தனி எண். அது சார்பிலாதது; யாவர்க்கும் ஒன்றுபோல் தோன்றுவது; ஒளி வீசும் சாதனத்தின் - அல்லது பொருளின் - இயக்கத்தால் சிறிதும் பாதிக்கப்படாதது.

## விஞ்ஞானக் கோட்பாடுகளின் தன்மை

மேலும், ஒவ்வொரு விஞ்ஞானக் கோட்பாடும் மூன்று நிபந்தனைகளுக்கு உட்பட்டதாக இருந்தாகவேண்டும். இல்லாவிட்டால், அது விஞ்ஞானக் கோட்பாடாக மதிக்கப்பட மாட்டாது. **முதலாவது,** அது கணித முறையில் - கணித பரிபாஷையில் - வெளியிடக்கூடியதாக இருக்கவேண்டும். அதாவது, அது சமன்பாடுகளின் மூலமாக வெளியிடக்கூடியதாக இருக்கவேண்டும். அது அப்படி இருந்தால் மட்டுமே அதிலிருந்து ஊகங்களைப் பெறவும், அந்த ஊகங்

களைப் பரிசோதனைகளால் சோதிக்கவும் முடியும். இரண்டாவது, அதுவரை தெரிந்துள்ள உண்மைகளை (விஷயங்களை) அது விளக்கக்கூடியதாக இருக்கவேண்டும். மூன்ருவது, புதிய உண்மைகளைக் (விஷயங்களைக்) கண்டுபிடிப்பதற்கு அது ஒரு வழிகாட்டியாக, அடிகோலியாக, இருக்கவேண்டும்.

இம்மூன்று கருத்துக்களை, நிபந்தனைகளை அடிப்படையான தத்துவங்களை, வைத்துக்கொண்டு ஐன்ஸ்டைன் வெளியிட்ட கோட்பாட்டைக் கவனித்தால், அது எல்லாவிதத்திலும் திருப்திகரமாக இருக்கிறது. இந்தக் கோட்பாட்டின் கணித விவரணத்தை இங்கே சொல்ல வேண்டியதில்லை. அதை அறிய விரும்புவோர்கள் பௌதிக பாட புத்தகங்களைப் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம்.

இந்தக் கொள்கையிலிருந்து பெறப்பட்ட ஊகங்களில் சிலவற்றைப் பின்னுல் பார்க்கப் போகிருேம். இந்த ஊகங்கள் எல்லாம் நாம் சாதாரணமாகத் தெரிந்துகொண்டிருக்கும் விஷயங்களுக்கும், நம்முடைய அநுபவங்களுக்கும் முற்றும் எதிரிடையாகத் தோன்றுபவை. ஆகையால், இந்தக் கொள்கையை ஐன்ஸ்டைன் முதலில் வெளியிட்டபோது அதற்கு மிகவும் அதிகமான எதிர்ப்பு இருந்தது. ஆனுல், இந்த விபரீதத் தன்மையே அதைப் பலரும் கவனிக்கும்படி செய்தது. அக் கொள்கை இன்னது என்றே தெரியாத, ஒரு நாளும் தெரிந்துகொள்ள இயலாத மக்களுங்கூட அதைப் பற்றிக் கொண்ட அக்கறை அளவு கடந்தது.

## ஒளியின் வேகம்

மிக்கெல்ஸன் - மார்லி செய்த பரிசோதனையின் விசித்திரமான விளைவை ஐன்ஸ்டைனின் கோட்பாடு எப்படி விளக்கிற்று என்று பார்ப்போம். ஈதெர் என்று ஒன்று இருக்கிறது என்று மிக்கெல்ஸன் பாவனை செய்துகொண்டார் அல்லவா? இதைப்பற்றி ஐன்ஸ்டைனின் அபிப்பிராயம் என்ன? "ஈதெர் என்று ஒன்று இருக்கலாம்; அல்லது, அப்படி ஒன்று இல்லாமலும் இருக்கலாம். எனக்கு அதைப்பற்றிச் சிறிதுகூட அக்கறை இல்லை. என்னுடைய கொள்கைக்கு ஈதெர் வேண்டியதே இல்லை" என்பதுதான் ஐன்ஸ்டைன் அளித்த விடை.

ஆனுல்,ஒளியின் வேகத்தில் வித்தியாசம் காணப்படவில்லையே, அது ஏன்? ஒளியின் வேகம் மாருத் தன்மையுள்ளது; அது ஒரு நிலை எண். எல்லா நிலைமைகளிலும் அது மாருமல் இருக்கும் இயல்புள்ளது. பரிசோதனையில் உபயோகிக்கப்பட்ட இரண்டு ஒளிக் கிரணங்களும் ஒரே வேகத்தோடு செல்பவை; அவை செல்லும் தூரங்கள் சமமாயிருந்தால், அவை இரண்டும் ஒரே சமயத்தில் புறப்பட்டால், அவை இரண்டும் அளக்கும் கருவியை ஒரே சமயத்தில்தான் வந்து சேரும். இதுதான் ஐன்ஸ்டைன் முடிவு. மிக்கெல்ஸன் செய்த பரிசோதனையின் விளைவும் இதுவே.

## எடையும் இயக்கமும்

ஐன்ஸ்டைன் தம்முடைய கொள்கையிலிருந்து நிரூபித்த மற்றொரு விஷயம் இதைவிட விந்தையானது. ஒரு பொருள் நிலையாக இருக்கும்போது அதற்குள்ள பொருள் திணிவைக் காட்டிலும், அப்பொருள் இயங்கும்போதுள்ள பொருள் திணிவு அதிகமாக இருக்கும். இது நம்முடைய சாதாரண அநுபவத்திற்கு விரோதமானது; மிகவும் புரட்சிகரமான கருத்து. ஆனால், சாதாரணமாகக் காணப்படும் வேகங்களின்போது இப்படி எடையில் (பொருள் திணிவில்) ஏற்படும் வித்தியாசம் மிக மிகக் குறைவு. உதாரணமாக, மிகவும் வேகமாகச் செல்லும் துப்பாக்கிக் குண்டின் பொருள் திணிவில் அதன் வேகத்தால் ஏற்படும் வித்தியாசத்தை நம்மால் கண்டுபிடிக்க முடிவதே இல்லை. மிகமிக வேகமாக இயங்கும் மிக நுண்ணிய எலெக்ட்ரான்களின் பொருள் திணிவைக் கவனித்தபோதுதான் ஐன்ஸ்டைன் கூறிய விஷயத்தின் உண்மை முற்றும் நிரூபிக்கப்பட்டது. எலெக்ட்ரான்கள் செல்லும் வேகம் ஒளியின் வேகத்தோடு ஒப்பிடக்கூடிய அளவில் அதி விரைவானது.

## சூத்திரம்

ஒரு பொருளின் வேகத்துக்கு ஏற்ப அதன் பொருள் திணிவு எப்படி அதிகமாகி வருகிறது என்பதை விளக்கும் சூத்திரத்திலிருந்து மற்றொரு சூத்திரம் பெறப்பட்டது. அதுதான் இந்த அணுயுகத்தில் மிகவும் பிரசித்தமான சூத்திரம் என்று சொல்வது பொருந்தும். அந்தச் சூத்திரம் $E=MC^2$ என்பது. இதன் பொருள் என்னவென்றால், ஒரு பொருளின் பொருள் திணிவை (M) ஒளியின் வேகத்தின் (C) வர்க்கத்தால் ($C^2$) பெருக்கினால், அந்தப் பெருக்கல் பலன் நம்பவே முடியாத அளவு பிரம்மாண்டமானதாயும், அதற்கு ஈடானதாயும் உள்ள சக்தியைக் குறிக்கிறது. வாஸ்தவத்தில், ஐன்ஸ்டைனின் கோட்பாட்டுப்படி, பொருள் திணிவைச் சக்தியாக மாற்றமுடியும். லக்ஷ ரூபாய்க்கு எழுதப்பட்ட ஒரு செக்கை லக்ஷம் வெள்ளி ரூபாய்களாக மாற்ற முடிவது போன்ற செயல் இது. இந்த அற்புதம் உண்மைதான் என்பது ஹீரோஷீமாவில் போடப்பட்ட அணுக்குண்டின் மூலமாக மிகவும் கோரமான முறையில் நிரூபிக்கப்பட்டது. "நான் இந்தச் சூத்திரத்தை **1905**-இல் வெளியிட்டபோது, இத்துணைப் பயங்கரமான முறையில், என் வாழ்நாளிலேயே அது நிரூபிக்கப்பட்டுவிடும் என்று என் கனவில்கூட நினைக்கவில்லை" என்று ஐன்ஸ்டைன் பிற்காலத்தில் வருத்தத்தோடு கூறினார்.

## வேகத்தின் எல்லை

ஐன்ஸ்டைன் வெளியிட்ட கோட்பாட்டிலிருந்து பெறப்பட்ட மிகவும் ஆச்சரியமான மற்றோர் ஊகமும் ஒளியின் வேகத்தை ஒட்டியது. பிரபஞ்சத்தில் இயங்குபவை எல்லாவற்றிலும் மிகவும் வேகமாக இயங்குவது ஒளி. ஒளியின் வேகத்தைக் காட்டிலும் மிஞ்சிய

வேகம் எங்குமே கிடையாது; கிடைக்கவும் முடியாது. ஆதலால், நொடிக்கு 1,86,000 மைல் வேகத்தைக் காட்டிலும் எந்தப் பொருளும் இயங்க முடியாது. இந்த ஜோஸ்யம் சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் விஞ்ஞான முறையில் சொல்லப்பட்டது. இது கூறப்பட்ட பின்பு, மிகவும் வேகமாக இயங்கும் எத்தனையோ பொருள்களின் வேகங்களை - எலெக்டிரான்களின் வேகங்கள் உட்பட - விஞ்ஞானிகள் மேன்மேலும் நுட்பமாகவும் திருத்தமாகவும் அளந்து வந்திருக்கிறார்கள். இதுவரை எந்தச் சந்தர்ப்பத்திலாவது, எந்தப் பொருளாவது ஒளியின் வேகத்துக்கு மேற்பட்ட வேகத்தோடு இயங்குவதை அவர்கள் கண்டதில்லை.

## உண்மையான நீளம் என்பதே இல்லை

ஐன்ஸ்டைனின் கோட்பாட்டைக் கவனித்தால், எந்தப் பொருளுக்குமே உண்மையான (அதாவது தனித்த, அதாவது சார்பிலா) நீளம் என்பது கிடையாது என்னும் முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது. ஒரு பிளாட்பாரத்தின் அண்டையில் ஒரு ரெயில் நிற்கிறது என்று வைத்துக் கொள்வோம். அதை அளந்து பார்த்தபோது, அதன் நீளம் 1 மைல் நீளம் இருக்கிறது என்றும் வைத்துக் கொள்ளுவோம். அந்தப் பிளாட்பாரத்தில் நாம் நிற்கும்போது அந்த ரெயில் ஒளியின் வேகத்தில் $\frac{3}{5}$ பங்கு வேகத்தோடு இயங்குவதாக வைத்துக்கொள்வோம். அப்படிச் செல்லும் ரெயிலின் நீளத்தை மிகவும் திருத்தமாக அளக்கக்கூடிய கருவி ஒன்று நம்மிடம் இருப்பதாகவும், அந்தக் கருவியைக் கொண்டு அந்த ரெயிலை அளப்பதாகவும் வைத்துக்கொள்ளுவோம். அப்படி அளந்தால், அதன் நீளம் $\frac{4}{5}$ மைலாக இருக்கும். ஐன்ஸ்டைனின் சூத்திரப்படி இப்படித்தான் இருக்கவேண்டும். "இந்த இரண்டு நீளங்களில் சரியான நீளம் எது?" என்று நமக்குக் கேட்கத் தோன்றும். "அப்படிக் கேட்பது அசட்டுத்தனம்" என்கிறார் ஐன்ஸ்டைன். அந்த ரெயிலுக்கு 'உண்மையான', அதாவது, சார்பிலா நீளம் என்பது கிடையாது என்கிறார். அந்த ரெயில் இன்னும் வேகமாக ஓடியிருந்தால், அதன் நீளம் $\frac{4}{5}$ மைலைக் காட்டிலும் இன்னும் குறைந்து போகும் என்கிறார். கவனிப்பவர் இருக்கும் நிலையைச் சார்ந்து அந்த ரெயில் இயங்கும் வேகத்தைப் பொறுத்ததாகவே அதன் நீளம் காணப்படும் என்பதே ஐன்ஸ்டைன் சொல்லும், நம்பத்தகாததாகத் தோன்றும், விடை. ஆனால் அதுவே உண்மையான விடை.

## காலத்தின் சார்பு நிலை

ஐன்ஸ்டைனின் கோட்பாட்டின் விளைவுகளில் எல்லாம் மனத்தை மிகவும் திடுக்கிடச் செய்யும், அற்புதமான ஊகம் காலத்தை ஒட்டியது. காலமும் சார்புத் தன்மை உடையது. ஓர் இடத்தில் நிலையாக நிற்கும் ஒருவரால் 10 மணிநேரம் என்று மதிப்பிடப்பட்ட ஒரு கால அளவானது, மிகமிக அதிகமான வேகத்தோடு இயங்கும் ஒருவருக்கு 2 மணிநேரம் போலத் தோன்றும்.

ஓர் இளைய விஞ்ஞானி பதினேழு வயசுள்ள குமாரி நித்யா வைக் காதலித்தார். அவர்கள் ஐந்து வருஷம் பொறுத்திருந்து, பின்னர் மணம் செய்துகொள்வதாக வாக்குறுதி செய்துகொண்டார்கள். அந்தச் சந்தர்ப்பத்தில் அந்த விஞ்ஞானிக்கு ஓர் விசேஷ உத்தியோகம் கிடைத்தது. வானவெளிக் கப்பலில் ஏறி, சூரிய மண்டலத்துக்கும் அப்பாலுள்ள பிரதேசங்களை அடைந்து, குறிப்பெடுத்து வரவேண்டும் என்பதுதான் அந்த வேலை. அந்தக் கப்பல் கிட்டத்தட்ட ஒளியின் வேகத்தோடு, அதற்குச் சற்றே குறைவான வேகத்தோடு செல்லக்கூடியது.

குமாரி நித்யாவும் அவளுடைய பாட்டியாரும் அந்த வான வெளி விமான நிலையத்துக்கு வந்து, அந்த விஞ்ஞானியை வழியனுப்பினார்கள். விமானம் புறப்படும்போது தம்முடைய காதலியின் இளைய முகத்தில் அன்பும் பெருமையும் கவலையும் மாறிமாறிக் கலந்து தோன்றக் கண்டார். 'ஐந்து வருஷத்துக்குமேல் ஒரு நொடி கூடத் தாமதியாமல் அவளை மணம் செய்து வாழ்வேன்' என்று உறுதியாகத் தீர்மானித்துக் கொண்டார் அந்த இளைய விஞ்ஞானி.

அவருடைய வான்வெளிக் கப்பலிலே மிகவும் திருத்தமாக ஓடும் கடிகாரம் ஒன்று இருந்தது. அவர் அதன்படி $2\frac{1}{2}$ வருஷ காலம் வானவெளியில் பூமிக்கு அப்பால் சென்றார். இனித் திரும்பவேண்டும் என்று, $2\frac{1}{2}$ வருஷ காலம் பூமியை நோக்கி வந்து பூமியை அடைந்தார். வானில் சற்றுத் தூரத்தில் வரும்போதே கிழவி விமான நிலையத்தில் தனியாக நிற்கக் கண்டு திடுக்கிட்டார். 'நித்யாவைக் காணவில்லையே! அவளுக்கு உடல் நலமில்லையா? அல்லது இறந்துவிட்டாளா? அல்லது வேறு யாரையாவது—?' என்றெல்லாம் நினைத்துச் சஞ்சலம் அடைந்தார். விமானத்திலிருந்து இறங்கியதும் கிழவியை நோக்கி, "நித்யா எங்கே?" என்று பரபரப்போடு கேட்டார். "நான்தான் நித்யா" என்றாள் அந்தக் கிழவி.

அங்கிருந்து புறப்பட்டபோது அந்த விஞ்ஞானிக்கு வயசு 20. அவர் திரும்பி வந்தபோது அவருக்கு வயசு 25. சந்தேகமில்லை. கப்பல் கடிகாரந்தான் நிமிஷத்துக்கு நிமிஷம் கணக்கிட்டுச் சொல்லிற்றே. ஆனால், அவர் கிட்டத்தட்ட ஒளியின் வேகத்தோடு பிரயாணம் செய்திருந்தார். நித்யாவோ வீட்டிலேயே வாழ்ந்து வந்தாள். அவள் பிரயாணம் செய்யவுமில்லை; அதிவேகமாக இயங்கவும் இல்லை. ஆகையால், அவள் கணக்குப்படி அவள் காத்திருந்த வருஷம் ஐந்து அல்ல, ஐம்பது. ஆகையால், அவள் காதலர் நாடு திரும்பியபொழுது, அவளுடைய கணக்குப்படி, அவளுக்கு வயசு 67. இந்தத் தப்பான காரியத்துக்கெல்லாம் பொறுப்பாளிகள் ஐன்ஸ்டைனும் அவருடைய கோட்பாடுமே!

## முடிவுரை

ஐன்ஸ்டைன் வெளியிட்ட கொள்கைக்குச் சார்பு நிலைக் கொள்கை என்று பெயர் கொடுக்கப்பட்டது ஏன் என்பது இந்த

உதாரணங்களால் ஒருவாறு விளங்கும். பூமியில் சாதாரணமாகக் காணப்படும் நிலைகளில் பூமியிலுள்ள பொருள்கள் இயங்கும் வேகமானது, ஒளியின் வேகத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, கவனிக்க வேண்டாத அற்பமான வேகம் என்று கூறத்தக்க அளவில் சிறுமை வாய்ந்தது. ஆகையால்தான் பூமியில் சாதாரணமாகக் கவனிப்போர் அனைவருக்கும் ஒரு பொருளின் எடையும் (பொருள் திணிவும்) அளவும் எப்பொழுதும் மாறாத் தன்மையுள்ளவைகளாகத் தோற்றுகின்றன. ஆகவே, ஒரு பொருளின் அளவும் எடையும் அதைக் கவனிப்போரின் இயக்கத்தால் மாறுபடுவதில்லை என்று நாம் எண்ணுகிறோம். ஆனால் கவனிப்பவர் ஒளியின் வேகத்தோடு ஒப்பிடக்கூடிய அளவில் மிக விரைவாக இயங்குவாரானால், பொருளின் எடையும் அளவும் வித்தியாசப்படும் என்றும், அந்த வித்தியாசத்தை நம்மால் நிர்ணயிக்க முடியும் என்றும் ஐன்ஸ்டைன் காட்டியிருக்கிறார். காலத்தைப் பற்றிய விஷயத்திலும் இப்பேர்ப்பட்ட நிலைதான் காணப்படுகிறது. தனியான ஒரே நிலையில் இராமல், இவை யாவும் இயக்கத்தைச் சார்ந்தே இருப்பதாகக் காணப்படுவதால் இந்தத் தத்துவத்தை வெளியிடும் கொள்கைக்குச் சார்பு நிலைக்கொள்கை என்ற பெயர் மிகவும் பொருத்தமானது என்பதில் சந்தேகம் இல்லை. மேலே கூறிய கொள்கைக்கு விசேஷச் சார்பு நிலைக் கொள்கை என்று பெயர். நாளடைவில் ஐன்ஸ்டைன் இந்தக் கொள்கையை விரித்து, ஆகர்ஷண சக்தியையும் இதற்குள் அடங்கும்படி ஒரு கொள்கையை வெளியிட்டார். அதற்குப் 'பொதுச் சார்பு நிலைக் கொள்கை' என்று பெயர். அதற்கும் பிறகு அவர் தம்முடைய கொள்கையை இன்னும் விரித்து, மின்காந்தத் தோற்றங்களையும் இயந்திர இயல் தோற்றங்களையும் ஒன்றாக இணைத்து, 'ஐக்கியக் கோட்பாடு' என்ற ஒரு கொள்கையை வெளியிட்டார். இவை யாவும் மிகச் சிறந்த கொள்கைகள். கணிதத் துறையிலும் பௌதிகத் துறையிலும் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களுக்கும் அரிதில் விளங்கும் மிகப் பெரிய விஷயங்கள். ★

—ஜூலை, 1955.

காப்டன் என். சேஷாத்திரிநாதன்

# தெய்வ நம்பிக்கையும் வைத்தியமும்

இக்காலத்து ஜனங்களுக்குப் பொதுவில் தெய்வபக்தி குறைந்து போயிற்றே என்ற சந்தேகம் சிலருக்கு எழுகிறது. ஒரு விதத்தில் பார்க்கும்பொழுது இது உண்மையாயிருக்கலாம். பண்டை நாட்களில் ஜனங்கள் செழிப்பாக உணவு கிடைத்துச் சுகமாக வாழ்ந்தார்கள். ஆயினும், எதிர்பாராமல் பெருந் துயரங்கள் திடீரென்று நேர்ந்து வீண் பயத்திற்கு ஆளானார்கள். விஞ்ஞான முன்னேற்றம் இத்தகைய பயத்தைத் தெளியச் செய்தது. இயற்கையினால் விளையும் துயரங்களும் காரணமின்றி நேருவதில்லை என்ற அறிவை விஞ்ஞான முன்னேற்றம் எழுப்பியது; அநாவசியமான பயத்தை ஒழித்தது. விஞ்ஞான முன்னேற்றம் மக்களுடைய தைரியத்தை அளவுக்கு மிஞ்சி அதிகரித்துவிட்டதோ என்றுகூடத் தோன்றுகிறது. தெய்வ நம்பிக்கை குறைந்து போவதற்கு இதுவே முக்கிய காரணமாக இருக்கலாம்.

மனிதனுடைய நோக்கம் இயற்கையாக இரு வழிகளிலே செல்லுகிறது; ஒன்று செல்வப் பெருக்கம்; மற்றொன்று நோயற்ற வாழ்வு. பொன்னாசையினால் உலோகப் பொருள்களை எல்லாம் பொன்னாக மாற்றிவிட வேண்டுமென்ற முயற்சியில் மனிதனுடைய விஞ்ஞானப் பயிற்சி ஆதி நாட்களில் ஈடுபட்டிருந்தது. நோயற்ற வாழ்வை அடைய மனிதன் அமிருத சஞ்சீவியைத் தேடினான். இவ்விரு முயற்சிகளின் பயனாக ரசாயன விஞ்ஞானமும் வைத்திய விஞ்ஞானமும் உற்பத்தியாயின.

இப்படி ரசாயன நிபுணர்கள் ஆராய்ச்சியில் இறங்கிக் கானல் நீரைத் தொடர்ந்து செல்வதுபோல் வீண் முயற்சியில் ஈடுபட்டபொழுது, பொதுமக்கள் அஞ்ஞானத்தில் முழுகிக் கிடந்தார்கள். இவ்வுலகில் நிகழும் சம்பவங்கள் எல்லாம் விஞ்ஞான முறையில் நடைபெறுகின்றன என்பதை ஒப்புக்கொள்ளப் பொதுமக்கள் மனமில்லாதவர்கள். மிகச் சிக்கலாயிருக்கும் இயற்கைச் சம்பவங்களுக்குக் காரணங்கள் தேடி அறிவது சாதாரண மக்களுக்குச் சாத்தியம் அன்று.

எந்தக் காரியத்திலும் முனைந்து புத்தி வேலை செய்யுமுன்னே மனோவிகார இயக்கம் முற்பட்டு நிற்கும். விஞ்ஞான ரீதியில் புத்

தியை வேலை செய்யவிடாமல் அடக்கிவிடும். மனிதனுடைய செயல்களும் கொள்கைகளும் இப்படி மனோவிகார இயக்கத்துடன் கலவையாகவே இருக்கும். மனிதன் குழந்தையாயிருக்கும்பொழுது, பெற்றோருடைய அன்பிற்குப் பிற பிராணிகளைவிட அதிக அளவில் பாத்திரமாயிருக்கிறான். ஆகையால் பிற பிராணிகளைவிட மனிதன் பெற்றோரிடமிருந்து வேண்டியதை எல்லாம் முரண்டிச் சாதித்துக்கொள்கிறான். தன் இஷ்டத்தை நிறைவேற்றிக்கொள்ளத் தாயிடம் முரண்டுவதுபோல இயற்கை மாதாவிடம் இஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று நினைக்கிறான். இஷ்டம் நிறைவேறாமற்போனால் முரண்டு செய்வதுபோல அலறுவான்; கோபித்துக் கொள்வான்; கொஞ்சிக் கேட்டுக்கொள்வான்.

குழந்தையின் சந்தோஷத்திற்கெல்லாம் தாயே முக்கியக் காரணம். முற்றும் பாதுகாப்பில்லா நிலைமையில் இருக்கும் குழந்தையைக் கண்டு அன்பும் கருணையும் பூணாதவர்கள் யார் உண்டு? அப்படி அன்பு பாராட்டும்பொழுது அந்த அன்புக்குப் பிரதியாக ஒன்றுமே தாய் எதிர்பார்ப்பதும் இல்லை. ஆனால் குழந்தைக்கு இப்படிப் பெற்றோருடைய பாதுகாப்பும் அன்பும் இருப்பதனாலே, அதன் செய்கை வேறொரு விதத்தில் இயங்குகிறது. தாய் தன் அன்புக்குப் பிரதியாக ஒன்றையும் எதிர்பாராது இருப்பதால், குழந்தை தாயினுடைய அன்பைத் தன் இஷ்டப்பட்ட அளவுக்குப் பயன்படுத்திக் கொள்கிறது; சாதனை செய்து இஷ்டத்தை நிறைவேற்றிக்கொள்ளுகிறது. இத்தகைய குழந்தைத்தன்மை முதுமைப் பருவத்திலும் வெளிப்படும்.

பண்பில்லாத பிராசீன மனிதன் முதுமைப் பருவம் அடைந்தும், புத்திப் பயிற்சியில்லாமல் குழந்தை போலவே நடந்துகொள்வான். தன் விருப்பம் நிறைவேறாவிட்டால் கோபித்துக் கொள்வான். கண்ணுக்குப் புலப்படாத ஒரு தந்தை இருப்பதாயும், அந்தத் தந்தையினுடைய கோபத்திற்கு ஆளாக வேண்டுமென்ற ஒரு பயமும் அவனுக்கு உண்டாகும். ஆகவே சமூகக் கட்டுப்பாட்டுக்கு இணங்கி, அறியமுடியாத இயற்கைத் தந்தையின் கோபத்திற்கு ஆளாகக்கூடாதென்று தன் நடத்தையை எல்லாம் சீர்திருத்திக் கொள்வான். இப்படித் திருத்திக்கொண்டும் இயற்கையின் சிக்ஷைக்கு ஆளாகிறான். அப்பொழுது தந்தையின் கோபத்திலிருந்து தப்பித்துக்கொள்ளத் தாயை நாடுவதுபோல் இயற்கை அன்னையின் அன்பை நாடுகிறான்.

பிராசீன வைத்திய முறையும் பரிகாரங்களும் இத்தகைய மனப்பான்மையைச் சார்ந்து அமைந்திருந்தன. விரும்பினவுடனேயே எது வேண்டுமானாலும் கிடைக்கும் என்ற குழந்தையின் மனப்பான்மையையுடைய பண்பற்ற மனிதன், செல்வமும் ஆரோக்கியமும் அடையத் தனக்கு உரிமையுண்டு என்று எண்ணுகிறான். விரும்பியபடி இவை கிடைக்காமல் போகும்பொழுது, அறியாமல் தான் தவறு ஏதோ செய்ததாகவும், அதற்குத் தகுந்த

சிக்ஷை கிடைத்ததாகவும், அதனாலேயே நோயும் வறுமையும் உண்டாகியிருப்பதாகவும் சிந்தித்துத் துயரம் அடைகிறான். மந்திர வாதத்தில் நம்பிக்கை உண்டாகிறது. இத்தகைய மனநிலைக்கு மூலகாரணமான தந்தையின் கோபாவேசத்தினாலே விளைந்த பயம், இறந்துபோன மூத்தோர்களிடமிருந்தும் விளையக்கூடும் என்று சிந்தித்து, அவர்களைத் தெய்வங்களாகக் கொண்டாடும் பழக்கம் உண்டாகிறது. சுகாதார விதிகள், சடங்குகள் எனவெல்லாம், இத்தகைய கொண்டாட்ட முறைகளில் கலவையாயிருக்கின்றன. வருஷாந்தரச் சடங்குகள் நடைபெறுவதோடு, பிதிருக்கள் திருப்தியடையாமல் கோபம் கொண்டிருக்கலாம் என்று எண்ணி அவர்களைத் திருப்தி செய்ய விசேஷச் சடங்குகள் நடத்துவார்கள்.

காலரா, வைசூரி, பிளேக் போன்ற கொடிய பெருவாரி நோய்கள் தோன்றுவதெல்லாம் லோகமாதாவினுடைய உக்கிரமான கோபத்தின் அடையாளம் என்று மக்கள் சிந்தித்தார்கள். கருணை வடிவாகிய தாயும் உக்கிரமான கோபத்திற்கு ஆளாகலாம். தன் குழந்தைக்கு அபாயம் நேரும்பொழுது அவள் கோபம் பயங்கர நிலையை அடையலாம். பெருவாரி நோய்கள் சமூகம் முழுவதையும் பற்றிக் கொள்ளுவதனாலே, பரிகார முறைகளையும் பெரிய அளவில் சமூகமே ஒன்று சேர்ந்து செய்ய நேருகிறது.

தெய்வங்களுக்கு விலை பெற்ற சாமான்களும், ஆபரணங்களும் கோயில்களில் காணிக்கைகளாகப் போய்ச் சேரும். சிலர் புதிய கோயில்களைக் கட்டுவார்கள். பழைய கோயில்களைப் புதுப்பிப்பார்கள். தெய்வ வழிபாடு, சொத்தையெல்லாம் இழப்பதோடு உடலுக்குத் துன்பங்களை ஏற்றுக்கொள்வதாக முடிவதும் உண்டு.

இத்தகைய செய்கைகளுக்கு வேறொருவித மனப்பான்மையும் காரணமாகும். சமூகத்தில் உயர்நிலை அடைய வேண்டுமென்ற விருப்பமும் இத்தகைய ஆத்ம ஹிம்சைக்குக் காரணமாகலாம். நெருப்பில் நடப்பது, கன்னத்தில் ஊசி குத்திக்கொள்வது, ஆணி மேல் படுத்துக் கிடப்பது முதலிய துன்பங்களைச் சுயமாகவே விளைத்துக் கொள்வதும் இப்படிச் சமூகத்தினுடைய வியப்பை எழுப்பித் தங்களை உயர்த்திக் கொள்ளவேண்டும் என்ற காரணத்தினால்தான்.

ஒழுக்கம் என்பது தனி மனிதனைச் சமூக வாழ்க்கையில் இணங்கச் செய்கிறது. ஒழுக்கத்தை அமலுக்குக் கொண்டுவரத் தெய்வ நம்பிக்கை உபயோகமாயிருக்கிறது. தனி மனிதன் சமுதாய வாழ்க்கைக்கு விரோதமாக ஒரு காரியமும் செய்யக்கூடாது என்றே பல நியமங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

குழந்தைகளிடம் சில காரியங்களைச் செய்யக்கூடாது என்று சொன்னால், அவற்றைத் தாங்கள் செய்யாமல் இருப்பதோடு, வேறு குழந்தைகளையும் செய்யக்கூடாது என்று தடுப்பார்கள். அப்படியும் செய்யும் குழந்தைகள் இருந்தால் அவர்களைவிடத் தாங்கள் சமர்த்

தார்கள் என்று பெருமை பாராட்டிக்கொள்வார்கள். வழிபாடு களும் விரதங்களும் செய்வதில் இத்தகைய மனப்பான்மையைக் காணலாம்.

இத்தகைய நம்பிக்கைகளை மக்களிடமிருந்து ஒழிக்க முயலு வது எப்பொழுதும் முடியாத காரியம். அப்படிப் பலாத்காரமாய் ஒழிக்க முயலுவதும் நலத்தை விளையாது.

ஒழுக்கக் கட்டுப்பாடுகளை அநுசரிப்பதில் ஒரு வகையான கௌரவம் ஏற்படுகிறது. பண்பற்ற மனிதனுடைய மனம் இதற் கெல்லாம் இணங்கும். ஆகையால், சுகாதார அநுஷ்டானங்களை விஞ்ஞான முறையில் உரைக்காமல், இது பாவம், இது புண்ணியம் என்று கட்டுப்பாடுகளாக நம் பெரியோர்கள் உரைத்திருக்கிறார் கள். பண்பில்லாத பாமர ஜனங்களுக்கு இந்தக் கட்டுப்பாடுகள் நன்றாய் ஏற்கும்.

வைத்தியம் செய்யும் வைத்தியனுக்கு மருந்திலும் வைத்திய முறையிலும் முழு நம்பிக்கை ஏற்படுவதில்லை. நோய் தானாகவே ஒரு பகுதி குணமாகலாம், ஒரு பகுதி குணமாகாமலே இருந்துவிட லாம்; ஆகையால் வைத்தியன் தெய்வ நம்பிக்கையையும் உபயோ கித்து நோயாளிக்குச் சிகிச்சை செய்யும் அவசியம் நேருகிறது.

வைத்தியனிடமும், வைத்தியனுடைய திறமையிலும் நோயா ளிக்கு நம்பிக்கை இருக்க வேண்டியது இன்றியமையாதது. விஞ் ஞான முறை எவ்வளவோ முன்னேற்றம் அடைந்த போதிலும், வைத்திய முறைகள் முற்றும் விஞ்ஞான முறைகளை அநுசரித்துப் போவதில்லை. அநுபவ ஞானத்தினாலேயே நடைபெற்று வரு கின்றன.

வைத்தியம் எவ்வளவு தூரம் விஞ்ஞானத்தோடு இணைந்திருந் தால் என்ன? சிகிச்சை செய்வதையும் விஞ்ஞான முறையில் வைத் தியன் திருப்ப முயன்றால் என்ன? வைத்தியம் செய்வது விஞ்ஞான முறையை முற்றும் அடையாது. முற்றும் விஞ்ஞான முறையை அநுசரித்து வைத்தியம் செய்ய முற்படுகிற வைத்தியன் சிகிச்சை செய்வதில் வெற்றி அடையமாட்டான். சில நோய்கள் விஞ்ஞான முறையில் செய்யும் வைத்தியத்துக்கு இணங்கும். சில நோய்கள் அப்படி இணங்குவதில்லை. மனத்தை இயக்கும் செயல்கள் மனத்தை மாத்திரமே இயக்கிவிட்டு நின்றுவிடுவதில்லை; உடலையும் இயக்கிச் சுக நிலையைக் குலைத்து விடுகின்றன. உடல் வாதையினால் மனம் சோர்வு அடையும்பொழுது, தெய்வ நம்பிக்கை உதவிக்கு வரு கிறது. வைத்திய விஞ்ஞானி தன் விஞ்ஞானப் பயிற்சியைக் கொண்டு வைத்தியம் செய்தாலும், நோயாளிக்கு நோய் குணமாகா மல் இருக்கும் நிலையிலே, சாதாரணமான ஒருவன் தெய்வ நம்பிக் கையை மூட்டி நோயாளியின் மனத்தைத் திருப்பி நோயைக் குண மாக்கிவிடுகிறான்.

நோயாளி திறமையற்றவன். பிறருடைய கருணையையும் உதவியையும் எதிர்பார்ப்பவன். வைத்தியன் நோயைக் குறிப்பாய்ப் பார்க்கிறான்; ஆகையால் நோயாளியையே மறந்துவிடக் கூடும். நோயினால் விளையும் மன இயக்கங்களையும் வைத்தியன் கவனிக்க வேண்டிய அவசியம் உண்டு. மன இயக்கங்களைச் சீராக்கி விடுவான். அப்பொழுது நோய் தானாகவே குணமாகக்கூடும்; அல்லது நோயாளிக்கு நோயினுடைய துன்பங்களைத் தாங்கிக் கொள்ளும் சக்தி உண்டாகும். வைத்திய விஞ்ஞான முறையில் நோயைப்பற்றி வைத்தியன் விவரித்தபோதிலும், வைத்தியனிடம் பூரண நம்பிக்கை வைக்காமல் இருந்துவிடலாம். அப்பொழுது நோய் எப்படிக் குணமாகும்? ஆரோக்கியம், அனாரோக்கியம் என்ற சொற்களுக்குத் திட்டமான பொருளை வரையறுத்து உரைக்க முடியாது. தேகம் எப்பொழுதுமே நிலையற்று இருக்கிறது. வேற்றுமைப் பட்டுக் கொண்டே இருக்கிறது. அவ்வப்போது இருக்கும் இயக்கங்களைக் கணக்கிட்டு, ஆரோக்கிய நிலை இருப்பதை அறிந்துகொள்ள வேண்டும். திட்டமான சுக நிலை என்பதே கிடையாது. குழந்தைப் பருவத்தில் போஷிப்பு வசதிகள் அகப்படும்பொழுது, வளர்ச்சி வேகத்தினால், அனாரோக்கிய நிலையில் அதிக நேரம் இராதபடி ஆரோக்கிய நிலையிலேயே திரும்ப வந்துவிடும். யௌவன தசையில் திடீரென்று விளையும் மாறுபாடுகளினால் சுக நிலை அடிக்கடி குலைந்து போகலாம். மூப்படையும் காலத்தில் சுக நிலை கீழ்நோக்கிச் செல்லும்; அனாரோக்கியம் எப்பொழுதும் தோன்றிக்கொண்டே இருக்கும்.

யௌவனத்திலும் முதுமையிலும் மனத்தையும் தேகத்தையும் ஆரோக்கியமாக வைத்துக்கொள்ளத் தெய்வ நம்பிக்கை தேவை. முதுமைப் பருவத்தில் மூளையின் இயக்கம் சீரான அளவில் இருந்தும், உடல் வலிமை குன்றிப் போவதனாலே, தத்துவ விசாரணை இன்றியமையாத தேவையாகிறது. உடல் வலிமை குன்றிப்போவதை அறிந்து அதற்குப் பரிகாரமாக மனநிலையை ஆரோக்கிய அளவிலேயே வைத்துக்கொள்வது அவசியமாம். இல்லாவிடில் மனத்தால் தாக்குப் பிடிக்க முடியாமல் உடல் வலிமை குன்றிப் போய் அழிந்துவிடும்.

ஆகையால் தெய்வ நம்பிக்கை, தத்துவ விசாரணை என்பவையெல்லாம் சாதாரண மனிதர்களுக்கு எல்லாப் பருவங்களிலும் வாழ்க்கையைச் சுகமாக வைத்துக்கொள்ள இன்றியமையாதவையாக இருக்கின்றன.

★

—ஜனவரி, 1949.

மோ. ஸ்ரீ. செல்லம்

# அணுவின் தத்துவம்

**அ**றிவு தொடங்கிய நாள் முதற்கொண்டே மனிதன் பொருள்களின் தத்துவங்களை ஆராயத் தொடங்கிவிட்டான். முதலில் இந்த ஆராய்ச்சி ஐம்புல எல்லைக்குள் அடங்கியதாகவே இருந்தது. பிறகு விஞ்ஞான ஆராய்ச்சியும் சாதனங்களும் வளர வளர இந்த ஆராய்ச்சி சோதனைச் சாலை ஆராய்ச்சியாகிப் பல அரிய உண்மைகளை உலகுக்குத் தந்திருக்கிறது.

மாறுதலையே தன் இயற்கையாகக் கொண்ட இந்த உலகத்திலும் ஒழுங்கான ஏதோ ஒரு சட்டம் ஊடுருவி நிற்கத்தான் வேண்டுமென்பதைச் சிறந்த அறிவாளிகள் உணர்ந்தார்கள். இதை ஆதாரமாகக் கொண்டே ஹிந்துக்கள் அணுத் தத்துவம் ஒன்றைப் பல நூற்றூண்டுகளுக்கு முன்பே கற்பித்தார்கள். இந்தக் கொள்கைப்படி ஒவ்வொரு மூலப் பொருளும் அணுக்கள் என்ற பல சிறு அமைப்புக்களால் ஆனவை. இந்த அணுச் சேர்க்கையின் விகிதாசாரமே பேதத்துக்குக் காரணம் என்றனர். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பூதங்கள் அணுக்களாகப் பலவேறு விகிதாசாரத்தில் கலப்பதே பல வேறு பொருள்களுக்குக் காரணம் என்றனர். ஒவ்வொரு பொருளிலும் இந்த ஐந்து ஆதார அணுக்களும் இருக்கின்றன என்றனர். பொருளின் அழிவு என்பது இந்த அணுக்கள் கட்டுவிட்டுப் பிரிந்து பஞ்ச பூதங்களோடு கலந்துவிடுவதே என்பர்.

அணுவுக்கு ஏற்பட்ட 'ஆடம்' (Atom) என்ற பெயர் கிரேக்கப் பெயர்; பிரிக்க முடியாதது, வெகு வேகமாக இயங்கிக் கொண்டிருப்பது என்பது இதன் பொருள். கிரேக்கர்களும் இந்துக்களைப் போலவே இந்த அணுக்களின் வீதாசாரக் கலப்பே பொருள் வேற்றுமைக்குக் காரணம் என்றனர். இன்றைக் கொள்கையும் இதுதான். முன்னது வெறும் அறிவாராய்ச்சியால் மட்டுமே உருவானது. பின்னது சோதனைக் களத்தில் பல சோதனைகளுக்குப் பின் உருவானது.

இந்தப் புது அணுவாத வளர்ச்சிக்குச் சோதனை வாயிலாக அஸ்திவாரம் வகுத்துத் தந்தவர்கள் இங்கிலாந்து விஞ்ஞானிகளாகிய ராபர்ட் பாயில் (*1627-91*) என்பவரும், ஜான் டால்டன்

(1766-1844) என்பவருமே. இவர்களுள் பாயில் என்பவரே மூலப்பொருள் (பிற பொருள் கலப்பில்லாதது, Element) என்ற பகுப்பையும் கண்டுபிடித்தார். டால்டன், தம் ஆராய்ச்சிகளின் மூலமாக இரண்டு மூலப்பொருள்கள் ஒன்றோடொன்று கலந்து ஒரு கூட்டுப் பொருள் ஆகும்போது குறிப்பிட்ட ஒரு கன விகிதத்திலேயே சேருகின்றன என்பதையும் கண்டு வெளியிட்டார். உதாரணமாக ஹைட்ரொஜன் என்ற நீர்வாயு, ஆக்ஸிஜன் என்ற பிராணவாயுவோடு கலந்து கூட்டுப் பொருளாகிய நீர் ஏற்பட வேண்டுமானால் ஒன்றுக்கு எட்டு என்ற கன விகிதாசாரத்தில் தான் அணுக்கள் சேர வேண்டும். ஒவ்வொரு மூலப்பொருளின் அணுவும் கனத்தினால் வேறுபாடு உடையது. ஒரே கனமுள்ளனவாக இரண்டு மூலப் பொருள்களை எடுத்து ஆராய்ந்தால் இரண்டிலும் உள்ள அணுக்களின் எண்ணிக்கை வேறு வேறாக இருக்கும். கூட்டுப் பொருள்களைப் பிரித்தால் மூலப் பொருள்கள் இரண்டோ பலவோ ஆகும். மூலப் பொருள்களை மீண்டும் பிரித்து வேறு பொருள்களைப் பெற முடியாது.

மூலப் பொருள்களின் அணு ஒவ்வொன்றிலும் மூலப் பொருளின் தன்மைகளெல்லாம் அமைந்திருக்கின்றன. இவ்வாறு ஒரு மூலப்பொருளின் அணுக்களும் வேறு மூலப்பொருளின் அணுக்களும் சேர்ந்து ஆகும் கூட்டுப் பொருளின் கீழிலக்க (Unit)த்தை மாலிக்யூல் (Molecule) என்பர். மூலப் பொருளின் கீழிலக்கம் ஆடம் அல்லது அணு. அணுக்கள் சேரும்போது எடை விகிதத்திலேயே சேருகின்றன. இரண்டு ஹைட்ரொஜன் அணுவும் ஒரு பிராணவாயுவின் அணுவும் சேர்ந்து ஒரு மாலிக்யூல் நீராகும். இதன் விகிதாசாரம் ஒன்றுக்கு எட்டு என்று இருப்பதால், ஒரு பிராணவாயு அணுவின் கனம் ஒரு ஹைட்ரொஜன் அணுவின் கனத்தைப்போல் 16 பங்கு என்பது பெறப்படுகிறது. ஹைட்ரொஜன் அணு ஒன்றன் எடை பிராணவாயு அணு எடையில் $\frac{1}{16}$. இரண்டு ஹைட்ரொஜன் அணுவின் எடை $\frac{1}{16}+\frac{1}{16}=\frac{1}{8}$. எனவே இரண்டு ஹைட்ரொஜன் அணுவின் எடைக்கும் ஒரு பிராணவாயு அணுவின் எடைக்கும் உள்ள விகிதாசாரம் 1 : 8.

**அணு எடை:** மூலப் பொருள்களின் அணு எடையை எப்பொழுதும் ஹைட்ரொஜன் அணு எடையோடு ஒப்பிட்டு இவ்வளவு மடங்கு என்றே சொல்வது வழக்கம். ஹைட்ரொஜன் அணுவின் எடையே அணு எடையின் கீழிலக்கம். பிராணவாயுவின் அணு எடை 16. இந்த அணு எடை மிகவும் நுண்ணியது. இதை நிறுத்துச் சொல்வது என்பது மிகக் கடினம். நிறுப்பதற்குரிய எடை வேண்டுமானால் பல கோடி அணுக்கள் சேர்ந்த ஓர் அமைப்பு வேண்டும். ஒரு கிராம் தங்கத்தில் சுமார் 3000000000000000000000 அணுக்கள் இருக்கின்றன! (மூன்று கோடியே, கோடி கோடி அணுக்கள்!)

மூலப் பொருள்கள் தெரிந்த வரையில் 92 இருப்பதாகக் கணக்கிட்டிருந்தார்கள்; இன்று 94 என்பர். மிகவும் லேசானது

முதற் படியிலுள்ள ஹைட்ரோஜன். மிகவும் கனமானது 92-ஆம் படியிலுள்ள யுரேனியம்.

ஒவ்வோர் அணுவும் மூன்று முக்கிய பாகங்களால் ஆனது. இதன் மையத்தில் ப்ரோடான் (Proton) என்ற ஓர் அம்சம் இருக்கிறது. இது ஒரு சிறு சூரியன் போன்று மையத்தில் நிற்கிறது. இதில் பாஸிடிவ் அல்லது நேர் மின்சாரம் இருக்கிறதாம். ஓர் அணுவில் உள்ள ப்ரோடான்களின் கணக்கே அது எத்தனையாவது மூலப்பொருள் என்பதைக் காட்டும். ஒரு புரோடான் குறைந்தாலும் அதிகரித்தாலும் வேறு ஒரு மூலப் பொருள் ஆகிவிடும். ஹைட்ரொஜன் அணுவில் ஒரே ஒரு புரோடான்தான் இருக்கிறது. ஓர் அணுவானது ஒரு பெரிய கோபுரமானால் புரோடான் அதன் நடுவில் பறந்துகொண் டிருக்கும் ஓர் ஈ அளவாகும்.

புரோடானைச் சுற்றி வெகு தூரத்தில் வட்டமிட்டுக்கொண்டிருக்கும் சக்தியாகிய (Energy) மற்றோர் அம்சமே எலெக்ட்ரான் (Electron) எனப்படும். இது புரோடானை விட 1840 மடங்கு சிறியது. இதற்குக் கனம், உரு என்பதே இல்லை எனலாம். இதில் நெகடிவ் அல்லது எதிர் மின்சாரம் இருக்கிறதாம். இந்த எதிர் மின்சாரச் சக்தியின் அளவும் புரோடானின் நேர் மின்சாரச் சக்தியின் அளவும் சமம். எனவே அணுவில் எவ்வளவு புரோடான்கள் உண்டோ அவ்வளவே எலெக்ட்ரான்களும் இருக்கும். இவைகளுக்கு இடையே உள்ளது காலி வெளி.

நியூட்ரான் (Neutron) என்பது அணுவின் மூன்றாவது ஆதார அம்சம். இதன் உண்மையை 1932-இல்தான் கண்டுபிடித்தார்கள். இதில் மின்சாரச் சக்தியே இல்லை. இது புரோடானை விடச் சற்றுக் கனமானது. ஒரு நியூட்ரான் அல்லது நியூட்ரான்கள் அதிகப்பட்டாலோ குறைந்தாலோ மூலப்பொருளின் தன்மை மாறாது. ஆனால் இனப் பொருள் உண்டாகும்; அதே இனத்தில் சற்றுக் கனத்த பொருள் அல்லது லேசான பொருள் தோன்றும்.

ஒரே ஒரு புரோடானும் ஓர் எலெக்ட்ரானும் அமைந்த அணு ஹைட்ரொஜன் அணு. புரோடானை இரண்டாக்கினால் உடனே இது ஹீலியம் என்ற இரண்டாவது மூலப் பொருள் ஆகிவிடும்.

இவ்வாறு புரோடான் எலக்ட்ரான் நியூட்ரான்களால் ஆன அணுக்களால் அமைந்த மூலப் பொருள்களுள் ஒன்று யூரேனியம் என்பது. இந்த மூலப்பொருளில் ஒரு வகை ஒளிச் சிதறல் (Radio activity) ஏற்படுவதைக் கண்டனர். இந்தச் சிதறலை ஆல்பா (Alpha), பீடா (Beta), காமா (Gama) க் கதிர்கள் என்று வகைப்படுத்தினர். இந்த ஆல்பா பீட்டாக் கிரணங்கள் சிறு அணுத் துண்டுகளே. இவை ஒளியின் வேகத்தில் சிதறுவதே சுடரும் காரணம் என்றும் கண்டனர். யூரேனியக் கனிப்பொருளில் அதனிலும் தீவிரமாக ஒளியைச் சிதறும் வேறு ஒரு மூலப்

பொருளைக் கண்ட க்யூரி அம்மையார் அதற்கு ரேடியம் என்று பெயரிட்டனர்.

யுரேனியம், ரேடியம் போன்ற மூலப் பொருள்களில் காணும் ஒளிச் சிதறல் அணுப்பொடிச் சிதறலே என்பதன் பொருள் என்ன? இவைகள் அழியாத மூலப்பொருள்கள் அல்ல, மாறும் மூலப்பொருள்கள் என்பதே. ரேடியம் ஒளிச் சிதறலால் ரேடான் என்ற வாயு மூலப் பொருள் ஆகிறது. இவ்வாறு மாறிக்கொண்டே போய்க் கடைசியில் இது ஈயம் என்ற மூலப்பொருள் ஆகிவிடுகிறது என்று கண்டனர். இந்த மாறுதல் குறிப்பிட்ட காலக் கணக்குக்குக் கட்டுப்பட்டு நிகழ்கிறது. ஓர் அளவு ரேடியத்தில் பாதி ரேடானாக மாற 600 வருஷங்கள் ஆகின்றன. இந்த ரேடானில் பாதி அடுத்த மூலப்பொருளாக மாற 3·8 நாட்கள் ஆகின்றன. இந்த மாறுதலிலிருந்து ஓர் உண்மை விளங்குகிறது. அணு என்பது மாறாப் பொருளன்று; ஒரு வகை மாறும் பொருள் கூட்டம் என்பதே அது.

இந்த உண்மையே அணு ஆராய்ச்சிக்கு மிகுந்த ஊக்கம் கொடுத்தது. யுரேனியம் ரேடானாகி ஈயமும் ஆகுமானால் இந்த மூன்று மூலப்பொருள்களின் தன்மையும் யுரேனியம் அணுவில் இருக்க வேண்டுமே? எனவே அணுக்களுக்கென்று தனியான பொருள்தன்மை ஒன்று இல்லை. இவைகளின் விகிதாசாரச் சேர்க்கையும் அமைப்பு முறையுமே பல மூலப் பொருள்களுக்குக் காரணம் என்று முடிவு கட்டினர். யுரேனியம் ஈயமாகும் காரியம் படிப்படியாக நடைபெறுகிறது. ஆல்பா அல்லது பீட்டாக்கிரணங்களை வெளிவிடுவதால் அடுத்தபடியில் உள்ள பொருளாக மாறி மாறிக் கடைசியில் மாறாப் பொருளான ஈயமாகிறது.

மின்சார அணுவைப் பற்றியும் நாம் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டும். குறைக்க முடியாத அளவு சிறிய மின்சாரச் சக்தியே இவ்வணு. இது நேர்முக மின்சாரமானால் இதை ஹைட்ரொஜன் அணுவைவிடக் குறைந்த பரிமாண அணுவோடு சேர்க்க முடியாது. ஆனால் இதுவே எதிர்மின்சாரமானால் இதைத் தாங்கும் அணுவின் பரிமாணம் ஹைட்ரொஜன் அணுவின் பரிமாணத்தில் 1800 இல் ஒரு பங்கே இருக்கிறது. இந்த எதிர்முக மின்சார அணுவுக்கே எலக்ட்ரான் என்று பெயர். இதன் ரேடியஸ் அல்லது ஆரை ஹைட்ரொஜன் அணுவின் ஆரையைப் போல் 50,000 மடங்கு சிறியது.

அணு அமைப்பில் நேர்முக எதிர்முக மின்சார அணுக்களும் முக்கியமாக இடம் பெறுகின்றன. சாதாரணமாக வஸ்து மின்சாரமற்றது. வஸ்து அணுவும் அப்படியே. அதாவது இதன் நேர்முக மின்சார அணுக்களும் எதிர்முக மின்சார அணுக்களும் சமம்.

ஒவ்வோர் அணுவின் ஆதாரமும் சில நேர்முக மின்சாரப் புரோடான்களாலும் (இந்த எண்ணே மூலப்பொருளின் எண்.)

அதே அளவுள்ள எதிர்முக மின்சார எலக்ட்ரான்களாலும் ஆனது என்று கண்டோம். ஹைட்ரொஜன் ஒரு நேர்முகப் புரோடானாலும் ஓர் எதிர்முக எலெக்ட்ரானாலும் ஆனது. ஹீலியம் இரண்டு நேர்முகப் புரோடான் இரண்டு எதிர்முக எலெக்ட்ரான்களால் ஆனது. 92 ஆவது படியிலுள்ள கனம் மிக்க யுரேனியத்தில் 92 நேர்முகப் புரோடான்களும் 92 எதிர்முக எலெக்ட்ரான்களும் இருக்கின்றன.

ஆல்பாத் துணுக்கு என்பது ஹீலியத்தின் ஆதார மையமான புரோடான்களே. ஆனால் இவற்றைச் சுற்றிலும் சுழலும் எதிர்முக மின்சார எலெக்ட்ரான்கள் இல்லை. இது வெகு வேகத்தோடு பாயும் இயல்புடையது.

அணுவும் ஆல்பாத் துணுக்குகளும் தாக்குண்டால் ஆல்பாத் துணுக்குகள் நேர்ப்பாதையிலிருந்து மிக விலகுகின்றன. இரண்டு மின்சாரமும் நேர்முகமாக இருப்பதே இதற்குக் காரணம். ஒரே முக மின்சாரங்கள் ஒன்றை ஒன்று விலக்கும் இயல்புடையன. இவ்வாறு ஆல்பாத் துணுக்குகளை நேர்ப்பாதையிலிருந்து விலக்க வேண்டுமானால் இவற்றை அணுமையப் புரோட்டான்களில் தாக்க வேண்டும். இந்தத் தாக்குதலுக்கு இடம் வேண்டும். இந்தத் தாக்குதல் அணு ஆரை (Radius) யில் 10,000 இல் ஒரு பங்கான இடத்தில் நிகழ்கிறது! எனவே ஆல்பாத் துணுக்கின் ஆரை, அணு ஆரையில் 10,000 இல் ஒரு பங்காகவே இருக்க வேண்டும். ஓர் அணுவின் பரிமாணம் மையப் புரோடான்களுக்கும் அதைச் சுற்றும் எலக்ட்ரான்களுக்கும் இடையே உள்ள தூரத்தைப் பொறுத்தது. இந்தத் தூரத்தைப் பார்க்கும்பொழுது எலெக்ட்ரான்கள் கணக்கிலேயே சேருவதில்லை.

அணுமையம், புரோடான்களால் மட்டுமே ஆனதா? வேறு பொருள்களும் உளவா? புரோடான்களால் மட்டுமே ஆனதென்றால் இந்தப் புரோடான் எண்ணிக்கையே அணு எடையும் (Atomic weight) ஆகவேண்டும். ஆனால் உண்மை வேறு. இந்த எடை அதிகப்படுகிறது. பிராணவாயுவின் படி (Scale) 8. அதாவது அணு மையத்தில் 8 புரோடான்கள் உள. ஆனால் இதன் அணு எடை 16. எனவே எடையை மட்டும் உயர்த்தி, ஆனால் மின்சார சக்தியைப் பாதிக்காத வேறு அணுக்களும் சேர்ந்திருக்க வேண்டும். இவைகள் மின்சார ரகித அணுக்களாகிய நியூட்ரான்கள். நியூட்ரான்களைப் பிரித்து எடையை ஆராய்ந்த போது ஒரு நியூட்ரானின் எடை ஒரு ஹைட்ரொஜன் அணு எடைக்குச் சமமாயிருந்தது. அதாவது ஒரு புரோடான் எடைக்குச் சமமாயிருந்தது. எனவே ஒரு மூலப்பொருளின் நியூட்ரான் எண்ணிக்கை தெரிய வேண்டுமானால் மூலப் பொருள் படியில் அதன் எண் (புரோடான் எண்ணிக்கை), அதன் அணு எடை இரண்டும் தெரிந்தால் இவற்றின் வித்தியாசமே நியூட்ரான் எண்ணிக்கை யாகும். ஹைட்ரொஜனில் ஒரே புரோட்டான்தான்;

நியூட்ரான் இல்லை. இரண்டாம் படியிலுள்ள ஹீலிய அணு எடை 4. எனவே இதில் 4—2=2 நியூட்ரான்கள் உள. 92 ஆவது படியிலுள்ள யுரேனியத்தின் அணு எடை 238; எனவே இதில் (238—92) = 146 நியூட்ரான்கள் உள்ளன.

இவ்வளவு அணுத் துணுக்குகளும் அணுமையத்தில் சேர்ந்திருப்பதற்கு இணைக்கும் சக்தி ஒன்று வேண்டுமே; அணுமையப் புரோட்டான்களின் மின்சாரசக்தியும் இவற்றைச் சுற்றி வேகமாக ஓடும் எலெக்ட்ரான்களால் ஏற்படும் மையநோக்குச் சக்தியுமே (Centrifrugal force) இவற்றை அவ்வளவு சிறிய இடத்தில் பிணைத்து நிறுத்துகின்றன. அணுமைய மின்சாரச் சக்தியே அதிகம். எலெக்ட்ரான் ஓட்ட சக்தி வெறும் துணைச் சக்தியே.

ஒவ்வொரு மூலப் பொருளின் புரோடானின் எண்ணிக்கைக்கும் ஒரு கணக்கு இருப்பதுபோல நியூட்ரான் எண்ணிக்கைக்கும் மாருத கணக்கு உண்டு என்று பல விஞ்ஞானிகள் நம்பினர். ஆனால் இது தவறு என்பது தெரிந்துவிட்டது. மையப் புரோடான் ஒரே எண்ணிக்கையாகவே இருக்க நியூட்ரான் எண்ணிக்கை ஓர் எல்லைக்குள் மாறலாம். இந்த மாறுதலால் பொருள்தன்மை மாருதெனினும் அப்பொருளின் இனப் பொருள்கள் (Isotopes), எடையில் மாறுபட்டவை, தோன்றும். ஒரு புரோடானோடு ஒரு நியூட்ரான் சேர்ந்த கனத்த ஹைட்ரொஜன் என்ற இனப் பொருள் ஒன்றும் உண்டு.

இவ்வாருகப் புரோடான் நியூட்ரான்களாலான அணுமையத்தை உடைப்பதற்குச் சக்தி வேண்டும் என்பதையும் இப்படியே இவற்றைச் சேர்க்கும்பொழுது எவ்வளவு சக்தி வெளிப்படும் என்பதையும் நாம் ஒருவாறு அறியலாம்.

பரிமாணத்தைச் சக்தியாக - உஷ்ண சக்தி அல்லது மின்சாரச் சக்தியாக - மாற்றலாம். இதற்கு மாருக ஒரு பொருளுக்கு உஷ்ணத்தை ஏற்றினல் அதன் எடையும் ஏறும். இதுவே ஈன்ஸ்டின் கண்டுபிடித்த உண்மை. ஆனல் இந்த ஏற்றம் மிக நுண்ணியதாகையால் உஷ்ண ஏற்றக் குறைவால் ஏற்படும் கன ஏற்றக் குறைவை அளந்து காண முடியாது.

கனத்த ஹைட்ரொஜன் அணுவை எடுத்துக் கொள்வோம். இதன் அணுமையத்தில் ஒரு புரோடானும் ஒரு நியூட்ரானும் உள்ளன. ஒவ்வொன்றின் எடையும் நிச்சயமாகத் தெரியும். எனவே இவற்றின் கூட்டுத் தொகையே கனத்த ஹைட்ரொஜன் அணு எடை ஆகவேண்டும். ஆனல் கணக்கெடுத்தால் இதன் எடை கூட்டுத்தொகைக்குக் குறைகிறது; 20 லட்சம் எலெக்ட்ரான் வோல்டுக்குச் சமமான சக்தியின் எடை குறைகிறது. பல கோடி வருஷங்களுக்கு முன் இந்த ஒரு புரோடானும் ஒரு நியூட்ரானும் சேர்ந்த காலத்தில் இந்தச் சக்தி விடுபட்டிருக்க வேண்டும். இந்த அணுவை மறுபடியும் புரோடான் நியூட்ராஞகப் பிரிக்க வேண்டு

மாறுல் இவ்வளவு சக்தியை மறுபடியும் நாம் உபயோகிக்க வேண்டும். எனவே ஒரு புரோடானையும் ஒரு நியூட்ரானையும் சேர்த்து நாம் ஒரு கனத்த ஹைட்ரொஜன் அணுவைச் சிருஷ்டித்தால் நமக்கு 20 லட்சம் எலெக்ட்ரான் வோல்ட் சக்தி கிடைக்கும்.

ஹைட்ரொஜன் விஷயத்தில் கண்ட இந்த உண்மை எல்லாத் தனிப்பொருள் அணு மையங்களுக்கும் பொருந்தும். புரோடான் நியூட்ரான்களின் எடைக் கூட்டுத் தொகையைவிட அணு எடை குறைவாகவே இருக்கிறது. இதையே எடைக் குறை (Mass defect) என்பர். இந்தக் குறையைச் சக்தி ரூபமாகவும் சொல்லலாம், கனத்த ஹைட்ரொஜன் சக்திக் குறையை மூல அளவாகக் கொண்டு.

எந்த ரசாயன முறையாலும் கிடைக்காத அவ்வளவு சக்தி இவ்வாறு அணு மையங்களில் திரண்டு கிடக்கிறது. ரசாயன மாறுபாடுகள் அணுக்களின் கவசங்களையே தாக்குகின்றன. அவற்றால் அணு மையம் ஒரு மாறுதலையுமே அடைவதில்லை. தங்கம் பண்ணும் ரசவாதம் நடவாத காரியம் என்பதை இது விளக்கும். அணுமையம் மாறினாலொழிய ஒரு மூலப் பொருள் வேறொரு மூலப் பொருள் ஆகாது. வெறும் ரசாயன முறையால் இந்த மாறுதல் ஆவதில்லை.

ஆல்பாக் கிரணச் சிதறலால் யுரேனியம் ஈயமாக மாறுவது அணுமைய மாறுதல். ஒரு கிராம் முற்றும் ஈயமாக மாறும்போது ஆல்பா பீட்டாக் கிரணங்களால் வெளிவரும் சக்தி 25 டன் ஜலத்தைக் கொதி நிலைக்குக் கொண்டு வரப் போதும்! ஹைட்ரொஜனையும் பிராணவாயுவையும் சேர்த்து ஜலமாக்கும் ரசாயன மாறுபாட்டில் ஒரு கிராம் ஜலம் உண்டாக்குவதில் கிடைக்கும் உஷ்ணசக்தி 38 கிராம் நீரைக் கொதி நிலைக்குக் கொண்டுவரவே போதும்! முதற் சொன்ன சக்தி இதைப்போல் 10 லட்சம் மடங்கு அதிகம். ★

—நவம்பர், 1946.



நிகோலஸ் ரோரிக் புத்தர் பிரான் ஜனவரி, 1940

# தாயுமானவர்

தமிழ்நாட்டில் 17, 18-ஆவது நூற்றாண்டுகளில் வீரமாமுனிவர் என்ற பெஷி பாதிரியார் கிறிஸ்தவ இலக்கியத்தை இயற்றினார். உமறுப்புலவரும் பிறரும் இஸ்லாமியக் கொள்கைகளைப் பரப்பினர். பிள்ளைப் பெருமாளையங்கார் முன்பே இருந்த வைணவ இலக்கியத்தைப் பின்னும் பெருக்கினார். இந்தக் காலத்தில்தான் தாயுமானவர் பிறந்து ஒன்றனோடு ஒன்று முரண்படுவனவாகத் தோன்றிய வேதாந்தத்தையும் சைவ சித்தாந்தத்தையும் சமரசப் படுத்தி இரண்டிற்கும் பொதுவாக அமைந்த ஒருமைப்பாட்டை விளக்கும் செயலை மேற்கொண்டார்.

17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் (கி. பி. 1685) வாக்கில் வேதாரண்யத்தில் வேளாளர் மரபில் அவர் உதித்தார். அவருடைய தகப்பனாராகிய கேடிலியப்பபிள்ளை விஜயரங்க சொக்கநாத நாயக்கரிடம் மந்திரியாக இருந்தவர். புகழ் பெற்ற திருமலை நாயக்கருடைய பேரர் அந்த விஜயரங்க சொக்கநாத நாயக்கர். தாயுமானவருடைய தாய் தந்தையர் திருச்சிராப்பள்ளியில் உள்ள சிவபெருமானை வேண்டிக்கொண்டு பிறந்தமையால் அவருக்கு அந்தப் பெருமானுடைய திருநாமத்தையே பெயராக வைத்தார்கள்.

இளம்பருவத்திலேயே தாயுமானவர் தமிழில் உள்ள இலக்கியங்களிலும் சமய சாஸ்திரங்களிலும் வல்லவரானதோடு வடமொழி நூல்களிலும் பயிற்சி பெற்றார். இரு மொழியிலும் அவருக்கு அறிவு இருந்ததை, "கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்" என்ற பாடல் குறிப்பிக்கின்றது. அவருக்குப் பதினாறு வயசு நடந்துகொண்டிருந்தபோது அவருடைய தந்தையார் மறைந்தார். அவருக்கு விருப்பம் இல்லாமல் இருப்பினும் மன்னன் அவரை அவருடைய தந்தையார் ஸ்தானத்தில் மந்திரியாக நியமித்தான்.

அக்காலத்தில் ஒரு நாள் தற்செயலாகத் திருச்சிராப்பள்ளியில் அவர் திருமூலர், மெய்கண்டார் இவர்களின் மரபில் வந்த மௌன குருவைத் தரிசிக்கப் பெற்றார். தரிசித்த அளவிலே அப்பெரியாரிடம் தாயுமானவருடைய உள்ளம் ஈடுபட்டுவிட்டது. அவருடைய மாணாக்கர் ஆனார். உடனே தமக்கு ஞானோபதேசம் செய்து துறவு நிலை அருளவேண்டுமென்று இரந்தார். குருநாதர் ஒன்றும் கூற

வில்லை. தாயுமானவர் தம் வேலையை மறந்து மௌன குருமூர்த்தியை நிழல்போலச் செல்லும் இடங்களெல்லாம் தொடர்ந்து சென்று வழிபட்டார். இறுதியில் ஆசிரியர், சிவஞான சித்தியாரை நன்கு தேரும்படி அருளினர். துறவு நிலை அருள வேண்டுமென்று விண்ணப்பம் செய்தபோது, பொறுத்திருக்கச் சொன்னதோடு, "சும்மா இரு" என்று கூறியருளினர். இந்தத் தொடரையே தாயுமானவர் உபதேச மந்திரமாகக் கொண்டார். இதனை அவர் பாடிய பல பாடல்கள் புலப்படுத்தும்.

**ஏதுக்குச் சும்மா இருமனமே என்றுனக்குப்**
**போதித்த உண்மைஎங்கே போகவிட்டாய்,**

**நீ சொன்ன ஒரு வார்த்தையினை**
**மலையிலக் கென நம்பினேன்.**

அதுமுதல் தியானம் முதலிய காரியங்களில் ஈடுபடத் தொடங்கினர் தாயுமானவர். மன்னனுடைய சம்மதத்தின்மேல் மந்திரி பதவியை விட்டு நீங்கினர். மன்னன் இறந்த பிறகு அவன் மனைவியாகிய மீனட்சி தாயுமானவரைக் காமுற்றுத் தன் விருப்பை வெளியிட்டாளென்றும், அது கண்டு அருவருப்புற்ற இப் பெரியார் திருச்சிராப்பள்ளியை விட்டு நீங்கித் தேவையென்னும் ராமேசுவரம் வந்து தங்கலானரென்றும் கூறுவர்.

பிறகு அவருடைய சுற்றத்தாரின் வேண்டுகோளுக்கிணங்கி அவர் மணந்துகொண்டு ஒரு புதல்வனையும் பெற்றார். அவர் மனைவி சில காலத்தில் இறந்தாள். அந்தச் சந்தர்ப்பத்தில் மௌன குருவைத் தரிசித்து அவரிடம் ஞானோபதேசமும் துறவு நிலையும் பெற்றார் தாயுமானவர்.

துறவியான பிறகு தமிழ்நாட்டிலுள்ள தலங்களுக்குச் சென்று தரிசித்துக் காசிக்கும் சென்றார். எப்போதும் தியானம் செய்வதும், பாடல்களைப் பாடுவதுமாகப் பொழுது போக்கி வந்தார். அருளையர், கோடிக்கரை ஞானியார் முதலிய மாணுக்கர் சிலர் அவரைச் சார்ந்தனர்.

உலக வாழ்வின் சிறுமையையும் உயிர்க் குலத்தின் பெருமையையும் அவர் உணர்ந்தார். ஆசையின் தன்மையையும் அறிந்தார்.

**சகத்தின் வாழ்வைச் சதம்என எண்ணியே**
**மிகுத்த தீமை விளைய விளைக்கின்றேன்**

என்று அவர் ஓரிடத்தில் பாடுகிறார்.

தமிழ்மொழியானது அன்பையும் பக்தியையும் பற்றிப் பாட மிகவும் ஏற்றதென்று அவர் சொல்லியிருக்கிறார்.

**............என் தமிழினுக்**
**கின்னல்பக ராதுலகம் ஆரமை மேலிட்**
**டிருத்தலால் இத்தமிழையே**

சொன்னவனி யாவன்அவன் முத்திசித் திகளெலாம்
தோய்ந்தநெறி யேபடித்தீர்.

தமக்கு உள்ளொலி காட்டிய சமய தத்துவங்களைத் தம்முடைய உயர்ந்த ஆன்ம அநுபவத்தாலும் அரிய தமிழ்ப் புலமையாலும் ஓசையழகும் இனிமையும் உடைய நடையில் பாடியிருக்கிறார் அவர். தமிழ் மொழியில் உள்ள சிறந்த இலக்கியங்கள், ஏனைய மொழிகளில் உள்ளவற்றைப்போல் இராமல், இணையற்ற இயல்பும் சுருக்கமும் உடையனவாக உள்ளன; சொற் சுருக்கமும் பொருள் நிறைவும் மிகவும் அற்புதமாக அவற்றில் இணைந்திருக்கின்றன. ஓசை யினிமையும், சொல்லோடு சொல் இழைந்து இணைந்து நிற்கும் இயல்பும், வெவ்வேறு விதமான சந்த அழகும், எதுகை நயமும் சேர்ந்து தமிழ்க் கவிதைக்குக் கவர்ச்சி தருகின்றன. தமிழ்ப் பக்தி இலக்கியங்களுக்குச் சமானமாக ஹீப்ருவிலும் ஸம்ஸ்கிருதத்திலும் உள்ள நூல்களைக் கூறலாம். ஆனால் அவற்றைவிடத் தமிழில் அதிகமான ஆற்றலும் ஆழமும் இருக்கின்றன. அத்தகைய பக்திச்சுவை ததும்பும் இலக்கியங்களில் தாயுமானவர் பாடல்கள் சிறந்து நிற்கின்றன என்று கூறின் அது மிகையாகாது.

சைவ சித்தாந்தம் பதி, பசு, பாசம் என்ற மூன்று பொருள்களைப் பற்றிச் சொல்கிறது. பாசத்தால் வந்த மாயா மலத்தை அருள் போக்குகிறது. அருளே சக்தி. சக்தி ஐந்தொழிலை நடத்துபவள். சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பவை அவ்வைந்து தொழில்கள். முதலில் தோன்றிய தத்துவம் நாதம். தாயுமானவருடைய நூல்களை நன்குணர வேண்டுமானால் இத்தகைய கருத்துக்களைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

தேவையென்னும் ராமேசுவரத்தில் உள்ள சக்தியாகிய லோகமாதாவை அவர் பாடியுள்ள பாடல் தமிழ்க் கவிதையின் சிகரம் என்று சொல்லத் தக்கது.

பதிஉண்டு நிதிஉண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கம்உண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனும் திமிரம்அணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பால் அம்மைநின் தாளில்
கருத்தொன் றும் உண்டாகுமேல்
நதிஉண்ட கடலெனச் சமயத்தை உண்டபர
ஞானஆ னந்தஒளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனும் அகந்தைதீர்த்தென்

மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூ தனன் தங்கையே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்கா தலிப்பெண்ணுமையே.

சிவபெருமானை அகண்ட சச்சிதானந்த சிவம் என்றும், மதங்களுக்கு அதீதமாய் நிற்பவர் என்றும் கூறுகிறார். பராசக்தியைப் பரமசிவமெனும் சூரியனைச் சூழ்ந்த கிரணமாகச் சொல்கிறார்.

பரையெனும் கிரணம் சூழப்
பானுவின்......

அவர் பாடிய பாடல்களின் சாரமாக எண்ணத்தக்க ஒரு பாட்டு, நாயக நாயகி பாவத்தில் பாடப்பட்டிருக்கிறது. இந்த நிலை ஆழ்ந்த பக்தியின் விளைவாக வருவது. கிறிஸ்தவர்களின் பைபிளில் ஸாலமன், இசையா என்பவரின் பாடல்களிலும், கீதகோவிந்தத்திலும், ஆழ்வார்களின் பாடல்களிலும் இந்த நிலையைக் காணலாம். தாயுமானவருடைய ஆனந்தக் களிப்பில் ஆன்மாவை நாயகியாகவும் பரமேசுவரனை நாயகனாகவும் வைத்துப் பாடுகிறார். ஆன்மாவானது விருப்பு வெறுப்பற்று, யான் எனது என்பவற்றை ஒழித்து, பரம்பொருளோடு ஒன்றுபடுகிறது, இந்த நெறியில். தான் அடைந்த இன்பத்தைப் பாட்டிலும் கூத்திலும் வெளியிடுகிறது. ஆனந்தக் களிப்பின் பல்லவி "சங்கர சங்கர சம்பு" என்பது. பக்தியோகமும் ஞானயோகமும் கலந்து ஒன்றுவதையும், ஆன்மாவின் சரித்திரத்தையும் அந்தப் பாட்டுச் சித்திரிக்கிறது. ஆன்மா அன்பு நெறியிலே சென்று, கடவுளே குருநாதனாக எழுந்தருளிவரத் தரிசித்து ஞானோபதேசம் பெற்று, ஆன்மாவும் பரமான்மாவும் வெவ்வேறு போலத் தோன்றினாலும் இரண்டற்று நிற்கும் நிலைபெறுவதை அது சொல்லுகிறது. இந்தப் பாடலில் வேதாந்த சித்தாந்த சமரசத்தை நன்றாகச் சொல்லியிருக்கிறார். இதோ ஓர் உதாரணம்:

உள்ளதும் இல்லது மாய்முன்-உள்
உணர்வது வாய்உன் உளங்கண்டதெல்லாம்
தள்ளெனச் சொல்லிஎன் ஐயன்-என்னைத்
தானாக்கிக் கொண்ட சமர்த்தைப்பார் தோழி.

இன்னும் சிறப்பாகச் சொல்லழகும் பாவமும் பொருந்தச் சொல்வதைக் கேளுங்கள்.

அன்றென்றும் ஆமென்றும் உண்டோ-உனக்
கானந்தம் வேண்டின் அறிவாகிச் சற்றே
நின்றால் தெரியும் எனவே-மறை
நீதிஎம் ஆதி நிகழ்த்தினான் தோழி.

இந்தச் சமரச நிலையைச் சித்தர் கணம் என வரும் பாடல்கள் தனியாக எடுத்துச் சொல்கின்றன.

வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.

ஆகாரபுவனம்-சிதம்பர ரகசியம் என்ற பகுதி சடமும் ஆன்மாவும் சிவத்தையன்றி வேறில்லை என்பதை விளக்குகிறது.

சித்தும் சடமும் சிவத்தை விடஇல்லை
நீயன்றி நான்ஆர்?

சங்கரரைப் போலவே, இந்த அத்வைதக் கொள்கைக்கு ஆலய வணக்கம் முதலிய சகுண உபாசனை மாறுபட்டதல்ல என்றே தாயுமானவர் எண்ணுகிறார். ஒருமுகப்பட்ட தியானத்துக்கு விக்கிரக ஆராதனை சிறந்த வழி என்பது அவர் கொள்கை.

தாயுமானவருடைய சமரசக் கொள்கை மிகவும் வியக்கத் தக்கது.

வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளே நின் விளையாட் டல்லால்
மாறுபடும் கருத்தில்லை; முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா.

நுண்ணிய தத்துவ நூற் கருத்துக்களைச் சொல்வதோடு, இயற்கையின் எழிலைப் பாராட்டும் தகைமையும் தாயுமானவருக்கு உண்டென்பதைப் பின்வரும் பாடல் தெளிவுறுத்தும். உலகத்தில் கடவுள் ஒருவரே உண்மையான பொருள் என்று சொல்ல வருகிறவர், உலகத்தில் உள்ள இன்பப் பொருள்களைத் துய்த்து மகிழும் திறத்தையும் சொல்கிறார். வாழ்வின் இன்பங்களையும் இயற்கையின் பெருமையையும் நுகரும்போது மேற்கொள்ள வேண்டிய நோக்கத்தை இப்பாடல் குறிப்பிக்கிறது—

கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னீழல் வைகினும்,
குளிர்தீம் புனற்கை அள்ளிக்
கொள்ளுகினும் அந்நீ ரிடைத்திளைத் தாடினும்,
குளிர்சந்த வாடைமடவார்
வந்துலவு கின்றதென முன்றிலிடை உலவவே
வசதிபெறு போதும், வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும், வேலைஅமுதம்
விந்தைபெற அறுசுவையில் வந்ததென அமுதுண்ணும்
வேளையிலும், மாலைகந்தம்
வெள்ளிலை அடைக்காய் விரும்பிவேண் டியவண்ணம்
விளையாடி விழிதுயிலினும்,

சந்தத்மும் நின்அருளை மறவா வரந்தந்து
தமியேனை ரட்சைபுரிவாய்;
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

அவர் பாடிய வண்ணத்திலும் அகவலிலும் அவருடைய சந்தப் புலமையும், தத்துவ நுணுக்கமும் வெளியாகின்றன.

அருவென் பனவும்அன்றி உருவென் பனவும்அன்றி
அகமும் புலமும்அன்றி முறைபிறழாது
குறியுங் குணமுமன்றி நிறைவும் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப விமலமதாகி
அசலம் பெறஉயர்ந்து விபுலம் பெறவளர்ந்து
சபலஞ் சபல மென்றுள் அறிவினர்காண
—ஞானவெளியிடை மேவுமுயிராய்.

பொருள் வணக்கம் என்ற தலைப்பையுடைய பாடலில் ஆத்மானுபவ இன்ப உணர்ச்சியை வெளியிடுகிறார். அதற்குச் சமான மான ஒன்றை எந்த இலக்கியத்திலும் காண்பது அரிது. பராசக்தியை உலகத்தின் தாயாகவும் சக்திக்கும் அறிவுக்கும் மூலமாகவும் வருணித்துப் பாடும் பாடல் மிகவும் சிறப்பானது. சொல்லினிமையும் ஆத்மானந்தமும் ஒருங்கே இணைந்து விளங்கும் விஷயத்தில் இந்தப் பாடல்களோடு சங்கராசாரியார் இயற்றிய தட்சிணாமூர்த்தி ஸ்தோத்திரங்களையும், சௌந்தரிய லகரியையும் ஒப்பிடலாம்

தாயுமானவர் கூறும் அற்புதமான தேவியின் தத்துவம் வருமாறு:

...............அகிலாண்ட கோடிஈன்ற
அன்னையே, பின்னையும் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூபமயிலே.

வடமொழி தென்மொழிச் சொல்லையும் தொடரையும் அடுக்கி இணைப்பது, தாயுமானவருக்குரிய சிறப்பியல்பு. தேவியைப் பாடும் பகுதியில் 5-ஆம் பாட்டின் முதற்பாதி முழுவதும் அநேகமாய் முழு வடமொழியாக இருக்கிறது. இதனால் பாட்டின் அழகு சிறிதும் குறையவில்லை.

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரயம்பகிஎழில்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகச்ரதள
புஷ்பமிசை வீற்றிருக்கும்
நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சக்திஎன்றுன்
நாமமே உச்சரித் திடுமடியர் நாமமே
நான்உச் சரிக்கவசமோ

ஆரணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ்
அகிலாண்ட கோடிஈன்ற
அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூபமயிலே
காரணியும் இருகொங்கை மாதர்மகிழ் நங்கைபுகழ்
வளமருவு தேவையரசே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே.

இந்த வடமொழி தென்மொழியின் இணைப்புக்கு மற்றோர் உதாரணம், கருணைகரக் கடவுள் என்ற பகுதியில் வரும் பாடல் ஒன்று—

நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல்யமா
நிஷ்கள அசங்கசஞ் சலரகித நிர்வசன
நிர்த்தொந்த நித்தமுக்த
தற்பரவிச் வாதீத வ்யோமபரி பூரண
சதானந்த ஞானபகவ
சம்புசிவ சங்கர சர்வேச என்றுநான்
சர்வகா லமும்நினைவனோ
அற்புத அகோசர நிவர்த்திபெறும் அன்பருக்
கானந்த பூர்த்தியான
அத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
அநுபூதி அநுகூதமும்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்தகுருவே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணை கரக்கடவுளே.

பிரெஞ்சு பாஷையில் இருப்பதுபோலச் சதிபோட்டாடும் நடனத்துக்கேற்ற ஓசையின்பத்தைத் தாயுமானவர் பாடலில் பல இடங்களில் காணலாம். ஓர் உதாரணம்:

பாடுகின்ற பனுவ லோர்கள் தேடு கின்ற செல்வமே
நாடு கின்ற ஞான மன்றில் ஆடு கின்ற அழகனே.

முடிவாகச் சொன்னால் தாயுமானவர் வாக்கு வடமொழி தென் மொழிக் கலப்பண்பின் அற்புதமான இணைப்பு என்னலாம். அவருடைய ஆத்ம ஞானம் பல வகையான சந்தமுள்ள பாடல் களின் மூலமாக உலகுக்கு வெளியாகி இருக்கிறது. அப் பாடல் களின் இனிய ஓசையும் பக்தியுணர்ச்சியும் தெளிவாகவும் ஆழமாக வும் நம் உள்ளத்தில் பதிகின்றன.

★

—அக்டோபர், 1949.

கா. ஸ்ரீ. ஸ்ரீ.

# நடுவழியின் நாயகன்

**த**த்துவ போதம் பெற்ற எந்த மகானும் குருவாகிவிடலாம்; ஆனால் அவருடைய உபதேசத்தை அறிந்து அதன்படி நடக்கும் மாணவன் கிடைப்பதுதான் எந்தக் காலத்திலுமே அருமை. பகவான் நாராயணனுக்கு இந்தப் பரந்த உலகில் ஒரு சிஷ்யன்கூடக் கிடைக்கவில்லை. அவன் தானே சிஷ்யனுமாய் ஆசாரியனுமாய் நின்று திருவெட்டெழுத்தை வெளியிட்டருளினன் என்பர். 'சிஷ்யனாய் நின்றது—சிஷ்யன் இருக்கும் இருப்பு நாட்டார் அறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக' என்றார் உலகாசிரியர். கீதோபதேசம் செய்த கிருஷ்ணனுக்கு ஒரே ஒரு சிஷ்யன் கிடைத்தான். ஆலமர நிழலில் அமர்ந்த சிவபெருமானுக்கு நான்கு மாணவர்கள் அமைந்தார்கள். புத்தபெருமானுக்கோ முதலில் ஐந்து பிட்சுக்கள் கிடைத்தார்கள்.

இந்த ஐவரில் முதலில் கௌண்டியன் புத்தருடைய உபதேசத்தை ஏற்றுக்கொண்டான். "கௌண்டின்யன் அறிந்தான்" (அஞ்ஞாஸி வத போ கோண்டஞ்ஞோ) என்று புத்தர் அவனைப் பாராட்டினார். அதிலிருந்து அவன் பெயரே 'ஆஜ்ஞாத கௌண்டியன்' என்று ஆயிற்று. பிறகு வப்பன், பத்தியன், மகாநாமன், அஸ்ஸஜி என்ற நால்வரும் புத்தருக்குப் பக்தரானார்கள். இந்த ஐவர் சேர்ந்து அவருடைய பிட்சு சங்கம் ஆரம்பித்தது. தர்மசக்கரப் பிரவர்த்தனம் செய்து அவ் வருஷத்து மழைக்காலத்தில் அவர் ரிஷிபத்தனத்தில் தங்கினார். அவருடைய அருள் நிரம்பிய பார்வையும் இனிய எளிய உபதேசங்களும் பலரைக் கவர்ந்தன. மழைக்காலம் முடிந்து அவர் அங்கிருந்து புறப்பட்டபோது பிட்சு சங்கத்தில் அறுபது பேர் இருந்தார்கள்.

அவர்களைப் பார்த்து அவர் சொன்னார்: "பிட்சுக்களே, பெரும்பாலான மக்களின் நன்மைக்காக, இன்பத்துக்காக, ஜனங்களிடம் இரக்கம் கொள்வதற்காக, தேவர் மனிதர் ஆகியவர்களின் நற்பயனுக்காகத் தருமோபதேசம் செய்யச் செல்லுங்கள். ஒரே வழியில் இருவர் போகாதீர்கள். முதலில் நலந் தருவதும், இடையில் நலந் தருவதும், கடைசியில் நலந் தருவதுமான அறவழியை மக்களுக்குக் கூறுங்கள்."

இப்படி அறுபது பிட்சுக்களே அவர் நான்கு திசைக்கும் அனுப்பினர். அவர் பரிநிர்வாணம் அடைந்தபொழுது இந்தப் பிட்சுக்களின் எண்ணிக்கை ஐந்நூறு வரைக்கும் வளர்ந்திருந்தது. பாரத நாட்டில் பிறந்த பௌத்த மதம், நாளடைவில் இலங்கை, ஸயாம், பர்மா, ஜாவா, ஸுமாத்திரா முதலிய தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குக் கடல் வழியாகச் சென்றது. மறுபுறம் ஹிந்துகுஷ் மலையையும் இமய மலையையும் தாண்டி மத்திய ஆசியா, திபேத்து, சீனம், கொரியா, ஜப்பான் முதலிய நாடுகளுக்குச் சென்றது. முஸ்லிம் யாத்திரிகனான அல்பெருனி, "முற்காலத்தில் குராஸான், பர்ஸீஸ், ஈராக், மோஸல், ஸிரியா ஆகியவற்றின் எல்லை வரைக்கும் பரவிய பிரதேசத்தில் பௌத்தம் நிலவியிருந்தது. பிறகு இஸ்லாம் வந்தது" (அல்பெருனீஸ் இந்தியா, வால்யூம் 1, பக். 21) என்று எழுதியிருக்கிறான். ஏழாம் நூற்றாண்டுச் சீன யாத்திரிகனான யுவான்-சுவான், பர்ஷியாவில் அந்தக் காலத்தில் பத்துக்குமேல் சங்காராமங்கள் இருந்ததாகவும், ஐந்நூற்றுக்கு மேற்பட்ட பிட்சுக்கள் அங்கே ஹீனயானத்து ஸர்வாஸ்திவாதச் சூத்திரங்களைப் பயின்று வந்ததாகவும் குறிப்பிடுகிறான். பர்ஷியாவுக்கு உட்பட்டிருந்த லங்-க-லோ என்ற பிரதேசத்தில் நூறு விஹாரங்கள் இருந்ததாகவும், அங்கே ஆறாயிரத்துக்கு மேற்பட்ட பிட்சுக்கள் ஹீனயானத்தின்படியும் மகாயானத்தின்படியும் சமய நூல்களைப் பயின்றதாகவும் அவனே கூறுகிறான். (வாட்டர்ஸ்—ஆன் யுவான் -சுவாங், வால்யூம் 2, பக். 285, 257.) ஆப்கானிஸ்தானத்தில் பாமியான் பள்ளத்தாக்கில், 115 அடியும் 175 அடியும் உயரமுள்ள இரண்டு பிரம்மாண்டமான புத்தர் சிலைகள் இன்றும் இருக்கின்றன. மேற்கு ஆசியாவுக்குச் சென்ற பிட்சுக்கள் வாயிலாக, பௌத்தக் கொள்கைகள் ஐரோப்பாவுக்கும் சென்றன. இவ்விதம் பாரகமடங்கலும் புத்தருடைய அறவழி பரவியது. இன்றுங்கூட உலகில் பெரும்பாலான மக்கள் இந்த வழியையே பின்பற்றுகிறார்கள். புத்தரைப்போல் இவ்வளவு ஏராளமான சிஷ்யச் செல்வம் வேறு எந்த மத குருவுக்கும் கிடைத்ததில்லை.

புத்தர் வழி இப்படி மக்களைக் கவர்ந்ததற்குக் காரணங்கள் யாவை? முதலாவது, அவர் மக்களின் மொழியில் உபதேசித்ததனால் எல்லாருக்கும் எளிதில் விளங்கியது. பெரும்பாலான மக்களின் நன்மைக்குத் தம் கொள்கைகள் பயன்பட வேண்டும் என்று விரும்பிய போதிமாதவர், மகத நாட்டில் அக்காலத்தில் வழங்கி வந்த மாகதியிலேயே பேசினார். புத்தகோஷர் திரிபிடகத்து வசனங்களைப் 'பாலி' என்று குறிப்பிட்டார். பிறகு அந்த மொழிக்கே 'பாலி' என்ற பெயர் வழங்கலாயிற்று.

இரண்டாவது, புத்தருடைய கொள்கைகள் எல்லாருக்கும் எளிதில் விளங்கக்கூடியவை. அவர் நான்கு ஆரிய சத்தியங்களை விளக்குகிறார். இவ்வுலகில் ஒவ்வொருவனுக்கும் துன்பம் இருந்து கொண்டே இருக்கிறது. பிறவி, மூப்பு, பிணி, சாவு, விருப்பமற்ற பொருள்களோடு தொடர்பு, விருப்பமுள்ளவர்களிடமிருந்து

பிரிவு, ஆசைப்பட்ட பொருள் கிடைக்காமை ஆகியவை இந்தத் துன்பமென்னும் மரத்தின் கிளைகள். துன்பம் என்ற இதுவே முதல் ஆரிய சத்தியம்

இந்தத் துன்பத்துக்குக் காரணம் வேட்கை. இல்லற இன்பங்களில் வேட்கை, சொர்க்க இன்பங்களில் வேட்கை, உடலை ஒடுக்கித் தன்னை அழித்துக்கொள்ளும் வேட்கை ஆகியவற்றினால் துன்பம் வருகிறது. முற்பிறப்புக்களிலும் இப்பிறப்பிலும் உண்டாகும் வேட்கைகளே துன்பமனைத்தையும் தருகின்றன. இந்த வேட்கை எங்கிருந்து வந்தது என்ற கேள்வி வீண். அது இருக்கும் வரைக்கும் துன்பமும் வந்துகொண்டே இருக்கும். துன்பத்துக்கு மூல காரணமாகிய இந்த வேட்கையே இரண்டாவது ஆரிய சத்தியம்.

மனிதன் இந்தத் துன்பத்திலிருந்து விடுபட விரும்புகிறான். வேட்கையை அழித்தால் துன்பம் ஒழிந்து பேரின்பம் கிடைக்கும். துன்ப நிவாரணமாகிய இது மூன்றாவது ஆரிய சத்தியம்.

துன்பத்தைத் தடுக்க வழி என்ன? அதுதான் அஷ்டாங்க மார்க்கம். (1) நற்காட்சி - நான்கு வாய்மைகளையும் எல்லா வகையிலும் பார்த்துச் சிந்திப்பது, (2) நல்லூற்றம் - நற்செயல்களையே செய்யத் தீர்மானிப்பது, (3) நல்வாய்மை - உண்மையும் பிரியமும் இதமுமான பேச்சு, (4) நற்செய்கை - சிறந்த செயல்களில் முனைவது, (5) நல்வாழ்க்கை - நேர்மையாகப் பிழைப்பு நடத்த முயல்வது, (6) நன்முயற்சி - வெற்றி தரக்கூடிய முறையில் நியாயமாக முயற்சி செய்வது, (7) நற்கடைப்பிடி - 'நான் என்ன செய்கிறேன், என்ன பேசுகிறேன், என்ன சிந்திக்கிறேன்?' என்பதை எப்போதும் உணர்வில் கொள்வது, (8) நல்லுளத்தோர் தலைப்பாடு - எப்பொழுதும் நட்பு, கருணை, வெகுளியின்மை, வைராக்கியம் ஆகியவற்றால் மனத்தை ஒருமுகப்படுத்தி நான்கு தியான நிலைகளைப் பெறுவது. துன்பத்திலிருந்து மனிதனை விடுவிக்கும் இந்த எண்வகை வழியே நான்காவது ஆரிய சத்தியம். இதுவே புத்தருடைய உபதேசங்களின் சாரம்.

தம்முடைய வழியை அவர் 'மத்தியம மார்க்கம்' என்று உரைத்தார். கர்ம வாதத்தில், உடலை மிகவும் துன்புறுத்தித் தவம் செய்வது ஒரு முனை; உடலையே எல்லாமாக எண்ணிச் சுக போகங்களில் ஆழ்ந்திருப்பது மற்றொரு முனை. இந்த இரண்டுக்கும் நடுவில் இருப்பது, மத்தியம மார்க்கமாகிய நான்கு ஆரிய சத்தியங்களைப்பற்றிய அறிவு.

தத்துவ தரிசனத்தைப் பொறுத்த வரைக்கும், ஒரு புறம் ஜடவாதமும் மறு புறம் ஆன்மவாதமும் இருந்தன. 'மனிதனுடைய சாவுடன் அவனுடைய அனைத்தும் முடிந்துவிடுகிறது; பிறகு ஏதும் மிச்சம் இருப்பதில்லை' என்பது ஜடவாதம். ஆன்மாவை ஒப்புக்கொண்டு, அது தன் வினைகளுக்கு ஏற்றபடி உடல்களை மாற்றிக் கொள்கிறது என்பது ஆன்மவாதம். புத்தருடைய கொள்கைப்படி இந்த வாழ்க்கை இடைவிடாத ஒரு கோடு அன்று;

அது கோடிக்கணக்கான புள்ளிகளின் கூட்டம். ஒவ்வொரு புள்ளியும் ஒவ்வொரு கணத்து வாழ்க்கைக்கு அடையாளமாக இருக்கிறது. வாழ்வின் ஒவ்வொரு புள்ளியும் கணந்தோறும் அழிந்து விடுகிறது; ஆனால் வாழ்க்கை வெள்ளம் தடைப்படுவதில்லை. ஒரு புள்ளியை அடுத்து இன்னொன்று; அதை அடுத்து மற்றொன்று - இப்படி வாழ்வு வெள்ளம் ஓடிக்கொண்டே இருக்கிறது. இந்தப் புள்ளிகள் ஒன்றை அடுத்து ஒன்று மிகவும் அணிமையில் இருப்பதனால், பல புள்ளிகள் சேர்ந்த கோடுபோல, வாழ்க்கை ஒருமை கொண்டதாகத் தோற்றுகிறது. நல்வினை தீவினைகளுக்குத் தக்கபடி இந்த உடலுக்குப் பின்பும் இந்த வாழ்க்கை வெள்ளம் உண்டு. வினைகளுக்குப் பயன் கொடுப்பவன் எவனும் இல்லை. மனிதனுடைய செயல்களுக்குத் தக்கபடி அவன் வாழ்வு அமைகிறது; இதுவே வினையின் பயன். மனிதன், தான் முடிவற்ற காலமாக ஒவ்வொரு கணத்திலும் சேமித்த நன்மை தீமைகளின் தொகுதியாக இருக்கிறான். இப்படி மறுபிறப்புக்களையும், அவற்றுக்குப் பொருத்தமாக வாழ்வுப் புள்ளிகளின் வெள்ளத்தையும் ஒப்புக்கொண்ட புத்தர், ஆன்மவாதத்தை ஏற்கவில்லை; ஜடவாதத்தையும் ஏற்கவில்லை. இதுதான் அவருடைய நடு வழி என்பது. அவர் ஏன் இப்படி நடு வழியைப் போதித்தார் என்பதை அவருடைய சரித்திரம் தெளிவாக விளக்குகிறது.

## 2

கௌதம போதிசத்துவருடைய சரித்திரத்தைப் பிற்காலத்தில் பலர் பல வகையாக எழுதியிருக்கிறார்கள். திரிபிடகத்தில் அவர் கூறிய வாய்மொழிகளைக் கொண்டே அவரது சரிதத்தை அறிவது நல்லது. அப்பொழுதுதான் அவருடைய 'மத்தியம மார்க்க'த்தின் நுட்பங்கள் விளங்கும்.

மகாஸச்சக ஸுத்தத்தில் பெருமான் கூறுகிறார்: "என் சாக்கியத் தந்தையின் வயலில் வேலை நடந்து வந்தபொழுது நான் நாவல் மரத்தின் குளிர்ந்த நிழலில் அமர்ந்து, முதல் தியான நிலையைப் பெற்றது என் நினைவுக்கு வந்தது. அந்த நினைவைப் பின்பற்றி இதுவே பேரறிவு பெறும் வழியாக இருக்கவேண்டும் என்று கருதினேன்."

போதிசத்துவர் வீட்டை ஏன் துறந்து சென்றார்? தம் இனத்தவரான சாக்கியரும் கோலியரும் அடிக்கடி போரிட்டதைக் கண்டு வெறுத்தே அவர் பரிவிராஜகரானார் என்பது முதன்மையான காரணம். வீட்டுத் தொல்லையைத் தொலைக்கக் கருதியதும், பற்றை அறவே துறக்க எண்ணியதும் வேறு காரணங்கள்.

வீட்டைத் துறந்த போதிமாதவர் தீவிரமான தவத்தில் முனைகிறார். முதலில் ஹடயோகமும், பிறகு உபவாசங்களும் ராஜ யோகமும் பயில்கிறார். பின்பு தியான வழியை மேற்கொள்கிறார்.

அப்பொழுது மாரன் பல வகைகளிலும் அவருடைய மனத் துணிவுக்கு இடையூறுகள் விளைவித்துத் தோல்வியுறுகிறான். வைசாக பூர்ணிமையன்று பகலில் சுஜாதை அளித்த பிட்சையைப் போதி சத்துவர் ஏற்றுக் கொள்கிறார். அன்று இரவு அவருக்குச் சம்போதி ஞானம் உண்டாகிறது. போதிசத்துவராக இருந்தவர் புத்தர் ஆகிறார்.

இப்படி, போதிசத்துவருடைய வாழ்க்கையை ஆராய்ச்சிக் கண்ணோடு படித்துப் பார்த்தால், அவருடைய உபதேசங்களுக்கும் வாழ்வுக்கும் பொருத்தம் இருப்பது நன்றாகத் தெரிகிறது. புத்த சரித்திர விவரங்களை விரிவாக அறிய வேண்டுமானால், தர்மானந்த கோஸம்பி என்னும் பௌத்தப் பெரும் புலவர் எழுதிய 'பகவான் புத்தர்' என்ற நூலைப் படியுங்கள். புத்தருடைய சிஷ்யக் குழுவில், அவர் தந்தை சுத்தோதனன், மகத மன்னனான பிம்பிசாரன், கோசல மன்னனான பஸேனதி, அநாதபிண்டிகன் போன்ற தனிகர்கள். ஆகியவர் தொடங்கி, சுந்தன் என்ற கொல்லன், அம்பபாலி என்ற வேசி முதலியவர் வரைக்கும் எல்லா வகையான மக்களும் இருந்தார்கள்.

வைசாக பூர்ணிமையன்று அவர் லும்பினியில் பிறந்தார்; வைசாக பூர்ணிமையன்றே புத்த கயையில் ஞானோதயம் பெற்றார்; வைசாக பூர்ணிமையன்றே குசிநகரத்தில் சுந்தன் கொடுத்த உணவையுண்டு பரிநிர்வாணமடைந்தார். தர்மசக்கரப் பிரவர்த்தனம் செய்து அவர் முதலில் உபதேசம் செய்த இடம் ஸாரநாத் (மிருகதாவம்). அவர் நிர்வாணம் அடைவதற்கு முன்பு ஆனந்தனிடம், "சுந்தனை யாரும் பழிக்கலாகாது, ஆனந்தா. எனக்கு ஞானோதயமான அன்று கிடைத்த பிட்சையும் இன்று கிடைத்த பிட்சையும் சமமானவை என்று கூறி, அவனைச் சமாதானப்படுத்து" என்றார். அவர் மகாநிர்வாணமடைந்த தருணத்தில் மிகவும் அமைதியோடு அருளிய கடைசி வார்த்தைகள் இவை : "சம்ஸ்காரங்கள் அனைத்தும் தேய்வுடையவை. வழுவின்றி, வாழ்வின் குறிக்கோளை அடையுங்கள்."

வாழ்வில் அவரை எத்தனையோ பேர் 'திருடன்', 'கழுதை' என்றுகூடத் திட்டினார்கள். 'பகவான்', 'மகரிஷி', 'தேவாதிதேவன்' என்று போற்றிப் பலர் அவரை வழிபட்டார்கள். இருவகை நிலையிலும் அவர் பற்றற்றவராகவே இருந்தார். "பிறர் உங்களைப் பழித்தால் நீங்கள் சினந்து கொள்ளாதீர்கள்" என்றே அவர் சொல்லி வந்தார். அவர் வேதங்களையோ அந்தணர்களையோ எங்கும் நிந்தித்ததில்லை. நான்கு வகையான சிரமண அந்தணர்களைப் பற்றி அவர் மஜ்ஜிம நிகாயத்தில் கூறுகிறார். அவர், தம்மைச் சார்ந்த பிட்சுக்களை நான்காவது வகையான சிரமண அந்தணர்கள் என்று குறித்திருக்கிறார்.

"புத்தர் யோகிகளின் சக்கரவர்த்தி" என்று அவருடைய மதத்தை எதிர்த்தவர்களும் புகழ்ந்திருக்கிறார்கள். அநாதோல்

பிரான்ஸ் என்னும் உலகப் பிரசித்தி பெற்ற எழுத்தாளர், அருளுருவங்கொண்ட புத்த பிம்பத்தைக் கண்டதும், "அமைதியான அறிவொளி வீசும் இந்தப் பெரியோன் முன்பு மண்டியிட வேண்டுமென்று எனக்குத் திடீரென்று தோன்றுகிறது" என்றார். உலக மேதைகளின் கவனத்தை இழுக்கக்கூடிய வசீகரம் புத்தருடைய சிலைகளுக்கே இருக்கிறதென்றால், அவர் உயிரோடு வாழ்ந்த காலத்தில், அவருடைய தோற்றம் எவ்வளவு அழகாக இருந்திருக்க வேண்டும்! பௌத்த மதம் உலகுக்குத் தந்திருக்கும் ஓவியங்களும் சிற்பங்களும் என்றும் அழியாத பொக்கிஷங்கள்.

## 3

பாரத நாட்டில் வேத காலத்திலிருந்தே ஆன்மவாதம் இருந்து வந்திருக்கிறது. உபநிடதம், பிரம்மஸூத்திரம், கீதை என்னும் பிரஸ்தானத் திரயம் ஹிந்து மதத்தில் முக்கியமான இடம் வகிக்கிறது. நம் நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலுங்கூட இந்த ஆன்மவாதத்தைப் பயின்ற அறிவாளிகள் நிறைய இருக்கிறார்கள். நமது நாட்டில் இந்த ஆன்மவாதம் மட்டுமே வளர்ந்திருக்கிறது; மற்றக் கொள்கைகள் இந்த நிலத்துக்குப் புறம்பானவை என்று பலர் நினைக்கிறார்கள். ஆனால், இதே பாரத மண்ணில் ஆன்மவாதத்தோடு அநாத்மவாதமும் நீண்ட காலமாக வளர்ந்துவந்திருப்பதை, விருப்பு வெறுப்பற்ற தத்துவ மாணவன் அறிய முடியும். இந் நாட்டுத் தத்துவ தரிசனங்களைப் பயில்கிறவர்கள் இவ்விரண்டையுமே சேர்த்துப் படிப்பது இன்றியமையாததாகும். அப்பொழுதுதான் இங்கே தத்துவங்கள் எந்த முறையில் மலர்ச்சி பெற்று உருவாகியிருக்கின்றன என்பது விளங்கும்.

உபநிஷத்திலுள்ள ஆன்மவாதம் ஸத், சித், ஆனந்தம் என்ற மூன்று விஷயங்களைக் கூறியது. புத்தருடைய கொள்கை இந்த மூன்றுக்கும் மாறுபட்டது. எனவே அவர் உபநிஷத்தின் கருத்துக்கு மாறுபட்டவர் என்பது தேற்றம். ஆனால் அவர் உபநிஷத்துக் கொள்கைகளையே பின்பற்றினார் என்று சிலரும், அவர் காலத்துக்குப் பிறகே உபநிடதங்கள் தோன்றின என்று சிலரும் கூறுகிறார்கள். இவை இரண்டுமே பொருத்தமற்றவை. பின்வரும் புத்த தரிசன விளக்கமே இதை நிரூபிக்கப் போதுமானது.

'ஸத்' என்றால் நித்தியம்; அதாவது எக்காலத்திலும் இருப்பது. இதற்கு முற்றும் மாறாகப் போதிப்பிரான் அநித்தியவாதமாகிய க்ஷணிகவாதத்தை உபதேசித்தார். பௌத்த மதத்துக்கே அடிப்படையான ஆதாரம் இந்த வாதந்தான். இந்த க்ஷணிக வாதம் என்பது என்னவென்று முன்பே ஓரளவு சொல்லியிருக்கிறேன். உலகில் எந்தப் பொருளும் இரண்டு கணங்கூட இருப்பதில்லை. தோன்றும்பொழுதே அது அழிவுடன் பிறக்கிறது. கணத்துக்குக் கணம் மாறும் இந்த உலகில் வாழ்வின் வெள்ளமொன்று ஓடுகிறது. அதனால்தான் முன்கணத்தில் இருந்து அழிந்த பொருள்

இந்தக் கணத்திலும் தொடர்ந்து வருவதாகத் தோற்றுகிறது. கணந்தோறும் இந்த மாறுதல் மிகவும் வேகமாக நடப்பதனால் நாம் ஒரே மனிதனை அடிக்கடி காண்பதாகக் கருதுகிறோம். உண்மையில் ஒவ்வொரு கணமும் புது மனிதன் தோன்றுகிறான்; அழிகிறான். காரியம் தோன்றும்பொழுது காரணம் அதற்கு முன்பே அறவே மறைகிறது. காரணம் அழிந்ததும் காரியம் பிறக்கிறது. விதை அழிந்து மரம் தோன்றுகிறது; இது வெளிப்படத் தெரிகிறது. லட்சக்கணக்கான நுண்ணிய மாறுதல்களின் தோற்றமே இந்த வெளிமாறுதல் என்கிறார் புத்தர். இந்தக் கொள்கையின்படி, மனிதன் ஒருபுறம் கடவுள் ஆன்மா ஆகியவற்றின் பந்தத்திலிருந்து விடுபடுகிறான்; மறுபுறம் அவன் விதியின் கட்டிலிருந்தும் விடுபடுகிறான். பௌத்தத்தைத் தாக்கியவர்கள், இந்த க்ஷணிகவாதத்தையே தாக்கியிருக்கிறார்கள்; ஏனென்றால், இதன் மீதே பெரு மாளிகையாக நிலவுகிறது அந்த மதம்.

'ஆனந்தம்' என்றால் துன்பமின்மை. புத்தரோ துன்பத்தைப் பற்றியே எங்கும் ஆராய்ந்தார்.

'சித்' என்றால் ஆன்மா. இந்த ஆன்மவாதத்துக்கு மாறாகப் புத்தர் அநாத்மத்தை ('அநத்தா'வை)ப் பேசியிருக்கிறார். அவருடைய அநாத்மவாதம் என்பது என்ன? ஒருவரோடு ஒருவர் போரிடும் மக்களுக்கு இரண்டு முனைகளாலும் எவ்வகை அமைதியும் கிடைப்பதில்லை. ஒரு முனை கேளிக்கை; மறு முனை வறட்சி. இந்த இரண்டு முனைகளுக்கும் காரணம் ஆன்மவாதமே என்று அவர் கருதினார். இதிலும் அவர் புது வழியைத் தோற்றுவித்தார். ஆன்மா நிலையானதோ நிலையற்றதோ எதுவாயினும் சரி, இந்த உலகில் துன்பம் இருந்துகொண்டே இருக்கிறது. மனித இனத்தின் வேட்கையால் வந்த பயன் அது. அஷ்டாங்க மார்க்கத்தால் வேட்கையை ஒழித்தாலன்றி உலகில் அமைதி இராது. ஆன்மவாதத்தை விடுத்தால்தான் இந்தப் புதிய வழி விளங்கும். ஆதலால் புத்த பகவான் தம்முடைய முதல் சிஷ்யர்களான பஞ்சவர்க்கீய பிட்சுக்களுக்கு நான்கு ஆரிய சத்தியங்களை உபதேசித்தவுடனே இந்த அநாத்மவாதத்தையும் உரைத்ததாகக் கந்தஸம்யுத்தமும் மகாவக்கமும் கூறுகின்றன. ஆன்மா என்பதைப் புத்தர் பஞ்ச ஸ்கந்தமாகப் பிரித்தார். ஜடப்பொருள், வேதனை, ஸம்ஜ்ஞை, ஸம்ஸ்காரம், விஞ்ஞானம் என்பவை ஐந்து ஸ்கந்தங்கள். "உருவு நுகர்ச்சி குறியே பாவனை, உள்ள வறிவிவை ஐங்கந்த மாவன" என்று இதையே மணிமேகலை (30, 189-90) சொல்கிறது. இப்படிப் பிரித்ததுமே, 'ஆன்மா நிலையானதுமன்று; நிலையற்றதுமன்று' என்று தெளிவாகத் தெரிகிறது. இந்த ஐந்து ஸ்கந்தங்களும் எப்போதும் மாறுபவை, அதாவது அநித்தியமானவை; துன்பம் உண்டாக்குபவை. ஆகையால், 'அவை என் ஆத்மா' என்றோ, 'அது என் ஆத்மா' என்றோ சொல்ல முடியாது. இதுதான் புத்தருடைய அநாத்மவாதம்.

புத்தருடைய இந்த மூன்று வாதங்களும் உபநிஷத்துக்கு நேர் மாறானவை. அந்தக் காலத்தில் வேதபாரங்கதர்களாக இருந்த பல அறிஞர்களை அவருடைய தரிசனம் கவர்ந்திருக்கிறது. அவருடைய முக்கியச் சீடர்களான ஸாரிபுத்திரனும், மௌத்கல் யாயனனும், மகாகாத்தியாயனனும், மகாகாசியபனும் அந்தணர் குலத்திற் பிறந்து வைதிகக் கல்விகளில் தேர்ந்து ஆழ்ந்த சிந்தனையாளர்களாக விளங்கியவர்கள். பிற்காலத்திலும் அசுவகோஷர், நாகார்ஜுனர், அஸங்கர், வஸுபந்து, திங்நாகர், தர்மகீர்த்தி முதலிய பெரும்புலவர்களான அந்தணர்களைப் பௌத்தம் வசீகரித்தது. இந்தியத் தத்துவ சாஸ்திரத்தில் இவர்களின் நூல்களுக்கு முக்கிய இடம் உண்டு. இந்திய மண்ணில் ஆன்மவாதத்தோடு கூடவே அநாத்மவாதமும் நெடுங்காலம் வளர்ந்திருக்கிறது. புத்தர் வேதங்களையும் பிராம்மணர்களையும் பழிக்க வில்லையாயினும், பின்னால் வந்த பௌத்தர்கள் பழைய கட்டுப்பாடுகளை முழுக்க முழுக்க எதிர்த்தார்கள், ஆறாம் நூற்றாண்டில் நாலந்தாவில் வாழ்ந்த தர்மகீர்த்தி தமது 'பிரமாண வார்த்திகம்' என்ற நூலில், "வேதத்தைப் பிரமாணமாகக் கொள்வதும், எவனோ ஒருவனை (கடவுளை) உலகைப் படைத்தவனாக மதிப்பதும், (தீர்த்தங்களில்) ஸ்நானம் செய்வது தர்மம் என்று நினைப்பதும், சாதிச்செருக்கும், பாவங்களைப் போக்க உடலை வருத்துவதும் ஆக இவ்வைந்தும் அறிவீனர்களின் ஜடத்தன்மைக்கு அடையாளம்" என்று பறை சாற்றுகிறார்.

இப்படி நீண்ட காலம் வளர்ந்து வந்த அநாத்மவாதிகளான பௌத்தர்களை மிகவும் கடுமையாகக் கண்டித்து அறவே நிபாதம் செய்தவர், ஏழாம் நூற்றாண்டின் கடைசியில் வாழ்ந்த மீமாம்ஸகரான குமாரிலபட்டர். "குமாரிலர் என்ற சிங்கம் பௌத்தர்கள் என்னும் யானைகளைக் கொன்ற பிறகு வேத சாகைகள் எங்கும் தடையின்றிப் பணைத்துச் செழித்தன" என்கிறது ஒரு சுலோகம். மீமாம்ஸையின் மற்றொரு பிரிவைச் சார்ந்த பிரபாகரரும் இந்தப் போரில் கலந்துகொண்டார். ஜைனர்களும் க்ஷணிகவாதத்தைக் கண்டித்தார்கள். நீலகேசி, நீலகேசி உரை முதலிய தமிழ் நூல்களாலும் இதைத் தெரிந்துகொள்ளலாம்.

பௌத்த ஜைன மதங்களைக் கண்டித்து வைதிக மதத்துக்கு என்றும் இல்லாத பெருமையையும் ஒளியையும் கொடுத்தவர் சங்கர பகவத்பாதர் (788-820). பிரஸ்தானத் திரய பாஷ்யங்களில் அவர் தமது காலத்தில் இருந்த அத்தனை மதங்களையும் வாதங்களையும் ஆராய்ந்திருக்கிறார். அநாத்ம வாதத்தைத் தலையெடுக்க வொட்டாமல் முறியடித்தவர் அவர். கலந்திருந்த சாதிகளை ஒன்றுபடுத்தி அவர் மீண்டும் வர்ணாசிரம முறையை ஒழுங்காக்கினார்.

சங்கரருக்குப் பிறகு தோன்றிய ராமாநுஜரும் (1017-1137) பௌத்தக் கொள்கைகளைக் கண்டித்தார்.

13-ஆம் நூற்றுண்டின் துவக்கத்தில் தோன்றிய துவைத வாதியான மத்வாசாரியர் தமது 'பூர்ணப்ரஜ்ஞதர்சன'த்தில், மற்ற ஆசாரியர்களைப்போலவே க்ஷணிகவாதம், சூனியவாதம், விஞ்ஞான வாதம் ஆகிய மூன்றையும் சுருக்கமாகக் கண்டித்தார்.

இப்படித் தென்னுட்டு மதாசாரியர்கள் மூவரும் கண்டித்து முடிவு கட்டுகையில், புத்தருடைய உருவமும் நீதி உபதேசங்களும் மக்களின் மனத்தில் படிந்து அவர்களின் வாழ்வோடு கலந்து விட்டன. ஜயதேவர் (12-ஆம் நூற்றுண்டு) தமது 'அஷ்டபதி' யிலும், 'ஸாஹித்ய தர்ப்பணம்' என்ற லட்சணக் கிரந்தத்தை இயற்றிய விசுவநாத கவிராஜர் (14-ஆம் நூற்றுண்டு) 'பாவம்' என்பதற்கு உதாரணம் காட்டிய சுலோகத்திலும், புத்தரைத் திருமாலின் பத்து அவதாரங்களுள் ஒன்றுகக் கூறினுர்கள். அந்தக் காலத்துக்குள் புத்தர் ஹிந்து மதத்தில் கலந்துவிட்டார் என்பதை இவை பளிச்சென்று காட்டுகின்றன. 'ஸர்வம் ஜகந்நாதன், எல்லாம் திருமால்' என்ற கொள்கைக்குள் புத்தர் ஐக்கியமாகி விட்டார். ஸுபாஷிதத் தொகுதியில் ஒரு கவி, "எவரைச் சைவர்கள் சிவன் என்றும், வேதாந்திகள் பிரம்மம் என்றும், பௌத்தர்கள் புத்தன் என்றும் பாராட்டுகிறுர்களோ, அந்தத் திருமால் நம்மைக் காக்க" என்று பாடியிருக்கிறுர். வேதாந்த தேசிகர் (1268-1369) தமது தசாவதார ஸ்தோத்திரத்தில் புத்த ருக்கு இடம் தரவில்லை. ஆனுல் அவருடைய காலத்திலேயே நமது நாட்டின் வேறு பகுதிகளில் புத்தர் திருமாலுடன் கலந்துவிட்ட தாகத் தெரிகிறது. எல்லா மதங்களுக்கும் பொதுவான புத்த ருடைய நீதி உபதேசங்களும் ஹிந்து மதத்தில் சேர்ந்தன. அந்தக் கொள்கைகள் ஹிந்து சமயத்துக்கு ஏற்கனவே இயல்பாக இருந்தவை.

கங்கைப் பேராற்றிலிருந்து ஒரு கிளை நதி புறப்பட்டு நீண்ட தூரம் சென்று மீண்டும் கங்கையிலேயே கலப்பதுபோல, பழமை யான சிரமண அந்தணர்களின் பண்பாட்டிலிருந்து உதித்த பௌத்த சமயம், இந்தியாவைப் பொறுத்தவரைக்கும் மீண்டும் ஹிந்து மதத்துடன் கலந்து தன் பெயரையும் வடிவையும் இழந்து விட்டது. வேறு நாடுகளிலோ அது பல கிளைகளாக வடிவெடுத்துப் பரந்து விளங்குகிறது. அதனுல்தான் மகாத்மா காந்தி, "பௌத்த தர்மம் என்ற பொருள் ஹிந்துஸ்தானத்தை விட்டுத் தொலைவில் சென்றது என்றுலும், புத்த பகவானுடைய வாழ்வும் அவர் உப தேசங்களும் பாரத நாட்டிலிருந்து விலகவில்லை" என்று பொருத்த மாகவும் அழகாகவும் சொல்லியிருக்கிறுர். ★

—ஜுன், 1956.

## கா. சீ. வேங்கடரமணி

# நமது கிராம வாழ்க்கை

நம் இந்தியா தேசத்தின் மேன்மைக்கும் பெருமைக்கும், எல்லாச் சிறப்பும் வளமும் பொருந்திய, அதன் குக்கிராம வாழ்க்கையே சிறந்த காரணமென்பதைப் பல பெரியோர் உணர்ந்து கூறியிருக்கின்றனர். கிராம வாழ்க்கை என்பது இந்தியாவில் அநாதி காலமாக நடந்து வருவது. இப்பொழுது இக்கால நாகரிகத்திற்கிசைய நகரங்களிலிருந்து ஓயாமலொழியாமல் உழைத்துச் சலித்தவர்களுக்குக் கிராம வாழ்க்கையானது சுவர்க்கம்போல் இன்பந் தரத் தக்கதாயிருக்கிறது. ஆதலால், கல்விக் கிளர்ச்சி கொண்டு, நகரவாழ்க்கை நன்மை தீமைகளையும் கிராம வாழ்க்கைக் குறைவினால் ஏற்பட்டுள்ள குறைகளையும் எல்லோரும் சீர்தூக்கியறிகிற இக்காலத்தில் நம் நாட்டில், நகரங்களிலெங்கும் 'ஊருக்குத் திரும்புவோம்' என்னும் குரல் கேட்கிறது. ஆம்! அக் குரல் இன்றியமையாததே; நம் பாரத நாடானது பழைய வளத்தை யடைந்து அதில் தேனும் பாலும் பெருக்கெடுத்தோட வேண்டுமாயின், நம் கிராமச் சீர்திருத்தமே அதற்கு ஆதாரமாகும். கிராமச் சீர்திருத்தம் இல்லாவிடின் நம் நாட்டில் எந்தப் பெரிய காரியத்தையும் சாதிக்க இயலாது. உலக நன்மைக்காக நாமும் உழைக்க வேண்டுமென்றால், நம்மைப் போஷிக்கும் கிராமங்களின் நிலைமையை முன்னதாக ஒழுங்குபடுத்தி உயர்த்தியே தீர வேண்டும்.

முற்காலத்தில் கிராம வாழ்க்கைதான் நமது நாகரிகத்தைச் சிதறவொட்டாமல் சுத்தமாகச் சேர்த்து வைத்திருந்தது. அந்நியர் படையெடுப்பு, ஆட்சி முதலிய பெருங் காற்றுக்கூட நம் திருந்திய கொள்கைகளாகிய தீபங்கள் அணையாவண்ணம் இன்றும் அதுதான் பாதுகாத்து வருகிறது. அப் பெருங்காற்று நமது கிராம வாழ்க்கையை இன்னும் முழுதும் சிதைத்துவிடவில்லை; தொன்று தொட்டு வரும் நமது முன்னேற்றத்தையும் முறித்துவிடவில்லை. இடையே உண்டாகும் சிற்சில கேடுகளையுங்கூட, கிராம வாழ்க்கையிலிருந்து உண்டாகும் பெரு நன்மைகளால் மாற்றி நமது நாட்டின் ஜீவதாதுக்களை விருத்தி செய்து வருகிறோம்.

நமது நாட்டின் உயர்நிலை, மேல்நாடுகளிற்போல ஒரு நகரத்திலே முடிச்சிட்டு வைக்கப்படவில்லை. அதை நாம் பலவாகப் பகுத்து ஒவ்வொரு கிராமத்திலும் உட்புகுத்திப் பாதுகாத்து வந்தோம். அதனாலேயே நமது கிராம வாழ்க்கை இன்னும் சிதையாமல் மேன்மையுடன் நிலைத்திருக்கிறது. சுவாசப் பையிலுள்ள

சிறு கண்ணறைகள் பிராண வாயுவை உட்கொண்டு உடலிலுள்ள கெட்ட ரத்தத்தைச் சுத்தி செய்வதுபோல, ஆயிரக்கணக்கான நம் குக்கிராமங்கள் அவ்வப்போது நம் நாட்டின் கேடுகளை நீக்கி நமது வாழ்வை மேன்மைப்படுத்தி வந்துள்ளன. எப்பொழுதும் அலை இயங்கும் கடலில், பவளக் கொடிகள் அவ்வலைகளாற் கேடுறுமல் மேன்மேலும் படர்ந்து நிலைத்திருப்பதுபோல, நம் கிராமங்களும் பல வகைக் கேடுகளுக்கும் தப்பி நிலைத்து அழியாத நல்வளத்தை நம் நாட்டுக்கு அளித்து வந்துள்ளன.

## 2

கிராமங்களின் இத்தகைய சிறப்புக்குக் காரணமென்ன, அவற்றுக்கு ஏன் இவ்வளவு சக்தி என்பவற்றை ஆராய்வோம். மக்கள் அபிவிருத்தி யடைவதற்கு அவர்கள் கூடியும் தனித்தும் வாழவேண்டியிருக்கிறது. சமூக வாழ்வினுல் அபிவிருத்திக்கு ஆதாரமான அநுபவங்கள் கிடைக்கின்றன. ஓடித் திரிந்து மந்தையில் மேய்ந்த பசுவானது தனியே படுத்திருக்கும்பொழுது தான் மேய்ந்து உண்ட உணவை அசைபோட்டுப் பயன்படுத்துவதுபோல, தனிமை வாழ்வினுல் சமூக வாழ்விலுண்டாகும் அநுபவங்களையெல்லாம் பழக்கத்திற் கொண்டுவந்து அநுஷ்டிக்கலாம். ஆகவே இவ்விருவகை வாழ்க்கைகளும் இன்றியமையாதனவே. ஆனுல், இவற்றிற்கு ஓர் அளவு வேண்டும். தனிமையான வாழ்க்கையால் நாட்டு நடப்பொன்றும் தெரியாமல் கிணற்றுத் தவளை போலாகிவிட நேரும். எப்பொழுதும் கூட்டத்திலேயே இருந்து வந்தாலும் ஆற்று வெள்ளத்தில் மிதக்கும் கட்டையைப்போல இழுத்த வழியெல்லாம் போகவேண்டியதாகிவிடும். ஆதலால் இவ்விரு வகையும் கலந்ததொரு வாழ்க்கை நமக்கு வேண்டியதாகிறது. கிராம வாழ்க்கைதான் இவ்விரு வகை வாழ்வையும் சரிவர இணைத்துப் பக்குவப்படுத்தி அமைத்து நமக்கு மேன்மை தருவதாகும். ஆதலால்தான் கிராம வாழ்க்கை சிறந்த சக்தியுடையதாகிறது. எனவே கிராமங்களின் நேர்மைக்குரிய சாதனங்கள் எவையென்று நாம் தேடுவது மிகவும் அவசியம்.

நம் கிராமங்களின் சீர்திருத்தம் நம் நாட்டுக்கு மட்டுமன்றி உலகத்திற்கே நன்மை தருவதாகும். ஏனெனின், இந்தியாவிலுள்ள கிராமவாசிகளின் தொகை உலகமுழுதுமுள்ள ஜனத்தொகையில் ஐந்திலொரு பங்காகும். அதாவது சுமார் 30 கோடி ஜனங்கள் இந்திய கிராமவாசிகள். இவ்வாறு உலகின் ஜனத்தொகையில் ஐந்திலொரு பங்கு ஒரே நாட்டிலிருந்து மேன்மையுறுவது ஒரு பெருஞ் சிறப்பன்றே? இப்பொழுது தேச பக்திக் கிளர்ச்சி மிகுந்துள்ள நம் பாரத நாட்டில் பெரும்பாலோர் இடையே கைவிட்ட கிராம வாழ்க்கையிலும் அதன் சீர்திருத்தத்திலும் ஊக்கங்கொண்டிருப்பது நாட்டிற்கு நல்ல காலத்திற்கறிகுறிதான். நோய் வந்தால்தானே நோயற்ற வாழ்வின் பெருமை புலப்படும்? நிழலின் அருமை வெயிலில் போனுல்தானே தெரியும்?

## 3

பழைய வளப்பமான முறையைப் பின்பற்றி வருவதாற் சிறந்து விளங்கும் கிராமங்களை இப்பொழுது பார்ப்பதரிதாகிவிட்டது. இடையே சுமார் ஐம்பது வருஷத்திற்குள் இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆயினும், குளந் தூர்ந்து குட்டையாகி அதுவும் வறண்டு போனாலும் நீர் இருந்த இடத்தின் அடையாளங்கள் காணப்படுவது போல, கிராமங்களின் பழைய சின்னங்கள் இன்னும் சிறிதளவு சிதையாது காணப்படுகின்றன.

ஊர்ப்புறமாக ஓடும் ஆற்றையும் கால்வாயையும் ஏரியையும் பழைய சாலையையும் எல்லையாகக் கொண்டு, தோப்பு, துரவு, குளம், குட்டை, வயல்வெளிகளுடன் திகழ்வது சிறந்த கிராமம். தோப்பின் நடுவில் அக்கிரகாரமும், அதன் ஒரு புறத்தில் ஆலயமும், அதனை அடுத்துக் குளமும், புறத்தே சூழச் சேரிகளும், தொழிலாளர்கள் வீடுகளும் அமையப்பெற்று விளங்கும் கிராமத்தின் சிறப்பை என்னென்று உரைப்பது! 'கோவிலில்லா ஊரிற் குடியிருக்க வேண்டாம்' என்னும் கொள்கையானது நமது தமிழ் நாட்டினரின் மனத்தில் ஆழமாக வேரூன்றியிருக்கிறது. ஆகவே கிராமத்திற்குக் கோவில் ஒரு சிறந்த அங்கமாகக் கருதப்பட்டுவருகிறது. அது கிராமத்தாரின் ஒற்றுமைக்குச் சிறந்த கருவியும் ஆகிறது. ஒரு நல்ல கிராமத்தின் உயர்வு அதன் நீர் நிலவளங்களினால் மட்டுமன்று; அது கிராமவாசிகளின் குணகுணங்களையும் இயற்கையையும் பொறுத்துத்தான் இருக்கிறது.

ஒரு நல்ல கிராமமானது தனக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தானே உற்பத்தி செய்து கொள்ளக் கூடியது; பிற அவசியமான தேவைகளையும் தானே பூர்த்தி செய்து கொள்ளக் கூடியது; நெல்லும், நவதானியங்களும், பயிருக்கும் பாலுக்கும் வேண்டிய கால்நடைகளும் குறைவின்றி உடையது. மேல்நாட்டு நாகரிகத்தின் உல்லாச வாழ்வுக்கேற்ற ஆடம்பரப் பொருள்களைச் செய்ய இயலாதவராயினும் சாதாரணமான தேவைகளைத் தடையின்றி நிரப்பக் கூடிய தொழிலாளர்கள் பலர் அங்கே இருப்பார்கள். தச்சன், கொல்லன், கொற்றன், வண்ணான், அம்பட்டன், சேணியன், தட்டான் ஆகிய அத்தொழிலாளர்கள் அனைவரும் கிராமத்தாருடன் ஒன்று சேர்ந்து கிராமத்தின் நன்மையைக் கருதி மனமொத்து உழைப்பார்கள். அவர்களுக்கெல்லாம் சம்பளம் மானியமாய் விடப்பட்ட நிலமே. அந் நிலம் விளைந்தால்தான் அவர்களுக்குச் சாப்பாடு. ஆதலால் மிராசுதார்களுக்குள்ள பொறுப்பு அத்தொழிலாளிகளுக்கும் உள்ளதாகிறது. ஒரு கிராமவாசி எந்தத் தொழில் செய்து வந்தாலும் அது கடைசியில் விவசாயத்தில் போய்த்தான் நிற்கும். மேற்கூறிய பலவேறு தொழிலாளிகளையும் ஒன்று படுத்துவது கோவில் கைங்கரியமாகும். அஃது எல்லாருடைய வேலைக்கும் பொதுவான ஓர் ஊக்கத்தை உண்டாக்குகிறது.

கிராம வாழ்க்கையின் மேன்மைக்கு முக்கிய காரணம், பண்ணை யார்களுக்கும் பண்ணையாட்களுக்கும் உள்ள அந்நியோந்நிய பாவமே. அவர்கள் எப்பொழுதும் நகமும் சதையும்போற் கலந்து காரியங்களில் ஈடுபட்டு உழைப்பார்கள். ஆட்களுக்கும் தொழி லாளிகளுக்கும் தொன்றுதொட்டு வந்த முறையை அநுசரித்து அவரவர் வேலைக்கும் தேவைக்கும் ஏற்பக் கூலிகள் வரையறுக்கப் பட்டிருந்ததனால் மனஸ்தாபங்களுக்கு இடமில்லை.

பழைய முறையிலுள்ள கிராமங்களில் மேற்கூறியபடி ஒவ் வொரு தொழிலாளிக்கும் விடப்படும் மானிய நிலங்கள் சாதாரண மாக அவனவன் குடும்பத்தை ஆதரிக்கப் போதுமானவையாக இருக்கும். கிராம வாழ்க்கையில் சுகமாய் வாழ்வதற்குத் தேவை கள் அதிகம் வேண்டுவதில்லை யன்றோ? இரண்டு தென்னை, நாலு வாழை, சில ஆடுமாடுகள், மூன்று ஏகர் நிலம் ஆகிய இவை ஒருவனுக்கு இருப்பின் அவன் பாடு ராஜபோகந்தான்! தொழிலாளி களுக்கு இந்த மானிய வரும்படி தவிர, அதிகப்படியாக அவர் செய்யும் சில வேலைகளுக்காக அவ்வப்போது நெற்கூலியும் கொடுக் கப்படும். அவர்களுக்குக் குடியிருக்க மனைக் கட்டும் உண்டு. சுருங்கச் சொல்லின், நகரவாசிகள்போல ஜேபியில் போட்டுக் குலுக்கி உல்லாசமாய்க் கண்டவற்றிலெல்லாம் வாரி யிறைக்க வேண்டிய காசு அவர்களுக்கு இல்லாவிடினும், சாதாரணமாக ஒருவன் சௌக்கியமாக வாழ்வதற்கு வேண்டிய எல்லாச் சௌகரி யங்களும் கிராமங்களில் உண்டு. நிலம் நன்கு விளைந்தாலன்றிக் கிராமவாசிகளுக்கு ஜீவனம் நடைபெறுதாகையால், நிலச் சாகுபடி விஷயத்தில் அனைவரும் உரிய காலங்களில் ஒத்துழைத்தே தீர வேண்டும். அவ்வாறு உழைப்பதில் நகரவாசிகளைப்போலக் கிராமவாசிகளுக்கு அடிக்கடி சளைப்பு ஏற்படுவதில்லை. அவர்கள் நெற்றிவேர்வை நிலத்திற் சொட்ட நாள் முழுதும் உழைத்தாலும், 'அதனால்தானே நமக்கு உணவு?' என்ற உணர்ச்சி அந்தக் கஷ் டத்தை மாற்றிவிடும். கேவலம் காசுக் கூலிக்காகப் பிறருக்கு உழைத் தாலன்றோ மன வெறுப்புக்கு இடம் இருக்கப் போகிறது? ஆகை யால், கிராமத்தைப் பொறுத்த வயல், வாய்க்கால் வெட்டு, எருவடித் தல், தண்ணீர் பாய்ச்சுதல், வடிகட்டுதல், குளம் வெட்டுதல், கோவில் கட்டுதல் முதலிய எல்லாப் பொதுக் காரியங்களிலும் அனைவரும் மனமொத்துச் சிரத்தையுடன் சிறியதையும் பெரியதாக மதித்துச் சிறக்க நடத்துவார்கள்.

ஒரு கிராமத்தில் இத்தனை பேருக்கும் நிலம் தேடிக்கொடுக்க வேண்டியிருக்கிறபடியால், ஒருவருக்கும் பிறரைத் துன்புறுத்தி அடக்கியாளத் தக்க பெருமிதமுண்டாக்கும்படியான அதிக நிலங் கள் கிடைப்பதில்லை. இதனால் ஒரு நல்ல, பழைய முறையிலுள்ள சிறந்த கிராமத்தில், அநேகமாக எல்லோருக்கும் நிலம் சமபாக மாய்த்தான் இருக்கும்.

## 4

இனி, கிராம சமுதாய நடவடிக்கைகளும் வயல்வெளி வேலைகளும் எவ்வாறு நடைபெறுகின்றன என்பதைப் பார்ப்போம். தொழிலாளிகளைப் போலவே பண்ணையாட்களுக்கும் மானியமும் குடியிருப்பு வீடும் உண்டு. இவை தவிர, அறுப்புக் காலத்தில் கண்டுமுதலில் கலத்திற்கு இவ்வளவென்று குறிப்பிட்ட பங்கு ஒன்றும் பரம்பரைப் பண்ணையாட்களுக்கு உண்டு. தீபாவளி, பொங்கல் சமயங்களில் ஒரு ஜோடி வேஷ்டியும் படியும் உண்டு. வாரச் சாகுபடி செய்பவர்கள் அந்த அந்த நிலத்தின் தரத்துக்கேற்றவாறு பழமையாக விதிக்கப்பட்டுள்ள வீதப்படி நெல்லைப் பெறுவார்கள். மிராசுதாரர்களும் பண்ணையாட்களின் வீட்டுச் சுக துக்கங்களில் பொறுப்புடையவர்களாய்ச் சமயங்களில் உதவிபுரியக் கடமைப்பட்டிருந்தார்கள்.

ஒவ்வொரு கிராமத்திலும் 'தலையாரி', 'நீராணிக்கக்காரன்' என்ற சில்லறைச் சிப்பந்திகள் உண்டு. இவருள் தலையாரியின் வேலை கிராம ஆட்சிக்கு மிகவும் முக்கியமானது. கிராமக்காவல் அவன் பொறுப்பு. கிராமத்தின் உயர்நிலை அவன் கையில்தான். ஊர்க்காவல் தவிர, கிராமப் பொது வேலைகளுக்கு ஆட்களைச் சேர்த்து அவற்றைக் கவனிப்பதும் அவன் பொறுப்பு. அவனுக்கும் முதல் தரமான மானியம் உண்டு. நீராணிக்கக்காரனுக்கும் மானியந்தான். அவன் வேலை, ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமின்றி எல்லோருடைய வயலுக்கும் ஒன்றுபோல நீர்ப்பாசனத்தைக் கவனிக்க வேண்டியது. கண்டுமுதல் காலத்தில் நீராணிக்கக்காரனுக்கு ஒவ்வொரு பண்ணையிலும் களத்திலும் ஒரு கட்டு நெற்கதிர் பங்கு உண்டு.

இவர்களையெல்லாம் அடக்கியாண்டு கிராம நிர்வாகத்தைச் சரிவர நடத்துவதற்கு, வெளி நாடுகளிலும் பெயர் பெற்றதாகிய பஞ்சாயத்து முறை ஏற்பட்டுள்ளது. 'பஞ்சாயத்து' என்பது ஐந்து பேர் கொண்டதோர் ஆலோசனைச் சபை; இது கிராமத்தார் ஒன்று சேர்ந்து தமக்குள் அமைத்துக் கொள்வதாகும். இச் சபையின் தலைவர் 'முதல் பஞ்சாயத்து' அல்லது 'நாட்டாண்மைக்காரர்' எனப்படுவார். இப் பதவி வம்ச பரம்பரையாக வரும். பிரிட்டிஷ் அரசாங்க முறைகள் பரவுமுன், நம் தமிழ் நாட்டில் அரசர்கள் முடிதரித்துச் செங்கோல் பிடித்துச் சிங்காதனம் ஏறிப் பேருக்கு அரசு புரிந்துவந்தாலும், இப் பஞ்சாயத்துச் சபைகளே ஆட்சி முழுவதையும் தாமே நடத்திவந்தன.

பஞ்சாயத்து, சம்பளமில்லாத கௌரவ வேலையாதலால் இதில் இருப்பவர்கள் பெரும்பாலும் நல்ல நிலையிலுள்ளவர்களாகக் கிராமாபிவிருத்தியில் எப்பொழுதும் நோக்கமுடையவர்களாக இருப்பார்கள். அதிலும் பஞ்சாயத்துத் தலைவர் பரம்பரைப் பிரபுவாய்க் கல்வியறிவும், சாந்தம், பொதுநோக்கம், தரும சிந்தனை முதலிய சிறந்த குணங்களும் உடையவராகவே இருப்பது வழக்கம். ஆதலால்

கிராமத்தில் அவர் இட்டது சட்டமாக இருக்கும். நம் நாட்டில் இது வரை குணத்திற்கே பெருமை அதிகமன்றிப் பணத்திற்கன்று. ஒருவருடைய சாமர்த்தியத்துக்கும், அஞ்சாது தொழில் புரியும் ஆற்றலுக்குமாகப் பளபளவென்று மின்னும் வெள்ளி ரூபாய்களைப் பரிசாக அளிப்பதில்லை. வணக்கம், ஒடுக்கம், சாந்தம், சீலம் இவற்றிற்குத்தான் கௌரவம். ஆனால் இம் முறையும், மேல் நாட்டு நாகரிகம் முற்றிய இந்த இருபதாம் நூற்றாண்டில் மாறி வருகிறது.

நாட்டாண்மைக்காரருக்கு எல்லா அதிகாரமும் இருந்தாலும், நடவடிக்கையில் அவர்கள் பண்டைக் கால முறைகளையும் சுற்றி யுள்ள பலரையும் அநுசரித்தே போகவேண்டும். மலைச்சரிவுகளி லிருந்து ஒரு வழியின்றிப் பல முகமாகப் புரண்டோடிவரும் மழை நீர், சமபூமியை அடைந்ததும் ஒருவழிப்பட்டு 'ஆறு' என்ற பெயர் பெற்று வரம்பு கடவாமல் ஓடுவதுபோல நமது நாட்டில் ஒரு நெறி நில்லாத மனித வாழ்க்கையைத் தரும பரிபாலனமென்னும் ஆற்றின் கரைகொண்டு ஒழுங்குபடுத்தி யிருக்கிறார்கள். அந்த ஆறு வரம்பு கடக்க முடியாதல்லவா? ஆதலால் தருமத்தை விட்டு விலகிக் கிராமப் பஞ்சாயத்தும் நடக்க முடியாது.

சாகுபடிக் காலத்தில் கிராமத்தின் நிலங்களைச் செவ்வை செய்யக் கிராமத்தாரெல்லாருடைய ஊக்கமும் ஒத்த உழைப்பும் வேண்டும். ஆதலால், ஒரு நல்ல கிராமத்தில் எல்லாரும் ஒற் றுமை யுடையவர்களாகவே இருப்பார்கள். ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையும், தரும சிந்தனையும், ஒற்றுமையுமே கிராமவாசிகளுக்கு அழகு. அவர்கள் கணக்கில்லாமல் கண்ட புத்தகங்களையெல்லாம் வாசியாவிட்டாலும், வரிசை வரிசையாக மேடைகளில் பலவாறான பிரசங்கங்களைக் கேளாவிட்டாலும் அவர்களுடைய பொது அறிவின் வளர்ச்சிக்கும், வாழ்க்கையின் தேர்ச்சிக்கும் சிறிதும் குறைவில்லை.

தம் வயலிலும் வாழ்விலும் விழல் மண்டாதபடி தினந்தோறும் களையெடுத்த வண்ணமாகவே யிருப்பார்கள். இதன் பலனே கிராமத்தில் நோயற்ற வாழ்வும், குறைவற்ற செல்வமும், தர்ம சிந்தை, பொறுமை, சாந்தம் முதலிய உயர் குணங்களும் குடி கொண்ட குடிகள் நிரம்பி யிருத்தலாகும்.

இவ்வுலகில் உள்ள பொருள்கள் எல்லாம் அழியும் பொருள் களாதலால், உணவுப் பொருள்களையும் விற்றுக் காசாக்கிச் சேர்த்துப் பாங்கியில் போடும் புத்தியை நம் கிராமவாசிகளுக்கு ஈசன் கொடுக்கவில்லை. ஆகையால் அவர்கள் தமக்குக் கண்டு மிஞ்சும் காய்கறி, தானியங்கள் முதலியவற்றைச் சுற்றத்தாருக்கும், ஏழைகட்கும் கொடுத்து உதவுவார்கள். சமாராதனை முதலிய தரும வழிகளிற் செலவிடுவார்கள். வயலில் உழைக்கும் பண்ணையாட் களுக்கும் அவரவர் தேவைக்கேற்ப வேண்டிய சமயங்களில் கொடுப்பார்கள். இவ்வாறு பல வகையிலும் அவை செலவிடப்

படுவதன்றி விற்பதென்ற வழக்கமே கிடையாது. கிராமத்தார்கள் உணவுப் பொருள்களை விற்பதென்பது சமீபகாலத்தில் ஏற்பட்ட புது வழக்கமாகும். இப்பொழுது குழந்தைகள் அருந்துவதற்குரிய பாலையும் விற்றுக் காசாக்கிக் காபிக்கொட்டையும் மண்ணெண்ணெயும் வாங்குகின்றோம்; என்ன கொடுமை! இத்தகைய் கொடுமைகளின்றி மேற்கூறியபடி செவ்விய முறையில் நடந்து வந்ததனால்தான் நம்முடைய கிராமங்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய்ச் செழிப்புற்று ஓங்கி எங்கும் அமைதி நிலவ மேழிச் செல்வத்தின் கெடாத மேன்மைக்குச் சாட்சியாக விளங்கி வந்தன.

இப்பொழுது நகர வாழ்க்கையில் முழுகியிருப்பவருக்கு, இது வரை கூறியவையெல்லாம் ஏதோ புனைந்துரையாகத் தோன்றலாம். ஆயினும், காவேரி தீரத்தில், பேராலமரம் போல நெடுங்காலமாக விளங்கி வரும் சில இனும் கிராமங்களில் மேற்கூறிய மாசற்ற முறைகள் இன்றும் வழங்கி வருவதைக் காணலாம். எல்லாக் கிராமங்களிலும் மீண்டும் இம்முறைகள் வந்து, எளிய இனிய வாழ்க்கை நடைபெற்றால்தான் நம் நாட்டில் சுவர்க்க இன்பத்தினும் இனிய சுகமும் அமைதியும் உண்டாகும்; நிலைபெறும்.

'உழவே தலை' என்னும் கொள்கையை நெடுங்காலமாகக் கையாண்டு நிற்கும் கிராம மக்களின் மனம், பிற ஆடம்பரத் தொழில் முயற்சிகளிற் செல்லுமாயின் கிராமங்களின் பெருமை நிலையாது. ஏனெனில், கிராமங்களின் அளவையும் அழகையும் வாழ்க்கையையும் வேறுபடுத்தாமல், இயற்கைக் குடிசைகளில் அவ்வாடம்பர யந்திரத் தொழில்களை ஒரு நாளும் நடத்த முடியாது. ஆதலால், இத்தகைய மாறுபட்ட ருசியே நம் கிராம வாழ்க்கையின் சிதைவுக்கு முக்கியக் காரணமாகிறது. இரண்டாயிரமாண்டுகளுக்கு மேலாகப் பல படையெடுப்புகளும் சச்சரவுகளும் ஆட்சிமுறைகளும் தாக்கியபோதிலும் தாங்கிப் பிழைத்து ஓங்கி வளர்ந்துவந்த நம் கிராமங்களின் சீர்கெடுதலுக்கு, ஆடம்பர வாழ்க்கையிலுள்ள மோகமே தூமகேதுவாகத் தோன்றியுளது. பல புயற்காற்றுக்கும் தப்பி ஓங்கி வளர்ந்து, நன்கு குலை குலையாய்க் காய்க்கும் ஒரு தென்னை மரத்திலே வேர்க்கறையான் பற்றியதுபோலத் திருந்திய கிராம வாழ்க்கையிலே இந்த மனக் கறையான் பற்றியுள்ளது.

மேல்நாட்டு நாகரிகமாகிய புது வெள்ளம் நம் நாட்டிற் பரவி வருவதால், பல பல புதிய பழக்க வழக்கங்கள் தோன்ற, அவை நமது புராதன ஆசாரங்களாகிய பழைய வெள்ளத்தை அடித்துக் கொண்டு போய்விடுகின்றன. அவை, அவ்வப்போது உண்டாகும் அற்ப சந்தோஷமாகிய மயக்கத்தைத் தருவனவன்றி வேறில்லை. அவற்றால் இம்மையில் அமைதியான இனிய எளிய வாழ்வையோ அல்லது மறுமையில் நல்ல பயனையோ அடைய முடியாது.

ஆரம்பத்தில் சிறிது சௌகரியத்திற்காகவும் ஆடம்பரத்திற்காகவும் வாங்கும் பொருள்களும் கைக்கொள்ளும் பழக்கங்களும்

நாளடைவில் இன்றியமையாதனவாகி விடுகின்றன. அவற்றிற்காக நம் உணவையே விற்று அவற்றைப் பெறவேண்டியிருக்கிறது. அதனால் வருஷத்திற்கு வருஷம் நம்முடைய செல்வம் குறைய, கிராமங்களும் க்ஷீணிக்கின்றன. கிராமங்களில் பெரிய சீமான்களாக, நெல் களஞ்சியம் எந்நாளும் குறையாமல் இருக்கக் கூடியவர்களுக்கும் இப்பொழுது, ஆறு மாதத்துச் சாப்பாட்டுக்கு வேண்டிய நெல்கூடக் குதிரிலிருப்பது அரிதாகி விட்டது. அவ்வாருயின் கூலி வேலை செய்வோர் நிலைமையைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? இந்தக் கஷ்டத்தால் அவர்கள் தங்கள் மானியங்களையும் வீடுவாசல்களையும் ஊரையும் விட்டு, நகரங்களையும் அந்நிய நாடுகளையும் தேடிச் சென்று சொல்ல முடியாத கஷ்டங்களுடன் பல ஈனத் தொழில்களைச் செய்து வயிறு வளர்க்க நேரிடுகிறது. அப்படியும் அரை வயிற்றுக் கஞ்சிக்குத்தான் கிடைக்கிறது. அதிலும் மண்ணைப் போடப் பல கெட்ட பழக்கங்கள் அவர்களைப்பற்றிக் கொள்கின்றன. கிராமங்களில் அவர்கள் வயிற்றுக்குத் தாழாமல் சோறு கிடைத்தாலல்லவோ முணுமுணுக்காமல் வேலை செய்ய முடியும்; மேழிச் செல்வமும் வளரும்?

நம் நாட்டுக்கு வந்த கேடு இதனால் மட்டுமன்று. கிராமங்களில் தலைமையுள்ளவர்கள்-பரம்பரைப் பஞ்சாயத்தார்கள்-நாட்டாண்மைக்காரர்கள்கூட, ஆங்கிலம் படித்துப் பட்டம் பெற்று, கலெக்டர்களாகவும் ஜட்ஜுகளாகவும் ஆகிவிடுவோம் என்னும் ஆசையுடனும், பொருளை மூட்டை மூட்டையாக வாரிக் கட்டலாமென்னும் நோக்கத்துடனும் தங்கள் கிராமம் பாழாக நகரங்களில் சென்று தங்கிக் குமாஸ்தாக்களாகவும் வக்கீல்களாகவும் அமர்ந்து வீணே உழைத்துக் கைப்பொருளையும் இழந்து கஷ்டமடைகிருர்கள். இதுவும் கிராமங்களுக்கு வந்த ஒரு பெரிய துரதிருஷ்டமல்லவா? இந்தப் பேராசையே சாத்துவிக விருத்தியிலிருந்து நம் மனத்தைத் திருப்பிப் பொய்க் காசு செய்யும் பொல்லாப் புத்தியை உண்டாக்கி, நோயற்ற உயர்ந்த கிராம வாழ்க்கையைத் தொலைத்து, நகரங்களின் சாக்கடையில் நம்மைத் தள்ளிவிட்டது. கிராமங்களில் மனவமைதியுடன் கையிற் சுவடியேந்தித் தியானம் செய்து வந்த நாம் நகரங்களின் சந்தையிரைச்சலிற் குடியிருந்துகொண்டு பெட்டியடியில் உட்கார்ந்து கையில் தராசு பிடிக்கத் தொடங்கிவிட்டோம். ஆகவே கிராமங்களின் செல்வமும் அமைதியும் சீர்குலைவது ஆச்சரியமா?

நமது பாரத நாட்டில், தேனடையிலுள்ள சிற்றறைகள் போல ஏழு லட்சம் கிராமங்கள் இருக்கின்றன. அவற்றிலுள்ள முப்பது கோடி தேனீக்களும் பரிசுத்தமான, ஈசுவரனுக்குப் பிரியமான தும்பைப் பூவை விட்டுக் கேவலமான புளியம் பூவைச் சுற்றித் தேன் சேகரிக்க முயலுகின்றன. இந்த ஏழு லட்சம் கிராமங்களின் நிலைமையையும் நேர்படுத்துவதே இப்பொழுது இந்தியரின் முதற் கடமை. அதுவே நமது அழியாத பாக்கியம். ஆதலால் இப்பொழுது நாட்டில் ஏற்பட்டுள்ள புதிய கிளர்ச்சியின் முக்கியமான வேலை என்னவென்ருல் முதலில் சீர்குலைந்துள்ள இந்த லட்சக்கணக்கான கிராமங்

களைத் திருத்தியமைப்பதாகும். அவ்வாறு செய்வதில், மேல்நாட்டு நாகரிகத்தின் நல்ல அம்சங்களையும், சுகாதார முறைகளையும் கைக்கொண்டு பழைய முறைகளோடு கலந்து மேன்மைப்படுத்த வேண்டும். அப்படிச் செய்யின் நம் நாட்டில் மட்டுமன்று, உலக முழுவதுமே கிராம வாழ்வின் சிறப்பை நாம் பரவச் செய்தவர்களாவோம்; அது நமது கடமையாகும்.

## 5

இனி, கிராம வாசத்தின் மேன்மைக்குக் காரணமும், அதன் உட்பொருளும், அதனால் உலகத்தார் அறிந்து கொள்ள வேண்டியதும் என்னவென்றும் பார்ப்போம்.

உலகில் மேம்பட்டுவரும் ஜனசமூகங்களின் மேடுபள்ளங்களுடன் கூடிய இல்லற வழியைக் கிராம வாழ்க்கையானது ஒரு நிரவின சமவழி யாக்குகிறது. கிராம வாழ்க்கையில்தான் கடவுளுக்கு உகந்ததொரு சிறந்த கொள்கை இருக்கிறது. அதாவது உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றி எல்லோருக்கும் அவரவர் தேவைக்கேற்ப உணவுப் பொருள்கள் தட்டாது கிடைக்க வேண்டும் என்பது.

அதுதான் நம் பாரத நாட்டின் சிறந்த கொள்கை. அது கிராமங்களில்தான் உள்ளது. சாமர்த்தியத்துக்குத் தக்கபடி சம்பாத்தியமென்ற மேல்நாட்டுக் கொள்கைக்கு நமது புண்ணிய பூமியில் இடமில்லை. பசி என்பது எவருக்கும் சமந்தானே? மிகச் சுறுசுறுப்புள்ள தொழிலாளியாக இருந்தாலென்ன, பண்ணை வேலை செய்யும் பேதையாக இருந்தாலென்ன,

"சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி யரிசிக்கே நாம்" (நல்வழி)

என்றபடி சாண் வயிறு எல்லோருக்கும் ஒன்றுதானே?

நம் நாட்டில் நற்புத்திக்கும், நன்னடக்கைக்கும், விடாமுயற்சிக்கும், தெய்வ பக்திக்கும், பிற நற்குணங்களுக்கும் ஆயிரக்கணக்கான ரூபாய் சம்பளமும் வருஷாந்தர உயர்வும் பரிசாக அளிப்பது வழக்கமில்லை. அத்தகைய மேன்மைக் குணமுடையோருக்குப் பிறர் செய்யும் வணக்கமும் காட்டும் மரியாதையுமே பரிசு. எவருக்கும் இன்பம் அளிக்கத்தக்க இவ்வுயர்ந்த சட்டமல்லவோ உலகமெங்கும் பரவ வேண்டும்? நமது புராதன கிராம வாழ்க்கையின் உயர்ந்த லட்சியம் இதுதான்.

உழவைத் தவிர வேறு சிறந்தனவாயுள்ள கைத்தொழில்களுள் ஒன்றையும் தெரிந்து கொள்ளாமையால்தான் அவர்கள் குக்கிராமங்களில் கிடந்து கஷ்டப்பட்ட போதிலும், புன்மையான

அந்த வாழ்வையே உயர்வானது என்று புகழ்ந்து கூறுகிறார்கள் என்று சிலர் நம்மைக் குறை கூறுவதுண்டு. உண்மை அப்படியன்று. ஒவ்வொரு மனிதனுடைய தனி வாழ்க்கையிலும் சாத்துவிக ராஜஸ தாமஸமாகிய முக்குணங்களும் கலந்து அலைபோல் புரண்டு காணப்படுகின்றன.

நகர வாழ்க்கையில் தாமஸ குணமே மிகுந்து காணப்படுமாதலாலும், சாத்துவிக குணத்திற்குக் கிராம வாழ்க்கையே உரிய சாதனமாதலாலும் அவ்வியற்கைகளை அறிந்து முக்காலமும் அறிந்த நம் முனிவர்கள் அம் முக்குணங்களிற் சிறந்த சாத்துவிகம் ஓங்கவும், அதமமாகிய தாமஸம் குறையவும் ஏற்ற வகையில் கிராம வாழ்க்கையை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

எப்பொழுதும் கர்மாவையே செய்யும்படி தூண்டும் மாமிச பிண்டமாகிய இச் சரீரத்துக்கும், கர்மாவை விட்டு விலகி ஏகாந்தமாய் ஈசனுடன் கலந்து நிற்க விரும்பும் ஆத்மாவுக்கும் அபிவிருத்திக்குரிய சாதனங்கள் கிராம வாழ்க்கையிலேதான் கிடைக்கும். அலைகடலில் அகப்பட்டுப் புயலால் மோதுண்டு தத்தளிக்கும் மரக்கலத்துக்கு அதனை நங்கூரம் பாய்ச்சி அசையாமல் நிறுத்துதற்கேற்ற அலையற்ற துறைமுகமாக - உயிருக்கு உடலாவது போல் - இந்த ஜனசமுதாயத்துக்குக் கிராம வாழ்க்கையே மிகச் சிறந்த ஆதாரமாகும். ★

— ஏப்ரல், 1932.

# சிரத்தைக்கு என்ன வேண்டும்?

தொன்றுதொட்டு வரும் மதத்தின்கண் நமக்கு இருக்கும் நம்பிக்கைக்கு என்ன காரணம்? தாய்நாடா? அறிவை யூட்டும் நூற்பயிற்சியா? முறைப்படி வழங்கும் சடங்கா? சுற்றி நடை பெறும் விழாக்களா? ஸ்தல யாத்திரையா? பட்டினி, விழிப்பு, பூசை முதலிய அநுஷ்டானமா? இவையொன்றும் இன்றி மனித ருக்குத் தெய்வபக்தி இருத்தல் கூடும். உண்மையில் அது வேறொன்றைப் பொறுத்து நிற்பதில்லை. இந்த ஆழ்ந்த தத்து வத்தை அவரவர் தத்தம் அநுபவத்தால் உணர்ந்திருப்பர். எனக் குத் தெரிந்தவைகளுள் அயல்நாட்டு அநுபவங்கள் மூன்றைக் கூறுகிறேன்.

## 1

1922-ஆம் வருஷத்தில் நியூஸீலண்ட் என்னும் 'டொமினி யனி'ல் குடியேறிய இந்தியருக்கு மற்ற இனத்தாரைப் போலவே உரிமைகள் கிடைக்க வேண்டுமென்று வழக்காடப் போனேன். அவ்விடத்து ராஜதானியான வெலிங்டன் நகரில் என்னைக் காண ஓர் இந்தியர் வந்தார். நல்ல உடை அணிந்திருந்தாலும், நிலை, நடை, பேச்சுத் தோற்றங்களாலும் பெரிய மனிதரென்று அவரைக் கருதினேன்.

வழக்கமான கேள்வி கேட்டு விடைபெற்ற பிறகு, வந்த காரி யத்தை விசாரிக்கலானேன். அவர் துறைமுகத்தில் பளுவான சாமான்களை ஏற்றி யிறக்கிப் பிழைப்பவர்; நாளொன்றுக்குச் சுமார் பத்து ரூபாய் கூலி பெறுவார்; குடியிலாவது அதுபோன்ற வேறு வழியிலாவது பணச்செலவு செய்யாமல் பாங்கில் தக்க தொகையுள்ளவர். இந்தியாவுக்குத் திரும்ப வேண்டுமென்கிற ஆவல் அவருக்கு வலுத்தது.

ஐக்கிய மாகாணத்தில் கங்கையின் வட கரையில் ஓர் ஊரில் அவர் பிறந்தார்; ஊர்ப் பெயர் சரியாய் நினைவில்லை. பிராமண ஜாதியாம். அவர் மூன்றும் பிராயத்திலேயே வெளியேறினவர். கொடிய பஞ்சகாலத்தில் எவனோ கங்காணி, கூலியாட்களைச் சேர்ப்ப தற்கு வந்து ஆசை காட்டி முன்பணம் கொடுத்து அவர் தாய் தந்தை யரை அழைத்துக் கப்பலேற்றிவிட்டான். ஆஸ்திரேலியாவில் ஸிட்னி நகரில் துறைமுகத்தில் வேலை செய்து பிழைத்திருந்தார்கள். நாலைந்து வருஷங்களில் முதலில் தாயும் பிறகு தந்தையும் இறந்

தார்கள். அவர்பால் இரங்கிக் குழந்தை இல்லாதவர் ஒருவர் காப்பாற்றி வந்தனர். சில வருஷங்களான பிறகு அவர் தாமாகவே பிழைக்கத் தெரிந்து வெலிங்டன் கப்பலேற்றுமதி இறக்குமதியில் நல்ல வேலைக்காரரென்று பெயர் வாங்கி வந்தார்.

நான் எவ்விதம் உதவ வேண்டுமென்று கேட்க, அவருக்குச் சரியாய் உத்தரம் சொல்லக்கூடவில்லை. ஊர் தெரியாது; உற்றார் தெரியாது; மீண்டும் ஜாதியில் புகுதல் வேண்டும்; பிராமணப் பெண்ணை மணந்து குடும்பத்தை விருத்தி செய்யவேண்டும். திரவியத்தால் தடை இல்லை. "கோத்திரம் தெரியுமா?" என்று கேட்டேன். அவருக்குக் கோத்திரமென்பதே புரியவில்லை.

"பூணூல் உண்டா?" என்றேன். "தகப்பனார் மார்பில் அணிந்திருப்பதைக் கண்டது உண்டு. அது வேண்டுமானால் உங்களால் கொடுக்க முடியாதா? எவ்வளவோ காலம் மேற்பிறப்பினரான இந்தியரைப் பார்ப்போமா என்று ஆவலுடன் காத்திருந்து சாஸ்திரி என்று பெயர் கொண்ட ஒருவர் வந்தபொழுது கரையேற்றம் பெறுவிடில் எப்பொழுதுதான் பெறுவேன்!"

இவ்வாறு அவர் மனமுருகப் பேசக் கேட்ட நான் திடுக்கிட்டேன். "என்னால் ஒன்றும் இயலாது. உம்முடைய விருப்பம் நிறைவேறாது" என்றேன். வீணாக அவர் ஆசையைப் பெருக்கக் கூடாதென்பது என் எண்ணம்.

என் மொழியின் உறுதியைக் கேட்டவுடன் அவர் இதயம் உடைந்ததுபோலும்! கலகலவென்று கண்ணீர் சொரிய, "ஆனால் நான் இங்கேயே வயிறு வளர்த்துப் பவுனைச் சேமித்து ஆத்மாவை அழித்துவிட்டுச் சாகவேண்டியதுதானா?" என்று துக்கித்தார்.

மரத்தினின்று சிதறிக் காற்றில் ஓடிப்போன சருகுக்கு பசுமை மீளுமோ? இந்தக் கருத்து என் மனத்தில் தோன்றியது. நான் அதை அவரிடம் சொல்லவில்லை. கூடினவரை ஆறுதல் சொன்னேன். "நல்லது பொல்லாதது, புண்ணியம் பாபம் என்கிற பகுத்தறிவு உண்டாவதற்குமுன் நிகழ்ந்த கேட்டுக்கு நாம் ஜவாப்தாரிகளல்ல. கருணாமூர்த்தியான கடவுள் நம்மை அதற்காகத் தண்டிக்கமாட்டார்" என்றேன். இது அவர் புத்தியில் ஏறவில்லை. "ஆரிய ஸமாஜிகள் இங்கு இருக்கிறார்களா?" என்று கேட்டேன்.

"இருக்கிறார்கள், அவர்கள் செய்யும் சுத்தியால் பிராமண அந்தஸ்து வராதே. எனக்கு மற்றொன்றும் தேவையில்லை" என்று முடிவாய்ச் சொல்லிவிட்டார்.

மதத்தை ஒட்டின சமாசாரம் ஒன்றும் தெரியாத அவருக்குத் தீராக் கவலையை விளைவிக்கத் தகுந்த சிரத்தை எங்கிருந்து வந்தது?

## 2

ஐந்து வருஷத்திற்கு அப்பால் நான் தென்னுப்பிரிக்காவில் இருந்தபொழுது, ப்ரிடோரியா என்னும் பட்டணத்தில் படேல் என்ற பெயர் கொண்ட ஒரு குஜராத்திப் பிராமணர் இருந்தார். வேறு பிராமணர் அந்த ஊரில் இல்லை. ஒரு நாள் சாயங்காலத்தில் என்னை அவர் தம் வீட்டுக்கு அழைத்துப்போனர். அங்கே தம் மகன் பதினெட்டு வயசுள்ள சிறுவனை அழைத்து நமஸ்காரம் செய்யச் சொன்னர். அவன் சாஷ்டாங்கமாய்ப் பிரணமம் பண்ணி என் பாதத்தைக் கைகளால் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான். கோத்திரம், பிரவரம், நாமம் ஒன்றும் தெரிவிக்கவில்லை. நான் அவைகளைக் கேட்டுத் தெரிந்துகொண்டேன். அன்றுதான் அவனுக்கு உபநயனம் பண்ணினராம்.

"உபாத்தியாயர் யார்?"

"நான்தான்."

"என்ன மந்திரம் சொன்னீர்கள்? என்ன சடங்கு செய்தீர்கள்?"

"எனக்குக் காயத்திரி தவிர வேறென்றும் தெரியாது. அது மட்டும் சொல்லி வைத்தேன்."

"எங்கே, என்னிடம் சொல்லுங்கள்."

ஏதோ எழுத்துப் பிழைகளுடன் சொன்னர். சில அசௌகரியங்களால் குஜராத்துக்குப் போக முடியாமற் போனதாகவும், இன்னும் இரண்டு வருஷங்களுக்குப் போக முடியாதென்றும் ஆதலால் யக்ஞோபவீதத்தை ஊரிலிருந்து வருவித்ததாகவும் கூறினர். அது எனக்கு வெகு விநோதமாய் இருந்தது.

"உங்களகத்தில் இருந்தால் எப்படி நடந்திருக்கும்?" என்று கேட்டேன்.

"பந்துக்களை அழைத்து அக்கினியில் ஹோமங்கள் செய்து, வாத்திய முழக்கத்துடன் விரிவாய்ச் செய்திருப்போம்" என்றார்.

"ஹோமமில்லை, மந்திரமில்லை, தந்திரமில்லை, முழக்கமில்லை, தட்சிணை இல்லை, விருந்து இல்லை; இந்த உபநயனம் உபநயனமாகுமா?"

"ஏதோ ஆகுமென்ற நம்பிக்கைதான்."

"நம்பிக்கைக்கு ஆதாரம் வேண்டியதில்லை போலும்!"

"அயலூரில், அயல் நாகரிகம் அயல் மதம் இவைகளிடையில் சிக்கிய எங்களுக்கு ஒரு போக்கு வேண்டுமே."

இது கேட்டு, "ஆமாம்" என்று மெதுவாய்ச் சொல்லி யோசிக்கலானேன். அநாதியாய் வழங்கிவரும் நடைகளின்

மர்மத்தை இப்பொழுது அறிவது இயலாதது. வெளி ஆரவாரத்துடன் உள்ளத்து உணர்ச்சியும் ஒன்றோடொன்று இணைந்து வலிமை கொண்டிருக்கின்றன. சொந்த நாட்டு இயற்கையில் இவை கூடியே இருத்தலால், 'இது காரணம், இது காரியம்; இது ஆதாரம், இது ஆதேயம்' என்று பிரித்து ஆராய முடியவில்லை. வேற்று நாட்டிலோ வெளி ஆடம்பரங்களுக்கு இடம் கிடையாது. உள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கும் சிரத்தையும் பக்தியும் குன்றாது எழும். ஹோமமும் மந்திரமும் இருந்தால் சிரத்தை உண்டு என்பது நிச்சயமல்ல. அவை இல்லாமல் சிரத்தை விளங்கும்.

## 3

மலேயாவில் ரப்பர்த் தோட்டம் முதலிய இடங்களில் கூலிவேலை செய்து பிழைத்துவரும் இந்தியரின் நிலையைப் பற்றி விசாரிப்பதற்கு ஐந்து வருஷத்துக்கு முன் சர்க்காரால் அனுப்பப்பெற்றுச் சென்றேன். இவர்களில் சிலர் தோட்டத்தார் கொடுத்த நிலத்தில் தாங்களே வீடு கட்டிக்கொண்டு பயிர் போட்டுப் பலனைச் சொந்தமாக உபயோகித்து, குடியேறியவர்களாய்க் கிராமம் கிராமமாகக் கூடி வாழ்கிறார்கள். பரீட்சார்த்தமாகத் துவக்கிய இந்த ஏற்பாடு நிலைபெற்று நம் ஜனங்களுக்குப் புது ஸ்தலத்தில் குடியேறிச் சமஷ்டியாய் வாழத் திறன் உண்டு என்று காட்டி வருகிறது.

இந்த இடத்தைப் பார்ப்பதற்கென்று ஒரு நாள் காலையில் அழைத்துப் போனார்கள். புறப்படும்பொழுது நிகழ்ச்சி முறையில் சுப்பிரமணியர் கோயிலில் வேல் ஊன்றுதல் என்று கண்டிருந்தது. எனக்கு அது புரியாததால் என்னவென்று விசாரித்தேன். அவர்கள் தெரியப்படுத்தவே, "எனக்கு ஆகம நூல் தெரியாது. அதில் நியமித்திருக்கும் முறை தெரியாது. நான் பெயருக்கு மட்டுமே சாஸ்திரி" என்று சொல்லித் தப்பப் பார்த்தேன்.

"ஆயிரக் கணக்கான மனிதர்கள் - ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் கூடிக் காத்துக்கொண்டிருக்கிறார்களே. நீங்கள் எப்படி மறுப்பது? நாங்கள் எப்படி நிறுத்துவது?"

இதைக் கேட்டதும் என் வயிற்றில் நெருப்பைக் கட்டியது போல ஆயிற்று! ஆங்கில ஆடை ஒரே ஈரமாயிற்று. அன்று நல்ல வெப்பம். காற்று லேசமேனும் இல்லை.

கீற்றுப் பந்தலொன்று பெரிதாய் அமைந்திருந்தது. பந்தலுக்குள்ளும் வெளியும் ஜனங்கள் நின்றது கணக்கிட்டு முடியாது. அதைக் கண்டதுமே எனக்குக் கிலி பிடித்தது. பந்தல் கோடியில் ஒரு செங்கல் மேடையில் ஒரு சிறு ஓவியத்தை முருகனென்று காட்டினர். சந்தனம், குங்குமம், ஊதுவத்தி, தேங்காய் வெற்றிலை பாக்கு, கற்கண்டு, சர்க்கரை, புஷ்பம், வாழைப்பழம் எல்லாம் கூட்டத்துக்கு ஏற்ற அளவுக்குக் குவித்திருந்தன. மேளம் வாசித்

தூக்கொண்டிருந்தார்கள். தப்பட்டையையும் ஒரு பக்கத்தில் அடித்தார்கள். மேடையருகில் உயிர்ச்சேதம் நேரிடுமோ என்று பயப்படும்படி நெருக்கம். விலக்குவோரும் இல்லை; விலக்கச் சாத்தியமும் இல்லை. நான் மார்புவலி வந்து மூன்று மாத்திரை தின்று எப்படியோ பல்லைக் கடித்து விழாமல் நின்றேன். கூட வந்த ஜீ. எஸ். போஸ்மன் துரை வெளியிலேயே தங்கிவிட்டார்.

இனிச் செய்வது என்ன? பேய்க்கு வாழ்க்கைப் பட்டோம், புளியமரம் ஏறத்தான் வேண்டும். உள்ளிருக்கும் நடுக்கத்தை வெளிக்காட்டலாகாது. உரக்கக் கனைத்து, "வேல் எங்கே?" என்று கேட்டேன்.

பளபளவென்று இருந்த ஆயுதத்தையும் ஈரமாக்கி யிருந்த பூமியையும் காட்டினார்கள்.

"வேல் நாட்டுவதற்கு முன் ஏதாவது உண்டா? பூசாரி யாராகிலும் இருக்கிறாரா?"

"நீங்கள் இருக்கும்பொழுது பூசாரி வேறு வேண்டுமா? நீங்களே மணையில் அமர்ந்து பூசை செய்துவிட்டு வேலை நாட்டுங்கள்."

எனது ஆசனத்தில் அமர்ந்து யதோக்த ஸங்கற்பம் பண்ண இஷ்டமும் இல்லை; பண்ணத் திறமையும் போதாது. "யாராகிலும் வயசு முதிர்ந்தவர் இத்தகைய சடங்கைப் பார்த்தவர் உண்டானால் முன்வந்து சமயத்துக்கு உதவுங்கள்" என்று வருந்தினேன்.

"நீ வா, நீ வா" என்று சிலர் சொல்லிக்கொண்டார்களே தவிர, சிறிது நேரம் ஒருவரும் துணிந்து முன்வரவில்லை. இறுதியில் சுமார் நாற்பது பிராயம் கொண்ட ஒருவன் கூட்டத்தினின்று வெளிவந்தான். அவனைச் சிலர் தள்ளி என்முன் நிறுத்தினார்கள். அவன், "வேல் நாட்டின பிறகுதான் பூசை" என்றான்.

அதற்கு இணங்கி நான் வேலைக் கையில் பிடித்ததும் வாத்தியமும், கை தட்டலும், சமுத்திரம் போன்ற சத்தமும் கிளம்பின. மேற்றிசை நோக்கி நின்று சுப்பிரமணியக் கடவுளின் படைக்கலத்தைக் குறித்த இடத்தில் பலத்துடன் நட்டேன். மூன்று அல்லது நான்கு அங்குலம் இறங்கியிருக்கும். வேலுக்குப் புஷ்பம் சூட்டினர்.

பிறகு அவன் தன் வேலையை ஆரம்பித்தான். மணையில் இரண்டு நிமிஷம் வீற்றிருந்து கண்களை மூடித் தியானம் செய்து எழுந்தான். தண்ணீர்க் கும்பத்திலிருந்த மாவிலைக் கொத்தைக் கையில் எடுத்து நாலு திக்கிலும் தெளித்துச் சுற்றி இருந்தவர் மேலும் விசிறினான். பிறகு பெரிய தாம்பாளத்தில் சூடத்தைக் கொளுத்திச் சமீபத்தில் இருந்தவருக்குக் காட்டினான். இதுவரை

தந்திரம் மட்டும் இருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் மந்திரம் சொன்னான். உரக்கச் சொல்லியும் எனக்குக் கொஞ்சநேரம் இன்ன தென்று புரியவில்லை. 'சாந்தயே' என்ற பொழுதுதான் ஸம்ஸ் கிருதாக்ஷரமென்று நிச்சயித்தேன். மீண்டும் அதையே படித்த பொழுது "சுக்கம்பரா" என்று தெளிவாகக் கேட்டது. "சுக்லாம் பரதர" என்கிற விக்கினேசுவரத் துதி என்று நிர்ணயித்தேன்.

இந்தச் சுலோகத்தையே மடித்து மடித்து ஐந்து தரம் மிகுந்த சொற்பிழைகளுடன் கர்ணகடோரமாக உயர்ந்த குரலில் சொன்னான். கர்ணகடோர மென்னும் உணர்ச்சி என் மட்டும்தான். ஏனையோர் அனைவரும் கரங்களைத் தூக்கியும் அஞ்சலி செய்தும் 'ஹரஹரா!' என்று கன்னத்தில் அடித்துக்கொண்டும் நெஞ்ச முருகித் தொழுதார்கள். அவர்கள் காட்டிய பக்தியில் எள்ளள வேனும் டம்பமுமில்லை; சூதுமில்லை. அந்தச் சமயம் 'சதிர்'த் தேங் காய்கள் அநேகம் உடைபட்டன. அந்தத் துணுக்குகளைச் சர்க் கரை, கற்கண்டு, பழம் முதலியவற்றுடன் பிரசாதமாகச் சிலர் ஜனங் களுக்குக் கொடுத்தனர். சற்றேனும் சக்தி இல்லாவிடினும் நிர்ப் பந்தத்துக்கு உள்ளாகிச் சில வார்த்தைகளால் வந்தனத்தைக் காட்டி, அவர்களுடைய குடியேற்றக் கிராமங்களை அன்று ஆவிர்ப் பவித்த வேலாயுதக்கடவுள் கருணை கூர்ந்து ரட்சிப்பாராக என்று ஆசீர்வதித்து, விடைபெற்றுத் திரும்பினேன்.

பிரம குலத்திற் பிறந்த எனக்குத் தெய்வ காரியத்தில் புகு தற்கு உரிமை உண்டென்று அத்தனை மனிதரும் நம்பி என் கை யால் நாட்டப்பட்ட ஆயுதத்திற்குள் கடவுளின் தேஜஸ் நுழைந்த தாக அதைக் கொண்டாடிப் பூசித்தார்கள். இந்தப் பெரிய மோசத்தைப் பண்ணிய எனக்கு என்ன தண்டனையோ! தரும சங்கடத்தில் அகப்பட்டு மீள முடியாமல் பாவம் பண்ணினேன் என் றால் மன்னிப்புக் கிடைக்குமா?

வெறும் இரும்பைச் சிரத்தையாகப் பூசித்தால் புண்ணியம் உண்டா? இல்லையா? ஒருகால் உண்டென்று சாஸ்திரம் ஒப்பலாம். புரட்டு மந்திரத்தை உச்சரித்து ஆகம முறைப்படி நடத்தியதாகக் காட்டியவன் என்னைப்போன்றவனே. அன்று நடைபெற்ற காரியத் திற்கு உத்தேசித்த பலன் உண்டா? வியர்த்தந்தானே? அன்று கைகூப்பிப் புண்ணியம் பெற்றோம் என்று எண்ணியவருள் பெரும் பாலாருக்குப் பூசாரி ஸ்தானத்தில் இருந்தவனும் நானும் நூல்களில் விதித்த வழியாக நடத்தவில்லை என்பது நன்கு தெரிந்திருக்கும். ஆனால், நமக்கு என்ன? அவர் பாடு. பிழையானால் பிழை நம்மைத் தொடராது. சிரத்தையைக் காட்டுவது நம் கடமை. அதைத் தவறாது காட்டினோம். சிரத்தைக்கு வேண்டிய சாதனங்கள் எல்லாம் ஒழுங்காக இருக்கின்றனவா என்ற கவலை நமக்கு ஏன்? சிரத்தை வேறொன்றை வேண்டி நிற்பதன்று என்றே அவர்கள் நினைத்தார்கள். ★

— ஜனவரி, 1943.

திரு. வி. க.

# என் வாழ்க்கைக் குறிப்பு

"தோற்றமுண்டேல் மரணமுண்டு" என்பது வன்றொண்டர் வாய்மை. இந்நிலவுலகில் எத்தனையோ உயிர்கள் பிறந்தன; எத்தனையோ உயிர்கள் இறந்தன. இவ்வேளையில் தோன்றும் உயிர்கள் எத்துணையோ? மறையும் உயிர்கள் எத்துணையோ? தோற்றத்துக்கும் ஒடுக்கத்துக்கும் இடைப்பட்டது வாழ்க்கை. வாழ்க்கை, வரலாறு உடையது. ஒவ்வோர் உயிர்க்கும் வாழ்க்கை வரலாறு உண்டு. இதுகாறும் உலகங் கண்ட வாழ்க்கை வரலாறுகள் எவ்வளவு? அவை எண்ணில் அடங்குமோ? அவைகளைக் கணக்கிட்டுக் கூற வல்லார் உளரோ?

பொது - சிறப்பு :

வாழ்க்கை வரலாறு இரு விதம். ஒன்று பொது; மற்றொன்று சிறப்பு. பொது, எல்லா உயிர்கட்கும் உரியது; சிறப்பு, மக்கட்கு மட்டும் உரியது. எப்படி?

உயிர்களில் வேற்றுமை இல்லை. எல்லா உயிர்களும் ஒன்றே. பின்னை வேற்றுமை எங்கே எழுகிறது? உயிர்கள் தாங்கும் உடலை யொட்டியே வேற்றுமை எழுகிறது. உயிர்கள் ஒரேவித உடலைத் தாங்குவதில்லை. அவை பலதிற உடல்களைத் தாங்குகின்றன. புல் பூடு செடி கொடி மரம் முதலிய உடல்களையும், புழு மீன் பாம்பு ஓணான் பல்லி முதலிய உடல்களையும், ஈ வண்டு பறவை முதலிய உடல்களையும், பன்றி ஆடு மாடு புலி யானை கரடி சிங்கம் முதலிய உடல்களையும் மக்கள் உடலையும் உயிர்கள் ஏற்கின்றன. இவ்வுடல்களின் உறுப்பு கரணம் முதலியன ஒருபடித்தாய் அமைவதில்லை. அவை பலபடித்தாய் அமைகின்றன. அவ்வவ்வமைப்புக்கேற்றவாறு அறிவு விளங்குகிறது. உயிர்களின் அறிவுத் திறங்களை நன்கு தெளிந்த பண்டை மூதறிஞர், அவைகளை ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நான்கறிவுயிர், ஐந்தறிவுயிர், ஆறறிவுயிர் என்று பாகுபாடு செய்தனர். ஓரறிவுயிர் முதல் ஐந்தறிவுயிர்வரை ஓரினம்; ஆறறிவுயிர் வேறோரினம். முன்னையது பகுத்தறிவில்லாதது; பின்னையது பகுத்தறிவுடையது. அஃது அஃறிணை; இஃது உயர்திணை. அஃறிணை உயிர்கள் படிப்படியே பல திற உடல்களை எடுத்து எடுத்து, இறுதியில் உயர்திணைக்குரிய உடலை எடுக்கும்.

மனிதப் பிறவி உயர்திணையின்பாற்பட்டது. அது விடுதலைக்கு உரியதாதலின், அதற்கு மேற் பிறவி அமைவதில்லை. இது

பற்றியே மக்கட் பிறவி விழுமியதென்று உலகம் ஒருமுகமாகக் கொண்டது.

மனிதப் பிறவி எடுத்தவரெல்லாம் மக்களாகார். அவருள்ளும் கல்லுண்டு; மரமுண்டு; பாம்புண்டு; பறவையுண்டு; விலங்குண்டு. அவர் மக்களாக முயலுதல் வேண்டும்.

முயற்சி ஒரே பிறவியில் வெற்றி அளிப்பினும் அளிக்கும்; வேறு சில பிறவிகளில் வெற்றி அளிப்பினும் அளிக்கும்.

உயிர் மக்களுலகுக்கே உண்டு என்றும், மற்ற உலகங்கட்கு இல்லை என்றும் கூறுவோருளர். இக்கூற்று இனி ஏற்றமுறாது. அக்காலம் மலை ஏறியது. அஃறிணை உலகுக்கும் உயிருண்டு என்று விஞ்ஞான உலகம் உறுதி செய்துவிட்டது.

உடல் ஒருவித விளக்கு. இதை 'மாயாதனு விளக்கு' என்றனர் ஆன்றோர். உயிர் அறியாமை இருளில் மூழ்கிக்கிடப்பது. படிப்படியே அதன் இருளைப் போக்கி அறிவை விளக்கம் செய்வது உடல். அதனால் உடல் "விளக்கு" என்று சொல்லப்பட்டது. உயிர், பலதிற உடல்களில் ஒன்ற ஒன்ற, அதனிடை அறிவு விளக்கம் பெருகிப் பெருகி வளர்கிறது. அவ்வளர்ச்சிக்குத் துணை புரியும் பண்பு இயற்கையில் இருக்கிறது. இது நம் முன்னோரால் காணப்பட்டதே. இதன் உண்மையில் இக்கால அறிஞர்க்கு ஐயப்பாடு விளைந்து வந்தது. இனி அவ்வையப்பாட்டுக்கு இடம் இராது. அறிஞர் ஹெக்கல், டார்வின் முதலியோர் விஞ்ஞான வழியில் நிகழ்த்திய ஆராய்ச்சிகள் வெளிவந்துள்ளன. அவை இக்கால அறிஞரின் ஐயப்பாடுகளைக் களையவல்லன.

உடல்வாயிலாக உயிர் பெற்றுவரும் விளக்கம் (வளர்ச்சி) உள்ளது சிறத்தல் என்பது. உள்ளது சிறத்தலைக் *கூர்தல் என்பர் தொல்காப்பியனார். கூர்தலறம் (Evolution) உலகை வளர்த்து வருகிறது. உலக வளர்ச்சிக்கென்று கூர்தலறம் இயற்கையில் அமைந்துள்ளது.

கூர்தல் அறத்தை டார்வின் ஆராய்ச்சி கொண்டு முதல் முதல் எனக்கு அறிவுறுத்தியவர் தோழர் எம். சிங்காரவேல் செட்டியார். பின்னே அவ்வறத்தைப் பற்றிய உணர்வு தியோசாபிகல் சங்கப் பேரறிஞர் சிலர் கூட்டுறவால் ஒருவழியில் பெருகியது. இயற்கையோடியைந்து வாழ வாழக் கூர்தல் நுட்பம் தானே விளங்கிச் செல்வதை அநுபவத்தில் நன்கு தெளிதல் கூடும்.

யான் இப்பொழுது மனிதப் பிறவி எய்தியுள்ளேன். முன்னே கீழ்ப்பட்ட பிறவிகள் பல எய்தியிருப்பேன். பழம் பிறப்பை உணரும் வாய்ப்பு மனிதப் பிறவியில் அமைந்திருக்கிறது. அவ்வுணர்வு விளங்குதற்குத் தக்க உழைப்பு வேண்டும். சத்திய ஞானப் பேற்றுக்கு அறிகுறி பழம் பிறப்புணர்தல் என்று புத்தர்

* "கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்." தொல்காப்பியம், உரியியல், 16.

பெருமான் அருளியுள்ளனர். புத்தர்பெருமான் அருள் மொழியில் எனக்கு உறுதியுண்டு.

சீலம் வாழ்க்கையாலும் பழம் பிறப்புணர்வு எளிதில் விளங்கும். வெறும் ஆராய்ச்சி அவ்வுணர்வை உண்டுபண்ணாது. பழம் பிறப் புணர்வை உண்டுபண்ண வல்லது சீலம்; சீலம்.

புல்லிலிருந்து மக்கள்வரை உயிர்கள் அடையும் உடம்புகள் ஒரே விதமாயில்லை; மாறுபட்டனவா யிருக்கின்றன. ஒரு பிறவி யிலேயே மாறுதல் நிகழ்வதையும் காண்கிறோம். அந்நிகழ்ச்சியை என்னென்று கூறுவது? இதை வாழ்க்கை வரலாறு (Life History) என்று உலகம் கூறுகிறது.

ஒரு தவளையை எடுத்துக்கொள்வோம். அதன் வளர்ச்சியில் எத்துணை மாறுதல்! சிங்கத்தின் உறுப்புக்கள் சில புலியின்கண் இல்லை; புலியின் உறுப்புக்கள் சில யானையில் இல்லை; யானையின் உறுப்புக்கள் சில ஒட்டகத்திடம் இல்லை. மக்கட் பிறவியிலும் மாறுதல் உற்றே வருகிறது. மிகப் பழம் பெருங்காலத்தில் மக்கள் ஆண் பெண் பிரிவின்றி ஒன்றியே இருந்தார்கள். அவர்கள் முக் கண்ணர்களாய், கோரைப் பல்லர்களாய், மாட்டுக் குடலர்களாய் வாழ்ந்த காலமுண்டு. மக்களின் உள்ளுறுப்புக்களிலும் அவ்வப் போது சிற்சில மாறுதல்கள் உற்றே வருகின்றன. இவ்வாறு உயிர்களின் உடலுறுப்புக்களில் நேரும் மாறுதல்கள் பொதுப் பட்ட வாழ்க்கை வரலாறு எனப்படும்.

சிறப்பு வாழ்க்கை வரலாறு என்பது, மக்கள் வாழ்விலே அன்றாடம் உற்று வரும் நிகழ்ச்சிகளின் சேர்க்கை; ஈட்டம். இதை வாழ்க்கைக் கீழ்க்கணக்கு - பேரேடு - என்னலாம். இது மக்கட் பிறவியில் மட்டும் நிகழ்வது; மற்றப் பிறவிகளில் நிகழாதது. இப் பிறவிகள் பகுத்தறிவில்லாதன வாதலால், இவைகளின் அன்றாட வாழ்க்கை ஒரேவிதமாக நடைபெற்று வருகிறது. ஒரேவித வாழ்க் கையில் வரலாறு எப்படி அமையும்? இங்கே குறிக்கொண்டது மக்கள் வாழ்க்கையில் அன்றாடம் நிகழும் வரலாறேயாகும்.

ஒரு சிலர்:

வாழ்க்கை வரலாறு ஒவ்வொருவரிடத்திலும் அமைவது. அவ் வரலாறு அமையாதவரே இரார் என்று கூறலாம். ஒவ்வொரு வரும் தத்தம் வாழ்க்கை வரலாற்றை நூலாக எழுதப் புகுந்தால் அந் நூல்களை அடுக்க இவ்வுலகம் போதுமா? போதாது. அந் நிலையை இயற்கை என்றும் உண்டுபண்ணாது. வாழ்க்கை வரலாற்றை எழுதும் பேறு ஒரு சிலருக்கே வாய்க்குமாறு இயற்கை செய்யும். பலதிறப்பட்ட உலகை ஒழுங்கு முறையில் நடாத்தும் பொறுப்பு இயற்கை அன்னையினுடையது.

**வெற்றி தோல்வி :**

வாழ்க்கையில் வெற்றியும் பேசப்படுகிறது; தோல்வியும் பேசப்படுகிறது. வெற்றி வாழ்க்கை எது? தோல்வி வாழ்க்கை எது? பதவி, பொருள் முதலியவற்றில் படிப்படியே இவர்ந்தோர் வாழ்க்கை வெற்றியுடையதென்றும், மற்றவர் வாழ்க்கை தோல்வியுடையதென்றும் பொதுவாகக் கருதப்படுகின்றன. வாழ்க்கையின் வெற்றி, பதவி, பொருள் முதலியவற்றில் விளைவது உண்மையாயின், என்னுடைய வாழ்க்கை முழுத் தோல்வியுடையதென்று தியங்காது சொல்வேன். வாழ்க்கையில் வெற்றி என்பதும், தோல்வி என்பதும் எனக்கு வேறு விதமாகத் தோன்றுகின்றன. மக்கட் பிறவியில் பகுத்தறிவிருத்தலும், அது படிப்படியே விளக்கமுறும் பண்பு அதன்பாலிருத்தலும் நன்கு தெரிகின்றன. இவ்வளர்ச்சிக்கென்று வாழ்க்கை அமைகிறது. இத்தகைய வாழ்க்கையின் பேறு, பதவி பொருள் அளவில் நிற்பதாகுமா என்று ஐயுறுகிறேன். எவருடைய வாழ்க்கையில் அறிவு படிப்படியே வளர்ந்து, எவ்வுயிரும் பொதுவெனும் தெளிவு தோன்றித் தம் உயிரே பிற உயிரும் என்னும் உணர்வு பொங்கித் தொண்டு செய்யும் அன்புச் செல்வமாகிய அந்தண்மை அமைகிறதோ, அவ்வாழ்க்கை வெற்றியுடையதென்றும், மற்றவர் வாழ்க்கை தோல்வியுடையதென்றும் எனது கல்வி கேள்வி ஆராய்ச்சி அநுபவம் முதலியன எனக்கு உணர்த்துகின்றன. எனது வாழ்க்கையில் அந்தண்மை இடம் பெற்றதா? இல்லையா? இதற்குச் சோதனை வேண்டும். என் வாழ்க்கைக் குறிப்புக்கள் வெளிவரின் சோதனைக்கு வழி ஏற்படும்.

**பண்டை மூதறிஞர் :**

பண்டை மூதறிஞர் தத்தம் வாழ்க்கை வரலாற்றைத் தாமே எழுதும் முயற்சியில் தலைப்பட்டாரில்லை. அவருள் நூலெழுதும் வாய்ப்புப் பெற்றோர் நூலில் எங்கேயோ ஒரு மூலையில் தமது வரலாற்றைக் குறிக்கும் அவசியம் நேர்ந்தால் குறிப்பர். தமது வரலாற்றைத் தாமே எழுதப் புகுவதைச் சிறுமையாகவோ செருக்காகவோ பிற என்னவாகவோ முன்னோர் கருதி இருப்பர். அவர் தமது வரலாற்றைப் பெரிதாகக் கருதவில்லை போலும். அக்காலத் தேவைக்கும் அஃது அவசியமாகத் தோன்றவில்லை போலும்.

முன்னோர் வரலாறுகள் பெரிதும் பின்னோரால் எழுதப்படுவது வழக்கம். அவைகளில் மெய்யுரையும் இருக்கும்; புனைந்துரையும் இருக்கும். புனைந்துரை நன்னோக்குடன் அன்பினின்றும் எழுந்ததென்றே தெரிகிறது. புனைந்துரையைச் சரித்திர உலகம் ஏலாது.

முன்னாளில் சாம்ராஜ்ய அமைப்பு அரசியல் கட்சி, ஆவேசத் தேர்தல், வெறிப் பேச்சு, பத்திரிகை முதலியன இல்லை. இவைகள் பொய்ம்மைக்குத் தாயகங்கள். பொய்ம்மைவழி உலகம் இயங்கும்.

இந்நாளில் வாழ்க்கை வரலாறுகள் வெளிவராதிருத்தல் நல்லது. அவை வெளிவருமாயின், அவரவர் வரலாற்றை அவரவரே எழுதிவிடுவது அறம். அப்பொழுதே நண்பரின் உயர்வு நவிற்சியும், பகைவரின் இழிவு நவிற்சியும் இடம்பெறுதொழியும்.

**மன மாற்றம்:**

தன் வரலாற்றைத் தானே எழுதுவதைப் பல ஆண்டுகளாக யான் வெறுத்து வந்தேன். அதில் முன்னோர் வழியைக் கடைப் பிடித்தல் வேண்டும் என்ற எண்ணமுடையவனாகவே இருந்தேன். அணித்தே நேர்ந்த சில நிகழ்ச்சிகள் எனது மன நிலையை மாற்றின. காலதேசவர்த்தமான வேகத்துக்கு இரையாகும் நிலைமை எப்படியோ நேர்ந்துவிடுகிறது! என் செய்வது!

எனது வாழ்க்கைக் குறிப்புக்கள் எற்றுக்கு எழுதப்பட வேண்டும்? என்னைப் பற்றிய அளவில் அஃது எழுதப்படவேண்டுவ தில்லை என்றே சொல்வேன். எனது வாழ்க்கை பல இயக்கங் களிலும் தொண்டுகளிலும் ஈடுபட்டது. அவைகளில் நல்ல நிகழ்ச்சி களும் இருக்கும்; தீய நிகழ்ச்சிகளும் இருக்கும். நல்லெனக் கொண்டும் தீயன விலக்கியும் மற்றவர் வாழ்தற்கு என் வாழ்க்கைக் குறிப்புக்கள் ஓரளவிலாதல் துணைபுரியும் என்னும் நம்பிக்கை இதை எழுதுமாறு என்னை உந்தியது. மற்றவர் வாழ்க் கைக்குத் துணைபோகும் நிகழ்ச்சிகள் என் வாழ்க்கையில் நல்ல வழியிலோ தீய வழியிலோ உற்றிருப்பின், இந்நாலை எழுதும் முயற்சியில் யான் தலைப்பட்டிரேன்.

எனது வாழ்க்கை வரலாற்றை முறை முறையே கிளந்து கூறப் போகின்றேனில்லை. அதைக் கிளந்து கூற யான் எண்ணியதே இல்லை; எண்ணியிருப்பேனாயின் நாட்குறிப்பை நிரலே பொறித்து வைத்திருப்பேன். (சிற்சில நாட்குறிப்புகட்குத் 'தேசபக்தன்', 'நவசக்தி', வேறு சில அறிக்கைகள் முதலியன துணை புரிகின்றன.) ஆதலின் வாழ்க்கை நிகழ்ச்சிகளில் இன்றியமையாத சிலவற்றை மட்டும் கூறு கூறாகக் குறித்துச் செல்ல முயல்கிறேன். அக்குறிப்புக்கள் எனது வாழ்க்கை நிலையை உணர்த்தும் என்று நம்புகிறேன்.

★

— ஆகஸ்ட், 1943.

# நீலக் கடலலையில்

பார்ப்பனர்கள் கடல் தாண்டுவது முறைத் தவறு என்ற காலம் மலையேறிப் போய்விட்டது. ஆனால் முப்பது வருஷங்களுக்கு முன்பு இவ்வாறில்லை. முக்கியமாகக் கிராமங்களிலும், கோயிலிலும், வைதிகப் பார்ப்பனர்கள் குழுமியிருக்கும் ஸ்ரீரங்கம் போன்ற சிறிய நகரங்களிலும் கடல் தாண்டும் வழக்கம் ஆதரவு பெறவில்லை. ரங்கூனில் நான் தொழில் செய்து அதன்மூலம் பொருளீட்டும் தகவல் தெரியவந்ததும், என்னைக் கண்டு, சில காலம் என்னுடன் இருக்கப் பிரியப்பட்டு என் தகப்பனார் கப்பலேறிப் பர்மாவிற்கு வந்தார். வைதிகச் சமூகக் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி நடந்து வந்தவர் அவர். சமயப்பற்றிற்கு இந்தக் கட்டுப்பாடுகள் முக்கிய அங்கங்கள் என்ற கொள்கையுடையவர். வயசு ஐம்பத்தேழு கடந்துவிட்டதையும் கவனியாமல், மகனிடத்தில் உள்ள அன்பு மிகுதியால் கப்பலேறிக் கடல் கடந்துவிட்டார்.

திரும்பும் காலையில் கல்கத்தா வழியாக வந்து, கயை, பிரயாகை, காசி, ஹரித்துவாரம், மதுரை, பிருந்தாவனம் முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்கெல்லாம் சென்று, கங்கை, யமுனை முதலிய நதிகளில் ஸ்நானம் செய்து, கங்கா ஜலத்தைக் கொணர்ந்து சேதுவில் சேர்த்து ஸ்நானம் செய்து ஸ்ரீரங்கம் திரும்பினார். இந்த க்ஷேத்திரப் பிரயாணங்களில் என் தாயாரும் சேர்ந்துகொண்டார். பார்ப்பனர்கள் செய்யவேண்டிய பல சடங்குகளில் பிதுரு சிராத்தம் மிகவும் முக்கியமாக இன்னுங்கூடக் கருதப்பட்டு வருகிறது. என் தகப்பனார் அதற்காகப் பிராம்மணர்களை அழைத்தபொழுது அவர்கள் வர மறுத்து விட்டார்கள். பங்காளிகள் பெருத்த எங்கள் பூர்விகக் கிராமமாகிய தில்லை ஸ்தானத்திற்குச் சென்றதும் எங்கள் பங்காளிகளும் அவரை வரவேற்க மறுத்துவிட்டனர். நெருங்கிய உறவினர் இருவரை வைத்துக்கொண்டு சிராத்தத்தை என் தகப்பனார் நடத்தினார். ஆனால் அதனால் அவர் மனத்தில் உண்டான குறை அளவிட முடியாது. 'என்னுடைய வாழ்வில் முறை தவருக நான் ஒருபொழுதும் நடந்ததில்லை. தினசரி, பிராம்மணர்கள் செய்ய வேண்டிய கர்ம அநுஷ்டானங்களைக் கைவிட்டவனல்ல. எப்பொழுதும் வைதிக சிரத்தையும் தெய்வ பக்தியும் உள்ள நான் ஜாதியினின்று ஒதுக்கி வைக்கும்படியான ஒரு பாவமும் செய்யவில்லையே!' என்று அடிக்கடி வாய்விட்டுப் புலம்பிக்கொண்டிருந்தார். இதன் இடையில் நான் கப்பலேறி ரங்கூன் போனது போதாதென்று, சீமைக்கும் போக முடிவுசெய்து,

அவர்களிடம் விடைபெற்றுப் போக ஸ்ரீரங்கம் வந்தபோது, அவருடைய வருத்தத்தை என்னவென்று சொல்வது?

"நீ எதற்காக இப்பொழுது சீமைக்குச் செல்லவேண்டும்? போகாமல் இருப்பதால் உன் தொழிலில் வரும்படி குறைவாக இருக்கிறதா? மாதம் ஆயிரக் கணக்காகச் சம்பாதிக்கும் நீ அங்கே போய்வந்தால் என்ன அதிகமாகச் சம்பாதித்துவிடப் போகிறாய்? மேலும், கையில் சேர்ந்திருக்கும் சில ஆயிர ரூபாய்களை யும், அதன் மேலும் கடன் வாங்கியோ, யாசகம் செய்தோ எல்லா வற்றையும் சீமையில் மூன்று வருஷங்களில் செலவழித்துவிட்டு, வெறுங் கையோடு திரும்பிவந்து மறுபடியும் பழைய வறுமை நிலையை அடைந்து, அதனின்றும் வெளியேற முயல்வதில் என்ன பயன்? தாயுந் தகப்பனுமாகிய எங்கள் இருவருக்கும் வயசாகிக் கொண்டு வருகிறது. எந்தச் சமயத்தில் எங்கள் காலம் முடி வுறுமோ! வீட்டிற்கு முதல் பிள்ளையாகிய நீ திரும்ப முடியாத, கண்காணாத தேசம் போய்விட்டால் நாங்கள் என்ன செய்வது! இதன்றியும் உனக்கு இதுவரையில் மூன்று பெண் குழந்தைகள் இருக்கிறார்கள். சாதாரணமாகவே அவர்களுக்குக் கல்யாணம் செய்துகொடுப்பது இந்த நாளில் பிரம்மப் பிரயத்தனமாக இருக்கிறது. அதோடு நீ சீமைக்கும் போய்விட்டு வந்தால் நம் ஜாதியில் • ஒருவரும் கல்யாணம் செய்துகொள்ள மாட்டார்கள். நான் ரங்கூன் வந்துவிட்டுப் படும் கஷ்டம் போதாதா? இதை யெல்லாம் யோசனை செய்து, போவதை நிறுத்தி விடவேண்டும்" என்று அழுத கண்ணும் கண்ணீருமாக மன்றாடினார். அவர் கூறிய ஒவ்வொரு விஷயமும் உண்மையே. இதையெல்லாம் முன் கூட்டியே எண்ணித்தான் ஒரு சமயம் புறப்பட முடியாமல் இடையூறு நேர்ந்துவிடுமோ எனப் பயந்து, ரங்கூனிலிருந்து புறப்படுவதற்கு முன்பாகவே, சீமைக்குப் புறப்படவேண்டிய தேதி, கொழும்புத் துறைமுகத்தில் அன்று வரும் கப்பலில் இடம், எல்லாம் ஏற்பாடு செய்து 'தாமஸ் குக்' கம்பெனியாரிடம் அதற் கான பணம் எல்லாம் கட்டிவிட்டேன்.

என் மனைவியின் முறையீடு வேறு சேர்ந்துகொண்டது. "நீங்கள் திரும்பி வராமலே அங்கேயே யாராகிலும் ஆங்கிலப் பெண்ணை மணந்து தங்கிவிட்டால், நானும் மூன்று மக்களும் கதியற்றவர்களாகிவிடுவோம் என்ற துக்கம் எனக்கு உண்டா கிறது. மேலும், என் தாய் வீட்டில் நான் எவ்வளவு காலம் தங்கி யிருப்பது? என் உடன் பிறந்தவன், அவன் மனைவி இவர்களுடன் காலம் கழிக்க வேண்டுமே! எவ்வளவுதான் தாயின் அன்பு இருந்த போதிலும், நாடு கடந்த கணவன் நன்மை பயக்கக்கூடிய முறையில் கண்ணியமாகத் திரும்பும் வரையில் எனது துயரம் அளவிட முடியுமா? மேலும் ஏழைக் குடும்பம். நீங்கள் கொடுத்து உதவும் தொகை உணவிற்கே போதும் போதாததுமாக இருக்கிறது. இதனுடன் மூன்று பெண்குழந்தைகளின் பராமரிப்பு வேறு இருக்

கிறது. உங்களை நான் எவ்விதம் உத்ஸாகத்தோடு அனுப்ப முடியும்?'' என்று அளவிட முடியாத துயரத்தைத் தெரிவித்தாள். என் வீட்டினரே இவ்வளவு தடை கிளப்பும்பொழுது மற்றவர்களைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை. என்னுடன் பள்ளியில் பயின்று ஸ்ரீரங்கம் உயர்தரப் பாடசாலையில் உபாத்தியாயராக இருந்த ஒரு நண்பர் மாத்திரம் என்னை ஆதரித்து உத்ஸாகப் படுத்தி வழியனுப்பினார்.

நான் திருச்சியிலிருந்தே இரண்டாவது வகுப்பு ரெயில் வண்டியில் பிரயாணம் செய்ய ஆரம்பித்தேன். சீமைக்குப் படிக்கப் போகிறவன் சாதாரண மனிதர்களைப்போல மூன்றும் வகுப்பில் பிரயாணம் செய்யக்கூடாது என்பதான ஒரு முட்டாள்தனமான எண்ணம். 'உயர்தர வகுப்பில் பிரயாணம் செய்பவர்கள் எல்லோரும் பெரிய மனிதர்கள். நாமும் பெரிய மனிதன் ஆகவேண்டுமானால் அப்படிச் செய்யவேண்டும். அந்த வகுப்பில் பிரயாணம் செய்யாவிட்டால் பெரிய மனிதனென்று நம்மை எண்ணமாட்டார்கள்' என்ற பயம். ஆகையால் இதுவரையில் இரண்டாம் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்து அறியாத நான் சீமைக்குப் படிக்கப்போவதே ஒரு பெரிய மனிதத்தனமென நினைத்து உயர்ந்த வகுப்பில் பிரயாணம் செய்தேன். என் பெருமையை மெச்சி, என் பெரிய மனிதத்தனத்தைக் கவனிப்பார் ஒருவரையும் காணவில்லை! வழியனுப்ப நண்பர்கள், உற்றார், உறவினர் ஒருவரும் வரவில்லை. அந்த நாளில் விடைபெற்றுப் போவோருக்குப் பூமாலை போடும் வழக்கம் இல்லை. எனக்குப் போடுவாரும் இல்லை. என் நண்பர் ஒருவர் மட்டும் என்னோடு வந்து எனக்கு ஆசி கூறி விடை கொடுத்தார்.

நான் ரங்கூனில் இருந்தபோது சீமைக்குப் போய்த் திரும்பி வந்த இந்திய டாக்டர்கள் இருவரைக் கண்டு, அங்கே கையாளப் படும் பழக்க வழக்கங்களையும் பிரயாணம் செய்யவேண்டிய முறை, நடை, உடை, பாவனைகளையும் கேட்டு அறிந்துகொண்டேன். அவர்கள் எனக்குச் செய்த உபதேசத்தை நான் இன்றும் மறக்கவில்லை. 'நாம் சிக்கனமாக இருக்கக்கூடாது. உயர்ந்த உடை, அதற்கேற்ற படியான தோற்றம், உணவு, எல்லாம் பொருந்தி இருக்கவேண்டும். ஆங்கிலேயர்கள் எம்மாதிரியான பழக்க வழக்கங்களை மேற்கொண்டிருக்கிறார்களோ அம்மாதிரியே நாமும் பழகத் தெரிந்துகொள்ளவேண்டும். இந்த ஊரிலேயே ஆங்கிலேயர்கள் தங்கும் பெரிய ஹோட்டல்களில் போய், கத்தி, கரண்டி, முள் முதலியவை பிடித்து உண்ணப் பழகிக்கொள்ள வேண்டும். தலையில் குடுமி, தலைப்பாகை இவைகளெல்லாம் கூடா. அவர்களுடன் பழகும்பொழுது அவர்களுக்கு நம்மிடம் வெறுப்பு உண்டாகாமல் நடந்துகொள்ள வேண்டும். பணச் செலவைக் கவனிக்கக்கூடாது. லண்டனில் வைத்தியப் படிப்பும், பரீட்சைகளும் கடினம். இந்தியாவிலேயே சிறிய பரீட்சை கொடுத்திருக்கும்

உங்களைப் போன்றவர்கள் 'எடின்பரோ'விற்குப் போவதுதான் நலம். பிரயாணம் உயர்ந்த வகுப்பு வண்டிகளில் செய்யவேண்டும். அப்போதுதான் மதிப்பிற்கு உரியவர்களாவோம்' என்று இம் மாதிரியெல்லாம் அடுக்கடுக்காக இலவசப் புத்திமதி கூறினார்கள். நான் என்னுடைய செல்வ நிலைக்கு மேலாகச் செலவு செய்து கொண்டு இரண்டாம் வகுப்பில் பிரயாணம் செய்ததற்கு இந்த நண்பர்களின் உபதேசமும் ஒரு காரணம்.

'சீமைக்குப் போகிறவர்கள் தலையில் குடுமி வைத்துக்கொள்ளக்கூடாது. அந்த ஊரில் தலைப்பாகை அணிந்து கொள்வதை வைத்தியப் படிப்புக்குப் போகிறவர்கள் செய்வதில்லை' என்ற உபதேசமும் எனக்குக் கிடைத்தது. நான் சென்னையில் மெடிகல் காலேஜில் படித்த பொழுதும் ரங்கூனுக்குப் போய்ச் சர்க்கார் உத்தியோகத்தில் இருந்தபொழுதும், வைதிக முறையில்தான் முடி வைத்துக்கொண்டிருந்தேன். வேலை செய்யும்பொழுதும், மற்றப்படி வெளியே போகும் நேரங்களிலும் தலைப்பாகை அணிந்துகொண்டிருந்தேன். அதன் பயனாகவே இந்த உபதேசம் சீமை சென்று திரும்பிய நண்பர்களால் எனக்குச் செய்யப்பட்டது. ஸ்ரீரங்கத்தினின்று புறப்படும்பொழுதுகூட, என் பெற்றோர்களின் மனக் கலக்கத்தை எண்ணி, முடியை எடுக்க நான் துணியவில்லை. கொழும்புத் துறைமுகத்தில் கப்பலேறப் புறப்பட்ட நான் தூத்துக்குடி சென்று அங்கிருந்து கப்பலேறி ஓர் இரவு பிரயாணம் செய்து மறுநாள் கொழும்பு சேரவேண்டியிருந்தது. அந்தக் காலத்தில் (1908) தனுஷ்கோடி மார்க்கம் இல்லை. தூத்துக்குடியில் ஒரு நண்பர் வீட்டில் தங்கினேன். "முடிவெட்டப் பரியாரி வேண்டும்" என்றேன். அவர் சற்றுத் திகைத்தார். "இன்று க்ஷவரம் செய்துகொள்ள நல்ல நாள் இல்லையே! பரியாரி கிடைப்பதுகூட அரிதாக இருக்கும். ஆனாலும் நீங்கள் கப்பலேறிச் சீமைக்குப் போகிறவர்கள். இதெல்லாம் பார்த்து முடியாது. கொழும்பில் போய்ச் செய்துகொண்டால் என்ன?" என்றார்.

"கொழும்பிலா? முன்பின் தெரியாத இடம். தங்குவது ஒரே நாள். கப்பல் ஏற வழி செய்துகொள்வதா, பரியாரியைத் தேடிக்கொண்டு அலைவதா?" என்றேன். அந்த நாளில் நம் பட்டணங்களில் 'பார்பர் ஷாப்' இல்லை. கடைசியாக எங்கோ தேடிப் பிடித்து நல்ல பட்டிக்காட்டுப் பரியாரி ஒருவனை என் நண்பர் கொணர்ந்தார். அவன் வந்ததும், "முடியா வெட்டச் சொல்கிறீர்கள்? எனக்குச் செய்து பழக்கம் இல்லையே!" என்றதும் எனக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை. "கத்தரிக்கோல் இருக்கிறதா?" என்றேன். "இருக்கிறது" என்றான். நானும் அவனுமாகச் சேர்ந்து என் முடியை நீளமும் குட்டையுமாக வெட்டினோம். மாடு மேய்ந்த புல்லுக் காடுபோல் இருந்தது என் தலை. இருந்த ரோமத்தை வாரி ஒதுக்கக் கையில் சீப்பு, கண்ணாடி முதலியவை இல்லை. ஏதோ குடுமியைக் கப்பலேறுமுன் கத்தரித்துவிட்டோம் என்ற ஆறுதலுடன் பிரயாணமானேன்.

அந்தச் சமயம் 'சுதேசிச் சண்டை' வெகு மும்முரமாகத் தூத்துக்குடியில் நடந்துகொண்டு வந்தது. முதல் முதலாக இந்தியர்களுக்குச் சொந்தமான கப்பல் இரண்டு தூத்துக்குடித் துறைமுகத்திற்கும் கொழும்பிற்கும் காலஞ் சென்ற தேசபக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களால் 'சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி' என்ற பெயரால் ஓட்டப்படும் காலம். ஆங்கிலக் கம்பெனியாரின் ஏகதேச உரிமையாக இருந்த 'பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி'யாருடைய கப்பல்களுடன் போட்டி. ஊரில் உத்ஸாகத்திற்கும் ஊக்கத்திற்கும் குறைவில்லை. தூத்துக்குடி வியாபாரிகள் பெரும்பாலோர் சுதேசிக் கப்பலிலேயே சரக்கு ஏற்ற ஒப்பந்தம் செய்துகொண்டனர். இரண்டு கம்பெனிகளுக்கும் போட்டி மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. என் நண்பர்கள் சுதேசிக் கப்பலில்தான் நான் பிரயாணம் செய்யவேண்டுமென முடிவுசெய்து சீட்டு வாங்கி, என்னை வழியனுப்பினார்கள். நான் கொழும்பிற்கு முன்பின் போகாதவனானபடியால், எனக்கு வழி காட்டி, சீமைக்குப் போகும் கப்பலில் ஏற்ற நான் ரங்கூனில் சீட்டு வாங்கிய 'தாமஸ் குக்' கம்பெனியாரின் கொழும்புக் கிளை ஆபீஸிற்கு என் வரவைப் பற்றித் தந்தி கொடுத்து என்னைக் கொழும்புத் துறைமுகத்தில் சந்திக்கும்படி அறிவித்துவிட்டேன்.

'பிரிட்டிஷ் இந்தியா' கப்பல் சரியாகச் சாயங்காலம் ஆறு மணிக்குப் பிரயாணமாயிற்று. சுதேசிக் கப்பலும் அந் நேரத்திற்கே புறப்படுமென்று கேள்வியுற்று ஐந்து மணிக்கே கப்பலில் ஏறிவிட்டேன். ஆனால் இரவு பன்னிரண்டு மணிக்குத்தான் கப்பல் புறப்பட்டது. சுதேசிக் கப்பலில் மூட்டைகளை எப்பொழுது வேண்டுமானாலும் ஏற்றலாமென வியாபாரிகள் இரவு பன்னிரண்டு மணி வரையில் அரிசி மூட்டைகளை ஏற்றிய வண்ணமாக இருந்தார்கள். சாப்பாடு, சிற்றுண்டி முதலிய வசதிகளில் ஒன்றையும் காணவில்லை. "ஒன்றும் கிடைக்காதா?" என்று கேட்டபொழுது, "என்ன ஐயா, ஓர் இரவுப் பிரயாணத்திற்குச் சாப்பாடு எதற்கு?" என்று பதில் சொல்லிவிட்டார்கள்.

மறுநாள் பகல் பன்னிரண்டு மணிக்குக் கப்பல் கொழும்புத் துறைமுகம் சேர்ந்தது. என்னைக் கூட்டிப்போக ஒருவரையும் காணவில்லை. விசாரித்ததில் சுதேசிக் கப்பலுக்குத் 'தாமஸ் குக்' கம்பெனி ஏஜெண்டுகள் வர மாட்டார்களென்று சொன்னார்கள். கடைசியாக ஒரு படகு அமர்த்திக்கொண்டு என் சாமான்களுடன் கரை வந்துசேர்ந்து, சமீபத்தில் இருந்த ஒரு சத்திரத்திற்குப் போனேன். அந்நேரத்தில் சாப்பாடு கிடைக்கவில்லை. ஸ்நானம் செய்துவிட்டுக் கிடைத்த சிற்றுண்டியை உண்டு சற்றுக் களைப் பாறி, பிறகு சத்திரத்தில் ஹோட்டல் வைத்திருந்த சிதம்பர ஐயர் என்பவரிடம் சென்று சீமைக்குப் புறப்படும் கப்பல் எப்பொழுது வருமென்று கேட்டேன். அவர் தமக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாதென்றும், நான் தாமஸ் குக் கம்பெனியாரிடம் சென்று

தெரிந்து கொள்ளவேண்டுமென்றும் சொன்னார். என் சாமான்களை அவரிடம் ஒப்படைத்து விடலாமென்று நினைத்து அவரைக் கேட்ட பொழுது அந்தப் பொறுப்பைத் தாம் வகிக்க முடியாதெனச் சொல்லிவிட்டார். சத்திரத்தில் காலியாக இருக்கிற சில அறைகள் தினசரி வாடகைக்குக் கிடைக்குமென அறிந்து அறை ஒன்றிற்கு முக்கால் ரூபாய் வாடகை பேசி, அங்கே சாமான்களைப் போட்டுப் பூட்டிவைத்துப் புறப்பட்டேன்.

அந்தச் சமயத்தில் ஹோட்டல் சிதம்பர ஐயர் பரிவுடன் அணுகி, “ஐயா, சீக்கிரம் வந்துவிடுங்கள். இங்கே காலிகள் அதிகம். சாமான் ஏதாகிலும் உருப்படியாக இருந்தால் மறு சாவி போட்டு அடித்துக்கொண்டு போய்விடுவார்கள். இருட்டுவதற்கு முன் வந்துவிடுங்கள்” என்று எச்சரிக்கை செய்தார். ஐந்நூறு ரூபாய் பெறும்படியான சாமான்கள் என்னிடம் இருந்தன. அதைக் கொழும்பில் இழக்க இஷ்டமில்லாதவனாக, தாமஸ் குக் கம்பெனிக்குச் சென்று அவசர அவசரமாகத் திரும்பிவிட்டேன். ஊரைச் சுற்றிப் பார்க்கவோ, கடைகளுக்குச் சென்று ஏதாகிலும் தேவையானவற்றை வாங்கவோ மனம் இடம் கொடுக்கவில்லை. கொழும்புத் திருடர் அனைவரும் என் சாமானைக் கொள்ளை கொண்டு போயவிடுவதாகவே எண்ணி, சத்திரத்தை விட்டு நகராமல் இருந்துவிட்டேன். மறுநாள் காலையில் கப்பல் வருவதாகவும், அன்றிரவு பன்னிரண்டு மணிக்குப் புறப்படுவதாகவும் தெரிந்து கொண்டேன். அன்று காலையில் எட்டு மணிக்குத் தாமஸ் குக் கம்பெனிக் கூலியாட்களிடம் என் சாமான்களை ஒப்புவித்துவிட்டு, சாயங்காலம் எட்டு மணிக்குள் கப்பலேறிவிட வேண்டுமென்று கம்பெனி ஆபீஸ் குமாஸ்தா ஒருவர் எனக்குத் தெரிவித்தார். என் மனத்தில் உண்டான திகிலைப்பற்றி அந்தக் குமாஸ்தாவிற்குத் தெரிவிக்கவில்லை. சத்திரத்திற்குத் திரும்பியபொழுது ஆழ்ந்த கவலை கொண்டேன். ‘ஐந்நூறு ரூபாய்ச் சாமானைக் கூலி ஆட்களிடம் ஒப்பிப்பதா? கப்பலில் கொண்டுபோய்ச் சேர்க்காமல் வேறு எங்கேயாகிலும் கப்பல் துறைமுகத்தை விட்டு வெளியேறும் வரையில் அப்புறப்படுத்தி, பிறகு அதை விற்றுக் கிடைத்த பணத்தை எடுத்துக்கொண்டு விட்டால் நான் நடுக்கடலில் இருந்து கொண்டு இவர்களை என்ன செய்ய முடியும்?’ என்று இப்படியெல்லாம் எண்ணினேன். கடைசியில் சத்திரம் சிதம்பர ஐயர் ஊட்டிய தைரியத்தின் பேரில் கூலிகளிடம் ஒப்பிக்க முடிவு செய்து இரவைக் கழித்தேன்.

காலையில் எட்டு மணிக்குக் கூலிகள் வந்து என் சாமான்களுக்குச் சீட்டு ஒட்டி எண்ணி எடுத்துச் சென்றார்கள். நானும் சாயங்காலம் சாப்பிட்டுவிட்டுப் புறப்பட்டேன். “ஸார், வெகுதூரம் போகிறீர்கள். நம்மூர்ச் சாப்பாடு இனி உங்களுக்குக் கிடைக்காது. உங்களுக்காகவே வெங்காய சாம்பார் செய்திருக்கிறேன். ஆற அமரச் சாப்பிட்டுப் புறப்படுங்கள்” என்று பரிவுடன் சாம்பாருக்கு

எட்டணு அதிகம் வாங்கிக்கொண்டு சிதம்பர ஐயர் உணவு அளித்தார். ஆனால் அவர் சொன்னது உண்மைதான். மூன்று வருஷங்கள் கழித்து இந்தியா திரும்பும் வரையில் வெங்காய சாம்பார்ச்சாதம் எனக்குக் கிட்டவில்லை. சுமார் ஏழு மணிக்குத் துறைமுகம் சென்று படகிலேறி, நான் ஏறவேண்டிய பிரெஞ்ச் மெயில் கப்பல் 'மெஸஜரி மாரிடையம்ஸி'ல் ஏறினேன்.

முழு வெள்ளைக்காரக் கப்பல் ஒன்றில் ஏறியது இதுதான் முதல் தடவை. வேலைக்காரர்கள் வெள்ளைக்காரர்கள்; சமையற் காரர் வெள்ளைக்காரர்; மற்றச் சிப்பந்திகளும் அப்படியே. அடி முதல் நுனிவரையில் எல்லாம் ஒரே வெள்ளைமயம். மருந்திற்குக் கூட ஆங்கிலம் பேசுபவர்கள் இல்லை. வெகு கஷ்டப்பட்டு, கைஜாடை, கண்ஜாடை முதலியவைகளின் உதவியைக் கொண்டு, கப்பலின் அமைச்சனைக் (steward) கண்டு பிடித்தேன். நான் போன சமயம் கப்பலில் சாப்பாட்டு நேரம். பிரயாணிகள் தடபுட லாக உடைகள் தரித்து, உல்லாசமான உணவு அருந்திக்கொண் டிருந்தார்கள். உள்ளே செல்வதற்குப் பயம். 'போகலாமோ, கூடாதோ? யாராகிலும் முரட்டுத்தனமாக வெளியே தள்ளிவிட் டால் என்ன செய்கிறது?' என்றெல்லாம் யோசனை. அரைமணி காத்திருந்த பிறகு என் சீட்டைப் பார்த்துவிட்டு, கப்பல் அமைச்சர் என் அறையைக் காண்பித்தார். எல்லோரும் சாப்பாட்டிற்குப் போயிருந்தபடியால் அறை காலியாக இருந்தது. பக்கத்திற்கு மூன்று தட்டுகள் வீதம் ஆறு படுக்கைகள் கொண்ட அறை. ஒரு புறத்தில் மேல் தட்டில் எனக்கு இடம் கொடுத்திருப்பதைப் பார்த்துக்கொண்டேன். "என் சாமான்கள் எங்கே?" என்று கேட் டேன். பிரெஞ்சுக்காரர்கள் வழக்கம்போலத் தலையை அசைத்து, தமக்குத் தெரியாதென அமைச்சர் கையை விரித்தார். கப்பலில் எனக்குத் தோன்றிய இடமெல்லாம் அலைந்து திரிந்தேன். சாமானைக் காணவில்லை. முதல் நாள் எண்ணிய பிரகாரம் கூலிகள் அடித்துக்கொண்டு போயிருப்பார்கள் என்ற முடிவிற்கு வந்து விட்டேன்.

பிரயாணம் செய்வதா கரை திரும்பிச் சாமான்களைத் தேடுவதா என்று மனக்குழப்பம் ஏற்பட்டது. அப்பொழுது இரவு எட்டு மணி. கப்பல் புறப்பட நாலுமணி நேரம் இருந்தது. படகு ஒன்றை அமர்த்திக்கொண்டு கரைக்குத் திரும்பித் தாமஸ் குக் கம்பெனிக்கு வந்தேன். ஓர் இந்தியக் குமாஸ்தா மாத்திரம் விளக்கடியில் உட்கார்ந்து வேலை செய்துகொண்டிருந்தார். அவரிடம் என் துயரத்தைத் தெரிவித்தேன். அவருக்கு அந்த ஆபீஸ் துரைமேல் கோபமோ, கப்பலின்மேல் கோபமோ, இரவில்கூட வேலை செய்ய நேரிட்டதன் ஆத்திரமோ தெரியாது; "என்ன ஐயா, கறுப்பு மனிதன் என்றால் இந்த வெள்ளைப் பயல்கள் இப்படித்தான் செய் கிறது. தங்கள் இனத்தினர் வந்தால் மட்டும் ஆரவாரித்து வர வேற்று, அவர்கள் மூட்டை முதற்கொண்டு பாதுகாத்து, மாப்

பிள்ளைகளை வழியனுப்புவதுபோல உழைக்கிறார்கள். நீங்களும் அதே பணந்தான் கொடுத்திருக்கிறீர்கள். கப்பல் புறப்படப் போகிறது. இந்த ஆபீஸ் துரை மேல்மாடியில் உட்கார்ந்து உல்லாசமாகக் குடித்துக்கொண்டிருக்கிறான். இவன் கப்பலுக்கு வந்து சீட்டுக் கொடுத்த பிறகுதான் கப்பல் புறப்படவேண்டும். நீங்கள் வந்திருப்பதை அவனுக்குத் தெரிவிக்கிறேன். அவன் உங்களை வந்து பார்ப்பான். நீங்கள் பயந்துகொண்டு மரியாதையாகப் பேசாதீர்கள். அவன் உங்கள் எஜமானன் அல்ல. நீங்கள் கொடுத்திருக்கும் பணத்திற்கு உழைக்கக் கடமைப்பட்டவன். இரைந்து சத்தம் போட்டுத் தடபுடலாகப் பேசுங்கள். 'சாமான் கிடைக்காமல் பயணம் தடைப்பட்டுவிட்டால் சும்மா விடமாட்டேன். சரியான கவனிப்பில்லை. உங்கள் சொற்படி உங்கள் கூலிகளிடம் ஒப்படைத்த சாமானைக் காணவில்லை. எனக்கு ஏதாகிலும் வழி பிறக்கும் வரையில் கப்பல் துறைமுகத்தை விட்டு நகரக்கூடாது' என்ற தோரணையில் விறைப்பாகப் பேசுங்கள். இல்லாவிட்டால் அந்தப் பயல் மசியமாட்டான்'' என்று புத்தி கூறி, குடித்துக் கொண்டிருந்த துரைமகனுருக்கு என் வரவை அறிவித்தார்.

துரை ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் கீழே இறங்கிவந்து என்னைப் பார்த்தார். ஆனால் அவர் குடிவெறியில் ஆழ்ந்தவராகக் காணப்படவில்லை. எனினும் குமாஸ்தா சொல்லிய பாடத்தைப் போலவே கூச்சல் போட்டுத் தடபுடலாக, பயத்தைக் காட்டாது அதிகாரமாகவே பேசினேன். என் பேச்சின் பயனோ, துரையின் குணமோ தெரியாது; "ஏன் கூச்சல் போடுகிறாய்? நான் உன்கூட வந்து சாமானைப் பார்த்து எடுத்துக்கொடுக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, தொப்பியை எடுப்பதற்காக மேலே சென்றார். இதையெல்லாம் மறைவிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த குமாஸ்தா அப்பொழுது என்னிடம் வந்து, "பார்த்தீர்களா? நீங்கள் அந்தப் போடு போடாவிட்டால் இந்தப் பயல் மசிய மாட்டான், ஐயா! தானே தலையெழுத்தை நினைத்துக்கொண்டு ஓடிவருவான் பாருங்கள்!'' என்று சொல்லி மறைந்தார். நானும் துரையும் படகிலேறிக் கப்பலுக்குச் சென்றோம். அங்கிருந்த சிப்பந்திகள் எல்லோருமாகச் சாமானைத் தேட ஆரம்பித்து, அரை மணிக்குப் பிறகு, முதல் வகுப்புப் பிரயாணிகள் காற்று வாங்கும் மேல்தட்டிற்குப் போகும் படிக்கட்டிற்கு அடியில் என் சாமானைக் கண்டுபிடித்தார்கள். உடனே பெட்டிகளைத் திறந்து எல்லாம் சரியாக இருக்கின்றனவா என்று பார்த்தேன். ஒன்றும் களவு போகவில்லை. வைத்தது வைத்தபடியே இருந்தது. இந்த அமளியில் என் சார்பாக இவ்வளவு பொறுப்பை ஏற்றுக்கொண்டு உதவிய துரைக்கு வந்தனம் கூற மறந்துவிட்டேன். எனக்குத் தோது சொல்லிய இந்தியக் குமாஸ்தாவிற்கும் வந்தனம் அளிக்கவில்லை.

என் சாமான் கண்டுபிடிக்கப்பட்ட ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் கப்பல் நங்கூரம் தூக்கப்பட்டது. நடுநிசியில் களங்கமற்ற

நிலாவின் வெள்ளிமயமான ஒளியின் பிரகாசத்தில், பளிங்குபோல அசைவற்று விரிந்து கிடக்கும் கடலில் கம்பீரமாக, கப்பல் ஆடாது அசங்காது அன்னப் பறவை தண்ணீரில் போவது போல் பிரயாண மாயிற்று. பகலில் பட்ட அல்லல்களுக்கிடையே தூங்க மனம் வராமல், இந்த அற்புதக் காட்சியைக் கவனித்துக்கொண்டே ஒரு மணி நேரத்திற்கு மேலாக அசைவற்று நின்றேன்.

கப்பல் மேற்கு நோக்கிச் செல்லச் செல்ல, கரை மறைந்து கொண்டே வந்தது. ஒரு மணி நேரத்திற்குப் பிறகு எங்கே பார்த் தாலும் வெண்ணிறமான கடல். கப்பலில் அநேகமாகப் பிரயாணி கள் எல்லோரும் உறங்கிவிட்டார்கள். என் பெட்டிகளைக் காலையில் எடுத்துக்கொள்ளலாமென மேல் தட்டிலேயே வைத்துவிட்டுப் படுக்கையறையை அடைந்தேன். எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். அந்த அறைக்கு முன்புறத்தில் அங்கே படுத்திருப்பவர்களின் பூட்ஸ் ஐந்து ஜதைகள் வைத்திருந்தன. அவற்றை எதற்காக அங்கே வைத்திருந்தார்கள் என்பது எனக் குப் புரியவில்லை. இரவில் படுக்கைக்குப் போகும்பொழுது அணிந்துகொள்ளும் மாற்று உடை பெட்டியிலேயே தங்கிவிட்ட தால், பகலில் தரித்திருந்த உடையுடன், காலில் அணிந்திருந்த பூட்ஸ் உட்பட அப்படியே சத்தம் செய்யாமல் ஏறிப் படுக்கையில் விரித்திருந்த விரிப்பின்மேல் படுத்தேன். உறக்கம் வரவில்லை. மனம் ஸ்ரீரங்கத்தை நாடிச் சென்றது. பெற்றோர், மனைவி, மக்கள் இவர்களுடைய ஞாபகம் ஒரு புறம். 'கண்காணாத இடத்தை நாடிச் சென்று பெறவேண்டிய அவசியம் இல்லாத ஒரு வித்தை யைக் கற்கவேண்டி, என்னவெல்லாம் செய்ய வேண்டியதாக இருக் கிறது?' என்ற எண்ணம் ஒரு புறம். என்னுடன் பெட்டி போன்ற அந்த இடுக்கறையில் தூங்குபவர்கள் ஐந்து பிரெஞ்சுக்காரர்கள்; ஆங்கில வாசனையே அறியாதவர்கள். அதிக வெப்பமான இரவு. அதோடு களையாத என் உடை. அலையே இல்லாத கடலில் என் மனம் அலைகளைக் கிளப்பி உறக்கத்தைத் தடுத்துவிட்டது. விடியற் காலை நேரத்தில்தான் சற்றுக் கண் அயர்ந்தேன். ★

— நவம்பர், 1943.

# எது கடமை ?

வாழ்க்கை நடத்துவதற்குப் பொருள்கள் பல வேண்டும். அரிசி, காய்கனி முதலியவை வேண்டும். உடை, வீடு முதலியவை வேண்டும். காசும் காகித நோட்டும் வேண்டும். இன்னும் பல வேண்டும். இவற்றை ஆளும் அறிவு வேண்டும். இதற்குக் கணக்கு அறிவு வேண்டும். இதை அளவுக்குமேல் கற்றுள்ளவர்கள் பலர் இருக்கிருர்கள். விரிவாகக் கற்பிக்கும் கல்வி முறையும் எங்கும் இருக்கிறது.

வாழ்க்கைக்கு இவை மட்டும் இருந்தால் போதாது. வாழும் உடலுக்கு நல்ல நிலை வேண்டும்; அதாவது உரமும் நலமும் வேண்டும். உடலை உரமாகவும் நலமாகவும் வைத்திருக்க உதவும் அறிவு எல்லோருக்கும் சிறிதளவு உண்டு. ஆனால் அது போதாது. இந்த அறிவைச் சிலர் மட்டும் வளர்த்து வைத்தியர்களாக விளங்குகிருர்கள். அவர்களின் கையில் உடம்பை ஒப்பித்துவிட்டு, அவர்கள் சொற்படி நடப்பதே பலருக்கும் பொதுவழியாக - எளிய வழியாக - இருக்கிறது.

கணக்குத் துறையில் விரிவான அறிவு பலருக்கு இருக்கிறது உடலோம்பும் துறையில் அவ்வளவு அறிவு இல்லையானாலும், அறிந்த வைத்தியர்களிடம் உடம்பை ஒப்பிக்கும் நம்பிக்கை எல்லோருக்கும் இருக்கிறது.

வாழ்க்கைக்குப் பொருளும் உடம்பும் மட்டும் போதுமா? மனமும் வேண்டும். அந்த மனத்தைப் பண்படுத்த எந்தக் கணக்கு உதவும்? எந்த வைத்தியர் உதவுவார்? மனத்தைப்பற்றி நாமே கற்று அறிந்து அறிவை வளர்த்துக் கொள்வதா? அல்லது, யாராவது தேர்ந்த மன வைத்தியரை நாடி அவரிடம் நம்பிக்கையோடு ஒப்பித்துவிட்டு அமைதி அடைவதா?

இன்று பெரும்பாலோருடைய வாழ்க்கை, இரண்டும் கெட்ட வாழ்க்கைதான். தாமே அறிவதும் இல்லை; அறிந்தவரை நம்பித் தெளிவதும் இல்லை.

இன்னொரு பெரிய குறை: உலகத்தில் கணக்கு முதலிய அறிவுத் துறைகள் வளர்ந்த அவ்வளவு உளவியல் என்னும் மனத்தின் ஆராய்ச்சித் துறை வளரவில்லை. அறிஞர் பெர்னுர்ட் ஷா கூறுவதுபோல், மற்றக் கலைகள் வளர்ந்து வளம் பெற்று வாழ்கின்றன என்ருல், உளவியல் இன்னும் பச்சிளங் குழந்தைப் பருவத்

திலேயே இருக்கிறது. ஆகையால், யாராவது முயன்று கற்றுத் தேற முன்வந்தாலும், போதிய துணை இல்லை என்று சொல்ல வேண்டும்.

ஆனல், நல்ல காலமாக மன வைத்தியருக்குப் பஞ்சம் இல்லை. உடல் வைத்தியர் போல் அவர்கள் வீட்டின் வாயிலே அடுத்து விளம்பரப் பலகை இல்லாதிருக்கலாம்; தெருவுக்கு ஒருவராகப் பலர் இல்லாதிருக்கலாம்; உடல் வைத்தியர் போல் செல்வாக்கும் பெருமல் இருக்கலாம்; செல்வமும் குவிக்காமல் இருக்கலாம்; ஆனல் இருக்கிருர்கள். பொருளையும் உடம்பையும் விட மனம் உயர்ந்தது, சிறந்தது, வாழ்க்கைக்கு அடிப்படையானது என்ற உண்மையை உணர்ந்தவர்களுக்கு அந்த மனவைத்தியர்கள் எப்படி யாவது கிடைப்பார்கள்.

நல்ல மகிழ்ச்சியான மனம் இருந்தால் நரம்புத் தளர்ச்சி என்னும் நோயே ஏற்படாமல் தடுத்துக்கொள்ள முடியும். பல நோய் களைப் போக்க மன மகிழ்ச்சி வேண்டியதாக இருக்கிறது. காலரா முதலான தொத்து நோய்கள் பரவுவதற்கு மனத்தின் பயத்தால் வயிறு கெடுவதும் ஒரு காரணமாக இருக்கிறது. மனக் கவலையே இளமையில் நரை ஏற்படுவதற்குக் காரணமாக இருக்கிறது. மன அடக்கம் உள்ளவரே உணவு வகையில் பத்தியமாக இருந்து வந்து நோயைப் போக்கிக்கொள்ள வல்லவராக இருக்கின்றனர். இந்தக் கருத்துக்கள் எல்லாம் இப்போது பரவி வருகின்றவை. இவைகளை ஆராய்ந்தால், உடம்பைக் காப்பதற்கும் மனம் அடிப்படை என்பது தெளிவாகும்.

நெடுங் காலத்திற்கு முன்பே - இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே - பிசிராந்தையார் என்னும் புலவர் இதை ஒருவாறு உணர்த்தியிருக்கிருர். நல்ல மனைவி, அறிவுள்ள மக்கள், பய னுள்ள வேலையாட்கள், சிறந்த ஆட்சி முறை, உயர்ந்த பெரியோர் களின் சூழல் இவ்வளவும் இருந்தால் ஒருவனுக்கு மூப்பும் நரையும் நெருங்காத நல்வாழ்வு உண்டு என்பதைத் தம் அநுபவத்தால் தெளிவு படுத்தியிருக்கிருர்.

பல பெரியோர்கள் இப்படிப்பட்ட நல்வாழ்வு வாழ்ந்திருக்கிருர் கள். அவர்கள் எல்லோரும் உடல் வைத்தியர்களைப் போல் விரிவான நூல்களை எழுதியிருந்தால் உலகத்திற்கு எவ்வளவோ பயன் விளைந்திருக்கும். அவர்கள் எழுதாமல் விட்டது நம் குறை தான். ஆனல் அவர்களுடைய வாழ்க்கைக் குறிப்புகள், வாழ்க்கை வரலாறுகள் நன்ருகப் பயன் தரக்கூடியவை. இப்போது வாழும் அறிஞர்கள் தங்கள் வாழ்க்கையைத் தாங்களே எழுதி உதவுகிருர் கள். இதுவும் சிறந்த பயன் தரும் முறையாகும். இவைகள் எல்லாம் அநுபவ வைத்திய அறிவுபோல் பயன்படும். காரண காரியம் தெரியாமல், நம் பாட்டிமார் செய்யும் பச்சிலை வைத்தியங்

கள் எவ்வளவோ பயன்படவில்லையா? இவற்றை வைத்துக் கொண்டு, மன வைத்தியத்தை ஒரு தனிக் கலையாகப் பெருக்கி விடலாம். இப்படித்தானே உடல் வைத்தியமும் கலையாக வளர்ந்தது? முதலில் சோதிடக் கலையாக (astrology) இருந்ததுதானே மெல்ல மெல்ல விரிவடைந்து வான நூலாக (astronomy) வளர்ந்தது? முதலில் ரசவாத வித்தையாக (alchemy) இருந்ததுதானே படிப்படியாக மாறி ரசாயனக் கலையாக (chemistry) வளர்ந்தது? இதுபோலவே இன்றுள்ள வாழ்க்கை வரலாற்று உண்மைகளை எல்லாம் உணர்ந்து காரணகாரிய ஆராய்ச்சி முறையில் தெளிவாக்கி வெளியிட்டால், மன வைத்தியம் ஒரு பெருங்கலையாக வளர்ந்து விடும்.

இந்த முயற்சி உலகத்தில் புதியது அல்ல. பல அறிஞர்கள் இதைத் தொடங்கி நடத்தியிருக்கிறார்கள். உலகத்தில் ஏற்பட்டுள்ள நீதி நூல்களும் சமய நூல்களும் இந்த முயற்சியின் பயன்தான். திருவள்ளுவருடைய அறத்துப்பால் மிகத் தெளிவான மன வைத்திய நூல் என்று கூறலாம். ஆனால் இவைகள் போதுமா? இன்னும் விளக்கமான நூல்கள் வேண்டாமா?

இன்றுள்ள கணக்கறிவு போதும் என்று கூறலாம். அளவுக்கு மேல் உள்ளது என்றும் சிலர் கூறுவார்கள். நூல்கள் மிக விரிவாக உள்ளன. கற்பிக்கும் முறையும் பலவகை முன்னேற்றம் அடைந்துள்ளது. கணக்குக் கல்விக்கு உள்ள இடம் அறக் கல்விக்கு இருக்கிறதா? கணக்குக் கல்வியில் இன்று நம்பிக்கையைக் கடந்து உண்மை என்று உணரும் நிலை இருக்கிறது. ஆனால், அறத்துப்பாலை அவ்வாறு உணர்ந்து கற்கின்றவர்கள் யார்? நம்பிக்கையாவது எல்லோருக்கும் இருக்கிறதா? இல்லை என்றால், அதற்குக் காரணம் என்ன? கல்வி முறையின் குறையா? நூல்கள் போதாத குறையா? ஐந்தும் நான்கும் ஒன்பது என்றால் ஒருவரும் தயங்குவதும் இல்லை; மறுப்பதும் இல்லை. ஆனால் 'மறந்தும் பிறன் கேடு சூழற்க; சூழின் அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு' என்பதுவது, 'நோய் எல்லாம் நோய்செய்தார் மேலவாம்' என்பதுவது அறத்தின் உண்மைகளை எடுத்துச் சொன்னால், 'ஆம்' என்று உணர்கிற கல்வி முறை உள்ளதா? உண்மை என்று உணராவிட்டாலும், நம்பிக்கையால் ஏற்றுக்கொள்ளும் கல்வி முறையாவது இருக்கிறதா?

நம்பிக்கையால் ஏற்றுக்கொள்ளும் காலம் மெல்ல மறைந்து வருகிறது. எதையும் ஆராய்ச்சியால் கண்டு உணரும் போக்கே வளர்ந்து வருகிறது. நாட்டின் இளைஞர்களுக்குக் கணக்குப்போல் அறமும் தெளிவாக உணர்த்த வல்ல பெரியோர்கள் வேண்டும்; கணக்கை விரிவாக விளக்குவதுபோல், அறக்கூறுகளையும் தெளிவாக ஆராய்ந்து எடுத்துக் காட்டுகளோடு (வாழ்க்கை வரலாற்றுப் பகுதிகளோடு) விளக்கும் முறை வேண்டும். இது அருமைதான்.

மரம், செடி, கொடிகளையும், விலங்குகளையும் பறவைகளையும் ஆராய்வதை விட, உடம்பின் உள்ளும் வெளியும் வாழ்கின்ற நோய்க் கிருமிகளையும் நல்ல நுண்ணுயிர்களையும் ஆராய்வது அருமைதான். ஆனால் அதைவிட மிகவும் பயனுள்ளது அல்லவா? அது போலவே, பருப்பொருள்களை அளந்து அறிய உதவும் கணக்கறிவைவிட, நுட்பமான உண்மைகளை ஆராய்ந்து கூறும் அறத்தின் தெளிவு அருமையானது; மிகுதியான பயனுள்ளது.

இந்த நல்ல முயற்சிக்கு இன்று உள்ள அரசியல் சமூக அமைப்புக்கள் பெரிய இடையூறுகளாக உள்ளன. முக்கோணத்தின் மூன்று கோணங்களும் சேர்ந்து 180 டிகிரி என்று சொன்னால், இன்று அதை மறுக்கக் கூடிய எடுத்துக்காட்டுகள், விதிவிலக்குகள் ஒன்றும் இல்லை. ஆனால், "ஒழுக்கம் விழுப்பம் தரும்" என்று அறம் ஓதினால், "அதோ அந்த ஆள் ஒழுக்கம் தவறாதவர்; ஆனால் வாழ்க்கையில் மிகத் தாழ்ந்த படியில் நின்று ஏங்குகிறார்" என்றும், "அதோ அவர் ஒழுக்கத்தைப் பொருட்படுத்தாதவர்; பேரும் புகழும் செல்வாக்கும் பெற்று விளங்குகிறார்" என்றும் நூற்றுக்கணக்கான எடுத்துக் காட்டுகளை வாழ்க்கையிலிருந்து காட்டி மறுப்பார்கள். இன்று உள்ள அரசியலமைப்பும் சமூக அமைப்பும் அறத்தின் அடிப்படையில் அமையவில்லை. அதனால் தான் இந்தத் தொல்லை. அறத்தில் நம்பிக்கை உடையவர்கள் ஒதுங்கி நிற்கவேண்டியிருக்கிறது. மற்றவர்கள் முன்னேற இடமும் இருக்கிறது. அன்புடைமையை இன்று அரசியலில் கையாண்டால், தோல்விதான்; எதிர்க் கட்சியைப் பகைக்கத் தெரிந்தால்தான் வெற்றி. நடுவு நிலைமையை அரசியலில் கையாண்டால் கட்சி வளர்ச்சியுறாது; ஒரு சார்பில் நின்றால்தான் ஓங்க முடியும். தீவினையச்சத்தை மேற்கொண்டால் தேர்தலில் இடம் ஏது? மனச்சான்றை ஒருவாறு அடக்கித் தீவினைகளில் கலந்து கொண்டால்தான் எதிர்க் கட்சியை ஒடுக்க முடியும். இன்னா செய்யாமை நோன்பாகக் கொண்டு வாழ்ந்தால், "இவன் இந்த உலகத்திற்குத் தகுதி அல்ல; கோழை" என்று எல்லோரும் கைவிடுவார்கள்; இரக்கம் இல்லாமல் இன்னா செய்யத் துணிந்தால்தான் வீரன் என்று புகழ்வார்கள்.

இவற்றிற்கு விலக்காக நேர்மையும் அறமும் கடைப்பிடித்து வாழும் தலைவர்கள் உண்டு; தொண்டர்களும் உண்டு. 'ஆனால் அவர்கள் சிறுபான்மையோர் அல்லவா? விதிக்கு விலக்குத்தானே?' என்று இளைஞர்களின் மனம் எண்ணுகிறது. கள்ளச் சந்தை மலிந்துள்ள காலத்திலும் நாணயமுள்ள வியாபாரிகள் அங்கங்கே ஒருவர் இருவர் இல்லையா? ஒரு சிலர் இருப்பதனாலேயே, வியாபாரத்தில் நேர்மையாளர் மட்டுமே முன்னேற முடியும் என்று விதியாகச் சொல்ல முடியுமா?

கள்ளச் சந்தை மலிந்துள்ள காலத்தில் கணக்கில் தேர்ந்த கணக்குப்பிள்ளைக்கு இடம் இராது. கணக்குத் தெரிந்தால் என்ன

பயன்? ஒன்றைப் பத்தாகச் சொல்லிப் பொய்யும் பித்தலாட்டமும் செய்து பிறர் கண்ணுக்குத் தெரியாமல் காசை வாங்கி நிரப்பும் கைதேர்ந்த திறமைதான் வேண்டும். ஆனால் அதில் கைதேர்ந்த ஆள் கணக்குத் தெரியாத ஆளாக இருக்கலாம். இருந்தாலும் அப்படிப்பட்ட ஆள்தான் கள்ளச் சந்தைக்கு வேண்டும்.

இன்று உள்ள அரசியலும் ஒருவகையில் கள்ளச் சந்தை தான். அறவோர் சிறுபான்மையாக ஒதுங்கி நிற்க, செல்வமும் செல்வாக்கும் பெற்றவர்கள் பெரும்பான்மையாக நுழையும் துறை அப்படித்தான் இருக்க முடியும். கள்ளச் சந்தையைப் பார்த்துப் பயின்றவர்கள், "கணக்கில் தேர்ச்சி பெறுவதால் பயன் இல்லை; கணக்கறிவு காசுக்கு உதவாது. கைதேர்ந்த திறமைதான் வேண்டும்" என்பார்கள். அதுபோலவே, இன்று உள்ள இளைஞர் பலர், அரசியல் சமூகத் துறைகளில் செல்வாக்கும் செல்வமும் பெற்று உயர்ந்துள்ளவர்கள் பெரும்பாலோரைப் பார்த்துவிட்டு, "வாழ்க்கை முன்னேற்றத்துக்கு அறமும் வேண்டாம், மன வைத்தியமும் வேண்டாம்; தந்திரம், துணிவு, பற்று, தன்னலம், பணம், புகழ் இவைகளே வேண்டும்" என்று தெளிவாக உணர்கிறார்கள்.

நிலைமை இப்படியே இராது. கட்டுப்பாடும் அறிவும் மக்களிடையே வளர வளர, கள்ளச் சந்தை வல்லமை இழக்கும். கடமையுணர்ச்சியும் அறநெறியும் மக்களிடையே வளர வளர, அரசியலிலும் புன்மை சாகும். அதுவரையில், 'உலகம் பொல்லாதது' என்று சொல்லித் திரிவதா? அல்லது, அறத்தின் சிறப்பை விளக்கி வாழ்வதா? எது கடமை? ★

— ஜனவரி, 1948.

# பாரதியார் பாடிய கோவிந்தஸ்வாமி

"கிருஷ்ண" என்று அதட்டற் குரலிலே பாரதியார் என்னை அழைத்தார். "ஏன்?" என்றேன்.

"நீ என்ன மகா பொல்லாதவனாக இருக்கிறாயே. எவன் எவனோ என்னுடைய காலிலே வந்து விழுகிறான். எங்கே வந்தா யென்றால் குவளை கிருஷ்ணமாச்சாரியால் என் பெருமை தெரிந்த தாகச் சொல்கிறான். இந்த வேஷதாரிகளை யெல்லாம் எதற்காக என்னிடம் அனுப்புகிறாய்? என்னைப்பற்றி அநாவசியமாக ஏன் விளம்பரம் செய்துகொண் டிருக்கிறாய்?" என்று அவர் என்னைக் கோபித்துக் கேட்டார்.

"யார் அப்படி உங்களிடம் வந்தார்கள்?"

"யாரா? யாரோ ஒருத்தன் கோவிந்தஸ்வாமியாம்; யானைக் காலோடு வந்து காலிலே விழுகிறான். எனக்கு உடம்பு நடுங்கி விட்டது."

பாரதியார் கோபத்தோடு பேசுவதன் காரணம் எனக்கு விளங்கி விட்டது. அவருக்கு நோயாளிகளைக் கண்டால் அருவருப்பு அதிகம். நோயாளியைத் தொட்டுவிட்டால் உடனே முழுகுவார். அவர் பாதத்தில் யானைக் காலுடைய ஒருவர் விழுவ தென்றால், அவருக்கு ஏன் எரிச்சல் வராது?

"இல்லை; அவர் பெரியவர்; நல்லவர்" என்று நான் சொல்ல ஆரம்பித்தேன்.

"என்ன பெரியவர்! உடம்பை நன்றாக வைத்துக் கொள்ளத் தெரியவில்லை" என்று அவர் நான் மேலே சொல்லாதவாறு தடுத்தார்.

இவ்வாறு பேசிய பாரதியாரே பிறகு அந்தத் துறவியைப் பற்றி,

"அன்பினால் முக்தி யென்றான் புத்தன் அந்நாள்
அதனையிந்நாட் கோவிந்த சாமி செய்தான்
துன்பமுறு முயிர்க்கெல்லாந் தாயைப் போலே
சுரக்குமரு ளுடையபிரான் றுணிந்த யோகி
அன்பினுக்குக் கடலையுந்தான் விழுங்க வல்லான்
அன்பினையே தெய்வமென்பா னன்பே யாவான்

மன்பதைகள் யாவுமிங்கே தெய்வ மென்ற
மதியுடையான் கலியென்னு மயக்கம் தீர்த்தான் ''

என்று பாராட்டிப் பாடினர். கோவிந்தஸ்வாமி பாரதியாருடைய காலில் முதலில் வீழ்ந்தாலும் பிறகு பாரதியாரைத் தம்முடைய காலில் விழச் செய்தார்.

கோவிந்தஸ்வாமி புதுச்சேரியிலே பிறந்தவர். யாதவகுலத்தினர். அவருடைய சகோதரர் தளவாய் லக்ஷ்மண பிள்ளை என்பவர் போலீசில் உயர்ந்த உத்தியோகம் பார்த்து வந்தார். கோவிந்தஸ்வாமி வட நாட்டு யாத்திரை செய்தவர். ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர் இருந்து வந்த தக்ஷிணேசுவரர் கோயிலில் பல காலம் இருந்தார். பிறகு அங்கிருந்து சந்தனநகர் (Chandernagore) முதலிய இடங்களுக்குச் சென்றுவிட்டுப் புதுச்சேரிக்கே வந்து சேர்ந்தார். புதுச்சேரியில் கரடிக் குப்பத்துக்குப் போகும் வழியில் ஓர் இடம் உண்டு. அங்கே தனிமை ஆட்சி புரிந்தது. அவ்விடத்திலே ஒரு குளமும் அதன் கரையிலே பரதேசிகள் தங்குவதற்குரிய அன்னக் காவடி மடம் ஒன்றும் இருக்கின்றன. சித்தானந்தஸ்வாமி கோயில் என்ற ஆலயம் ஒன்றும் இருக்கிறது. அதைத்தான் பாரதியார் 'சித்தானந்தசாமி திருக் கோயில்' என்று பாடியிருக்கிறார்.

அன்னக் காவடி மடத்திலே ஒரு பரதேசி ஊருக்குள்ளே காவடி எடுத்துச் சென்று அன்னப் பிக்ஷை வாங்கிக் கொணர்ந்து மடத்திலேயுள்ள பரதேசிகளுக்கு இட்டு வந்தார். அந்த மடத்திலேதான் கோவிந்தஸ்வாமி தங்கியிருந்தார்.

எனக்குப் பரதேசிகள் என்றால் பைத்தியம் அதிகம். எவ்வளவோ துறவிகளை என்னுடைய இளமை தொடங்கிப் பார்த்து அவர்களோடு பழகியிருக்கிறேன். அவர்களுக்குள் கோவிந்தஸ்வாமியும் ஒருவர். நான் அவரோடு சம்பாஷிக்கும் காலங்களில் பாரதியாரைப்பற்றிப் பேசுவேன். அவர் சக்தி வெறி பிடித்தவர் என்பதைச் சொன்னேன். "அப்படிப் பட்டவரைப் பார்க்க வேண்டும்" என்று அவர் சொன்னர்.

"மாலை வேளைகளில் இந்த இடத்துக்கு அவர் வருவார். அப்போது பார்க்கலாம்" என்று நான் சொல்லியிருந்தேன்.

பாரதியார் சித்தானந்தசாமி கோயிலுக்கு அருகிலுள்ள தனி இடத்தில் உலாவுவார். ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டு தம்முடைய மனோரதத்தை ஓட்டிக்கொண் டிருப்பார். இப்படி இருந்தபோதுதான் கோவிந்தஸ்வாமி அவரைக் கண்டு அவரே பாரதியாரென்று கண்டுகொண்டு அவருடைய பாதத்தில் விழுந்தார். பாரதியாருடைய விழியிலுள்ள ஒளியிலே அந்தச் சாமியார் சக்தி வெறியைக் கண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அப்படிப் பணிவதற்கு நியாயமில்லை.

கோவிந்தஸ்வாமி சாமான்யமானவரல்லர். அவர் பரம சாது. அவர் முகத்திலே எப்போதும் புன்னகை தவழும். அவர் கால் மாத்திரம் வீங்கியிருக்கும். மந்திர சக்தி கூட இருந்ததென்று எனக்குத் தோன்றியது.

முதலில் பாரதியார் அந்தச் சாமியாரை வெறுத்தாலும் என்னுடைய வார்த்தைகளாலும் நாளடைவில் அவரோடு பழகியதாலும் அவர் பெருமை பாரதியாருக்குத் தெரியவந்தது. சாமியார், பாரதியார் வீட்டுக்குச் சில முறை வந்தார். ஒரு சமயம் பாரதியாரைப் பார்த்து, "உங்கள் தகப்பனாரின் முகம் ஞாபகம் இருக்கிறதா?" என்று கேட்டார். 'அவர் ஏதோ ஒரு விதமாக இருக்கிறது; தெளிவாக இல்லை" என்றார்.

"இப்போது கண்டால் அடையாளம் தெரிந்து கொள்ள முடியுமா?" என்று கேட்டார் சாமியார்.

பாரதியார் சிரித்தார். "இப்பொழுதாவது, காண்பதாவது!" என்றார். "உண்மையாகச் சொல்கிறேன்; இதோ பாருங்கள், உங்கள் தந்தையாரை" என்று சாமியார் கூறினார்.

ஆச்சரியம்! பாரதியார் கண்களுக்கு அவர் தந்தையாரின் திருமுகம் தோற்றியது. 'மெஸ்மெரிஸமோ', 'ஹிப்னடிஸமோ' ஏதோ பழகிக் கைவந்தவர் அவரென்பதைப் பாரதியார் கண்டு கொண்டார்.

"என்னுடைய தந்தையைத் தரிசித்தேன். தாயைப் பார்க்க வேண்டுமே" என்றார் அவர்.

"அப்படியே பார்க்கலாமே; உங்கள் தாயை நினைத்துக் கொள்ளுங்கள்." அடுத்த கணம் பாரதியார் தம் தாயின் திருமுக மண்டலத்தைப் பார்த்தார். உடனே அது மறைந்துவிட்டது. அப்பால் கோவிந்தஸ்வாமியை அவர் புகழ்வதற்கு என்ன தடை?

அவர் கூறுவதைக் கேளுங்கள்—

"பொன்னடியா லென்மனையைப் புனித மாக்கப்
போந்தானிம் முனியொருநாள் இறந்த எந்தை
தன்னுருவங் காட்டினான் பின்னரென்னைத்
தரணி மிசைப் பெற்றவளின் வடிவமுற்றான்
அன்னவன்மா யோகியென்றும் பிரமஞானத்
தனுபூதி யுடையனென்று மறிந்து கொண்டேன்
மன்னவனைக் குருவென நான் சரணடைந்தேன்
மரணபய நீங்கினேன் வலிமை பெற்றேன்."

★

— செப்டம்பர், 1939.

கி. பாலசுப்பிரமணிய ஐயர்

# நதி உருவம் கொண்ட புகழ்

பஞ்சம் கடவுளின் செய்கை என்று நமது அமெரி துரை அபிப்பிராயப்பட்டார். ஆனால், இது உண்மையல்லவென்று, அமெரி அவர்கள் பேசினதைக் கேட்ட பர்மிங்ஹாம் பட்டணத்தவர்களே மறுத்தார்கள். பஞ்சம் மனிதர்களின் செய்கையே தவிர, வேறு இல்லை. கருணை வடிவமான கடவுளின் பேரில் இந்தக் கொடுமைச் செய்கையைச் சுமத்துவது நியாயம் அல்ல. மேலும், நீர்வளம், நிலவளம நன்கு அமைந்திருக்கும் நாடுகளில் பஞ்சத்தினால் மாந்தர்கள் வருந்த நேர்ந்தால் அது மனிதச் செய்கையே ஒழியக் கடவுளின் செய்கையாகாது. ஆனால் மனிதர்கள் அல்லது அரசர்களின் செய்கை காரணமாக நாட்டில் பஞ்சம் ஏற்பட்டால் கடவுளைக் காட்டித் தப்பித்துக் கொள்வதும் வெகு காலமான பழக்கம்.

பெரும்பாலும் வேளாண்மையே பிழைப்பாகக் கொண்ட நம் பாரத நாட்டில், ஒழுங்கான அரசாட்சியும் பொருளாதார உண்மைகளை அறிந்த நனனடக்கைகளும், அன்னதானமும், அன்பும் எத்தருணங்களில் சீர்குலைந்திருக்கின்றனவோ அப்பொழுது பஞ்சத்தின் கொடுமைகள் உண்டாகின்றன. தொன்று தொட்டுள்ள நம் தேசத்துப் புராண நூல்களிலும், சரித்திரங்களிலும் சில காலங்களில் பஞ்சத்தினால் சில ஊர்கள் அடிபட்டதாகச் சொல்வதுண்டு. அந்தப் பஞ்சங்களுக்குக் காரணம் மனிதன் செய்கை என்று நேராகச் சொல்லாமல், மாந்தர்களின் பாபச் செயல்களால் கடவுளுக்குக் கோபம் வந்து, சில நாடுகளில் மழையில்லாமல் பஞ்சம் ஏற்பட்டுவிட்டது என்று எழுதுவது வழக்கம். இந்த மாதிரியான பஞ்சங்கள் பரந்த பாரத பூமியில் சில சில பிரதேசங்களில் உண்டாவது ஆச்சரியப்படத் தக்கதல்ல. அதன் கொடுமையைத் தீர்த்துப் பஞ்சத்தை ஒழிப்பதற்கு முயன்று உழைப்பதுதான் மக்கள், அரசாங்கத்தார் ஆகியவர்களுடைய கடமையாகும்.

காளிதாச மகாகவி தம்முடைய "மேகஸந்தேசம்" என்ற காவியத்தில் உயிர்த் துணையான தன் மனைவியிடமிருந்து சாபத்தால் பிரிக்கப்பட்டு மிகுந்த காதலால் வருந்துகிற ஒருவன் ஆடி மாதத்தில் முகிலைப் பார்த்து அதைத் தன் மனைவிக்குத் தூது அனுப்புவதாகச் சொல்லித் தன் ஆற்றலை வெளியிடுகிறதாகவும், தென் தேசத்திலிருந்து வடக்கே தன் காதலி வசிக்கும் அளகாபுரிக்குப் போவதற்கு அந்த மேகத்திற்கு வழியையும் காட்டுகிறதாகவும் வர்ணிக்கிறார். மத்திய தேசத்தில், "சர்மண்வதி" என்ற

பெயருள்ள நதியைக் கடந்து செல்லவேணும் என்று தெரிவிக்கிற சந்தர்ப்பத்தில், ரந்தி தேவன் என்கிற ஓர் அரசனுடைய புகழ்தான் இந்த நதி ரூபமாகப் பூமியில் ஓடிக்கொண்டிருக்கிறது என்று அழகான முறையில் அந்த மகாகவி நமக்கு அறிவிக்கிறார். சாதாரணமாக ஒரு நல்லாருடைய புகழ்கூட அவர் காலத்திலேயே மறைந்துவிடும். சிலருடைய புகழ் அவர்களுக்குப் பின்பு வெகுகாலம் இருந்து அதன் பிறகு மறையலாம். ஆனால் ஒருவனுடைய புகழ் நதி ரூபமாக எக்காலத்திலும் பெருகிக்கொண்டே இருக்க வேணுமென்றால் அது அரிதே. இத்தகைய விண் சுமந்த கீர்த்தி இந்த அரசனுக்கு எப்படி வாய்த்தது? அவன் செய்த பெரும் புண்ணியச் செய்கையே காரணமாக இருக்க வேண்டுமல்லவா? அது இன்னதென்று, மாமுனிவரான சுகர் ஸ்ரீமத் பாகவதத்தில் நமக்கு நன்கு எடுத்துக் காட்டுகிறார்: "இன்றைக்குங்கூட இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் ரந்தி தேவனுடைய புகழ் போற்றப்படுகிறது."

முன்னொரு காலம் பாரத பூமியின் மத்திய தேசத்தில் பஞ்சம் ஏற்பட்டது. அச்சமயம் ரந்திதேவர் என்ற நல்லரசர் இருந்தார். இந்தப் பஞ்சத்தினால் உண்டான வறுமையையும் கொடுமையையும் பார்த்து அடங்காத துயரத்தில் ஆழ்ந்தவராய், அவர் உடனே ஒரு கடும் விரதம் பூண்டார். அதாவது தம் அரண்மனையிலும் தமக்குச் சொந்தமான நிலங்களிலும், தம் முன்னோர்களும் தாமும் சேகரித்து வைத்திருந்த தானியக் குவியல்களை யெல்லாம், இத்தருணத்தில் பஞ்சத்தில் அடிபட்டவர்களுக்குச் சோறளிப்பதற்கே உபயோகப் படுத்த வேணும் என்று கருதி நாடு முழுவதும் பசியால் வருந்துகிறவர்களுக்கு அன்னமளிக்க ஆரம்பித்தார். இத்தகைய பஞ்சம் ஏன் ஏற்படவேணுமென்று அவர் யோசிக்கலானார். மக்களின் ஈர இரக்கமில்லாப் பாபச் செயல்களே இதற்குக் காரணமென்று அவருக்குத் தோன்றியது. தாமும் அரசரானபடியால் பஞ்சத்திற்கு அடிப்படையான காரணமென்றே தம்மை இகழ்ந்துகொண்டார். அதற்காக நாற்பத்தெட்டு நாள் தண்ணீர் கூடப் பருகாமல் சிறிதேனும் ஆகாரமின்றிக் கடும் பட்டினியாகக் கிடக்கவேணுமென்றும், அப்போதே அந்த நாற்பத்தெட்டு நாளும் பசியினால் வருந்தி அரண்மனை வாயிலில் அலறும் மக்களுக்கு அன்னமளிக்கும் காட்சியைத் தாம் பார்த்துக்கொண்டே காலம் கழிக்க வேணுமென்றும் தீர்மானித்து அப்படியே செய்யத் தொடங்கினார். எல்லோருக்கும் பல இடங்களில் சாப்பாடு போட விடுதிகள் அமைத்தார். திரள் திரளாக மனிதர்கள் வந்து பசியாறி மகிழ்ச்சி அடைந்து அரசரை வாழ்த்திச் சென்றார்கள்.

இப்படியே நாற்பத்தெட்டு நாளும் அமளியாகவே கடந்தன. இதற்குள்ளேயே அடிக்கடி மந்திரிகளும் நண்பர்களும் இவர் உயிருக்கு அபாயம் வந்துவிடுமோ என்கிற பயத்தால் அந்தக் கடும் பட்டினியை நிறுத்த வேணுமென்று உபதேசித்தார்கள். "மாந்தர்களுக்கு அன்னம் அளிக்கிற நன்மை போதாதா? எதற்காக

இந்தக் கடும் பட்டினி? இந்தப் பஞ்சம் ஈசன் செயல் அல்லவா? நாம் என்ன செய்கிறது?'' என்றெல்லாம் சொல்லி அவரிடம் வாதாடினார்கள். அவர் இதற்கெல்லாம் அசையவில்லை. அவர் உடல் இளைத்தது. மனம் இளைக்கவில்லை. மனசு திடத்தாலும் சாந்தியாலும் ஆத்ம சக்தியாலும் கடவுளின் கருணையினாலும் அவர் நாற்பத்தெட்டு நாளும் பட்டினி கிடந்தும் பிழைத்தார். நாற்பத்தொன்பதாவது நாள் உலர்ந்துபோன நாக்கை நனைத்துக் கொஞ்சம் தண்ணீர் உட்கொண்டு இனி இப்பட்டினியை நிவர்த்தித்துக் கொள்ளவேணும் என்று அவர் மனைவி மக்கள், அமைச்சர்கள் எல்லாரும் வருந்திக் கேட்டு அவரைச் சுற்றி நின்றார்கள்.

அந்தச் சமயம் அரண்மனை வாயிலில் ஒரு புலையன், "தாகத்தினால் நாக்கு ஒட்டிக் கொள்ளுகிறது; தண்ணீர் இல்லையா?'' என்று கூக்குரலிட்டான். இம்முறையீடு அரசர் செவியில் நுழைந்தவுடனே அவர் தாம் தண்ணீர் குடிப்பதை நிறுத்தி அவனுக்கே அதைக் கொடுக்கும்படி உத்தரவிட்டார். அப்பொழுது அங்கிருந்த எல்லோரும், "நீங்கள் செய்வது நியாயமல்ல. நாற்பத்தெட்டு நாள் பட்டினிக்குப் பிறகு உயிர் நிறுத்துவதற்காகக் கொஞ்சம் தண்ணீர் குடிப்பதை இதற்காக நிறுத்துவது பிசகு'' என்றெல்லாம் சொல்லி அவரை வற்புறுத்தினார்கள்.

அப்பொழுது அவர், "நான் இருந்தால் என்ன, இறந்தால் என்ன? எனக்குப் பொன்னுலகம் வேண்டாம். அஷ்ட ஐசுவரியமும் வேண்டாம். பிறப்பு இறப்பற்ற மோட்சமும் வேண்டாம். மக்களுடைய துயரத்தைத் தீர்ப்பதற்காகவும், அவர்களுடன் கூடி வாழ்ந்து அதை நானும் அநுபவித்துத் தணிப்பதற்காகவும் என் வாழ்க்கையை நடத்தவேணுமே தவிர, மற்றதெல்லாம் பயன் படாது'' என்ற மயிர்க்கூச்சல் உண்டாக்கும் நன்மொழிகளைச் சொல்லி இளைப்பாகப் படுத்திருந்தவர் எழுந்து, தாமே தண்ணீரை எடுத்துக்கொண்டுபோய் அந்தப் புலையனிடம் கொடுத்து, அவன் தாகம் தீர்ந்து மகிழ்ச்சி அடைந்ததைப் பார்த்துச் சந்தோஷமாகத் திரும்பி வந்தார். அதன் பிறகுதான் தண்ணீர் உட்கொண்டார்.

இந்தச் செய்தியைக் கண்டறிந்து திகைத்துப்போன அந்த நாட்டு மக்கள் எல்லோரும் ஒன்றுகூடி, மனமார்ந்த அன்புடன், "இவரும் இவர் புகழும் நீடுழி வாழவேண்டும்'' என்று வாழ்த்தினார்கள். இத்தகைய அரசர்களும், மேன்மக்களும் நம் பாரத நாட்டில் பழைய காலத்தில் தோன்றியதனால் அல்லவா பஞ்சத்தினால் மனிதர்கள் இறந்தார்கள் என்ற பேச்சு அந்தக் காலத்தில் கேட்டதேயில்லை. நாடெங்கும் பயிர்கள் செழிப்பாகத் தழைத்தோங்கித் தானியம் நிறைந்து பஞ்சம் ஒழிவது நதியினால் அல்லவா? இந்த மாதிரி பஞ்சத்தில் சோறு அளித்தவர் புகழ் நதியுருவம் கொண்டது என்று சொல்வது மிகவும் பொருத்தமாகும்.

திருஞானசம்பந்தரும் திருமுல்லை வாயிலில் இருக்கும் மேன் மக்களைப்பற்றி இவ்வாறு கூறினார்:

"மஞ்சாரு மாட மனைதோறும் ஐயம்
உளதுஎன்று வைகிவரினும்
செஞ்சாலி நெல்லின் வளர்சோ
றளிக்கொள் திருமுல்லை வாயில் இதுவே."

பாரதியாரும்,

"பாருக்குள்ளே நல்ல நாடு—எங்கள்
பாரத நாடு
ஞானத்திலே பர மோனத்திலே—உயர்
மானத்திலே அன்ன தானத்திலே,
கானததிலே அமுதாக நிறைந்த
கவிதையிலேயுயர் நாடு"

என்று பாடினார்.

நாடெங்கும் தானியம் நிறைந்து மக்களுக்கு உணவும் ஆடையும் எளிதில் நிரம்பக் கிடைத்து மனைதோறும் சீர் பொங்கவேணு மென்று பொங்கல் நன்னாளில் நான் கடவுளை வணங்குகிறேன். ★

— ஜனவரி, 1944.

தி. சு. அவிநாசிலிங்கம்

# மகாத்மாஜியின் கோபம்

மகாத்மாஜி கரூரில் வந்து சேருவதற்குச் சில மணி நேரங்களுக்கு முன்னதாகவே நான் கரூர் போய்ச் சேர்ந்தேன். கரூரிலிருந்து ஈரோடு முதலிய இடங்களுக்கு அவரை அழைத்துச் செல்வதற்கு வேண்டிய கார்களுடன் சென்றிருந்தேன். நான் போய்ச் சேர்ந்த கொஞ்ச நேரத்தில் காந்தியடிகள் வந்து சேர்ந்தார். அவர் வந்து சேர்ந்ததும் நேராகத் தம அறைக்குச் சென்றார். குளிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சாதாரணமாக அவர் தம் வேலைகளையெல்லாம் முடித்த பிறகுதான் மற்றவர்களைப் பார்ப்பது வழக்கம். அவர் வந்தவுடனே நான் வந்து காத்துக் கொண்டிருப்பதாக அவருக்குச் செய்தி போயிற்று. அதைக் கேட்டதும், "உடனே அவிநாசியைக் கூப்பிடு" என்று சொல்லி யனுப்பினார்.

நான் சென்றேன். சாதாரணமாக மகாத்மாஜி புன்சிரிப்புடன் எல்லோரையும் வரவேற்பார். அதோடு நகைச் சுவையும் கலந்திருக்கும். அவரைச் சென்று காண்பதே ஓர் இன்பம். அவரிடம் பேசிக்கொண்டிருந்தாலே ஓர் உற்சாகம் உண்டாகும். ஆனால், இச்சமயம் அவர் முகம் கொஞ்சம் கடுமையாக இருந்தது. சாதாரணமாக இருக்கும் புன்சிரிப்பு இல்லை. அந்த நகைச்சுவையும் காணப் படவில்லை. நான் சென்று அவர் எதிரே உட்கார்ந்ததும், "அவிநாசி, நீயும் இப்படிச் செய்யலாமா?" என்று கேட்டார். அதைக் கேட்டதும் திடுக்கிட்டேன். நான் என்ன தவறு செய்தேனென்று எனக்குப் புரியவில்லை. அவருடைய கடுமையான தோற்றம் என் மனத்தில் பயத்தை உண்டாக்கியது. பயபக்தியுடன், "நான் என்ன தவறு செய்தேன் என்று தெரியவில்லையே" என்று சொன்னேன்.

அதற்கு அவர், "அன்று நாடகத்திற்கு என்னிடம் ரூ. 1500-க்குச் செக் கொடுத்தாய் அல்லவா?" என்று கேட்டார்.

நான், "ஆம்" என்றேன்.

அதற்கு அவர், "பாங்கில் கொடுக்கப்பட்டவுடனே செலாவணியாகவில்லை என்பது உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

அதைச் சொன்னவுடனே எனக்கு விஷயங்கள் நினைவுக்கு வந்தன. நவாப் ராஜமாணிக்கம் கம்பெனியார் மகாத்மா காந்தியடிகள்பால் பக்தி கொண்டவர்கள். நாடகத்திற்கு மகாத்மாஜியை

அழைத்துவர வேண்டுமென்று அவர்கள் விரும்பியிருந்தார்கள். அப்படி வருவதானால் ஹரிஜன நிதிக்கு ரூ. 1500 கொடுப்பதாகச் சொல்லியிருந்தார்கள். ரூ. 1500-க்கு அதிகமாகவே அன்று நாடகத்திற்கு வசூலாகுமென்று அவர்கள் எதிர்பார்த்திருந்தார்கள். ஆனால், பொதுக்கூட்டம் நடந்த அன்றிரவே நாடகம் நடந்தபடியால், லட்சக்கணக்கான பேர்கள் கூடியிருந்த அந்தப் பொதுக்கூட்டத்தில் இருந்த மக்கள் தங்கள் வீடு செல்லவே இரவு ஒன்பது அல்லது பத்து மணி ஆகியிருக்க வேண்டும். ஆகையால் நாடகக் கம்பெனியார் எதிர்பார்த்திருந்தபடி அதிகமான பேர் நாடகத்திற்கு வரவில்லை. எனவே, அவர்கள் எதிர்பார்த்த வசூலும் ஆகவில்லை. சுமார் ரூ. 1000 தான் வந்தது. அதைக் கொண்டுவந்து என்னிடம் கொடுத்து, "தயவு செய்து தாங்கள் மீதத்தையும் சேர்த்துக் கொடுத்துவிடுங்கள். பின்னால் வசதி வரும்போது அதைத் திருப்பிக் கொடுக்க முயலுகிறோம்" என்று உரைத்தார்கள்.

மகாத்மாஜிக்கு அவர்கள் சார்பில் நான் முன்னமே வாக்களித்திருந்தேன். எனவே, எப்படியும் மகாத்மாஜிக்கு ரூ. 1500 கொடுக்க வேண்டியிருந்தது. வசூலாகும் பொதுப் பணங்களை என் கையில் நான் வைத்துக்கொள்ளும் பழக்கம் கிடையாது. பாங்கில் அந்த அந்தக் கணக்கில் அவ்வப்போது போட்டுவிடுவதுதான் வழக்கம். மகாத்மாஜிக்கு அளிக்க இருக்கும் ஹரிஜன நிதி தாற்காலிகமாக ஏற்பட்டதாகையால் பாங்கில் அதற்குக் கணக்கு வைக்கவில்லை. வந்த செக்குகளை வசூல் செய்து அனுப்ப மகாத்மாஜி அவைகளை ஒரு நண்பரிடம் கொடுத்திருக்கிறார். அச் சமயம் கோவை ஜில்லா அர்பன் பாங்கில் என் பெயரில் ஒரு கணக்கு இருந்தது. ஆதலால் அந்தக் கணக்கில் காந்தி நிதிக்கு வசூலாகும் பணம் அத்தனையும் போடப்பட்டிருந்தது. அவர்கள் கொடுத்த ஆயிர ரூபாயையும் உடனே பாங்குக்கு அனுப்பிவிட்டேன். அவர்களுக்காகக் கொடுக்க வேண்டிய தொகைக்காக என் சகோதரரிடம் சொல்லி ரூ. 500-ஐ உடனே பாங்கில் கட்டும்படி சொல்லிவிட்டு, ரூ. 1500-க்கு ஒரு செக் எழுதி மகாத்மாஜியிடம் கொடுத்துவிட்டு, ஊரை விட்டு அவருடன் சுற்றுப் பிரயாணம் செய்யக் கிளம்பிவிட்டேன். செக்கைக் காலையில் சுமார் 11 மணிக்குப் பாங்குக்குக் கொண்டு போயிருக்கிறார். கணக்கில் போதுமான பணம் இல்லாதபடியால் ஒரு மணி நேரம் கழித்து வரும்படி பாங்குக்காரர்கள் சொல்லியிருக்கிறார்கள். நான் முன்னமேயே சொல்லியிருந்தபடி என்னுடைய சகோதரர் அந்த நேரத்திற்குள் அந்தப் பணத்தைக் கணக்கில் கட்டியிருக்கிறார். செக்குக்குப் பணமும் பெற்றுச் சென்றார்கள். செக்கைக் கொண்டு போனதும், பாங்குக்காரர்கள் ஒரு மணி நேரம் கழித்து வரச் சொன்னதையும், பிறகு சென்று பணம் பெற்று வந்ததையும் அந்த நண்பர் மகாத்மாஜிக்குத் தெரிவித்திருக்கிறார். இதுதான் விஷயம். இவ் விஷயங்களையெல்லாம் மகாத்மாஜிக்கு எடுத்துரைத்தேன்.

மகாத்மாஜி சொன்னார்: "மகத்தான தவறு ஒன்றும் நடக்கவில்லை. ஆனால், பொதுப் பணம் எதையும் ஒரு தனிப்பட்ட

கணக்கில் போடக்கூடாது என்று உனக்குத் தெரியாதா? உன்னைப் போன்ற ஊழியர்கள் இதுமாதிரி விஷயங்களில் சர்வ ஜாக்கிரதையாக இருப்பதுடன் மற்றவர்களுக்கு உதாரணமாகவும் இருக்க வேண்டியது மிகவும் அவசியம். இவ் விஷயத்தில் தவறு ஒன்றும் நேரவில்லை என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். அத்துடன் நீயே ரூ. 500 அதிகமாகக் கொடுத்திருக்கிறாய் என்பதையும் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால், நீ செய்திருக்கும் தவறுகள் இரண்டு. ஒன்று, பொதுப்பணத்தைச் சில தினங்களுக்கான போதிலும், தனியாக ஒரு கணக்கு ஏற்படுத்தி, அதில் போட்டிருக்கவேண்டும். இரண்டாவது, உன் கணக்கில் பணம் இல்லாமல் இருக்கும் போது அதில் இருப்பதற்கு அதிகமாக நீ செக் கொடுக்கவே கூடாது. உனக்கு ரூ. 500 பெரிதல்ல என்பது எனக்குத் தெரியும். ஆனாலும், நாம் செய்கிற காரியம் ஒவ்வொன்றும் சரியாக இருக்க வேண்டும் என்பதற்காகவே இதைச் சொல்கிறேன். பொது ஊழியர்கள் எந்த விதமான குறைகளுக்கும் ஆளாகக்கூடாது என்பது பற்றியே நான் இவ்வளவு கடுமையாக இதை எடுத்துரைத்தேன்'' என்று சொல்லி ஆசீர்வதித்தார்.

அன்று அவர் சொன்ன மொழிகள் இன்னும் என் காதில் ரீங்காரம் செய்துகொண்டிருக்கின்றன. சிறு விஷயங்களிலுங் கூடப் பெரியவர்கள் எவ்வளவு கவனமாகக் கவனிக்கிறார்கள் என்பது எனக்கு ஆச்சரியமாயிருந்தது. மகாத்மாஜிக்குச் செல்லாக வேண்டிய பணம் முன்னமேயே வந்துவிட்டது. எனவே, இதைப் பற்றி அவர் கவனியாமல் இருந்திருக்கலாம். ஆனால், என்னுடைய நன்மையை உத்தேசித்து அவர் இதை ஞாபகத்தில் வைத்து என்னிடம் சொல்லியிருக்கிறார். அன்றிலிருந்து அவர் சொன்ன அந்த யோசனையை நான் மிகவும் போற்றி வந்திருக்கிறேன். அந்த யோசனை, இன்னும் மற்றப் பல விஷயங்களிலும் மிக ஜாக்கிரதையாக நடந்துகொள்ள எனக்கு ஏதுவாயிற்று. என் எதிர்கால வாழ்க்கையிலேயே அவருடைய அந்த வார்த்தை எனக்கு வழிகாட்டியாக இருந்திருக்கிறது.

உணவும் ஓய்வும் முடித்துக்கொண்டு கரூரிலிருந்து புறப்பட்டு ஈரோடு வந்து சேர்ந்தோம். ஈரோட்டிலும் தமிழ் நாட்டின் மற்றப் பகுதிகளைப்போல் பதினாயிரக் கணக்கான மக்கள் கூடி மகாத்மாஜியை வரவேற்றார்கள். அங்கிருந்து திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்துக்குச் சென்றோம். அங்கு ராஜாஜி அவர் வருகைக்காக எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தார். மகாத்மாஜியைத் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் சேர்த்ததுடன் நான் அவருடன் சென்ற அப்போதைய பிரயாணம் முடிவாயிற்று. அவரிடம் விடை பெற்று, ஊர் திரும்பினேன். ★

— ஆகஸ்ட், 1949.

ப. சம்பந்த முதலியார்

# நான் கண்ட அவதானம்

**1894**-ஆம் வருஷம் நான் எழுதிய "லீலாவதி சுலோசனா" என்னும் நாடகத்திற்குச் சாற்றுக் கவி பெறுவதற்காக என் தந்தையார் கல்யாணசுந்தர முதலியார் என்னும் ஒரு புலவருடைய இல்லத்திற்கு என்னை அழைத்துச்சென்றார். அவருடைய முழுப் பெயர் அஷ்டாவதானம் கல்யாணசுந்தர முதலியார் என்று என் தகப்பனார் கூறினார். அப்போது அஷ்டாவதானம் என்றால் என்ன என்றேன். என் தந்தை, "ஒரே சமயத்தில் எட்டு விஷயங்களைக் கேட்டு ஞாபகத்தில் வைத்திருப்பது" என்றார். பிறகு நாங்கள் வீட்டிற்குத் திரும்பியபோது, "இரண்டு விஷயங்களை நன்றாய்க் கவனிப்பதே நமக்குக் கஷ்டமாக இருக்கிறதே. எட்டு விஷயங்களை எப்படி ஒருவன் ஏக காலத்தில் கவனித்து ஞாபகத்தில் வைத்திருப்பது?" என்று சந்தேகித்து, என் தந்தையிடம் விளங்கக் கூறுமாறு கேட்டேன்.

"இது அபூர்வமான ஞாபக சக்தி. எட்டு விஷயங்களைக் கவனிப்பது மட்டும் அன்று. அதற்கு மேலும் பல விஷயங்களைக் கவனிக்கும் சக்தி சிலருக்கு இருப்பதை நான் பார்த்தும் கேட்டும் இருக்கிறேன். அவர்களைச் 'சதாவதானி' என்பார்கள்" என்று சொல்லி, தாம் நேரில் கேட்ட சில அவதானங்களைப்பற்றி விரிவாக உரைத்தார்.

அவர் கூறியவற்றைத் தற்காலம் என் ஞாபக சக்தி குன்றியிருக்கும்போது, கூடிய மட்டும் நினைவுபடுத்தி இங்கு எழுதுகிறேன். (1) சதுரங்கம் ஆடுதல்: சதுரங்கப் பலகையை, அவதானம் செய்பவர் கண்ணில் படாத ஓர் இடத்தில் வைத்து, சதுரங்கம் நன்றாய் ஆடத்தெரிந்த ஒருவர் அதன் முன்பு உட்கார்ந்துகொண்டு, "இந்தக் காயை இன்ன இடத்திலிருந்து இன்ன இடத்திற்கு நகர்த்தினேன்" என்று சொல்லவேண்டும். இதற்கு அவதானி தம்முடைய காய் ஒன்றை இன்ன இடத்திலிருந்து இன்ன இடத்திற்கு மாற்றினேன் என்று சொல்லவேண்டும். (2) சொக்கட்டான் ஆட்டம்: சொக்கட்டான் கட்டத்தையும் அவதானியார் கண்ணில் படாத இடத்தில் வைப்பார்கள். எதிர் எதிராக இருவர் உட்கார்ந்துகொள்வார்கள். ஒருவர் தம் ஆட்டத்தை ஆடி இன்ன பந்தயம் விழுந்தது, இன்ன காயை இன்ன இடத்திலிருந்து இன்ன இடத்தில் வைத்தேன் என்று உரக்கச் சொல்வார். உடனே மற்றொருவர், அவதானியாருக்காகப் பாய்ச்சிகையை

உருட்டி இன்ன பந்தயம் விழுந்ததென்று சொல்வார்; இதைக் கேட்டதும் அவதானி தம் காய்களை விழுந்த பந்தயத்துக்கு ஏற்ற வாறு இன்ன இன்ன இடங்களிலிருந்து இன்ன இன்ன இடத்தில் வைத்தேன் என்று பதில் சொல்ல வேண்டும். (3) தாயக்கட்டம் முதலிய ஆட்டங்களும் சில சமயங்களில் ஆடுவதுண்டு. (4) வெவ் வேறு எடையுள்ள வெண்கலப் பாத்திரங்கள் பத்துப் பன்னி ரண்டை ஒருவர் தம்மைச் சுற்றிலும் வைத்துக்கொண்டு அவ தானம் ஆரம்பமாகுமுன் ஒவ்வொன்ருக ஒரு சிறு சுத்தியால் தட்டி ஒவ்வொரு பாத்திரமும் இன்ன இன்ன எடையுடையது என்று முதலில் தெரிவித்துவிடுவார். பிறகு அவதானம் ஆரம்பமான வுடன் ஒவ்வொரு வரிசைக் கிரமத்திலும் ஏதாவது ஒவ்வொன் ருகத் தட்டிக்கொண்டு வருவார். கவனித்து அவதானியார் அவ தான முடிவில் முதலில் தட்டப்பட்ட பாத்திரம் இன்ன எடையுடை யது, இரண்டாவது தட்டப்பட்ட பாத்திரம் இன்ன எடையுடையது என்று வரிசையாகச் சொல்ல வேண்டும். (5) மணியடித்தல்: மற்ருெரு மூலையில் ஒரு பெரிய கோயில் மணியைக் கையில் பிடித் துக்கொண்டு ஒவ்வொரு முறையும் பன்னிரண்டுக்குள்ளாக இஷ்ட மானபடி அடித்துக்கொண்டு வரவேண்டும். அவதான முடிவில் அவதானி முதலில் இத்தனை மணியடித்தது, இரண்டாவது இத்தனை மணியடித்தது என்று சொல்லவேண்டும். (6) சில வித்துவான்கள் தாங்கள் விரும்பிய செய்யுட்களை இயற்றும்படி கேட்பார்கள். உதாரணமாக, ஒருவர் நிரோஷ்டகமாக அம்பாளின் மீது ஒரு கலித்துறை பாட வேண்டுமென்று கேட்பார். உதடு ஒட்டுகிற எழுத்துக்கள் வராமல் பாடுகிறது நிரோஷ்டகம். இப் படிச் சில வித்துவான்கள் தங்கள் இச்சைப்படி கஷ்டமான செய்யுட் களை இயற்றும்படி கேட்பார்கள். (7) கவி பாடும் சக்தியுள்ள ஒருவர் சுயமாக ஒரு கவியைச் சொல்லி அதை ஓர் ஏட்டில் எழுதிக் கொண்டு, "என் கையில் இருக்கும் பாட்டில் முதல் அடியில் எட்டாவது எழுத்து க, மூன்ருவது அடியில் நான்காவது எழுத்து ம்" என்று நான்கு அடிகளிலுமுள்ள எழுத்துக்களை யெல்லாம் ஒவ்வொன்ருகச் சொல்லிக்கொண்டு வருவார். முடிவில் இந்தப் பாட்டை ஆதியோடந்தமாக ஒப்பிக்க வேண்டும். (8) கணிதத்தில் சில கேள்விகள் கேட்பதுண்டு. உதாரணமாக, 4328-ஐ 2087-ஆல் பெருக்கினுல் எவ்வளவு மொத்தம் என்று கேட்பார்கள். இவ்வாறே கழித்தல் கணக்கும், வகுத்தல் கணக்கும் கேட்பார்கள். ஸ்கொயர் ரூட்டையும் கியூப் ரூட்டையும் சிலர் கேட்பார்கள். (9) அவதானி யாருக்குத் தெரியாத பாஷையில் பல சொற்களை ஒவ்வொரு முறைக்கும் மூன்ருக ஒருவர் சொல்லிக்கொண்டு வருவார். கடைசி யில் இவர் சொன்ன வரிசைக் கிரமப்படி அவ்வார்த்தைகளை அவதானியார் சொல்லவேண்டும்.

"நீங்கள் சொன்ன எல்லாவற்றையும் ஏக காலத்தில் ஒரே அவதானியார் சரியாகச் சொல்லி முடித்தாரா?" என்று கேட் டேன். "சுமார் இருபது இருபத்தைந்து விஷயங்களை ஞாபகத்தில்

வைத்துச் சரியாகச் சொன்னதை நான் கேட்டிருக்கிறேன். இவர்களுக்குச் சதாவதானிகள் என்று பட்டப்பெயர் கொடுத்ததை நான் அறிவேன். சதாவதானம் என்றால் நூறு என்று அவ்வளவு கணக்காகப் பார்க்க முடியாது. பல அவதானம் என்றே அர்த்தம் பண்ணிக்கொள்ள வேண்டும்.''

மேற்சொன்ன சம்பாஷணை நடந்த சிறிது காலத்திற்குள் ஒரு பிராம்மணக் கவிராயர் ஒரு நாள் என் தகப்பனாரிடம் வந்து, "இன்று சாயங்காலம் விக்டோரியா பப்ளிக் ஹாலில் நான் அவதானம் செய்யப் போகிறேன். தாங்கள் வந்திருந்து என்னைக் கௌரவப் படுத்த வேண்டும்'' என்று கேட்டார். அதை என்னிடம் சொல்லி என் தந்தையார், "நீயும் வருகிறாயா?'' என்று அழைத்தார். மிகுந்த குதூகலத்தோடு நான் ஒப்புக்கொண்டேன்.

சாயங்காலம் நாலு மணிக்கு அவதானம் நடைபெறும் என்று விளம்பரமாகி யிருந்தாலும் நான் அரை மணிக்கு முன்பே விக்டோரியா பப்ளிக் ஹாலுக்குப் போய்ச் சேர்ந்தேன். ஹால் முழுவதும் ஜனங்கள் நிரம்பி யிருந்தார்கள். அந்தக் கூட்டத்தை ஏற்படுத்தினவர்களுக்குள் சிலர் நன்றாய் என்னை அறிந்திருந்தபடியால் என் வேண்டுகோளுக்கு இரங்கி அவதானியாருக்கு மிகவும் அருகில் என்னைக் கொண்டுபோய் உட்கார வைத்தார்கள். அவதானியாரை ஓர் உயர்ந்த விசிப் பலகையின்மேல் உட்கார வைத்திருந்தனர். சதுரங்கப் பலகை, சொக்கட்டான், தாயக்கட்டம் ஆகியவைகளெல்லாம் அவருக்குத் தூரத்திலேயே வைக்கப்பட்டிருந்தன. அவற்றை அவர் நேராகப் பார்த்து, தாம் சொல்ல வேண்டியதைச் சொல்ல முயன்றாலும் அவை அவர் கண்ணுக்குப் புலப்படாதபடி ஜனத் திரள் மிகுதியாக இருந்தது.

அவர் அன்று செய்த அவதானங்கள் வருமாறு—

சதுரங்க ஆட்டம்: இந்த ஆட்டத்தில் அவருக்கு எதிராக ஆடும்படி சதுரங்க ஆட்டத்தில் மிக வல்லவரான சென்னைவாசி ஒருவரை நியமித்தனர். மற்றொரு புறம் சொக்கட்டான் ஆட ஓர் வயோதிகர் உட்கார்ந்திருந்தார். தாயக் கட்டம் ஆடினவரின் முகத்தை நான் நேரில் பார்க்கக்கூடவில்லை. அவதானியாரின் அருகில் சென்னையிலுள்ள பல பிரபல வித்துவான்கள் உட்கார்ந்திருந்தனர். அவர்களை அவதானியார் அவதானம் ஆரம்பிக்கும் முன் ஒன்று கேட்டுக் கொண்டார்: "ஏதாவது கவி பாடும்படி கேட்டால் நான்கு அடிகளுக்கு மேற்படாத கவிகளாய் இருத்தல் நலம். அதற்கு மேற்பட்டால் காலம் அதிகமாகும்'' என்றார். ஒரு வித்துவான் பரமசிவனுக்கும் விஷ்ணுவுக்கும் சிலேடையாக ஒரு வெண்பாப் பாடவேண்டும் என்று கேட்டார். இன்னும் இரண்டு மூன்று பேர் வேறு பாட்டுகள் பாடும்படியாகக் கேட்டார்கள். அவர்களுக்குள் ஒருவர் கேட்டது நன்றாய் ஞாபகம் இருக்கிறது. "கச்சிக் கலம்பகம் என்கின்ற" சொற்றொடரை வைத்துக்கொண்டு முதல் அடியில் 'கச்சி'யைப் பற்றி இருக்கவேண்டும். இரண்டாம்

அடியில் 'கலம்' என்பதைப்பற்றி இருக்கவேண்டும். மூன்றும் அடியில் 'பகம்' என்பதைப் பற்றி இருக்கவேண்டும். கடைசி அடியில் 'கச்சிக் கலம்பகம்' என்று முடியவேண்டும்'' என்றார். அப்போது அவதானியார், "இப்படிப்பட்ட சான்றோர்கள் சபையில் பகம் என்பதற்குக் கொக்கு என்ற அர்த்தத்தை வைத்தே நான் பாடுகிறேன். அதற்கு மற்றோர் அர்த்தம் இருந்த போதிலும் அந்தப் பொருள் படும்படியாக இச் சபையில் பாடுவது அழகன்று'' என்று கூறினார். இதைக் கேட்டு வந்திருந்த பெரியோர்களெல் லாம், "நன்று, நன்று'' என்று கூறிக் கரகோஷம் செய்தனர்.

இதற்கு மேல் சில ஆங்கிலம் கற்ற கணித ஆசிரியர்கள் கணிதத்தில் நான்கைந்து கேள்விகள் கேட்டனர். 848 என்கின்ற எண்ணைக் கொடுத்து அதன் 'கியூப் ரூட்' டைக் கேட்டார் ஒருவர். ஒருவர், சீட்டாடும் காகிதத்தைக் குலுக்கி, "இந்தச் சீட்டுகளில் இத்தனையாவது சீட்டு இன்னது என்று முறைக்கு ஒன்றாய்க் கூறிக் கொண்டு வருகிறேன். கடைசியில் நான் கூறிய வரிசைக் கிரமப்படி சொல்லவேண்டும்'' என்று கேட்டார். இவ்வாறே பாத்திரங்களின் நிறைகளைப் பற்றிக் கூற ஒருவர் முன் வந்தார். காலிச் சதுரங்கப் பலகை யொன்று ஒரு மூலையில் வைத்திருந்தது. இது அவதானி யாரின் வேண்டுகோளின்படியே ஏற்படுத்தப் பட்டதாம். அதைப் பற்றி அவதானியார் கூறியதாவது: "உங்களில் யாராவது ஒருவர் சதுரங்கக் காய்களில் குதிரையை உங்களுக்கு இஷ்டமான கட்டத்தில் வைத்துக்கொள்ளுங்கள். அந்தக் குதிரை சதுரங்கப் பலகையின் 64 கட்டங்களிலும் போகும்படியாகச் சொல்லிக்கொண்டு வருகிறேன். இதில் கஷ்டம் என்னவென்றால் ஒரு முறை போன கட்டத்தில் முடிவதன் முன் மறுமுறை போகலாகாது என்பதர்கும்'' என்றார். எனக்கு இந்த வயசில் இவ்வளவுதான் அவர் செய்த அவதானங்கள் ஞாபகம் இருக்கின்றன. அவர் கையில் லாட சங்கிலியை வைத்துக்கொண்டு அதில் இருந்த வளையங்களை ஒவ்வொன்றாகக் கழற்றப் போகிறேன் என்றும் தெரிவித்தார். பிறகு அவதானப் பரீட்சை ஆரம்பமாகியது. ஒவ்வொருவராகத் தங்கள் ஆட்டங்களைப் பற்றியும் மற்ற விஷயங்களைப் பற்றியும் அவதானியாருக்குச் சொல்லிக்கொண்டு வந்தார்கள். இப்படி அவர்கள் சொல்லிக்கொண்டு வந்த விஷயங்களின் இடைவேளை ஒரு நிமிஷங் கூட இராது.

அவதானப் பரீட்சை ஏறக்குறைய மாலை ஐந்து மணிக்குத்தான் ஆரம்பித்தது. அதற்கு முன் செய்ய வேண்டிய ஏற்பாடுகளுக்கு ஒரு மணி நேரம் பிடித்தது. சுமார் ஏழு மணி ஆனபோது ஏறக்குறைய எல்லாப் பரீட்சைகளிலும் பாதிதான் முடிந்தது. அப்பொழுது வந்திருந்தவர்களில் பெரும்பாலோர், "இப்படிப் போய்க்கொண்டிருந்தால் ஒன்பது பத்து மணி ஆகும். ஆகவே, இதுவரையில் நடந்தவற்றையெல்லாம் முடிக்கட்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள். அதன்படியே அவதானியார் தாம்

சொல்ல வேண்டிய பதில்களையெல்லாம் ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டு வந்தார். ஏதோ ஒரு விஷயத்தில் மாத்திரம் அவர் தவறாகக் கூறினார் என்று நினைக்கிறேன்.

மேற் சொன்னபடி அவதானம் முடிந்தவுடன் அன்றைத் தினம் தலைமை தாங்கிய என் ஆசிரியராகிய மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களும் இன்னும் சில வித்துவான் களும் அவதானியாரின் திறமையைப் புகழ்ந்து பேசினர். இதற் குள் இரண்டு மூன்று பெயர்கள் வந்திருந்தவர்களிடமிருந்து அவர் கள் விருப்பப்படி கொடுத்த பரிசாகிய பணத்தை வசூல் செய்து முடிப்பாக்கித் தலைவர் கையில் கொடுத்து அவதானியாருக்கு வழங்கச் செய்தனர். புலவர்கள் சாற்றுக் கவிகள் கொடுத்தார்கள்.

இந்த அவதானம் ஆரம்பமானது முதல் முடிவு வரையில் அவதானியையே நான் மிகவும் கவனமாய்ப் பார்த்து வந்தேன், 'இவர் ஏதாவது மறைமுகமாகக் குறித்துக் கொள்கிறாரா?' என்று. அப்படி ஒன்றும் எனக்குக் காணப்படவே இல்லை. இவருக்கு இந்த ஆச்சரியகரமான ஞாபக சக்தி எப்படி வந்தது என்று நான் அறியக்கூடவில்லை. சில நாட்கள் கழித்து அவருடைய நண்பர் ஒருவரை நான் சந்தித்தேன். அவதானியார் இம்மாதிரி அவதானம் செய்யும் நாட்களில் இருபத்துநான்கு மணிக்கு முன்பு முதல் உபவாசம் இருக்கிறார் என்று அவர் கூறினர். உபவாசம் இருப்பது புத்திக் கூர்மையை அதிகப்படுத்துகிறது என்பதற்குச் சந்தேக மில்லை. ஆயினும் பல விஷயங்களை ஏககாலத்தில் ஞாபகத்தில் வைத்திருப்பது என்பது எப்படி என்று எனக்கு இன்னும் விளங்க வில்லை. காலஞ்சென்ற பூண்டி அரங்கநாத முதலியார் அவர்கள் இரண்டு முறை நூறு செய்யுட்களைப் படிப்பாராயின் உடனே அவைகளை ஒப்பிப்பாராம். சதுரங்கம் ஆடுவதில் மிகுந்த நிபுண ராகிய அவர் பலகையைப் பாராமலே திரும்பிக்கொண்டு ஆடி வந்தார் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன்.

மேற்சொன்ன அவதானத்துக்கு ஏறக்குறையச் சமமாக உள்ள ஒரு சக்தியைப்பற்றிப் பல வருஷங்களுக்கு முன் அமெரிக் காவைப் பற்றிய ஒரு புத்தகத்தில் நான் படித்தேன். அதில் அபாரமான ஞாபக சக்தியைப் பெற்றிருந்த அமெரிக்கர் ஒருவர் ஒரு முறை, சதுரங்கப் பலகைகளைப் பாராமலே இருபத்துநான்கு பெயருடன் ஏக காலத்தில் சதுரங்கமாடி இருபத்திரண்டு ஆட்டங் களில் வென்றாரென்றும், மற்ற இரண்டில் தோல்வி வெற்றி தீர்மானமாகாதபடி முடிந்ததாகவும் இருந்தது. பூர்விகமான இந்த அவதானக் கலை வரவரக் குறைந்து வருகிறது. ★

— அக்டோபர், 1954.

க. சந்தானம்

# சொல்லும் சிந்தனையும்

சில கருத்துக்களை நேர்முகமாக ஆராய்வது சாத்தியம் இல்லை. உபமானங்கள் மூலந்தான் சிந்திக்கக் கூடும். உபநிஷத்துக்கள் பிரம்மத்தை இப்படித்தான் தியானிக்கின்றன. பல உபமானங்களின் மூலமே பிரம்மத்தைப் பற்றிப் பேசுகின்றன. 'நீரில் உப்புக் கரைவதுபோல் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவிக் கலந்திருப்பது பரம்பொருள். சிறிய வித்தில் பெரிய ஆலமரம் அடங்கியிருப்பதுபோல் பிரபஞ்சத்தின் வித்து, பிரம்மம். ஒரு சூரியன் உலகனைத்தையும் ஒளிமயமாக்குவதுபோல் விசித்திர சிருஷ்டியின் ஒளியும் சக்தியுமாவது பரமாத்மா. ஆகாசம் எல்லாப் பொருள்களையும் தன்னுள் வைத்து எங்கும் வியாபித்திருப்பதுபோல் சேதனுசேதனங்கள் அனைத்திற்கும் உள்ளும் புறமும் வியாபித்திருப்பது ஆதிமூலம். உடலுக்கு உயிர்போல் வெளி உலகினையும், ஜீவகோடிகளின் ஆத்மாக்களையும் தன் உடலாகக் கொண்டு அதற்கு உயிராக இருப்பது அந்தராத்மா' என்று பல விதமாக வர்ணித்திருக்கிறார்கள்.

உபமானத்தின் மூலம் சிந்திப்பதில் ஓர் அபாயம் இருக்கிறது. உபமானத்திற்கும் அதனால் பரிசீலனை செய்யப்படும் உபமேயத்திற்கும் ஓர் அம்சத்தில்தான் ஒற்றுமை இருக்கும். எல்லா அம்சங்களிலும் ஒத்திருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை. இதனை மிஞ்சி வேறு அம்சங்களுக்கும் உவமையைப் பிரயோகித்தால் தவறான முடிவுக்குக் கொண்டுபோய் விடும்.

உணர்வுக்கு மாத்திரம் தட்டுப்படும் பொருள்களை விளக்கும் போது உபமானங்களே உபயோகப்படுகின்றன. சொல்லுக்கும் சிந்தனைக்கும் உள்ள சம்பந்தம் பிரம்மத்தைப் போலவே நேரில் சிந்திக்க முடியாதது. ஆதலின் அதனை உபமானத்தின் மூலமாகவே சிந்திப்பது சாத்தியமாகும்.

சொல்லும் சிந்தனையும் கிண்ணமும் எண்ணெயும் போலாகும். எண்ணெயை ஒரு கிண்ணத்திலிருந்து மற்றொரு கிண்ணத்தில் ஊற்றுவது போலவே, சிந்தனையையும் ஒரு பாஷையிலிருந்து வேறு பாஷையில் கொண்டு வரலாம். ஒரே பாஷையிற்கூடச் சில வேளை ஒரு சொற்றொடரிலிருந்து மற்றொரு சொற்றொடருக்கு மாற்றலாம். எண்ணெய் எந்தக் கிண்ணத்தில் இருக்கிறதோ அந்தக் கிண்ணத்தின் உருவத்தையும் வர்ணத்தையும் வாசனையையும்

ஏற்பது போலவே சிந்தனையும் தன்னை வகிக்கும் மொழியின் குணங்களை ஏற்கும். ஆதலின் ஒரே சிந்தனை இரண்டு பாஷைகளில் தோன்றும்பொழுது அது வேறு வேறு உருவத்தில்தான் காணப்படும். மொழியின் அம்சத்தை விளக்கிச் சிந்தனையைச் சுத்தமாக்கிச் சீர்தூக்குவது சுலபமான காரியம் அல்ல.

இதை விளக்க ஓர் உதாரணத்தைக் கவனிப்போம். 'காதல்' என்ற தமிழ்ப் பதம் பருவம் அடைந்த ஆண், பெண் இருவருக்கும் இயற்கையாக ஏற்படும் ஒரு வகை உணர்ச்சியைக் குறிக்கிறது. ஆதலின், எல்லாப் பாஷைகளிலும் இதற்கு ஒரு சொல் இருந்தே தீரும். ஆனால் 'காதல்' என்கிற சொல்லுக்கு ஆங்கிலத்திலோ வடமொழியிலோ நேரான மாற்றுப்பதம் இல்லை. ஆங்கிலத்தில் சாதாரணமாக 'லவ்' (Love) என்று சொல்வார்கள். ஆனால் இதன் சாதாரணப் பொருள் 'அன்பு' என்கிற தமிழ் மொழியைத் தழுவியுள்ளது. வடமொழியில் 'காமம்' என்று கூறுவர். காதல் என்றவுடன் நமக்குத் திட்டமாகத் தோன்றுகிற பொருள் அந்த இரண்டு வார்த்தைகளினால் தோன்றுவது இல்லை. மூன்று வார்த்தைகளும் வேறு வேறு உருவம் உடையன. 'காமம்', 'காதல்' இரண்டும் ஒரே உணர்ச்சியைக் குறிப்பிட்டாலும் காதல் மன நிலையையும், காமம் உடல் நிலையையும் அதிகமாக வற்புறுத்துகின்றன.

சொல்லும் சிந்தனையும் முற்றும் பிரிக்க முடியாத தன்மையை உத்தேசித்து, காளிதாசர் ;அவற்றைப் பார்வதி பரமேசுவரர்போல் அர்த்தநாரீசுவர சொரூபமாகக் கூறியிருக்கிறார். இது சில விதங்களில் மிகவும் பொருத்தமானது. ஒரு சொல்லின் மீது நமக்குள்ள பற்று அதன் பொருளைப் பற்றியும் தொனியைப் பற்றியும் உள்ளது. தொனிப்பற்று இல்லாவிட்டால் நமது பேச்சு, கணித சூத்திரம் போல் உணர்ச்சியற்றிருக்கும். அர்த்தப்பற்று இல்லாவிடில் அறியாத பாஷையின் மொழிகள் போலவும், பட்சிகளின் சத்தம் போலவும் வெறும் ஒலியாகப் பிரயோசனமற்றிருக்கும்.

அர்த்த நாரீசுவர உபமானம் மற்றொரு விதத்தில் பொருந்தும். பார்வதியும் பரமேசுவரனும் ஓர் உடலில் இருப்பது மிகவும் அழகு. பார்வதியும் விஷ்ணுவும் ஓர் உடலில் இருந்தால் அவ்வளவு அழகாக இல்லாவிடினும் அண்ணன் தங்கை சேர்ந்திருப்பதுபோல் ஓரளவு போற்றத்தக்கதாகவே இருக்கும். ஆனால் பார்வதியையும் ஜூபிடரையும் (கிரேக்க தேவேந்திரனையும்) சேர்த்துப் பிணைப்பது பொருந்தாது. தமிழிலிருந்து வேறு இந்திய பாஷைகளுக்கு மொழிபெயர்ப்பது சுலபம். தமிழை ஆங்கிலத்திலோ ஆங்கிலத்தைத் தமிழிலோ மொழிபெயர்க்கும்பொழுது ஓரளவு தப்பர்த்தங்களையும் விபரீத உணர்ச்சிகளையும் தவிர்க்க முடியாது. ஒரே வித சரித்திரமும் நாகரிகமும் உள்ள பாஷைகளின் நூல்களை ஒன்றிலிருந்து ஒன்றில் மொழிபெயர்ப்பது சுலபம். அவற்றினிடையே ஒரு ...ரதுவான பண்பு இருப்பதுதான் காரணம். வெவ்வேறு நாகரி

கங்களையும் அவற்றில் தோன்றிய மனநிலைகளையும் பரஸ்பர பாஷைகளுக்குள் விளக்குவது மிகவும் சிரமம். வடமொழியில் தர்மம் என்பதைத் தமிழில் அறம் என்று சொல்லுவது பொருந்தும். ஆங்கிலத்தில் தகுந்த பதம் இல்லை. என்ன என்னவோ பதங்களைத் தேடிப் பிடித்துப் போட்டும் பொருத்தமாக இல்லாததால் தர்மம் என்றே ஆங்கில நூல்களில் சொல்லிவிடுவது வழக்கமாகிவிட்டது.

மொழியைத் தீபமாகவும், சிந்தனையைச் சுடராகவும் தியானிக்கலாம். அர்த்தம் புரியாத ஒரு சொல்லைக் கேட்டுவிட்டு அதன் பொருள் அறிந்தவுடன் நமது மனம் இருக்கும் நிலை இருட்டறையில் தீபத்தை ஏற்றியது போலாகும். இதனைச் சிறு குழந்தைகளிடம் நன்கு காணலாம். புதிதாகப் பேசும் குழந்தை பூ, சந்திரன் போன்ற ஒரு சொல்லை உச்சரிக்கக் கற்று அதன் பொருளையும் உணர்ந்துவிட்டால், அச்சொல்லை ஓயாமல் சொல்லிக்கொண்டே இருக்கும். இதற்கு என்ன பைத்தியமா என்றுகூட நாம் சில வேளை நினைக்கலாம். புதிய பொம்மையைப் பெற்றுக் குழந்தை அதை விடாமல் கட்டிக்கொண்டிருப்பது போலவே, குழந்தை மனம் சொற்களையும் இறுகத் தழுவி மகிழ்ச்சி அடையும்.

சொல்லும் சிந்தனையும், கம்பியும் மின்சாரமும் போன்றவை. ஒரு மனிதனுக்கும் அவன் சமூகத்திற்கும் நடுவில் அறிவுமயமான மின்சாரம் பாய்கின்றது. மிருக பட்சிக் கூட்டங்களில் ஒருவிதச் சமூக வாழ்க்கை இருக்கின்றது. ஆனால், அது சக்தியற்றது; சாரமற்றது. மிருகமும் பட்சியும் என்ன நினைக்கின்றன, என்ன உணர்கின்றன என்று யார் தெரிந்துகொள்ள முடியும்? ஆனால் மனித சமூகத்தின் சக்தியும் சாரமும் சொல்லாலும் அதனவழி பாயும் சிந்தனையாலுமே உண்டாகின்றன.

ஒரு பாஷையில் எல்லாச் சொற்களும் எண்ணிக்கைகளைப் போலவே ஒரு குடும்பத்தைச் சேர்ந்திருப்பன. ஆனால் அவற்றில் அடங்கிய சிந்தனைகளோ பலவகைப்பட்டன. வெளிப் பொருள்களைச் சுட்டிக் காட்டவும், அப்பொருள்களின் குணங்களையும் பரஸ்பர சம்பந்தங்களையும் குறிக்கவும் பிரயோசனப்படும் சொற்களின் மூலமாகவே பகுத்தறிவும் விஞ்ஞானமும் வளர்கின்றன. நோய், வலி, குதூகலம், ஆனந்தம், அழகு, இன்பம் முதலிய உணர்ச்சிகளைக் குறிப்பிடும் சொற்கள் வழியாகக் கலைகளும் தர்மமும் ஓங்குகின்றன. செயல்களைக் குறிப்பிடும் சொற்களின் வாயிலாக நமது சக்திகள் பெருகுகின்றன.

சொற்களுக்கும் சிந்தனைகளுக்கும் உள்ள இவ்வித்தியாசத்தால் சத்தியத்தின் அளவுகோல்களும் மாறுபட்டிருக்கும். ஒரு சொல் எப்போதும் ஒரு சிந்தனையை, அல்லது குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் ஒரு சிந்தனையையும் இதர சந்தர்ப்பங்களில் வேறு சிந்தனையையும் வகிக்குமாகில் அதனால் குழப்பம் ஏற்படாது. அதைச் சொல் சத்தியம் எனக் கூறலாம். ஆனால் ஒரு சொல் பல சிந்தனை

களை வகித்து, எப்பொழுது எந்தச் சிந்தனைக்கு அது பிரயோகிக்கப் படுகிறது என்று எளிதில் ஐயமற நிச்சயம் செய்ய முடியாவிடில், அதனை அசத்தியம் என்று கூறலாம்.

சிந்தனையைப் பொறுத்தவரையில் அது சத்தியமா அசத்தியமா என்று நிர்ணயிக்கும் அளவுகோல்கள் அதன் ஜாதி அல்லது வகுப்பைச் சார்ந்திருக்கும். ஒரு தந்தை தன் குழந்தையை, 'போக்கிரிப் பயலே' என்றால் அதன் பொருள் அவன் மனநிலையைப் பொறுத்து இருக்கும். வெறும் சொல்லைக் கொண்டு இதுதான் பொருள் என்று சொல்ல முடியாது. அவன் விளையாட்டாகச் சொன்னால் 'என் அருமை மகனே' என்று கூறியது போலாகும். கோபத்தில் கூறினால் 'துஷ்டனே' என்று சொன்னதாகும். ஒரு கணித சூத்திரத்தின் சத்தியமும், ஒரு சித்திரத்தின் சத்தியமும் வெவ்வேறு தன்மையன.

சொற்களையும் சிந்தனைகளையும் குழப்பமில்லாமல், சத்தியமாக வழங்கும் மனிதனும் சமூகமும் சக்தி வாய்ந்து ஓங்கும். அதிகப் பணம் இருந்தும் ஆபாச வாழ்க்கை நடத்தும் பலரைக் காண்கிறோம். அவ்விதமே சொற்களைச் சரமாரியாகப் பொழியும் பலர் தெளிவாகச் சொல்லாததால் அறிவையும் ஆற்றலையும் வளர்ப்பதற்கு மாறாக மூளையைக் குழப்பி, மனத்தைக் கலக்கி, சக்தியைக் குறைப்பவர்கள் ஆகிறார்கள். விகார உடலை மூடுவதற்காக வர்ணப் புடைவைகளும், விசித்திர ஆபரணங்களும் தேவை. அழகிய சரீரத்திற்குச் சுத்தமும் லேசான ஆபரணமுமே போதுமானவை. தெள்ளிய சிந்தனையுள்ளோர் சாதாரணச் சொற்களைச் சிக்கனமாகக் கையாளுவர். கவிதையும் சங்கீதமும் இதற்கு விலக்காவன. இவற்றில் சொல்லழகும், ஓசையின் இனிமையுமே பிரதானமாகையால் சிந்தனைகள் மிகத் தெளிவாக இல்லாமலிருந்தாலும் குற்றம் இல்லை. ஆயினும் காளிதாசர், கம்பர் போன்ற கவியரசர்கள், கவிதையில் சொற்சிக்கனத்தையும் சிந்தனைத் தெளிவையும் காட்டியே புகழ் பெற்றிருக்கின்றனர். ★

அக்டோபர், — 1954.

கி. சாவித்திரி அம்மாள்

# யாம் அறிந்த மொழிகளிலே—

ஒரு சமயம் எனக்கு மிகவும் தெரிந்தவரான ஓர் அம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தேன். நடுவில் பேச்சு ஏதோ பாஷையைப் பற்றித் தொடங்கியது.

"ஆங்கிலம் சரளமான பாஷை. எந்த விஷயத்தையும் ஆங்கிலத்தில் சொல்லுவதென்றால் எளிதாகச் சொல்லிவிடலாம்" என்று சொன்னேன். அவர் அதை மறுத்துக் கூறவில்லை. ஆனால் பொதுவாகப் பாஷைகளைப் பற்றிச் சொல்லும்பொழுது, "மலையாளம் அழகான பாஷை; கேட்க வெகு இனிமையாக இருக்கும்" என்று சொன்னார்.

எனக்கு அதைக் கேட்கச் சிரிப்பு வந்தது. ஏனெனில் அது வரை மலையாளம் ஓர் அழகான பாஷை, கேட்க இனிமையாக இருக்கும் என்று நான் எண்ணியதே இல்லை. அதற்கு மாறாக யாராவது மலையாளம் பேசுவதைக் கேட்டால், "இது என்ன பாஷை?" என்று நான் பரிகாசமாய் நினைத்துக் கொள்வது வழக்கம். விகடம் பண்ணுகிறவர்கள்கூட மலையாளத்தில் பேசியே எல்லோரையும் சிரிக்க வைப்பதுண்டல்லவா? இப்படிச் சொல்லுவதனால் நான் ஏதோ வேண்டுமென்று மலையாளத்தை இகழ்வதாய் நினைக்க வேண்டாம். அது பாஷை தெரியாத குற்றமே ஒழிய வேறல்ல. புகழ் பெற்ற ஆசிரியர் ஒருவர் ஒரு சமயம் ஒரு கூட்டத்தில் நாட்டிலுள்ள பல பாஷைகளையும் அவற்றின் இலக்கியங்களையும் பற்றிப் பேசும் பொழுது, "ஆரஞ்சுப் பழத்திலுள்ள சுளைகள் வெவ்வேறாக இருக்கின்றன. ஆயினும் அவை ஒன்று சேர்ந்து ஒரே ருசியாகவே இருக்கின்றன அல்லவா? அதுபோல் பாஷைகள் வேறு வேறாக இருப்பினும் அவற்றின் பண்பாடு வேறு வேறு அல்லவே?" என்று கூறினார். அவர் கூறிய உவமை எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது!

மலையாளத்தைப் புகழ்ந்து பேசிய அந்த அம்மாளும் கேலியாகச் சொல்லவில்லை. உண்மையாகத் தாம் நினைத்ததைத்தான் சொன்னார். அவர் மலையாளத்திலே பிறந்து வளர்ந்தவர். தம் மழலைப் பருவத்தில் கற்ற பாஷையில் அவருக்கு ஒரு தனி அபிமானம் இருப்பது நியாயந்தானே?

இப்பொழுது நம் தமிழை எடுத்துக்கொள்வோம். ஆங்கிலேயர்கள், ஏன் நம் தேசத்தினர்கூடச் சிலர், "எல்லாப் பாஷைகளையும்விட

உங்கள் தமிழ்ப் பாஷைதான் மிகவும் கடினமாக இருக்கிறது'' என்று நம்மிடம் சொல்வது உண்டல்லவா? அவர்கள் ஏன் அப்படிச் சொல்ல வேண்டும் என்பது நமக்கு விளங்கவில்லை. அவர்கள் கூறுவது போல் தமிழ் அவ்வளவு கடினமாக நமக்குத் தோன்றுகிறதா? அதற்கு மாறாகத் தமிழிலுள்ள தனி நயமும் எளிமையும் அல்லவோ நமக்கு விசேஷமாகத் தோன்றுகின்றன?

நாம் பிறந்த நாட்டை நம் தாய்நாடு என்கிறோம். இரண்டு எழுத்துக்கள் கூட்டிப் பேசும் திறமை ஏற்பட்டவுடன் நாம் கற்கும் மொழியைத் தாய்மொழி என்று அழைக்கிறோம். அதுதான் உயிருள்ளளவும் நம்முடையது. பிற மொழிகளை நாம் எவ்வளவு கற்றாலும் நம்முடையனவாகா. நம் கருத்துக்கும் கற்பனைக்கும் ஏற்ற மொழி நம் தாய்மொழியே என்பதை அனைவரும் ஒப்புக்கொள்வார்கள். ஆகவே நம் சொந்தத் தாயைப் போற்றுவதைப் போல் நம் தாய்நாட்டையும் தாய்மொழியையும் நாம் போற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். நம் உள்ளத்திலெழுந்த அழகிய கற்பனைகளையும் ஆழ்ந்த எண்ணங்களையும் நாம் பேசும் மொழியிற் போல், என்னதான் கற்றிருந்தாலும் பிற மொழிகளில் அவ்வளவு எளிதாகச் சொல்ல முடியுமா? உண்மையில், நம் சொந்தப் பாஷையில் காணாத இனிமையை வேறு பாஷையில் நாம் காண்பது என்பது எவ்வாறு சாத்தியமாகும்?

ஆனால் அவ்விதம் மற்ற மொழிகளில் காணாத இனிமையைப் பாரதியார் நம் தாய்மொழியிலே கண்டார் என்று தெரிகின்றது. அவ்வினிமையைக் கண்டதுடன் அதை ஒரு கவியாகவும் அவர் பாடிவிட்டார்.

"யாம் அறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்'' என்கிறார். அச்சொற்களில்தான் எவ்வளவு பெருமையும் நம்பிக்கையும் த்வனிக்கின்றன! 'ஏதோ "காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு'' என்பது போல் என்னுடையது எனக்கு அருமைதானே!' என்ற ரீதியில் அவர் பாடவில்லை. "எங்கள் தமிழிலுள்ள எளிமையையும் இனிமையையும் மற்றப் பாஷைகளிலே காட்டுங்கள், பார்ப்போம்'' என்று வீறாப்புடன் கேட்பதுபோல் அல்லவா இருக்கிறது அவர் கூறுவது? அவர் தமிழ் மட்டும் கற்றவராக இருந்தால் ஏதோ மிதமிஞ்சிய ஆர்வத்தினால் அவ்விதம் பேசுகிறார் என்று விட்டுவிடலாம். ஆனால் அவர் தமிழ் மட்டும் கற்றவர் அல்ல. வேறு பாஷைகளையும் நன்கு கற்றவர். அதனால்தான் "யாம் அறிந்த மொழிகளிலே'' என்று தைரியமாய்ச் சொல்லுகிறார்.

நம் தாய்மொழியின் அருமையை உணர்ந்து அநுபவிக்க வேண்டும் என்றால் நாம் அதை மட்டும் கற்பது போதாது. பிற மொழிகளும் ஒன்று இரண்டு நன்கு பயின்றிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து நம் பாஷையின் தனிச் சிறப்பை அறிவது சாத்தியமாகும். "இங்கிலாந்திலேயே உள்ளவர்களுக்கு இங்கிலாந்தைப் பற்றி என்ன தெரியும்?'' என்று

ஆங்கிலேயர்கள் பெருமையடித்துக் கொள்வார்களாம். அதுபோல் தமிழ் மட்டும் கற்றவர்களுக்குத் தமிழைப் பற்றி என்ன தெரியும் என்றுதான் நாமும் சொல்லவேண்டும். சொந்த நாட்டை விட்டுச் சிலகாலம் வெளிநாடு சென்றிருந்தால் அப்பொழுது நமக்கு என்று மில்லாத ஆர்வமும் பாசமும் நம் நாட்டின்மீது ஜனிக்கின்றன அல்லவா? பாஷை விஷயத்திலும் இது பொருந்தும்.

இப்பொழுது தமிழ் மொழியிலுள்ள இனிமை மற்ற மொழி களில் இல்லை என்று சொல்லும்படி பாரதியார் அதில் கண்ட இனிமை என்ன, அதற்குத் தமிழ் என்று ஏன் பெயர் வந்தது என்று பார்ப்போம்.

'அமுதினும் இனிய தமிழ்' - அமிருதத்தைக் காட்டிலும் இனிமையானது என்ற காரணத்தினால் அதற்கு அந்தப் பெயர் வாய்த்தது என்று கொள்ளலாம். சிலர் தெற்கே வழங்கிய மொழி யாகையால் 'தென்மொழி' என்றது பிறகு 'தமிழ்' என்று ஆயிற்று என்றும், வேறு சிலர் 'தனி மொழி' என்றும், மற்றும் சிலர் 'தேன் மொழி' என்றும் இப்படிப் பலவிதமாகச் சொல்லுவதும் உண்டு. ஒவ்வொரு பாஷைக்கும் அதற்கு உரிய குணங்களும் சிறப்புக்களும் இருக்கின்றன என்பது ஆராய்ந்து பார்த்தால் தெரியவரும். உருக் கம், எளிமை, இனிமை இவ்வகைக் குணங்களே தமிழின் பிரத்தி யேகமான குணங்கள் என்று கூறலாம். வடமொழியை எடுத்துக் கொண்டால் இதற்கு முற்றும் மாறான இயல்பே அதனுடையது என்பது உடனே விளங்கும். உருக்கம், இனிமை இவைகளுக்குப் பதில் கம்பீரமும் மேன்மையுமே அதற்கு இயல்பாய் அமைந்துள்ள குணங்களாகத் தோன்றுகின்றன. என்னதான் எளிய உடை அணிந்திருந்தாலும் ஒரு பிரபுவின் முக விலாசமும் பேச்சும் எப்படி உயர்வாகவே விளங்குமோ அவ்விதமே எவ்வளவு சாதாரண விஷய மாக இருந்தாலும் சம்ஸ்கிருதத்தின் உயர்ந்த தோரணையானது அவ்விஷயத்தை மேன்மையாக்கி விடும்.

இச்சந்தர்ப்பத்தில் தமிழ் சம்ஸ்கிருதம் இவ்விரண்டின் குணங் களையும் பற்றி என் தகப்பனார் எப்பொழுதும் கூறுவது எனக்கு ஞாபகம் வருகின்றது. "பக்தியினால் உள்ளம் கசிந்து உருகும் பாடல் கள் தமிழில்தான் இருக்கின்றன. சம்ஸ்கிருதத்திலோ பக்தர்கள் பகவானை வேண்டிக்கொள்ளும்பொழுது அதிகாரம் செய்வது போல் அல்லவோ இருக்கிறது?" என்று ஒரே அடியாய்க் கூறிவிடுவார். அவர் கூறியதில் உண்மை இல்லையென்று யார் சொல்ல முடியும்?

இனி ஆங்கிலத்தின் பண்பு எத்தகையது என்று பார்ப்போம். அது தமிழ் வடமொழி இவ்விரண்டையும்விட வேறு விதமானது. உருக்கமோ, இனிமையோ, கம்பீரமோ போன்ற குணங்களைக் காட்டி லும் அதில் நயமும் லாகவமுமே அதிகமாய் அமைந்திருக்கின்றன. இங்கிதமான பேச்சினால் பிறரைத் தன் வசமாக்கும் திறமை ஆங்கி லத்திற்கு விசேஷமாக உண்டு என்று கூறலாம். சொற்களுக்கு அடங்காத நுட்பமான உணர்ச்சிகளையும் மிக லேசான கருத்துக்

களையுங்கூட விரிவாகவும் தெளிவாகவும் எடுத்துரைப்பதில் ஆங்கிலத்திற்கு நிகராக வேறு எந்த மொழியையும் கூற முடியாது. உலகிலுள்ள மொழிகள் யாவற்றையும்விட ஆங்கிலத்தில்தான் அதிகச் சொற்கள் இருக்கின்றன என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அதனால் தான் பாஷையில் நல்ல தேர்ச்சி மட்டும் இருந்துவிட்டால் மனத்தில் தோன்றியதையெல்லாம் அழகாக எடுத்துரைக்க இயலுகின்றது போலும்!

பாரதியார் தமிழ் மொழியின் இனிமையையே முக்கியமாகக் கூறினார் அல்லவா? அவர் தாமே அதைப் பெரிதும் உணர்ந்து அநுபவித்திராவிடில் அவ்வாறு கூறுவாரா? சொல்லுக்கும் பொருளுக்கும் சம்பந்தம் இருக்க வேண்டும் என்ற நியதியை யாவரும் அறிவோம். ஆனால் இனிமை உணர்ச்சியின் வசமாகி அந்த நியதியை அறவே மறந்து சில சமயம் அவர் விசித்திரமான சொற்களையே உபயோகப்படுத்துகிறார்.

"கண்ணம்மா" என்ற பாட்டை எடுத்துக் கொள்வோம். "பேசும் பொற் சித்திரமே" என்று கண்ணம்மாவை அழைக்கிறார். அது நமக்கு எப்படிப் படுகிறது? "பேசும் பொற் பதுமையே" என்று கூறினாலாவது சற்றுப் பொருத்தமாக இருக்கும்; அதை விட்டுப் "பேசும் பொற் சித்திரமே" என்று அழைப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்று தோன்றுகிறது அல்லவா? ஆனால் அவர் ஆசையுடன் அவ்வாறு அழைப்பது நம் காதுகளுக்கு எவ்வளவு இன்பத்தைத் தருகிறது!

தமிழின் இனிமையைத் தெவிட்டாமல் பருகிய பாரதியார் மேலும் என்ன சொல்லுகிறார்? "தேமதுரத் தமிழோசை உலக மெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்" என்கிறார். அது மட்டு மல்ல, "இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்" என்றும் சொல்லுகிறார். என்ன பேராசை பாருங்கள்!

"தேமதுரத் தமிழ்" என்று மீண்டும் தமிழின் இனிமையையே தான் குறிப்பிடுகிறார். அந்தத் தேன் போன்ற மதுரமான மொழி நம்முடையது. அதைப் பற்றிப் பாரதியார் கொண்ட இன்பமும் பெருமையும் நாமும் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் அவர் விரும்பியபடி இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ் மொழியில் இயற்றுதல் சாத்தியமாகும்.

ஆகவே நமக்குக் கிடைத்த அருஞ்செல்வமான இன்பத்தமிழை மேன்மேலும் போற்றி வளர்ப்பது நம் கடமை அல்லவா? ★

— செப்டம்பர், 1946.

ச. கு. கணபதி ஐயர்

# மூலிகைகள்

இன்று மனிதன் 'நாஜூக்'குக்கு அடிமையாகிவிட்டான். சோம்பேறிக்குத் தோலோடு வாழைப்பழம் ஏற்குமா? எவரேனும் வாழைப் பழத்தை உரித்து விண்டு அவன் வாயில் போட்டால் விழுங்க வேண்டுமே என்ற சிரமத்துக்குக்கூட அவன் பின்தங்கும் காலம் அல்லவா இது? ஒருவனுக்குத் தலைவலி வந்ததாகக் கொள்ளுவோம். அவனுக்கு ஏன் தலைவலி வந்தது? போதிய ஓய்வுகொண்டு அதனை நீக்க அவன் முயல்வானா? வேறு அவசரம் அவன் கழுத்தை நெறுக்குகிறது. அவன் கடையில் விற்கும் மாத்திரைகளில் ஏதாவது ஒன்றை விலைக்கு வாங்கி விழுங்கிவிட்டு வேலைக்கு முடுகுகிறான். இயற்கையின் விதிகளை அலட்சியம் செய்கிறான். 'உனக்கு ஓய்வு வேண்டும்' என்று அறிவுறுத்த இயற்கையன்னை அவனுக்குத் தலைவலியை அளித்தாள். அந்த அன்னையின் கட்டளையை அவன் மீறிவிட்டான். இதற்கு ஏற்ற பெரும் தண்டனையை ஒரு நாள் அநுபவித்தே தீர வேண்டும். தலைவலி வந்துவிட்டால் சுக்கு, கஸ்தூரி மஞ்சள், சாம்பிராணி இந்த மூன்றையும் நீர்விட்டு அரைத்துப் பொங்க வைத்துப் பற்றுகப் போட்டுக் கொண்டு சிறிது நேரம் தூங்கிவிட்டால் தலைவலி மாயமாகப் பறந்து போகும். ஓய்வு பெற்ற உடல் கலகலவென்று புதுமையைப் பெறக்கூடும். ஆனால் பற்றுப் போட்டுக்கொள்வது 'நாஜூக்' இல்லையே! பற்றுப் போடும் வழக்கம் மறைந்துதானே தீரும்?

மற்றொரு விஷயம் இங்கே குறிப்பிடத்தக்கது. தற்கால வியாபார மருந்தும் அதனை உபயோகிக்கத் தூண்டும் டாக்டர்களும் பணப் புழக்கம் அதிகமாக உள்ள இடங்களிலேயே தங்கள் ஆதிக்கத்தைக் காட்டும் காலம் இது. நோய் இருக்கும் குடிசைக்கோ சேரிக்கோ இவர்களின் உதவி கிடைப்பது அருமை.

### பகட்டு மருந்துகளுக்கு எதிர்விசைகள்

இவை ஒரு புறம் இங்ஙனம் இருக்க அறிஞர் சிலர் நவீன மருந்துகளை வெறுத்துப் பிரசாரம் செய்து வருகிறார்கள். வைத்தியரின் உதவியைக் கூடியவரையில் விலக்கும் உபாயங்களை நாட முற்படுகிறார்கள். இவர்களுக்காக இன்று **'வீட்டு வைத்தியம்', மருந்தில்லா வைத்தியம்', 'இயற்கை வைத்தியம்'** என்ற பெயர்களில் பல நூல்கள் தோன்றியுள்ளன; தோன்றி வருகின்றன. இந்தத் துறையில் புதிய இயக்கங்களும் நம் நாட்டில் மட்டுமன்றி வேறு நாடுகளிலும்

காணப்படுகின்றன. இந்தக் குழுவினரில் ஒரு சாரார் நம் நாட்டுப் பழைய கலையாகிய மூலிகைப் பிரயோகத்தை உயிர்ப்பிக்க முன் வந்திருக்கிறார்கள்.

## மூலிகை அறிவு என்பது யாது?

மரம், செடி, கொடிகளின் வேர், பட்டை, இலை, பூ, காய், விதை, கிழங்கு முதலியவை யாவும் மூலிகைகள் எனப்படும். பதம் செய்யாமல் பச்சை நிலையில் உள்ளனவே சிறப்பாக மூலிகை எனப்படும். சில சமயங்களில் சிறு செடி ஒன்று அப்படியே மருந்தாகப் பயன் படுவதுண்டு. 'சிறு நெருஞ்சி சமூலம்' என்றால் 'சிறு நெருஞ்சிச் செடி வேர் உட்பட முழுவதும்' என்ற பொருள் கொள்ளவேண்டும். வேரைக் குறிக்கும் மூலம் என்ற சொல்லிலிருந்து மூலிகை என்பது தோன்றியது. செடியின் மற்றப் பாகங்களிலும் வேருக்கு முதன்மை வழங்கவே இச் சொல் தோன்றியது போலும்.

மருந்தாகப் பயன்படும் செடிகளைப் பற்றிய அறிவு இரண்டு வகைப்படும்:.

1. எந்த நோய்க்கு எது மருந்தாக உதவும் என்பதை முதலில் அறிய வேண்டும்.

2. அந்தச் செடியின் அடையாளங் கண்டு அதை உணர்ந்து கொள்ளும் அறிவு அடுத்தபடி முக்கியமானது.

இந்த இரண்டும் தெரிந்துவிட்டால் பிறகு பக்குவ முறை முதலியன அவ்வளவு பெரிதல்ல.

மூலிகைகளை வைத்தியர்களின் உதவியில்லாமல் எவரும் அநுபவத்தினால் உபயோகிக்கலாம். நோய்கள் சிக்கலான நிலையை அடையாமல் தொடக்கத்திலேயே அவைகளை மாற்றும் சக்தி மூலிகைகளுக்கு உண்டு. சிக்கலாகிவிடில் ஒருவர் தம் இஷ்டம் போல் மூலிகைகளை உபயோகித்தல் தவறு. அவர் வைத்தியருடைய உதவியை அந்த நிலையில் அடைந்தே தீரவேண்டும். வெட்டுக் காயம், எலும்பு முறிதல், விஷம் தீண்டல், தீ விபத்து இவற்றில் டாக்டர் வருவதற்குள் செய்யும் சிகிச்சைகளாகிய முதல் உதவி (First Aid) எப்படியோ, அப்படி மூலிகைகள், ஜலதோஷம், அஜீரணம், மந்தம், பித்த அதிகரிப்பு, சிறு வாயுப் பிடிப்பு முதலியவற்றைக் களைவதற்கு மூலிகைகள் உதவுவனவாகும்.

## மூலிகைகள் கண்டறியப்பட்ட வரலாறு

நான் சிறுவனாக இருந்த காலத்தில் எங்கள் வீட்டில் நாய், பூனை இவைகளை வளர்த்து வந்தோம். சில சமயங்களில் நாய் நோயுற்று வாந்தி எடுத்த வண்ணம் சோம்பியிருந்ததை நான் பார்த்திருக்கிறேன். ஆகாரத்தில் அப்பொழுது அதற்கு இச்சை

இருக்கவில்லை. அது எங்கோ சென்று சில பச்சிலைகளைக் கடித்துத் தின்றுவிட்டு வந்ததை ஒரு முறை நான் பார்த்தேன். பூனையும் நோயுற்றபோது பச்சிலையைத் தின்கிறதாம். கீரி ஒரு பாம்போடு சண்டை போட்டு அதைக் கொன்ற பிறகு எங்கோ சென்று ஒரு பச்சிலையைத் தின்றுவிட்டு வருமாம். இந்த விதம் எங்கள் பாட்டி எனக்குக் கதைகள் பல கூறியிருக்கிறாள். வீட்டில் வளர்க்கும் பிராணிகளும் வன விலங்குகளும் நோயுற்ற காலத்தில் பச்சிலைகளைக் கறிப்பதைப் பார்த்தவர்கள் பச்சிலைகள் மருந்தாகப் பயன்படுவதை அறிந்துகொண்டார்கள். அதன் பின்பு சில அறிஞர்கள் தனித்தனியே பச்சிலைகளைச் சோதனை செய்து அவற்றின் குணங்களைக் கண்டார்கள்.

சில மூலிகைகள் தற்செயலாகக் கண்டறியப்பட்டன. ஊது காமாலை வந்த ஒருவன், பரம ஏழையாக இருந்தவன், ஒரு நாள் சாப்பிட ஒன்றுமின்றிக் கரிசராங்கண்ணித் தழைகளைப் பறித்துச் சாப்பிட்டுவிட்டுப் பட்டினி கிடந்தான். மறுநாள் முதல் ஊது காமாலை குறைந்துகொண்டே வந்தது. அவன் கண்களுக்கும் ஒளி மிகுந்தது. இந்தச் சம்பவத்தினால் ஊதுகாமாலைக்குக் கரிசராங்கண்ணி மருந்தாகப் பயன்படுவது கண்டறியப்பட்டது. காமாலைக்காரனுக்கு உப்பில்லாப் பத்தியம் வைத்து ஒரு வாரத்துக்கு ஒரு முறையாக இரண்டு தடவை கரிசராங்கண்ணித் தழைகளை அரைத்து ஆகாரமாகச் சாதத்தில் கொடுத்தால் அவனது நோய் தீர்ந்து அவன் குணமடைகிறான்.

ஸ்பானியர்கள் சிலர் தென்னமெரிக்காவின் காட்டுப் பிரதேசத்தில் சஞ்சாரம் செய்துகொண்டிருந்தார்கள். அவர்களுள் ஒருவனை மலேரியா என்னும் குளிர் ஜுரம் பீடித்தது. அவன் பிரயாணத்துக்குத் தகுதியற்றவன் ஆனான். அதனால் அவனுடன் வந்தவர்கள் சில நாள் ஓரிடத்தில் தங்க நேர்ந்தது. முடிவில் நோயாளி கவலைக்கிடமான நிலைமையை அடைந்தான். ஆகவே அவனுடைய சகாக்கள் அவனை ஒரு குட்டைக்கருகில் மர நிழலில் விட்டுவிட்டுத் தம் காரியத்தில் நோக்கமாகச் சென்றுவிட்டனர்.

நோயாளிக்குத் தாகம் எடுத்தது. அவன் மெல்ல மெல்ல நகர்ந்து சென்று குட்டையின் நீரைப் பருகினான். அது ஒரே கசப்பாக இருந்தும் அவன் வேறு வழியின்றிச் சில நாள் அதனையே குடித்து வந்தான். அந்த நீரே மருந்தாக அவன் முற்றும் குணமடைந்து தன் நண்பர்களுடன் போய்ச் சேர்ந்துகொண்டான். அந்தக் குட்டை நீர் அவன் மலேரியாவைக் குணப்படுத்தியதற்குக் காரணம் என்ன? சின்கோனா என்ற மரத்தின் வேர்கள் குட்டையில் ஓடியிருந்ததும் அதன் இலைகள் ஜலத்தில் நீண்ட நாள் வீழ்ந்து வீழ்ந்து நீர் கசப்பேறியிருந்ததுமே அதற்குக் காரணம். இந்த நிகழ்ச்சியின் பிறகுதான் சின்கோனா மரத்திலிருந்து கொயினாவை எடுப்பதைக் கண்டறிந்தார்கள். மலேரியாவுக்குக் கொயினா ஏற்ற மருந்து என்பதை இன்று எவரும் அறிவர்.

## நம் முன்னோர் மூலிகைகளைப் போற்றிவந்தமை

முன் காலத்தில் கொல்லைத் தோட்டம் இல்லாத வீடே இருக்க வில்லை. இடப் பஞ்சம் இல்லாத அக்காலத்தவர் நிறையப் புறக் கடைக்கு இடம் விட்டு வீடு கட்டினார்கள். புறக்கடையில் பல மரம் செடி கொடிகளைப் பயிர் செய்தார்கள். அந்தத் தோட்டத்தில் மூலிகைச் செடிகளுக்கு முக்கியமான இடம் இருந்தது. 'புழைக் கடைப் பச்சிலை' என்ற தொடர் இதனை உறுதிப்படுத்தும்.

பழமொழி நானூறு என்று ஒரு நூல் இருக்கிறது. அது சுமார் 1800 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியது. அதில் புழைக் கடைப் பச்சிலையைப்பற்றி ஒரு பாட்டு வந்திருக்கிறது.

'அல்லல் ஒருவற்கு அடைந்தக்கால் மற்றவர்க்கு
நல்ல கிளைகள் எனப்படுவார்—நல்ல
விளைமரபின் மற்றதனை நீக்க; அதுவே
மனையமரம் ஆய மருந்து'

என்பது அது. 'ஒருவனுக்குத் துன்பம் வந்தபோது உற்றார் எனப் படுகிறவர்கள் அந்தத் துன்பத்தை நீக்குவார்களாக. அப்படிச் செய்யின் அவர்கள் வீட்டின்கண் உள்ள பச்சிலை மரம்போல்வர்' என்பது இதன் கருத்து. கொல்லைகளில் மூலிகைச் செடிகளை வைத்து வளர்த்து வந்தனர், நம் முன்னோர் என்பதற்கு இந்த ஓர் உதாரணம் போதும்.

மூலிகைப் பிரயோகங்களில் மருந்தாக உட்கொள்ளுதல், வேர் பறித்தல், ரட்சை கட்டுதல் என மூன்று வகை உண்டு. முறைக் காய்ச்சல் ஒருவருக்கு வந்துவிட்டால் அது தீரும் வண்ணம் மந்திரம் அறிந்த ஒருவர் குறித்த ஒரு செடியின் வேரை ஒரு ஞாயிற்றுக் கிழமையில் பறிப்பார். அதன் பயனாக முறைக்காய்ச்சல் தீர்ந்து விடுகிறது. காமாலைக்கு ஒரு குறிப்பிட்ட வேரைக் கையில் கட்டிக் கொள்வதும் பழைய வழக்கம். இவை எல்லாம் இக்காலத்தில் மறைந்து வருகின்றன.

மருந்துக்காக ஒரு செடியை அழிக்க வேண்டுமாயின் அதன் அழிவுக்கு வருத்தப்படுவதுண்டு. அது காரணமாக அச்செடி மறு பிறவியில் நற்கதி பெற வேண்டுமென்று மந்திரம் கூறி அதனைப் பறிப்பார்கள்.

பிரச்சோதனன் என்று ஒரு சக்கரவர்த்தி இருந்தான். அவன் ஒரு சமயம் உதயணன் என்ற மகா வீரனை வஞ்சனையாகச் சிறைப் படுத்தித் தன் நாட்டில் வைத்துக்கொண்டான். உதயணன் சிறை யில் இருந்த காலத்தில் பிரச்சோதனனுடைய மக்களுக்கு ஆயுதப் பயிற்சியை அளித்தான். தன் மக்கள் ஆயுதப் பயிற்சியில்

தேர்ச்சி பெற்றதை அறிந்த பிரச்சோதனன், தான் உதயணனைச் சிறைப்படுத்தி வைத்திருந்தமைக்கு இரங்கி,

'மரமுதல் சாய மருந்துகொண் டாங்கு
நம்குடி வலித்தல் வேண்டி நம்பி
தன்குடி கெடுத்த தகவி லாளனேன்'

என்று கூறி வருந்தினன். மருந்துக்காக மரத்தை அழித்தலையும் நம் முன்னோர் பாவமாகக் கருதினர் என்பது இதனால் விளங்கும்.

நம் முன்னோர் மூலிகைகளை மதித்துப் போற்றி வந்தமைக்கு மேலே காட்டியவை சில உதாரணங்கள்.

### பழக்க வழக்கங்களில் மூலிகைகள்

**தெ**லுங்கு மொழியில் புதிராக ஒரு வழக்கு உண்டு. ஆந்திர நாட்டில் இந்த வழக்கு உண்டோ இல்லையோ, நான் அறியேன்; தென்னாட்டில் சில தெலுங்கர்கள் அதனை வழங்கி வருகிறார்கள். அது வருமாறு:

"அங்கர வங்கர **அ**;
தானி தம்முடு **சொ**;
நல்ல க்ருட்டு **மி**
நால்கு காள்ளு **பெ**."

**அ**ல்லம், **சொ**ண்டி, **மி**ரியாலு, **பெ**ல்லம் என்பவற்றை உணர்த்த **அ, சொ, மி, பெ** - என்ற எழுத்துக்கள் வந்துள்ளன. தமிழில் இந்த நான்கு சொற்களும் முறையே இஞ்சி, சுக்கு, மிளகு, வெல்லம் எனப்படும். மேலே கூறிய நான்கு பொருள்களும் சாதாரண மருந்தாக வீடுகளில் பயன்படுகின்றன. இஞ்சி சுரசம் பித்த கப ஜுரத்துக்கு ஏற்ற மருந்து. சுக்கு வெல்லம் அஜீரணம், வாயு இவைகளைப் போக்கும். மிளகு கஷாயம் வாயுவுக்கும் இருமலுக்கும் பரிகாரம். இந்த மூன்றுக்கும் உதவுவது வெல்லம். இந்த விஷயத்தை எவரும் எளிதில் நினைவைத்திருப்பதற்காகவே 'அங்கர வங்கர' என்ற புதிர் தோன்றியுள்ளது.

நாம் இஞ்சியை எத்தனையோ பக்குவங்களுக்கு உபயோகப் படுத்திக் கொள்ளுகிறோம். தினசரிச் சமையல் பதார்த்தங்களில் அது கலந்திருக்கிறது. கருமிளகைவிடப் பச்சை மிளகு உடல் நலத்துக்கு ஏற்றது. மலையாளக் கரையில் உள்ளவர்கள் அதன் அருமை பெருமைகளை உணர்வார்கள். சுக்கும் அப்படியே. கடுகுக் கீரை நம் உடல் நலத்துக்கு ஏற்றது. ஆனால் நம்மவர் அதனை அதிகமாகப் பயன்படுத்துவதில்லை. கொத்துமல்லி பித்தத்தைக் குணப்படுத்துவதில் ராணியாகத் திகழ்கிறது. இதனை ரசம் குழம்பு இவைகளில் கலந்து உபயோகித்தல் அவசியம். கொதி வந்து அடுப்பிலிருந்து கீழே இறக்கி வைத்தபின் ரசம் குழம்புகளில்

இதனைச் சேர்க்கவேண்டும். பச்சைக் கொத்துமல்லியைத் துவையல் செய்து சாப்பிடலாம். தினசரிச் சமையலுக்கு இதனைப் பயன் படுத்தல் அவசியம். கடவுள் இதற்கு மருந்துக் குணத்தோடு நல்ல மணத்தையும் வழங்கியிருக்கிறார். கொத்துமல்லியை அடுத்துச் சமையலுக்குப் பயன்படுவது கறிவேப்பிலை. கொத்துமல்லிக்குச் சரிசமானமான குணமுடைய மற்றொன்று வெந்தயக்கீரை. இவை களை எல்லாம் நாம் வீட்டுக் கொல்லைகளிலேயே பயிர் செய்து கொள்ள முடியும்.

கீரைகளில் பல, மூலிகைகளின் குணங்களைப் பெற்றுள்ளன. ஆனால் இவைகளை மூலிகைகள் என்ற பெயரில் நாம் வழங்குவ தில்லை. அத்தனையே குறை. ஆனால் கீரைகளை ருசிக்காக அல்லாமல் அவற்றின் அருமை பெருமைகளுக்காகச் சாப்பிடுகிற வர்கள் எத்தனை பேர்? அவற்றைப் பக்குவ முறை அறிந்து சமைக்கிறவர்கள் எத்தனை பேர்? நம்முடைய மூலிகை அறிவு நம் முன் தலைமுறையோடு நின்றுவிட்டது. ஆவலுள்ளவர்கள் அதற்கு மீட்டும் உயிர் கொடுத்து ஆராய்ச்சியை வழக்கத்துக்குக் கொண்டு வர முடியும்.

ஏழைகள் அதிகமாகவும் பணக்காரர் மிகவும் குறைவாகவும் உள்ள இந்த நாட்டுக்கு மூலிகைகளின் மறுமலர்ச்சி இன்றி யமையாததாகும். *

— டிசம்பர், 1952.

எஸ். ஆர். பாலசுப்பிரமணிய ஐயர்

# விஜயாலய சோளீசுவரம்

தமிழர் நாகரிகம் பழமையும் பெருமையும் வாய்ந்தது என்பது யாவரும் அறிந்த விஷயமே. பண்டைக் காலத்தில் ஆண்டு வந்த தமிழ் வேந்தர்கள் சேர சோழ பாண்டியர் ஆவர். இம்மூவரில் மிகப் பெருமை வாய்ந்தவர்கள் சோழர்களே. திக்குவிஜயத்தினால் தங்கள் ராஜ்யத்தையும் செல்வாக்கையும், வட இந்தியா, இந்தியக் கீழ்நாடுகள் முதலிய இடங்களில் பரவச் செய்தும், அயல் நாட்டில் உள்ள அரசர்களிடம் தூது அனுப்பி வாணிகத்தை வளர்த்தும், கல்வியையும் கலைகளையும் போற்றியும் தங்கள் நாடு முழுவதும் சிற்பங்களும் ஓவியங்களும் நிறைந்த அளவற்ற அற்புதக் கோயில்கள் அமைத்தும் இவர்கள் அழியாப் புகழ்பெற்றனர்.

சங்க காலத்துச் சோழர்கள் பலருளர். கரிகாற் பெருவளத்தான், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, கிள்ளிவளவன், கோப்பெருஞ்சோழன், பெருநற்கிள்ளி, கோச்செங்கணான் முதலிய சோழவரசர்கள் பலர் ஆண்டனர். ஆனால், 'அவர்கள் எப்பொழுது ஆண்டார்கள்? அவர்களின் பரம்பரை வரிசை எவ்வாறுள்ளது?' என்ற வினாக்களுக்கு விடை எளிதில் இயம்ப இயலவில்லை. பொதுவாய், கி. பி. முதல் மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகளிலேயோ அல்லது சற்று முன்பின்னோ என்றுதான் தற்காலம் சொல்ல இடமுண்டு. அவர்கள் காலத்திற்குப் பிறகு ஒன்பதாம் நூற்றாண்டின் மத்திய காலம் வரையில் சோழர்கள் மறை பொருள் போலக் கிடந்தனர். களப்பிரர்களாலோ, பின்பு பலமடைந்த பல்லவர்களாலோ இவர் பலம் அடக்கப்பட்டு இருந்த இடம் தெரியாமல் இருந்தனர். இக் காலத்தைச் சோழர்களின் இருட் காலம் என்னலாம்.

பிறகு சுமார் கி. பி. 850-இல், விஜயாலய சோழன் கடலில் முளைத்தெழும் கதிரவன்போல வெளிப்பட்டுத் தஞ்சையைத் தலை நகரமாகக் கொண்டு சோழ வம்சத்திற்குப் புத்துயிர் கொடுத்து அவ் வம்சத்தை நிலைநிறுத்தினான். அவ் வம்சத்தார் சுமார் கி. பி. 850 முதல் 1070 வரை புகழ்பரப்பி நாட்டை ஆண்டு வந்தார்கள். அவ்வரசர்களில் சிரேஷ்டர், காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளின இராஜகேசரி வர்மரான இராஜராஜ தேவரும், கங்கையும் கடாரமும் பூர்வ தேசமும் கொண்ட பரகேசரிவர்மரான இராஜேந்திர சோழரும் ஆவர்.

இக்காலத்தில் தலைநகர்களாக இருந்தவை தஞ்சையும், கங்கை கொண்ட சோழபுரமும் ஆகும். கி. பி. 1070-ஆம் ஆண்டில் கீழைச்

சாளுக்கிய சோழ வம்சத்தில் உதித்த அபயன் ஜயதரன் என்ற முதலாம் குலோத்துங்கன் பட்டம் பெற்றான். இவன் வம்சத்தார் 1279-ஆம் ஆண்டுவரை ஆண்டு வந்தார்கள். பிறகு பாண்டியர்கள் சோழ நாட்டை வென்று தம் வசமாக்கினர்.

தஞ்சை விஜயாலய வம்சத்தை ஸ்தாபித்தவனான விஜயாலயன் காலத்தில் அமைக்கப்பட்டதும், நார்த்தாமலையிலுள்ளதுமாகிய விஜயாலய சோளீசுவரம் என்ற கோயில் ஒன்றைப் பற்றி இங்குக் கவனிப்போம்.

நார்த்தாமலை என்பது புதுக்கோட்டைச் சம்ஸ்தானத்திலுள்ள ஒரு சிறு கிராமம். (நகரத்தார் மலை என்பதன் திரிபு.) எட்டுச் சிறு குன்றுகளால் சூழப்பட்டது. அவைகளில் முக்கியமானது மேலமலையும், கடம்பர் மலையும் ஆகும். திருச்சியிலிருந்து மானாமதுரைக்குச் செல்லும் தென் இந்திய இருப்புப் பாதையில் இதே பெயருள்ள ஒரு ஸ்டேஷனுக்கு இரண்டரை மைல் தூரத்தில் உள்ளது. இங்குள்ள மாரியம்மன் கோயிலினால் தற்காலம் இதற்குப் பெருமை உண்டாகியிருக்கிறது! இம்மாரியம்மன் கோயில் மலையடிவாரத்தில் உள்ளது. இதற்கு அருகில் ஒரு பழைய சிவன் கோயில் உள்ளது. ஆனால் சிற்ப சம்பந்தமான விசேஷமுள்ள கோயில்கள் கடம்ப மலையில் உள்ள இராஜராஜன் காலத்திலே கட்டப்பட்ட கடம்பர் கோயிலும், மேலமலையிலுள்ள பல்லவ காலத்து இரண்டு குடைவரைக் (Cave temples) கோயில்களும், விஜயாலய சோளீசுவரம் என்ற சோழர் காலத்துக் கற்கோயிலுமே.

இவ்வூரில் பண்டை நாளில் நகரத்தார் அல்லது வியாபாரக் கூட்டத்தார் குடியேறியிருந்தனர். இவ்வூர் இராஜராஜன் (I) காலத்திலே தெலுங்ககுலகாலபுரம் என்றும், மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலே குலோத்துங்கசோழபட்டினம் என்றும், பிற்காலத்திலே நார்த்தாமலை என்றும் வழங்கி வருகிறது.

முன் சொன்ன மேலமலையில் மூன்று கோயில்கள் இருக்கின்றன. இவைகளில் இரண்டு குடைவரைக் கோயில்கள். வடக்கேயுள்ள மலைக் கோயில், சமண குடகு என்ற பழைய பெயர் வாய்ந்தது. பல்லவ அரசனான மகேந்திரவர்மன் காலத்திற் குடையப்பட்ட மலைக் கோயில்களின் அம்சங்கள் இதில் உள்ளன. இதன்கண் குடைந்த குகையும் அதற்கு முன்பாக அர்த்த மண்டபமும் உள்ளன. நான்கு சதுரத் தூண்கள் (Cubical pillars) மகேந்திர பல்லவன் குடைவித்த மலைக் கோயில்களிலுள்ள தூண்களைப் போன்றவை. பிற்காலத்தில் குகைக்கும் அர்த்த மண்டபத்திற்கும் இடையிலுள்ள பாறையில் பன்னிரண்டு விஷ்ணுவின் திருவுருவங்களை அமைத்துள்ளார்கள். இந்தச் சிலைகளில் அமைத்திருக்கும் சங்குச் சக்கரங்களின் உருவ அமைப்பிலிருந்து இவ்வுருவங்களும் பல்லவர் காலத்தவை எனக்

கொள்ளலாமென்று தோற்றுகிறது. மகேந்திர பல்லவன் மகேந்திரவாடியில் மகேந்திர விஷ்ணுக்கிருகம் என்ற விஷ்ணு கோயிலை அமைத்துள்ளான். முக மண்டபத்து உபபீடத்திற் கண்ட குமுதப்படைகளில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டி லிருந்து இந்த முகமண்டபம் முதல் குலோத்துங்கன் காலத்தில் (45-ஆம் ஆண்டு—கி. பி. 1115) ஏற்பட்டிருக்கலாம் என்று தெரிய வருகிறது. இக்கோயில் மூர்த்தியைத் திருமேற் கோயில் மாணிக்க ஆழ்வார் என்றும், பதினெண்பூமி விண்ணகர எம்பெருமான் என்றும் கல்வெட்டுகள் கூறுகின்றன. இதற்குத் தெற்கே ஐம்பதடி தூரத்தில் மற்ருெரு குகைக் கோயில் உள்ளது. இதிலுள்ள துவார பாலக உருவங்களுள் ஒன்று மிகப் புகழ் பெற்றது. குகைக்கு முன் ஒரு மண்டபம் இருந்தது. ஆனல் அம் மண்டபம் இப்போது இடிந்து கிடக்கிறது. மண்டபத்தின் உப பீடத்துக் குமுதப்படையில் மற்ருெரு கல்வெட்டு உளது. இதிலிருந்து இதன் பெயர் பழியிலியீசுவரம் என்ற சிவன் கோயில் என்றும், பல்லவ அரசனுன நிருபதுங்க விக்கிரமற்கு யாண்டு ஏழா வதில் விடேல் விடுகு முத்தரையன் மகன் சாத்தம் பழியிலி இக் கோயிலைக் குடைவித்தான் என்றும், சாத்தம் பழியிலி மகன் மீனவன் தமிழதியரையனுன மல்லன் அனந்தனுக்குப் புக்க பழியிலி சிறிய நங்கை இக்கோயிலுக்கு முகமண்டபமும் ‘இரஷ்வ’ மும் (ரிஷபம்) ‘இஷவக் கொட்டிலும்’ (ரிஷப மண்டபமும்) பலிபீட மும் செய்வித்தார் என்றும் அறிகிறோம். ஆகவே இக்கோயில் பிந்திய பல்லவர் காலத்தது. அதாவது ஒன்பதாம் நூற்ருண்டின் மத்திய காலத்ததென்று கொள்ளத் தகும்.

இவ்விரண்டு குகைக் கோயில்களுக்கும் எதிராக உள்ளது கற்கோயிலான விஜயாலய சோளீசுவரம். இக்கோயில், மத்தியில் பிரதானக் கோயிலும் சுற்றிலும் ஏழு சுற்றுக் கோயில் களும் இவைகளைச் சூழ்ந்துள்ள கல்மதில்களும் அடங்கியது. கோயில் மேற்குப் பார்த்தது. மேற்கேயும் வடகிழக்கேயும் இரண்டு வாயில்கள் உள. கர்ப்பக்கிருகம் ஓங்காரவடிவமுடையது. குறுக்கில் 9 அடியும் உயரத்தில் 8 அடியும் உள்ளது. வட்டச் சுவர் 5 அடி கனமுள்ளது. நாலு மூலையிலும் சதுர வடிவு உடையது. இது முழுவதும் 29 அடி சதுரமுள்ள மண்டபத்தில் இருக்கிறது. கர்ப்பக் கிருகத்துக்குமேல் அதே மாதிரி இரண்டு தளங்கள் இருக் கின்றன. சிகரம் வரவரக் குறுகிக் கடைசியில் கல் ஸ்தூபி உடைய தாய் வட்டமாய் முடிகிறது. இது பல்லவச் சிற்பமான மகாபலி புரத்தில் உள்ள தர்மராஜ ரதத்தின் சிகரத்தை ஒத்திருக்கின்றது. நாலு பக்கங்களிலும் நாலு சிம்ம லலாடங்கள் இருக்கின்றன. அவை களுக்கு இடையில் கீழ் வரிசையில் நான்கு திக்குகளிலும் நான்கு ரிஷபங்கள் விளங்குகின்றன. நான்கு புரைகளில் கற்சிலைகள் உள. மேற்கில் சிவனும் பார்வதியும் தெற்கில் வீணுதர தக்ஷிணமூர்த்தி யும் காணப்படுகின்றனர். கர்ப்பக்கிருகத்திற்கு முன் ஓர் அர்த்த மண்டபம் உள்ளது. இது சுவருடன் உள்ளடங்கிய அரைத்

தூண்களால் அடைபட்ட மண்டபம். இதன் வெளிப் புறத்தில் புரைகள் இல்லை. இம்மண்டபத்தைத் தாங்க மத்தியில் கல்தூண்கள் இருக்கின்றன. தூண்களின் தலைப்பாகத்திலுள்ள போதிகை பல்லவ காலத்தவை போலச் சாதாரணமாயும் நடுவில் பட்டையாயும் இருபக்கத்திலும் சுருள் சுருளாயும் 'வருவினதா'யும் இருக்கிறது.

முதற் குகைக் கோயிலுக்கு வடக்கேயும், விஜயாலய சோளீசுவரத்திற்கு எதிராகவும் உள்ள கற்பாறையிலுள்ள கல்வெட்டொன்றிலிருந்து இக்கோயிலின் பெயர் நமக்குக் கிடைக்கிறது. இக் கல்வெட்டு மாறவர்மன் சுந்தரபாண்டியனின் பன்னிரண்டாம் ஆண்டில் (கி. பி. 1228-ஆம் ஆண்டு) இக்கோயிலுக்கு இந்நகரத்தார் திருப்படி மாற்றுக்கும் திருவிழா நடப்பிவிக்கவும் திருநாளில் ஆளுடையாரை எழுந்தருளுவிக்கவும் திருவீதி கூத்து நடத்தி வைப்பிக்கவும் செய்த தர்மம்.

1. "ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாற பன்மரான திரிபுவன சக்ரவர்த்திகள் சோணாடு வழங்கியருளிய ஸ்ரீ,

2. ஸுந்தர பாண்டிய தேவற்கு யாண்டு 11-வதின் எதிராமாண்டு சித்திரை மாதத்து ஆருந்தி

3. யதி இரட்டபாடி கொண்ட சோழ வளநாட்டுத் தெலிங்க குல காலபுரமான குலோத்

4. துங்க சோழ பட்டணத்து............இ

5. வ்வூர் உடையார் விசையாலைய சோளீசுவரமுடைய நாயனாற்கு......"

இதிலிருந்து இந்த விஜயாலய சோளீசுவரம் என்பது இக் கல்வெட்டுக்கு எதிரிலுள்ள இக்கற் கோயிலே என்பது தெளிவு. மகேந்திரவர்மனின் மண்டகப்பட்டுக் கல்வெட்டிலிருந்து, அவன் காலத்துக்கு முன்பு மரத்தினாலும் செங்கல்லினாலும் சுண்ணம்பினாலும் உலோகத்தினாலும் கோயில்கள் அமைக்கப்பட்டன என்றும், அவ்வரசன் விசித்திரமாய்ப் புதுமாதிரியாய்க் குகைக் கோயில்கள் குடைவித்தான் என்றும் அறிகிறோம்.

பிறகு இரண்டாம் நரசிம்மன் காலத்துக் கற்கட்டடக் கோயில்கள் ஏற்பட்டன. இவைகளில் முக்கியமானவை—மாமல்லபுரத்துள்ள கடற்கரைக் கோயிலும், காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயிலும், பனைமலையிலுள்ள கோயிலும் ஆம். பல்லவர்கள் காலத்துக்குப் பிறகு குகைக் கோயில்கள் குடையும் வழக்கம் நின்றது. பிறகு கற்கோயில்களும் செங்கற் கோயில்களுமே கட்டப்பட்டன. சோழர் காலத்தே அழகு வாய்ந்த பல பெரிய கோயில்கள் கட்டப்பட்டன. இவைகளுக்குத் திலகம்போல் விளங்குவது விஜயாலய வம்சத்து முதல்வனான விஜயாலயன் காலத்து ஏற்பட்ட நார்த்தாமலை விஜயாலய சோளீசுவரமே. ★

— ஜனவரி, 1938.

ஸி. எம். இராமசந்திரம் செட்டியார்

# நிலவறைகள்

இப்போது நமது நாட்டிலும் பயங்கரமான போர் வரக்கூடிய குறிகள் தோன்றுகின்றன. அவ்விதம் கடுமையான போர் வருவதற்கு முன்னமே ஆதரவற்ற மக்கள் பாதுகாப்பைத் தேடிக் கொள்ளுவதற்காக வசதிகள் செய்து கொள்ள வேண்டிவரும். அதிகாரிகளுங்கூட இதில் அதிக சிரத்தை எடுத்துக் கொண்டு மக்களுக்கு வேண்டிய போதனைகளைச் செய்துவருகிறார்கள். மிகவும் விலை பொருந்திய பொருள்களைச் சேமித்து வைக்க வழி தேடிக் கொண்டும் வருகிறார்கள். ஆலயங்களையும் அவைகளில் உள்ள மதிப்பிட முடியாத அருமை வாய்ந்த சிற்பங்களையும் பாதுகாப்பதற்காக முயற்சிகள் எடுத்துக் கொண்டு வருகிறார்கள். இவ்விதம் நமது நாடு இருக்கும் நிலைமையில் நம் முன்னோர்கள் எவ்விதமான பாதுகாப்புக்களை அமைத்திருந்தார்கள் என்பதைப்பற்றிச் சிறிது ஆராய்வோம்.

நம் பழைய கோயில்களைப் பார்த்தால் அவற்றில் தள வரிசைக்குக் கீழ் நில அறைகள் இருக்கக்காணலாம். தஞ்சை இராஜராஜேசுவரம் (பிருகதீசுவரம்) போன்ற பெரிய ஆலயங்களில் பல நில அறைகள் இருக்கக் காண்கிறோம். அவை பெரும்பாலும் கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம் முதலியவைகளிலே கட்டப்பட்டிருக்கும். வெளித் தோற்றத்திற்கு அந்த அறைகள் இருப்பதையே காண முடியாது. சிறிதும் தெரியாமல் பலகைக் கற்களால் அவ்வறைகளின் முகத் துவாரங்கள் மூடப்பட்டிருக்கும். நாம் ஆலயங்களுக்குச் சென்றால் அர்ச்சகர்கள் அவ்வித நில அறைகளை நமக்குக் காட்டி அவைகளை அதிசயப் பொருள்களாகத் தோற்றுவிப்பார்கள். ஆனால் பல ஆலய அதிகாரிகளுக்கும் பொது ஜனங்களுக்கும் அவ்வறைகள் அமைத்ததன் நோக்கம் தெரியாது. அவ்வறைகள் சில ஆலயங்களில் சிறியனவாகவும் சில ஆலயங்களில் பெரிய மண்டபங்களாகவும் இருக்கக் காணலாம். வேலூரில் கோட்டையில் சிவாலயத்தில் இருக்கும் நில அறை பெரிய மண்டபமாக இருக்கிறது. இதில் எப்போதும் நீர் நிறைந்திருக்கக் காணலாம். மக்கள் உள்ளே செல்லவும் அஞ்சுகிறார்கள். திருச்சி ஜில்லாவிலுள்ள துறையூரில் சிவாலயத்தில் சமீபத்தில் பழுது பார்த்தபோது நில மட்டத்திற்குக் கீழ் அமைந்திருந்த நில அறையில் பல அருமையான செப்பு விக்கிரகங்கள் கிடைத்தன. அவைகளுள் பல, நாயன்மார்களின் அழகிய பதுமைகள்; அனந்தபூர் ஜில்லா லேபாக்ஷி என்ற ஊரில் உள்ள பழைய ஆலயத்தில் ஒரு நில அறையில் பல செப்பேடுகள் கிடைத்தன. இன்னும் பல ஆலயங்களில் நில அறைகளில் அருமையான பதுமைகளும் சிலைகளும் செப்புப் பட்டயங்களும் மற்றப்

பூஜைப்பொருள்களும் கிடைத்திருக்கின்றன. இவைகளில் பல வற்றைச் சென்னைக் காட்சிச் சாலையில் சேமித்து வைத்திருக்கிறார்கள். இதனை ஆராய்ந்தால், அருமையான பொருள்களைப் பிறர் அபகரித்து எடுத்துச் செல்லாவண்ணம் இரகசியமாகச் சேமித்து வைப்பதற்காகவே இந்த அறைகள் ஏற்பட்டன எனலாம். இதனையே பல பெரியோர்கள் 'கலாப காலத்தில் சேமித்து வைத்தார்கள்' என்று சொல்லுவதுண்டு. ஆகவே போர் முழக்கம் ஏற்படுவதன் முன்னமே அருமையான பொருள்களைச் சேமித்து வைப்பதற்காக நில அறைகள் ஆலயங்களில் ஏற்பட்டன என அறியலாம்.

ஆலயங்களில் மாத்திரமே அன்றிப் பெரிய வீடுகளிலுங்கூட நில அறைகள் இருந்தன. முன்காலத்தில் போர்களும் படையெடுப்புகளும் கலகங்களும் கொள்ளைகளும் அடிக்கடி ஏற்பட்டிருந்ததைச் சரித்திர மூலமாகவும் பெரியோர்கள் வாயாலும் கேட்டிருக்கின்றோம். நாட்டுப்புறங்களில் செல்வர்கள் இவ்விதமான அபாயங்களுக்குப் பயந்து தங்கள் வீடுகளில் நிலமட்டத்திற்குக் கீழே இரகசிய அறைகளைக் கட்டியிருந்தது உண்டு. கலாபம் ஏற்படுகின்ற குறி தோன்றியவுடன் அந்த அறைகளில் தம் சொத்துக்களைச் சேமித்து வைப்பார்கள். இவ்வித அறைகள் எல்லைக் கிராமங்களில் பெரும்பாலும் இருந்தன. இவ்வாறான அறைகள் பிற்காலத்தில் ஞாபகம் அற்றுப் போனபோது புதையல்கள் எனச் சொல்லப்படும். இவற்றைப் பற்றிப் பல கதைகளும் நாட்டுப் புறங்களில் வழங்குவதுண்டு. நாகப் பாம்பு, பூதம் இவைகள் பொக்கிஷங்களைக் காத்துக்கொண்டிருக்கும் என்றும், எடுக்க வருபவர்களைக் கொன்றுவிடும் என்றும் பல கதைகள் கிராமாந்தரங்களில் வழங்குகின்றன.

வட நாட்டில் சீதோஷ்ணங்களுக்குப் பயந்து அவைகளைத் தடுக்க நில அறைகள் கட்டும் வழக்கம் இருந்தது. டெல்லி முதலிய இடங்களில் பழைய மாளிகைகளில் நில அறைகள் இருந்தன. அங்கே சீதமும் உஷ்ணமும் அவ்வக்காலங்களில் அபரிமிதமாக இருக்கும். நில அறைகளிலோ சீதோஷ்ணம் சமமாக ஆகிவிடும். அவற்றின் கடுமை தணிந்துவிடும். இவ்வறைகளைப் பற்றிய பல கதைகளும் வடநாட்டில் உலவுகின்றன. மேலும் எதிரிகளைச் சிறையிடுவதற்காக நில அறைகள் கட்டப்பெற்றதும் உண்டு. இவற்றை வட நாட்டில் மாத்திரமே அன்றித் தென்னாட்டிலும் சீரங்கப்பட்டணம் முதலிய இடங்களில் காணலாம்.

நிலத்தின் கீழ் அறைகள் அன்றி நில வழிகளும் அமைப்பது உண்டு. இவைகளைப் பற்றிப் பல நாட்டுக் கதைகளும் வழங்கி வந்திருக்கின்றன. அரசகுமாரிகள் தங்கள் அரண்மனையிலிருந்து ஆலயங்களுக்குப் போவதற்காகச் சுரங்கவழிகள் ஏற்பட்டிருக்குமாம். அந்த வழியாகப் பிறர் காணமல் அரசகுமாரிகள் ஆலயங்களுக்குச் சென்று வருவதுண்டாம். கோட்டைகளில் இருந்துங்கூட வெளிப் பிரதேசங்களுக்குச் செல்ல இரகசியமான சுரங்கவழிகள் இருந்தன. ஒரு கோட்டையைப் பகையரசன் முற்றுகை போட்ட

காலத்தில் வெளியில் சென்று ஆகாராதிகளைக் கோட்டைக்குள் கொண்டு வருவதற்கு இவ்விதமான அந்தரங்கச் சுரங்கவழிகள் பயன்படுத்தப் பட்டனவாம். சில ஆலயங்களைப் பற்றிச் சுரங்க வழிகள் இருந்தனவெனக் கர்ண பரம்பரைக் கதைகளும் உண்டு. ஆனல் முக்கியமாக அரசியல் சம்பந்தமாகத்தான் சுரங்க வழிகள் முன் காலத்தில் பயன்படுத்தப்பட்டன. பாண்டவர்களை அழிப்பதற்காகச் சகுனியின் பேச்சைக் கேட்டுத் துரியோதனன் அரக்கு மாளிகை கட்டின கதையை நாம் அறிவோம். அந்த மாளிகை கட்டியவன் நிலத்தின் கீழ் ஒரு சுரங்க வழி ஏற்படுத்தி இருந்ததனல் பீமசேனன் தன் மற்றைச் சகோதரர்களையும் தன் தாய் குந்திதேவியையும் எடுத்துக் கொண்டு சுரங்கத்தின் வழியே சென்று நெருப்புக்கு இரையாகாமல் தப்பினன்.

மேலும் மத்திய காலங்களில் நமது நாட்டில் நடந்த போர்களில் சுரங்க வழிகள் ஏற்படுத்தி அவைகளின் மூலமாகப் போர்வீரர்களும் தூதர்களும் வெளியேறினதை அறிவோம். சிந்தாமணியிலும் இவ்விதக் கதை ஒன்று இருக்கிறது. தவிர, கோட்டைகளை இடிப்பதற்குச் சுரங்கங்களை வைத்து அவைகளில் வெடிமருந்தைக் கெட்டித்துக் கோட்டையைத் தகர்ப்பதும் உண்டு. இந்தச் சாகசச் செயல் இந்தியாவில் மாத்திரமன்றி மேற்கு நாடுகளிலும் கையாளப் பட்டது. இங்கிலாந்து நாட்டில் இராஜீய சபை (Parliament)யைத் தகர்த்தெறியச் சுரங்க வெடி வைத்ததும், பின்னல் வெடி வைத்தவர்கள் பிடிபட்டுத் தண்டனை அடைந்ததும் சரித்திரத்தில் படித்திருக்கின்ருேம். சமீபத்தில் ஜெர்மனியில் ராஜாங்க சபைக் கட்டடத்தைத் தகர்க்கச் சுரங்கம் வைத்ததாக ஒரு விசாரணை நடந்ததையும் படித்திருக்கின்ருேம். ஆகவே, நிலச்சுரங்கங்கள் பல செயல்களுக்கும் பயன்படுத்தப்பட்டன எனலாம்.

முற்காலங்களில் இயற்கை வசதிகளை அநுசரித்து அரண்களைக் கட்டினர்கள். உதாரணமாக ஆறுகளுக்கு இடையில், மலைகளின் மேல் கோட்டை கொத்தளங்களைக் கட்டுவார்கள். எதிரிகளை உள்ளே வராமல் தடுப்பதற்காகவே இவ்விதமாக இயற்கை அரண்களைக் கட்டினர்கள். தற்காலத்திலோ அவ்வரண்கள் எரிகுண்டுகளின் முன் நிற்கமாட்டா. ஆகவே, நிலத்தின் கீழ்ப் பிறர் பாராத வண்ணம் அரண்களைக் கட்டத் தொடங்கியுள்ளார்கள். தற்போது நடக்கும் போரின் தொடக்கத்தில் ஜெர்மானியர் சீட்ஜ்பிரீட் அரண்களையும், பிரெஞ்சு நாட்டார் மேகினட் அரண்களையும் கட்டி வைத்த செய்திகள் ஞாபகத்துக்கு வரலாம். இவைகளும் இந்தக் காலத்தில் பயன் படுவதில்லை. முற்காலத்தில் போர் என்ருல் போர்வீரர்களுள் தான் நடக்கும். ஜனக்கூட்டம் இல்லா இடங்களிலும் கோட்டை கொத்தளங்களிலுமே போர் நிகழும். ஆனல் இந்தக் காலமோ வெடிகுண்டுகளும் எரிகுண்டுகளும் கையாளும் காலம். கோட்டை கொத்தளங்கள் மாத்திரம் யுத்தரங்கங்கள் அல்ல. பாதுகாவல் இல்லா ஊர்களும் பெரிய நகரங்களும் போர்க்களங்கள் ஆகிவிடுகின்றன. வாளும் துப்பாக்கியும் பிடித்தறியாத மக்களும், கிழவிகள்

குழந்தைகளோடு வெடிகுண்டுக்குப் பயந்து ஓடவேண்டியிருக்கின்றது. ஓடியும் பயன் என்ன? குண்டு படாதவண்ணம் நிலத்தின் கீழ்ச் சுரங்கங்களைத் தோண்டி அங்கே ஒளிந்துகொள்ள வேண்டியது அவசியமாகிவிட்டது. ஆகவே, நில அறைகளின் அவசியம் மீண்டும் ஏற்பட்டு விட்டது.

மேலும் நிலத்தின் கீழ்க் கட்டடங்கள் வேறு சிலவும் உண்டு. நாட்டுப் புறங்களில் சோளம் முதலிய தானியங்களைச் சேமித்து வைப்பதற்காகக் குழிகள் தோண்டி வைப்பது உண்டு. அவைகளில் பூச்சி புழு விழாதபடி குழியின் வாயை மூடி விடுவார்கள். சோளக் குழிகளில் தானியம் நிரப்பிவைத்தால் எளிதில் கெட்டுப்போகாது; திருட்டும் ஏற்படாது.

சில ஆலயங்களில் தீர்த்தக் கிணறுகளுக்குமேல் சிங்கத்தைப் போன்ற உருவம் வைத்திருப்பது உண்டு. அந்தத் தீர்த்தங்களுக்குச் சிங்க தீர்த்தம் என்று பெயர். அந்த உருவத்திற்குக் கீழ்ச் சுரங்கம் போன்ற படிகள் இருக்கும். அவைகளின் வழியாக இறங்கித் தீர்த்தம் எடுப்பது உண்டு. இவ்விதமான சுரங்க வழிக் கிணறுகள் பழைய காலத்து அரண்மனைகளில் இருந்தன. ஹம்பி என்ற விஜய நகரத் தலைநகரில் இப்படிப்பட்ட கிணறுகளை இன்றும் பார்க்கலாம்.

நிலத்தின் கீழ் இடுகுழிகளும் கல்லறைகளும் இறந்தவர்களை அடக்கம் செய்வதற்காக உபயோகப்படுத்தப்பட்டன. பல நாடுகளிலும் பலவிதமான சமாதிக் குகைகள் உண்டு. பழைய காலத்து எகிப்தியர் முதலானோர், பாறைகளில் குகைகளைக் குடைந்தார்கள். தாழிகளை வனைந்து அவைகளில் சவங்களை வைத்துப் புதைத்தார்கள். அவைகளுக்கு முதுமக்கட்டாழி என்று பெயர். நிலத்தின் கீழ்ப் பலகைக் கற்களை அறைகள் போல் நிறுத்தி அவைகளில் சவங்களை வைத்ததும் உண்டு. அவைகளை பாண்டவர் குழிகள் என்ற பெயரால் வழங்குகிறார்கள். சில இடங்களில் மண்டபங்களாகவும் கட்டிவைத்திருக்கிறார்கள். அவைகளில் இறந்தவருடைய உடலுடன் அவர்களுடைய அருமையான பொருள்களையும் வைத்து மூடியிருப்பார்கள். கோவை ஜில்லாவில் ஓராட்டுக்குப்பைக்கு அருகில் இவ்வித மண்டபம் ஒன்று சமீபத்தில் கண்டெடுக்கப்பட்டது. அந்த மண்டபம் இருந்த காட்டிற்கு மண்டபக் காடு என்ற பெயர் வழங்கி வந்திருக்கின்றது. அதில் பல எலும்புத்துண்டுகளும் அழகிய பாத்திரங்களும் கிடைத்தன. இவை வெகு புராதனமானவை என ஊகிக்கப்படுகின்றன. ஆகவே நிலத்தின் கீழ்க் கட்டப்பட்ட வசதிகள் பலவகையான நோக்கங்களுடன் உண்டாக்கப்பட்டவை எனவும், பற்பல காலங்களில் பல விதங்களாக ஆக்கப்பட்டன எனவும் அறியலாம். ★

— ஜனவரி, 1942.




ஸி. ராமஸ்வாமி

பொய்கைக் கரையினிலே - ஒரு
பூங்கொடி போல நின்ருள்.

அக்டோபர், 1954

காஞ்சி சிவராமமூர்த்தி

# லேபாட்சி ஆலயத்திலுள்ள விஜயநகர ஓவியங்கள்

பல்லவர்களின் காலத்திலிருந்து தென்னிந்தியாவில் ஓவியக் கலையின் தொடர்ச்சி விட்டுப் போகாமலிருந்ததென்று இப்பொழுது நன்கு தெரிகிறது. இப்பொழுது தென்னிந்தியாவில் கடைசியாக இருந்த பெரிய ஹிந்து ராஜ்யமான விஜயநகரத்தின் ஓவியங்களைப்பற்றி எழுத உத்தேசித்திருக்கிறேன்.

அனந்தப்பூர் ஜில்லாவில், ஹிந்துபூர் தாலுகாவில், தற்பொழுது மிகச் சிறியதாயும் பாழடைந்ததாயும் உள்ளது 'லேபாட்சி' என்னும் கிராமம். விஜயநகர ராஜ்யம் செழித்தோங்கி விளங்கின காலத்தில் இந்த லேபாட்சி வர்த்தகர்களும், க்ஷேத்திர யாத்திரிகர்களும் கூடும் பெரிய நகரமாக இருந்தது. ராஜாங்கப் பிரதிநிதிகளாக இருந்த விரு பண்ண நாயக், வீரண்ண நாயக் என்ற இரு சகோதரர்கள் இவ்வூரைப் பிரபலப்படுத்தினார்கள்.

இங்குள்ள 'கூர்ம சைலம்' என்ற சிறு குன்றின் மேல், சாட்சாத் அகஸ்த்ய மகரிஷியினாலேயே ஸ்தாபிக்கப்பட்டதாகச் சொல்லப்படும் பாபநாசேசுவரருடைய ஆலயம் ஒன்று இருக்கிறது. பாபநாசேசுவரர் இருந்த சிறு இடத்தைப் பெரிய கோயிலாகக் கட்டியவர் மேற்சொன்ன விருபண்ணாவே. இக் கோயில் இப்பொழுது சீர்குலைந்திருக்கிறது. இவ்வாலயத்தின் மதில்களில் அச்சுதராய மகாராஜாவின் காலத்தைச் சேர்ந்த சில சாசனங்கள் காணப்படுகின்றன. இவற்றிலிருந்து கோயிலின் வரலாறும் கோயிலை எழுப்பிய சகோதரர்களின் வரலாறும் தெரிய வருகின்றன. இச் சாசனங்களில் இவ்வாலயத்திலுள்ள மூன்று சந்நிதிகளும் குறிக்கப்பட்டிருக்கின்றன. சிவன், வீரபத்திர மூர்த்தி, விஷ்ணு, இம் மூவரின் சந்நிதிகள் இங்கு முக்கோணமாய் அமைந்திருக்கின்றன. இம் மூன்றுக்கும் பொதுவாக ஒரு மண்டபம் இருக்கிறது. இம் மண்டபத்தின் கூரையின் உட்புறத்தில், மிகப் பெரியதான வீரபத்திர மூர்த்தியின் சித்திரமொன்றும், அதனருகில் பக்தனான விருபண்ணனுடைய சித்திரமொன்றும் வரையப்பட்டிருக்கின்றன.

இக் கோயிலில் மிகவும் அழகான பாகம் இம் மண்டபமே. இதில் மேலே உள்ள சித்திரங்களைத் தவிர, சிற்ப வேலை நிறைந்த பெருந் தூண்கள் அறுபதுக்குமேல் உள. மத்திய பாகத்திலுள்ள தூண்களில் புருஷப் பிரமாணத்திலுள்ள காயக வாதக நர்த்தகர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கு வெளியிலுள்ள தூண்களில் இவ் வுருவங்களைவிடச் சிறியனவான உருவங்கள் காணப்படுகின்றன. முன் காலத்தில் கூரையின் உட்புறம் முழுவதுமே அடர்த்தியாய் ஓவியங்களால் நிரப்பப்பட்டிருந்தது. இப்பொழுது அவை அவ்வளவாய்க் காணப்படவில்லை.

மகாபாரத, ராமாயண, புராண சம்பவங்களின் ஓவியங்கள் பல இன்னும் அழிந்து போகாமலிருக்கின்றன. பெரும்பாலும் இவ்வோவியங்கள் குணத்தில் அதிக மேன்மையற்றவையாயிருந்தாலும், இவற்றுள் சிலவற்றின் ரேகையும் வர்ணமும் மெச்சத்தக்க வேலைப்பாடுடையனவாக இருக்கின்றன.

உண்மையில் இந்த மண்டபம் இக் கோயிலின் நாட்டிய மண்டபம். இங்கே காணப்படும் சிலைகளில் இருப்பவர் மத்தளம் அடிக்கும் பிரம்மதேவன், வீணையுடனுள்ள தும்புரு, ஹுடுக்கா வாத்தியத்துடன் நந்திகேசுவரன், ஒரு தாளதாரி, ஓர் அப்ஸரஸ், கடைசியாய் அழகான ஆனந்த தாண்டவ கரணத்தினால் அமைந்த சிவன். இம் மண்டபத்தை அடுத்துள்ள உள் மண்டபத்தில் கஜாந்தக மூர்த்தி, தாண்டவ கணபதி, துர்க்கை, ஒரு பெண், ஓர் ஆடவன் ஆகிய இவ்வுருவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஆலயத்தின் தென்மேற்கிலுள்ள சோமவார மண்டபத்தின் முகப்பிலும் சில ஓவியங்கள் இருந்ததாகவும், பிற்காலத்தில் அவை மறைந்து போனதாகவும் தெரிகிறது.

மேற் சொன்ன மூன்று சந்நிதிகளின் கர்ப்பக் கிருகங்களிலும் ஓவியங்கள் காணப்படுகின்றன. விஷ்ணுவின் கர்ப்பக் கிருகத்தில் தசாவதாரங்களும் வரையப்பட்டிருக்கின்றன. முன்னே சொன்ன நடு மண்டபத்திலுள்ள சித்திரங்களைக் காட்டிலும், அர்த்த மண்டபத்திலுள்ளவை மேலானவையாகக் காணப்படுகின்றன. நாட்டிய மண்டபத்தில், பார்வதி பரிணயம், தட்சிணாமூர்த்தி, ஆலிலையில் படுத்திருக்கும் கிருஷ்ணன், இம் மூன்றும் நன்றாயிருக்கின்றன. அர்ஜுனன் தவஞ் செய்து பாசுபதாஸ்திரம் பெறும் கதை பல ஓவியங்களில் அழகாய் எழுதப்பட்டிருக்கிறது. பார்வதி கல்யாண ஓவிய வரிசையில், பார்வதியை அலங்காரம் செய்யும் சித்திரமும், பார்வதியும் பரமசிவனும் சதுரங்கம் ஆடுவதும் கவனிக்கத் தக்கவை. இச் சித்திர வரிசைகளிலுள்ள ஓர் ஆச்சரியம் என்னவென்றால், தெற்கே திருவாரூர் சம்பந்தமான - பசுங்கன்றின்மேல் தேரோடிய - கதை இங்கு ஓவியங்களில் காட்டப்பட்டிருக்கிறது. இக் கதையும், பாசுபதாஸ்திரக் கதையும் பெனுகொண்டாவிலுள்ள சிவாலயத்திலும் காணப்படுகின்றன. இச் சித்திரங்களுக்கு இடையில் வீரபத்திரமூர்த்தியின் அருகில், அவருடைய பிரசாதத்தை வாங்கிக்கொள்வதுபோல் எழுதப்பட்டிருக்கும் வீரண்ண விருபண்ணர்களின் சித்திரங்கள் சரித்திர ஆராய்ச்சியாளருக்கு முக்கியமானவை.

அர்த்தமண்டப ஓவியங்களில்தான் விஜயநகர ஓவியம் என்ற ஒரு விசேஷத்தை நாம் காண முடிகிறது. சிலவற்றை நான் எழுதிக்கொண்டு வந்திருக்கிறேன். இவற்றில் அழகான லிங்கோத்பவ மூர்த்தியின் சித்திரமொன்று இருக்கிறது. வேறோர், அழகிய சித்திரம் அந்தகாஸுர ஸம்ஹார மூர்த்தியினது. மற்றோர் ஓவியம் தட்சிணாமூர்த்தியினது. நான்காவது சண்டேசானுக்ரஹ மூர்த்தி. கீழிருந்து ஒரு சிவகணம் சங்கு ஊத, பகவான் சண்டேசுவரருக்குப் பரசுதானம் செய்கிறார். சங்கூதும் கணத்தின் சித்திரம் ஆச்சரியமாயிருக்கிறது. ஐந்தாவது பிட்சாடன மூர்த்தி. பகவானின் உருவத்தில் அமைதியும் காம்பீரியமும் தோன்றும்படியாகவும், ரிஷி பத்தினிகளின் உருவங்களில் அவர்கள் மனத்தில் ஏற்பட்ட கிளர்ச்சி நன்கு தோன்றும்படியாகவும் இவ் வரிசை எழுதப்பட்டிருக்கிறது. இதற்கு அடுத்தவை ஹரிஹர மூர்த்தியும், கல்யாண சுந்தரரும். பிறகு திரிபுராந்தக மூர்த்தி.

இவையெல்லாவற்றையும்விட ஸுகுமாரமாய் எழுதப்பட்டுள்ள ஓவியம் கௌரீப்ரஸாதன மூர்த்தியினது. இதன் பாவமே மிக்க ஸுகுமாரமானது. அதை மிகப் பொருத்தமுடைய வழியில் சிற்பி எழுதியிருக்

கிறான். மிகப் பெரிய சித்திரகாரனின் கைத்திறன் இதில் நன்கு விளங்குகிறது. ரேகையின் நுண்மையும் பாவம் நிரம்பிய தன்மையும் ஆகிய இவை இரண்டையும் இங்கு அநுபவிக்கலாம். திரிபங்க நிலையில் இருக்கிறார் சிவன்; பார்வதியுள்ளது ஸமபங்க நிலை. கங்கை என்ற மற்றொருத்தியைத் தலையில் வைத்துக்கொண்டதற்காகத் தன்னிடம் கோபித்துக்கொண்டிருக்கும் பார்வதியைச் சிவன் நல்ல வார்த்தை சொல்லி, அவள் கோபத்தை நீக்க முயலுகிறார்.

இதற்கு அப்பாலுள்ளவை: ஆனந்த தாண்டவம் செய்யும் சிவன்; விருஷபாரூட மூர்த்தி; சந்திரசேகர மூர்த்தி; பார்வதி. முசுகுந்த சக்கரவர்த்தியின் உருவமொன்றும் இங்கு இருப்பது, மேற் சொன்ன பசுங்கன்றின்மேல் தேரூர்ந்த கதையின் சித்திரங்களுக்குப் பொருத்தமாய்த் தோன்றுகிறது. இதனருகில் அழிந்துபோன சில உருவங்கள் காணப்படுகின்றன.

விஜயநகர ராஜ்ய காலத்தில் ஓவியம் நன்கு ஆதரிக்கப்பட்டு வந்ததும், அக் காலச் சித்திரகாரர்களில் சிலர் மிக்க சமர்த்தர்களாய் இருந்ததும், இச் சித்திரங்களிலிருந்து சொல்லாமலே விளங்கும். ரூபம், அங்க விந்யாஸம், ரேகை, வர்ணம், பாவம், பல உருவங்களை அழகு தெரிந்து ஓர் ஓவியத்தில் சேர்த்தமைப்பது, ஆபரணாலங்கார வேலைப்பாடு ஆகிய இக் குணங்கள் குறைவில்லாமல் விஜயநகர ஓவியங்களில் புலப்படுகின்றன. முக்கியமாய், இங்குக் காணப்படும் அன்னப் பறவைகளின் அழகு இவ் விஜயநகர சித்திரகாரர்களின் அசாதாரணத் திறமைக்கு நிதரிசனம் என்று நிச்சயமாய்ச் சொல்லலாம். ★

—ஜனவரி, 1937.

க. அ. நீலகண்ட சாஸ்திரி

# சில இராமாயணச் சிற்பங்கள்

இராவணன் குபேரனை ஜயித்து அவனுடைய புஷ்பக விமானத்தை அபகரித்து மிக்க கர்வத்துடனே ஸ்கந்த வனத்தின் உள்ளே பிரவேசிக்கப் பார்த்தான். அப்போது அவனுடைய விமானம் உள்ளே செல்லாமல் திடீரென்று நின்றுவிட்டது; அது சிவனது கட்டளை. இதை அறியாத இராவணன் பலவாறு யோசித்தான்; அப்போது நந்தி அவனருகிற் சென்று, ''இது சிவனுடைய உத்யானம்; இம் மலையின்மீது சங்கரன் விளையாடிக்கொண் டிருக்கும் வேளை; யாராலும் இச்சமயம் உள்ளே போக முடியாதபடி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நீ பேசாமல் திரும்பிப் போகாவிட்டால் நாசமடைவாய்'' என்று கூறினன். இராவணன் வெகு கோபத்துடனே விமானத்தினின்றும் இறங்கி, ''இந்தச் சங்கரன் என்பவன் யார்? இவன் ஏன் இம் மலையில் இருக்கவேண்டும்? நீ யார் ஒரு குரங்கு முகத்தான் என்னைத் தடுப்பதற்கு?'' என்று பலவாறாகப் பேசினன். சங்கரனை அவமதித்த இராவணன் மீது நந்தி வெகு கோபங் கொண்டு, ''என்னை நீ குரங்கு முகத்தான் என்று அவமதித்துப் பேசியதனல் குரங்குகளே உற்பத்தியாகி உன் குடியை வேரோடு கெடுக்கும்'' என்று சபித்து மறுபடியும், ''நானே இதோ உன்னைக் கொல்ல முடியும்; ஆயினும் நான் அப்படிச் செய்ய வேண்டியதில்லை; உன் செய்கைகளாலே நீ முன்னமே கொலையுண்டவன்'' என்று கூறி விடுத்தான். அப்போது தேவர்களது வாத்தியங்கள் முழங்கின; பூ மழை பொழிந்தது.

ஆயினும் இராவணன் நந்தி சொன்ன வார்த்தைகளின் கருத்தை உணராமலே, ''ஏ விடையூர்தீ! உனக்காகவா என் விமானம் போக்கற்றுத் தடுமாறலாயிற்று? நான் இம் மலையை வேரறப் பிடுங்குகிறேன். என்ன தைரியங்கொண்டு சிவன் எப்போதும் ஒரு பேரரசன் போல் உல்லாசமாகக் காலங் கழிக்க எண்ணுகிறன்? தனக்கு வந்திருக்கும் ஆபத்தை அறியவில்லை போலும்'' என்று ஆரவாரித்துக்கொண்டு, தன் கைகளால் மலையைத் தூக்க ஆரம்பித்தான். மலையும் அசைந்தது; தேவ கணங்கள்கூட அசைந்தார்கள்; பார்வதியும் அம் மலையின் அசைவைக் கண்டு பயந்து மகேசுவரன் அருகணைந்தாள். அச் சமயம் சகல தேவர்களுக்கும் முதன்மையான தேவன் தன் கால் கட்டைவிரலினல் மலையை இலேசாக அமுத்த, மலையின் அடியில் அகப்பட்டு வருந்தின இராவணனுடைய கைகள். அவ்வரக்கனுடைய மந்திரிகள் வெகு ஆச்சரியமடைந்தார்கள். கோபத்தாலும் கைகளின் வலி தாங்காத் துயரத்தாலும் இராவணன் போட்ட கூப்பாடு மூவுலகங்களையும் நிரப்பியது. மலைகள் நடுங்கின; கடல்களில் அலையெழுந்தது; பூமி முழுவதும் நடுங்கிற்று. அப்போது இம்மாதிரி அலறிக்கொண் டிருக்கிற இராவணனிடம் அவன் மந்திரிகள், ''நீர் எவ்விதத்திலும் உமையொரு பாகரை வணங்கி அவருடைய கருணைக்கு ஆளாக வேண்டியதைத் தவிர வேறு ஓர் உபாயமு

மில்லை, இந்த ஆபத்தினின்று வெளியேறுவதற்கு'' என்று சொன்னார்கள். இராவணனும் அதற்கிணங்கிப் பற்பல் சாம கானங்களினால் மகா தேவனை வணங்க ஆரம்பித்தான். ஆயிரம் ஆண்டுகள் கழிந்தன. சிவனும் மனமுவந்து இராவணனை விடுவித்து, அவனுடைய கூச்சலானது மூவுலகையும் கலக்கியதனாலேயே அவனை இராவணன் (கூச்சல் போடுகிறவன், கூச்சல் போடும்படி செய்கிறவன் என்று இரண்டு பொருள் பெற்ற ஒரு பெயர்) என்றே யாரும் அழைப்பார்களென்று அநுக்கிரகம் பண்ணிப் பின்னும் சில வரங்களையும் கொடுத்து, சந்திரஹாஸம என்னும் வாளையும் உதவினான். இராவணனும் சிவனைத் தலைகளால் வணங்கித் திரும்பத் தன் புஷ்பகத்திலேயே மீண்டான்.

இந்தச் சரித்திரம் வால்மீகி ராமாயணம் உத்தரகாண்டம் 16-ஆவது ஸர்க்கத்தில் உள்ளது. இந்தக் கதையில் மிகவும் சாரமான பாகமாகிய இராவணன் கைலாச மலையைத் தூக்கினது, நம் நாட்டுச் சிற்பிகளால் வெகு ஊக்கத்துடன் கையாளப்பட்டு வந்த புராணக் கதைகளில் ஒன்று. இந்தக் கதையைக் காட்டுகின்ற மூன்று சிற்பங்களைச் சற்றுக் கவனித்துப் பார்ப்போம்.

இவைகளில் முதலாவது, நிஜாம் ராஜ்யத்தின் வடமேற்குக் கோடியில் இருக்கும் எல்லோரா என்னும் ஏலாபுரத்திலுள்ள கைலாசநாதர் கோயிலின் தென் பாரிசச் சுவரில் செதுக்கப் பெற்றிருக்கிறது. இக் கோயிலே ஒரு பெரு விசித்திரமான வேலை; அதற்குமேல் ஆச்சரியத்தை உண்டுபண்ணக் கூடியது இந்தச் சிற்பம்.

இந்தக் கோயில் ஒரு பெரிய மலைச்சாரலில் ஒரே பாறையினின்றும் குடையப்பட்ட ஒரு பெருங் கோயில். இதைக் கட்டினவன் பழைய மகாராஷ்டிர அரசனான முதலாம் கிருஷ்ணன் என்பவன். இவன் காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பாதி. இவன் இக் கோயிலைக் கட்ட ஆரம்பித்தபோது, காஞ்சீபுரத்துக் கைலாசநாதர் கோயிலை மாதிரியாக வைத்துக்கொண்டு தன் நாட்டிலும் அதே விதமான ஒரு சிற்ப ரத்தினத்தை அமைக்க வேண்டுமென்றே ஆரம்பித்தான். இக் கோயிலின் அழகு பழைய சாசனங்களில் இரண்டு சுலோகங்களால் அடியிற் கண்டவாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதாவது: ''ஆகாயத்தில் உலாவும் தேவர்கள் அதைப் பார்த்து இது ஓர் இயற்கையமைப்பாகவே இருக்கவேண்டும்; செயற்கையமைப்பில் இவ்வளவு அழகை நாம் எங்கும் கண்டதில்லை என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொள்கிறார்கள். இக் கோயிலைக் கட்டி முடித்த (அல்லது குடைந்து முடித்த) சிற்பியும், இதேமாதிரி வேறொரு கோயிலைச் செய்ய ஆரம்பித்தபோது அவனுக்கு ஒன்றும் ஓடவில்லை; அப்போது அவன் இக் கோயிலை மறுமுறை பார்த்து, 'நானா இதை அமைத்தவன்!' என்று திகைத்தான்.''

மற்றொரு சிற்பம் இராவணனுடைய முரட்டுப் பிரயத்தனத்தைக் காட்டுகிறது. இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய அம்சங்கள் இராவணன் தன் பலம் முழுவதையும் உபயோகித்து மலையைப் பிடுங்கித் தூக்குகிற கருத்து வெளிவரும்படி இராவணனுடைய அங்கங்களின் நிலையை வெகு நேர்த்தியாய்ச் சிற்பி அமைத்திருப்பதும், இவன் பரபரப்புக்கு நேர் விரோதமாக மேலே சிவன் சாந்த மூர்த்தியாக அமர்ந்திருப்பதும், பயந்து பார்வதி அருகணுகியிருப்பதும், அவள் இம்மாதிரி பயந்து வந்தவுடனே சிவன் வெகு இலேசாகத் தனது இடக்காலைக் கீழே ஊன்றி மலையை அசையாமல் நிறுத்திவிடுகிறதுமே. இன்னும் உற்றுப் பார்த்தால் மற்ற விசேஷங்களும் புலப்படும்; மேலே இராமாயணத்திலிருந்து எடுத்து எழுதப்பட்ட கதையின் சாரத்தை நன்கு உணர்ந்தவன் சிற்பி என்பது வெளியாகும். எல்லோராவிலேயே வேறு குகைக் கோயில்களில் இரண்டு சிற்பங்கள் இதே கதையைச் சார்ந்தன உண்டு. ஆனால் அவை அவ்வளவு நேர்த்தியாக இல்லை.

இராமாயணக் கதைகள் இந்தியாவில் எல்லா இடங்களிலும் எல்லோராலும் கொண்டாடப் படுவதும் எல்லாப் பாஷைகளிலும் முதன்மை பெற்ற கவிகளால் பாடப்பட்டிருப்பதும் யாவரும் அறிவார்கள். ஆனால் அவை கப்பலேறிச் சென்றும் மலைகளைக் கடந்தும் பிற தீவுகளிலும் நாடுகளிலும் சஞ்சாரம் செய்ததைப் பலர் அறிய மாட்டார்கள். இருந்தும் நம் நாட்டில் இராமாயணமும் பாரதமும் எவ்வளவு மேன்மை பெற்றிருக்கின்றனவோ அதைக் காட்டிலும் கொஞ்சம் அதிகமென்றே கூறலாம், அவைகளுக்கு ஒரு காலத்தில் ஸுமாத்ரா ஜாவா முதலிய தீவுகளிலும் மலேயா சியாம் இண்டோசைனா முதலிய நாடுகளிலும் இருந்த பிரசாரம். இப்போதுகூட அநேக விதமான கூத்துக்களும் ஆட்டங்களும் அந்நாடுகளில் இராம நாடகங்களாகவும் பாரதக் கதைகளைச் சார்ந்தனவாகவும் இருப்பதைப் பல அறிஞர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள். நம் ஆலயங்களைப் போலவே அங்கேயும் முற்காலத்தில் கோயில்கள் இருந்தன; நம் கோயில்களில் புராணம் வாசிப்பதுபோலவே அங்கேயும் புராணங்கள் வாசிக்கப் பெற்றன என்று சாசனங்கள் கூறும். இவ் விஷயங்களை யெல்லாம் இங்கு விரித்துரைக்க முடியாது. ஆயினும் நம் கோயில்களிற் போலவே அவ்வூர்க் கோயில்களிலும் சிற்பங்கள் இருந்தன என்பதைக் குறிக்க, இராவணன் கைலாசத்தைத் தூக்கின கதையையே காட்டுகிற இரண்டு சிற்பங்களை மட்டும் குறிப்பிடலாம்.

இவைகளில் முதலாவது இப்போது கம்போடியா என்ற தேசத்திலுள்ள அங்கோர்வாட் என்னும் பழைய ராஜதானியிலுள்ள கோயிலில் உள்ளது. அங்கோர்வாட் என்னும் பெயர் 'நகரவாடம்' என்னும் வடமொழிச் சொல்லின் சிதைவு. ராஜதானிப் பட்டணம் என்பது அதன் பொருள். இந்தச் சிற்பத்தின் காலம் சுமார் கி. பி. 10-ஆம் நூற்றாண்டுக்கும் 12-ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டதாக இருக்க வேண்டுமென்று கருதப்படுகிறது. இந்தச் சிற்பத்திலுள்ள முகங்களைக் கவனித்தால் அந்த ஊர் ஜனங்களின் முகச் சாயையும் அவர்கள் நோக்கப்படியுள்ள அழகின் அமைப்பும் இன்னவென்பதை அறியலாம். சிற்பம் கொஞ்சம் அழிந்துவிட்டதால் சிவனுக்கு வலப்புறம் உட்கார்ந்திருக்கும் பார்வதியின் முகம் நன்றாகப் புலப்படவில்லை. பார்வதி இருக்கும் இடத்தையும் நோக்கிச் சிவன் உட்கார்ந்திருக்கிற மாதிரியையும் பார்த்தால், அதாவது சிவன் ஒரு காலைத் தொங்கவிட்டு மலையை அழுத்தாததைப் பார்த்தால் இராவணனுடைய முயற்சி ஆரம்ப தசையிலே இருப்பதாக எண்ண வேண்டியிருக்கிறது. அல்லது மலையைச் சிவன் அழுத்தி நிறுத்திவிட்ட பிறகு எல்லோரும் பயம் தெளிந்து இராவணன் மட்டும் அலறிக்கொண்டிருக்கும் அவசரமென்றும் கருதலாம். இராவணனுடைய தலைகள் ஒரு கோபுரம் போல் அடுக்கப்பட்டிருப்பதும் அவன் கைகளின் வரிசைகள் காட்டப்பட்டிருக்கும் மாதிரியும் கவனிக்கத் தக்க விஷயங்கள்.

மற்றொரு சிற்பமும் அதே நாட்டில் அங்கோர்வாட் என்னும் மற்றொரு இடத்திற்குச் சமீபத்திலேயே இருக்கும் ஈசுவரபுரக் கோயிலில் உள்ளது. இது வெகு நேர்த்தியான வேலை என்பதை யாவரும் இதைப் பார்த்த மாத்திரத்திலேயே எளிதில் அறிந்துகொள்ளலாம். ★

—நவம்பர், 1933.

தொ. மு. பாஸ்கரத்தொண்டமான்

# எண்ணுயிரம்

நாம் வசிக்கும் இந்த மண்ணிற்குத்தான், இந்தப் பூமிக்குத்தான், எத்தனை சக்தி! கரடு முரடாய்ப் பரந்து கிடக்கும் ஓர் இடத்தைக் கொஞ்சம் கீறி, அதனுள்ளே சில விதைகளைப் போட்டுவிடுகிறோம். அன்று கொஞ்சம் மழையும் பெய்கிறது. இரண்டு மூன்று தினங்களில் அந்த இடத்திலிருந்து எத்தனையோ அபூர்வமான சிருஷ்டிகள் தோன்ற ஆரம்பித்துவிடுகின்றன. உண்ண உணவளிக்கும் கதிரை நீட்டிக்கொண்டு நெற்பயிர் வந்துவிடுகிறது. உடுக்க உடையுதவும் பஞ்சைச் சிதறிக் கொண்டு பருத்திச் செடி வளர்கிறது, காய்க்கிறது, வெடிக்கிறது.. இன்னும் விதவிதமான வர்ண ஜாலங்களைக் காட்டிக்கொண்டு மலர்களும் மலர ஆரம்பித்து விடுகின்றன; நறுமணத்தை அள்ளியே வீசுகின்றன. இத்தனை அபூர்வப் பொருள்களையும் தன்னுள்ளே தானே அடக்கி வைத்துக்கொண் டிருக்கிறது, இந்த மண். அதனாலேதான் இந்த மண்ணைப் பூமிதேவி என்று நம் முன்னோர்கள் போற்றி வந்திருக்கிறார்கள், வந்தித்து வணங்கியும் வந்திருக்கிறார்கள்.

சீதையின் அவதார தத்துவத்தை விளக்க விரும்பிய கம்பர்கூட இந்த உண்மையை நன்றாக உணர்ந்திருக்கிறார். பூமிதேவி என்னும் தெய்வம் தன்னை உழுது வழிபடுபவர்களுக்கு அருள் வடிவமாய்த் தரிசனம் கொடுக்கிறாள். அவளது அழகான மேனியிலிருந்து நெற்கதிராகிய பச்சைப் பசுங்கதிர்கள் வெளிவந்து பிரகாசிக்கின்றன. ஆனால் அவள் சுய உருவை நம்மால் எல்லாம் காணவா முடிகிறது? பூமிக்குள் ஒளித்து வைத்திருந்த சுய ரூபத்தை வெளிப்படுத்தியது போலவே, உழுகின்ற கொழுமுகத்தில் உதிக்கின்றாள் சீதை என்றெல்லாம் கூறுகின்றார்.

உழுகின்ற கொழுமுகத்தில் உதிக்கின்ற கதிரின்ஒளி
பொழிகின்ற புவிமடந்தை உருவெளிப்பட் டெனப்புணரி
எழுகின்ற தெள்ளமுதோடு எழுந்தவளும் இழிந்தொதுங்கித்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்

என்பதுதானே கம்பரது பாட்டு?

சரி. பூமிதேவியின் அருள் உரு இன்னதென அறிந்துகொண்டோம். ஆனால் இந்தப் பூமிதேவியை அழித்துவிட, சிதைத்துவிடச் செய்யும் அதிக்கிரமமும் நாட்டில் நடக்கத்தானே செய்கிறது? ஒரு கதிர் உதிக்கின்ற இடத்திலே இரண்டு கதிரைத் தோன்றச் செய்கின்றவன் உலக வளர்ச்சிக்கே துணைபுரிகின்றான் என்பர் பெரியோர். இதைத் தெரிந்தும் நாமே அணுக்குண்டாலும் அதிக்கிரமத்தாலும் அவள் உருவையே சிதைக்க முற்படுகிறோம். இன்று நாம் முயலுகிறோம் என்றால், அன்றும் ஓர் அரக்கன் இதே முயற்சியில் ஈடுபட்டிருக்கிறான். பூமிதேவியையே சுருட்டி எடுத்

துக் கடலுள் மூழ்க அடித்துவிட முயன்றிருக்கிறான். அன்றும் வந்தான் பூமகளைக் காக்க ஒருவன்—ஓர் உழவன். எல்லா உலகங்களையும் காத்தளிக்கும் அந்தப் பரந்தாமனே பன்றி உருவில் தோன்றிக் கடலுள் பாய்ந்து, அரக்கனைக் கொன்று பூமிதேவியை மீட்டுக் கொண்டு வருகின்றான். இப்படி வந்தவனையே வராகமூர்த்தி என்கிறோம்; அவனை வாழ்த்துகிறோம், வணங்குகிறோம். பரந்தாமனது பத்து அவதாரத்தையுமே உலக வளர்ச்சியின் பரிணாமம் (Evolution) என்று கொண்டால், வராக அவதாரம் உழவன் செய்யும் திருப்பணியை உருவகப்படுத்துகிறதுதானே? ஆம். பூமிக்குள் இருக்கும் எத்தனை எத்தனையோ சக்திகளை வெளிப்படுத்தி மக்களுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும், அநுபவிக்க மலர் வகைகளும் அருளுபவன் அவனே அல்லவா? அடடா! என்ன அழகான கற்பனை, இந்த வராக மூர்த்தியை உருவாக்குவதிலே!

இத்தகைய கற்பனையைச் சித்திரிக்க விரும்புகிறார் ஒரு சித்திரகாரர். கொஞ்ச காலத்துக்குமுன் நம்மிடையே இருந்தவர்தாம் அவர். ஆனால் பாவம்! அவர் எதைக் கண்டார்? பூமியைக் கண்டாரா? அல்லது பூமிதேவியைக் கண்டாரா? இல்லை, அவளது அருள் நிறைந்த சக்தியைத்தான் கண்டாரா? அவருக்குத் தெரிந்ததெல்லாம் ஆங்கில மோஸ்தரில் நடத்தப் பட்ட பள்ளிக்கூடங்களில் காணும் பூகோளப் படமும் பூகோள உருண்டையுந்தானே? சரிதான். வராகம் என்றால் என்ன என்று தெரியும். வராக உருவில் பரந்தாமன் பூமியை எடுத்து வந்ததும் தெரியும். உடனே உருவாகிவிட்டது சித்திரம். வராக மூர்த்தியின் மூக்கின் வளைவுக்கேற்பப் பூகோளமும் உருண்டிருந்தது பொருத்தமாய்ப் போயிற்று. பூகோளத்தின் ஒரு பகுதி வெகு ஜோராய் 'ஜம்' என்று அந்த மூக்கில் உட்கார்ந்திருப்பது போலப் படம் அச்சாகியும் விட்டது. நாமும் 'நல்ல படம்' என்று சொல்லி வாங்கிக் கண்ணாடிச் சட்டமிட்டு வீட்டில் தொங்க விட்டுக் கொண்டோம்.

ஆனால்....? இப்போது உங்களிடம் இருக்கும் படத்தைப் பாருங்கள். அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு, ''என்ன? நீங்கள் சொன்னீர்களே, அந்தக் கற்பனை ஒன்றும் இந்தப் படத்தைப் பார்த்த என் உள்ளத்தில் உதயமாகவில்லை'' என்றால் அதற்கு நான் பொறுப்பாளி அல்ல. இந்த அரிய கற்பனையின் அற்புத உருவைக் காணவேண்டுமானால் நேரே பேரணி ஸ்டேஷனுக்கு ஒரு டிக்கட் வாங்குங்கள். அங்கு இறங்கியதும் நேரே மேற்கே நாலு ஐந்து மைல் நடந்து போங்கள். வேண்டுமானால், இடையில் வரும் சிற்றூர்களில் எண்ணாயிரம் என்கிற ஊர் எங்கே இருக்கிறது என்று விசாரித்துத் தெரிந்துகொள்ளுங்கள். எண்ணாயிரம் என்ற ஊருக்குச் சென்றதும், வழியில் யாராவது மறித்து, ஊர்க் கதை, ஸ்தலத்தின் பெருமையை எல்லாம் எடுத்துரைக்க முயன்றால் 'அதெல்லாம் அப்புறம்' என்று சொல்லி நிறுத்திவிடுங்கள். நேரே அங்குள்ள நரசிங்கப் பெருமாள் கோவிலுக்கே போங்கள். கையில் ஒரு டார்ச்சு விளக்கையும் எடுத்துக் கொள்ளுங்கள். மூலஸ்தானத்திற்கே போங்கள். (போகும்போது கோயில் உள்ளேயே நெருஞ்சிமுள் உங்கள் காலைப் பதம் பார்த்தால் என்னைத் திட்டாதீர்கள். இதற்கெல்லாம் தக்க பலன்தான் கிட்டப்போகிறதே.) சுதையில் உருவாயிருக்கும் மூலவர் நரசிங்கப் பெருமாளை யெல்லாங்கூடப் பின்னால் பார்த்துக் கொள்ளலாம். கர்ப்பக் கிருகத்திற்கு அடுத்த கட்டிலே - அந்தராளத்திலே - வடக்கே பார்க்க நின்றுகொண்டு உங்கள் டார்ச்சு விளக்கை அடியுங்கள். அவ்வளவுதான். உங்கள் முன்னால் எட்டடி உயரத்தில் வராகமூர்த்தி ஆஜானுபாகுவாய்க் காட்சி அளிப்பார். சங்குசக்கரதாரியாக அவர் எழுந்து நிற்கிற திருக்கோலமும் அவரது மடியிலே கூப்பிய கையுடன் பூமிதேவி இருக்கின்ற நேர்த்தியும் பார்க்கப் பார்க்கப் பரவசத்தையே தரும். மூர்த்தியின் தூக்கிய திருவடிக்கீழ் அரக்கன் குன்றி நிற்பதையும் பார்க்க மறந்துவிடாதீர்கள்.

எண்ணாயிரம் என்ற பெயர் இச் சிற்றூருக்கு வருவானேன்? கிராமத்தாரிடம் கேட்டால், ''இங்கேதான் எண்ணாயிரம் சமணர்கள் கழுவேற்றப்பட்டார்கள். அதனால்தான் எண்ணாயிரம் என்ற பேர் நிலைத்தது'' என்பார்கள். ஆனால் கொஞ்சம் துருவி ஆராய்ந்தால், அதில் உண்மை இல்லை என்று தெரியும். இந்தச் சிற்றூர் பல்லவர் ஆட்சியில் பருத்திக் கொல்லை என்ற பெயருடன் பிரபலமா யிருந்திருக்கிறது. இங்கே ஒரு பரம பாகவதர்: அவருக்கு ஓர் அருமை மனைவி. இருவரும் அதிதிகளையும் சாதுக்களையும் உபசரிப்பதில் சிறந்தவர்கள். இருந்த பொருள் அத்தனையையுமே வாரி வாரி வழங்கிவிட்டனர், இந்த அதிதி சத்காரத்தில். அவர்கள் செய்த வஸ்திரதானமோ சொல்லி முடியாது. கடைசியில் இருவருக்கும் எஞ்சியது ஒரே ஒரு வஸ்திரமே. பாகவதர் உஞ்சவிருத்திக்கு வெளியில் சென்றால் நாச்சியார் வஸ்திரமின்றி வீட்டில் மறைந்திருப்பார். இறைவன் சோதனை இன்னும் கடுமையாயிற்று. உடையவர் ஸ்ரீபெரும்பூதூரிலிருந்து திருவகீந்திரபுரத்துக்குச் செல்லும் வழியில் பருத்திக் கொல்லைப் பரம பாகவதரின் பிரதாபத்தைக் கேட்டு, தம் பரிவாரங்களுடனும் அடியவர்களுடனும் பருத்திக் கொல்லைக்கு எழுந்தருளினார். அவர்கள் வரும் வேளையில் நாச்சியார் வீட்டில் வஸ்திரமின்றி மறைவில் இருந்தார். கணவர் உஞ்ச விருத்திக்குச் சென்றிருந்தார். தம் வீட்டைத் தேடிவந்த உடையவர், அடியார்களுக்கெல்லாம் மறைவில் இருந்தே முகமன் கூறி எல்லோரையும் நீராடிவிட்டு உணவுண்ண வரும்படி வேண்டிக்கொண்டார். நெருக்கடியான நிலைமை ஏற்பட்டுவிட்டது. நாச்சியார் கொஞ்சம் சிந்தித்தார். அவருக்குத் தெரியும், அவ்வூரில் உள்ள பணக்காரச் செட்டியார் ஒருவருக்குத் தம்மேலே பல நாளாகக் 'கண்' என்று. அவருக்குச் சொல்லி அனுப்பினார். தமது கற்பையே விற்று அடியவர்களுக்கு உணவூட்டத் துணிந்துவிட்டார். செட்டியார் வந்தார்; நாச்சியார் எண்ணத்தை அறிந்தார். உடனே வந்து குவிந்தன உடுக்க உடையும், உண்ண உணவு தயாரிப்பதற்கு வேண்டிய சாமான்களும். செட்டியாரை இரவில் வந்து சேரும்படி நாச்சியார் சொல்லி அனுப்பிவிட்டார்.

உஞ்சவிருத்திக்குச் சென்ற பாகவதர் வந்தார்; விஷயம் அறிந்தார்; சந்தோஷம் அடைந்தார். உடையவர் பரிவாரத்திற்கு அருமையான விருந்தொன்று நடந்தது. குறித்த இரவும் வந்தது. செட்டியாரும் கோலாகலமாக வந்தார். ஆனால் அவரால், நாச்சியாரின் தெய்விக ஒளிமுன் கண் திறக்கவே முடியவில்லை. தம் பிழையை உணர்ந்தார். நாச்சியார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். மன்னிப்பைப் பெற்று அகன்றார். நாச்சியார், செட்டியார் எல்லோரும் உபசரிக்க ஆரம்பித்தவுடனே, உடையவரும் இருந்துவிட்டார், அங்கேயே கொஞ்ச காலமாக. சமணர்கள் கொதித்தெழுந்தனர். வாதப் பிரதிவாதங்கள் நடந்தன. சமணர்கள் தோற்றனர். ஒப்பந்தப்படியே கழுவேறத் தயாராகிவிட்டனர். பரம தயாநிதியான உடையவர், அத்தனை சமணர்களையும் அந்தணர்கள் ஆக்கினார். எண்ணாயிரம் பேர் அன்று புனர்ஜன்மம் பெற்றனர். பருத்திக் கொல்லையும் எண்ணாயிரம் என்ற பெயர் பெறலாயிற்று. 'அஷ்ட ஸகஸ்ரம்' என்ற பிராமண வகுப்பினர் தோன்றிய கதை இதுதான் என்பார்கள் தெரிந்தவர்கள். இவர்கள் குடியேறிய கிராமங்கள், பிரம்மதேசம், சதுர் வேதிமங்கலம் என்றெல்லாம் தெரிகிறது.

எண்ணாயிரத்தில் அழகிய நரசிங்கப் பெருமாள் கோயில், உடையவரால் உரு ஆக்கப்பட்டது என்பது கர்ணபரம்பரைக் கதை. நரசிங்கரின் உக்கிரம் அளவு கடந்ததாய் இருந்திருக்கிறது. மூல விக்கிரகம் பின்னப்பட்டு, வெளிமண்டபத்தில் வைத்திருக்கிறது. சுதையால் ஆக்கப்பட்ட நரசிங்கப் பெருமாள்தான் இன்றைய மூலவர். பெருமாளையும், பெரு-

மாளுக்கு ஒரு கோயிலையும் ஆக்கிக் கொடுத்த உடையவரும் இங்கே கோயில் கொண்டிருக்கிறார். நல்ல கருங்கல்லில் உருவாகி இருக்கிறார். உலோகத்தில் வார்க்கப்பட்டவரோ என்று சொல்லும்படி நல்ல மழமழப்புடன் இருக்கிறார். பக்கத்தில் பருத்திக் கொல்லை நாச்சியார் அளித்த விருந்துண்ட வைபவத்தில்தானோ என்னவோ, உடல் தளதள என்றிருக்கிறது. வராக மூர்த்தியும் உடையவரும் வேறு இடங்களிலும் இருக்கலாம். என்றாலும் இவ்விரண்டு சிற்பங்களையும் காண்பதற்காகவே இந்த ஊருக்கு ஒரு பயணம் கட்டலாம். கட்டுங்களேன். ★

—ஜனவரி, 1949.

காயக சிகாமணி, ஹரிகேசவநல்லூர் முத்தையா பாகவதர்

# தமிழ் நாட்டுச் சங்கீதம்

## சங்கீதத்தின் பிறப்பு

எல்லோருக்கும் ஆனந்தம் தருவது சங்கீதம். சங்கீதத்தை வேண்டாதவர் இல்லை. புல்பூண்டுகள்கூடக் கான ருசியை அறிந்து அநுபவிக்கின்றன என்றால் அது மனிதர்களுக்கு ஆனந்தம் தருவதைப் பற்றிச் சந்தேகம் உண்டோ? உடல் வளர்ச்சி அடைவதற்கு ஆகாராதிகள் உபயோகப்படுவதுபோல, உயிர் வளர்ச்சிக்குச் சங்கீதம் அவசியமானது. கானத்தைக் கேட்டவுடன் நம் கவலை நீங்கிவிடுகிறது. திரிகரணங்களும் அசைவற்று நிற்கின்றன. வேலையை நிறுத்திவிட்டுக் கவலைகளை மறந்து கேட்கிறோம். சங்கீதம் நின்ற பிறகு கவலைப்படுகிறோம்.

அந்தச் சங்கீதம் எப்பொழுது உண்டாயிற்று? யார் மூலம் வந்தது? உலகம் உண்டாவதற்கு முன் கானம் உண்டாயிற்று. கானத்துக்கு ஆதியானது நாதம். நாதத்திலிருந்தே ஸ்வரம் உண்டாயிற்று. ஆகாசம் சப்த வடிவமுடையது. ஆகாசத்திலிருந்தே மற்றப் பூதங்கள் உண்டாயின. ஆகாசத்துக்குச் சொந்தமான நாதத்திலிருந்தே எல்லாப் பூதங்களும் உண்டாயின. ஜீவராசிகள் எல்லாம் தங்கள் தங்கள் கருத்தை வெளியிடுவதற்கு நாதம் வேண்டும். பாஷைக்கு ஆதியாக இருப்பது நாதம். அந்தப் பாஷை ஒலி வடிவாகவும் வரி வடிவாகவும் இருக்கிறது. அந்த நாதத்திலிருந்தே வேதம், சாஸ்திரம், மந்திரம் முதலியவை உண்டாயின.

மகரிஷிகளெல்லாம் மந்திரங்களைச் சொல்லி வைத்திருக்கிறார்கள். அந்த மந்திரங்களை ஜபம் செய்து மந்திரத்துக்கு உரிய தேவதைகளைத் தரிசனம் செய்தார்கள். அந்தத் தெய்வங்களைக் காண்பதற்கு மந்திரங்கள் உதவியாக இருக்கின்றன. தெய்வ பேதங்களுக்கு முன்பு நாதம் உண்டாயிற்று.

## பரிபாடல்

கீதமானது எவ்வளவு காலத்துக்கு முன்பு ஏற்பட்டதென்பதை அறிவது மிகவும் துர்லபம். லட்சக்கணக்கான வருஷங்களாகக் கீதங்கள் இருந்து வந்திருக்கலாம். அநேகம் பெரியோர்களால் கானம் செய்யப்பட்டு வந்திருக்கலாம். தமிழில் மிகவும் பழைய சங்கீத சாஸ்திரங்கள் பல இருந்தன. சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு உண்டான பரிபாடல் என்ற பழைய தமிழ் நூலில் உள்ள பாட்டுக்களுக்கு இசை வகுக்கப்பட்டிருக்கிறது. அதில் பாட்டுப் பாடினவர் இன்னார், இசை வகுத்தவர் இன்னார் என்ற விஷயங்கள் ஒவ்வொரு பாட்டுக்கும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒருவர் சாகித்தியம் செய்வதும் வேறு ஒருவர்

அதற்கு ராக தாளம் அமைப்பதுமாகிய வழக்கம் இப்போதும் இருக்கிறது. ''இதோ நான் எனக்கு மனோபாவமாகத் தோற்றியதைப் பாட்டாகப் பாடியிருக்கிறேன்; தயவு செய்து வர்ண மெட்டுப் போட்டு விடுங்கள்'' என்று பலர் இப்பொழுதும் சொல்லுகிறார்கள். அதைப் போல அந்தக் காலத்திலும் கவிகள் மிகவும் அழகான பாட்டுக்களைப் பாடி இசை வாணர்களோடு கலந்து அந்தப் பாட்டுக்களுக்கு இசை அமைத்துப் பாடச் செய்திருக்கிறார்கள். பரிபாடலில் ஒரு பாட்டுக்கு அடியில், பாடினவர் கீரந்தையார், இசை வகுத்தவர் நன்னாகனார் என்று குறிப்பிக்கப்பட்டிருக்கிறது. இப்படியே ஒவ்வொரு பாட்டையும் பாடினவர், இசை வகுத்தவர் என்பவர்களின் பெயர் காணப்படுகின்றன. இவைகளைப் பார்க்கும்பொழுது சங்கீத சாகித்திய வித்துவான்கள் எவ்வளவு தூரம் ஒருமைப்பட்டிருந்திருக்கிறார்கள் என்பது தெரியவரும். உடலும் உயிரும்போல, சாகித்தியமும் சங்கீதமும் இருக்கின்றன. இந்த உண்மையைப் பழைய தமிழ் வித்துவான்கள் அறிந்திருந்தார்கள் என்றும், இயலும் இசையும் பிரியாமல் ஒற்றுமையாக வைத்துக் கௌரவிக்கப்பட்டன என்றும் பரிபாடலினால் அறிகிறோம். இசையை இயலோடு அவர்கள் சேர்த்து அநுபவித்திருக்கிறார்கள்.

## சிலப்பதிகாரம்

**ச**ற்றேறக்குறைய 1500 வருஷங்களுக்கு முன் சிலப்பதிகாரம் என்ற அருமையான நூல் இளங்கோவடிகள் என்பவரால் செய்யப்பட்டது. அது சங்கீத சாகித்தியங்களில் மிகவும் தேர்ச்சி பெற்று உலகத்திற்கு நன்மை பயக்கும்படி அவரால் இயற்றப்பட்டது. அந்த நூலில் சங்கீதத்துக்கு உபயோகமான பல அருமையான பாகங்கள் இருக்கின்றன. சங்கீதம் வடமொழியில் நிருத்தம், கீதம், வாத்தியம் என்று மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அந்த மூன்றைப் பற்றிய பல அருமையான விஷயங்கள் சிலப்பதிகாரத்தில் நிறைந்து கிடக்கின்றன.

## வீணையும் சரீரமும்

**வா**த்தியங்களில் சிறந்தது வீணை ஒன்றுதான் என்பதை அந்தச் சிலப்பதிகாரம் மிக நன்றாகச் சொல்லுகிறது. மனுஷ்யனைப் போலப் பாடுவது வீணை ஒன்றுதான். சரீரத்தைக் காத்திர வீணை என்றும் வீணையைத் தாரு வீணை என்றும் சொல்வது உண்டு. இரண்டுக்கும் சாம்யம் இருக்கிறது. உடம்பே வீணைபோல அமைந்திருக்கிறது. மனுஷ்யனுடைய தலையிலிருந்து இடுப்பு வரையில் உள்ள பாகம் வீணையை ஒத்ததாக இருக்கிறது. வீணையின் குடம் போன்றது தலை. கண் இருக்கும் ஸ்தானத்தில் வீணையிலும் இரண்டு கண்கள் இருக்கின்றன. வாய், தந்தி மீட்டும் இடம். உடம்பில் உள்ள முதுகெலும்பை வீணாதண்டம் என்பார்கள். அந்த எலும்பு சிரசிலிருந்து பின்புறம் வரையில் வந்து வளைந்து இருக்கிறது. அது இருபத்துநான்கு எலும்புகளின் சேர்க்கை என்பார்கள். வீணையிலும் இருபத்துநான்கு மெட்டுகள் இருக்கின்றன. வாதம் பித்தம் சிலேஷ்மம் என்ற மூன்று நாடிகள் உடம்பில் இருக்கின்றன. வீணையிலும் பஞ்சமம் மத்யமம் ஸாரணி என மூன்று தந்திகள் இருக்கின்றன. இந்த மூன்றோடு மந்த்ரத்துக்காக ஒரு தந்தியும் தாளத்துக்காக மூன்று தந்திகளும் சேர்ந்து ஏழு தந்திகள் இருக்கின்றன. இந்த ஏழு தந்திகளும் தேகத்தில் உள்ள ஸப்த தாதுக்களைப் போல அமைந்திருக்கின்றன.

மந்திரத்துக்காக ஒரு தந்தி ஏன் ஏற்பட்டிருக்கிறது? நான்கு வேதங்களுக்கு நாலு தந்திகள் ஏற்பட்டிருக்கின்றன. ரிக்வேதத்துக்காகப் பஞ்சமம் ஏற்பட்டிருக்கிறது. யஜுர்வேதத்துக்காக ஸாரணியும், ஸாம

வேதத்துக்கு மத்தியமமும் ஏற்பட்டிருக்கின்றன. பாக்கி உள்ள அதர் வணத்திற்கு ஒன்று வேண்டும் அல்லவா? அதர்வண மந்திரங்களுக்காக மந்த்ரம் என்ற தந்தி ஏற்பட்டது. அது மிகவும் கீழே உள்ள ஸ்வரங் களைப் பேசும்.

## சிலப்பதிகாரமும் சுருதி லட்சணமும்

சிலப்பதிகாரத்தில் வீணையின் லட்சணம், வீணை வாசிக்கவேண்டிய முறை, வைணிகனுடைய லட்சணம் முதலியவை நன்றாகச் சொல்லப் பட்டிருக்கின்றன. அந்த அருமையான புத்தகத்தில் ஆய்ச்சியர் குரவை என்ற ஒரு பாகம் இருக்கிறது. சுருதி லட்சணத்தை நன்றாக அறிந்து கொள்ள வேண்டுமானால் அந்தப் பாகத்தை ஆராய்ந்து அறிய வேண்டும். இப்பொழுது நடைபெறும் சங்கீத மகாநாடுகளில் அடி பிடிக்குக் காரணமாக இருக்கும் அதனுடைய நிர்த்தாரணம் அந்த இடத்தில் வேறு எங்கும் இல்லாத சிறப்போடு காணப்படுகிறது. சங்கீத வித்துவான்கள் சிலப்பதிகாரத்தை நன்றாக ஆராய்ச்சி பண்ணவில்லை. ஆராய்ச்சி பண்ணியவர்களுக்கு அதில் எவ்வளவோ அருமையான ரத்தினங்கள் புதைந்து கிடக்கின்றன என்பது தெரிகிறது. யாராவது ஆராய்ச்சி செய்து சொல்ல வந்தால் அதற்கு மதிப்புக் கொடுப்பதில்லை. பண்டிதர்களும் சங்கீத வித்துவான்களும் சேர்ந்து பழகுவதில்லை. தமிழ்ப் புத்தகத்தில் இவ்வளவு அருமையான சங்கதிகள் இருக்கின்றன என்பதைச் சங்கீத வித்துவான்கள் நம்புவதில்லை. தாங்களாக ஆராய்ச்சி செய்து, அறிவதும் இல்லை. ஆராய்ந்து அறிந்தவர்கள் அடங்கி இருக்கிறார்கள்.

## ஸ்வரங்களின் அமைப்பு

ஸ்வரம் என்பது எப்படி உண்டாயிற்று? ஈசுவரனுடைய ஐந்து முகங்களிலிருந்து ஸ்வரங்கள் உற்பத்தியாயின. அப்படியானால் ஐந்து ஸ்வரங்கள்தானே உண்டாகும் என்று நீங்கள் கேட்கலாம். முதலில் ஐந்து ஸ்வரங்களே உண்டாயின. ஸ்வரங்கள் கிரகங்களைப் போன்றவை என்று சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட் டிருக்கிறது. வேறு எந்தப் புத்தகத்திலும் இந்த அருமையான விஷயம் சொல்லப்படவே இல்லை. இப்பொழுது நவக்கிரகங்கள் என்று சொல்லப்படும் கிரகங்களில் முதலில் இருந்தவை ஐந்தே. சூரியன், சந்திரன், செவ்வாய், குரு, சுக்கிரன் என்ற ஐந்துமே முன்பு உற்பத்தியானவை. சாயாக்கிரகங்களாகிய ராகு கேதுக் களைத் தள்ளிவிட்டால் வாஸ்தவத்தில் ஏழு கிரகங்கள் இருக்கின்றனவே என்று நீங்கள் கேட்கலாம். இந்த ஐந்தில் சேராத கிரகங்கள் சனியும் புதனும். சூரியன் பிள்ளை சனி, சந்திரன் பிள்ளை புதன். ஆகையால் முதலில் உண்டானவை ஐந்து என்றே ஏற்படுகிறது. அதைப் போலவே ஸப்த ஸ்வரங்களில் ஷட்ஜத்திலிருந்து காந்தாரமும் பஞ்சமத்திலிருந்து ரிஷபமும் ஏற்பட்டன. முதல் ஸ்வரங்கள் ஸமபதநி என்ற ஐந்தே. இதற்கு அறிகுறியாக யஜுர்வேதத்தில் மந்திரங்களில் மத்தியமத்தி லிருந்து திடீரென்று பஞ்சமத்துக்கு ஸ்வரம் இறங்குகிறதைப் பார்க்கலாம்.

கிரகங்கள் ஒன்பது என்று அல்லவா நாம் கொள்கிறோம்? அதுபோல ஸ்வரங்களில் ஒன்பது உண்டா என்றால், உண்டு என்றே சொல்லலாம். ஸப்த ஸ்வரங்களில் ஒன்றாகிய நிஷாதம் என்பது கைசிகி நிஷாதந்தான். மத்தியமம் என்பது சுத்த மத்தியமந்தான். இந்த இரண்டிலிருந்து ராகு கேதுக்களைப்போலக் காகலி நிஷாதமும் பிரதி மத்தியமமும் ஏற்பட்டன. இவ்வாறு ஸ்வரங்களின் அமைப்பானது நவக்கிரகத்தின் சேர்க்கையைப் போல இருக்கிறது. நவக்கிரகங்கள் பன்னிரண்டு ராசிகளில் சஞ்சாரம் செய்வதைப் போல இந்த ஸ்வரங்களும் பன்னிரண்டு ஸ்தானங்களில் சஞ்

சாரம் செய்கின்றன. சிலப்பதிகாரத்தைப் போலச் சங்கீதத்துக்கு என்று அமைந்த அருமையான நூலை எந்தப் பாஷையிலும் பார்க்க முடியாது. அதில் சொல்லப்பட்ட எவ்வளவோ விஷயங்களை நாம் இன்னும் நன்றாக அறிந்துகொள்ள முடியவில்லை.

## தேவாரம

**வெ**கு காலத்துக்குப் பிறகு சற்றேறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு இருந்த மகா பக்தர்களாகிய பெரியவர்கள் - தேவார திருவாசகத்தின் காரண பூதர்களாகிய பெரியவர்கள் - தோன்றித் தமிழ்ப் பாட்டுக்களைத் தாளத்தோடும் ராகத்தோடும் பாடி யிருக்கிறார்கள். அவற்றிற்குப் பண் வகுக்கப்பட்டிருக்கிறது. பண் என்பது மேள கர்த்தா ராகம். திறம் என்பது ஜன்ய ராகம். தேவாரங்களில் சொல்லப்பட்டுள்ள பண்களின் பெயர் மிகவும் அபூர்வமாக இருக்கும். 'பழம் பஞ்சுரம் தெரியுமா?' என்றால் பரிகாசம் செய்வார்கள். இப்பொழுது வடமொழிப் பேருள்ள ராகங்களே வழக்கத்தில் இருக்கின்றன. பண்களுக்கு அந்த ராகங்களிற் சிலவற்றைப் பாடுகிறார்கள். நட்டராகத்துக்கு நாட்டையே பாடுகிறார்கள். தக்கேசிப் பண்ணைக் காம்போதியில் பாடுகிறார்கள். அந்த அந்தப் பண்ணுக்கு ஏற்பட்ட பழைய கட்டுப்பாடுகள் வேறு இருக்கவேண்டும். அவை இப்போது தெரியவில்லை. ஆனாலும் பழையகால முதற்கொண்டு தேவாரங்களைப் பாடி வரும் முறை ஒன்று இருக்கிறது. அதை நான் கேட்டிருக்கின்றேன். ★

—ஜனவரி, 1934.

வி. வி. சடகோபன்

# அரியக்குடி ராமானுஜ ஐயங்கார்

முப்பது வருஷங்களுக்கு மேலாக ஒரு சங்கீத 'பாணி' ரஸிகர்களின் மனத்தைக் கவர்ந்து சிறிதும் கவர்ச்சி குன்றாமல் விளங்கி வருகிறதென்றால் அது சாமானியமான காரியமா? இந்த அசாதாரண காரியத்தின் கர்த்தா ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் என்பதைச் சொல்லத் தேவையே இல்லை. அண்மையில் அறுபது வயது நிரம்பப் பெற்றும் குன்றாத சாரீர வளத்துடன் பாடிப் பண்டிதர்களையும் பாமரர் களையும் ஆனந்தத்தில் ஆழ்த்தி வருகிறார்.

இந்தக் கவர்ச்சிக்குக் காரணம் என்ன? சாஸ்திரம், சம்பிரதாயம் என்று எவ்வளவோ பேசுகிறோம். சாஸ்திர நூல்களில் பல முரண்பாடுகள் இருக்கின்றன. சம்பிரதாயங்களும் பலவிதமாக இருந்து வந்திருக்கின்றன. எது சாஸ்திரம், எது சம்பிரதாயம்? ஆராய்ச்சியும் அநுபவமுந்தான் இதற்கு விடை தரும் என்பதை நிதரிசனமாகக் காட்டுகிறார் ஸ்ரீ அரியக்குடி. சாஸ்திரங்களாயினும் சரி, சம்பிரதாயங்களாயினும் சரி, அவற்றின் லட்சியம் அழகு; அதாவது சுகபாவம். ராகம் பாடினாலும், கீர்த்தனை பாடினாலும், நிரவல் செய்தாலும், ஸ்வரம் பாடினாலும் ஒவ்வோர் இடமும் பாவம் நிரம்பியிருக்க வேண்டும், எழிலுடன் விளங்கவேண்டும், இன்பம் பயக்க வேண்டும் என்ற உண்மையை உணர்ந்த ஸ்ரீ ஐயங்கார், லட்சணங்களே முடிவு என்று எண்ணாமல் அவற்றை லட்சியமான சுகபாவத்திற்கு மார்க்கமாகக் கொண்டு சாஸ்திர சம்பிரதாயக் கடலில் முத்துக் குளித்து அது தரும் ரத்தினங்களைப் புது மெருகுடன் நமக்கு அளித்திருக்கிறார்.

இந்தக் கைங்கரியத்தில் அவருடன் கூட ஈடுபட்டவர் அவரது நெருங்கிய நண்பரும் அவரால் 'சேஷண்ணா' என்று அருமையாக அழைக்கப்பெற்று வருபவருமான ஸ்ரீ சேஷையங்கார் அவர்கள். (நாமக்கல் நரஸிம்மையங்கார் அவர்களின் சிஷ்யர்.) ஸ்ரீ ராமானுஜையங்காரவர்களிடம் பயின்றபோது ஏற்பட்ட சிநேகம் இருவரையும் பல வருஷகாலம் சங்கீத ஆராய்ச்சியிலும் அப்பியாசத்திலும் ஒன்று சேர்ந்து ஈடுபடச் செய்தது. அதன் விளைவாக ஏற்பட்டதே 'அரியக்குடி பாணி'. ஸ்ரீ சேஷையங்கார் அவர்களிடமும் அவர் சிஷ்யர்களிடத்திலும் இதே பாணியைக் காணலாம்.

இருவரும் தங்கள் தங்கள் குருநாதர்களின் வழிகளைத் தெரிந்து கொண்டதோடல்லாமல், பழைய தலைமுறையில் சிறந்து விளங்கிய பிடில் (திருக்கோடிகாவல்) கிருஷ்ணையர், வீணை தனம்மாள் ஆகியவர்களின் சங்கீதத்திலும் வெகுவாக லயித்திருப்பதாகத் தெரிகிறது. கர்நாடக சங்கீதத்தின் உயிர் என்று சொல்லக்கூடிய கமகத்தை அடிப்படையாகக் கொண்டு கனம், நயம் இரண்டும் ஒருங்கே சேர்ந்து விளங்குவதே 'அரியக்குடி பாணி'யின் முக்கிய அம்சம்.

ராமநாதபுரம் ஜில்லாவில் காரைக்குடியிலிருந்து இரண்டு மைல் தூரத்திலுள்ளது அரியக்குடி என்ற கிராமம். ஸ்ரீ ஐயங்காரின் தகப்பனார் திருவேங்கடத்தையங்கார் ஜோதிஷத்தில் நல்ல வியாபகர். நான்கு பிள்ளைகளில் மூன்றாமவர் நம் ஐயங்கார். தம்பி ஸ்ரீ ராகவையங்கார் பல வருஷங்கள் தமையனாரோடு கச்சேரிகளில் தம்புராவுடன் அமர்ந்து பின்னால் பாடி வந்தவர். இப்பொழுது காரைக்குடியிலேயே இருக்கிறார். ஸ்ரீ ராமானுஜையங்கார் தம் மூத்த சகோதரருக்கு ஸ்வீகாரம்.

முதல் முதல் சங்கீதப் பயிற்சி ஸ்ரீ ஐயங்காருக்கு மலையப்பையர் என்ற வித்துவானிடம். பிறகு நாமக்கல் நரஸிம்மையங்காரிடமும் பூச்சி ஐயங்கார் என்ற ராமநாதபுரம் ஸ்ரீநிவாஸையங்காரிடமும் குருகுல வாசம் செய்தார். கச்சேரி செய்ய ஆரம்பித்துச் சில வருஷங்களிலேயே புகழடைந்தார். சுமார் முப்பது வருஷங்களுக்கு முன் தியாகப் பிரம்மத்தின் சமாதியில் ஆராதனை உற்சவத்தில் அவர் செய்த கச்சேரி அவரை முன்னணிக்குக் கொண்டு நிறுத்தியது. அதிலிருந்து மங்காது பொங்கும் புகழுடன் பிரகாசித்து வருகிறார்.

ஸ்ரீ ஐயங்கார் அவர்களின் அடக்கம் ஆச்சரியப்படத் தக்கது. அவருடைய ஸெளலப்யமும் ஸரஸகுணமும் அவருடன் ஒரு முறை பழகியவரையும் வசீகரிக்கும். எப்பொழுதும் இன்முகத்துடனேயே இருப்பார். சாதுரியமாகவும் நகைச்சுவை ததும்பவும் பேசுவார். சிலேடையில் அலாதிப் பிரியம்.

''உங்களுக்காக ஸ்பெஷலாகக் காப்பி தயாரித்துக்கொண்டு வந்திருக்கிறேன். சாப்பிடுங்கள்'' என்று காப்பியைக் கொடுத்தார் ஓர் அபிமானி.

ஸ்ரீ ஐயங்கார் ஒரு வாய் சாப்பிட்டுவிட்டு, ''இது காப்பி இல்லை'' என்றார்.

வந்தவர் முகத்தில் ஏமாற்றம்.

''இது காப்பி (copy) இல்லை. அசல் (original). அவ்வளவு நன்றாயிருக்கிறதென்றேன்'' என்றார் ஸ்ரீ ஐயங்கார்.

''அப்பர் பெர்த் (upper berth) தான் இருக்கிறதாம்'' என்று ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போய் வந்து சொன்ன சிஷ்யனிடம், ''சுந்தரர் பெர்த் இல்லையா?'' என்றார்.

இரண்டு சிநேகிதர்கள் வாக்கு வாதம் செய்துகொண்டிருந்தார்கள்.

''என்ன சண்டை?'' என்றார் ஸ்ரீ அரியக்குடி.

''எங்களுக்குள் பதினாயிரம் இருக்கும்'' என்றார் ஒருவர்.

''இவ்வளவுதானா? ஆளுக்கு ஐயாயிரம் எடுத்துக்கொள்ளுங்களேன்'' என்றார் ஸ்ரீ ஐயங்கார்.

சபாரஞ்சகமாகப் பாடுவது போல், சமயோசிதமாகப் பேசுவதிலும் சமர்த்தர். புதிதாக ஆரம்பிக்கப்பட்ட ஒரு சபையில் ஸ்ரீ ஐயங்காரின் கச்சேரி நடந்தது. கச்சேரி முடிவில் காரியதரிசி வந்தனோபசாரம் செய்ய எழுந்து, ''நமது சபை ஆரம்பித்து, இது முதல் கச்சேரி என்று..'' என்னும்போதே ஸ்ரீ ஐயங்கார், ''இதுமுதல் கச்சேரி'' என்றார்.

அவரது நுண்ணறிவு வியக்கத் தக்கது. ஒரு கச்சேரியில், ''தயவு செய்து 'தடே படே' பாடவும்'' என்று சீட்டு வந்தது. ஒரு கணந்தான் யோசித்தார் ஸ்ரீ ஐயங்கார். ''மனவ்யாலகிஞ்சராதடே'' என்ற கீர்த்தனத்தை ஆரம்பித்தார். சீட்டு அனுப்பிய 'ரஸிக'ரின் முகத்தில்

தோன்றிய சந்தோஷத்தைக் கொண்டே தாம் அநுமானித்தது சரிதான் என்று தெரிந்துகொண்டார்.

சபையில் சில சமயம் யாராவது அலெளகிகமாக நடந்துகொண்டால் அதைப் புன்முறுவலாலேயே ஒதுக்கிவிடுவார். வெகு அபூர்வமாகவே அவர்களை, அதுவும் நாஸுக்காக, கடிந்துகொள்வார். ஒரு சந்தர்ப்பத்தில், ''தனக்குத்தானே தோணவேணும்'' என்னும் சங்கராபரண ராக பதத்தையும், பின்னும் அவசியம் ஏற்படவே, ''எத்தனை சொன்னாலும் தெரியாதவருடன்'' என்ற சாவேரி பதத்தையும் பாடியது நினைவுக்கு வருகிறது.

கச்சேரி ஆரம்ப முதல் கடைசிவரை சபையினரின் கவனத்தைக் கவர்வதிலேயே அவர் கண்ணும் கருத்துமாயிருப்பவர். சற்றும் அயர விடமாட்டார். இதற்கு அநுகுணமாயிருப்பது அவருடைய பிரசித்த மத்திமகால நடை. ஒரு பாட்டைக் கச்சேரியில் பாடுமுன் அதைப் பன்முறை பாடிப் பாடிப் பார்த்து அதற்கேற்ற காலப் பிரமாணத்தை அமைத்துக்கொள்வார். 'குருவி தலையில் பனங்காய் வைப்பதுபோல்' சின்ன உருப்படிகளில் அதிகமான சங்கதிகளைச் சுமத்தமாட்டார். இங்கிதமறிந்து, சந்தர்ப்பங்களுக்குப் பொருத்தமான பாடல்களைத் தேர்ந்தெடுப்பதில் நிபுணர். சமீபத்தில் கர்நாடக சங்கீதக் கல்லூரியில் அவர் கச்சேரி நடந்துகொண்டிருந்த போது ராஜாஜி வந்தார். உடனே ஐயங்கார் சங்கராபரணராக ஆலாபனை செய்து ''எந்துகு பெத்தல'' கீர்த்தனம் பாடி, சரணத்தில் ''வேத சாஸ்த்ர தத்வார்த்தமுலு தெலிஸி'' என்ற இடத்தில் நிரவல் செய்தபோது சபையோர் பொருத்தத்தை மிகவும் ரஸித்தார்கள்.

''கச்சேரி செய்வதற்குச் சங்கீதம் மட்டும் தெரிந்தால் போதாது; இங்கிதம் அவசியம் தெரிந்திருக்க வேண்டும்'' என்று அடிக்கடி ஸ்ரீ ஐயங்கார் அவர்களே சொல்வதுண்டு. கச்சேரியின் எல்லா அம்சங்களிலும் இந்த இங்கித ஞானத்தைக் காணலாம். ஒவ்வோர் அம்சமும் ஓர் உசிதமான அளவை மீறாமல், மிதம் எனப்படும் வகையிலேயே இருக்கும். பின்னால் வரும் கீர்த்தனத்தின் அளவை அநுசரித்தே முன்னால் பாடும் ராகமும் இருக்கும். நிரவல் ஸ்வரமும் அப்படியே. இந்த அளவுணர்ச்சியே அவருடைய ஸ்வாநுபவத்தையும் அளவு மீற விடாமல் கண்காணித்து வருகிறது. தம்மை மறந்து ஸ்வாநுபவத்தில் மூழ்கிவிட அவர் தம்மை அநுமதிப்பதில்லை. சபையிலுள்ள ரஸிகர்களின் தரத்தை அறிந்து அவர்களுக்கு ரஸாநுபவத்தை உண்டுபண்ணி அவர்களைத் தம்முடன் இழுத்துச் செல்வதிலேயே அவருக்கு ஆனந்தம். அவரது வெற்றிக்கு முக்கிய காரணமும் இதுவேயாகும்.

ஆயிரக்கணக்கான கச்சேரிகள் செய்து அவற்றில் வெற்றி காணுவதற்கும், அதற்குத் தேவையான சரீர, சாரீர வசதிக்கும் காரணம் அவரது அளவு உணர்ச்சிதான். உண்பதிலும் உறங்குவதிலும் மிதத்தை மிகக் கண்டிப்பாகக் கையாளுகிறார். இந்த ஆரோக்கிய ரகசியத்தை அறிந்து கடைப்பிடிக்கும் அவர், சாரீரத்திற்கென்று விசேஷ ஆகாரமோ மருந்தோ சாப்பிடுவதில்லை. சாரீரத்துக்கு மோர் ஒத்துக்கொள்ளாது என்பார்கள். ஸ்ரீ ஐயங்காருக்கு மோர் தள்ளுபடி அல்ல; மிகவும் பிரியங்கூட. இன்னோர் அதிசயம்: சாரீர வளத்துக்குப் பால் மிக அவசியம் என்ற கொள்கையையும் அவர் பொய்யாக்கி விட்டார். அவர் பால் சாப்பிடுவதே இல்லை!

இயற்கையை அநுசரித்த எளிய வாழ்க்கை முறையினாலேயே அவர் வயதாகியும் சரீரத்தின் சக்தி குன்றாமல் இருந்து வருகிறார். அவருடைய சாரீரத்தின் காத்திரமும் இனிமையும் வயதாக ஆக அதிகரித்து வருகின்றன.

ஸ்ரீ. ஐயங்கார் அவர்களுக்குப் பக்க வாத்தியம் வாசிப்பதென்றால் பெரியவர்கள் முதல் சிறியவர்கள் வரை எல்லா வித்துவான்களுக்கும் அலாதிப் பிரியம். அவரும் இன்னாரே வேண்டுமென்று வற்புறுத்துவதில்லை. அநுபவம் அதிகமில்லாதவர்கள் வாசிக்க நேர்ந்தால் அவர்களை உற்சாகப்படுத்தி அணைத்துக்கொண்டு போவார்.

பழைய சாகித்தியங்களுக்குப் பொருத்தமான வர்ண மெட்டுகள் அமைத்துப் பிரபலமாக்கி யிருக்கிறார். அருணாசலக் கவிராயரின் ராம நாடகக் கீர்த்தனைகள், ஆண்டாளின் திருப்பாவை ஆகியவற்றைப் பிரசுரப்படுத்தியும் கச்சேரிகளில் வழங்கியும் தமிழ் இசைக்கு மகத்தான சேவை செய்திருக்கிறார். தமிழிசை இயக்கம் ஏற்படுவதற்குப் பல வருஷங்களுக்கு முன்பே, ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களின் கீர்த்தனங்களைக் கச்சேரிகளில் (பல்லவிக்கு முன்) பாடி, தமக்குச் சங்கீதத்தின் தரந்தான் முக்கியம் என்பதைத் தெளிவாக்கி யிருக்கிறார்.

அவரிடம் பயிற்சி பெற்றிருக்கும் சிஷ்யர்கள் பலர். தற்போது கச்சேரி செய்துவரும் ஸ்ரீ கே. வி. நாராயணஸ்வாமி, ஸ்ரீ பி. ராஜமையர், ஸ்ரீமதி கே. எஸ். தனம்மாள் ஆகியோர் ஸ்ரீ ஐயங்காரவர்களின் சிஷ்யர்களே.

**பட்ட**ங்கள் மலிவுறாத காலத்திலேயே, வேலூர்ச் சபையின் ஆதரவில் ரசிகர்கள் கூடி அவருக்குச் சங்கீத ரத்நாகர என்ற பட்டத்தை அளித்தார்கள். பிறகு சென்னை வித்வத் சபை மகநாட்டுக்குத் தலைமை வகித்துச் சங்கீதகலாநிதி பட்டம் பெற்றார். மைசூர் மகாராஜா அவரைத் தமது ஆஸ்தான வித்வானாக நியமித்து, காயக சிகாமணி என்ற பிருதையும் அளித்தார். அண்மையில் இந்திய அரசாங்கத்தார் அவரை டில்லிக்கு அழைத்துப் பரிசளித்துக் கௌரவித்துப் பெருமையை அடைந்தார்கள்.

''**ஸ்ரீ**ராகவன் சகாயம்'' என்பது ஐயங்காரவர்களின் முத்திரை. கடிதங்கள் எல்லாம், ''வேணும், ஸ்ரீராகவன் சகாயம்'' என்று முடியும். பேசும்போதும் ''பரமாத்மா கிருபை''யை அடிக்கடி கோருவார். அவர் இயற்றியுள்ள சில உருப்படிகளிலும் ''ராமதாஸ'' என்ற முத்திரையை அமைத்திருக்கிறார். சதா ஈசுவரனை மனத்தில் தரித்திருக்கும் அவருக்கு ஸ்ரீராகவன் தீர்க்காயுளையும் ஆரோக்கியத்தையும் அளித்துச் சங்கீத அபிமானிகளின் உள்ளங்களைக் குளிரச் செய்து வருமாறு பிரார்த்திப்போம். ★

—மே, 1952.

சி. சுப்பிரமணிய பாரதியார்

# என்னே கொடுமை!

பூர்வ காலத்தில் அர்ஜுனாதிகள் செய்ததாகப் புராணங்களில் கூறப்படும் அம்புத் தொழில் முறைகளைப் பின்பற்றி இரண்டு ராஜபுத்திரர்கள் செய்த அற்புதமான துப்பாக்கி வித்தைகளை நோக்கும்போது உள்ளத்தில் எழுந்த சில எண்ணங்கள்.

மல்லார் திண்டோட் பாஞ்சாலன்
மகள்பொற் கரத்தின் மாலுற்று
வில்லால் விஜயன் அன்றிழைத்த
விந்தைத் தொழிலை மறந்திலிரால்.
பொல்லா விதியால் நீவிரவன்
போர்முன் இழைத்த பெருந்தொழில்கள்
எல்லா மறந்தீ ரெம்மவர்காள்
என்னே கொடுமை யீங்கிதுவே!

வீமன் திறலு மவற்கிளைய
விஜயன் திறலும் விளங்கிநின்ற
சேம மணிப்பூந் தடநாட்டில்
சிறிய புழுக்கள் தோன்றிவெறுங்
காம நுகர்தல் இரந்துண்டல்
கடையாம் வாழ்க்கை வாழ்ந்துபினர்
ஈமம் புகுதல் இவைபுரிவார்
என்னே கொடுமை யீங்கிதுவே!

★

—ஜனவரி, 1943.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை



# பாரதி பாடலும் பட்டிக்காட்டானும்

**ப**ட்டிக்காட்டான் பட்டணம் போனான். பாரதி பாடலைப் பண்ணோடு கேட்டான். அதில் அவன் மனம் ஈடுபட்டது. சில தினங்களில் ஊருக்குத் திரும்பினான். அங்கே தன் நண்பர்களுக்கு அப் பாடல்களின் அருமை பெருமைகளை உணர்ந்தமட்டில் விவரித்துக் கூறுகிறான்.

(வெண்பா)

**உ**ள்ளக் கருத்தையெலா முள்ளபடி யானிந்த
வெள்ளைக் கவியில் விளம்பினேன்—தெள்ளுதமிழ்
வெண்பாப் புலியும் விகட கவியுமெனைக்
கண்பார்த்துக் காத்தல் கடன்.

**பா**ட்டுக் கொருபுலவன் பாரதியடா - அவன்
பாட்டைப்பண் ணோடொருவன் பாடினானடா
கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனேயடா - அந்தக்
கிறுக்கில் உளறுமொழி பொறுப்பாயடா.

சொல்லுக்குச் சொல்லுமழ கேறுமேயடா - கவி
துள்ளு மறியைப்போலே துள்ளுமேயடா
கல்லும் கனிந்துகனி யாகுமேயடா - பசும்
கன்றும் பாலுண்டிடாது கேட்குமேயடா.

குயிலும் கிளியும்பாட்டில் கூவுமேயடா - மயில்
குதித்து குதித்துநட மாடுமேயடா
வெயிலும் மழையுமதில் தோன்றுமேயடா - மலர்
விரிந்து விரிந்துமணம் வீசுமேயடா.

அலைமேலே அலைவந்து மோதுமேயடா - அலை
அழகான முத்தையள்ளிக் கொட்டுமேயடா
மலைமேலே மலைவளர்ந் தோங்குமேயடா - அதை
வனங்க ளடர்ந்தடர்ந்து சூழுமேயடா.

விண்ணி லொளிருமீன்கள் மின்னுமேயடா - விண்ணில்
விளங்கு மதிநிலவு வீசுமேயடா
கண்ணுக் கினியசோலை காணுமேயடா - அதில்
களித்திள மான்கள்விளை யாடுமேயடா.

தேனும் தினையும்பாவில் உண்ணலாமடா - மிகத்
தித்திக்கும் முக்கனியும் உண்ணலாமடா
கானக் குழலிசையும் கேட்கலாமடா - ஊடே
களிவண்டு பாடுவதும் கேட்கலாமடா.

நாட்டு மொழியுமவன் பாட்டினிசையில் - மிக்க
நல்ல கற்கண்டினிமை சொட்டுமேயடா
ஏட்டிலிம் மந்திரந்தான் கண்டவருண்டோ - ஈதவ்
வீசன் திருவருளென் றெண்ணுவாயடா.

உள்ளந் தெளியுமொரு பாட்டிலேயடா - மிக்க
ஊக்கம் பிறக்குமொரு பாட்டிலேயடா
கள்ளின் வெறிகொளுமோர் பாட்டிலேயடா - ஊற்றுய்க்
கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலேயடா.

(வேறு)

'கரும்புத் தோட்டத்திலே' - எனுங்கவி
காதைச் சுடுதடா
இரும்பு நெஞ்சமுமே - நீராய்
இளகி யோடுதடா.

'செந்தமிழ் நாட்டின்' - முதன்மொழி
செவியிற் சேருமுன்னே
அந்தமில்லாமல் - உள்ளத்தில்
அமுத மூறுதடா.

'பாப்பாப் பாட்டிலே' - நெஞ்சைப்
பறிகொடுத் தேனடா
சாப்பா டேதுக்கடா - சீனி
சர்க்கரை ஏதுக்கடா.

அன்னை 'பாஞ்சாலி - சபதம்'
அறைதல் கேட்டேனடா
முன்னைக் கதையெல்லாம் - கண்ணின்
முன்ன டந்ததடா.

'வந்தே மாதரத்'தைப் - பாடவே
வாய்தி றந்தவுடன்
சந்தேக மில்லை - ஒருபுதுச்
சத்தி தோன்றுதடா.

'எங்கள் நாடு'தான் - பூபாள
இசையி லேறிடுமேல்
கங்கை யாறுபோல் - உளத்தில்
களிப்பொ ழுகுதடா.

'சின்னஞ் சிறுகிளி' - கனவில்
தினமும் காணுதடா
கன்னங் குளிரவே - முத்தமும்
கனிந்த ளிக்குதடா.

'கண்ணன் காதலன்' - எனக்கொரு
களிய முதமடா
விண்ண முதமுமே - அதனை
வெல்ல மாட்டாதடா.

'குயிலின் பாட்டி'னிலே - காதல்
கொப்பு ளிக்குதடா
செயல்ம றந்தேனடா - லாகிரி
சிரசிற் கொண்டதடா.

'சுதந்திரப் பாட்டில்' - உள்ளம்
துடிது டிக்குதடா
பதமெ ழும்புதடா - கையும்
படப டக்குதடா.

'தொண்டு செய்யுமடிமை' - என்னும்
சுடுச ரமோடி
மண்டையைத் தாக்குதடா - நெஞ்சும்
மடியப் பாயுதடா.

பெண்டு பிள்ளைகளின் - பெருமை
பெரித றிந்தேனடா
சண்டைகள் செய்ததெல்லாம் - எண்ணித்
தலைக விழ்ந்தேனடா.

ஏழை துயரெலாம் - அவனும்
எடுத்த டுக்கையிலே
மூளை கலங்குதடா - விம்மி
மூச்சும் முட்டுதடா.

பாவின் நயமெலாம் - யானும்
பகர வல்லேனோ?
ஆவின் பாற்சுவையை - நாழி
அளந்து காட்டிடுமோ?

★

—ஜனவரி, 1936.

ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை




# பனி முத்து

காலை இளங்கதிரவனின் கனகஒளி யினிலே,
காற்றில்அசைந் தாடுகிற மரகதப்புல் நுனியில்
கோலமுற விளங்கும்பனித் துளியெனும்வெண் முத்தே!
கொடுங்கதிரோன் நின்னழகைச் சிறிதும்மதிக் கிலனே!

மாலைவரை உன்னுருவம் மறையாதே இருந்தால்,
வருத்தமெலாம் மறந்தவனாய் மகிழ்ந்திடுவே னிங்கே!
காலனென வெயில்எறிக்கும் கதிர்க்கிரணங் களினால்,
கண்ணே! வெண் முத்தே! நின் காட்சிஇழப் பேனே!

மூங்கிலிலை மேலிருந்து தூங்கும்பனி முத்தே!
முழுப்பொழுதும் உருக்குலையா திருந்திடவல் லாயேல்,
ஏங்கிடும்யான் தாகம்பசி முதலியவும் மறந்தே,
இன்றுமுற்றும் இங்கிருந்தே இன்பம்மிகப் பெறுவேன்!

ஓங்குமரம் எழுப்புகின்ற ஓமெனும்இன் னிசையை
உளம்உருக உயிர்உருக உணர்வுருகச் செவியில்
வாங்கிஉன்றன் அழகுகண்டு மகிழ்ந்திருப்பே னன்றே!
வண்கதிரோன் உன்றனிடம் மனமிரங்க லென்றோ? ★

—மே, 1935.

'ஜோதி'

# முருகன் வந்தான்

வந்தான் வந்தான் முருகன் - உயர்
வான்முகி லூடு மயின்மிசை மருவி
வந்தான் வந்தான் முருகன்.

செந்தா மரைபோல் வதனம் - ஒரு
செங்கையில் வேல்இரு மங்கையர் இதயம்
சேர்ந்து மகிழ்ந்துற வந்தான்.

பன்னிரு கைகள் பரப்பிப் - பணி
என்னிரு கண்ணிலும் இன்பம் நிரப்பி
மன்னிய எழிலொடும் வந்தான்.

சொன்ன முடிகள் துலங்க - உளம்
சொக்கிய சுந்தர ரூபம் இலங்கச்
சோதி படர்குகன் வந்தான்.

ஆறு முகத்தின் விளக்கம் - நெஞ்சில்
ஆணவம் ஓட அணைந்து பிளக்க
அருளெனும் வாரிதி வந்தான்.

ஏறிய மாமயில் ஆட - உம்பர்
எங்கணும் கூடினர் மங்கலம் பாட
வீறிய வேலவன் வந்தான்.

வள்ளிதெய் வானை மணாளன் - பல
வண்டமிழ் மாலை மணந்துயர் தோளன்
மனமலர் அலர்தர வந்தான்.

உள்ளம் அவன்திரு உருவம் - வரைந்
தோதிய அன்பருக் குற்றது பருவம்
ஓமெனும் மயின்மிசை வந்தான்.

★

—நவம்பர், 1955.

# உதயம்

கங்குல் இருளில் விதைத்த கனற்பொறி
காட்டு மலராச்சு - வைகறை
மேட்டு மலராச்சு.

திங்களின் கூனல்அம் மேற்கினில் சாய்ந்துயர்
தேய்ந்து வெளுத்தாச்சு - தாரகை
மாய்ந்து மறைந்தாச்சு.

செய்யவள் வைகறை வான்வெளி யில்வன்னச்
சேறு தெளித்தாச்சு - இருள்
ஆறு வடிந்தாச்சு.

பொய்கையில் கண்வளர் பொன்மலர் மெல்லப்
புரண்டு விழித்தாச்சு - புலரிப்
போதை பிறந்தாச்சு.



—ஆகஸ்ட், 1954.

## கொத்தமங்கலம் சுப்பு

# பித்துப் பிடித்ததனால்

வள்ளிக் கிழங்கினைக் கல்லி எடுத்திட்ட
 பள்ளத்தி லேகிடந்தாள் - அவள்
வெள்ளி மலைக்கும ரேசன் மடியிலே
 மேவிய தேனோடி?

மானுக்குப் பெண்ணாகி ஈனக் குறக்குல
 மங்கைஎன் றேவளர்ந்தாள் - தேவர்
சேனைக் கதிபதி சிங்கார வேலவன்
 தேவியென் றானதும்ஏன்?

ஆலோலம் பாடிக் குருவிகள் ஓட்டியே
 அன்று புனங்காத்தாள் - இன்று
மாலோன் மருகன் மகராசி ஆனதை
 மறைகள் புகழ்வதும்ஏன்?

பாசி வடம்புலிப் பல்லு நரிப்பல்லு
 பாங்குடன் பூண்டவள்தான் - இன்று
பச்சைக்கற் பூரம் புனுகுசவ் வாதுதன்
 பாதத்தில் பூசுகிறாள்.

கூடை முறங்கட்டிக் கோணற்கொண் டைஇட்ட
 குறத்தி மகளுக்குத்தான் - பட்டில்
ஆடையும் கிரீடமும் அறுகால பூசையும்
 ஆலய மும்ஆச்சே.

பச்சைக் கிழங்கோடு தேனும் தினைமாவும்
 பாவை யவள்தின்றாள் - இன்று
பஞ்சாமிர் தம்பழம் பால்குடம் தேன்குடம்
 பருகி வளர்கின்றாள்.

காக்கை குருவியைக் கவண்எறிந் தோட்டியே
 காத்துக் கிடந்தவளை - இன்று
காத்துக் கிடக்குமாம் நீல மயில்அவள்
 காலடிப் பக்கத்திலே.

ஆவாரங் கொம்பிலே பரணைக்கட் டிக்கொண்டே
ஆலோலம் பாடினவள் - இன்று
ஆறு படைவீடும் ஏறிநின் றேகுன்றில்
அரசு செலுத்துகிருள்.

மானைத் துரத்தியே வந்த வடிவேலன்
மங்கை இவளைக்கண்டே
மயங்கித் தியங்கி மறுக்கொளி யானதன்
மார்க்கமும் தோன்றவில்லை.

சின்னத் தனத்துக்கோ சிரிப்பாணிப் பேச்சுக்கோ
சிறுக்கி முகத்துக்கோதான் - அவன்
என்னத்துக் காக மரமாக நின்ருனே
எனக்குத் தெரியவில்லை.

பம்மாத்துக் காரியைப் பார்த்து மயங்கியே
பண்டாரம் ஆனுனே?
அம்மாடி யோஅவள் ஆசை வலையிலே
ஆண்டியாய்ப் போனுனே?

கள்ளக் குறத்திக்குக் கந்தன்தொண் டாகவே
உள்ள விஷயம்என்ன? - சிறு
பிள்ளை முதல்அவள் உள்ளத்தி லேகந்தன்
பித்துப் பிடித்ததனுல்!

—ஜனவரி, 1955.

# ஆண் - பெண்

சூனியத்தில் உயிரணுவே சுழல லாச்சு;
சுதிகூடும் குரல்போல்வான் விரிய லாச்சு;
ஆன்மாவின் கனவொளிசேர் தாரை யாச்சு;
அஞ்சுமிருள் விழித்துயிலின் கனவ தாச்சு;
தேன்தோய்ந்த வெள்ளல்லிப் பூவைப் போலச்
சிலிர்த்திட்ட மதிச்சிம்மா தனத்தின் மீது,
நான்கான வான்திசையின் மையம் போன்ற
நான்குமுகப் பிரமன்தான் கவிபோல் வந்தான்.

புல்லெடுத்தான்; புகைவேள்வி மேக நீரைப்
புரோட்சித்தான்; காயத்ரி தென்றல் கூறி;
வில்லுடலாய் ஆற்றுநீர்ச் சுழல்போற் சுற்றி
விடுதலைக்கே இடமில்லாப் பாசத் தோடு,
கல்லதனைச் செதுக்கிஎழில் காட்டு வான்போல்
கர்ப்பூரச் சோதியுடன் உருப்ப டைத்தான்
பல்லினிலே வைரவொளி. இருட்கண் மின்னப்
பனிகுளித்த மென்மலர்போல் பெண்ணே நின்றாள்.

படைக்கின்ற தொழிலாளி பிரம தேவன்
பார்த்திட்டான். பண்வடிவாம் பெண்ணை உற்று;
அடைக்கின்ற விதிமாயம்; பிறப்பின் ஊற்றை
அருளுதற்கு முனைந்திட்டான்; அந்த வேளை,
கடைக்கண்கள் வேல்வீசப் பெண்ணே பார்த்தாள்.
கட்டுடலம் மின்னலையக் குயில்போற் சொன்னாள்,
''நடைகண்டு நான்உலகில் வாழ வேண்டில்
நற்றுணையும் எனக்கின்று நல்கீ'' என்றாள்.

தன்நெற்றி தனில்மலர்ந்த வேர்வை தன்னைத்
தாமரைபோற் கைகளினால் வழித்து வீசி,
நன்முத்துக் கடலெடுக்கும் செய்கை செய்தான்;
நாதமய உயிருதயம் ரவிபோல் மின்ன

இன்பத்துள் மூழ்குகிற இதயப் பாங்கும்,
இரும்புமலை தனைநிகர்த்த இருதோ ளோடு,
நன்பாலே சுடுகலையப் பொங்கல் போல,
நவவீரன் ஆண்அங்கே தோன்ற லானன்!

பெண்ணவள்மேல் ஆண்பார்வை போக்கி ஆசை
பெருக்கெடுக்க அருவியென அவளும் பார்த்தாள்.
கண்தன்னை ஒன்ருக்கிப் பேசிக் கொண்டார்;
காதலென்னும் கனற்கொழுந்து நடன மானர்.
விண்பெற்ற பிரமனையே மறந்து போனர்;
விதிப்பாதை தனிலவரே நடக்க லானர்.
உண்மைக்குப் பக்தியெனும் கண்ணீர் சிந்தி
ஓஹோ!ஹோ! என்றழுவார், உலக மீதே!



—பிப்ரவரி, 1956.

'சோமு'

# ஒரு வரம்

காலவழியில் நெடுந்தூரம் - சரிதம்
காண அரிய இருட்பாதை
ஆல விடமொடு செந்தழலும் - கூடி
அரசன் உருவினில் ஆண்டனகாண்.

பன்னும் அறநூல் பலகூறும் - பழி
பாவம்அனைத்தும் அவன் புரிந்தான்
என்ன கொடுமைகள் உண்டுலகில் - அவை
எல்லாம் விளைந்தன அவ்வுலகில்.

புதிய விதிகள் நிதம்செய்வான் - எதிர்
போதனை செய்தால் அதம்செய்வான்
விதியின் கொடுமை என்றெண்ணிப் - பலர்
வேற்று நகரம் விரைந்திட்டார்.

பின்னும் துயர்கள் நிற்கவில்லை - இடம்
பெயர்ந்தோர் தொல்லையும் பெயரவில்லை.
அன்னம் அறியா மதலைகளும் - அவன்
ஆணை அறிந்தே பதறுமம்மா.

மக்களில் அறிஞர் பலர்கூடி - அவன்
மாளிகை முன்னே ஒருமித்தார்
அக்கணம் மன்னன் மதிலேறி - அவர்
அத்தனை பேரையும் கொல்வனென்றான்.

நல்லோர் கையினில் வாளில்லை - எந்த
நாளும் சமரினில் நின்றறியார்
கல்லா அரசன் சொல்லுணரான் - எனக்
கடவுளை வேண்டிக் கரங்குவித்தார்.

அணுவில் உறைந்திடும் ஆண்டவனை - அவர்
அணுகுண் டருளிட வேண்டவில்லை

அணுவாய் உலகம் சிதறுதற்கே - வகை
ஆன கருவிகள் கேட்கவில்லை.

கரிய மனத்துக் காவலனே - வெற்றி
காணுதற் கான வழிதோன்றிப்
பெரிய மனத்தவர் உத்தமர்கள் - அருட்
பெருமான் தன்னையே வேண்டிடுவார்.

''வானின் றருளும் முகில்வண்ணா - நீதான்
வரமொன் றருளிட வேண்டுமையா
ஊனில் உறங்கிடு மக்களிடை - உயிர்
ஊட்டும் ஒருகவி உதவிடுவாய்.''

★

—மார்ச், 1953.

பெ. தூரன்

# மாமரக் கன்னி

**வ**ருகின்ருன் வசந்தனிங்கே வாட்டமேன் என்றுன்றன்
இருசெவிகள் தேன்பாய யாருரைத்தார் நற்சேதி?

பழங்கந்தை உடைநீத்துப் பசுமைகொண்ட மாமரமே!
அழகுச் சிறுகன்னி ஆகிவிட்ட மாயமென்ன?

வசந்தனுன்றன் காதலனே வரவேற்க மெய்த்தோழன்
வசந்தசகன் ஆர்வமுடன் மலையத்தே பெற்றுவந்த

தென்றல்தேர் வெள்ளோட்டம் வரநாணிச் சிவந்தாயோ?
சென்றுவந்த குயிற்பாணன் தீம்பாடல் கேட்டாயோ?

கேட்டவுடன் மெய்சிலிர்க்கக் கிழட்டாடை உதிர்ந்ததுவோ?
தீட்டரிய பசுமஞ்சள் செம்பசுமை தாம்குழைந்த

புதுப்பட்டு மெல்லாடை போர்த்துவன தேவதைபோல்
மதுத்துளிக்கும் பூச்சூடி வண்டினங்கள் இசைமுரல

இளமை வனப்பெல்லாம் எய்திநல்ல காட்சிதந்தாய்;
பளபளத்து மின்னிமின்னிப் பகலவனின் பொற்கதிரில்

என்னஎன்ன கற்பனைகள் என்னகத்தே கூட்டுவித்தாய்!
கன்னற் சுவைதெவிட்டக் கனியின்பம் தருதருவே!

ஆண்டுதொறும் எழிலிளமை அடைகின்ற தந்திரத்தை
ஈண்டெனக்குக் கூருயோ? இதயம்நிறை காதலதோ? 

—ஏப்ரல், 1955.

'சுரபி'

# சிப்பியின் காதல்

ஆழக் கடலுக்குள் நானிருந்தேன் - எங்கும்
அகண்ட வானத்தில் தானிருந்தான்
ஊழைத் தொடும்பஞ்ச பாணனவன் - எங்கள்
உள்ளம் இரண்டையுந் தொட்டுவிட்டான்.

விண்ணில் ஒளிர்ந்திடும் சோதியவன் - அலை
வீச்சில் அலைந்திடும் பேதைஇவள்
கண்ணொடு கண்ணிணை நோக்கிவிட்டோம் - அந்தக்
காமன் கணைகொடு தாக்கிவிட்டான்.

நீலக் கடலினுக் குள்ளிருந்தே - தலை
நிமிர்ந்து நிமிர்ந்துநான் பார்த்திருந்தேன் - இந்த
வேலையெ லாம்இன்ப வெள்ளம் சுழித்திடும்
வேளையை எண்ணியான் காத்திருந்தேன்.

மெல்லத் திரைக்கடல் மீதுவந்தே - அவன்
மின்னும் அழகினில் ஆழ்ந்துநின்றேன்
அல்லும் பகலும்கை ஏந்திநின்றேன் - அவன்
அன்பிற் கலந்திட ஏங்கிநின்றேன்.

மோன இரவினில் வந்திடுவான் - அவன்
மோகனச் சோதியில் மூழ்கிடுவேன்
ஈனப் பகல்வரின் ஏகிடுவான் - ஓர்
எல்லையில் லாத்துய ரெய்திடுவேன்.

எத்தனை யோயுகம் ஏகியதே - அதை
எண்ணிக் கணக்கிட யாரறிவார்? - இன்னும்
எத்தனை பேருகம் ஆகிடுமோ - என
ஏங்கிக் கலங்கிக் கருத்தழிந்தேன்.

வீசிச் சுழற்றிடும் பேரலைகள் - என்றன்
விதியை அலைக்க அலைந்துவந்தேன் - குறை
பேசவும் ஓர்துணை அற்றிருந்தேன் - பெரும்
பித்தி யெனத்துயர் உற்றிருந்தேன்.

வெந்துயர் மூச்சுத்தான் எட்டியதோ - என்றன்
வேதனைக் கீதமே எட்டியதோ
நொந்து படுந்துயர் நீரஅவன் - அருள்
நோக்கம் கிடைக்கும்நாள் கிட்டியதே.

வான மெலாம்இந்த மீனினத்தை - யாரோ
வாரி யிறைத்துத் தெளித்ததுபோல்
கான்மெ லாம்இன்ப மாமலர்கள் - ஒளி
கான்றிடப் பூத்து நிறைந்ததுபோல்.

கோடியாய் மீனினம் மின்னியது - சுடர்க்
கோலத்தை எங்கணும் பின்னிய தேஇன்பப்
பாடல்பல் லாயிரம் பாடியது - யாரும்
பகரவொண் ணுவெறி மூட்டியது.

ஆதவன் கண்டதோர் தாமரைபோல் - அந்த
அம்புலி கண்டதோர் அல்லியைப்போல்
வேதனைத் தீயினில் வாடிய என்னுளம்
வெற்றியை நாடி மலர்ந்ததுவால்.

நாணத் திரையினைக் கைவிலக்கி - என்றன்
நாதனை நோக்கிடக் கண்திறந்தேன்
ஆணழ கன்அந்த ரேவதியும் - என்றன்
ஆவி குளிர்ந்திடக் கண்திறந்தான்.

கள்ளம் பெருகிடும் கண்சிமிட்டில் - என்றன்
கற்பைஎல் லாங்கொள்ளை கொண்டுவிட்டான்
துள்ளி யெழுந்திடும் புன்சிரிப்பில் - நெஞ்சம்
சுற்றிச் சுழன்றிடப் பண்ணிவிட்டான்.

தண்ணென் றொருதுளி தட்டிவிட்டான் - என்றன்
தாக விடாயினைத் தீர்த்துவிட்டான்
விண்ணி லிழிந்த மழைத்துளியால் - என்றன்
விரக தாபமுந் தீர்த்துவிட்டான்.

காதலன் தந்த பரிசதனைச் - சேர்த்துக்
கட்டி யணைத்தே உளம்மகிழ்ந்தேன்
பாதலம் நோக்கி விரைந்துவந்தேன் - தன்னைப்
பார்க்க முடியாமல் கூசிநின்றேன்.

அன்பின் நினைவே நினைவதுவாம் - அவன்
ஆருயிர்ச் சின்னமென் கையதுவாய்
இன்பப் படுக்கை யதிற்கிடந்தேன் - எல்லை
இல்லா மகிழ்ச்சி தனிற்புரண்டேன்.

இன்பங் கலந்ததோர் துன்பமது - சற்றே
என்னை யுறுத்துதல் நானுணர்ந்தேன்
துன்பங் கலந்திட்ட இன்பமதொன் - றென்னைத்
தூக்கத்தில் ஆழ்த்திடக் கண்ணயர்ந்தேன்.

தூக்க மயக்கந் தெளிந்தெழுந்தேன் - அந்தத்
துன்ப மயக்கந் தெளிந்தெழுந்தேன்
பார்க்கவும் நெஞ்சம் பரிமளிக்கும் - சுடர்ப்
பாலகன் தன்னைப் பயந்தெடுத்தேன்.

அன்ப னளித்தபே ரின்பமிவன் - அவன்
அண்டமெ லாம்வீசும் சோதியிவன்
மன்பதை பார்த்திட அன்றவன்தான் - என்றன்
மார்பினில் முத்திய முத்தம்இவன். ★

—ஜனவரி, 1944.

'துறைவன்'

# சருகு

துளிரென வானை நோக்கித் தகதக என்ன மின்னிக்
குளிர்மழை குலவிக் காற்றின் கூந்தலே வருடி மேவும்
அளியினந் தமக்கு வான்தோய் அன்பெனக் கவரி வீசிக்
களியுற்ற காலம் அன்று; கவல்வதோர் காலம் இன்றே.

சிலிர்த்தது வாடை சீறச் செந்தளிர் மேனி யெல்லாம்
'சலித்தது; வானை நோக்கிச் சடைத்ததால் ஐயோ வென்றே
ஒலித்தது சருகு; 'நாமே உயர்த்தி'யென் றுன்னி, விந்தை
சொலித்தது போக இன்று சோர்வதோ கூளந் தன்னில்.

கொழுந்தெனக் குழைந்த தெல்லாம் குலேவுறப் புதுமை குன்றி
அழுந்திட அமைந்தேன்; செய்த அழிமதி யாதோ காணேன்.
செழுந்தளிர் மேனி வற்றச் சேர்ந்தனன் மண்மேல்; ஆங்கே
'எழுந்திரு, குழந்தாய்' என்றே எழுப்பினன் காற்றுத் தேவன்.

'பருகிய துயர மெல்லாம் பரிதிமுன் பனியில் தேய
கருகிய உறுதி மீண்டும் கவையுறத் தளிர்ப்ப, வன்மை
பெருகிய நெஞ்சு விம்மப் பெருநிலே உய்ப்பன்; வெற்றுச்
சருகெனக் கலங்கி ஓயும் சஞ்சலம் தவிர்க' என்றான்.

பிறக்கலாம் என்னும் ஆசை பிடர்பிடித் துந்த, மீண்டும்
சிறக்கலாம் என்னும் எண்ணம் சிந்தையில் அமுதம் பெய்யத்
'துறக்கலாம் வாழ்வை இன்று துணிவதே கருமம்' என்றே
'இறக்கலாம். இளப்பம் இல்லே' என்பதோர் தெளிவு கண்டேன்.★

—ஆகஸ்ட், 1944.

# உதயம்

குளிரும் தென்றல் அசைந்தசைந்து
  குலவி மகிழ்ந்து தவழ்ந்திடவே,
மிளிரும் உதயச் செவ்வண்ணம்
  விரைந்து கிழக்கில் பெருகிடவே,
ஒளிரும் சிறைமென் புள்ளினங்கள்
  ஒன்றாய் இசைகள் பாடிடவே,
தளிரும் இலையும் வளர்காவில்
  தண்ணார் மலர்கள் கண்விழிக்கும்.

கன்னிக் கடலின் முத்தணிந்து
  காலைப் பசும்புல் களிப்பெய்தும்.
மின்னும் மணிகள் பலகோத்து
  மென்காற் சிலந்தி வலைபின்னப்
பொன்னின் ஆடை என்றதனைப்
  போற்றிச் செடிகள் புனைந்தொளிர,
என்மெய் தீண்டி இளங்கதிரொன்று
  ''எழுவாய்! உதயம்!'' என்றதுவே.

முடிவில் கடலின் கரையினிலே
  முதிர்ந்த சங்கைக் கண்டெடுத்தேன்;
நொடியில் அதனைச் செவிசேர்த்தேன்;
  நுட்ப ஒலிகள் பலகேட்டேன்;
இடியின் ஒலியும் மழைஒலியும்
  இந்த உலகின் ஒலியாவும்
படியக் கலந்த ஒலியொன்று
  பண்ணார் 'ஓம்!ஓம்!' என்றொலிக்க,

கேட்டேன் அந்தப் பேரொலியை,
  கேட்டு லயித்தேன் அவ்வொலியில்,
காட்டின் ஒலியும் கடலொலியும்
  கானப் புள்ளின் பண்ணிசையும்
பாட்டின் இசையும் வாத்தியங்கள்
  பாடும் இசையும் சங்கினுள்ளே
கூட்டி ஒன்ருய் வைத்தவரார்?
  கூற வல்லோர் கூறுவரே.



—ஏப்ரல், 1933.

மே. ரா. மீ. சுந்தரம்

# வாலிபர் கானம்

**பா**ன்னிறக் கூடைகள் தாங்கிடுவோம் - யுவப்
பூங்காவுக் கொன்ருக ஏகிடுவோம் - பல
புன்னகைப் பூக்கள் பறித்தே அவைகளைப்
புவியெங்கும் வாரி இறைத்திடுவோம்.

பாட்டுடன் பண்ணை இசைத்திடுவோம் - அதைப்
பறவைகள் போலப் பயின்றிடுவோம் - எங்கள்
கூட்டுக் களியினிற் சேர்ந்துவிட் டால்பின்னர்
கொள்வதுண் டோதுயர் உள்ளத்திலே?

காதினுல் கேட்பது காதல்மொழி - எங்கள்
கண்களால் காண்பதும் காதல்தெய்வம் - எங்கள்
சாதியின் நாமமே காதற்கூட்டம் - நாங்கள்
சாதலுக் கஞ்சிடோம் காதல்பெற.

மற்றவர் வாழ்க்கையில் தோல்விகாண்பார் - அவர்
''மண்'' எனப் பூமியை இகழ்வுசெய்வார் - புகழ்
வெற்றியின் கோலத்தை எங்கும்காண்போம் - உயர்
விண்ணை இப் பூமியில் ஊன்றிவைப்போம்.



—ஏப்ரல், 1935.

வி. துரைசாமி

# அன்னத்தின் அகம்பாவம்

**வா**னெங்கும் பறந்து சென்று வையகம் எங்கும் சுற்றிக்
கானங்கள் பாடிப் பாடிக் கண்டம்வற் றியதோர் வண்டு
தேனெங்கும் நிறைந்த சோலை தெற்றென எதிரில் தோன்ற
ஆனந்தம் பொங்க உள்ளே நுழைந்ததங் கமுதம் உண்ண.

வரிச்சிற கசைத்து மெல்ல வட்டமிட் டுழலும் வண்டு
பரிச்சயம் இல்லாச் சோலை தன்னிலே பாண்மி ழற்றி
விரிச்சநல் இதழும் காதம் வீசிடும் மணமும் வாய்ந்து
சிரிச்சதோற் றத்தி லங்கும் செண்பகத் தமர்ந்த தம்மா!

காய்ந்தெலும் பான மாடு கம்பங்கொல் லையிலே உண்ணப்
பாய்ந்ததாம் எனவே வண்டு பனிமலர் மதுவ ருந்தி
வாய்ந்திடும் இளைப்புத் தீர வனசமா மலரைத் தேடிப்
பாய்ந்திட ஆங்கோர் அன்னம் பள்ளிகொண் டிருக்கக்
கண்டே.

அருகினிற் பரந்து சென்றே அன்னத்தை விளித்தே, ''ஐயா!
மருவியிம் மலரில் தூங்கி இளைப்பினை மாற்ற வந்தேன்.
அருள்புரிந் தெனக்கும் கொஞ்சம் இடமளித் தாள்வீர்!''
என்றே
சுருதியின் இசைந்த சொல்லால் சுரும்புதான் பணிவாய்ச்
சொல்ல.

பால்நில வெறிக்கும் வெண்மைப் பனிச்சிற கன்னம்
செம்மைக்
கால்கொடு நிமிர்ந்து நின்று கடைக்கண்ணால் வண்டை
நோக்கி
''மால்கொண்டு நின்றாய்! இங்கு மதுவினை அருந்தி வந்தாய்;
கோல்கொண்டு விரட்டு முன்பு கும்பிட்டே ஓடு வாயே!''

என்றுசொற் றிடலும் அந்த எழில்மது கரமும் கூறும்:
''நன்றுசொற் றனை! இம் மாற்றம்! நளினமா மலராம்
இல்லம்

உன்றனக் குரிய தென்றே உன்னினை போலும்! அவ்வா
றன்றிது யார்க்கும் சொந்தம் என்பதை அறிவாய்! ஐயா!''

என்னலும் அன்னம் கூறும்; எக்களிப் புடனே, ''வண்டே!
என்னையும் மதியா திங்கே எதிர்த்துநீ பேச வந்தாய்!
என்னஆ ணவமு னக்கே? எம்போல்வா ரோடு நீயும்
துன்னியிம் மலரில் மேவத் துணிதல்எத் தகைய தம்மா?

முழுமதி நிலவு போலும் மூசுவெண் ணிறத்தோம் யாங்கள்
விழுமிய சிறப்பால் மிக்கு விளங்கிடும் குளமும் யாவும்
பழுதிலா தெங்க ளுக்காப் படைத்தனன் இறைவன்! எம்மைத்
தொழுதுசெல் லுதலே நீதி!'' என்றது துணைக்கால் அன்னம்.

அன்றியும் வண்டை நோக்கி, ''அக்கினிக் கபிஷே கித்த
குன்றிய நிறத்தாய்! நீஎம் கூடவந் திருத்தல் ஒவ்வாது''
என்றலும் மதுக ரத்திற் கிணையிலாக் கோபம் பொங்க
துன்றிய சிறக சைத்துக் குதித்தது சுகந்தப் பூவில்.

''எத்தகை யகம்பா வத்தால் இம்மொழி புகன்றாய்? உன்றன்
சித்தம்இத் தகைய தாயின் சீக்கிரம் அழிதல் திண்ணம்!
வித்தகமாந்தர்க் குள்ளும் இவ்வெண்ணம் விளங்கும் போது
புத்தியில் லாத நின்னைப் பழித்திடல் புகழோ அம்மா!

இனியும்நீ இவ்வா றெண்ணி இருத்தலை ஒழிப்பாய்'' என்றே
கனிரச மென்னும் தன்மைக் காந்தாரம் இசைத்து மெல்ல
வனசமா மலரை நீங்கி வான்சிற கசைத்து வானில்
மனசின்வே கத்தை மிஞ்சிப் பறந்ததவ் வண்டு மாதோ. ★

—ஜனவரி, 1945.

'தமிழ் ஒளி'

# வசந்த மஞேகரி

**மா**மரக் கொம்புகள் தோரணங் கொண்டு
மலர்கள் அசைந்தாடக்
காமனை சென்று கருங்குயிற் கன்னி
கலந்த இசைபாடப்
பூமகள் புன்னகை கொண்டு மலர்கள்
புனைந்து புனைந்தாடக்
கோமளவல்லி வசந்த மஞேகரி கொஞ்சிட வந்தாளே!

வில்லொடு மன்மதன் வீதியில் வந்து மலர்ச்சரம்
விட்டோடக்
'கொல்'லென வஞ்சியர் சிந்து சிரிப்பொலி கூற்றம்
எனச்சாட,
'நில்'லென ஆடவர் நெஞ்சினைக் கவ்வ, நினைவு
கழன்றோடப்
புல்லிட வந்த வசந்த மஞேகரி போதை கொடுத்தாளே!

மாமலர்க் கன்னி மலர்ந்திட வண்டுகள் வந்து புடைசூழ
'மாமன் மகள் இவள்' என்று வளர்மதி மாலை
எடுத்தேகக்
காமர் தடத்தில் மலர்ந்திடும் அல்லிகள் காதல்
மொழிகூறக்
கோமளவல்லி வசந்த மஞேகரி கொஞ்சிட வந்தாளே! ★

—மார்ச், 1956.

‘வேலன்’

# வாணி

தண்ணிட்ட வெண்ணிலா, தண்ணில
வேற்ற தமிழ்மலயம்
நண்ணிட்ட பூம்பொழில், பூம்பொழில்
ஊறும் நளிர்சுனைபோல்
எண்ணிட்ட யாவும் கவிதைசெய்
வாள், செய்த இன்கவிக்குப்
பண்ணிட்ட நட்டம் பயின்றென்றன்
சிந்தை பயின்றனளே.

பயின்றென் மனத்தினிற் பண்ணுகி
நின்றவள், ’பார்முழுதும்
இயன்றஎல் லாம்கலை இன்பூற
நின்ற எழிற்கனவாய்த்
துயின்ற பொழுதும் துயில்நீங்கித்
தொலைத் துயரமெலாம்
அயின்ற பொழுதும் அமுதூற
நின்றிட்ட ஆரமுதே.

ஆரமு தேஅமு தூறக்
களித்திடும் ஆருயிரே
சீரமு தேசிந்தை தித்திக்கத்
தேங்கிய தீஞ்சுவையின்
ஓரமு தேஎன் உணர்வுக்குள்
ளேநின்ற ஞானம்என்னும்
பேரமு தேபெரும் பித்தம்
தெளியும் பெருமருந்தே.

பெருமருந் தாகிஎன் பீழை
தொலைத்துப் பிழைகளெல்லாம்

ஒருமருந் தாகி உலைந்திடச்
செற்றவள்; உள்ளமெலாம்
தருமருந் தாகித் தழைத்தவள்;
நாடும் தவமுனிவர்
அருமருந் தாகி அருளாகி
ஞானம் அளித்தவளே.

அளித்துக் களித்திடும் அன்னை,
உலகம் உயிர்களெலாம்
ஒளித்துப் படைத்திடும் உன்மத்தி,
உன்மத்தம் பின்னொழியத்
தெளித்துக் கொடுத்திடும் தெள்ளியல்,
தெள்ளிய ஞானியரை
விளித்துக் கலைதந்து விஞ்ஞான
சித்தி விளக்குவளே.



—அக்டோபர், 1954.

ஆர். ஜகந்நாதன்

# தாய்மொழி

## நாடக பாத்திரங்கள்

பிறவாத குழந்தை    மாலினி    சுதா
பேபி    சுமதி

(இன்னமும் பிறவாத குழந்தை ஒன்று யோசனையில் ஆழ்ந்த வண்ணம் இருக்கிறது.)

**பிறவாத குழந்தை:** யோசிக்காமல் எவ்வளவோ ஜன்மங்கள் எடுத்தாச்சு. கஷ்டங்களும் பட்டாச்சு. இந்தத் தரம் நன்னா யோசிச்ச பிறகு தான் பிறக்கலாம் என்றால் ஓர் இடமும் சரியாகத் தோன்றவில்லையே! கலி முற்றியிருக்கும் காலம். சங்கட நிலைமை. ஒண்ணும் சரியாக இல்லையே!

ஆனால் பிறவியை எவ்வளவு நாள் தள்ளிப் போடறது? அழுதும் அழுதும் அவளேதான் பெற வேண்டும் என்று சொல்லுவார்களே! அது மாதிரி நானேதான் இப்போது ஜன்மம் எடுக்க வேண்டும். யோசித்து யோசித்துத் தள்ளிப்போடுவதனால் பயன் இல்லை. பிரம்மாவின் கோபத்திற்கும் ஆளாவேன்.

கால தேச வர்த்தமானம் எப்படி இருந்தால் என்ன? அவைகளினால் சிருஷ்டி நிற்குமா? அவைகளைப்பற்றி நான் எதற்காகக் கவலைப்பட வேண்டும்?

எனக்கு வேண்டியதென்ன? அருமையாய் அழைக்க ஓர் அம்மா; அவளை இப்போது கண்டு பிடித்து அவளிடம் ஜனிக்கிறேன். பாக்கி விசாரங்களை எல்லாம் பிறந்த பிறகு பட்டுக்கொள்ளலாம்.

நான் தேடும் அம்மாவுக்கும் எனக்கும் அந்தரங்க அன்பு இருந்தால் போதும். உலகம் தலைகீழாக இருந்தாலும் பாதகமில்லை. அம்மாவின் அன்பைக்கொண்டுதானே இத்தனை ஜன்மங்களையும் லேசாகத் தட்டிக் கழித்துவிட்டேன்? இப்போது அப்படியே செய்துவிடுகிறேன்.

எனக்குத் தகுந்த அம்மா யார்? அவளை எப்படித் தேர்ந்தெடுப்பது? கறுப்பாக இருப்பவள் தேவலையா? மாநிறமாக இருப்பவளா? அல்லது நிலாப்போல் வெளுப்பாக இருப்பவளா? புடைவையைச் சநாதன ரீதியில் கொசுவம் வைத்துக் கட்டிக்கொள்கிறவளா, புது மோஸ்தராக மாம் பழக் கட்டுக் கட்டிக்கொள்கிறவளா? அல்லது மடிசாறு வைத்து ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தை அநுசரிக்கிறவளா?

நாலு குழந்தைகளைக் கேட்டு விசாரிக்கிறேன். பிறகு ஒரு வேளை நல்ல அம்மாவைத் தேர்ந்தெடுக்க எனக்குத் தைரியம் உண்டாகலாம்.

(அச் சமயத்தில் சுதா என்ற சிறுமி துயரமுள்ள முகத்தோற்றத்துடன் வருகிறாள்.)

ஏ பொண்ணே, ஏன் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக்கொண்டிருக்கே?

சுதா: நான் எப்படி இருந்தால் உனக்கென்ன? நீ யாருடீ கேட்கிறதற்கு?

பி. கு.: ''டீ'', ''கீ'' என்றெல்லாம் என்னைக் கூப்பிடக்கூடாது, தெரியுமா?

சுதா: ஏன் கூப்பிடக்கூடாது? நீயும் என்னைப்போல் ஒரு பெண் தானே?

பி. கு.: நான் பெண் அல்ல.

சுதா: ஆனால் பிள்ளையா? சரி, நான் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக்கொண்டிருந்தால் உனக்கு என்னடா?

பி. கு.: ''டா'' என்று என்னை அழைக்காதே. நான் பிள்ளை அல்ல.

சுதா: பெண்ணுமில்லை என்கிறாய், பிள்ளையுமில்லை என்கிறாய். பின்னே நீ ஆரு?

பி. கு.: நான் இன்னும் பிறக்கவே இல்லை. இனிமேல்தான் பிறக்க வேண்டும். அதைப் பத்தித்தான் யோசித்துக்கொண்டிருக்கிறேன்.

சுதா: எப்படிப் பிறக்கப்போறே? பிள்ளையாகவா, பெண்ணாகவா?

பி. கு.: அதை இன்னும் தீர்மானிக்கவில்லை. நல்ல அம்மாவைக் கண்டு பிடித்த பிறகுதான் தீர்மானிக்கப்போகிறேன். உங்கம்மா எப்படி?

சுதா: எங்கம்மாவா? கோபக்காரி, ரோசக்காரி, அவசரக்காரி, கண்டாலே பிடிக்கவில்லை.

பி. கு.: ரொம்பப் படபடவென்று பேசறயே. உன்னைப்போலத்தான் உங்கம்மாவுமோ?

சுதா: இன்னும் ஜாஸ்தியாக. கறிகாய்க்காரனோடு அடாவடி பேரம் பண்ணுவாள். பலன் என்ன தெரியுமா? தப்புத் தராசில் நிறுத்துக் கொடுத்து அவன் அவளை ஏமாற்றிவிடுவான். பால்காரனிடம் கொஸருக்காகச் சண்டை போடுவாள். அவன் பாலில் தண்ணீரை விட்டுப் பெருக்கிவிடுவான். வேலைக்காரனிடம் நிமிஷத்திற்கு நிமிஷம் ஏதாவது குறை சொல்லிக்கொண்டே இருப்பாள். ஒருவனும் ஒரு மாசத்துக்கு மேல் எங்காத்தில் தங்கமாட்டான்.

பி. கு.: உங்கம்மாவுக்குப் பிறத்தியாரிடம் சரியாகப் பழகத் தெரியாதுபோல் இருக்கு. அது எப்படி இருந்தால் என்ன? உன்னிடம் எப்படி நடந்துகொள்ளுவாள்? அதுதானே முக்கியம்?

சுதா: என்னத்தைச் சொல்லறது போ! அப்படியும் இப்படியுமாகத்தான் இருக்காள். ஒரு சமயம் அடிக்கிறாள், மறு சமயம் அணைக்கிறாள். ஒரு சமயம் கடிந்து பேசுகிறாள், மறு சமயம் கொஞ்சிக் குலாவுகிறாள். எல்லாத்தையும் யோசித்தால் மோசமில்லை என்று தோன்றுகிறது. நீயும் வந்துடேன். தம்பிப் பாப்பாவாக வந்துடு. குஷியா இருக்கும்.

பி. கு.: இரு, இரு. அவசரப்படுத்தாதே. யோசித்துத்தான் பிறக்கப் போகிறேன். சரி, நீ என்னிடம் வரச்சே மூஞ்சியைத் தொங்கப் போட்டுக்கொண்டு வந்தாயே, எதற்காக?

சுதா: அதை உன்னிடம் சொல்லப்படாது.

பி. கு.: ஏன்?

சுதா: ஆத்து விஷயமாச்சே. பிறத்தியாரிடம் சொல்லலாமா?

பி. கு.: சொல்லாவிட்டால் நான் உன்னுடைய வீட்டில் பிறக்க மாட்டேன்.

சுதா: அப்படிச் சொல்லாதே. அம்மா சொன்னது எனக்குப் பொறுக்கவில்லை. துக்கம் துக்கமா வந்தது.

பி. கு.: என்ன சொன்னுள்?

சுதா: சரி, சொல்லறேன் கேள். பிறந்தப்புறம் கேட்பதைப் பிறப்பதற்கு முந்தியேதான் கேட்டுக்கோயேன். என் மேல் ஏதோ கோபித்துக் கொண்டு, ''கட்டையிலே வைக்க'' என்ருள்.

பி. கு.: அப்படின்ஞ என்ன தெரியுமா?

சுதா: தெரியாது. ஏதோ வசவு என்று மட்டும் தெரியும்.

பி. கு.: வசவா? மோசமான வசவு. உங்கம்மாவிடம் நான் பிறக்க மாட்டேன். போய்ச் சொல்லிவிடு.

சுதா: அப்படி என்ன அது ரொம்பக் கெட்ட வசவா?

பி. கு.: ஆமாம். பிறக்கப்போகும் குழந்தைக்குக் ''கட்டையிலே வைக்க'' என்கிற வார்த்தை உத்ஸாகம் கொடுக்குமா? நான் மாட்டேம்மா!

சுதா: எனக்கு அதனுடைய அர்த்தம் தெரியவில்லை. சும்மா இருந்தேன். அர்த்தம் தெரிஞ்ச நீ பிறந்த பிறகு அம்மாவிடம் நேரே சொல்லேன். அப்புறம் அவள் அந்த வார்த்தையைப் பிரயோகிக்க மாட்டாள்.

பி. கு.: ஆனல் முதல் மூன்று நான்கு வருஷங்கள் எனக்குப் பேச வராதே. அவளுடைய பேச்சைத்தானே கேட்க வேண்டியிருக்கும்?

சுதா: கேட்டால் போச்சு. அதனுடைய அர்த்தம் அப்போ தெரியாது. பேசத் தெரிஞ்சவுடன் நீயும் திருப்பிக் கொடு. எதுக்கும் நீ வா. நீ வந்தால்தான் எனக்குச் சுகம். வந்துடு.

பி. கு.: இரு, இரு; உங்காத்தில் எத்தனை பேர்?

சுதா: அம்மாவைத் தவிர்த்தால் நான் ஒருத்திதான். அதனுல்தான் உன்னை வந்துடு என்கிறேன்.

பி. கு: உங்கப்பா இல்லையா?

சுதா: இருக்கார். ஆனல் அவரால் நமக்குக் கவலை இராது.

பி. கு.: ஏன்? அவர் எப்படிப்பட்டவர்?

சுதா: காலையில் எட்டரை மணிக்கு எழுந்திருப்பார். காபி சாப்பிடுவார். ரேடியோவைத் திருப்புவார், குளிப்பார், சாப்பிடுவார், ஆபீஸுக்குப் போவார். சாயங்காலம் திரும்பி வருவார். காபி சாப்பிடுவார், கிளப்புக்குப் போவார், திரும்பி வருவார், சாப்பிடுவார், ரேடியோவைத் திருப்புவார், தூங்குவார்.

பி. கு.: இவ்வளவுதானு உங்க அப்பா? வேறு ஒன்றும் தெரியாதா அவருக்கு?

சுதா: பாடத் தெரியும்.

பி. கு.: நன்ருகப் பாடுவாரா?

**சுதா:** அநேகம் பாட்டுகளின் முதல் அடிதான் தெரியும். அவைகளையே தாறுமாறாகக் கோத்துப் பாடுவார். நான் வேண்டுமானால் மாதிரிக்கு ஒரு பாட்டைப் பாடுகிறேன், கேள்.

(பாடுகிறாள்)

"நேற்றந்தி நேரத்திலே நீராடும் கரைதனிலே,
நீரேன் பள்ளி கொண்டீரையா?
க்ஷீர சாகர சயனா,
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி,
உன் திருவடி சரணமென்று நான் தப்பி வந்தேன்,
எனக்குன்னிருபதம் நினைக்க வரமருள்வாய்.''

எப்படி இருக்கு பாட்டு?

**பி. கு.:** தாறுமாறாகப் பாடுவார் என்று சொன்னாயே; உனக்கு எப்படித் தெரியும்?

**சுதா:** அம்மா சொல்லிக் கேட்டிருக்கேன்.

**பி. கு.:** பேசுகிறதைப் பார்த்தால் நீ அம்மா பொண்போலிருக்கு. உனக்குத் தம்பியாய்ப் பிறந்து அப்பா கட்சியில் சேரலாம் என்று தோன்றுகிறது.

[மாலினி என்னும் சிறுமி வருகிறாள்.]

**மாலினி:** சுதா, உன்னைத்தான் தேடி வந்தேன்.

**சுதா:** என்ன விஷயம்?

**மாலினி:** விளையாடலாமென்று..இது யாரு புதிசு போலிருக்கே? இதையும் சேத்துக்கொண்டு பாண்டியாடலாமா?

**சுதா:** ஆடுவோம்..இரு, எங்கம்மாவிடம் சொல்லிவிட்டு வருகிறேன்.

(போகிறாள்.)

**மாலினி:** இந்த ஊருக்குப் புதிசா நீ?

**பி. கு.:** ஆமாம்.

**மாலினி:** ''ஆடமோடி கலதா'' தெரியுமா, உனக்கு?

**பி. கு.:** ''ஆடமோடி கலதா'' என்றால் என்ன?

**மாலினி:** பாட்டு.

**பி. கு.:** தெரியாது.

**மாலினி:** நீ எங்க ஸ்கூல் இல்லையா?

**பி. கு.:** இல்லை.

**மாலினி:** என்ன என்ன நடந்திருக்கு உனக்கு? The weaver and the shuttle (நெசவுகாரனும் குழலும்) பாடம் நடந்திருக்கா?

**பி. கு.:** இல்லை.

**மாலினி:** ''வேங்கை வரிப்புலி நோய்?''

**பி. கு.:** இல்லை.

**மாலினி:** ''லால்சீ குத்தா (लालची कुत्ता)?''

**பி. கு.:** இல்லை.

மாலினி: *100 வாழைப்பழம் 1½ ரூபாயானால் 125 வாழைப்பழம் என்ன விலை?*

பி. கு.: தெரியாது.

மாலினி: இது கூடத் தெரியாதா? உன்னை இன்னும் வாசிக்க வெக்கல்லே?

பி. கு.: இல்லே.

மாலினி: உன் பேரென்ன?

பி. கு.: லொளலொளாக் கட்டை.

மாலினி: என்ன?

பி. கு.: ஆமாம். நான் இன்னும் பிறக்கவே இல்லே. எந்தாத்தில் பிறக்கலாம் என்று யோசித்துக்கொண் டிருக்கேன். அதைப்பற்றிச் சுதாவோடு பேசிக்கொண் டிருக்கச்சேதான் நீ வந்தே.

மாலினி: நல்லது, நான் சொல்லறதைக் கேள். எங்காத்தில் பிறந்துவிடு.

பி. கு.: என்னத்துக்காக?

மாலினி: கணக்குச் சரியாகப் போய்விடும். இப்போ நாங்கள் நாலு பேர்தான் இருக்கோம். அப்படி இருக்கச்சேயே எங்கம்மா, "ஆண்டி பெத்தது அஞ்சும் குரங்கு" என்று எங்களைச் சொல்லுகிறாள். நீயும் வந்துட்டயானால் கணக்கில் குறைவு ஏற்படாது.

பி. கு.: நீங்கள் நாலு பேர் ஆராரு?

மாலினி: நான் தடிச்சி, என் தம்பிகள் ஒருவன் பஸவன், இன்னொருவன் இட்லி, கடைசியிலே பயறு.

பி. கு.: "தடிச்சி, பஸவன், இட்லி, பயறு!" ரொம்ப நன்னா இருக்கு! உங்களுக்கெல்லாம் இந்தப் பெயர் வெச்சது யார்?

மாலினி: எங்கம்மா.

பி. கு.: அப்படியானால் நான் உங்காத்தில் பிறக்க மாட்டேன். உங்கம்மாவுக்கு வாய்த் துடுக்குப் போல் இருக்கு. எனக்கும் ஏதாவது அவிசப் பெயரிட்டுடுவாள்.

மாலினி: அதற்கு நான் ஓர் உபாயம் சொல்லுகிறேன், கேள். நான் உனக்கு முன்னாடியே "ரத்னம்" என்று பெயர் வைத்து விடுகிறேன். பிறகு நாங்கள் நாலு பேரும் உன்னை "ரத்னம், ரத்னம்" என்று கூப்பிடுவோம். அப்போ, அம்மாவும் அந்தப் பிராமணனும் அப்படியே உன்னைக் கூப்பிடப் பழகிக் கொள்ளுவார்கள்.

பி. கு.: அந்தப் பிராமணன் என்றாயே அவர் யாரு?

மாலினி: எங்கப்பா.

பி. கு.: "பிராமணன்" என்று அவருக்கு யார் பெயரிட்டது?

மாலினி: அம்மாதான்.

பி. கு. நல்ல அம்மாடியம்மா உனக்கு! உங்காத்தில் பிறக்க எனக்கு இஷ்டமில்லே என்று உங்கம்மாவிடம் சொல்லு. எப்போ அவள் வாயை அடக்கிக்கொண்டு மரியாதையாகப் பேசக் கத்துக் கொள்ளுகிறாளோ, அப்போதான் நான் உங்காத்தில் பிறக்க இஷ்டப்படுவேன்.

[சுமதி என்ற மற்றொரு சிறுமி வருகிறாள்.]

**சுமதி:** என்னடி மாலினி, நான் வருவதைக்கூடக் கவனிக்காமல் இருக்கே?..புது ஸ்நேகம் போலிருக்கு; புது மோகமோ?

**மாலினி:** சீ, சீ இதையா சொல்லறே? இது லொளலொளாக் கட்டைன்னு!

**சுமதி:** யாரு!

**மாலினி:** இது சேத்தியில்லேடி. உப்புக்குச் சப்பாணி ஓலைக்கு எழுத்தாணி. இது இன்னும் பிறக்கவே இல்லை. எங்கே பிறக்கலாம் என்று யோசிச்சுக் கொண்டிருக்காம். எங்காத்தில் பிறக்கச் சொன்னேன். மாட்டேங்கறது. நீ இங்கேயே இரு.

[போகிருள்.]

**சுமதி:** ஐயோ பாவம்! மாலினி சொன்னது நிஜந்தானு?

**பி. கு.:** ஆமாம்.

**சுமதி:** இனிமேல்தான் பிறக்கப் போறயா?

**பி. கு.:** ஆமாம்.

**சுமதி:** எப்படிப் பிறக்கப் போறே? பிள்ளையாகவா? பெண்ணுகவா?

**பி. கு.:** இன்னும் தீர்மானிக்கவில்லை, கிடைக்கிற அம்மாவுக்குத் தகுந்தாப் போலப் பிறப்பேன்.

**சுமதி:** ஆனுல் சரி, எங்காத்தில் அம்பிப் பாப்பாவாகப் பிறந்துடு. எல்லோருக்கும் ரொம்ப நன்னுயிருக்கும்.

**பி. கு.:** எப்படி?

**சுமதி:** இல்லாவிட்டால் எங்கம்மா அழருளே.

**பி. கு.:** எதுக்காக அழருள்?

**சுமதி:** நாங்கள் எல்லாரும் பெண்களாய்ப் பிறந்துவிட்டோமே என்று ரொம்பக் கவலைப்படுகிருள். என் தங்கை பிறந்தபோது அழுதாளாம்.

**பி. கு.:** அழுவானேன், பயந்தாங்கொள்ளி!

**சுமதி:** ஏற்கனவே அஞ்சு பெண்களாச்சு; போராதுன்னு இன்னொரு பெண் பிறந்திருக்கே என்று விசாரப்பட்டாளாம். ஆகையால் நீ எங்காத்துக்குத் தம்பியாய் வந்துடு.

**பி. கு.:** உங்கம்மாவுக்குக் கொஞ்சம் தைரியம் உண்டாக்கவாவது நான் உனக்குத் தம்பியாகப் பிறக்கலாம். ஆனுல்....

**சுமதி:** என்ன யோசிக்கறே?

**பி. கு.:** நீங்கள் ஆறு பேரும் பெண்கள் ஆச்சேன்னு யோசிக்கறேன்.

**சுமதி:** அதனுல் என்ன? உன்னை அருமையாக வெச்சுக்கறோம்.

**பி. கு.:** அதனுல்தான் எனக்குப் பயமா இருக்கு. செல்லம் கொடுத்து என்னைப் பாழாக்கிவிடுவகளே.

**சுமதி:** இல்லவே இல்லை. நான் வேணுமானுல் சத்தியம் பண்ணித் தேரன்.

பி. கு.: அங்கே போகப்படாது, இங்கே வரப்படாது, அதைத் தொடப்படாது, இதை எடுக்கப்படாது என்றெல்லாம் கட்டுப்பாடு கூடாது. தெரியுமா?

சுமதி: சரி.

பி. கு.: மண்ணில் விளையாடினாலும் சரி, தண்ணீரில் தொளைஞ் சாலும் சரி, புஸ்தகத்தைக் கிழித்தாலும் பண்டங்களை வாரி இறைத் தாலும், அம்மா, பெண்கள் எல்லாரும் பொறுத்துக்கணம்.

சுமதி: சரி.

பி. கு.: ஆனால் இன்னும் ஒரு தடங்கல் இருக்கே.

சுமதி: என்ன அது?

பி. கு.: சுதா உனக்கு முன்னால் வந்து அழைச்சிருக்காளே.

சுமதி: அழைச்சாளா? அவள் ஒண்ணுமில்லாத விஷயத்துக்கெல் லாம் பொய் சொல்லுவளே. உன் இஷ்டம், வேணுமானால் அவாத் துக்கே போ.

பி. கு.: அவளிடம் போக வேண்டாம்னால் மாலினி தங்காத் துக்கு அழைச்சிருக்காளே.

சுமதி: மாலினியா? அவள் எடுத்ததுக்கெல்லாம் சண்டை பிடிப் பளே. என்னமோ, நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். அப்புறம் உன் இஷ்டம்.

பி. கு.: சுமதி, நான் சொல்வதைக் கேள். சுதாவும் மாலினியும் அவா அம்மாவிடம் பேசப் போயிருக்கா. நீயும் உங்கம்மாவிடம் பேசி விட்டு வா. அதற்குள் நானும் ஒரு தீர்மானத்துக்கு வரப்பார்க்கிறேன்.

சுமதி: சரி, இங்கேயே இரு. சீக்கிரம் திரும்பி வறேன். (போகிறாள்.)

[பேபி என்னும் மற்றொரு சிறுமி ஓடோடி வருகிறாள்.]

பேபி: பாத்தியா? என்னை ஒரு குத்தா (நாய்) கடிக்க வந்தது. ரொம்ப டர் (பயம்) ராய்விட்டேன்.

பி. கு.: பயப்படாதே. குத்தா உன்னை எதற்காகக் கடிக்கும்?

பேபி: நான் அகேலாவாக் (தனியாய்) இருந்ததைப் பாத்துடுத்து. ஆயா எங்கேயோ போயிருந்தா. நான் கேல் (விளையாட்டு) பண்ணிக் கொண்டே ரொம்ப தூரம் வந்துட்டேன்.

பி. கு.: உங்கம்மா எங்கே?

பேபி: அம்மாவும் அப்பாவும் ஒரு பார்ட்டிக்குப் போயிருக்கா. ஜல்தி வந்துடறதாகச் சொன்னா.

பி. கு.: உன் பேர் என்ன?

பேபி: பேபி. உன்னுடைய நாம் (பெயர்)?

பி. கு.: எனக்கு நாம் கிடையாது. நான் இன்னும் பிறக்கவே இல்லே.

பேபி: ''ஸச்''சா (உண்மையா)? நீ இன்னும் பைதா (பிறப்பு) ஆகல்லேயா?

பி. கு.: இல்லே. எங்கே பிறக்கலாம் என்று யோசித்துக்கொண் டிருக்கேன்.

பேபி: ரொம்ப ஸோச் (யோசனை) பண்ணாதே. எங்கள் வீட்டில் பைதா பண்ணு. நாம் ரெண்டு பேரும் கேல் பண்ணலாம்.

பி. கு.: உங்கம்மா என்ன சொல்லுவாளோ?

பேபி: ஒண்ணும் சொல்லமாட்டா. அவளுக்குத் தெரியாமலே பைதா பண்ணேன்.

பி. கு.: அது முடியாது.

பேபி: ஏன் முடியாது? என்னுடைய நர்ஸரியில் எத்தனையோ கிலோனு (பொம்மை) இருக்கு. நீயும் வந்துடேன்.

பி. கு.: நான் ஒரு கிலோனு என்று எண்ணிண்டிருக்கயா? இதோ பார் பேபி. உன்னைப் பார்த்தால் நீ ஒரு பெரிய இடத்துப் பொண் போல் இருக்கு.

பேபி: ஆமாம், எங்கப்பா கலெக்டர் ஸாப் (துரை), எங்கம்மா மேம் ஸாப் (துரைசானி).

பி. கு.: அப்படின்னு ரொம்ப ரொம்ப யோசித்துத்தான் நான் உங்காத்துக்கு வரணும்.

பேபி: ஏன்?

பி. கு.: பெரிய இடத்துக்கு எல்லாம் கூப்பிடாமல் போகக்கூடாது.

பேபி: நான் கூப்பிடுகிறேனே.

பி. கு.: போராது.

பேபி: அப்படின்னு ஆயாவைக் கூப்பிடச் சொல்லட்டுமா?

பி. கு.: வேண்டாம். ஆயா கூப்பிட்டால் வரமாட்டேன்.

பேபி: ஆனால் சரி, மூல்சந்தைக் கூப்பிடச் சொல்லட்டமா?

பி. கு.: மூல்சந்த் யாரு?

பேபி: எங்க பேரா (Bearer).

பி. கு.: அவாள்ளாம் கூப்பிட்டால் வர மாட்டேன். உங்கம்மா கூப்பிட்டால்தான் ஒருவேளை வருவேன். அதுவும் நிச்சயமில்லை.

பேபி: அப்படின்னு இங்கேயே இரு. அம்மாவைக் கேட்டுட்டு, பிர் (அப்புறம்) வறேன்.
(போகிறாள்.)

[சுதா வருகிறாள்.]

சுதா: எங்கம்மாவைக் கேட்டேன். எல்லாத்தையும் எனக்குச் சொல்லிவிட்டாளே!

பி. கு.: என்ன சொன்னாள்?

சுதா: நீ எங்காத்துக்குத் தம்பிப் பாப்பாவாப் பிறக்கப் போகிறுயாம். சந்தேகமே இல்லையாம்.

பி. கு.: அவ்வளவு நிச்சயமாச் சொல்ல முடியுமா?

சுதா: முடியும்.

பி. கு.: எப்படி முடியும்?

சுதா: எங்கப்பா ராமாயணம் வாசிக்கிறாராம். ஸுந்தர காண்டத்தை நித்தியம் பாராயணம் செய்கிறாராம்.

பி. கு.: ஓகோ! உங்கப்பாவுக்கு ஒண்ணும் தெரியாது என்று சொன்னயே.

சுதா: அது என்னவோ, நீ எங்காத்துக்கு வருவது நிச்சயமாயிடுத்தோன்னோ?

பி. கு.: அப்படி ஒண்ணும் நிச்சயமில்லே.

சுதா: ஏன்?

பி. கு.: உங்கப்பா ராமாயணத்தை அர்த்தம் தெரிஞ்சிண்டு வாசிச்சாத்தான் நான் உனக்குத் தம்பியாகப் பிறப்பேன். அர்த்தம் தெரியாமல் வாசிச்சுட்டு வால்மீகியோடு பேரம் பண்ணிட்டோம் என்று எண்ணினாரானால் நான் உங்காத்துக்கு வர மாட்டேன். அப்படி ஒருவேளை வந்தாலும் உனக்குத் தங்கையாகத்தான் வருவேன்.

[மாலினி வருகிறாள்.]

மாலினி: ஏ லொளலொளாக்கட்டை, எங்கம்மா என்ன சொன்னாள் தெரியுமா?

பி. கு.: என்ன சொன்னாள்? ஆண்டிக்கு ஐந்தாவது புத்திர பாக்கியம் வேணுமென்றாளா?

மாலினி: இல்லவே இல்லே.

பி. கு.: பின் என்ன சொன்னாள்?

மாலினி: ''அதை என்னத்துக்குடீ இப்போ கூப்பிடறே? பிள்ளை பிறக்கல்லேன்னு யார் அழறா?'' என்றாள்.

பி. கு.: நீதானே சொன்னே, நாலு குழந்தைகளை வைத்துக் கொண்டு ஆண்டி பெத்தது அஞ்சும் குரங்கு என்று வையறான்னயே!'

மாலினி: அது வெறும் பேச்சுக்குத்தானாம். கணக்கை இப்போ பூர்த்தியாக்க வாண்டாம்னாள்.

[சுமதி வருகிறாள்.]

பி. கு.: உங்கம்மா என்ன சொன்னாள்?

சுமதி: சுருக்க வரச்சொல்லு. பாலகிருஷ்ணன் என்று பெயர் வச்சு அழைக்கிறேன் என்றாள்.

மாலினி: நல்லதாப் போச்சு. அவாத்துக்கே போ. ஆறு பெண்கள் இருக்கா. நித்தியம் கிருஷ்ண லீலா நாடகம் போடலாம்.

[பேபி வருகிறாள்.]

பேபி: எங்கம்மா கிட்டே சொன்னேன். சரிதான் என்று சொன்னா. ஆனால் இப்போ வருவதைக் காட்டிலும் லடாய் (யுத்தம்)க்கு அப்புறம் வந்தயானால் நன்றாக இருக்கும் என்று சொன்னா.

பி. கு.: ரொம்ப சரி; உங்களை எல்லாரையும் விசாரிச்சாச்சு. நானும் ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டேன்.

சுதா: யாராத்துக்குப் போகப் போறே?

மாலினி: எங்காத்துக்கா?

சுமதி: யாராத்துக்குப் போகப் போறே?

பேபி: எங்காத்துக்கா?

பி. கு.: என்னுடைய அருமை தெரிஞ்சவா ஆத்துக்குத்தான் போவேன். அதை ஒரு பாட்டு வழியாகக் கண்டு பிடிக்கலாம். அத்னுடைய அர்த்தம் என்னன்னு, தன் குழந்தையை மடிமேல் வெச்சிண்டு, அதனுடைய அழகான சிரிப்பைப் பாத்துண்டும், இனிமையான மழலைச் சொல்லைக் கேட்டுண்டும் இருக்கும் அப்பா அம்மா, அந்தக் குழந்தையின் உடம்புப் புழுதி அவா மேல் படறதினாலே பரிசுத்தமாரு. இந்தப் பாட்டை உங்கப்பா அம்மாவிடம் பாடுங்கோ. யார் அதை முகம் கோணாமல் கேட்கிருளோ அவாத்துக்குத்தான் போவேன். பாட்டைக் கேளுங்கோ:

"आलक्ष्य दन्तमुकुलाननिमित्तहासैः अव्यक्तवर्णरमणीयवचःप्रवृत्तीन् ।
अङ्काश्रयप्रणयिनस्तनयान् वहन्तो धन्यास्तदङ्गरजसा मलिनीभवन्ति ॥" ★

—நவம்பர், 1944.

பூர்ணம் விசுவநாதன்

# சோம்பலே சுகம்

## 1

இடம்: *அளகப்பப்பிள்ளை வீடு.*

நேரம்: *காலை.*

*[மாப்பிள்ளை சோணமுத்து அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கிறான். பெண் வடிவு வந்து அவனை எழுப்புகிறாள்.]*

வடிவு: *இந்தாங்க. ஒங்களைத்தானே?*

*[சோணமுத்து, சத்தம் கேட்டு, புரண்டு படுக்கிறான்.]*

வடிவு: *(குரலை உயர்த்திக்கொண்டு)* இந்தாங்க. ஒங்களைத்தானே கூப்பிடறேன்!

சோண: *(கொட்டாவி விட்டுக்கொண்டே எழுந்து உட்கார்ந்து, கண்ணைக்கூடத் திறவாமல்)* யாரது, வேளை கெட்ட வேளையிலே?

வடிவு: வேளை கெட்ட வேளை ஒண்ணுமில்லை; எல்லாம் காலை வேளை தான். மணி எட்டாயிரிச்சு, எளுந்திரிங்க.

சோண: *(எரிச்சலுடன்)* இதைச் சொல்லத்தானா பெரமாதமா எளுப்பினே, தூங்கிக்கிட்டிருக்கிற மனிசனை? ஐயைய! ஒன் அசட்டுத் தனத்தை நான் எங்கே போய்ச் சொல்றது?

*[பெருமூச்சும் கொட்டாவியும் விட்டுக் கொண்டே மறுபடி படுக்கிறான்.]*

வடிவு: *(பரபரப்புடன்)* இந்தாங்க இந்தாங்க, மறுபடியும் படுக்காதீங்க! *(குரலைத் தணித்துக்கொண்டு)* அப்பா பாத்தா ஏதாச்சியும் வித்தியாசமா நெனைச்சுக்கிடப் போறாங்க. சன்ன வளியா வெய்யி அடிச்சுக்கிட்டிருக்கு; ஒங்க பாட்டுக்கு ஒறங்கறீங்களே; உம், எளுந்திரிங்கங்கறேன்.

சோண: *(படுத்திருந்தபடியே)* ஐயோ! என்ன பாடு படுத்திரே வடிவு? 'தூங்கிக்கிட்டிருக்கேன், எளுப்பாதே'ன்னு சொன்னா 'சரி'ன்னு கேக்கணும். வெய்யி அடிச்சா அது பாட்டுக்கு அடிச்சுட்டிருக்கட்டும். என்னமோ அந்த அடி உம் மேலே பட்டுட்டது கணக்கா, கெடந்து கூச்சப் போடறியே! ஹூம்! *(கொட்டாவி.)*

வடிவு: ஆமாம், இப்பிடித் தூங்கிக்கிட்டேயிருந்தா எப்போ இட்டிலி காபி சாப்பிடறது?

சோண: எளுந்திரிச்ச ஒடனே சாப்பிடறது; இல்லாட்டி இப்பமே தூக்கத்துக்கு நடுவிலே சாப்பிடறது. இதுக்கு என்னமோ நச்சரிக்கறயே,

உடாம! இப்பிடித் தூக்கம் கொறைஞ்சா, திரேகம் என்னத்துக்கு ஆவும் வடிவு?

**வடிவு:** தூக்கம் கொறையுறதா? நேத்து ரவைக்கு எட்டு மணிக்குப் படுத்துத் தூங்க ஆரம்பிச்சீங்க: இப்போ எழுப்பினு இப்படி எழுந் திரிக்காமே மொரண்டு பண்றீங்களே.

**சோண:** *(எரிச்சலுடன்)* வடிவு, இப்ப எழுந்திரிச்சு என்ன செய்யப் போறேன்? ஒரு வேலே வெட்டின்னு இருந்தாலும் 'சரி போகுது'ன்னு எழுந்திரிச்சுத் தொலேக்கலாம். ஒண்ணு மில்லாமெ...

**வடிவு:** *(குறுக்கிட்டு)* வேலே விசயமாத்தான் அப்பா இண்ணேக்கி ஒங்களே எங்கயோ கூட்டிக்கிட்டுப் போறேன்னு சொன்ஞங்களே. இப்பிடி ஒறங்கினு அவுகளுக்கு மனசுக்கு என்னமா இருக்கும்?

**சோண:** ஏது வடிவு, நீ கொஞ்ச நேரம் கண்ணசர உடமாட்டே போலிருக்குதே! இதோ பாரு, ஒங்கையா வெளியிலே கௌம்பும்போது என்னேக் கூப்பிட்டா, வந்து எழுப்பு; நடுவிலே வந்து நச்சரிக்காதே; ஒனக்கு ரொம்பப் புண்ணியமாய்ப் போவும்.

*[முனகிக்கொண்டே புரண்டு படுக்கிறன்.]*

**வடிவு:** *(பரபரப்புடன்)* இந்தாங்க இந்தாங்க: நான் இவ்வளவு சொல்லிக்கிட்டிருக்கேன்; ஒங்கபாட்டுக்குப் பளேயபடியும் படுத்துட்டீங் களே! அப்பா அப்பமே சொல்லிட்டாங்க, ஒங்களே எழுப்பச்சொல்லி.

**சோண:** என்னுத்துக்கு?

**வடிவு:** என்னுத்துக்கா? அதுதான் சொன்னேனே: ஒங்களுக்கு வேலே வாங்கித் தரத்துக்காவ. அடுத்த தெரு ராமையாபிள்ளே கிட்ட ஒங்களேக் கூட்டிக்கிட்டுப் போகத்தான்.

**சோண:** அதுக்கு இதுதானு நேரம்? நான் நேத்தே ஒங்கையா கிட்டச் சொன்னேன், 'போகறதா யிருந்தா, சாவகாசமாப் போய்க் கிடலாம்'னு. அப்போ 'சரி'ன்னு சொல்லிப்போட்டு, இப்ப என்னமோ எழுப்பி உட ஆளனுப்பருரே, கன கணக்கா?

**வடிவு:** இப்ப நேரம் கொறச்சலாத்தான் ஆவுதாக்கும்! சன்ன வளியா வெய்யி 'சுரீர்'னு அடிச்சுக்கிட்டிருக்கு.

**சோண:** *(எரிச்சலுடன்)* ஐயோ! அத்தை எத்தினிவாட்டி சொல்லப் போறே வடிவு? வெய்யி இப்படி வெவரம் தெரியாம அடிக்குதுன்னுதான் சன்னல்லே ஒரு கறுப்புத் துணியைக் கட்டச் சொன்னேன். அது சொல்லி வாரம் ஒண்ணு ஆகப்போகுது; நீ இனிமே கட்டப்போறே! ஹூம், கடவுளே! திரேகம் எப்பிடி அசந்து வருது! *(கொட்டாவி.)*

**வடிவு:** இது என்னுங்க, என்னமோ பேசிக்கிட்டு எழுந்திரிக்காமெ மொரண்டு புடிக்கறீங்களே. நல்லாருக்குது நீங்க செய்யுறது!

**சோண:** எழுந்திரிச்சுப் பெரிய மலேயைப் பெரட்டப் போறேனுக்கும்!

**வடிவு:** மலேயைப் பெரட்டாம என்னுங்க? ஒங்களுக்கு வேலே வாங்கித் தர்ரத்துக்காவத்தானே அப்பா கூப்பிடுருங்க?

**சோண:** *(சலிப்புடன்)* ஆமாம், நான் என்ன 'இந்த நிமிசம் வேலே வாங்கித் தந்தாத்தான் உயிர் பொளேக்கும்'னு துடிச்சுக்கிட்டிருக்கேனு? கண்ணுலம் ஆயி வருசம் இன்னும் முளுசா ஒண்ணுகலே. அதுக்குள்ளார என்னமோ வேலே வேலேன்னு பறக்கருரே கெடந்து. சேசே, இதெல்லாம் நமக்குப் புடிக்காது. இருந்தாலும் ஒங்கையாவுக்கு வெவரமே தெரியலே வடிவு!

வடிவு: ஆமாம், வெவரம் தெரியலே! சொந்த மாப்பிள்ளே ஒரு கௌரவமா வேலே கீலே பாத்துக்கிட்டிருந்தாத்தானே அவுருக்குப் பெருமை?

சோண: ஆங் பெருமை! இல்லாட்டி அவரை யாரு என்ன செஞ்சிரு வாங்க?

வடிவு: அட நாலு பேரு பாக்கறதுக்கு நல்லா இருக்காதுல்லே?

சோண: (எரிச்சலுடன்) என்ன நல்லாருக்காது வடிவு? நீ சொல் லுறது எதையும் வெளங்கும்படியா மண்டையிலே அடிச்சாப்லே சொல்லமாட்டே!

வடிவு: வெளங்கும்படியாத்தானே சொல்றேன்? 'எங்க அப்பா, பெரிய வேலே பாத்துக்கிட்டிருக்காங்க. அவங்களோடே மாப்பிள்ளே வேலே ஒண்ணும் பாக்காம சும்மா குந்திக்கிட்டிருந்தா நல்லாருக் காதுல்லே?

சோண: (ரோசத்துடன்) அடடே, நான் வேலே பார்க்காம இருந்தா ஊர்லே இருக்கறவங்களுக்கு என்னன்னு கேக்கறேன். இல்லே, ஒங்கய் யாவே வேலேயில்லாம சோம்பேறி கணக்குலே சுத்திக்கிட்டிருக்கார்னு வச்சுக்க. அப்பத்தான் ஊர்க்காரங்களுக்கு என்ன வடிவு? அவுங்களா படியளக்கிறுங்க நமக்கெல்லாம்? இது பெரிய வம்பாவுல்லே இருக்குது? ஊர்க்காரங்க சொல்லிப்போடுவாங்கங்கறதுக்காவ உங்கய்யா என்னே, 'அங்கே வா, இங்கே வா'ன்னு அலேய வைக்கறதாக்கும்! நல்ல நாயம், வடிவு, நல்ல நாயம்!

வடிவு: எல்லாம் ஒங்க இதுக்காகத்தானே அப்பா இப்படிக் கூட்டிக் கிட்டுப் போறுங்க?

சோண: (மறுபடி ரோசத்துடன்) இதுக்காவன்னு எதுக்காவ வடிவு? நானும் பாத்துக்கிட்டிருக்கேன்: ஒரு மாசமா ஒங்கையா, கடங்காரனே அலேயவைக்கறது கணக்கா, 'இண்ணேக்கி இங்கே வா, அண்ணேக்கி அங்கே வா'ன்னு என்னேக் கூடக்கூடக் கூட்டிக்கிட்டுச் சுத்தருரு. அட, போற காரியமாவது பலிச்சுத் தொலேக்குதா? அதுவும் கெடையாது. எப்படிப் பலிக்கும் வடிவு? வேலே எவன் கிட்டக் காலியிருக்குது இந்தப் பஞ்ச காலத்துலே? அவன் அவனே பொளேப்புக்கு ஓங்கி ஓங்கித் தாளம் போட்டுக்கிட்டிருக்கான்! இதுலே 'வேலே குடு, வேலே குடு'ன்னு போய் நச்சரிச்சா நல்லாவா இருக்கும்? இதையெல்லாம் உத்தேசிச்சுத்தானே நான் செவனேன்னு இருக்கேன். இல்லாட்டி இப்பிடியா குந்திக்கிட் டிருப்பேன்? இதுலே என்னடான்னு, ஒங்கய்யாகூடச் சேந்துக்கிட்டு நீயும் குதிக்கறே.

வடிவு: ஆமாம் குதிக்கறுங்க! நீங்க ஒரு வேலே பாத்தாத்தானே எனக்கும் கௌரவமா யிருக்கும்? இப்பிடியிருந்தா எனக்கு என்ன பெருமை? இல்லே, ஒங்களுக்குத்தான் என்ன பெருமை? சொல்லுங்க.

சோண: ஏது வடிவு, நீ ஆளே உடமாட்டே போலிருக்குதே! ஒன் ணுலே இப்ப நாலு அஞ்சு நிமிசம் முளுசா வீணுயிரிச்சு; இதுக்குள்ளார, நான் அடிச்சுப் போட்ட கணக்குலே ஒறங்கிப் போயிருப்பேன். இதோ பாரு வடிவு, நீ இப்போ என்னதான் செய்யச் சொல்றே?

வடிவு: 'எளுந்திரிச்சு, காபி இட்லி சாப்பிடுங்க; பெறகு அப்பா வந்தவுடனே, அவுங்ககூடப் போயிட்டு வாங்க'ன்னுதான் சொல்றேன்.

சோண: (கொட்டாவி விட்டுக்கொண்டே) இதுலே எதை மொதல்லே செய்யறது? இட்லி காபி சாப்பிடுறதைத்தானே? அதை மொதல்லே செய்யறேன். அதுக்குள்ளே என்ன நடக்குதுன்னு பாத்துக்

கிட்டு, பெறகு மேக்கொண்டு செய்ய வேண்டியதைப்பத்தி யோசிச்சுக் கிடலாம்.

வடிவு: இப்பிடியே இட்லி காபி சாப்பிடறதா? 'எளுந்திரிச்சுக் காபி இட்லி சாப்பிடறது'ன்னுல்லா சொன்னேன்? (சிரித்துக்கொண்டே) அதனாலே எளுந்திருக்கறதுதான் மொதக் காரியம்.

சோண: ஐயோ, மனிசனைக் கொரங்குக் கணக்குலே ஆட்டி வைக்கிறியே வடிவு. (கொட்டாவி விட்டுக்கொண்டே எழுந்து உட்கார்ந்து) ஹூம், எளுந்திரிச்சாச்சு; கொண்டா அந்த இட்லி காபியை!

வடிவு: என்னங்க, பல்லுக்கூட வெளக்காமெ இட்லி காபிங்கறீங்க?

சோண: நீ' மொதக் காரியம் எளுந்திரிக்கறதுன்னுதானே சொன்னே? அதுதான் எளுந்திரிச்சாச்சு; கொண்டா இட்லி காபியை.

வடிவு: ஐய், ஒங்ககூடப் பேசிக் களியாது.

சோண: (சிரித்துக்கொண்டே) உம், வசமாச் சிக்கிக்கிட்டயா?

[அளகப்பப் பிள்ளை வருகிறார்.]

சோண: வாங்க மாமா.

அள: என்ன மாப்பிள்ளை, இப்பத்தான் எளுந்திரிச்சிங்களா?

சோண: இல்லையே! அப்பமே எளுந்திரிச்சுட்டேன். (அசட்டுச் சிரிப்புடன்) அதுதான் வடிவு நெதசரி, கோளி கூவும்போதே எளுப்பி உட்டுட்றாளே!

அள: அது சரி, நீங்க இண்ணைக்கி அடுத்த தெரு ராமய்யா பிள்ளை கிட்ட வரீங்களில்லே?

சோண: (தயக்கத்துடன்) வரணுமா?... வரணும்னா, வர்ரேன்; போகலாம்.

அள: ஒங்களையும் கூட்டிக்கிட்டுத்தான் வரச்சொல்லி யிருக்காரு, ராமய்யா பிள்ளை.

சோண: ஓ சரிதான். எப்போ போகணும்?

அள: இன்னம் அரை மணிக்குள்ளார கெளம்பிப் போனாத்தான் சரியா யிருக்கும்.

சோண: அதுக்கென்னங்க, போகலாம். நீங்க போகும்போது ஒரு கொரலு குடுங்க. திரும்பி வர்ரதுக்கு ரொம்ப நேரம் ஆகுமோ?

அள: இல்லியே; பாத்து ஏற்பாடு செஞ்சு போட்டு வரவேண்டியது தான்.

சோண: அப்போ, நீங்க பொறப்படும்போது சொல்லுங்க; போயிட்டு வரலாம்.

அள: ஆகட்டும். நீங்க பொறப்படத் தயாரா இருங்க. (போகிறார்.)

சோண: (மாமனார் தலை மறைந்தவுடன்) அப்பப்பா, ஒடம்பு என்னா அசத்து அசத்துது!

[படுக்கிறான்.]

வடிவு: இந்தாங்க இந்தாங்க, மறுபடியும் படுக்கிறீங்களே! எழுந்திரிங்க.

சோண: அட போகுறதுக்குத்தான் இன்னம் அரை மணி இருக்குதே, நீ என்னமோ......

வடிவு: சரியாய்ப் போச்சு! பல்லு வெளக்கி இட்லி காப்பி சாப்பிடுறதுக்குத்தானே நேரம் இருக்குது? எழுந்திரிங்கங்கறேன்.....

சோண: (கொட்டாவி விட்டுக்கொண்டே எழுந்திருந்து) ஹூம், படுதொந்தரவாப் போச்சு! ஒறங்க உடாமே....

2

[ராமையா பிள்ளையின் ஆபீஸ். ராமையா பிள்ளை சோணமுத்துவை அழைத்து வருகிறான்.]

ராமை: இதோ பாருங்க. மிஸ்டர் சோணமுத்து, இதுதான் ஓங்க ரூம். ஒங்களுக்கு ஏதாவது வேணும்னு எங்கிட்ட வந்து கேளுங்க.

சோண: சரிங்க சார். (திடீரென்று ஏதோ ஞாபகத்துக்கு வந்தவன் போல்) ஆமாம், ஆபீசுக்குத் தெனசரி எந்நேரத்துக்கு வரணும்?

ராமை: அது... காலையிலே ஒம்பது மணிக்குள்ளார வந்துரணம்... ஏன்னு...

சோண: (குறுக்கிட்டு) ஒம்பது மணியா? ஐயையோ!

ராமை: ஏன் மிஸ்டர் சோணமுத்து?

சோண: ஒண்ணுமில்லீங்க சார்; எனக்கு வந்து காலையிலே எட்டரை மணிக்கு முந்தி எளுந்திரிச்சா, திரேகம் ஒண்ணு கெடக்க ஒண்ணு செஞ்சுபோடும்.

ராமை: ஏன் அப்படி?

சோண: அது...நான் சிறுவயசுலே வைசூரீலே கெடந்தேன் ரொம்ப நாளு. அதுலே கெடந்து எளுந்திரிச்சதுலேருந்தே திரேகம் ஒரு மாருதி அசந்து போயிரிச்சு. அதனுலேதான் சொல்றேன்.

ராமை: நானு ஒங்க மாமனுரு அளகப்பபிள்ளை கிட்டக் கேட்டதுக்கு அவுரு 'அதெல்லாம் டாண்ணு எட்டரை மணிக்கு என் மாப்பிள்ளை ஆபீசுக்கு வந்துருவாரு'ன்னு சொன்னுரே!

சோண: ஐயோ! அவரு தெரியாமச் சொல்லி யிருக்கருரு. எனக்குக் கண்ணுலம் ஆவுறத்துக்கு முந்தியே இந்த வைசூரி வந்து போயிருச்சு. அதுனுலே அவுருக்கு நான் வைசூரியிலே கெடந்து எளுந்திரிச்சது தெரியாது.

ராமை: அப்போ நீங்க ஆபீசுக்கு எப்பத்தான் வர முடியும்?

சோண: பத்தரை மணிக்குள்ளார வந்துருவேன். ரொம்ப மிஞ்சிப் போனுப் பதினொரு மணிக்கு மேலே போகாது. அதுமட்டும் நிச்சயம்.

ராமை: (பெருமூச்சுடன்) ஹூம்! அதுக்கு முன்னுலே வர முடியாதா?

சோண: முடிஞ்சாச் சரின்னு சொல்லிப்போட மாட்டேன்? எம் மேலே வஞ்சகமில்லே. திரேகம் இந்தப் பாடு படுத்தறதுனுலேதான் இத்தினி சொல்லவேண்டி யிருக்குது.

ராமை: ஹூம். எப்பிடியும் அன்னன்னி வேலை அன்னன்னிக்கு நடந்துரணும்; அவ்வளவுதான்.

சோண: வேலை கொஞ்சமா இருந்தா அப்பப்ப முடிச்சுருவேன். ஆனு நெறைய வேலை இருந்திச்சின்னு, செய்யறது ரொம்பக் கச்டமுங்க. ஏன்னு எனக்கு எந்த விசயத்தையும் ஒருவாட்டிக்கு ரெண்டுவாட்டியாப்

பார்த்து நல்லாப் புரிஞ்சுக்கிட்டு, பெறகு நெதானமா, செஞ்சேதான் பளக்கம். ஆனா, செய்யற வேலையிலே அஞ்சுக்கு ரெண்டு, எண்ணைக்கும் பளுதிருக்காது.

ராமை : ஹூம்.

[பலத்த பெருமூச்சு விடுகிறார்.]

சோண : ஆமா, இண்ணைக்கி மொத நாளுதானே? இண்ணைக்கே வேலை செய்யச் சொல்லி இடுப்பை ஒடிக்கப் போறீங்களா?

[சிரிக்கிறான்.]

ராமை: (அசட்டுச் சிரிப்புடன்) ஹிஹிஹி! இடுப்பை ஒடிக்கிற தென்ன? வேலை பளகணுமில்லே?

சோண : பளகணுங்கறதுக்காவ எடுத்தவுடனேயே தடமுடான்னு ஆரம்பிக்கக் கூடாதுல்லே? இப்ப, திரேகத்துக்கு 'எக்சர்சைஸ்' வேண்டியதுதான்; ஆனா அதுக்காவ மொதநாளே ஆயிரம் 'பஸ்கி' போட்டா, நல்லாயிருக்குமா? (சிரித்துக்கொண்டே) பெறகு திரேகம் நவளமாட்டேன்னு குந்திக்கிடவல்லா செய்யும்? அது கணக்குலேதான் இதுவும்.

ராமை : அப்படியில்லீங்க, மிஸ்டர் சோணமுத்து. வேலை இண்ணைக்கி அவ்வளவு சாஸ்தி யிராது.

சோண : (தீர்மானமாக) இல்லை, இண்ணைக்கி வேலைன்னே செய்ய வேண்டாம்னு பார்க்கறேன். மொத நாளுல்லே? ஆபீசை இப்படி சுத்திப் பார்த்துட்டு ஊட்டுக்குப் போறேன். நாளை மொத ஒழுங்கா ஆரம்பிச்சிரலாம்.

ராமை : என்ன, வீட்டுக்கா?

சோண : ஆமாம்; இண்ணைக்கிக் காலையிலே எழுந்திருக்கும்போதே ஒரு மாதிரியாத்தான் இருந்திருச்சி. இதுலே சோறு சாப்பிடாமெ வேறே வந்துட்டேனா? அது என்னடான்னா 'கிருகிரு'ன்னு வருது இப்போ.

ராமை : சாப்பிட்டுத்தான் வரணும் நீங்க. ஏன்னா....

சோண : அதுதான் சொல்லறேனுங்களே! இண்ணைக்கு மொத நாளு தானே, ஒங்ககிட்ட சொல்லிப்போட்டு ஊட்டுக்குத் திரும்பி வந்து சாப்பிட்டுக்கிடலாங்கற அபிப்பிராயத்துலே கௌம்பி வந்துட்டேன், சாப்பிடாமெ. சரி, நாளை பார்க்கலாம். போய் வர்றேன் சார். நிண்ணு பேசக்கூட முடியல்லை.

[கொட்டாவி விட்டுக்கொண்டே போகிறான்.]

ராமை : ஹூம். (பலத்த பெருமூச்சு.)

## 3

[அளகப்பப்பிள்ளை வீடு. கூடத்தில் வடிவு உட்கார்ந்திருக்கிறாள். சோணமுத்து கொட்டாவி விட்டுக்கொண்டே வருகிறான்.]

வடிவு : (திடுக்கிட்டு) என்ன, அதுக்குள்ளார திரும்பி வந்துட்டீங்க?

சோண : இண்ணைக்கி மொத நாளுல்லே? ஆபீசு மானேசரு சல்தியாகவே போகச் சொல்லிட்டாரு. அவருதான் ராமையாப் பிள்ளை. ஆமாம்.

வடிவு: ஓ, சரிதான். ஆமாம், வேலையெல்லாம், எப்படி யிருக்குது?

சோண : (வெறுப்புடன்) ஐயோ ஒண்ணும் சொல்லாதே வடிவு; வெறும் நச்சுப் பிடிச்ச வேலே. நான் இண்ணைக்கி அரைமணி நேரங்கூட வேலே செஞ்சிருக்க மாட்டேன். அதுக்குள்ளார, தலே கிறுகிறுப்பு வந்திருச்சு; மூளே நரம்பெல்லாம் தெறிச்சுப் போகுது கணக்கா ஆயிப் போச்சுங்கறேன்.

வடிவு : அவ்வளவு மோசமான வேலேயா?

சோண : படுமோசம்! அதுக்கு மேலே மோசமாயிருக்கான் அந்த மனிசன்.

வடிவு : யாரு?

சோண : யாரு? அதுதான் இருக்கானே ஒருத்தன், ராமையாப் புள்ளே! இவன் மானேசராம் மானேசரு! அவன் முளிக்கிற முளியே சரியில்லே, வடிவு. அவனே நீ பார்த்திருக்கறயா?

வடிவு : அவரை நான் பார்த்ததில்லேயே! ஏன்?

சோண : ஐயோ, வெறும் திருட்டு முளி முளிச்சிக்கிட்டு! எனக்கு என்ன தோணுது, இவன் சும்மா நாற்பது ரூவாயைக் கண்ணுலே காட்டிப் போட்டு நாலு பேரு வேலேயை வாங்கிட்டு வுட்டுரலாம்னு பாக்கருன்னு தோணுது.

வடிவு : ஏன்?

சோண : ஏனு? இண்ணைக்குத்தானே மொத நாளு? கொஞ்சம், கொறச்சலா வேலே குடுக்கக் கூடாது? இண்ணைக்கு அந்த அரை மணி நேரத்துக்குள்ளார அரை வருசத்திலே ஆகவேண்டிய வேலேயைச் செய்திருக்கேன்.

வடிவு : ஐயையோ! அரை வருசமா?

சோண : அட ரெண்டாவது நாளாயிருந்தாலும் பரவாயில்லேங்கறேன். மொத நாளே அவன் இப்படிச் செய்யவுந்தான், எனக்கு அவன் ஏதோ வெசமக் கருத்தை மனசிலே வச்சிருக்கான்ங்கது தெரிஞ்சு போச்சு. இப்போ என் திரேகம் எப்பிடி அசந்து வருது தெரியுமா?

வடிவு : செவனேன்னு படுத்து ஒறங்குங்க, கொஞ்ச நேரம்.

சோண: நீ சொன்னுலும் சொல்லாட்டியும் படுத்துத் தூங்கத்தானே போறேன்? இருந்தாலும் வடிவு, ஒங்கய்யாவுக்கு அநுபவம் பத்தாது. இத்தினி வயசாயும் அவரு..

வடிவு : (குறுக்கிட்டு ரோசத்துடன்) என்னுத்துலே எங்கப்பாவுக்கு அநுபவம் பத்தலே, நீங்க கண்டிட்டீங்க?

சோண: நீ ஒடனே கோவிச்சுக்கிடாதே வடிவு. உம், அது, பொதுவா ஒங்கய்யா யாரையும் நம்பிப் போடருருங்கரதுக்காவச் சொன்னேன்: இப்பப் பாரேன், இந்த ராமையா பிள்ளே மகா நல்லவன்னு நெனச்சு நம்பி, என்னே அவங்கிட்ட தள்ளியிருக்கிருரே, ஒங்கையா; கொஞ்சம் அநுபவம் இருந்திச்சின்னு அப்பிடிச் செய்வாரா? போகுது, எனக்குப் பாரு வடிவு, நான் உசிரைக் குடுத்து வேலே செஞ்சு கச்டப்பட்டாலும் பரவாயில்லே; மத்தவங்க மனசு நோவக்கூடாது. இப்ப, நான் இந்த ராமய்யா பிள்ளேகிளே வேலேசெய்ய இச்டமில்லாம வேலேயை உட்டுப் போட்டேன்னு, ஒம் மனசு நோவும்; ஒங்கய்யா மனசு நோவும். அது எதுக்கு எனக்கு? நாம கச்டமோ நச்டமோ படறது; மத்தவங்க சௌக்கியமா யிருக்கட்டும். அதுதான் என் அபிப்பிராயம்.

வடிவு : ரொம்ப நல்லாருக்கே! நீங்க ஏன் இப்பிடிக் கச்டப்படணும், நான் இண்ணைக்கே அப்பாகிட்டச் சொல்லி அந்த ராமய்யா பிள்ளே

யைப் பாத்துப் பேசச் சொல்றேன். அப்பா கொணம் தெரியாது ஒங்களுக்கு; கோபம் வந்திச்சின்னு, வாயிலே வந்தபடி பேசிப்போட்டு வந்துருவாங்க.

சோண : (வாய்விட்டுச் சிரித்து) 'பெம்புத்தி, பிம்புத்தி'ங்கறது சரியாத்தான் இருக்குது. இதைப் போயி ஒங்கய்யாகிட்ட சொல்றேங்கறயே வடிவு, சொன்னு அவுரு என்னைப்பத்தி என்ன நெனப்பாருங்கறதை யோசிச்சியா? 'இந்தப் பய ஒரு கையாலாகாத பய'ன்னு நெனைச்சிற மாட்டாரு? ஒனக்குத் தெரியாது வடிவு: ஆம்பிளைங்க உசிரைக் குடுத்தாச்சியும் ஒரு வேலைன்னு பாத்தாத்தான் நல்லாருக்கும். அட ரொம்ப மானத்தை வாங்கருப்பிலே வந்திருச்சுன்னு, அவன் சொல்லாம நாமளே உட்டுர்ரோம், இந்தச் சனி பிடிச்ச வேலையை.

வடிவு : நீங்க சொல்றதும் வாஸ்தவந்தான். ஆனு ரொம்பக் கச்டமா இருந்தா நீங்க இந்த வேலையை உட்டுடுங்க. வேறே ஏதாச்சியும் நல்ல வேலையாப் பாத்துக்கிடலாம்.

சோண : எல்லாம் பாத்துக்கிடலாம். சும்மா இரு. நாம எதையும் அவசரப்பட்டுக்கிட்டுச் செய்யக்கூடாது. (கொட்டாவி விட்டுக் கொண்டே) ஐயோ சிவா, என்னு அசத்து அசத்துது!

வடிவு : படுத்து உறங்குங்க.

சோண : இல்லாட்டி, சாப்பிட்டுப்போட்டு வேணும்னு படுத்து ஒறங்கறேன். இப்பிடியே படுத்தா, சாப்பாட்டுக்கு முளிப்பு வருதோ என்னமோ.

வடிவு : அப்போ வாங்க. (போகிருள்.)

சோண : (கொட்டாவி விட்டவண்ணம் போய்க்கொண்டே) உம், திரேகம் என்னு பாடு படுது!

## 4

[ராமையா பிள்ளையின் ஆபீஸ் ரூம். ராமையா பிள்ளை, முகத்தில் கோபம் ஜ்வலிக்க உட்கார்ந்திருக்கிருர். எதிரே கதவருகில் டவாலிச் சேவகன் அளகிரிசாமி கைகட்டி நின்றுகொண்டிருக்கிருன்.]

ராமை : (எரிச்சலுடன்) இவன் பாட்டுக்கு நெனைச்ச போது வர்ரது, நெனைச்ச போது போயிர்ரது. இது என்ன ஆண்டி மடம்னு நெனைச்சிக் கிட்டானு? உம். (அளகிரிசாமியிடம்) நேத்து எத்தனை மணிக்குடா வந்தான் அவன்?

அளகிரி : நேத்து மத்தியானம் ஒரு மணிக்கு வந்துபோட்டு ஒண்ணே முக்காலுக்குக் கிளம்பிப் போயிட்டாருங்க; வவுத்து வலியாம்.

ராமை : முந்தா நாளு?

அளகிரி : முந்தா நாளு அவரைப் பாக்கவே யில்லீங்க, எசமான்.

ராமை : (கோபம் பொங்க) உம். வந்து பத்து நாள்கூட முளுசா ஆகலே. அதுக்குள்ளார என்னமோ வேலைக்குத் தெந்தனப் பாட்டுல்லா பாடிக்கிட்டுத் திரியருன்? டேய் அளகிரிசாமி, நீ போய் அவனைக் கையோட இளுத்துக்கிட்டு வா, இனிமே இந்த அளகப்பப்பிள்ளைக்காக தாச்சண்யம் பாக்கிறது சரியில்லே.

**குரல்:** அவரு, சோணமுத்து, இன்னம் வரலீங்களே எசமான்.

**ராமை:** (ஆவேசத்துடன் உரக்க) என்ன, இன்னும் வரலியா? மணி ரெண்டடிக்கப்போகுது. யாரது?

[கதவருகே சோணமுத்துவின் தலை தெரிகிறது.]

**சோண:** (தலையை மட்டும் உள்ளே நீட்டி) மானேசர் சார், உள்ளே வரலாமா? ஏதாச்சியும் வேலையா இருக்கிங்களா?

**ராமை:** யாரு, மிஸ்டர் சோணமுத்துவா? இப்படி உள்ளே வாங்க; ஒங்ககூடச் சில விசயங்க பேசவேண்டி யிருக்கிது.

**சோண:** (வந்துகொண்டே) எனக்கு ஒரே ஒரு விசயந்தான் ஒங்க கூடப் பேசவேண்டி யிருக்குது.

**ராமை:** என்னது அது? (எரிச்சலை அடக்கிக்கொள்கிறார்.)

**சோண:** ஒண்ணுமில்லீங்க மானேசர் சார்; இண்ணக்கித் தலைவலி மண்டையைப் பொளந்துகிட்டிருக்கு. மொதல்லே லீவு எளுதிப் போட்டுரலாம்னு நெனைச்சேன்; ஆனா, பெறகு யோசிச்சதுலே, அது நல்லாருக்காது, ஒங்க கிட்ட வந்து ஒரு வார்த்தை நேரிலே சொல்லிட்டுப் போறதுதான் நாயம்னு தோணிச்சு. ஏன்னா, வேலை தடைபட்டுறக் கூடாதுல்லே? நேத்து இப்படித்தான் வவுத்தை வலிச்சிச்சு. அளகிரிசாமிகிட்டே சொல்லிப்போட்டுப் போனேன். (ராமையா பிள்ளை பல்லைக் கடிக்கிறார். சோணமுத்து அதைக் கவனியாமல்) அதெல்லாம் சொல்லாமப் போறதில்லை; கூடப்பொறந்த பளக்கங்க அது. (கதவுப் பக்கம் நகர்ந்துகொண்டே) அப்ப, நான் வரட்டுங்களா? நீங்க ஏதாச்சும் பேசணும்னா நாளைப் பேசிக்கிடலாமே! இப்போ ஒண்ணும் அவசரமில்லை யில்லே?

**ராமை:** (கோபத்துடன்) மிஸ்டர் சோணமுத்து, நானும் பாத்துக் கிட்டே வர்ரேன்; எத்தினி நாளைக்கு இந்த ரேட்டுலே..

**சோண:** (குறுக்கிட்டு, சாவதானமாக) இருங்க இருங்க, மானேசர் சார். (அளகிரிசாமியிடம்) இந்தா அளகிரிசாமி, நீ கொஞ்சம் வெளியே போ; நான் மானேசர்கூடத் தனியாப் பேசவேண்டி யிருக்குது.

**அளகிரி:** (போய்க்கொண்டே) உத்தரவுங்க.

**சோண:** (அளகிரிசாமியிடம் உரக்க) அந்தக் கதவை மூடிக்கிட்டுப் போ, அளகிரிசாமி. (அளகிரிசாமி கதவை மூடிக்கொண்டு போகிறான்; அவன் தலை மறைந்தவுடன்) இதோ பாருங்க ராமய்யா பிள்ளை, இந்த மாருதி...

**ராமை:** (திடுக்கிட்டு) என்ன, ராமய்யா பிள்ளையா?

**சோண:** ஆமாம், ஏன்? அதுதானே ஒம்ம பேரு? இதோ பாரும், சும்மா தடபுடான்னு குதிக்கறதுலே பெரயோசனமில்லை. தெரிஞ்சிச்சா? நீரு இங்கே பேசிக்கிட்டிருந்ததையெல்லாம் ஒரு எளுத்து உடாம கேட்டுக்கிட்டுத்தான் இருந்தேன்.

**ராமை:** (ஆச்சரியத்துடன்) என்ன, கேட்டுக்கிட்டிருந்தீரா?

**சோண:** (அலட்சியமாக) ஆமாம். நெலை இப்ப ரெண்டு பேருக்கும் வெளங்கிப் போச்சு. இனிமே சும்மா நீட்டி மொளக்கிக்கிட்டிருக்கறதுலே பெரயோசனமில்லே. இதோ பாரும், எனக்கு இந்த வேலை புடிக்கலை; கூலிவேலைமாருதி இருக்குது. பெறகு, ஒமக்கும் என்னை வேலைக்கு வச்சுக்கிடறதுலே சொகமில்லை; என்னாலே நாளாவட்டத்துலே ஒம்ம வேலையே கவுந்தாலும் கவுந்துரும். அதுனாலே நீரு ஒண்ணு செய்யும்.

ராமை: என்ன?

சோண: என்னை வேலையிலிருந்து தள்ளிப்போடும்; ரெண்டு பேருக்கும் சௌக்கியமாப் போவும்.

ராமை: (ரோசத்துடன்) ‹தள்ளிப் போடறதா? ஏன்? நீர்தான் ராசிநாமாக் குடுத்துருமே. நான் தள்ளிட்டேங்கறது தெரிஞ்சா ஒம்ம மாமனுருக்கும் எனக்கும்லா மனத்தாங்கல் வரும்?

சோண: ஓஹோ, ஒங்க மனத்தாங்கல் பெரிசா, இல்லாட்டி நான் வேலையிலிருந்து போகுறது பெரிசா? அட அப்பிடி என்ன பெரமாத செனேகிதம் ஒங்க ரெண்டு பேருக்கும்? இத பாரும்: ஒம்ம சொகத்துக் காவத்தான் சொல்றேன். நான் இப்ப வர்ரேனே, இந்த மாருதி வந்தே மாசாமாசம் ஒளுங்கா என் சம்பளத்தை வாங்கிக்கிட்டுப் போயிருவேன். பெறகு ஒம்ம பாடுதான் சங்கடம்.

ராமை: உம், நீர் சொல்றதும் நெசந்தான். ஆனு வேலையிலிருந்து தள்ளறதுக்கு என்ன காரணத்தை நான் சொல்லறது, ஒம்ம மாமனுர்கிட்ட?

சோண: ஓ, அதைச் சொல்ல மறந்து போயிருச்சு. இத பாரும், நீரு சும்மா நெசக்காரணத்தைச் சொல்லிரக்கூடாது. நான் இப்ப ஊட்டுலே போய்ச் சொல்றேன். ''இந்த மாருதி, மானேசரு மூணு ஆளு வேலையை என் ஒருத்தன் தலையிலேயே கட்டினுரு; நான் 'செய்யக் கச்டம்'னு சொன்னேன். ஒடனே அவுரு செஞ்சுதான் ஆகணும்னு கூச்சப் போட்டு, நான் செய்ய முடியாதுன்னு பதிலுக்குக் கூச்சப்போட்டேன். ஒடனே அவுரு அப்போ 'ஆபீசை உட்டுக் கீளே எறங்கு, ஒன் சீட்டைக் கிளிச்சுட்டேன்'னுரு. நான் வந்துட்டேன் பதில் பேசாம'' அப்படீன்னு சொல்லப்போறேன், எம் மாமனுரு கிட்ட. அவுரு வந்து ஒம்மகிட்டக் கேட்டா 'கெக்கே பிக்கே'ன்னு முளிக்காம கொஞ்சம் காட்டமாவே பேசிரும்; விசயம் அத்தோடு 'க்ளோஸ்' ஆயிரும். என்ன சொல்றேரு?

ராமை: உம்? (சிறிது யோசித்துவிட்டு) சரி சோணமுத்து, நீரு சொல்றது நாயந்தான். அப்படியே செஞ்சிர்ரேன். ஒம்ம மாமனுரு கூட நீரும் வாரும். அப்பத்தான் காட்டமாப் பேச எனக்குத் தெம்பு இருக்கும்.

சோண: சரி, அப்போ நான் வர்ரேன்; நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும். [போகிறுன்.]

ராம: ஹூம்ம்ம்..(பெருமூச்சு.)

## 5

[மறு நாள், அளகப்பப் பிள்ளை வீடு: முன் ரூமில் வடிவு கவலையுடன் காத்திருக்கிருள். சிறிது நேரம் கழித்து அளகப்பப் பிள்ளையும் சோணமுத்துவும் ராமையா பிள்ளையின் ஆபீசிலிருந்து திரும்பி வருகிருர்கள்.]

வடிவு: (ஆவலாக) போய்க் கேட்டீங்களா அப்பா? என்ன சொன்ஞன் அவன்?

அள: (கோபத்துடன்) கெடக்கருன் மரியாதை கெட்ட பய! நான் போய்க் கேக்கறேன்; கூச்சப் போடருன்.

சோண: நானுங்கூட நிண்ணுக்கிட்டிருக்கேன், வடிவு. அவன் பாட்டுக்குக் கண்ணை மூடிக்கிட்டுக் கத்தருன்.

அள: 'எதுத்துப் பேசற பசங்களை யெல்லாம் வேலைக்கு வச்சுக்கிட எனக்குப் பைத்தியமா புடிச்சிருக்குது? அதுக்கு, வேறே ஆளைப் பாரு.' அப்பிடீன்னு என்னமோ பேசிக்கிட்டே போருன்......

வடிவு: அப்பிடியா?

சோண: (கம்மிய குரலில்) இதுலே பாரு வடிவு, நான் மனசு அறிஞ்சி அவருகிட்ட அடா பிடியா ஒண்ணுமே பேசலே. ஆபீசுலே இருக்கறவங்களைக் கேட்டா தெரியும். என்னமோ என்னை வேலைக்கு வச்சுக்கிட அவருக்கு இச்டமில்லே. மாமாகிட்ட 'சரி'ன்னு வாக்குக் குடுத்துப்போட்டமேங்கற அபிப்புராயத்திலேதான் அவுரு என்னை வேலைக்கு வச்சுக்கிட்டாரு. நானும் மாமாவுக்காகத்தான் எல்லாத்தையும் பொறுத்துக்கிட்டேன்.

அள: (சோணமுத்துவிடம்) நீங்க ஒண்ணும் வருத்தப்பட்டுக்கிடாதீங்க, மாப்பிள்ளை. எல்லாம் எம்பேர்லே குத்தம். ஆனு அவன் இத்தினி அயோக்கியன்னு தெரிஞ்சிருந்தா நான் அவன்கூடச் சங்காத்தமே வச்சுக்கிட்டிருக்க மாட்டேன்.

சோண: (பெருந்தன்மையுடன்) இதுலே என்ன மாமா? நீங்க என்ன அவரு மனசைக்கூடவா தொளைச்சுப் பாத்துக்கிட்டிருப்பீங்க? ஏதோ ஆளைப் பாத்து நல்லவருன்னு நெனைச்சிட்டீங்க. ஒரு மனிசன் எல்லாத்தையும் எதிர்பாத்துக்கிட்டிருந்தா முடியுமா?

அள: (கண்டிப்பாக) இத பாருங்க மாப்பிள்ளை. இனிமே எவனுச்சியும், ஒங்க படிப்பையும் கொணத்தையும் பாத்து, தன்வாக்கிலே வந்து வேலை குடுத்தாக் குடுக்கட்டும்; இல்லாட்டி வேண்டாம். அந்த மாருதி ஒருத்தன் வர்ர வரையிலேயும், நீங்க எவங்கிட்டேயும் வேலைக்குப் போக வாணும். என் மாப்பிள்ளை நீங்க-ஒரே, தாயில்லாப் பொண்ணுக்குப் புருசரா வந்தவங்க நீங்க-நீங்க பெறத்தியான் கிட்ட அவமானப் படறத்துக்கு நான் சம்மதிக்க மாட்டேன். நீங்க செவனேன்னு, வீட்டுலே இருந்துக்கிட்டு, நெல பொலங்களை மேப்பாத்துக்கிட்டிருங்க. (சோணமுத்து ஏதோ பேச வாயெடுக்கிருன். அதற்குள் அளகப்பர் குறுக்கிட்டு) தயவுசெஞ்சு ஒண்ணும் தட்டிச் சொல்லாதீங்க, மாப்பிள்ளை. எம் மனசு இப்ப ரொம்ப நொந்து போய்க் கெடக்குது......

வடிவு: (சோணமுத்துவிடம்) ஆமாம், அப்பா சொல்லறத்தைக் கேளுங்க. சும்மா இப்பிடி அலைஞ்சா ஒடம்பு என்னத்துக்கு ஆவும்?

சோண: (சிறிது யோசனை செய்வது போல் இருந்துவிட்டு, பிறகு அளகப்பப் பிள்ளையிடம்) அதுக்கென்ன மாமா, நீங்க சொல்லும்போது? நீங்க தகப்பனுர் மாருதி.

அள: நான் வர்ரேன்; கொஞ்சம் கடைத்தெருவிலே வேலை இருக்குது. [போகிருர்.]

சோண: (பெருமூச்சுடன் கட்டிலில் தொப்பென்று விழுந்து) ஹும், என்ன மண்டையிடி! சேச்சே, இப்ப மனசு எத்தினி கச்டப்படுது தெரியுமா?

வடிவு: செவனேன்னு படுத்துத் தூங்குங்க. மொகமெல்லாம் கறுத்துப்போய்க் கெடக்கு.

சோண: (ரோசத்துடன்) படுக்கறதா! ஒங்கையா ஏதோ சொன்னுருங்கறதுக்காவ நான் வேலை பாக்காம குந்திக்கிட் டிருக்கறதா?

இப்பமே போயி ஒரு கூலி வேலையாச்சியும் சம்பாதிச்சுக்கிட்டு வந்துர மாட்டேனு? (எழுந்திருக்கிறுன், ஆவேசத்துடன்.)

வடிவு: (பரபரப்புடன்) ரொம்ப நல்லாயிருக்குது! நீங்க இப்படியெல்லாம் ரோசப்பட்டுக்கிட்டுச் செஞ்சா நான் கெணத்துலே கொளத்துலே உளுந்து உசிரை உட்டுருவேன்; ஆமாம்!

சோண: (அலட்சியமாக) ஐயோ! ஒனக்கு ஆம்பிள்ளேங்க மனசு தெரியாது, வடிவு. வேலேன்னு ஒண்ணு பாக்காட்டி நாலு பேரு என்ன நெனைப்பாங்க?

வடிவு: நாலு பேரு என்ன வேணும்னுலும் நெனைச்சுக்கிடட்டும். நீங்க இப்பப் படுத்து ஒறங்கப் போறீங்களா இல்லையா? (திடீரென்று விம்மி விம்மி அழுதுகொண்டே) எம் மனசு இப்ப என்ன பாடு படுது தெரியுமா? நீங்க கண்டவங்க கிட்டயெல்லாம் போயி அவமானப் படுறதை நான் எப்பிடிப் பொறுத்துக்கிட் டிருப்பேன்!

சோண: ஐயையோ வடிவு! நீ இதுக்காவ அளுவாதே வடிவு. நான் படுத்துத் தூங்கமாட்டேன்னு சொல்றேன்? எனக்கு இப்ப இருக்கிற மண்டையிடிக்கு... (மறுபடி பொத்தென்று கட்டிலில் அசந்து விழுகிறுன்.)

வடிவு: (விம்மிக்கொண்டே கண்டிப்பாக) அப்போ ஒறங்குங்க...

சோண: (கொட்டாவி விட்டுக்கொண்டே) ஹூம், கடவுளே, ஒரு மனிசனுப் பொறந்தாத்தான் எத்தினி கச்டம்! எத்தினி கச்டம்! [கொட்டாவிகளை அடுக்கடுக்காக விட்டுக்கொண்டே சோணமுத்து அயர்கிறுன்.] ★

—ஜனவரி, 1949.

‘ஸேனு’

# கர்ம பலன்

பிறர் விஷயத்தில் ஒருவிதமாகவும், தம் சொந்த விஷயங்களில் வேறொரு விதமாகவும் நடந்துகொள்வது உலகத்தவருடைய இயல்பு. எப்பொழுதும் அகத்திற்கும் புறத்திற்கும் போராட்டம் இருந்துகொண்டேதான் இருக்கிறது.

## 1

இடம்: வக்கீல் ராமாநுஜ ஐயங்கார் வீடு.
நேரம்: *காலை 8 மணி.*

*[ஒரு விசாலமான ‘ஆபீஸ்’ அறை. அதிலுள்ள கருங்காலிமர பீரோக்களில், அழகாகப் பைண்டு செய்து முதுகுப்புறம் பொன் அட்சரங்கள் பொறித்து விளங்கும் பெரிய பெரிய சட்ட புஸ்தகங்கள்; அறையின் நடுவில் பெரியதோர் அழகான மேஜை. அதில் அநேக இழுப்பு அறைகள். மேஜையைச் சுற்றிலும் பலவித நாற்காலிகளும் சுகாசனங்களும்; மேஜை மீது ஒரு மூலையில் மின்சார விசிறி ஒன்று ஹம்ஸத்வனி ராகத்தில் ‘ரிங்’ என்று ஒலித்துக்கொண்டே சுழலுகிறது. அதன் காற்றுப் பட்டு மேஜையின் நடுவில் வைத்திருக்கும் தினசரியொன்றின் இதழ்கள் ‘பர் பர்’ என்று அடித்துக்கொள்கின்றன. ஒரு பக்கச் சுவரில் மாட்டியிருக்கும் ‘ஆபீஸ்’ கடிகாரம் ஒன்று ‘டங் டங் டங்’ என்று எட்டு மணி அடிக்கிறது.*

*குள்ளமாகவும் தொந்தி பருத்தும் விளங்கும் பிரபல வக்கீலான ராமானுஜ ஐயங்கார் அறையில் நுழைந்து நடுநாயகமாக விளங்கும் ஒரு சுழலும் நாற்காலியில் தொப்பென்று உட்கார்ந்து கொஞ்ச நேரம் அப்படியும் இப்படியும் ஆடிக்கொண்டு இருக்கிறார். பிறகு மேஜையிலுள்ள ஓர் இழுப்பு அறையைத் திறந்து சில தஸ்தரக்கட்டுகளை வெளியிலெடுத்து மேஜைமேல் வைத்துத் தம்முடைய சட்டை ஜேபியிலிருந்து பொன் மூக்குக் கண்ணாடி யொன்றை எடுத்து மூக்குநுனியில் மாட்டிக்கொண்டு தஸ்தரக் கட்டுகளைப் புரட்டிப் பார்த்தவண்ணம் இருக்கிறார்.*

*இவர் உண்மையான கொலையாளிகளை மீட்கப் பொய்ச் சாட்சிகள் ஜோடித்தும், ஜமீன்தார்கள் சார்பாக நின்று வழக்கு நடத்தி ஏழைக் குடிகளை நாசப்படுத்திப் பொய் உயில் எழுதியும் சம்பாதிப்பதில் சமர்த்தர். பணமே இவர் உபாசிக்கும் பெருந்தெய்வம். தம் மனைவி இறந்தபிறகே இவர் இம்மாதிரி அக்கிரமங்களில் ஈடுபட்டு வருகிறார். இவருக்கு ஒரே ஒரு பெண்; அவள் பெயர் விஜயம். அவளை ஒரு பணக்கார இடத்தில் விவாகம் செய்து கொடுத்திருக்கிறார். இப்பொழுது தமக்கு வேலைசெய்ய வீராசாமி என்ற பணியாளையும் சமையற்காரன் ஒருவனையும் வைத்துக்கொண்டு மிகவும் சிக்கனமாக வாழ்க்கை நடத்திவருகிறார்.]*

*[வீராசாமி உள்ளே வருகிறான்.]*

**ராமாநுஜ ஐயங்கார்:** *(மூக்குக்கண்ணாடி மூலமாக அவனை நோக்கி)* ஏண்டா? என்ன?

**வீராசாமி:** *(கைகட்டிய வண்ணம்)* யாரோ கட்சிக்காரர் வந்திருக்காருங்க.

**ராமா:** *(தஸ்தரக்கட்டுகளைப் புரட்டியவண்ணம்)* சரி. உள்ளே வரச் சொல்லு.

*[வீராசாமி வெளியே செல்கிறான். நாற்காலியில் ஆர அமருகிறார் வக்கீல். அது 'கொய்ங்' என்று சப்தம் செய்கிறது. சிறிது நேரம் கழித்துப் பட்டுச் சட்டையும் சரிகைக்கரை வேஷ்டியும் அங்கவஸ்திரமும் தரித்துக் கொண்டு கையில் 'வாக்கிங் ஸ்டிக்'குடன் கிராப்புத் தலை நடுவயதினர் ஒருவர் உள்ளே நுழைகிறார்.]*

**ராமா:** *(ஓரக்கண்ணால் அவரைப் பார்த்தபடி)* வாருங்கோ; இப்படி உட்காருங்கோ! *(தமக்கு எதிரிலுள்ள ஒரு நாற்காலியைக் காட்டுகிறார்.)*

**வந்தவர்:** *(உட்கார்ந்துகொண்டே)* நமஸ்காரம்.

**ராமா:** *(மூக்குக்கண்ணாடியைக் கழற்றிக் கண்களைக் கசக்கிக் கொண்டே)* என்ன விஷயமாக வந்தாப்பலே?

**வந்தவர்:** *(சிரித்துக்கொண்டே)* உங்களிடம் சட்ட விஷயமாக அபிப்பிராயம் கேட்க வந்தேன். 'கன்ஸல்டேஷன் பீஸ்' என்னவோ அதைக் கொடுத்துவிடுகிறேன்.

**ராமா:** அது ஒன்றும் பிரமாதமில்லை, ஐம்பது ரூபாய்தான். நான் அதிகம் வாங்குகிறதில்லை.

**வந்தவர்:** அதற்கென்ன? கொடுத்துவிடுகிறேன்.

**ராமா:** *(கண்கள் மலர நிமிர்ந்து உட்கார்ந்து)* விஷயம் என்னவோ? சொல்லுங்கோ.

**வந்தவர்:** எனக்கு வேண்டியவர் ஒருவர் இருக்கிறார். அவருக்கு விவாகம் ஆகிப் பத்து வருஷம் ஆகிறது. நல்ல இடத்துப் பெண்தான். ஆனால் இதுவரையிலும் ஒரு பிள்ளைகுட்டியைக் காணோம். பிறக்கும் என்ற நம்பிக்கையும் இல்லை.

**ராமா:** டாக்டருக்குக் காண்பித்தார்களோ?

**வந்தவர்:** ஒரு கைதேர்ந்த டாக்டரிடம் காண்பித்தார்கள். அவரும் அப்படியேதான் சொல்லிவிட்டார். அவளுடைய புருஷன் நல்ல ஆரோக்கியமான தேகஸ்திதி உடையவனாகத்தான் இருக்கிறான்.

**ராமா:** அப்படியானால் அவனுக்கு யாதொரு வியாதியும் இல்லை. பெண்ணிடத்தில்தான் கோளாறு போலிருக்கிறது. டாக்டரும் அப்படித்தான் சொல்லிவிட்டார் என்கிறீர்கள்.... இப்பொழுது எது விஷயமாக அபிப்பிராயம் சொல்லவேண்டும்? *(இடுப்பிலிருந்து தந்தப் பொடி டப்பியை எடுத்து ஒரு சிட்டிகைப் பொடி உறிஞ்சுகிறார்.)*

**வந்தவர்:** விஷயம் வேறொன்றும் இல்லை. வம்சவிருத்தி இராவிட்டால் சொத்து, கடைசியில் யாரைச் சேரும்?

**ராமா:** *(மூக்கைப் பொடியின் காரம் துளைக்க)* ஆ.... ஹம். புருஷன் நல்ல ஆரோக்கிய சரீரமுடையவனாக இருக்கும்போது தாராளமாக அவன் வேறு கலியாணம் பண்ணிக்கொள்ளலாமே? ஏன்? ஹிந்து லாப் பிரகாரங்கூட யாதொரு தடையும் கிடையாதே?

வந்தவர்: (ஆவலிருந்தும் அதை வெளிக்காட்டாமல்) இல்லையா? —ஆனாலும் ஒரு பெண்டாட்டி இருக்கும்போது இன்னொருத்தியைக் கொள்வது நன்றாயிராதே என்ற யோசனைதான்.

ராமா: (ஏளனச் சிரிப்புச் சிரித்தவாறு) உலகத்தில் அதிகக் கோழை மனசு உதவாது, ஸ்வாமி. அந்தமாதிரி இருந்தால் ஒரு விஷயமும் கைகூடாது. இதரர்கள் மனசு நோகப்போகிறதே என்ற எண்ணத்தை மட்டும் விட்டுவிடும். இதோ பாரும். இந்தமாதிரி வீண் எண்ணங்களுக்கே என் மட்டில் நான் இடங் கொடுப்பதில்லை.

வந்தவர்: ஒருகால் அவன் கலியாணம் பண்ணிக்கொள்ளாமலே இருந்துவிட்டால் பின்னால் சொத்துக்கு யார் வாரிசு?

ராமா: (பருமனான சட்டபுஸ்தகம் ஒன்றை எடுத்து) இதோ பாருங்கள். (புத்தகத்தைப் புரட்டி அதில் ஓர் இடத்தை வந்தவருக்குச் சுட்டிக் காண்பிக்கிறார். அவரும் அதை ஊன்றிப் படிக்கிறார்.) இதெல்லாம் எதற்கு, ஸ்வாமி? பேசாமல் இரண்டாம் கலியாணம் பண்ணிவிடுங்கள். மலடியை வைத்துக்கொண்டு எப்படிச் சம்சாரம் நடத்தறது? பிள்ளை குட்டி இல்லாத வீடு பேய் காத்த வீடென்று சொல்லுவா பெரியவாள். ஹிந்து லாவும் இந்தமாதிரி இரண்டாம் தாரம் கொள்வதை ஆமோதிக்கிறது. அப்புறம் உங்கள் இஷ்டம்.

வந்தவர்: இல்லை, இல்லை. அதெல்லாம் ஒன்றுமில்லை. நீங்கள் எதையும் உடைச்சுச் சொல்லிவிடுகிறீர்கள். அது நல்லதுதான். எனக்கும் அப்படிப்பட்டவர்களைக் கண்டால்தான் பிடிக்கும். இதற்காகத்தான் உங்களையே தேடி வந்தது. அப்படியானால் மறுவிவாகம் பண்ணுவதனால் ஒரு தவறும் இல்லை. (மணிபர்ஸிலிருந்து ஐந்து பத்து ரூபாய் நோட்டுகளை எடுத்து மேஜைமீது வைக்கிறார்.)

ராமா: (அதைக் கவனித்தும் பாராததுபோல் சிரித்தவண்ணம்) அதற்கென்ன, சந்தேகமே வேண்டாம். தாராளமாக இரண்டாம் தாரம் கொள்ளலாம்.

வந்தவர்: (எழுந்து பரிபூர்ண திருப்தியுடன்) போய்வரேன். நமஸ்காரம்.

ராமா: (வாயை இளித்தவாறு) அப்படியே செய்யறது. (வந்தவர் வெளியே போகிறார்.)

## 2

இடம்: அதே வக்கீலின் பங்களா.

நேரம்: இரண்டு வாரங்கள் கழித்து ஒரு நாள் மாலை மணி 3-30.

[பங்களாவுக்கெதிரே வாசலில் ஒரு ஜட்காவண்டி வந்து நிற்கிறது. அதிலிருந்து வாடிய முகத்துடன் ஒரு யுவதி இறங்குகிறாள். வண்டிக்காரன் அவளுடைய டிரங்குப்பெட்டி முதலிய சாமான்களை எடுத்துக்கொண்டு தொடர, பங்களாவினுள் நுழைகிறான். வாசல் வராந்தாவில் நின்றுகொண்டிருந்த வேலைக்கார வீராசாமி அவளை எதிர்கொண்டழைத்துச் சாமான்களை உள்ளே எடுத்து வைக்கிறான். யுவதி வண்டிக்கூலியை வண்டிக்காரனிடம் கொடுக்க அவன் அதை வாங்கிக்கொண்டு வெளியே செல்கிறான்.

யுவதி: (வீராசாமியைப் பார்த்து) அப்பா எப்பொழுது திரும்புவார்?

வீரா: இண்ணிக்கி ஒரு பெரிய கொலைக் கேஸுக்கு ஆஜராகப் போயிருக்காரு, அம்மா. வர்ரதுக்கு மணி அஞ்சு ஆகும். சமையல்கார ஐயர்கூட இப்பொத்தான் கடைப்பக்கமாக எங்கோ போனார்.

**விஜயம்:** *(முகம் சுண்டியவளாய்)* சரி, நீ போ.

*[ஆபீஸ் அறையில் சென்று ஒரு நாற்காலியில் உட்கார்ந்து பெரு மூச்சு விட்டுத் தீவிரமான யோசனையில் ஆழ்கிறாள். 'டக்டக்' என்று சுவரிலுள்ள கடிகாரம் அறையிலுள்ள நிச்சப்தத்தைக் கலைக்கிறது. சற்று நேரத்திற்கொரு தரம் விஜயம் அதைப் பார்க்கிறாள்.*

மணி நாலரையாகிறது. வெளியில் மோட்டார் வரும் சப்தம் கேட்கிறது. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வக்கீல் ராமாநுஜ ஐயங்கார் அறைக்குள் நுழைகிறார்.]

**ராமா:** *(பெண்ணைப் பார்த்து வியப்பும் திகிலும் அடைந்தவராய்)* எப்பொழுது அம்மா, வந்தாய்? வரப்போகிறேன்னு ஒரு கடுதாசியும் போடல்லையே?

**விஜயம்:** *(துக்கம் நெஞ்சையடைக்க, கண்களில் நீர் துளும்ப)* இனி அந்த வீட்டில் நான் காலெடுத்து வைக்கமாட்டேன், அப்பா! . . விக்விக். *(பேச முடியாமல் விம்மி விம்மி அழுகிறாள்.)*

**ராமா:** *(அன்று தம் கட்சிக்காரன் பக்கம் தோல்வியுற்றதனாலும் தம் பெண் இப்படி அழுவதாலும் மிக்க கலவரமடைந்தவராய்)* என்ன? என்ன நடந்தது, அம்மா?

**விஜயம்:** *(விம்மியவண்ணம்)* நான் மலடியாம் . . அதனால் நான் அவருக்கு வேண்டாமாம். என்னை . . என்னைத் தள்ளிவிட்டு வேறு கலியாணம் பண்ணிக்கொள்ளப் போகிறாராம். நீ . . நீதான் அப்படிப் பண்ணிக் கொள்ளலாம்னு சொன்னையாமே?

**ராமா:** *(மேலும் கலவரமுற்றவராய்)* நானா? நானா? . . எனக்கு ஒன்றும் புரியவில்லையே?

**விஜயம்:** *(ஒருவாறு அழுகையைச் சமாளித்துக்கொண்டு)* அவா யாரோ ஒருவரை உன்கிட்டே அனுப்பித்து அபிப்பிராயம் கேட்டாளாமே? கேட்டதற்கு நீ, 'மலடியை வைத்துக்கொண்டு யார் சம்சாரம் நடத்துவா? தாராளமாக இரண்டாம் தாரம் கொள்ளலாம். ஹிந்து லாவும் அதை ஆமோதிக்கிறது' அப்படீன்னு சொன்னையாமே அப்பா . . . . ?

**ராமா:** *(மனசில் ஒரு பெரிய பாரம் அழுத்த ஒன்றும் தோன்றாமல் திகைத்து)* ஊம் . . ஊம் . . என்ன என்ன? *(தலை சுழலவே நாற்காலியொன்றைப் பிடித்துக்கொள்கிறார்.)*

**விஜயம்:** நீ அந்தமாதிரி சொன்னது வாஸ்தவந்தானா, அப்பா? *(தந்தையை ஆவலுடன் நோக்குகிறாள்.)*

**ராமா:** *(தலையிலடித்துக்கொண்டே)* கர்மபலன்! விதி! . .

*[மேலே ஒன்றும் சொல்ல முடியாமல் அங்குள்ள சாய்மான நாற்காலி யொன்றில் தொப்பென்று சாய்கிறார்.]* ★

—செப்டம்பர், 1937.

## பி. ஏ. கிருஷ்ணமூர்த்தி

# சம்பங்கி

### 1

[பொன்னம்பலத்தின் வீட்டுத் திண்ணை. பொன்னம்பலம், கண்ணுயிரம், வையாபுரி மூவரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]

வையாபுரி : இந்தப் பாளாப்போன ஒலகத்துலே, இந்தப் பாளாப் போன பக்கத்து வூட்டுக்காரங்களே இல்லாமப்படிக்கு, யாராணுச்சும் எதுணுச்சும் செஞ்சு போட்டாங்கன்னு, எம் மனசு நீரு மோரு மாதிரி குளுந்து போவும், ஆமாம்.

பொன்னம்பலம் : அட போடா நாட்டுப்பொறம். சொல்றதுதான் சொல்றே. ஐஸு களருன்னு சொல்லேன். நீரு மோரு கெடக்குது!

கண்ணுயிரம் ; ''பாளாப்போன லோகத்திலே பாளாப்போன காலத்துலே பாளாப்போன மனுசா நீயும் பாளாப் போவலாமோ?''ண்ணு ஒரு சித்தரு பாடியிருக்கிறுரு.

பொ : அடே இரப்பா, கண்ணுயிரம்!..என்ன வையாபுரி, ஒனக்கென்ன திடீர்னு இப்படிப் புதுசா ஒரு கொறை வந்திருச்சு? பொங்கலு வர்ற நாளுலே..

வை : இந்த வருசம் கண்ட வெள்ளாமே அல்லாத்தியும் படைச்சுப்புடறேன். யாருணுச்சும் பக்கத்து வூட்டுக்காரங்களே இல்லாமெப்படி செஞ்சுட்டா..

பொ : ஏது வையாபுரி, இப்படித் திடீர்னு ஒனக்குப் பக்கத்து வூட்டுக்காரங்கமேலே ரொம்ப ஜாஸ்தியாப் போயிருச்சு!..ஆமாம், பக்கத்துலே வூடே வாணும்னு, எதுணுச்சும் காடு கீடு வளத்துக்கிடப் போறியா?

கண்: அப்படீன்னு சர்க்கஸ்லேருந்து நாலஞ்சு புலி சிங்கத்தை வாங்கிக் கொண்டாந்து காட்டிலே வச்சுக்கிட்டா நல்ல மதிப்பாயிருக்கும். வூட்டிலே புள்ளே குட்டீங்களும் வாயைத் தொறக்க மாட்டாங்க. நம்ம செங்கலு சித்தரு சொல்றுரு: ''சந்தடி நீங்கிஞல் சங்கடம் நீங்கும்''னு.

பொ : அடே கண்ணுயிரம், சும்மா இருக்க மாட்டே? ஊடே ஊடே சித்தருங்களே விட்டுக்கிட்டுச் செல்லரிச்சுக் கெடக்கே. கண்ணுயிரம் இண்றத்துக்குப் பதிலா, நாக்காயிரம்னு ஒனக்குப் பேரு வச்சிருக்கணும்.

வை : பொன்னம்பலம், கண்ணுயிரம் கெடக்கான். நமக்கு ஒரு வளி சொல்லுங்கறேன். எளவு ராவெல்லாம் தூக்கமே இல்லே.

கண் : பவலெல்லாம் ரொம்பத் தூர்க்கம் போலேருக்கிது. நித்திரை சாஸ்திரம் சொல்லுது: ''நீடித்துறங்கினுல் பீடை தொலே யும்''ணு . .

பொ : ஏய் கண்ணுயிரம்! . . இதோ பாரு, வையாபுரி. வெசயத் தைத்தான் சுத்தி வளைக்காமெ சொல்லிப்போடேன். சுத்தி வளைச்சுக் கிட்டே போனீன்ணு, ஒவ்வொரு சுத்துலேயும் ஒரு சித்தரைக் கொண் டாந்து நிறுத்தி வச்சுருவான் கண்ணுயிரம்.

வை : அதாம்பா! நம்ம பக்கத்து வூட்டுக்காரன் பெரிய படுகாளிப் பயலா இருக்காங்கேன். ஒரு மட்டு மருவாதை இல்லே. மனுசன் கௌரவமா, காலந் தள்ளணும்ணு, இனிமே இந்த ஊருலே நாளைத் தள்ள முடியாது. ஆமாம்.

போ : யாரு, உங்க பக்கத்து வூட்டுக்காரன்?

வை : அதான், அந்த நொடிப்பய கோடங்கி.

பொ : குள்ள மேட்டுக் கோடங்கியா?

வை : ஆமாம். இப்ப ஐயா நெட்டை மேட்டுக் கோடங்கியால்ல ஆயிட்டாரு? நிமிந்து நடை போடறுரு. பத்து வருசத்துக்கு முந்தி, வெறும் வறட்டுப் பயலாயிருந்தான். இப்போ என்னடான்ணு, வூடு, மாடு, கன்னு, களனி அல்லாம் கூடிப்போச்சு. கால்லே மேஜோடு மாட்டிக்கிட்டல்லா ஒலாத்திக்கிடத் தொவங்கிட்டாரு, ஐயா!

கண் : ''காலம் மாறினுல் காலும் மாறுது''ண்ணு காலகண்டர் புராணத்துலே ஒரு எடம் வருதே . . . .

பொ : வந்தா வந்துட்டுப் போவுது. நீ கெட சொம்மா! ஏன் வையாபுரி, கோடங்கிக்கு இப்போ கொம்பு முளைச்சுப் போயிருச்சுன்ணு சொல்றே?

வை: அதுவும் என்ன, வெறும் மாட்டுக்கொம்பா? பெரிய மூங்கில் கொம்பு மாதிரியல்ல தலேலே மொளைச்சுக் கெடக்குது? நாலு வருசத் துக்கு முன்ணுடி, நானு ரோட்டு நடுவுலே நடந்தா, பய ஓரமா ஒதுங்கிப் போவான். இப்போ என்னடான்ணு, ரோட்டுப் பூராவும் அவனே நடந்து கிட்டுக் கெடக்கருன்.

கண் : பாவம்! காலே எட்டி வைச்சு நடந்து பளக்கமோ என்னமோ, அந்த ஆளுக்கு. ''எட்டி எட்டி நடந்தால் கிட்டாதது கிட்டும்''னு ஏதோ ஒரு சுவடி சொல்லுது.

பொ : சொல்லுச்சுன்ணு கேட்டுக்கிட்டுக் கெட. குறுக்கே வுளாதே. ஏன் வையாபுரி, கோடங்கி அவன் பாட்டுக்கு எதுணச்சும் செஞ்சுக்கிட்டுப் போவட்டுமே. நீ ஏன் அலட்டிக்கிடறே வீணுவுலே?

கண் : ''கீளே வுளுந்தவன் காலே ஒடைச்சுக்கிடருன். கீளே உளாதவன் ஏன் கவலேப் படணும்?''னு பூசாரி ஐயா, அண்ணிக்குப் பேச்சுப் போக்கிலே சொன்ணுரே. நெனேப்பு இருக்குதா பொன்னம் பலம்?

பொ : டேய் கண்ணுயிரம்! இன்ஞெரு வாட்டி எதுணச்சும் பேத்தி ஞியோ, ஒங் கண்ணு முளியைப் பேத்துப்புடுவேன். ஆமாம்.

வை: கேளப்பா, பொன்னம்பலம்! அவனவன் தன்ஞேடே சோலி யைப் பார்த்துக்கிட்டா பரவாயில்லியே. ஊரான் வெசயத்துலே தலேயை வுடறதுன்ணு கோவம் வரத்தானே செய்யுது! ஒரு நியாயம் வாணுமில்லே?

கண் : சும்மாவா சொன்ணுரு?

வை : யாரு?

கண் : நம்ம வைத்தியரு ஐயா. ''காயமே இது பொய்யடா-இங்கு நியாயமேது சொல்லடா''ன்ஞரு. அப்போத்தான் கோர்ட்டுலே அவரோட வியாச்சியம் நடந்துக்கிட்டிருந்துச்சு.

பொ : ஆனு ஒன் வெசயத்துலே—நியாயம் எங்கே வந்திச்சு வையாபுரி?

வை : நியாயந்தான் வரலியே. அதுதானே தவராறு?

பொ : தவராறைத்தான் சுருக்கமாச் சொல்லிப் போடேன். நீ மூணேமுக்கா நாளியா முணுமுணுத்துக்கிட்டுக் கெடக்கறியே ஒளிய, ஒளுங்கா வெசயத்தைச் சொல்ல மாட்டேங்கிறே. இதுதான் சமயம்ணு, கண்ணுயிரம் டஜன் கணக்காச் சித்தருங்களைத் தள்ளிக்கிட்டே இருக்கான்.

வை : கேளு. நம்ப வூட்டிலே கொல்லைப்புறம் ரொம்ப விசாலமா இருக்குதில்லே? ஒனக்குத் தெரியுமே.

பொ : கட்டினபோலல்ல பாத்தேன்? கொஞ்சங் கொஞ்சம் நெனைப்பு இருக்குது.

வை : அங்கே நானு பெரிய தோட்டம் போட்டிருக்கேன். கறிவேப்பிலை, கொத்தமல்லி, கீரை, கத்தரிக்கா அல்லாம் ஏராளமா இருக்குது.

கண் : ஒரு கறிகாய்ச் சந்தையே வெச்சுப்புடலாம் போலேருக்குதே. ''வீடென்றால் அங்கே யோர் தோட்டமொன்று வேண்டுமப்பா, வீட்டைவிடத் தோட்ட மங்கு மூன்று பங்கு வேண்டுமப்பா''ண்ணு பாவக்காய்ச் சித்தரு சும்மாவா பாடினரு!

பொ : இல்லே, பைத்தியம் புடிச்சுப் பாடினரு..உம்..நீ சொல்லப்பா, வையாபுரி.

வை : நம்ம வூட்டுக் கொல்லையிலே ஒரு சம்பங்கி மரம் இருக்குது. அது அன்னுடம் கூடை கூடையாய்ப் பூப் பூக்குது.

பொ : இப்போ வெளங்குது வெசயம்.

வை : என்ன?

பொ : நேத்து மாரியம்மன் கோயிலு வாசப்படிலே, ஏதோ ஒண்ணு ஒக்காந்து கெடந்துச்சு. ஒடம்பு, கை, காலு அல்லாம் இருந்துச்சு. ஆனு தலை இல்லே.

வை :
கண் : } தலை இல்லியா?

பொ : ஆமாம். தலை இருக்க வேண்டிய வெடத்துலே, சம்பங்கிப் பூப்பந்து ஒண்ணு இருந்துச்சு. அப்பாலே உத்துப் பாத்தேன். அப்போதுதான் அது ஒம் மவ வள்ளின்னு தெரிஞ்சுச்சு, வையாபுரி. ஒங்க வூட்டுப் பூதானு அது?

வை : இல்லே..எங்க வூட்டு மரத்தோட பூ இல்லே.

பொ : என்ன?

வை : கடையிலே வாங்கியாந்தேம்பா.

பொ : கொல்லையிலே மரத்தை வச்சுக்கிட்டு, கடையிலே பூ வாங்கியாந்தியா? என்ன வையாபுரி, வேடிக்கையால்ல இருக்குது!

வை: அதுதான் பொன்னம்பலம், வெவகாரம். கேளு. அந்தப் பாளாப்போன சம்பங்கி மரம், நட்ட நடுவுலே ஒளுங்கா வளராமே, எங்கேயோ செவரு ஓரமாய்ப் போய் மொளைச்சுக்கிட்டுக் கெடக்குது.

பொ: ஒன்னைவுட அந்த மரம் ரொம்பப் புத்திசாலிதான், வையாபுரி!

கண்: ''மரஞ்செடி கொடிகளுக்கும் மண்டையில் மூளை உண்டு, மல்லியும் முல்லைப்பூவும் மனிதர்போல் பேசுமப்பா''ண்ணு படிக்கார சித்தரு எளுதி வக்கலியா?

வை: கொறையும் கேளு, பொன்னம்பலம். அந்த நன்னி கெட்ட சம்பங்கி மரம், எடந்தான் செவரு ஓரமாத் தேடிக்கிச்சுன்னாலும் போனாப் போவுதுண்ணலாம். ஆனா, அது கையையும் காலையும் நீட்டிக் கிட்டு, பக்கத்து வீட்டுப் பொளக்கடையிலேல்ல எட்டிப் பார்த்துக் கிட்டுக் கெடக்குது. அதானில்ல, எனக்கு ஆத்திரம்!

பொ: பக்கத்து வூட்டுக்காரன் என்ன செய்யறான்ணு ஒம் மரம் வேவு பாக்குதோ என்னமோ?

வை: பாக்கும், பாக்கும்! பூக்கற பூவெல்லாம், பக்கத்து வூட்டுக் காரனுக்குப் படையலு வச்சுப்புட்டல்ல வேவு பாக்குது?

பொ: அது என்ன கூத்து?

வை: அதுதான் கூத்து. மரத்துக்குத் தண்ணி ஊத்தறது நானு. அது பூக்கற பூவெல்லாம் வுளறது பக்கத்து வூட்டுக் கொல்லையிலே. எப்படி நாயம்?

பொ: ''வுளற பூவெல்லாம் என்னைச் சேந்தது''ண்ணு நீ கோடங்கி கிட்டே கண்டிப்பாகச் சொல்லிப்புடறதுதானே?

வை: ''நானா பூவை வுளச் சொன்னேன்?''றான் பய. பேசினா பதில் பேச்சுப் பேச வரிஞ்சுகிட்டு வர்றான். அவன் தொண்டையோ இடியோடு போட்டி போடுது. பேச்சுக் கொடுத்தா, நமக்கல்ல மதிப்புப் போயிருது?

பொ: கதை தெரியுமா, வையாபுரி?

வை: என்னா சொல்லு.

பொ: இந்த மாதிரிதான், மரம் ஒரு லக்கிலேயும், பூ ஒரு லக்கி லேயும் ஏக ரகளையாயிருச்சு ஒரு வெடத்துலே.

வை: எங்கே?

பொ: (பாடுகிறான்)

பாரிசாதம் கொண்டுவந்தார் பரிமள கிருஷ்ணன்
பாமைவீட்டில் வளரவைத்தார் பரிமள கிருஷ்ணன்
பாவைஅந்த ருக்மிணியும் பல்லைக் கடிக்கவே
பரிவுடனே கண்ணபிரான் தந்திரம் செய்தார்
பாமைவீட்டு மரத்தினிலே புஷ்பம் பூக்கவே
பக்கத்திலே உள்ள வீட்டில் குலுங்கி விழவுமே
பாமைவீட்டில் மரமாம் ருக்மிணிக்கு மலராம்

[வையாபுரி போகிறான்.]

ஏ வையாபுரி, எங்கே கிளம்பிட்டே? ஏ வையாபுரி!

வை: நான் வரேம்பா. எதுனாச்சும் வளி சொல்லிவியாக்கும்ணு வந்தா, திரும்பிப் போவுறத்துக்கல்ல வளி காட்டறே?

பொ: அடே இரு தம்பி. கோவிச்சுக்கிடறியே!

கண்: ''குடித்தனக் காரனுக்கே கோவமே கூடாதப்பா''ண்ணு கோவைப்பழச் சித்தரு ஆணி அடிச்சமாதிரி சொல்லிப் போடலே?

வை: கோவமில்லேப்பா. அநியாயமா, தண்ணி ஊத்தி வளர்த்த புஸ்பமெல்லாம் ஐயோன்னு போவுதே; அத்தை நெனைச்சாத்தான் வவுறு எரியுது.

கண்: நெனைச்சால்ல வவுறு எரியுது? நெனைக்கவே வாணும்.

பொ: இரப்பா கண்ணுயிரம். வையாபுரி, இதுக்கு ஒரே ஒரு வழிதான் இருக்குது.

வை: என்ன? சொல்லு.

பொ: நல்ல கோடாலியாப் பாத்து ஒண்ணை எடுத்து, எண்ணெய் போட்டு, கூராத் தீட்டிக்கோ. நேரப் போ; போயி ஒரே வெட்டா வெட்டிப் போட்டுப்புடு.

வை: ஐயையோ! கொலையா செய்யச் சொல்றே?

பொ: கோடங்கியை வெட்ட வாணும். அவனை வெட்டினு, கோடாலிதான் வளைஞ்சு போவும். அந்த மரத்தை வெட்டிப் போட்டுப்புடு.

வை: சரிதான்! பொன்னம்பலம், ''தலை நோவுதுண்ணு தலையை வெட்டிப்புடு''ண்ணு சொன்ன வைத்தியன் கதையால்ல இருக்குது? பாடாப்பட்டு மரத்தைப் பயிரு சேஞ்சு...

போ: இல்லாட்டிப் பேசாமே இருந்துடு. மரம் ஒங்கிட்டே இருக்கட்டும். புஸ்பம் அவன்கிட்டே இருக்கட்டும்.

வை: சரியான போடு போட்டியே, பொன்னம்பலம். இம்புட்டு நேரம் சொன்னதெல்லாம் கேட்டுப்புட்டு, ஆளை வுடுண்டிறியே. சண்டைக்காரன் கால்லேயே போய் வுளறதாயிருந்தா, நானு ஒங்கிட்ட ஏன் வரணும்?

பொ: ஆமு, நானே வர்றேன், ஒங்க வூட்டுக்கு, சாயந்தரமா?

கண்: ''தொழப் போனலும் துணையோடு போ''ன்னுவாரு எங்க ஊருலே ஒரு பாதிரி ஐயா. நானும் வாரேன், சாயந்தரமா.

பொ: ஏ கண்ணுயிரம்! அங்கே வந்து இந்தச் சித்தரு பசங்களை யெல்லாம் சந்திக்கி இளுத்தியோ, நானு வெளுத்துப்புடுவேன், ஆமாம்.

## 2

[கோடங்கியின் வீடு. கோடங்கியின் மனைவி சின்னுயி வேலைக் காரனைக் கூப்பிடுகிருள்.]

சின்: ஏ அய்யா.. ஏய் அய்யோவ்..? என்ன எளவூங்கிறேன்; என் ஒரு கொரலுக்கு ஊரே கூடிப் போயிரும் போலேருக்கு. இவன் எங்கேயோ போய்த் தொலைஞ்சு..

ஐ: கூப்பிட்டீங்களாம்மா?

சின்: கூப்பிட்டாங்களா? கூப்பாடல்ல போட்டேன்! மொதல்லே பொளைக்கடையிலே போயி, அந்தப் பூவெல்லாம் ஒண்ணு வுடாமே கூடையிலே பொறுக்கிப் போட்டுக் கொண்டாந்து வை.

ஐ: தொ பாருங்கம்மா, நானு வேறு எதுனச்சும் செய்யறேன். வெறகு சுள்ளி வோணும்னலும் வெட்டிக் கொண்டார்றேன். இந்தப் பூப் பொறுக்கற வேலை மட்டும் வாணும்.

**சின்:** அட ஏது! பக்கத்து வூட்டுக்காரன் மாதிரி நீயும் என்னமோ வெறச்சுக்கிட்டுப் போவுறயே! எளநீ கிளநீ எதுனாச்சும் வெட்டிப் போட்டானுங்காட்டியும் ஒனக்காவ?

**ஐ:** இல்லீங்களே. அங்கிட்டு நானு போயி பூ எடுக்கறதை அவன் பார்த்துபுட்டா, வூட்டிலே புள்ளீங்களே வுட்டு மேலே கல்லு எறியச் சொல்றான். அதுலேயும் அந்தச் சின்னப் புள்ளே இருக்குதே - அதும் வயசு என்னமோ நாலு வயசுதானும் - ஆனா, அது தூக்கற கல்லோ, நாலஞ்சு வீசை கனம் கொறையாது. அந்தக் கல்லு, என் தலையிலே வந்து வுளுந்துச்சுன்னா....

**சின்:** கல்லுதான் ஒடையும். ஒந் தலைக்கி ஒரு எளவும் வராது. போய்ப் பொறுக்கியான்னா, என்னமோ விண்ணாரம் பேசிக்கிட்டுக் கெடக்கிறியே! போ!

[கோடங்கி வருகிறான்.]

**கோ:** எந்நேரமும் எதுனாச்சும் நாட்டாமே சேஞ்சுக்கிட்டேருக்கியே, பொம்பளையா லச்சணமா இல்லாமே..

**சின்:** ஆமாம். ஆம்பளேங்கல்லாம் சிங்கக்குட்டிங்க! நம்ம கொல்லையிலே வுளற பூவைப் பொருக்கியாற மனசிலே தெடமில்லே, இப்படி நடுங்கிப் போனா, அப்பாலே பொம்பளேங்கதானே நாட்டாமேக்கி வரணும்?

**கோ:** ஏன்? வையாபுரி எதுனாச்சும் சண்டைக்கி வந்தானா?

**சின்:** சண்டையா? அதெல்லாம் ஒங்களேப் போல ஆம்பிளிங்க கிட்டேன்னா? நம்ம கொல்லையிலே வுளற பூவை நாம பொறுக்கிக்கிடாமே ஊருக்குத் தருமம் செய்துபோடுவாங்களா?

**கோ:** கேட்டியா? வையாபுரி நம்மபேரிலே பிராது போடப் போறானுமில்லே?

**சின்:** பிராது போடறதா? என்னுத்துக்குண்றேன்.

**கோ:** ''என் வூட்டு மரத்துலே பூக்கற புஸ்பமெல்லாம் பக்கத்து வூட்டுக்காரன் எடுத்துக்கிறான்''னு பிரியாது போடுவான்.

**சின்:** யாரு போய் எடுத்தாங்க? மரமாக் கொண்ணாந்து கொட்டுது. மரத்துமேலேன்னா பிரியாது போடணும்! மனிசன் மேலே போட்டு என்னா செய்றது?

**கோ:** நானுகூட நம்ம வக்கீல் ஐயாகிட்டே கேட்டேன். அவரு கொஞ்சங்கூட வுட்டுக் குடுக்காதேண்ணாரு.

**சின்:** அத்தெத்தான் நானு ஆறு மாசமாச் சொல்லியாரேனே. வக்கீல் ஐயா என்ன புதிசாச் சொல்லிப்புட்டாரு?

**கோ:** ஏய்..அய்யாவு..இங்கே வா, இதா பாரு. புள்ளாரு கோவிலுக்கு வடக்காலே சந்து போவுதுல்லே?

**ஐ:** போவுது.

**கோ:** அந்தச் சந்துலே, எடவண்டே கையிலே வெளிலே பச்சைக் கம்பி போட்ட வூடு இருக்கிதா, இல்லையா?

**ஐ:** இருக்கலாமுங்க.

**கோ:** இருக்குதுடா இருக்குது. அங்கே போயி, பொன்னம்பலம்னு கேளு. அவரு இருந்தா, கடியக் கூட்டியா. நானு சொன்னேண்ணு சொல்லு.

[ரங்கண்ணன் வருகிறான்.]

ரங்: என்னப்பா கோடங்கி! யாராவது கடன் கிடன் பாக்கி தர வோணுமா? ரொம்பக் கண்டிப்பாச் சொல்லி அனுப்பறியே.

கோ: அடேடே! யாரு? ரங்கண்ணனுங்களா! வாங்க, வாங்க, இப் படிக் குந்துங்க. என்னுங்க அண்ணே, வெவகாரமே ஒண்ணும் சொரத்தா இல்லீங்க.

ரங்: எந்த வெவகாரம், தம்பி?

கோ: பக்கத்து வூட்டுக்காரன் வெவகாரந்தான்.

ரங்: என்ன தம்பி! பொளுது விடிஞ்சாப் பொங்கலு வெக்கணும். இந்தச் சமயத்துலே, அல்லாம் ஒரு மனசா, சிநேகிதமா இருந்துக் காமே. . . .

கோ: இந்தச் சம்பங்கி மரம் ஒண்ணு நட்ட நடுப்பிலே மொளைச்சு உசுரெ வாங்குது!

ரங்: மரத்தை வெட்டிப்புடு.

கோ: மரத்தை வெட்டணும்னு, செவுரு ஏறிப் பக்கத்து வூட்டிலே குதிக்கணும். அவ்வளவுதான்! ஒரு காலத்துலே ஜெயில்லே ஊத்தற கொளம்பு ரொம்ப ருசியாயிருக்கும்னு களத்து மேட்டுப் பக்கிரி சொல்லி யிருக்கான். செவுரு ஏறிக் குதிச்சா, கொளம்பு ருசி பாக்கச் சமயம் கெடச்சுப் போவும். வேறே ஏதுனாச்சும் பலமான காரியம் சேஞ்சுப்புட்டு ஜெயிலுக்குப் போவாமே, சொத்தைச் சம்பங்கி மரத்தை வெட்டிப் புட்டு ஜெயிலுக்குப் போறத்துலே என்ன மதிப்பு இருக்குது?

ரங்: சரியான ஆளுதாம்பா நீ! நீ ஏன் ஒளுங்கா அன்னாடம் பூவெல்லாம் பொறுக்கி அவன்கிட்டே கொடுத்துடக் கூடாது? அதுதானே மருவாதே?

கோ: ஏண்ணே, நானா அந்தப் பூவை நம்ம வூட்டிலே வந்து வுளுன்னு சொன்னேன்?

ரங்: அடே, அதுவாத்தான் வுளட்டுமே. அதுக்காவ நீ போயி வம்புச் சண்டை போடறது அம்புட்டு நல்லாயில்லே, தம்பி!

சின்: (வந்துகொண்டே) என்ன நல்லாயில்லேங்கிறீங்க? நம்ம வூட்லே வுளற பூவு நமக்கல்ல சொந்தம்! இது என்னமோ, நாய் நரி நாயமால்ல இருக்குது நீங்க பேசறது?

ரங்: அவன் பிரியாது போட்டா, ஒங் கட்சி தாங்காதே? வலு வில்லியே?

கோ: ஏன், வலுவில்லாமே? வக்கீல் ஐயாவைக் கோர்ட்டுலே கொண்டாந்து நிக்க வச்சேன்னா. . அவரு ஆளும் பளுவு. பேச்சும் பளுவு. பிரியைக் கட்டி இளுத்துப்புட மாட்டாரா?

ரங்: கொஞ்சம் யோசனை சேஞ்சு பார்க்கலாமிண்ணே எனக்குத் தோணுது.

கோ: எனக்குத் தோணலீங்களே!

ரங்: சரி, எதுனாச்சும் செய், நானு வாரேன். (போகிறான்.)

சின்: ஊரானுங்களுக்கென்ன? ஒவ்வொருத்தரு கிட்ட ஒவ்வொரு நாயம் பேசுவாங்க. மரத்தை வோணுமின்னா வெட்டிப் போட்டுக் கிடட்டும். ஒரு வாடின புஸ்பங்கூட நம்ம கொல்லையைத் தாண்டிப் போவுமாங்கறேன்.

## 3

[பொன்னம்பலமும் கண்ணுயிரமும் கோடங்கி வீட்டை நோக்கி வருகிறார்கள்.]

பொ: (பாடுகிறான்)

நட்டுவச்ச காலம்போச்சு நாலுபுஸ்பம் பேந்துச்சு
சேர்ந்தபுஸ்பம் சொவருதாண்டி அண்டையிலே வுளுந்துச்சு
வுளுந்தபுஸ்பம் வூட்டுக்காரன் மவதலையிலே ஏறிச்சு
ஏறிநின்ன புஸ்பங்கண்டு வவுறுபத்தி எரியுது!

கண்: என்ன அண்ணே பொன்னம்பலம், வையாபுரி வவுறு எப்படி எரியுதுண்ணு பாடிப் பாத்துக்கிடுறியா?

பொ: பய பெரிய பயங்காளிப்பா. அந்தக் கோடங்கியோ பெரிய படுகாளி. இதுலே வையாபுரிக்கு வீறாப்பு வேறே! வாலறுந்த நரிதான். போயேன்.

கண்: ''சண்டை மிஞ்சினால் சரணாகதி''ன்னு சொல்றது போலே' யாராவது ஒத்தரு இன்னொருத்தரோட ராசியாப் பூடலாமில்லே?

பொ: அதுக்குத்தான் ராசி இல்லியே, இரண்டு பேரிலே எவனாவது ஒத்தன் வூடு வாசலை விட்டுப்புட்டுக் காசிக்குப் போனாத்தான் சண்டை நிக்கும். சண்டைலேயும், வெறுஞ் சண்டை, வெட்டிச் சண்டையெல்லாம் தீத்துவைக்கிறதுண்ணு ஐக்கோர்டு சர்ச்சு வந்தாலும் சரி, அவுங்கப்பன் வந்தாலும் சரி, நடக்காது!

கண்: அவங்கப்பனும் ஒரு சர்ச்சுதான்னு ஒனக்கெப்படித் தெரியும்? ''பாட்டன் பிச்சை எடுப்பான்; ஆனால் அவன் பேரன் பிச்சை போடுவான்''னு சொல்லுதே விக்கிரமாதித்தன் கதை. மூணே தலை மொறைலே, ஒரு லட்சாதிபதி பிட்சாதிபதி ஆய்ப்பூடறானே.

பொ: சரி சரி, ஓம் மூட்டையைக் கட்டி வச்சுக்க. கோடங்கி வூடு வந்திருச்சு.

கண்: வையாபுரி வூடு இந்தாண்டையா, அந்தாண்டையா?

கோ: கேட்டுக்கிடலாம் இரு. என்ன கோடங்கி, நல்லா இருக்கியா?

கோ: அடேடே, பொன்னம்பலமா? வாப்பா வா. நல்லாயிருக்க முடியலியே? அதானே, நீ வருவியா வருவியாண்ணு காத்துக்கிட்டுக் கெடக்கேன்.

பொ: என்னையும் ஒரு ஆளா மதிச்சு, திடீர்னு கூட்டியாரச் சொல்லும்படியா ஒனக்கு என்ன வந்திருச்சு?

கோ: என்னப்பா! பேசறப்போவே, ஆளை ஆளம் பாக்கிறியே! எல்லாம் நம்ம பக்கத்து வூட்டுக்காரன் வையாபுரி வெவகாரந்தான்.

பொ: என்னப்பா, ரெண்டு பேரும் ஒரே ஊரு, ஒரே சாதி, ஒரே கொலம், ஒங்களுக்குள்ளே என்ன தவராறு?

கோ: நானா தவராறு செஞ்சேன்? மரங் கொடுக்குது. நான் வாங்கிக்கிடறேன்.

பொ: மரங் கொடுக்குதா? என்ன, எதுனாச்சும் வெறகு வியாபாரத்துலே தவராறா?

கோ: வெறகு இல்லேப்பா. இந்தப் புஸ்பம் இருக்குமே...

பொ: ஓ! பூமாலே கட்டி விக்கிறயா? மாலே கட்ட உனக்குப் புஸ்பம் ஏது? ஒன் வூட்டுத் தோட்டத்திலே காயும் கீரையுந்தானே ஏராளமாக் கெடக்குது?

கோ: என் வூடு இல்லேப்பா. வையாபுரி வூட்டிலே ஒரு சம்பங்கி மரம் இருக்குது. அதுக்கு என்னமோ தலேயெடுத்த காலத்துலேருந்தே நம்ம மேலே தயவு. கெளே, எலே, காம்பு, ஒண்ணு உடாமே, ஜாடாவா, குடும்பத்தோடே, நம்ம வூட்டுக் கொல்லேயிலே எட்டிப் பார்த்துக்கிட்டுக் கிடக்குது. அதுலே பூக்கற பூவெல்லாம், நம்ம பொளக்கடையிலே வுளுது. நானு பொறுக்கிக்கிடறேன். வையாபுரிக்கு அது பொறுக்கலே.

பொ: மரம் அங்கே; பூ இங்கேயா? பலே! ஆனு, நானு என்ன செய்யணும்? பூவைப் பங்கு பிரிச்சுத் தரணுமா?

கோ: அது நானே செஞ்சுக்கிடுவேனே? பங்கு போடாமே இருக்கணும்னுதானே ஒன்னேக் கூப்டது?

கண்: ''சத்தியம் இல்லாவிட்டால்தான் மத்தியஸ்தம் தேவை என்பார்''ணு நம்ம மேஸ்திரிட்டு கோர்டு டபேதாரையா அடிக்கடிக்கும் சொல்லுவாரு. எங்கிட்டோ தொடுகுறி சாஸ்திரத்திலே படிச்சாருங்களாம்.

கோ: தொடுகுறி சாஸ்திரம் எங்கிட்டகூட இருக்குது. காலேயிலே கூடச் சின்னுயி வெரலு தொட்டுப் பாத்துச்சே.

பொ: என்ன சொல்லிச்சு சோச்சியம்?

கண்: ''வலுவுலே வந்த சண்டை சுளுவுலே வுடாதே தம்பி''ண்ணு சொல்லிச்சு.

கோ: ஒரு கை பார்த்துத்தான் வுடப்போறியாக்கும்?

[சின்னுயி வருகிருள்.]

சின்: ஒரு கையா? அவர்களுக்கு ரெண்டு கை: எனக்கு ரெண்டு கை - நாலு கையாப் பாத்துவுட்டுடப் போருமில்லே?

பொ: அப்படின்ன என்னே என்னுத்துக்கு வரச் சொன்னே கோடங்கி?

கோ: வெவகாரத்தை ஒரு வளியா முடிச்சுப் போட வளி கேக்கணும்னுதான்.

பொ: வளிதான் நீங்களே சுத்தமாக் கண்டு வச்சுருக்கீங்களே, வையாபுரியும் இப்படித்தான் சொல்லிக்கிட்டு வாரான்.

கோ: யாரு? வையாபுரியா?

பொ: ஆமாம்.

கோ: ஒன்னே வந்து கண்டுக்கிட்டானு?

பொ: ஆமாம்.

கோ: என்ன சொன்னுன் பய?

பொ: அல்லாம் சொன்னுன்.

கோ: ரொம்பக் காரமாய்ப் பேசினுனு?

பொ: சரிதான். அவன் பேசின பேச்சு மொளகாப் பிஞ்சையே தித்திப்பாக்கிப் போடுமே. நீ மட்டும் எதிரே நிண்ணிருந்தா...?

கோ: பய ஒங்கிட்டே வேறே வந்து உடுக்கைத் தட்டிப்புட்டுப் போயிட்டானு?

பொ: ஆமாம், அவன் உடுக்கைத் தட்றுன்; நீ பூசை போடறே. ஒங்க வெவகாரமே ஊர் சிரிச்சுப் போவுது.

கண்: ஊருக்கும் சிரிச்சுச் சந்தோசப்பட ஒரு வெசயம் வாணுமா?

கோ: நீ அவங்கிட்ட என்ன சொன்னே பொன்னம்பலம்?

பொ: ''ஒன்னையும் கோடங்கியையும் கண்டு பேசறதைவுட மரத்தையே போய்ப் பாக்கலாம்''னு சொன்னேன்.

கோ: பின்னே மரத்தைனுச்சும் போய்ப் பாரு! வையாபுரி ஊட்லேல்ல இருக்குது மரம்?

[ஐயாவு ஓடி வருகிறுன்.]

ஐ: ஐயா ஐயா, பொளக்கடையிலே....

கோ: என்னடாது?

ஐ: பொளக்கடையிலே..

கோ: என்ன அங்கிட்டு? சொல்லி அளுவேன்!

ஐ: பக்கத்து ஊட்டுக்காரரு....

கோ: என்ன? நம்ம பொளக்கடைக்கே வந்துட்டானு வையாபுரி?

ஐ: இல்லீங்க. மரத்துமேலே ஏறி நின்னுக்கிட்டு..

கோ: நம்ம கொல்லையிலேயே எறங்கப் பாக்கறுனு? பொன்னம்பலம், வா, போய்ப் பாப்போம்.

## 4

[வையாபுரி தன் வீட்டுப் புழைக்கடையில் சம்பங்கி மரத்தின் மேல் நிற்கிறுன். கோடங்கியின் மகன் கையில் பூவுடன் தன் வீட்டுப் புழைக்கடையில் நிற்கிறுன். வையாபுரியின் மகள் தன் தந்தையின் அருகில் நிற்கிறுள்.]

வை: டே பயலே, நீ யாருடா வாண்டுப் பய? எம் மரத்துப் பூவை எடுத்து எம் மவளுக்குக் கொடுக்க வர்றே? எம் மரத்துப் பூவை நீ எப்படிடா தொடலாம்?

[கோடங்கி வருகிறுன்.]

கோ: ஏய் வையாபுரி, அவன் யாரு மவன்னு தெரிஞ்சுக்கிட்டுப் பேசு. குள்ளமேட்டுச் சிங்கம் கோடங்கி மவனுக்கும்! இந்த ஊடு அவனுக்குச் சொந்தம். ஊட்டிலே வந்து வுளற பூவும் அவனுக்குச் சொந்தம்.

வை: குள்ளமேட்டுச் சிங்கமா நீ? குள்ளநரி கணக்கா இருந்துக்கிட்டு!

கோ: ஏய், நரிகிரின்னு பேசினியோ, உஜார்! ஊரு சிரிச்சுப் போயிடும்!

பொ: ஏ வையாபுரி, இதென்ன ரகளைப்பா? என்ன நடந்துச்சு?

வை: நீயே நாயஞ் சொல்லு; பொன்னம்பலம்! எம் மவ இந்தாலே நின்னுக்கிட்டு, பூக் கேக்கறு, அந்தக் கோடங்கிப் பயலோட மவன் பூ எடுத்துத் தர்றுன்.

பொ: இதுலே என்ன தப்பு?

வை: தப்பா? எம் மரத்துப் பூவை எப்படித் தொடலாம் அந்தப் பய?

கோ: சின்னக் குட்டி கேட்டா. சின்னப் பய கொடுத்தான். இது ஓலகத்துலே சகஜந்தானே?

பொ: பலே! சரியான வளி! இத் பாரு வையாபுரி, நீயும் கோடங்கியும் ஒரே சாதி, ஒரே கொலம், ஒரே ஊரு. இல்லியா?

வை: ஆமாம்.

பொ: பொளுது விடிஞ்சாத் தை பொறக்குது. பொங்கல் திருநாளு இல்லியா?

வை: ஆமாம்.

பொ: அதனாலே நானு சொல்றத்தைக் கேளு. கோடங்கி, கேட்டுக்க!

கோ: சொல்லு.

பொ:

கேளப்பா கோடங்கி கோபத்தை அடக்கிடுவாய் கிளைக்கீழ் நிற்கும்
ஆளப்பி றந்தானை அடுத்தவீட் டான்பெற்ற அழகான குட்டிக்கு
நாளுங் கிழமையிலே கலியாணம் கட்டிவிட்டே பிள்ளையின் வரிசையிலே
ஆளக்கொ டுக்குமந்தச் சம்பங்கி மரந்தன்னை யவர்பெயருக்
கெழுதி வைப்பாய்.

கோ:
வை: } நல்ல ரோசனைதான்!

கோ: நிம்மதியாப் போயிடும்.

வை: பொன்னம்பலம், அப்படியே செய்து போடறோம்.

கண்: ஒவ்வொரு கலாட்டாவும் இப்படி ஒவ்வொரு கண்ணாலத்துலே வந்து முடிஞ்சா எம்புட்டோ நல்லா இருக்கும். சும்மாவாச் சொன்னாரு சோசியரையா, ''வெவகாரமில்லாத விவாகமில்லே''ண்ணு!★

—மே, 1948.

